வசனங்களால் நிரூபிதமான பிருஹ்மத்தை - அதன் ஸ்வரூப விக்ஞானத்தை அறிய உதவுகின்றன. வைதிக கர்மாக் களைச் சொல்வதாயினும், இந்த கர்மாக்கள் பரம புருஷனின் ஆராதனையேயாகும். உதாரணமாக பித்ருரூபேணகவ்யம் சாப்பிடுதலும் தேவரூபத்தினுல் ஹவ்யம் சாப்பிடுதலும் செய்வதாகும். வேத விருத்தமல்ல இந்த தர்மங்கள். வேத விருத்தமானவை யாதெனில் பிராந்தி மூலத்தைக் கொண்ட கர்மாக்கள் ஆகும். மன்வாதிகள் யோகத்தினுல் பரமாத் மாவை ஸாக்ஷாத்கரித்தவர்கள், அவர்களுக்கு பிராந்தி, விப்ரலம்பாதி தோஷங்கள் இரா.)

மேலும் ஸ்மிருதிகளின் உபயோகமில்லாமை (அநவகா சத்வம்) யேற்படாது என்பது இதிலிருந்து தெரியவரும் - அவை ஐஹிக ஆமுஷ்மிக (இகபரலோக சுகங்களை) ஸம்சாரி களுக்கு இந்த உலக சுகபோகங்களையும் பரலோக இன்பங் களையும் அளிக்கும் வைதிக கர்மாக்களை அனுஷ்டிக்கும்படி ஓதுவதால் அவைகளுக்கு ஸாவகாசத்வம் (உபயோகமுள்ள தாக) யேற்படும்—கர்மாக்களுக்குப் பரமபுருஷனே பலன்களை அளிப்பதால், இந்த வைதிக கர்மாக்கள் அவனுடைய ஆரா தனத்தின் ஸ்வரூபமாகும். இந்த பிரகாரம் கீதையில் சொல் லப்பட்டிருக்கிறது—9-23-24ல்

**येऽप्यन्यदेवता भक्ता यजन्ते श्रद्धयाऽन्विताः, तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् । अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च, न तु मामभिजानन्ति तत्वेनातश्च्यवन्ति ते—**

இந்திரன் முதலிய தேவதாந்திரங்களைக் குறித்து யாகம் செய் கிறுர்கள். நான் அவர்களுக்கு அந்தராத்மாவாக விருப்தால் அவர்கள் என்னைக் குறித்தே யாகம் செய்கிறுர்கள். ஆனுல் அவர்கள் விதிப்படி செய்வதில்லை. அதனுல் பூர்ணமான பலன்களை பெறுவதில்லை. நான்தான் ஸர்வகர்மா ஆராத் யன், நானேதான் ப்ரீதியடைந்து பலன் கொடுக்கிறேன் என்றும்; என் ஸ்வருபத்தை உள்ளதை உள்ளவாறு எவர்கள் அறிகிறுர்களோ அவர்களே பூர்ணபலனை அடைகிறுர்கள்,

அவ்விதம் அறியாதவர்கள் அற்பபலன்களைப் பெறுகிறார்கள். புண்ணியம் அழிந்ததும் அந்த பலன்களையும் இழந்து விடுகிறார்கள். இதிலிருந்து ஸர்வ பலப்ரதன் பரமாத்மா ஆகும்.

இப்படியே கூறுகிறது - வி. பு. 5-29-97 यज्ञैस्त्वमिज्यसे नित्यं सर्वदेवमयाच्युत । हव्यकव्यभुगेकस्त्वं पितृदेवस्वरूपधृक् - பிரபுவே-அழியாதவரே-நீர் எல்லாத் தேவதைகளையும் உமது சரீரத்தில் உடையவர். அதனால் யாகயக்ஞங்களால் நீர் ஆராதிக்கப்படுகிறீர். நீரே பித்ருக்களுக்கு அளிக்கப்படும் கவ்யங்களையும் தேவர்களுக்கு அளிக்கப்படும் ஹவ்யாங்களையும் புஜிக்கிறீர். நீரே பித்ருதேவ ஸ்வரூபத்ருக் தாங்குகிறவர்).

என்ன சொல்லப்பட்டதென்றால் - ऋषिप्रसूतं कपिलं - கபிலர் ரிஷியாகப் பிறந்து புகழ் பெற்றவர் - என்று கபிலருடைய பெருமையை ஓதுவதாலே அவருடைய ஸ்மிருதிக்கு அனுஸரணையாக வேதாந்தார்த்த வ்யவஸ்தானம் செய்வது நியாயமானது - என்பது - அது அஸத் (தவறாகும்) ஆகும். ஏனெனில், பிரஹஸ்பதியை எல்லா ஸ்ருதி ஸ்ம்ருதிகளிலும் அதிசயிக்கும்படி ஞானத்தை உடையவர் என்று காட்டப்பட்டிருக்கிறபடியால், அவரைப் பற்றிய புகழ் தகுந்ததாகும். ஆனால் அவரே லோகாயத மதத்திற்கு (சார்வாக மதத்திற்குக்) கர்த்தாவாக விருப்பதால் சுருதிகளில் அதன்படி வ்யவஸ்தாபனம் செய்வது சரியாகுமா ?

மேலும் ஆட்சேபிக்கப்படும் - கபிலரும் தனது யோக மகிமையினால் வஸ்துவின் யாதாத்மிய (உண்மையான) ஞானத்தை உடையவராதலால், அவருடைய ஸ்மிருதிக்கு அனுஸரணையாக - வேதாந்தார்த்தம் வ்யவஸ்தை செய்யத் தகுந்தது - என்றால் - அதற்கு நாம் பதில் அளிக்கிறோம்.

சூத்ரம் - इतरेषां चानुपलब्धेः (2-1-2)

இதரேஷாம் சானுபலப்தே: (2-1-2)

இதரேஷாம் ச - மனு முதலிய ஸ்ம்ருதி கர்த்தாக்களுக்கு அனுபலப்தே: - (கபிலருக்கு உண்டான (காட்சி) எண்ணங்கள் ஏற்படாமலிருப்பதாலே - கபிலஸ்மிருதி வேதோபப்ருஹ்மணமாகாது.)

விளக்கம் :—

முந்தின அதிகரண்த்தில் கூறப்பட்டது-கபிலர் மந்வாதிகளைப்போல ஆப்ததமராகமாட்டார்-வேதார்த்தங்களை உள்ளபடி உரைப்பவராகமாட்டார் என்பதால்-அவருடைய ஸ்ம்ருதி அநாதரணீயம். எவ்விதம்? முதலில் கபிலவசனத்துக்கும் மனு போன்றவர்களின் வசனத்துக்கும் விரோதம் யேற்பட்டது. கபிலர்பிரதானம் ஜகத் காரணம் யென்றார் - மனு ப்ருஹ்மம் தான் ஜகத்காரணம் என்றார். முதல் அத்யாயத்தில் பேசப்பட்ட நியாயங்கள் பிருஹ்ம பரமாக விருப்பதால், ஸாங்கிய மதம் கைவிடப்படவேண்டியது. இரண்டாவது காரணமாக வ்யாஸர் பராசரர் முதலானோர் தத்வத்தை சாக்ஷாத்கரித்தவர்கள் என்பது மட்டுமன்றி - உண்மையை உள்ளபடி உரைப்பவர்கள். மனுஸ்மிருதிக்கு ஆதாரமாக பல பிரமாணங்கள் சுருதிகள் வ்யாஸ பராசராதி வசனங்கள் காட்டப்பட்டன. அத்தகைய ஆதாரம் கபிலரின் ஸ்ம்ருதிக்கு இல்லை. மூன்றுவதாக - ஒவ்வொரு கர்மாவும் பகவத் ஆராதனையின் ஸ்வரூபமாகும். முதற் மீமாம்ஸா பாகத்தில் சொல்லப்பட்ட தர்மங்கள் யாகயக்ஞாதிகள் - ஆராத்யமான பரம புருஷனைச் சொல்லுகின்றன. அதே பிரகாரம் மன்வாதி ஸ்மிருதிகளும் தேவ சரீரத்தோடு ஹவிஸ்ஸையும் பித்ரு - சரீரத்தோடு கவ்யத்தையும் ஸர்வ தேவபித்ரு சரீரியான பகவானே புஜிக்கிறார்—என்கிற வசனத்தினால், ஆசிரமதர்மங்களும் புகழப்படுவதாலே - வேதத்தை உபபிருஹ்மணம் விளக்குவது எப்படியோ - அதேப்படி மந்வாதி ஸ்மிருதிகளும் யாகயக்ஞங்களை பரம புருஷ ஆராதனமாக விவரிப்பதால் அம்மாதிரி யக்ஞாதிகளை அவை விவரிப்பதாலும், வேத வசனங்களுக்கு ஒத்தபடி-அந்த ஸ்மிருதிகள் இருக்கின்றன. ஆனால் கபிலரின் ஸ்மிருதி பிரதானத்தையே பிரதானமாகக் கூறுவதால் - வேதாந்தார்த்தத்தை விளக்குவது சரியாகாது. அவர் மந்வாதிகளைப் போல ஆப்ததமராக ஆகமாட்டார். இருந்தாலும் - இன்னொரு சங்கை ஏற்படுகிறது. கபிலர் யோக ஸித்தி பெற்றவர். அதனால் அவருடைய ஸ்ம்ருதியை

ஒட்டி அர்த்தம் வேதப் பொருளுக்கு சொல்ல வேண்டியது. (மனுவாதிகளுக்கு யாகாதி கர்மங்களைச் சொல்லுவதில் இஷ்டம் (அபேக்ஷை) இல்லை - என்கிற பூர்வபக்ஷம் இந்த இரண்டாவது சூத்ரத்தில் தள்ளப்படுகிறது. இதற்குக் காரணம் மனுவும் கபிலரைப்போல பகவானை சாக்ஷாத்கரிக்கத் திறமை பெற்றவர் - பரம புருஷனின் ஆராதன தர்மங்களை சொல்லியிருக்கிறார். அவருக்கும் யோகா பேக்ஷையுண்டு. ஆகவே பிரதானமே ஜகத் காரணவாதியான கபில ஸ்மிருதி தள்ளவேண்டியதே - என்பதாகும்)

**ஸ்ரீபாஷ்யம் :**—சூத்திரத்திலுள்ள च சப்தம் இங்கு तु என்கிறதின் அர்த்தத்தைக் கொள்ளுகிறது. அதன் அர்த்தம்-அதற்குமாறாக - இங்கு ஏற்பட்ட சந்தேகத்தைப் போக்குகிறது என்பதாகும். इतरेषां-ச-மனு முதலியவர்களால் தங்கள் தங்கள் யோகமகிமையினால் பகவானை சாக்ஷாத்கரித்து-எது மேலான தத்வம் (பரதத்வம்) - எது அவர (கீழான) தத்வம் இவைகளின் யாதாத்மிய ஞானம் யாது? அந்த ஞானத்தை (உண்மை ஸ்வரூபத்தை) அறிந்தவர்கள். அவர்கள் (கபிலரைப்போல); நிகிலஜகத் பேஷஜ பூத (மருத்துவனைப் போல்) தங்களுடைய வாக்யங்களாலே - சம்சார மருந்து ஆகவிருக்கிறார்கள். (அம்ருதமாக விருப்பவை அவரது வசனங்கள்) யஜு. 3-1 - यद्वै-किञ्च मनुरवदत् तद् भेषजम् மனு எதைச் சொன்னாரோ அவை ஸம்சாரமருந்தாகும் (அவர் ஸம்சார மருத்துவராவர்)- என்று சுருதி பிரஸித்தி அவருடைய வசனங்களுக்கு இருப்பதால் -கபிலருடைய மதம் (தத்வத்ருஷ்டி) ஸ்ருதிக்கு விரோதிப்பதால் கபிலருடைய உபலப்தி (காட்சி - ஞானம்) பிராந்தி மூலமே-உண்மையை உரைப்பதல்ல. அதனால் வேதாந்தார்த்தம் அவருடைய ஸ்மிருதிப்படி அர்த்தம் சொல்வது பொருந்தாது என்பது ஸித்தம் (இது சித்தாந்த சூத்ரம்-கபில ஸ்மிருதி மயக்கத்தால் வந்தது - மனு பகவானின் சாக்ஷாத்காரம் பெற்றவர் - அவர் வசனமே ஏற்கத்தகுந்தது).

## அதிகரணம்—2

### யோகப்ரத்யுக்த்யதிகரணம் (2-1-2)

### சூத்ரம் एतेन योग: प्रत्युक्त: - (2-1-3)

### ஏதேந யோக: ப்ரத்யுக்த: (2-1-3)

ஏதேந - முன் சூத்ரத்தில் கபில ஸ்ம்ருதியை நிரஸித்த வழியிலே யோக - ஸ்மிருதியும் ப்ரத்யுக்த:—நிராகரிக்கப்பட வேண்டியது - (பதில் உரைக்கப்படுவதாயிற்று). ஹிரண்ய கர்ப்பரின் வழி யோகம், அதுவும் கபிலஸ்மிருதியைப் போல அநாத ரணியம் என்பதாம்.

நான்முகனாலே ஏற்படுத்தப்பட்டது-யோகம். பிரும்மா வேதங்களனைத்தையும் ஓதுவித்தாலும்-பிருஹ்மத்தை விளக்கும்போது நிமித்த காரணம் என்றார் (ஸேஸ்வரசாங்கியனைப் போல) - அதாவது மூலபிரகிருதியே உபாதான காரணம் என்று சொன்னார், அதனால் அவருடைய யோகவழியும் தள்ளப்பட வேண்டியது. இதுதான் இந்த அதிகரண விஷயம்.

(ஸாங்கிய ஸ்மிருதி போலவல்லாமல் சதுர்முகனாகிற பிரும்மா எல்லா வேதங்களையும் முதலில் தான் கற்று பிறர்க்கும் ஓதுவித்தது பிறகு அவராலே யோக ஸ்மிருதி இயற்றப் பட்டது. இதில் ஈஸ்வரன் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறான். இதில் வேதாந்தங்களில் மோக்ஷஸாதனமாக கூறப்பட்ட யோகமும் சிலஅம்சங்களால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. (ஸ்ரீ வித்யா உபாஸனை இதில் வரலாம் என எமது கருத்தாகும்.)

இப்பேற்பட்ட யோகமும் - எந்தக் காரணத்தினால் கபிலரின்ஸ்மிருதி நிராகரணம் செய்யப்பட்டதோ அதே காரணத்தினால் யோக ஸ்மிருதியும் தள்ளப்படவேண்டியது - அதாவது ஈஸ்வரனை நிமித்தமாத்ரமாகவும் பிரகிருதியையே உபாதான காரணமாகவும் கொள்ளத்தக்கது, என்பது பூர்வ பக்ஷமாகும் - (இதுதவறு). प्रत्युक्त என்பதற்கு ஈஸ்வரேதி என அர்த்தம். இங்கே அதிகமான சங்கை ஒன்று ஏற்படு

கிறதா? முந்தின அதிகரணத்தில் சொல்லப்பட்டதை சரியான நியாயத்திஞல் தள்ளப்பட்டதே - அதைவிட இன்னும் ஏதாவது அதிகமான சந்தேகம் (இதையும் தள்ளுவதற்கு) ஏற்படுகிறதா? இங்கே புருஷ விசேஷ - ஈஸ்வரன் என்று லக்ஷணம் ஓதப்படுகிறது. ஹிரண்ய கர்ப்பரால் செய்யப்பட்ட இந்த யோகஸ்மிருதியில் ஈஸ்வரன் ஒப்புக் கொள்ளப்படுகிருன். யோகம் என்பது பக்தியைக் குறிக்கும், பக்தி ஸாதனமாக அமைந்து - மோக்ஷத்தை அடையவிக்கிறது - என்பதும் சொல்லப்படுகிறது. (இங்கே ஜீவன் க்லேசங்களாகிற அவித்யா - அஸ்மிதா (நான், என்னுடையது - இத்யாதி அஹங்காரபாவங்கள்) ராகத்வேஷங்கள் - அபிநிவேசம் கொண்ட ஜீவன் - கர்மவசமடைந்தவன் - ஜன்மம் முடிவுள்ள ஆயுஸ் கொண்டவன். அத்தகைய பிரும்மா அவஞல் இயற்றப்பட்டயோகஸ்மிருதி).

ஹிரண்யகர்ப்பர் வேதங்களைக்கற்று ஓதி பிறருக்கு உபயோகப்படும்படி யோகஸ்மிருதியை-இயற்றினவர். அவர் கபிலரைப்போல வேதாந்த விஹித அர்த்தங்களைச் சொல்ல யோக்யதை பெற்றவர். இந்தக் காரணங்களாலே அவரால் ஸர்வவேதாந்த பிரவர்த்தன விஷயத்தில் சரியான அதிகாரியாகும். அதஞல் அவருடைய ஸ்மிருதியும் வேதாந்தத்திற்கு உபபிருஹ்மணம் எவ்விதம் அமையுமோ அதுபோல ஆவது நியாயம்தான் (இது பூர்வபக்ஷம்).

இதற்கு பரிஹாரம்-யோக ப்ரவர்த்தகராக விருந்தாலும் அது வேதாந்த விஹிதயோக பிரவர்த்தகமாகது - ஏனெனில் இதில் அபிருஹ்மாத்மகமான பிரதானம் உபாதானகாரணம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே ஈஸ்வரனுக்கு நிமித்த காரணம்மாத்திரம் ஓதப்படுகிறது. த்யான [பக்தி]ஆத்மகமாக அவருடைய யோகம் இருக்கிறதே என்ருல் தியானிக்கப்படும் பொருளை நிருபணம் செய்வதற்கு - வேதங்களின் ஆதாரம் சொல்லப்படவில்லை. பரமாத்மாவும் ஜீவாத்மாவும் இதில் த்யேய (சிந்திக்கப்பட வேண்டிய) வஸ்துக்களாக ஆகிருர்கள். ஜீவன் பிரும்மாத்மகமாகவில்லை; பரமாத்மாவோ ஜகத் உபாதான காரணமாக இல்லை அத்துடன்

ஸர்வ கல்யாண குணாத்மகனாகவும் ஓதப்படவில்லை; அதனால் அது வைதிகமான மதமில்லை. சொல்பவர் ஹிரண்யகர்ப்ப ராயினும், அவரும் ஒரு க்ஷேத்ரக்ஞன் (ஜீவன்) தானே! அவித்யா அஸ்மிதா ராக த்வேஷங்களுக்கு வசப்பட்டவன் அதனால் அவருக்கும் ரஜஸ்தமஸ் முதலிய பிராகிருத குணங் கள் ஏற்படலாமல்லவா? அதனாலே யோகஸ்மிருதியும் அவரால் இயற்றப்பட்ட ரஜஸ்தமஸ் குணங்களை மூலமாக உடைய புராணங்களைப் போல பிராந்தி மூலமே; அதனாலே இந்த யோக ஸ்மிருதியினாலே வேதாந்த வசனங்களை விளக்கு வதற்கு உபபிரஹ்மணத்தைப் போல ஆகாது அதனால் (வேதவிருத்தம் அவரும் ஜீவனாகிறபடியாலே மயக்கத்தின லேயே இது ஏற்பட்டிருக்க வேண்டும் என்கிற காரணங் களாலே கபிலஸ்மிருதியைப்போல) எல்லாப்படியாலும் அது கைவிடத்தக்கதேயாகும்.

(வக்தா நாலு வேதங்களையும் சொன்னவனேயானாலும் புராண கர்த்தாவானாலும் அதனால் பெரியவன் ஆயினும் அவனுடைய ஸ்மிருதி மோக்ஷஸாதனமான யோகத்தை ஒப்புக் கொண்டிருந்தபோதிலும், அந்த யோகத்துக்கு விஷய மான பிருஹ்மத்தை உலகிற்கு உபாதானகாரணமாக ஒப்புக் கொள்ளாமையாலும் ஜீவாத்மாவை பிருஹ்மாத்மகமாக ஒப்புக் கொள்ளாமையாலும் அவருடைய யோக சாஸ்திரம் பயனற்றுப் போகிறது.) ஆனால் இன்னொரு விஷயம்— பக்தி மோக்ஷஸாதனமாக அமைவதால், பக்தியைக் கூறும் சில அம்சங்கள் யோகஸ்மிருதியில் ஒப்புக்கொள்ளப்படலாம். அவையாவை அதாவது ஆத்மகுணங்கள் - அதை அடைய வழி—என்பது பற்றி ஜிக்ஞாஸாதிகரணம்—லகுசித்தாந்தம் பார்க்கவும். (பிருஹ்மவித்யாபாகம்—இரண்டு) ஸ்ரீவித்யா உபாஸனையும் இந்த யோகஸ்மிருதியில் சேரலாம் - என்பதும் எமது கருத்து—சில அம்சங்களால்.

இதனால் ஸாங்க்ய யோக ஸ்மிருதி விரோதவாதங்கள் தளளப்பட்டவை; அதனாலே மனு போன்றவர்களின் ஸ்மிருதிகள் ஒப்புக்கொள்ளப்பட வேண்டியவை. இதனால் அவைகளுக்கு துர்பலம் இல்லை என்பது ஸ்தாபிதம் செய்யப்

பட்டது. பலமுள்ளவையேயாகும். ஆகவே அதற்கு விரோதமான வாதங்கள் மீண்டும் நிரஸ்தம் ஆகும் அடுத்த அதிகரணத்தில்.

விலக்ஷணத்வாதி கரணம் (2-1-3)

சூத்ரம் न विलक्षणत्वादस्य तथात्वं च शब्दात् (2-1-4)

ந விலக்ஷணத்வாதஸ்ய ததாத்வம் ச சப்தாத் (2-1-4)

ந ஜகத்காரணம் பிருஹ்மத்திற்கு ஆகமாட்டாது அஸ்ய விலக்ஷணத்வாத் இந்த ஜகத் பிருஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டதாக விருக்கிறது. ததாத்வம் இவ்விதம் மாறுபட்டிருப்பது சப்தாத்ச சாஸ்திர பிரமாணத்தினுல் அறியப்படுகிறது.

(இந்த அதிகரணத்தில் தர்க்கத்தை ஆதாரமாகக் கொண்டு பிரதான காரணவாதி ஆட்சேபிக்கிருன். மனு முதலான ஸ்ம்ருதிகள் தர்க்கத்திற்கு முரண்பட்டவையாகையாலே துர்ப்பலமாகும். ஆகவே தர்க்கத்தோடு ஒத்திருக்கும் கபிலஸ்ம்ருதியே கைக் கொள்ளத் தகுந்தது என்பது அவன் வாதம். அந்த வாதம் தள்ளப்படுகிறது. (முன் இரண்டு சூத்ரங்கள் பூர்வபக்ஷம் பிற்பாடு வருபவை சித்தாந்தம்.)

மீண்டும் ஸ்மிருதி விரோதிவாதி தர்க்கபலத்தை அவலம்பித்து - இந்த ஆட்சேபத்தை எழுப்புகிருன். சாங்கியஸ்மிருதியை நிராகரிப்பதாலே, ஜகத் பிருஹ்மத்தின் காரியமாகிறது என்று சொல்லும்படி ஆகிறது. இந்த விஷயம் வேதாந்தத்திலிருந்து காட்டப்படுகிறதில்லை (அதாவது அது பிருஹ்மத்தைவிட வேறு ஒன்றைக் காரணமாகக் கொண்டது என்று). ஏனெனில் अस्य-இந்த ஜகத் (உலகம்) பிரத்யக்ஷாதி (இதர பிரமாணங்களாலும் தர்க்க - அனுமானம் இத்யாதி) பிரமாணங்களுக்கு உட்பட்டதாக அசேதன-சேதன வஸ்துக்கள் அடங்கியதாகவிருக்கிறது. எப்படிப்பட்ட அசேதன, அசுத்த அநீஸ்வரத்வேந- துக்காத்மகமாகவிருக்கும் பிரபஞ்சம் (ஜட பிரபஞ்சம், அசேதன வஸ்துக்கள் சேதன வஸ்துக்களை ஆஸ்ரயம் - ஜீவர்கள் அஸர்வக்ஞன் - அசுத்தன் -.ஆனப்

படுபவன்-துக்கமுள்ளவன். அத்தகைய சேதனர்களை ஆஸ்ரயம் செய்யும் அசேதன வர்க்கங்கள் - இதற்கு விரோதமாக வேறுபட்டதாக விருக்கும் பிருஹ்மம் (பரமாத்மா) (எத்தகையவன்?) ஸர்வக்ஞன் - ஸர்வேஸ்வரன் - ஹேயப்ரத்யனீகதான (எதிர்தட்டு) ஆனந்தத்தையே ஸ்வரூபமாகவும் குணமாகவும் உடையவன். அப்பேற்பட்ட பிருஹ்மம்சித் அசித் வஸ்துக்களிலிருந்து விலக்ஷணமாக விருக்கிறது. கேவலம் பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களால் மாத்திரம்-ஜகத்தின் பிருஹ்மத்திலிருந்து வேறுபட்ட தன்மை அடையப்படுகிறதில்லை. அத்தகைய விலக்ஷணத்வம் (வேறுபட்டதன்மை) சுருதிகளிலாலும் சொல்லப்பட்டதாகும்.

शब्दाश्च சாஸதிர பிரமாணத்திலுலும் ததாத்வம் (இப்படி வேறுபட்டிருப்பது) (விலக்ஷணத்வம்) அறியப் படுகிறது. உதாரணம் தை ஆ. 6-3 विज्ञानं चाविज्ञानं च விக்ஞானமும் அவிக்ஞானமும் கூட [பிருஹ்மமும் அறிவற்றதான ஜகத்தும்] (கௌ.உ. 3-1) एवमेवैताभूतमात्राः प्रज्ञामात्रास्वर्पिताः प्रज्ञामात्राः प्राणेऽर्पिताः—இம்மாதிரியாக பூதமாத்திரங்கள் பிரக்ஞையையும், பிரக்ஞையும் பிராணனையும் நம்பியிருக்கின்றன (தாங்கள் செயல்படுவதற்க்காக); முண்.உ. 3-1-2ல் समाने वृक्षे पुरुषोनिमग्नो ऽनीशया शोचति मुह्यमानः-ஒரேவிருக்ஷத்திலே ஜீவன் துக்கத்திலுல் மக்னப்பட்டவனுக அமிழ்ந்திருகிறுன். அவன் அறிவற்றவனுகவும் சக்தியில்லாதவனுகவுமிருக்கிறுன். ஸ்வே. 1-8 अनीशश्चात्मा बध्यते भोक्तृभावात् எவன் (அந்த ஜீவன்) ஆளப்படுபவனுகவும் - ஜீவனுகவும் - போக்த்ரு வர்க்கங்களை அனுபவிப்பவனுகவுமிருக்கிறுன் — பத்தனுகவுமிருக்கிறுன். இந்த வாக்யங்களிலிருந்து ஜகத் பிருஹ்மத்தின் காரியமாகவிருக்கிறது என்பதால் அந்த ஜகத்திற்கு அசேதனத்வம் - சேதனன் துக்கியாகவிருப்பது - இத்யாதி தோஷங்கள் காட்டப்படுகின்றன. எந்த ஒரு வஸ்து இன்னொரு வஸ்துவின் காரியமாக விருக்கிறதோ, அந்த காரியம் அதன் காரணத்திலிருந்து வேறுகவில்லை - ஸலக்ஷணத்துடனிருக்கிறது. तत् तस्मादविलक्षणम् எப்படி மண், சுவர்ணம் இவைகளிலிருந்து உண்டாக்கப்பெற்ற பானை - தங்கச்சங்கிலியும் பொன்னிலிருந்து வேறு

படாமல் ஸ்வரூபத்தில் ஒன்றுக விருக்கிறதாகக் காணப்படு கிறது. ஆகையால் பிருஹ்மத்திற்கு வேறுபட்டதான (வில க்ஷணமாக) இந்த ஜகத்-பிருஹ்மத்தின் காரியமாக ஆகாது என்பதால் சாங்கியஸ்மிருதி சொல்கிறபடி பிரதானமே காரிய ஸலக்ஷணத்துடன் கூட விருக்கிறது. ஆகவே பிரதானமே உபாதானகாரணம் என்பது சரியாகும். இதற்கு சுருதி பிரமாணங்களும் காட்டப்படுகின்றன.

விளக்கம்:—

(இங்கு சொல்லப்படும் பூர்வபக்ஷம் பிருஹ்மத்திற்கு உலகம் காரியம் (உபாதேயம்) என்று கூறுவது தவறு. காரியம் காரணத்திலிருந்து லக்ஷணங்களால் வேறுபட்ட தாக விருக்காது. காரியமும் காரணமும் ஸலக்ஷணமாக விருக்கவேண்டும் ஒரே ஸ்வபாவம் ஒரே தன்மையுடன் கூடியதாக விருக்கவேண்டியது. இங்கே ஜகத் சித் அசித் மிஸ்ரவஸ்து; உலகம் அசித்தாக விருப்பதாலும் விகாரமுடை யது, ஆனல் பிருஹ்மமோ விகாரமற்றது. சேதனன் அற்ப அறிவுள்ளவன் அற்பசக்தியுள்ளவன். பிரும்மம் அவனுக்கு எதிர்தட்டு — ஸர்வக்ஞத்வம், ஸர்வசக்தியுடன் கூடியது. மேலும் உலகம் அபுருஷார்த்தமான துக்கம் முதலானவற் றிற்கு இருப்பிடமாயிருப்பது. ஆனல் பிருஹ்மமோ பரம புருஷார்த்தமான ஆனந்தத்திற்கு இருப்பிடமாகிறது. இத் தகைய வேறுபாடுகள் இருப்பதால் - ஸலக்ஷணத்வம் இல் லாத உலகம் பிருஹ்மத்தின் காரியமாகயிருக்க முடியாது. உலகில் மண் முதலான (உபாதான) காரணங்களும் பானை முதலிய கார்யங்களும் (உபாதேயங்களும்) வேறுபாடின்றி- ஒரே லக்ஷணமுடையவையாயிருப்பதைக் காண்கிறோம். பானையோ மண் உருவமாகவேயிருக்கிறது. அதே போல தங்க சங்கிலி பொன் கட்டி உருவாகவே - அவஸ்தா பேத மாகத்தான் காணப்படுகிறது. இத்தகைய காரியகாரண பேதலக்ஷணத்தால் உலகம் பிருஹ்ம காரியமாகாது. பிர தானத்தின் பரிமாணமே ஆகும். ஆகவே பிரதானமே உபா தான காரணமாகும்.)

மேலும் சாஸ்திரத்திஞலேயும் - அது ஸ்வதந்திரமாக விருக்கும் பிரமாணமாக விருப்பதாலே - வேறு ஒன்றின் உதவியையும் அபேக்ஷிக்காது அதே மாதிரி இந்திரியங் களுக்கும் அதீதமான விஷயத்தைப் பற்றியதாகும். இந்தக் காரணங்களாலே - தர்க்கத்தை அனுஸரிக்க வேண்டும். ஏனெனில், ஞானவிஷயத்திலே (சம்சயம் யேற்படும்போது) எல்லாப் பிரமாணங்களும் சிலசில விஷயங்களிலே தர்க்க சம்மதமாக அர்ததம், அந்த ஹேதுவிஞல் அர்த்தம் நிச்சயம் யேற்படலாம். தர்க்கம் எனப்படும் வழியிஞல் அடையப் படும் ஞானம் அர்த்தத்தின் உண்மையான பாவத்தை நிச்சயிப்பதிலே சரி; அல்லது ஸாமக்ரி விஷயத்திலேயாவது (ஸாமக்ரிவிஷயம் அந்த அந்த இடங்களுக்கு யேற்ப இந்திரிய (பிரத்யக்ஷ) லிங்க சப்தம் இத்யாதிகளால் யேற் படுவது) நிருபணம் செய்வதில் உபயோகப்படுவதால் அதஞல் அர்த்த விசேஷத்திற்கு பிரமாணமாக உபயோகப் படுகிறது; வ்யவஸ்தை செய்வதற்கும், அனுமானிப்பது ஊஹிப்பது போன்றவைக்ளுக்கும் உபயோகப்படுகிறது.

இங்கே சுருதபிரகாசிகையில் இருவிதமான தாக்கவாதங் கள் காட்டப்படுகின்றன. ஆகாசம் அது உருவமில்லாதபடி யால் அது இந்திரியங்களால் அறியப்படுவதற்கு முடியாத படிவிருக்கிறது. அதன் ஸ்வரூபம் எத்தகையது என்பது ஒரு உதாரணம். இன்ஞெரு வகை யாக, யக்ஞங்களில் எதை ஹோமம் செய்வது, மாம்ஸமாகில் எந்தப் பிராணியின் மாம்ஸம், எந்த அவயவத்தை இத்யாதி சந்தேகங்கள்; அங்கே ஒரு விதமான பிரமாணம், அதேமாதிரி பொதுவாக எந்த பிராணியையும் கொல்லக் கூடாது, அந்த பிராணி களுள் எந்தப் பிராணியைக் கொல்லவேண்டியதோ அவை களைத் தவிர்த்து, மீதியுள்ளதைக் கொல்லக் கூடாது என்ப தாகும்.)

ஆகவே தர்க்கத்தின் பிரமாணபதவி மற்ற பிரமாண ஸாதனங்களுக்குச் சமமாக விருக்கிறது. சாஸ்திரத்திற்கு பிரமாண பதவியேற்படுகிறது. அதஞல் சம்பாதிக்கப்பட்ட ஞானம் ஆகாங்க்ஷையை நம்பியதாகவும், அஸம்கிதி

யோக்யதா (Juxta positon ஸ்தானம் மாறியிருப்பதாலேயும்) அக்ஞானுதீன பிரமாணபாவத்தினுலே, எல்லாவித ஞானமும் தர்க்கத்தினுல் அனுக்ரஹிக்கப்பட்ட அபேக்ஷயாகும் உதா. நெருப்பு - புகை - புகையிருப்பதாலே, வ்யாப்திரூப ஸாமக்ரி நிரூபணத்தினுலே, உண்டான ஹேதுவே அறியப்பட்ட விஷயம்); மனுவினுல் சொல்லப்பட்டது - यस्तर्केणानुसंधत्ते स धर्मं वेद नेतरः - எவன் ஒருவன் தர்க்கத்தின் உதவியினுல் படிக்கிருனே - அவனே தர்மத்தை அறிகிருன் - அவ்விதமில்லாதவன் அறிகிறதில்லை – (ஸ்மி. 12) அதனுலே தர்க்கானுக்ரஹீத சாஸ்திரார்த்தமே பிரதிஷ்டாபனம் - தர்க்க சம்மதமான சுருதியின் அர்த்தம் ஸ்தாபிதம் - அது இம்மாதிரி சொல்லப்படுவதாலே பிரு. உ. 2-4-5 & 4-5-6 - मन्तव्यः - சிந்தனை செய்யப்படவேண்டியது - சாக்ஷாத்காரம் யேற்படும் வரை-பிரமேய விஷயத்தை அடிக்கடி சிந்திக்கவேண்டியது. சரியா - இவ்விதமா என ஆலோசிக்கவேண்டியது - இங்கே மனு வாக்யத்தில் முக்ய பகுதியை சாங்கியனுல் விடப்பட்டு ஒருபாகம் தான் சாங்கியபக்ஷ ஆதரவாகச் சொல்லப்படுகிறது - முழுவதும் வேதாந்த சூத்ரத்தில் 2-1-12-ல் சொல்லப்படுகிறது.)

அதற்கு யாதவ பிரகாச பக்ஷத்தினர்கள் ஆட்சேபிக்கக் கூடும். சுருதியினுல் ஜகத்திற்கு பிருஹ்மம் தான் உபாதான காரணம் என்று நிச்சயிக்கப்படும் போது, இந்த ஜகத் பிருஹ்மத்தின் காரியமாதலால், அந்த உலகத்தின் சைதன்யானு விருத்தியை ஒப்புக் கொள்ளவேண்டும். (இங்கே ஜகத் சேதனனுகிற பிருஹ்மத்தின் காரியத்வம் என்பது சம்சயம் - பூர்வ பக்ஷி சொல்வது இதுவல்ல - அனுமானத்தினுல் பாதிதம் என்கிருன். அதற்கு ஹேது किञ्चेति என்று சொல்லுகிருன். பானை முதலியவை சைதன்ய நிச்சயத்திற்கும் பிறகு அல்லவோ, பிரும்மகார்யத்வம் என நிச்சயிக்கப்படுகிறது - என்று சொல்லப்படுமானுல் அது எப்படி?- அதற்குப் பதில் விலக்ஷணயோர்ஹீதி).

எப்படி ஒரு சேதனனுக்கு சுஷீப்தி - மூர்ச்சாதி அவஸ்தைகளில் சைதன்யத்வம் வெளியில் பிரகடனமாவதில்

லயோ - அதுபோல சைதன்யத்வமும் பானை முதலிய பதார்த்தங்களிலும் இருப்பது வெளியில் பிரகடனமாவ தில்லை; அதனால் சேதன அசேதன விபாகம் (பிரிவு) ஏற் படுகிறது - இந்தக் காரணத்தினால்

இவ்விதம் சொல்வது சரியல்ல என்போம், ஏனெனில் அனுபலப்தி (இவ்விதம் காட்சிக்கு பிரகடனமாகாமலிருத் தல்); எதை நிரூபிக்கிறது வென்றால்-அந்த சேதனத்வம் எப் போதும் அதன் அஸத் பாவத்தையே (அது இல்லாமை யையே) ஸாதிக்கிறது. அதாவது அது எப்போதும் இல்லை என்பதாலே. அந்தக் காரணத்தினால் பானை முதலிய வஸ்துக் களுக்கும் சைதன்ய சக்தி (அறிகிற தன்மை) எப்போது மிருப்பது - அது நிரஸ்த: (நிராகரிக்கப்படுகிறது) - ஏனெ னில் எவன் ஒருவன் ஒரு வஸ்துவுக்கு ஒரு காரியத்தை உண்டாக்க சக்தி ஒரு காலத்திலே ஒரு தேசத்திலே இல்லா மல், (எப்போதுமிருப்பதாக) உண்டு என்கிறானோ, அதற்கு ஒரு காரியத்தை உண்டுபண்ணுகிற சக்தி அதற்குள் இருக் கிறது என்கிறானோ, அவன் உத்கோஷிக்கிறானோ, அவன் மலடிகளின் புத்ரர்கள் இருக்கும் ஸதஸ்ஸிலே (சபையிலே) கோஷிக்கட்டும் - அவனுடைய மாதா மலடிதான் என்பது போல (பரிகாச வார்த்தையாகும்.)

மேலும், வேதாந்த வாக்யங்களில் முதலில் நிரூபணம் - பிருஹ்மம்தான் ஜகத்திற்கு உபாதான காரணம்; இதிலிருந்து என்ன நிச்சயிக்கப்படுகிறது என்றால் பானைகள் அது போன்ற வஸ்துக்களுக்கு சைதன்யசக்தி இருக்கக்கூடும் - அல்லது அவைகளுக்கு ஸத்பாவம் நிச்சயம் ஆனால் பிர கடனமாகாமல் அடங்கியிருக்கிறது என்று சொல்லலாம். இதிலிருந்து சுலபமாக நிச்சயிக்கப்படலாம். வேதாந்த சுருதி கள் பிருஹ்மத்திற்கு ஜகத்தின் உபாதான காரணத்வம் உண்டு என்பதாகும். இந்த தீர்மானத்தினால் அன்யோன்ய ஆஸ்ரயத்வதோஷம் ஏற்படக்கூடும். **विलक्षणयोर्हि** - இரண்டு வஸ்துக்களுக்குள்ளே அத்யந்த பேதம் இருப்பதால், காரிய காரணபாவத்தை இத்தகைய விக்ஷலண முள்ள இருவஸ்துக்

களுக்கு பிரதிபாதிப்பதற்கு முடியவே முடியாது. (அதாவது ஸலக்ஷணத்வமுள்ள வஸ்துக்களுக்குத் தான் காரியகாரண பாவம் ஓதக்கூடும் - வேருன தன்மையுள்ளவைகளுக்கு ஏற் படாது) என்பதாகும்.

ஃ புந:? சேதன அசேதனத்வ பொருள்களுக்கு வேருன தன்மை ஸத்யமாளுலும், அதனுலே உபாதான காரணத்வம் யேற்படாது பிருஹ்மத்திற்கு என்று நீ சொல்வாயாகில், நாம் (பூர்வபக்ஷியைக்) கேட்பது ஃ புந:? எங்கனமெனில் பிரக்ருதி அதன் மாறுதல்கள் இவைகளுக்குள் இருக்கும் ஸமான தன்மை (ஒற்றுமை) (நீ இந்த ஒற்றுமை இல்லாத படியாலே சொல்கிருயே பிருஹ்மத்திற்கு ஜகத்தின் உபா தான காரணத்வம் யேற்படாது என்கிருயே அந்த ஒற்றுமை இல்லாதபடியாலே, ஒற்றுமையாகிற ஸமானத்வம், இவைக ளுக்குள்ளே இருக்கும் எல்லாத் தர்மங்களும் ஒன்ருக விருக் கின்றன, என்பதில்லை. ஏனெனில் அவ்விதமாகில் (எல்லாத் தர்மங்களும் இருக்குமாகில்) காரியகாரணபாவம் ஏற்படாது. வாஸ்தவமாகவே பானை - தட்டுகள் முதலியவைகள் களி மண்ணின் காரியாவஸ்தைகளாகும். இதில் களிமண்ணின் தன்மை கார்யங்களில் இருப்பதாகக் காணப்படுவதில்லை. மேலும் இவைகளுக்குள்ள ஒற்றுமை சிலதர்மங்களுக்குத் தான் யேற்படுகிறது; அம்மாதிரியான ஒற்றுமை ஜகத்திற் கும் பிருஹ்மத்திற்கும் ஏற்படக்கூடும்—ஸத்பாவம், திரவிய மாக விருப்பது போன்ற தர்மங்களாலே.

ஆகையால் ஸர்வ தர்மஸாருப்யம் அவசியமில்லை; அவ் விதமாளுல் காரியகாரணபாவம் ஏற்படாது. பானை முதலி யவைகளில் களிமண் பிண்டதவம் தொடருவதில்லை. ஆகவே எந்த சிலதர்மங்களில் ஸாரூப்யம் இரண்டிலும் காணப்படுகின்றதோ, அதே மாதிரி ஜகத் பிருஹ்ம விஷயத் திலும் ஒற்றுமை ஸத்பாவத்திலும் - திரவியமாகவிருப்ப தாலும் யேற்படக்கூடும்.

இதற்கு நாம்பதில் அளிப்போம். எந்த அசாதாரண தர்மத்திளுலே ஒருவஸ்துதான் காரணமாக விருப்பதற்கு

தகுதியாகிறதோ - அந்த அசாதாரண தர்மத்தினுலே, அந்த ஸ்வபாவத்தினுல் அந்த காரியத்தில் இருக்கிறதாக அர்த்தம். அந்த ஸ்வபாவமே தொடர்ந்து காணப்படுவதால், காரிய காரணங்களுக்கு ஸலக்ஷணமாகிறது; அதனுல் ஒற்றுமை தர்மமூலமாக யேற்படுகிறது. இரண்டும் வெவ்வேருன திரவியங்களானுலும் யேற்படுகிறது எனலாம். எந்த பரிணும விருத்தியினுல் மண் முதலியவைகளும் தங்கக்கட்டி முதலியவைகளும் மாறுபாட்டை அடைகின்றதோ அந்த ஆகார பரிணுமவிருத்திகள் காரியங்களாக மாறினுலும் குண்டலம் முதலிய காரியங்களிலும் காணப்படுகிறது. இங்கே பிருஹ்மத்தின் ஸ்வரூபம் - ஹேயப்ரத்யனீக, ஞான ஐஸ்வர்ய ஸ்வபாவம்; ஜகத்தோ அதற்கு எதிராகவுள்ள ஸ்வ பாவம் கொண்டது. ஆகையால் ஜகத்திற்கு பிருஹ்மம் உபாதான காரணமாகாது; வெவ்வேறு ஸ்வபாவமுள்ள படியாலும்-ஸமான தர்மங்கள் இரண்டிலும் காணப்படாமை யினுலும். (பூர்வபக்ஷம்)

(இங்கே சொல்லப்படுவது இரண்டுக்குமுள்ள வேறு பட்டதன்மை - வித்யாஸம் பிரத்யக்ஷத்தாலும் அனுமானத் தாலும், சாஸ்திரத்திலுலும் அறியப்படுகிறது. தைத். விக்ஞானம் ச அவிக்ஞானம் ச (பிருஹ்மமும் அறிவற்றதான ஜகத்தும்) இது வேறுபாட்டைக் காட்டுகிறது. இதற்கு மேல் இன்ஞெரு ஆட்சேபம். உலகம் விலக்ஷணமானபடி யால் - பூமி - ஜலம் முதலியவைகளும் சேதனத்வம் உடைய தாக சுருதி காட்டுகிறது. (தம்பிருத் வ்யப்ரவீத்). இதனுல் அனுமானத்தினுலும் ஜகத்தும் பிருஹ்மமும் வேருன வையே. விலக்ஷணமானுல் காரியகாரணபாவம் ஏற்படாது. இதே நியாயத்தினுல் பிரபஞ்சத்திற்கு சேதன அம்சத்தின் காரியமாவதால் பிரதானம் ஸர்வகாரணத்வம் ஆகிறது, ஸ்தாபிதம் என்பது பூர்வபக்ஷம்.

நீ சொல்வது போல அல்ல ஏனெனில் காரியகாரண வஸ்துக்களில் விலக்ஷணத்வம் (வேற்றுமை) காணப்படி னும் அவைகளுக்கு காரியகாரணபாவம் இருக்கத்தான் இருக்

கிறது எனக் காணப்படுகிறது. எங்ஙனமெனில் சேதனர்களாகிற புருஷர்களிடமிருந்து அசேதன வஸ்துக்கள் (தலையில் மயிர், உடம்பில் நகங்கள் பற்கள் ஏற்படுகின்றனவே. (ஆகவே ஸக்ஷணத்வம் அவசியமில்லை) அசேதன வஸ்துவாகிற சாணியிலிருந்து சேதனதேள் உண்டாகிறது. சேதன சிலந்தியினிடமிருந்துஅசேதன நூல் (வலை) உண்டாகிறது. ஆகவே அவ்விதம் சொல்வது சரியில்லை. இம்மாதிரி விஷயங்களிலும் காரியகாரணபாவம் அசேதன வஸ்துக்களுக்குள்ளேயுமிருக்கிறது. (இது வேதாந்த பக்ஷத்தை வாதிப்பதாகும், வேதாந்திகள் ஒப்புக்கொள்கிறார்கள். சில சந்தர்ப்பங்களிலே உயிரில்லாத வஸ்துக்களிலிருந்து உயிருள்ளவையேற்படுகின்றன உதாரணமாக தேனிலிருந்து தேனீ உண்டாவதும் சாணியிலிருந்து தேளும் உண்டாகிறது).

ஸ்ரீபாஷ்யம் :—

மேலும் ஆட்சேபிக்கப்படும் - எந்த வஸ்துக்கள் அசேதனம் என்று ஒப்புக் கொள்ளப்படுகின்றனவோ, அவைகளுக்கும் சைதன்யயோக: (சைதன்யத் தன்மையுடன் விருப்பது) ஸ்ருதிகளில் ஓதப்படுகிறது. யஜீ. 5-5-2 तं पृथिव्यब्रवीत् ப்ருத்வி அவனிடம் பேசிற்று; தை. பி. 3-1-5 आपोवा अकामयन्त வாஸ்தவத்திலே ஜலங்கள் விரும்பின. பிரு. உ. 6-1-7 ते हेमे प्राणा अहंश्रेयसे विवदमाना ब्रह्मजग्मुः வாஸ்தவத்திலே இந்த பிராணன்கள் தங்களுக்குள்ளே ஒன்றுக்கொன்று "நான் முதல்வன்" எனப் போட்டி போட்டுக் கொண்டு அவை பிரும்மாவினிடம் சென்றன என்று; நதி ஸமுத்திரம் பர்வதங்கள் இவைகளுக்கும் சேதனத்வம் உண்டு என்பது புராணங்களில் ஸித்தம். (உதாரணமாகப்ருத்வி பிரஜாபதியிடம் முறையிட்டது - யாகத்திற்காக நெருப்பு ஒரே கும்பலாக மூட்டப்படுகிறது. ஜலங்களின் அபிமானிதேவதை சமுத்திரங்களின் ஜலங்களை அடக்கி ஆள விரும்புகின்றன. பிரும்மாவின் உபதேசத்தினால் இந்திரியங்கள் முக்ய பிராணனை பிராணன்களுக்குள்ளே ஸ்ரேஷ்டன் என்று கண்டு பிடித்தன. முக்ய பிராணன் இல்லாவிடில், தேகம் அழிந்து போகிறது. இங்கு பிரு. உ. 6-1-7 பிரும்மணம் என்கிற

தற்குப் பதிலாக பிருஹ்ம என்று கொண்டிருக்கிறது). ஆகையாலே ஸ்வபாவத்திலே பிரும்மத்திற்கும் ஜகத்திற்கும் வேற்றுமை (வைலக்ஷண்யம்) இல்லை இதுவும் பூர்வபக்ஷம் இதற்கு சூத்ரக்காரர் பதில் அளிக்கிறார்.

சூத்ரம் - अभिमानिव्यपदेशस्तु विशेषानुगतिभ्याम् (2-1-5)

அபிமானிவ்யபதேஸஸ்து விசேஷாநுகதிப்யாம் (2-1-5)

அபிமாநிவ்யபதேஸ: து - (பூமி சொல்லிற்று - முதலான வி ங்களில் பூமி முதலானவற்றின்) அபிமானி தேவதைகளையே சொல்கிறது. விசேஷாநு கதிப்யாம் (பூமி முதலான வற்றை தேவதா சப்தத்தாலே விசேஷித் திருக்கையாலும்; அக்னி முதலானவை வாக் முதலான வற்றை அநுப்ரவேசிப்பதாகக் கூறுவதாலே - அந்தந்த அபிமானி தேவதைகளுக்கு தர்மம் - சலனம் ஓதப்படுவ தாலே இது தெளிவாகிறது.

'து' சப்தம் ஏற்பட்ட சங்கையை நிவிருத்தி செய்வதாக அர்த்தம். பிருதிவ்யாதி அபிமானி தேவதைகள் - ப்ருத்வி என்கிற சப்தத்தால் சொல்லப்படுகின்றனர் - तं पृथिव्यब्रवीत्- வாஸ்தவமாக பிருத்வி அவனிடம் பேசிற்று. எப்படி? विशेषानुगतिभ्याम् - ஒரு குறிப்பிட்ட தர்மம் - வ்யக்திக்கு விசேஷணமாக விருக்கிறது. विशेष: - விசேஷணம் (தர்மம்); (இங்கு சொல்லப்படுவது - சப்த பிரமாணம் அசேதன விஷ யங்களிலும் இருக்கிறது - இங்கே அசேதன திரவியங் களுக்கு அபிமானி தேவதைகள் பேசப்படுவதால் - (திரி விருத்கரணத்தாலே யேற்படுவதான வ்யஷ்டி ஸ்ருஷ்டியி லுள்ள தத்வங்களுக்கு அபிமானி தேவதைகள் பேசப்படு கின்றன. தேவதா என்பதற்கு இங்கு அபிமானி தேவதை யாகும் - பரமாத்மா வாச்யமில்லை.)

தேவதா சப்தத்தினால் விசேஷ்யங்களாகிற பிருத் வியாதிகள் பேசப்படுகின்றன. சா. 2-6-3-1-हन्ताऽहमिमास्तिस्रो देवता: - நான் இந்த மூன்று தேவதைகளிலும் உள் நுழை

கிறேன். இங்கே தேஜஸ், அப்பு, அன்னம் (பூமி) இவைகளுக்கு தேவதா சப்தத்தினால் (விசேஷணம்) - விசேஷ்யம் சொல்லப்படுகிறது. விசேஷ: - விசேஷணம் - கௌ. உ. 11-14 - ல் सर्वा हवै देवता अहं श्रेयसे विवदमाना:....ते देवा: प्राणे नि:श्रेयसं विदित्वा - इति च - வாஸ்தவத்திலே - எல்லா தேவதைகளும் ஒவ்வொருத்தரும் போட்டி போட்டு - தங்கள் தங்கள் பெருமைக்கு...அந்த தேவதைகள் - பிராணனில் ஸ்ரேயஸ் இல்லாததாக அறிந்து கொண்டு - (இங்கு சொல்லப்படுவது- ஐந்து பூதங்கள் அபிமானி தேவதைகளாக அறியப்படுகின்றன. அதேபோல - ஐம்பூதங்களை வேறிடத்தில் சொல்லும் போது - அபிமானி தேவதைகள் சொல்லப்படுகின்றனர். (இங்கே பிராணன்கள் இந்திரியங்களாகும். (கௌ.உபநிஷத்தில்) இந்த பாடம் பல விதமாக விருக்கிறது-(பாடபேதம்)- தத்தேவ-தேதேவா: என்பதற்கு ஓதப்படுகிறது - एत ह वै देवता காணப்படுகிறது. இதற்குப் பதிலாக - सर्वा ह वै देवता.);

अनुगति: - என்பதற்கு அநுப்ரவேசம் (உள் நுழைதல்) என அர்த்தம். ஐத்.உ. 1-2-4 - अग्निर्वाग भूत्वामुखं प्राविशत् । वायु: प्राणो भूत्वा नासिके प्राविशत् । आदित्यश्चक्षुर्भूत्वाऽक्षिणी प्राविशत् - அக்னி வாக்காக ஆயிற்று - வாயில் நுழைந்தது - சூரியன் கண்ணாக ஆயிற்று - கண்ணுக்குள்ளே நுழைந்தது - வாயு பிராணனாக ஆயிற்று - மூக்கில் நுழைந்தது. இதனால் அபிமானி தேவதைகளின் அநுப்ரவேசம் சொல்லப்பட்டது. ஆகையால் ஜகத் அசேதனமானபடியாலே-பிருஹ்மத்தைவிட வேறாக (விலக்ஷணத்வாத்) விருப்பதால், (ஸ்வரூபத்திலே) - அது பிரும்மத்தின் காரியமாக ஆகமாட்டாது ஆகவே தர்க்கானுக்ரஹீதமான கபில ஸ்மிருதி பிரகாரம், பிரதானமே உபாதான காரணமாகும் ஜகத்திற்கு - இவ்விதம் வேதாந்தங்களே காட்டுகிறபடியால் (இதுவும் - முந்தின சூத்ரமும் பூர்வபக்ஷம் ஆகும்).

அவ்விதம் சொல்லப்படுமாகில், நாம் அதற்கு பதில் அளிக்கிறோம்.

சூத்ரம் दृश्यते तु (2-1-6)

த்ருஸ்யதே து (2-1-6)

திருஸ்யதேது உலகில் வேறான வஸ்துக்களிலிருந்து ஜந்துக்கள் உற்பத்தியாகின்றன; அது அவ்விதம் உண்டாவது காணப்படுகிறது. ஈ அதனில் வேறுபட்ட புழு உண்டாவது உதாரணமாகும்; தேனிலிருந்து ஈ உண்டாவது ஆகவே பிருஹ்மம் அல்லது காரணவஸ்து வேறாகவுள்ளது (எதிலிருந்து) உலகத்திலிருந்தும்(காரியத்திலிருந்தும்) வேறானது என்கிற விஷயம் சுருதிகளிலும் காட்டிக் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் வேறுபட்ட பிருஹ்மத்திடமிருந்து அதனிலும் வேறுபட்ட உலகம் உண்டாவதற்கு குறையில்லை தோஷமில்லை.)

முன் இரண்டு சூத்ரங்களாகிற பூர்வபக்ஷத்திற்கு இது சித்தாந்தியின் பதில். விலக்ஷணயோ: காரிய காரணபாவம் திருஸ்யதே.

து சப்தத்தினால் ஆட்சேபிப்பனின் பக்ஷம் திருப்பப்படுகிறது கண்டிக்கப்படுகிறது. என்ன சொல்லப்பட்டது பூர்வபக்ஷியினால், ஜகத் பிருஹ்மத்தைக் காட்டிலும் விலக்ஷணமாக விருப்பதால் பிருஹ்மத்திற்கு உபாதான காரணம் ஏற்படாது என்கிற அவன் பக்ஷம் அயுக்தம். விலக்ஷணமாக விருப்பினும் காரிய காரணபாவம் ஏற்படுகிறது, அது காணவும்படுகிறது. தேன் அடையிலிருந்து அதற்கு மாறான தேனீக்கள் உண்டாகின்றன.

பூர்வபக்ஷியினால் மேலே சொல்லப்பட்டது அசேதன அம்சங்களே காரியகாரண பாவத்தினால் ஸாலக்ஷண்யமுடையவையாக ஆகின்றன, வாஸ்தவம். அவ்விதம் தான் சொல்லப்பட்டது ஆனால் உன்னால் ஒப்புக் கொள்ளப்பட்ட ஸாலக்ஷணம் இங்கு காரிய காரணபாவத்தில் யேற்படுவதில்லை; நீ சொல்கிறபடி ஸலக்ஷ்ணத்வம் (காரியகாரண பாவத்தில் ஒற்றுமை) யிருக்குமானால், எல்லாக் காரியங்கள்

மற்றவைகளுடன் ஸாலக்ஷண்யத்துடன் இருக்கும் அதனுலே எல்லாவற்றிலிருந்தும் ஸர்வவஸ்துக்களின் உற்பத்தி யேற்படக் கூடும். உன்னுல் ஒப்புக் கொள்ளப்பட்ட ஸாலக்ஷணம் என்னவென்ருல் அந்த ஸாலக்ஷணம் காரணத் திலிருந்து காரியத்திலும் தொடர்ந்து விருக்கும், அதனுல் ஒரு வஸ்துவை மற்றெரு வஸ்துவினிடமிருந்துப் பிரித்துக் காட்ட உதவும். (வஸ்துவந்தராத் வ்யாவிருத்தி ஹேது பூதாத்);—(எதிலே) ஆகாரத்திலே (வடிவத்திலே) காணப் படும் அனுவிருத்தி (தொடர்ச்சி) அந்த ஸாலக்ஷணம் உன்னுல் சொல்லப்படுவது. ஆனுல் நீ சொல்கிறபடி நியமம் தேன் அடையிலிருந்து தேனீக்கள் உண்டாகிறதே அதில் அந்த ஸாலக்ஷ்ணயம் காணப்படுவதில்லையே (ஒன்று அசேதனம் மற்றது (தேனீ) சேதனம்; ஈயிலிருந்து புழு உண் டாகிறது. (சேதன வித்யாஸம் இதில் இருக்கிறது) இம்மா திரி உதாரணங்களிலே ஸாலக்ஷண்யம் (ஒற்றுமை) காணப் படுவதில்லை, இதேமாதிரி (நாம் சொல்வது) பிருஹ்மும் ஜகத் தும் விலக்ஷணமாகவிருந்தாலும் அசேதனமான ஜகத் அதன் காரியமாக ஏற்படாது உறபத்தியாகாது என்பது சரியில்லை— உலகம் உண்டாகலாம் (ஜகத்திற்கு பிருஹ்மகாரியத்வம் ஏற்படலாம்) ஏனெனில் இவை வெவ்வேறு லக்ஷணமுடைய தாயினும் காரியகாரணபாவம் ஏறபடலாம் என்று அர்த்தம். களிமண், ஹிரண்யம் இவைகளிலிருந்து மகுடம் (க்ரீடம்) இவைகளில காணப்படும் ஸாலக்ஷணம் மற்ற உதாரணங் களில் காணப்படுவதில்லை. தேன்ஈ உண்டாவது சாணி யிலிருந்து தேள் உண்டாவது. ஈயிலிருந்து புழு உண்டாவது இவைகளில் அஸாதாரண ஆகாரம் (ரூபம்) இதில் ஸாலக்ஷ ணம் ஏற்படுவதில்லையே ஆகவே அனுவிருத்தியிலே (கார ணத்திலிருந்து காரியம் வரை தொடர்ந்திருக்கும் ஆதார ஸாலக்ஷணத்திலே) வஸ்துக்கள் வெவ்வேருக ஆகின்றன. ஆகவே விலக்ஷணயோ: காரியகார்ணபாவம் திருஸ்யதே— என்பதாகும்.

(சித்தாந்தம்)

(ஸி. ஸூ.) சூத்ரம் **असदिति चेन्न प्रतिषेधमात्रत्वात्** (2-1-7)
அஸதிதி சேந்ந பிரதிஷேதமாத்ரத்வாத் (2-1-7)

அஸத் இதிசேத் (நீ சொல்கிறபடி ஒப்புக் கொண்டால்) காரியம் காரணத்தில் இல்லாமற் போகிறதே எனில், ந - இல்லாமல் போகாது. (**यो यद्विलक्षण:, न स तत्कार्यं** என்கிற நியமம் பங்கமாவதாலே **हेतुर्दृष्ट इति** - என்பது பாவம்); பிரதிஷேதமாத்ரத்வாத் காரியகாரணங்கள் ஒரே மாதிரியாக விருக்கவேண்டும் என்கிற நியமம் மாத்திரம் தள்ளப்படுகிறது. ஆனால் சிலசமயங்களில் விபரீத காரியங்கள் ஏற்படலாம். காரியம் ஒரு திரவியமாக காரணத்திலிருந்து வேறானது என்பது நிராகரிக்கப்படவில்லை. ஆகவே காரணகாரியங்கள் ஒரே வஸ்து என்பதை தள்ளவில்லை. திரவியம் ஒன்றுதான் (இங்கே ஜகத் விசிஷ்டபிருஹ்மமே காரணமாகவும், அதுவே காரியமாகவும் ஒப்புக்கொள்ளுகையால், இங்கு காரியகாரணங்களுக்கு இடையே ஸாலக்ஷண்ய முள்ளதேயொழிய் வைலக்ஷண்யமில்லை இதுவே சித்தாந்தியின் கருத்து மேலே சொல்லப்படும்).

விளக்கம் :—

**असदिति चेत** (பூர்வபக்ஷம் - **न** இல்லை **प्रतिषेधमात्रत्वात्** சித்தாந்தம்-திரவியங்களுக்கு மட்டும்;அதாவது ஸத்தாகிருக்கிற வஸ்துவிலிருந்து தான் இன்னொன்று உண்டாகும்.(நாம் ஸத்காரியவாதி-) முன் சூத்ரத்தில் சொன்னபடி காரணம்வேறு காரியம் வேறு என்று ஒப்புக் கொண்டால், காரணத்தில் காரியம் இல்லையென உண்டாகும். அப்படியானல் இல்லாத பொருள் - புதிதாக உண்டாகிறது - என்று கூறும் அஸத்காரியவாதத்தை ஒப்புக் கொண்டதாகி விடும். இது பொருந்தாது (நமது பக்ஷத்தில்). (இன்மொன்று ஆகாசதாமரை - முயற் கொம்பு - இதில் வஸ்துக்களே இல்லை-இங்கே காரண காரிய பாவம் ஏற்படுவதில்லை. வெறும் கற்பனையாகும் அதுபோல இங்கு இல்லை).

ப்ருஹ்மம் காரணம் - ஜகத் அதன் காரியம் (வேதாந்தியின் கருத்து). இங்கே காரணமும் காரியமும் விலக்ஷணமாக (வேருக) விருந்தாலும் (அவை வெவ்வேறு திரவியங்களாக இல்லாதபடியாலே) - இந்த உலகமாகிற காரியம் பிருஹ்மமாகிற காரணத்தில் இருக்காது-என்று சொல்லப்படுமானுல் உலகம் எப்படி உண்டாகியிருக்கமுடியும்? அது 'அஸத்'திலிருந்து (இல்லாத வஸ்துவிலிருந்து - புதிதாக) உண்டாகியிருக்கக்கூடும் (சாங்கியன்பக்ஷம் பிரதானத்திலிருந்து ஜகத் உண்டாகிறது என்கிருன். சித்தாந்ததி காரணத்தில் காரிய திரவியம் அந்தர்கதம் அதனுல் ஸாலக்ஷண்யம் இரண்டிலும் இருக்க வேண்டியது என்கிற நியமம் இல்லை அதாவது சித்தாந்தியின் கருத்து காரிய காரண திரவியங்கள் ஒன்ருகவிருக்கவேண்டும். காரணத்தில் இருக்கும் அசாதாரண தர்மம் தான் காரியத்தில் இருக்க வேண்டிய அவசியமில்லை. ஆகவே பூர்வபக்ஷியின் கருத்தில் ஸாங்கியனுடைய வ்யவஹாரத்தின் சாயை இருக்கிறது. திரவிய ஸம்மதி இருந்தால் போதும். இங்கே विलक्षण जगदाकारेण என்பதால் பரிணுமம் பேசப்படுகிறது. பிருஹ்மம் சரீரத்வாரா பரிணுமத்தை அடைகிறபடியால் - அதே ரூபத்துடன் (न तद्रूपेण) பரிணுமம் என்பது இல்லை.)

**ஸ்ரீபாஷ்யம்**:—பூர்வ பக்ஷி சொல்வதுபடியிருப்பின் - உலகத்தின் உற்பத்தி - அஸத்திலிருந்து (இல்லாமலிருப்பதிலிருந்து) ஏற்படும். அதற்கு நாம் பதில் சொல்கிருேம் - முந்தின ஸூத்திரத்தில் ஸாலக்ஷண்யம் இருக்கவேண்டிய நியமம் எல்லாவற்றிலும் நிஷேதிக்கப்பட்டாலும், அதனுலே காரியம் திரவியமாக காரணத்திலிருந்து வேறுபட்டாதாக விருக்கலாம் என்பது நிஷேதிக்கப்படவில்லை. न तु कारणात् कार्यस्य द्रव्यान्तरत्वम् । இங்கே பிருஹ்மம் காரண பூதம். தன்னையே - உலக ரூபமாக - மாறுதலுக்கு உட்படுத்திக் கொள்கிறது - அந்த உலகம் ஸ்வபாவத்திலே பிருஹ்மத்தை விட வேருக விருக்கிறது - இதனுல் பிருஹ்மம் ஜகத் காரணம் என்பது விடப்படவில்லை-அதாவது பரிணுமத்தை அடைகிறது சரீரத்வாரா என்பதாகும். ஈயிலிருந்து புழு

உண்டாகிறது. ஈ (காரணமாகவும்) புழு (காரிய்மாகவும்); தேன் (காரணம்) தேனீ (காரியம்) - இம்மாதிரி உதாரணங்களில் வைலக்ஷ்ணம் (வேற்றுமை) இருக்கிறதே யென்ருல், திரவிய ஸமானத்வம் இருக்கத்தான் இருக்கிறது - எப்படி ஹிரண்யத்திற்கும் (காரண தங்கக்கட்டிக்கும்) குண்டலத்திற்கும் (காரியத்திற்கும்) திரவியம் ஐக்யம் காணப்படுகிறதோ-அதுபோல பிருஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் திரவிய ஐக்யம் இருக்கிறது.

**விளக்கம்:**—இங்கு ஸத்கார்ய வாதம் பேசப்படுகிறது. கார்யம் காரணத்தின் இன்ஞெரு அவஸ்தையே. காரண காரிய வஸ்துக்களில் ஒரே திரவியம் இருக்கிறது. வேறு பட்ட லக்ஷணங்கள் விருப்பினும்-கார்ய காரண பாவம் ஏற்படலாம் என்கிற கருத்து. அது போல சாங்கியன் சொல்கிறபடி ஸாலாக்ஷ்ண்யம் இருக்கவேண்டியது என்கிற நியமமில்லை - இருந்தாலும் இருக்கலாம் இல்லாதபடியாக இருக்கலாம். பிற்பாடு ஜகத்திற்கும் பிருஹ்மத்திற்கும் ஸாலக்ஷ்ண்யத்வமும் காட்டப்படும் - வைலக்ஷ்ணயமில்லை - என்பது.)

மீண்டும் பூர்வபக்ஷி ஆட்சேபிக்கிருன்—

சூத்ரம் अपीतौ तद्वत्प्रसङ्गादसमञ्जसम् (2-1-8)

அபீதௌதத்வத் ப்ரஸங்காத ஸமஞ்ஜஸம் (2-1-8)

அபீதௌ ப்ரளயத்தில் (காரணத்தில் (பிருஹ்மத்தில்) கார்யம் (ஜகத்) ஒடுங்குகிறது. தத்வத் பிரஸங்காத் பிருஹ்மத்தில் உலகம் ஆவது போலவே - தங்கக் கட்டியில் பொன் குண்டலம் லயமடைவது (ஒன்ருவது) போல - காரியம் ஒடுங்குவது என்பதால் பரமாத்மாவுக்கு விகாரமடைதல என்கிற தோஷங்கள் யேற்படுமாகையால் — அஸமஞ்ஜஸம் (வேதாந்த வாக்யங்கள் கூறும் காரண கார்ய ஐக்யம்) பொருந்தமாட்டாது.

(சூத்ரத்தில் तद्वत् (அந்த உதாரணங்களைப்போல) சுருத பிரகாசிகையில் மூன்று உதாரணங்கள் காட்டப்படு

கின்றன. தங்கக் கட்டியில் பொன் குண்டலம் ஆவது; ஜகத் பிரும்மத்தில் லயமடைவதால் ஜகத்தின் தோஷங்கள் பிரும்மத்துக்கு யேற்படும்-3) தத்வத் என்பதால் உலகத்தின் தோஷங்களை அடையலாம் - உலகை உடையவனுக்கு (பிருஹ்மத்துக்கு) யேற்படலாம் என்பதாகும்.)

(அபீதி - லயத்தைச் சொல்வது - இது ஸ்ருஷ்டி ஸ்திதி களுக்கு உபலக்ஷணம். முன் ருத்ரப்படி பிருஹ்மமும் ஜகத் தும் ஒரே திரவியம் என்று கொண்டால், பிரளயத்திலே ஏகீபவதி - என்பதால் உலகமே பிருஹ்மமாகி விடுகிறது - மண் உதாரணத்தில், காரியமான பானையில் இருக்கும் மண்ணுயிருக்கும் தன்மை காரணத்தை வந்து அடையும், அதுபோல காரியமான சேதன அசேதனுத்மகமான உலகம் விகாரமடையும்போது - ஜடத்வம், கர்மவச்யத்வம் முதலான தன்மைகள் காரணமாகிற பிருஹ்மத்திற்கும் உண்டாகும். பிருஹ்மம் ஸத்யம் - விகாரமற்றது - என்பதற்கு விருத்த மாகும். ஆகவே முன்னுக்குப்பின் முரணுகப் பேசுகையால் வேதாந்த வசனங்கள் அர்த்தமில்லாமல் போய்விடும். இத ருல் ஏற்படுவது ஜகத்தும் பிருஹ்மமும் ஒரே திரவியமல்ல. பிருஹ்மம் உபாதான காரணமாகாது. சாங்கியபக்ஷமாகிற பிரதானமே உபாதான காரணமாகும்).

**ஸ்ரீபாஷ்யம்: — अपीताविति** - பிரளயத்திலே; ஸ்ருஷ்டி ஸ்தி திக்கு உபலக்ஷணம். இப்போது ஸ்ருஷ்டி பரவாக்யங்களும், லயபரவாக்யங்களும் ஓதப்படுகின்றன. சா. உ. 6-2-1ல் **सदेव सोम्येदमग्र आसीत्**-பிரளயத்தில் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஸத் ஒன்று தான் இருந்தது; ஐத். **1-1-1 आत्मा वा इदमेक एवाग्र आसीत्** ஆத்மா ஒன்றுதான் ஒன்றே ஒன்ருக முதன் முதலில் இருந்தது, இத்யாதி ஸ்ருஷ்டி பரவாக்யங்களில் ஒரே வஸ்துதான் இருந் தது. பிரளயம் ஸ்ருஷ்டிக்கு முன்பு இருக்கிற அவஸ்தை. லயமும் அதே ஒரு வஸ்துவில்தான் இருக்கக்கூடும். ஆகவே காரண (பிரளய) தசையிலும் ஸ்ருஷ்டியிலும் (காரிய தசை யிலும்) ஒரே வஸ்து இருக்கிறதாக உபதேசம் இருப்பதாலே, ஒரே திரவியம் இருப்பதாலே, (பிருஹ்மமே சொல்லப்படுவ

தாலே)காரியகாரணங்களின் திரவியஐக்யம் யேற்படுவதாலே பிருஹ்மம், காரியமாகிற ஜகத் எந்த எந்த அவஸ்தைகளை அடைகிறதோ-அதனுடன் சம்பந்தப்படுவதாலே, அந்த காரியங்களில் வந்தடையும் அபுருஷார்த்தங்கள் (ஜடத்வம் அசேதனத்திற்கு; கர்மவச்யத்வம் சேதனர்களுக்கு-இந்த தோஷங்கள்) பிருஹ்மத்திற்கும் யேற்படும், (எப்படி ஸுவர்ண குண்டலங்களின் தோஷங்கள் மூல தங்கக்கட்டியை வந்து சேருமோ அதுபோல). ஆகையால் வேதாந்த வாக்யங்கள் எல்லாம் அஸமஞ்ஜஸமாகும்.

பரமாத்மாவுக்கு மு. உ. 1-1-6 यः सर्वं सर्ववित् (ஸர்வக்ஞன்-எல்லாவற்றையும் எக்காலத்திலும் அறிபவனாக விருக்கிறான்); சா. உ. 8-1-1 अपहतपाप्मा विजरो विमृत्युः (பரமாத்மா பாபமில்லாதவர் - ஜரையில்லாதவர் இறவாமை உள்ளவர்); ஸ்வே. 6-8 न तस्यकार्यंकारणं च विद्यते न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते அவருக்கு காரியம் என்பதும் காரியங்களை ஸாதிக்கும் உபகரணங்களும் இல்லை. அவருக்கு சமமாகவோ மேலானவராகவோ ஒருவரும் காணப்படவில்லை. மு. உ. 3-1-1 - तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति - அவர்களில் ஒருவன் பிப்பலத்தை புசிக்கிறான். (ஜீவன் கர்மபலத்தை அனுபவிக்கிறான்); ஸ்வே. உ. 1-8 अनीशश्चात्मा बध्यते भोक्तृभावात् - ஈசனில்லாத ஜீவன் - போக்தாவாக (அனுபவிப்பவனாக) இருப்பதால் - (கர்ம பலன்களை அனுபவிப்பதால்) கர்ம வச்யனாகிறான் - (கட்டப்படுகிறான்); போக்ய பூதமான பிரகிருதியில் மோஹமடைந்து கஷ்டப்படுகிறான் என்பது - अनीशया शोचति मुह्यमानः - என்றும் ஓதப்படுவதால் - "ஏகீ பவதி" - ஒன்றாகவே ஆகிறது பிரளயத்திலும் - அதேபடி ஸ்ருஷ்டியிலும் - ஒரே திரவியத்திற்கு இத்தகைய தோஷங்கள் யேற்படுவதால் - வேதாந்த வசனங்கள் பரஸ்பர விரோதமாக விருகின்றன.

இதற்கு நாம் பதில் அளிக்கிறோம் - சித் அசித் வஸ்துக்களைச் சரீரமாகவுடைய பரபிருஹ்மமே காரிய காரண பாவத்தினாலே ஆகிறது; அதனால் அதற்கு சரீரமாக விருக்கும் சித் அசித் வஸ்துக்களுக்குள்ள தோஷங்கள் பிருஹ்மத்தை

அடைகிறதில்லை-(எப்படி சரீரத்தின் தோஷங்கள் ஆத்மாவை பாதிக்காதோ அதுபோல). பிருஹ்மத்திற்கு அவை சரீர மாக விருப்பதாலே, காரியாவஸ்தையிலோ - காரணா வஸ்தையிலோ இந்த தோஷங்கள் பிருஹ்மத்திற்கு யேற் படுவதில்லை - இப்படிச் சொல்வது சரியில்லை - ஏனெனில் இவை இரண்டிற்குமே ஜகத் - பிருஹ்மத்திற்கும் - சரீர சரீரி சம்பந்தம் (பாவம்) அஸம்பவாத் - யேற்படாது. சரீர சரீரி சம்பந்தம் யேற்படுவதாகவிருந்தால் சரீர சம்பந்தத்தால் யேற்படும் எல்லாத் தோஷங்களும் பிருஹ்மத்தினிடம் ஒட் டாது என்றும் சொல்லமுடியாது. மேலும், சித் அசித் வஸ் துக்கள் பிருஹ்மத்திற்கு சரீரமாகவே ஆக முடியாது. சரீரம் என்கிற பெயருடைய பௌதிக வஸ்து - கர்ம பலரூப சுக துக்க போக ஸாதனம் (அனுபவிப்பதற்கு ஒரு ஸாதன மாக அமைகிறது.) அது இந்திரியங்களுக்கு ஆஸ்ரயமாக விளங்குகிறது. பஞ்ச விருத்தி பிராண அதீனமாகவும், பௌதிகமான பிருதி வ்யாதி பூதச் சேர்க்கையைக் கொண்ட விசேஷ: - அசேதனம். பரமாத்மாவுக்கு அசேதனம் எவ் விதம் சரீரமாகும்? சரீரத்தின் பௌதிக அமைப்பு இம்மாதிரி யாக ஸ்ம்ருதிகளிலும், வேதங்களிலும் ஓதப்பட்டிருக்கிறது.

பரமாத்மாவோ - சுருதிகள் அவனைப் பற்றி இவ்விதம் ஓதுகின்றன. சா. உ. 8-1-5 - अपहतपाप्मा विजरः - பாபமில் லாதவர் - ஜரையில்லாதவர்; முண். 3-1-1-अनश्नन्नन्यो अभिचाक- शीति - மற்றொன்றுன பரமாத்மா கர்மபலன்களை புசிப்பவ ரல்லர்-அதனுல் அவர் பிரகாசிக்கிருர். ஸ்வே. 3-19-अपाणिपादो जवनोग्रहीता पश्यत्यचक्षुः स शृणोत्यकर्णः - அவருக்கு கைகள் பாதங் கள் இல்லை. ஆனுல் அவர் வேகமாக சஞ்சரிக்கிருர் - வஸ்துக்களை க்ரஹிக்கிருர் - காதுகளில்லாமல் அவர் கேட் கிருர். மு. உ. 2-1-2 - अप्राणो ह्यमनाः - பிராணன் இல்லாத படியும் - மனம் இல்லாதபடியும் அவர் இருக்கிருர்-இத்யாதி சுருதிகளாலே, கர்மங்களும் கர்ம பலன்களை அனுபவிப்பதும் அவருக்கு கிடையாது அவருக்கு இந்திரியங்களை நம்பி யிருக்கும் அனுபவங்களும் போகங்களும் இல்லை. முக்ய பிராணனை உடையவராகவும் அவர் இல்லை. (கர்மதத்பல

போக யோரபாவாத் - இந்திரியாதீன போகத்வாபாவாத் பிராணவத்வாபாவாத்). ஆதலால் சேதன அசேதன வஸ்துக்கள் அவருக்கு சரீரமாக முடியாது.

(இங்கு கௌதமரின் நியாய சூத்திரத்தின் பிரகாரம் (1-1-11) சரீரத்தின் இலக்கணம் சொல்லப்படுகிறது- (பௌதிக சேஷ்டிதங்களுக்கு ஆஸ்ரயமாகவிருப்பது, இந்திரியங்களைக் கொண்டது - சுக துக்க அனுபவ ஸாதனமாக விருப்பது). அசேதன வ்யஷ்டிரூபமாகவிருக்கும் புல், கட்டை இவைகளுக்கு ஆஸ்ரயம் அளிப்பது ஏற்படாது; அவைகளின் ஸமஷ்டி ரூபத்திலேயும் பூத சூக்ஷ்ம அவஸ்தையிலும் இந்திரியங்களுக்கு ஆஸ்ரயத்வம் அளிப்பதும் பரமாத்மாவுக்கு ஏற்படாது. பூத சூக்ஷ்மங்களான பிருதிவியாதி ஸங்காதத்வம் சேர்க்கை பெற்றிருப்பது கூட - பரமாத்மா விஷயத்தில் ஏற்பட முடியாது. சேதனவர்க்கங்களோ ஞானைக (ஞானத்தையே) ஆகாரமாக (ஸ்வரூபமாக) கொள்வதால் அவர்கள் பரமாத்மாவுக்குச் சரீரமாகுதல அஸம்பவம் (ஏற்படாது).*

**ஸ்ரீபாஷ்யம்:**—சித்தாந்தி கேள்விகேட்கிறான் - சரீரத்வம் என்பதால் போகங்களை அனுபவிக்கும் இடமாகவிருக்கிறது என்பதில்லை. போகங்களை அனுபவிக்கப்படுமிடமாக - வீடுகள், அரண்மனைகள் இருக்கின்றன; அவைகள் சரீரமாவதில்லை என்று பிரஸித்தம். எந்தவிடத்தில் யேற்படுகிற சரீரத்தில் சுகதுக்காதி அனுபவங்கள் யேற்படுகின்றதோ, அந்தவிடமே போகாயதனம் (சுகதுக்க அனுபவிக்குமிடமாகவிருக்கிறது) என்று சொல்லப்படுமாகில், பரகாய ப்ரவேச (கூடுவிட்டு கூடு பாய்தல் வேறு சரீரத்தை அடைதல்) யேற்படும்போது, புதிதாக அடைந்த சரீரம் சுகதுக்காதிகளை அனுபவிக்கிறது; அந்த ஆத்மாவின் பிறந்த போதிருந்த சரீரம் சுகதுக்கங்களை அனுபவிப்பதில்லை; பரகாய சரீரத்திறகே அனுபவஸித்தி உண்டாகிறது.

மேலும் ஈஸ்வரனின் விஷயத்தில் அவனுடைய அனுபவ விஷயங்களில், ஜீவனுக்கு தேவைப்படும் சரீரம்

மாதிரியில்லாமல், பரமாத்மாவின் ஸ்வரூபமே நிரதிசய ஆனந்தபோகமாகிறபடியாலே, அவனுக்கு ஜீவனைப்போல சித் அசித் வஸ்துக்களுக்கு யேற்படும் ஆயதனம் (இருப்பிடம் வாசஸ்தலம்)சரீரம் எனப்படுவது - அதை நம்பி அனுபவிப்பது என்பது கிடையாது; அவனுக்கு அவசியமில்லை. இந்த விதமான வாதத்தினுல், பூர்வபக்ஷியின் ஆட்சேபம் சரீரத்வம் என்பது சுகதுக்க ஆயதனம் (ஸாதனம்) மாத்திரம் தான் என்பது பரிஹரிக்கப்பட்டது. (அதாவது ஈஸ்வரனுக்கு சுகதுக்கானுபவத்திற்க்காக சரீரத்வம் யேற்படுவதில்லை - கர்ம வச்ய ஜீவனைப்போலவோ அசேதனத்தைப் போலவோ).

(இங்கு சொல்லப்படுவதைக் கவனிக்க வேண்டும். சரீரம் என்பதற்கு போகஸாதனம் என்று சொல்லப்படுமாஞல் அதற்கு பலஉபகரணங்கள் தேவைப்படும். உதாரணமாக இந்திரிய ஆஸ்ரயத்வம் கர்மபலன்களை புசிப்பதற்க்காக ஏற்படணும்; அதேபடி விஷயங்களும் அனுபவிக்கப்பட வேண்டியவை இருக்கவேண்டியது. விஷயங்களுக்கு அதீனமான சுகதுக்க போக ஸாதனத்வம் - சரீரம் என்று பூர்வ பக்ஷி சொல்லுகிருன். அவ்விதமாகில் கர்மபலன் ஸித்திக்க வேண்டும். இதற்கு பௌதிக சரீரம் அவசியம் ஏற்படணும். ஆனுல் இங்கு இம்மாதிரியான சரீரத்வ சம்பந்தம் பேசப்படவில்லை.)

(சேதன அசேதனவர்க்கங்கள் பரமாத்மாவிற்குச் சரீரம் என்பதால், அவைகளின் ஸத்தாஸ்திதி - இருப்பு - வஸ்துத்வம் பரமாத்மாவின் சரீரசம்பந்தத்தால் தான் யேற்படுகிறது என்று அர்த்தம். ஜீவனுடைய (அதேமாதிரி அசேதன) சரீரம் கர்மத்தால் யேற்பட்டது - போக ஆயதனத்வமாக யேற்பட்டது. ஆனுல் பரமாத்மாவின் விஷயத்தில் ஸர்வ வஸ்துக்களும் அவனுக்கு சரீரமாவது - பகவத் அனுப்ரவேசத்தினுலும் பகவத் இச்சையினுலும், யேற்படுவதாகும். இதுதான் கீழே பேசப்பட்டு-சரீரத்வம் என்பது-என்ன அது

விளக்கப்படுகிறது - அடுத்த சூத்ரத்தில். அதற்கு முன் பாக வழி தயாராக்கப்படுகிறது - என்பதாகும்).

ஆகவே நரம் சொல்வது யாதெனில் எந்த பரமாத்மா வின் ஸ்வ இக்சையினுல், வஸ்துக்களின் ஸ்வரூபம், ஸ்திதி, ஸ்வரூபம் பிரவிருத்தி (சேஷ்டிதங்கள்) யேற்படுகின்றதோ - அவை அந்த பரமாத்மாவுக்குச் சரீரமாகின்றன; அதாவது ஸர்வத்துக்கும் ஈஸ்வரனுடைய இச்சையினுல் ஸ்வரூபஸ்திதி பிரவிருத்தி என்கிற தன்மையினுல் அவனுக்குச் சரீரமா கிறதோ, (சரீரத்வவம் ஸம் பவதீதி) - அப்போது கூட அது சரியானதாகாது (முந்திச் சொன்னதைவிட) ஒப்புக் கொள் வதில் தயக்கமிவுக்கும் - ஏனெனில் சரீரதயா (சரீரத்தை ஒரு வஸ்து அடைவதால்) அந்த வஸ்துவின் (எதற்கு சரீரம் யேற்படுகிறதோ அந்த வஸ்துவின்) நிஜஸ்வரூபம் அந்த அந்த வஸ்துவின் சேதனனுடைய இச்சையை அனுஸரித்து அதையே நம்பியதாக இல்லை. உதாரணமாக, மரித்தவனின் உடம்பிற்கு - மரித்தவனின் ஆத்மாவின் இச்சைப்படி சேஷ்டிதம் இல்லை.

**விளக்கம்:—**

(அதாவது ஆத்மாவிருக்கும் வரை அதன் சரீரம் எனப் பேசப்படுகிறது. போன பின்பு - சரீரத்துடன் பிரவிருத் தியோ இல்லை-அழியவேண்டியது. அதேபடி ஜீவன் நினைக் கிருன் - இன்னும் சிலநாட்கள் இந்த சரீரத்துடன் உயிர் வாழவேண்டுமென்று, அவன் இச்சைப்படி - சரீரம் இருப்ப தில்லை. உயிர் எப்போது பிரிகிறதோ . சரீரம் அழிய வேண்டியதே - ஒன்றைவிட்டு ஒன்று தனியாக விருப்பது முடியாது)

வியாதியுள்ள சரீரம், அதன் ஆத்மாவின் இச்சைப்படி பிரவிருத்தி யேற்படுகிறதில்லை. மரித்த சரீரமும் ஜீவ னுடைய சுகதுக்க அனுபவங்களுக்கு ஆயதனமாக விருக் கிறது என்பதுமில்லை. பொம்மைகள் - விளையாட்டு உப கரணங்கள்-இவை அவைகளின் சொந்தக்காரனுகிற சேதன

அதீனத்தில் இருப்பவை அவைகளின், ஸ்வரூபஸ்திதி பிரவிருத்தி அதைவிட்டு வேறுன சேதன அதீனத்தில் இருப் பது-இந்த பொம்மைகள், விளையாட்டு உபகரணங்கள் அந்த சேதனனின் சரீரமாவதில்லை. சேதனன் நித்யம் அவ னுடைய நிஜஸ்வரூபம் ஈஸ்வரனுடைய இச்சையினுல் ஏற் பட்டதல்ல; ஆகவே சேதனன் ஈஸ்வரனுக்கு சரீரமாகுதல் ஏற்படாது. (இதுவும் பூர்வபக்ஷம்).

(இங்கு சொல்லப்படுவது - சரீரம் சேதனனுடைய அப்ரதிக் ஸித்த (எப்போதும் விட்டுப் பிரியாதபடியிருக்கும் தர்மமா - இல்லையா? மரித்த உடல், நோயுற்ற உடல் இத் யாதிகளின் பிரவிருத்தி ஜீவனை நம்பியதாலும் - அந்த ஜீவ னின் ஸ்வரூபம் பரமாத்மாவை நம்பியதல்ல - அநாதி. ஆகையால் அது சரீரமாகாது - பரமாத்மாவிற்கு. பூர்வ பக்ஷி மீண்டும் சொல்கிருன். தேவ மனுஷ்ய விருக்ஷ சரீரம் கர்ம பலத்தினுலும், இந்திரிய ஆஸ்ரயத்தாலும், அவயவ ஸ்வீகரணத்தாலும், யேற்படுகிறது. பரகாய பிரவேசத் திலும் கூட சூக்ஷ்ம சரீரம் ஆத்மாவுடன் செல்வதால், ஸ்வ சரீர சம்பந்தத்தினுல் அனுபவம் யேற்படுகிறது எனலாம். இம்மாதிரி சரீரம் இருப்பதால், ஈஸ்வரனுடைய அனுமதி- இஷ்டம் - அவசியமில்லை. சரீரம் ஸாமான்ய போக ஸாத னம் என்பதாகும்.)

**ஸ்ரீபாஷ்யம்**:—மேலும் சொல்லக் கூடாது - வேறு ஒரு வஸ்துவினுல் எது அடக்கப்படுகிறதோ - எது வேறு ஒரு வஸ்துவினுல் தாங்கப்படுகிறதோ - எது இன்னொரு வஸ்து வுக்கு அடங்கி, அதனுடைய இச்சைகளை புகழ்களை ஓங்கச் செய்கின்றதோ - அந்த அடங்கிய வஸ்து வேறென்ருன அடக்கும் பொருளுக்கு சரீரம் எனக் கொள்ளலாம் (இது ராமானுஜரின் கருத்து. சரீரம் என்பதற்கு இலக்கணம் சொல்கிருர்.)

**விளக்கம்**:—மூன்று விஷயங்கள் ஓதப்படுகின்றன. அவை - न च यत्यदेकनियाम्यम्, (வேறு ஒருவனுடைய கட்டளை யில் அடங்குவது); यदेकधार्यम् (வேறு ஒருவஸ்துவினுல் தாங்

கப்படுவது - ஆதார ஆதேய ஸ்வரூபம்); यस्यैव शेषभूतम् - எதற்கு (அன்னிய வஸ்துவுக்கு) அடங்கி, பிரவர்த்திப்பது. அவை - तत् तस्य (அது வேறொன்றான வஸ்துவுக்கு) சரீரமிதி வாச்யம் (எனச்சொல்லப்படும்). क्रियादिषु व्यभिचारात् இம்மாதிரி சரீரத்தின் இலக்கணம் ஒரு சிலப்பட்ட காரியங்களுக்கும் அதுபோல மற்றவைகளுக்கும் உபயோகப்படலாம் - பொது வாக விருக்கிறபடியால் - குறிப்பிட்டபடி லக்ஷணம் இல்லாத படியாலே.

(சரீரம் திரவியம் என்று சேர்த்துக் கொள்ள வேண்டியது. அதன் இலக்கணம் ஆதார ஆதேயம், நியாம்யம், சேஷித்வம். பிரவிருத்தி என்பது வியாபாரம் வ்யவஹார நடவடிக்கை. சரீரத்வம் குணங்களால் யேற்படுகிறது என்பதில்லை. குணங்களை ஒப்புக் கொள்ளும் பக்ஷத்தில், சேதன அசேதனங்களை வந்து அடையும் குணங்கள் ஹேய மானவை. அவை ஸாக்ஷாத் பரமாத்மாவே தான் என்று சொல்லப்படுமாகில், நிர்விகாரத்வ ஹேயப்ரத்யனீகத்வங் களுக்கு பங்கம் ஏற்படுகிறதால், பாஸ்கரனுடைய, அத் வைதியினுடைய பிரஸங்கம் யேற்படும்; அதனுல் நிர்விகாரத் வாதி சுருதிகளுக்கும் விரோதம் யேற்படும். ஆகவே அசரீர மிதி - அபாணிபாதாதி என்று சுருதி சொல்வதாலே, கர்ம இந்திரிய மாத்திரம் அவயவபரமில்லை - ஆனுல் ஹஸ்த பாதாதி சரீர அவயவ நிஷேதத்தினுலும் - நிரவயவம் - அபாணீதி).

**ஸ்ரீபாஷ்யம்:**—கடவல்லியில். **1-2-2-2** - अशरीरं शरीरेषु அவனுக்கு சரீரமில்லை சரீரங்களில்; ஸ்வே. **2-3-19**ல் अपाणिपादो जवनो ग्रहीता - அவனுக்கு கால்கள், கைகள் இல்லை - ஆனுல் அவன் வேகமாக சஞ்சரிக்கிறுன். வஸ்துக்களைப்பிடிக்கிறுன். இவைகளால் சரீரமில்லாமை ஈஸ்வரனுக்கு ஓதப்படுகிறது.

ஆகவே ஜகத் - பிருஹ்ம விஷயங்களில் சரீர சரீரி பாவம் அஸம்பவம் (யேற்படாது); அது ஸம்பவிக்குமானுல் சரீரத்தின் தோஷங்கள் பிருஹ்மத்திற்கு யேற்படும். இந்த

காரணத்தினுல் பிருஹ்மமே ஜகத் உபாதான காரணம் என்கிற பக்ஷத்தில், வேதாந்த வாக்யங்கள் முன்னுக்குப் பின் முரணுக ஓதுவதாலே அஸமஞ்ஜஸம் - பொருந்தாது - இதற்கு பதில் நாம் சொல்கிருேம். (சித்தாந்தம்)

ஸூத்ரம் न तु दृष्टान्तभावात् (2-1-9)

ந து திருஷ்டாந்தபாவாத் (2-1-9)

நீ சொல்கிறபடி முரண்பாடுகள் இல்லை - ந து; (பிருஹ்மத்தினிடம் உலகின் தோஷங்கள் ஒட்டாது); வேதாந்தங்கள் பொருந்தாப் பேச்சாக ஆகமாட்டா. திருஷ்டாந்தபாவாத் அவ்விதமென திருஷ்டாந்தங்கள் இருக்கிறபடியாலே

(இங்கே பிருஹ்ம ஸ்வருபத்திற்கும் - பரிணுமத்திற்கும் உள்ள சம்பந்தம் பேசப்படுகிறது. பிருஹ்மஸ்வருபம் அப்படியே மாருதபடியிருக்கிறது. மாறுதல் சரீரத்தின் பரிணுமம். காரண நிலையில் பிருஹ்மம் ஸூக்ஷ்ம சித் அசித் விசிஷ்ட பிருஹ்மம், கார்ய நிலையில் பிருஹ்மம் ஸ்தூல சித் அசித் விசிஷ்ட பிருஹ்மம். சேதனு சேதனங்களே பரிணுமம் அடைகிறபடியால் அவைகளுடன் கூடியதாக விசிஷ்ட பிருஹ்மம் இரண்டு தசைகளிலும் ஓதப்படுகிறது. சேதன அசேதன தோஷங்கள் பிருஹ்மத்தை பாதிக்காது - விகாரமற்றபடியால் இது திருஷ்டாந்தம்)

நீ சொல்கிறபடி – இவ்விதம் சொல்வது அஸமஞ்ஜஸம் இல்லை. ஒரே வஸ்துவுக்கு (பிருஹ்மத்திற்கு) அவஸ்தா விசேஷங்கள் இரண்டு பேசப்படுகின்றன. காரணதசை - காரியதசை இந்த இரண்டு அவஸ்தைகளிலும் சரீரமாகிற சித் அசித் வஸ்துக்களுக்கு, குணதோஷ வ்யவஸ்தைகள் திருஷ்டாந்தங்களாகக் காட்டப்படுகின்றன. இங்கு ஸூத்திரத்திலுள்ள "து" சப்தம் பரமாத்மாவுக்கு லவலேசமும் ஹேய சம்பந்தத்தால் யேற்படும் தோஷங்கள் அஸம்பாவனீயம் - ஏற்படக் கூடாதவை என்பதை வற்புறுத்துகிறது. அதாவது பகவான் அவைகளால் ஸ்பரிச்சிக்கப் படமாட்டான் அவன் எதிர்படன்,

என்ன சொல்லப்பட்டதென்றால் - சித் அசித் வஸ்துக்கள் பகவானுக்குச் சரீரமாவதால், பகவான் அவைகளுக்கு ஆத்மாவாகவிருப்பதால் சரீரத்தின் தோஷங்கள் (மாறுதல்கள்) சரீரத்திலிருக்கும் ஆத்மாவைச் சேராது என்கிற நியமப்படி - பரமாத்மாவை ஒட்டாது. அது எப்படியெனில், காரண தசையில் எல்லா வஸ்துக்களும் ஒடுங்கி போய்விடுகின்றன. காரியதசையில் (விகாஸமடைகின்றன) ஆத்மா அப்படியே மாருதபடி இருக்கிறது. மாறுதல் சித் அசித் வஸ்துக்களடங்கிய சரீரத்திற்கே; சரீரமே பரிணும மாறுதலால் ஸூக்ஷ்ம சித் அசித் விசிஷ்டபிருஹ்மம் ஸ்தூல சித் அசித் விசிஷ்டபிருஹ்மமாகிறது - ஸங்கோச விகாஸம் சரீரத்திற்கே. காரிய காரணபாவம் இரண்டு அவஸ்தைகளிலும் இருக்கிறபடியால் யாதொரு விரோதமும் இதில் இல்லை. சுருதிவசனமும் காக்கப்படுகிறது. ஏனெனில் ஸங்கோச விகாஸம் பரபிருஹ்மத்தின் சரிரபூதமாகவிருக்கும் சித் அசித் வஸ்துக்களையே அடைவது; சரீரத்தை வந்து அடையும் தோஷங்கள் ஆத்மாவை ஸ்பர்சிப்பதில்லை. அதே பிரகாரம் ஆத்மாவின் தர்மங்கள் (குணங்கள்) சரீரத்தை வந்து அடைகிறதில்லை. "சரீரம் சரீரமே - ஆத்மா ஆத்மாவேதான். எப்படி தேவமனுஷ்யாதிகள் தங்கள் தங்கள் சொந்த சரீரங்களில் அந்த அந்த ஜீவர்கள் (க்ஷேத்ரக்ஞர்கள்) கர்மபாக்யத்தினல் வந்தடைகிருர்களோ, அதே மாதிரி, அந்த அந்த சரீரங்களுக்கு மாறுதல்கள் காலத்தினல், பாலயுவா, வயோதிக அவஸ்தைகளின் பெயர்களுக்கு யேற்ப யேற்படுகின்றன. இந்த மாறுதல்கள் ஆத்மாவை தொடருவதில்லை. அதே பிரகாரம் ஆத்மாவின் குணங்களாகிற ஞான - சுக - ஆனந்தங்கள் சரீரங்களை வந்து அடைகிறதில்லை (சரீரம் அசேதனமான படியால்). ஆகையால் देवो जात: (தேவனுகப் பிறக்கிருன்) मनुष्यो जात: (மனிதனுகப் பிறக்கிருன் - அப்படியே - स एव - அவனே பாலன் - யுவா - வயோதிகன் - என்று சரீர மாறுதலால் காட்டப்படுகிருன் - இங்கே சரீர சப்தத்திற்கு முக்யத்வம்" ஆத்மா நிஷ்கர்ஷமாகிறது. பூத ஸூக்ஷ்மங்களின் சேர்க்கை

யடைந்த சரீரமே - க்ஷேத்ரக்ஞனுகிற தேவ மனுஷ்யாதி பாவம் இதி-சொல்லப்படுகிறது. சூத்ரம் சரீர. 3-1-1 - तदन्तर प्रतिपत्तौ - இந்த சரீரத்திலிருந்து ஜீவன் பிரிந்து வேறு ஒரு சரீரத்திற்குப் போகும் போது - பூத சூக்ஷ்மங்களுடன் - சூக்ஷ்ம சரீரத்துடன் செல்கிருன் - அந்த பூத சூக்ஷ்மங்களே-தேவ மனுஷ்யத்வாதி சரீரங்களை அடைகிறதாகச் சொல்லப் படுகிறது.

(ஸங்கோச விகாஸம் - சூக்ஷ்ம - ஸ்தூல அவஸ்தை களைக் குறிக்கும். உபாதான காரணம் பிருஹ்மம் - உபா தேயம் (காரியம்) ஜகத் - இரண்டிலும் இருக்கிறது. திருஷ் டாந்தம் சூக்ஷ்ம சித் அசித் விசிஷ்ட பிருஹ்மம் - ஸ்தூல சித் அசித் விசிஷ்ட பிருஹ்மம் எனக் காட்டப்படுகிறது. சரீரத்வாரா பரிணுமம் - காரணு வஸ்தாஸ்ரயத்வம் - பூத சூக்ஷ்மங்கள் என்று காட்டப்படுகிறது. ஸ்தூல சரீரமே ஜன்யவ்யவஹாரம் ஆவதால் - ஜன்ம ரூப பிரதம ஸ்தூல சரீர பிராப்தியே பேசப்படுகிறது - விசிஷ்ட பிருஹ்மம் என ஓதப்படுவதால் உபதான உபாதேய பாவம் - ஸர்வத்ர - என்றும் காட்டப்படுகிறது.)

यत् पूनरूक्तम् - சித் அசித் வஸ்துக்களை சரீரமாகவும், பிருஹ்மம் அந்த சரீரத்திற்கு ஆத்மாவாகவும் விருப்பது - இரண்டு தசைகளிலும் - அதாவது காரண தசையாகிற பிர ளயத்திலும் (ஸ்ருஸ்டிக்கு முன்பு இருக்கிற தசையிலும்) காரியதசையிலும் (ஸ்ருஷ்டி ஆரம்பித்தவுடனே) காணப்படு வதால் - பிருஹ்மம் ஜகத் விசிஷ்ட பிருஹ்மமாகவே விருக் கிறது - அந்த ஜகத் சரீரமாக அதற்கு ஆகிறபடியாலே (இங்கே ஜகத் எனப்படுவது சித் அசித் மிஸ்ரத்தைக் கொண் டதாக அர்த்தம்) - என்கிற வாதம் சரியில்லை - என்று முன் ணமே சொல்லப்பட்டது - என்று மீண்டும் வாதிப்பாயாகில், அதற்கு நாம் உத்தரமாகச் சொல்வது - உன் பாபங்களே காரணம் என்போம் என்கிற அர்த்தத்தில் - உன்னுடைய விபரீதமதியினுல் நன்கு அறியப்படாதபடி—(எதை) நியாயங் களை சரிவர புரிந்து கொள்ளாமல் - அந்த நியாயங்களாலே

அனுக்ரஹிக்கப்பட்ட ஞானத்தினுல் · வேதாந்த வாக்யக் கூட்டங்களை உன் விபரீத புத்திக்கு யேற்ப - பரிகல்பித குதர்க்க மதத்தினுல் யேற்பட்டதாகும் (குதர்க்க விஜிரும் பிதம்) என்போம்.

**விளக்கம்:—**

இங்கு சொல்லப்பட்டது வேதங்களின் அர்த்தம் வ்யத் புத்தி பண்ணியும் - அது ஸத்யமாகவும் பிரமாணிகமாகவும் விருந்தால் - தர்க்க முதலிய வ்யவஹாரங்களுக்கு சம்மதமாக விருந்தாலும் - அங்கே எல்லாம் ஒப்புக் கொள்ளத்தக்கவை யாகும். இப்படி வேதாந்தவாக்யங்களில் தேவமனுஷ்ய திர்யக் ஸ்தாவரம் எல்லாவற்றிற்கும் அவைகளின் ஸ்வபாவங்களை தேடப்புக, வேதவாக்யங்களின் உதவியிருலே, ஸித்தமான சரீரபாவம் ஸர்வ வஸ்துக்களுக்கும் ஏற்படுகிறது.)

இந்த சரீரபாவத்திற்கு பிரும்ஹத்தை ஆத்மாவாகக் கொண்டது என்றும், சரீரபாவம் யேற்படுவதற்கு கர்மா தான் காரணம் என்றும் ஸ்ருதிஸ்மிருதிகள் அப்யஸிப்பதால் விசிஷ்ட பிருஹ்மம்தான் எல்லாக் காலங்களிலும் எந்த அவஸ்தையிலும் இருப்பதாகும். இந்த பரமாத்மாவின் சரீரம் அப்ராகிருதமானது. இதற்கு இந்திரிய ஆஸ்ரயத்வமில்லே. சுகதுக்க ஹேதுகாரணமாக - போகஸாதனபூதமாக விருப் பதுமில்லே. ஸ்வய இச்சையால் யேற்பட்ட திவ்ய மங்கள விக்ரஹம். அதற்கு சித் அசித் வஸ்துக்கள் விபூதிகளாக - ஐஸ்வர்ய சிந்நங்களாக விருக்கின்றன - ஜீவனைப்போல கர்ம நிபந்தன பௌதிக சரீரமில்லே. (அதை நாம் மீண்டும் விளக் குவோம் என்கிறுர் பகவத்ராமானுஜர்.)

**ஸ்ரீபாஷ்யம்:—**

எல்லா வேதாந்தங்களும் ஸ்தூல சூக்ஷ்ம அவஸ்தை களில் சேதன அசேதனங்களும் - எல்லாப்பொருள்களும் பரமாத்மாவிற்கு ஒவ்வொன்றும் பிரதி சரீரமாகவிருக்கின் றன என்று கோஷிக்கின்றன. (அதாவது முன்காட்டிய சரீரத்தின் மூன்று லக்ஷணங்களால் ஆதார ஆதேயத்வம்

நியாம் யத்வம், சேஷித்வம்) - சரீர ஆத்மபாவத்திஞல் விசிஷ்ட பிருஹ்மமே காட்டப்படுகிறது.

வாஜஸேநயர்களும் காண்வசாகை ஓதுபவர்களும் பிரு. உ. 3-7- பிருஹதாரண்யக உபநிஷத்திலே - மைத்ரேயீ அந்தர்யாமி பிராம் மணத்திலே, य: पृथिव्यां तिष्टन्....यस्यपृथिवी शरीरं என்று ஆரம்பித்து...பிருத்வியாதி ஸமஸ்த அசித்வ ஸ்துக்களும்; காண்வசாகையில் यो विज्ञाने तिष्ठन्...यस्य विज्ञानं शरीरं என்றும் மாத்யந்திஞர்களின் சாகையில் य: आत्मनि तिष्टन्......यस्यात्मा शरीरम् என்று சேதனவர்க்கங்களையும் பிருதக் பிருதக் (தனிதனியாக - உடனுக்குடனே) சொல்லப் பட்டு - காட்டுவதால், तस्यतस्य - அந்த அசேதன அந்த சேதன வர்க்கங்கள் பரமாத்மாவுக்கு சரீரமாகின்றன என்று காட்டிக் கொடுக்கின்றன.

**விளக்கம்:—**

முதலில் அசேதன வஸ்துக்களைத் தனியாக ஒவ்வொன் ருக - பிருத்வியிலிருந்து ஆரம்பித்து (எப்படிச் சொல்கிற தென்ருல் எவன் பூமியில் நிற்கிருனே, பூமியில் உள்ளிருக் கிருனே எவனைபூமி அறியாதோ எவனுக்குப்பூமி சரீரமோ எவன் பூமியில் உள்நுழைந்து நியமிக்கிருனே - அவனே உனக்கு ஆத்மாவாகவும், அந்தர்யாமியாகவும், மரணமற்ற வனுக (அம்ருதனுக) விருப்பவன் - ஐந்து லக்ஷணங்கள் சொல்லி, அதுமாதிரி பிருத்வி முதலிய அசேதனதத்வத்தி லிருந்து - தொடங்கி - ஜலம் தீ, அந்தரிக்ஷம் வாயு த்யு லோகம் ஆதித்யன் - திக்குக்கள், சந்திரதாரகைகள் ஆகா சம், தமஸ், தேஜஸ் ஆகியவற்றிலும் இதைப்போல அந்தர் யாமியாகப் படித்து - ஸர்வ பூதங்களிலும் அந்தர்யாமி யைப் படித்து - இத்யதி பூதமதாத் யாத்மம் (என்று தொடங்கி பிராணன், வாக்கு கண், காது மனம் தோல் விக் ஞானம், ரேதஸ் எனப்படுபவைகளில் அந்தர்யாமியை ஓதி - அதிலோகம் அதிவேதம் அதியக்ஞம் என்கிற பரியாயங் களால் - ஸர்வ லோகங்களிலும் - ஸர்வ வேதங்களிலும் - ஸர்வ யக்ஞங்களிலும் அந்தர்யாமியைப் படித்து; காண்

வசாகையில் யோவிக்ஞானே திஷ்டந் என்று தொடங்கி படிக்கப்பட்ட ஸ்தானத்தில் மாத்யந்தின பாடத்தில் ய ஆத்மநிதிஷ்டந் என்று தொடங்கிப்படிக்கப்பட்டது.

இந்த விஷயம் அந்தர்யாமி அதிகரணத்தில் விரிவாக விளக்கப்பட்டது - (இங்கு காண்வ சாகையில் யோவிக்ஞா நேதிஷ்டந் - என்று தொடங்கிப் படிக்கப்பட்ட ஸ்தானத்தில் மாத்யந்திந சாகையில் ய: ஆத்மநி திஷ்டந் - ய மாத்மா ந வேத, யஸ்யாத்மா சரீரம் ய ஆத்மா நந்தரோ யமயிதி ஸத ஆத்மா அந்தர்யாமிஅமிருத: - என்று படிப்பதால் ஜீவனைச் சொல்லி, அவன் அந்தர்யாமியை விட வேறானவன்-என்றும் அவனிலும் வேறுபட்ட பரமாத்மாவை அவனுக்கும் ஆத்மா வாகவும் அந்தர்யாமி யாக ஓதி-இதே கருத்து ஸுபோலோப நிஷத்திலும் பறை சாற்றப்படுகிறது - ஆகவே ஜீவனுக்கு அந்தர்யாமி பரமாத்மா, ஜீவன் சரீரமாகவும் பரமாத்மா ஆத்மாவாகிறான் என்றும், ஜீவன் அவனுக்கு (முன் காட்டிய அசேதனப் பொருள்களைப் போல) சரீரமாகிறான் என்றும் காட்டப்பட்டது) காண்வபாடத்தில் விக்ஞானத்தைக் குண மாக உடையவன் ஜீவன் - அவனுக்கு அந்தர்யாமி என அர்த்தம்; ஆத்மநி என்பதில் ஜீவனைக் குறிக்கும்-மாத்யந்தின சாகையில்

சுபோலோப நிஷத்திலும் - य: पृथिवीमन्तरे सञ्चरन् यस्य पृथिवीशरीरं - என்று ஆரம்பித்து (எவன் - பரமாத்மா - பிருத் விக்குள்ளே சஞ்சரித்துக் கொண்டு - எவனுக்கு ப்ருதிவி சரீரமோ - இத்ய பஞ்சலக்ஷணங்களை ஓதி - தொடர்ந்து அதே பிரகாரம் சித் அசித் வஸ்துக்கள் ஸர்வாவஸ்தைகளி லும் பரமாத்மாவின் சரீரமாவதால் - அதைக் காட்டி - பிறகு படிக்கிறது - एषसर्वभूतान्तरात्माऽपहतपाप्मा दिव्यो देव एको नारायण:- பாபங்கள் அற்றவனுய் - பரம பதத்தில் விளங்கும் பரமாத் மாவான ஸ்ரீமந் நாராயணனே-இப்படி ஸர்வ பூதாந்தர்யாமி யாக ஆத்மாவாக விளங்குபவன் - என்றும் அந்தர்யாமியும் ஆத்மாவும் அவனே என்றும் - ஸர்வசாகாப்ரத்ய நியாயத் தாலே ஸித்தித்தது.

ஸ்மிருதிகளும் இவ்விதமே கூறுகின்றன - ராமா. யுத். 120-26 - जगत् सर्वं शरीरं ते - (பிருஹஸ்பதி ஸ்துதியில் இந்த உலகம் அனைத்தும் உன் சரீரம்); வி. பு. 212-37 यदम्बु वैष्णवः कायः (இந்த ஜலங்கள் விஷ்ணுவின் சரீரமாகவும்; வி பு 1-12-37 तत सर्वं वै हरेस्तनुः - அவை எல்லாம் பகவான் ஹரியின் சரீரம்; तानि सर्वाणितद्वपुः - அவை எல்லாம் அவருடைய சரீரம்; (வி. பு. 1-22-84) மனுஸ்ம். 1-9 - सोऽभिध्याय शरीरात् स्वात् - பரமாத்மா ஆலோசித்த பிறகும் - அவர் சங்கல்பித்த பிறகும்- அவர் தன சரீரத்திலிருந்து பலவகைப்பட்ட பிராணிகளை ஸ்ருஷ்டிக்க ஆசைப்பட்டார் - இங்கே பூத சூக்ஷ்மங்களாகிற சரீரத்தைஸ்வ (தன்னுடைய) சரீராத்-(சரீரத்திலிருந்து)-என அர்த்தம் - ஸமஷ்டிரூபாதி ஸ்ருஷ்டி என அர்த்தம்.

லோக வழக்கத்திலே - சரீரம் என்பதற்கு கடாதி (பானையைப்போல) சப்தங்களைப்போல ஒரு ஆகாரம் (வடிவம்) திரவியம். அதற்கு அனுஸரணையாக விருத்தி - எல்லாம் மனத்திறல் கற்பிக்கப்பட வேண்டியது. எங்கெனமெனில்- க்ரிமி (புழு/பூச்சி) பதங்கங்கள் (மின்மினி பூச்சி பறவைகள்) ஸர்ப்ப - நர - பசு முதலியவைகளுக்கு அத்யந்த விலக்ஷணமாக (அந்த அந்த ஜாதிக்குரிய வெவ்வேறு வேறுபட்ட தர்மங்கள்) ஆகாரம் (ரூபம்) திரவியங்களின் முக்ய தர்மங்கள் (அசாதாரணலிங்கங்கள் அடையாளங்கள்) அவைகளைக் குறித்துக் காட்டும்போது அமுக்யமாகவும் காணப்படுகின்றன.

இதனுலே சரீரசப்தம் முக்யார்த்தத்தைக் கொள்ளாமல் (கடம் - பானை இத்யாதிகளைப் போல - மற்ற ஜாதியில் சேர்ந்த வஸ்துக்களாகிற பசு - மனிதன் இத்யாதிகளில் போல முக்யார்த்தத்தைக் கொள்ளாமல், கௌணமாகவும் உபயோகப்படுகின்றது) ஏனெனின் சரீரத்திற்கு பிரவிருத்தி வ்யவஸ்தானம் (யேற்படுவது) ஆத்மாவின் ஸர்வ பிரயோகத்தின் உபயோகத்திற்காகவே காரியமாக பரிணமிக்க உதவுகிறது. நீ (பூர்வபக்ஷியாகிற சாங்கியனைக் குறித்து) சொல்கிறுயே சரீரம் என்பது कर्मफलभोगहेतुः கரம்பலத்தின் போகத்தை

அனுபவிப்பதற்கு ஸாதனமாக சரீரம் அமைகிறது என் கிறுயே அது எங்கும் - பழக்கத்திலும் - எல்லா உதாரணங் களிலும் காணப்படவில்லை. (சரீரம் அசேதனம் அதை நியமிப்பதற்கு சேதனத்வம் வேண்டும்) அந்தப் பிரகாரம் (உன் இலக்கணப்படி) சரீரம் என்கிற பதம் பூமி - ஆகாசம் இத்யாதி பல வஸ்துக்களுக்கு பிரயோகப்படமாட்டாது - **न सर्व-प्रयोगानुगुणम्** ; மேலும் நீ சொல்கிறபடி சரீர இலக்கணம் ஈஸ்வரனுக்கு சுருதிகளாலே ஓதப்பட்ட சரீரங்களுக்கு - அதாவது ஈஸ்வரனுல் தன் இச்சைப்படி எடுக்கும் திவ்ய மங்கள விக்ரஹங்கள் (அவதாரங்கள்); அதேபடி முக்தர் களையும் தன் சரீரமாகக் கொள்ளுதல் (சா. உ. 7-26-2) **स एकधा भवति** - முக்தன் பகவானுடன் ஸாம்யம் பெறுகிறுன் (ஜகத் வியாபார வர்ஜம்) இத்யாதி வாக்யங்களில் சொல்லப் பட்ட முக்தனுக்கு உன் சரீர இலக்கணம் சரி வராது. இங்கே சரீரம் என்பது பரமாத்மாவின் அபிராக்கிருதமான திவ்யமங்கள விக்ரஹத்தைச் சொல்வதாகும். இங்கே கர்ம பல போக ஸாதனமாக - சரீரம் அமையாது. ஸ்ருதி ஸ்மிருதிகளில் காட்டிய விசேஷ்ய அனுபவம் முக்தனுக்கு யேற்படுகிறது - பரமாத்மானுபவம். சுக துக்கங்களே இல்லாத ஆனந்தமயத்வம். ஆகவே கர்ம பல போக நிமித்தம் இல்லாதபடியிருக்கிறது - முக்தனுக்கு, அதே பிரகாரம் பரம புருஷனுடைய இச்சைப்படி அவதார விசே ஷங்கள் - அப்ராகிருத சரீரமும் - சுத்த ஸத்வமும் கொண்ட தாலே - பிருத்வியாதி பூத ஸங்காத ஜீவனின் சரீரத்தைப் போல - இல்லை என்பதாகும்.

பாரதம் சா. **206-60**-ல் **न भूतसङ्घसंस्थानो देहोऽस्य परमात्मनः** பரமாத்மாவின் திவ்யமங்கள விக்ரஹம் (சரீரம்) பூத ஸங்காத சேர்க்கையினுல் ஏற்பட்டதல்ல-அதனுலே பரமாத் மாவின் இச்சையால் யேற்படும் சரீரம் அப்ராகிருதமானது. அதற்கு பௌதிக மாறுதல்கள் - யுவா - களைப்பு - வாட்டம் இத்யாதி பசிதாகம் குணங்கள் இல்லை.

ஆகையால் நீ சொல்கிறபடி - சரீரம் என்றும் பூத ஸங்காத (சேர்க்கைப் பெற்ற) ரூபத்வம் என்று சரீரத்தின்

லக்ஷணம் சொல்வது பொருத்தமாகாது - குறுகியதாகும். பஞ்சவிருத்தி பிராண அதீனமாகக் கொண்ட சரீரதாரணத் வம் (உயிருடன் இருப்பது) ஸ்தாவர சரீரங்களிலும் காணப் படுவதில்லை. ஏனெனில் ஸ்தாவரங்களிலும் பிராணன் இருப்பது (அதன் ஸத்பாவம் இருப்பினும்) - (செடி மரம் ஆகாரம் உண்பது பிராணனின் சேஷ்டிதமானாலும்) - அங்கே ஐந்துவித அவஸ்தைகளை பிராணன் அடைவது - அதனால் சரீரத்தின் தாரகத்வத்தினால் உயிர்வாழ்வது என் பதும் இல்லை. அஹல்யை சாபத்தினால் கல்லைப்போல விருந்தாள் - இங்கே கர்மநிமித்த சிலா காஷ்டாதி சரீரத் திலே - இந்திரியாஸ்ரயத்வத்தினாலே (கரணங்கள்) மூலம் யேற்படும் சுகதுக்க அனுபவங்களும் இல்லை என்பதாகும். (அனுபவங்கள் இல்லாதபடி கட்டை-கல்லைப்போல ஜடமாக விருந்தாள் அஹஸ்யை - ஆகவே போக ஸாதனமான சரீரம் அமையவில்லை சரீரம் என்பதாகும்.)

(இங்கே அஹல்யை விஷயமாக கல்லைப் போல ஆனாள் என்றால் ஜடத்வம் சொல்லப்படுகிறது. பிராயசித்தமாக அனுபவித்தாள் துக்கத்தை என்றால் சுக ஸாதனமாக சரீரம் அமையவில்லை என்பதாகும்.)

ஆகவே எந்த சேதனனுக்கு எந்த திரவியம் ஸர்வாத் மநா தன் விஷயத்திலே நியந்தும் (கட்டளையிடுவதற்கும்) தாரயிதும் (தாங்கக் கூடியதாகவும்) இருக்கிறதோ, அத னாலே அந்த திரவியம் அந்த சேதனனுக்கு அடங்கி ஆளும் படி உபகரணமாக ஆகிறதோ, அதற்கு சேஷத்வமே ஸ்வரூப மாக விருக்கிறதோ, அந்த திரவியம் அந்த சேதனனுக்கு சரீரமாக — லக்ஷணத்தை உடைத்ததாக விருக்கிறது என லாம். இதுதான் விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் சரீரலக்ஷ ணம் (ஸர்வாத்மநா - ஸர்வபிரகாரம் சரீரசப்தம் அதனுடன் சம்பந்தபட்ட வஸ்துவின் அர்த்த போதகத்தை - புத்ரன் என்றால் பிதா எப்படி அறியப்படுகிறார் அதுபோல, சரீரம் என்றால் - தேவ மனுஷ்ய ஜாதி வித்யாஸங்களையும் காட்டும். அப்ருதிக் ஸித்ததர்மமாக - ஆத்மாவுடன்

சம்பந்தப்பட்டதாகவும் இருக்கும் - ஜீவனுக்குச் சரீரம் - என்றால் ஜீவனின் கட்டளையிடுவதை சகிக்கும் யத்திரவியம் என்பதற்கு எந்த அவஸ்தையில் திரவியமிருக்கிறதோ என அர்த்தம். ஸ்வார்த்தே — என்பதை தன்விஷயத்தில் தன் சரீரத்தில் - தனக்குச் செய்யவேண்டிய காரியத்தில். வைஷ்ணவ சித்தாந்தத்தில் ஒரே திரவியத்திலே பலவித பரிணாமங்கள் யேற்படுகின்றன - தேகம் பரிணாமத்தை அடைவதால் - முந்தின அவஸ்தை (காரண அவஸ்தை) பிந்தின பரிணாம (காரிய) அவஸ்தை - இவைகளில் ஜீவனுடைய நியாம்யத்வம் இல்லாதபடியாலே, எந்த அவஸ்தையிலும் என்று பொருள் கூறப்பட்டது.

(அதாவது ராமானுஜாரின் அபிப்ராயப்படி-ஜகத்பிருஹ்ம ஐக்யம் - (சம்பந்தம்) சரீர ஆத்ம சம்பந்தமாகும். ஜகத் சித் அசித் மிஸ்ரம். இங்கு சொல்லப்பட்ட சரீர - ஆத்ம பாவம்- சரீர லக்ஷண முரைத்தபடி - நன்கு ஆராயப்பட்டதாகும். தேகம் ஆத்மா இரண்டும் ஒன்றை விட்டு இன்னொன்று தனியாக பிரிந்திருக்க முடியாத அப்ரதிக் ஸம்பந்தம் கொண்டது. புத்ரன் பிதா என்பதைப் போல. சேதன பதம் ஜீவனைக் குறிக்கும். சைதன்யம் தர்ம பூத ஞானத்திலும் வேறானது. சைதன்யம் அதன் ஸ்வரூபம்; தர்மபூத ஞானமும் ஸங்கோசவிகாஸத்தை அதன் கர்மாப்படி அடையும். முக்த தசையில் முழுவதும் பிரகாசிக்கும்.)

**ஸ்ரீபாஷ்யம்**:—வியாதியுள்ள சரீரங்களில் நியமனசக்திக்குத் தடை யேற்படுவதால் நியமனத்வம் காணப்படுவதில்லை. அதே போல அக்னி பிரகாசிக்கும் போது - உஷ்ணத்வம் பிரதிபந்தக தோஷத்தால் காணப்படுவதில்லையோ - அது போல. மிருத சரீரமும் சேதனன் தேகத்தை விட்டுப் பிரியும் போது, அழியும் தன்மையை அடைந்து - சிறிது நேரத்தில் உடைந்து போகிறது. இங்கே முன்பு ஒன்றாகச் சேர்க்கை பெற்ற பஞ்ச பௌதிக சரீரத்தில் ஏக தேசத்வமாக - ஒரு அம்சமாகவிருப்பது பற்றி - சரீரத்தின் வ்யவஹாரம் யேற்படுகிறது

(இதுவரை சொல்லப்பட்டதின் ஸாரம்-முதல் லக்ஷணம் ஜீவசங்கல்பத்தால் சரீரம் செயல்படுகிறது. அதனால் நியமன சக்திக்கு அடங்கியிருப்பது. எந்த சேதனனுக்கு எந்த திரவியம் ஸர்வ பிரகாரம் தரிப்பதற்கு சக்தி யேற்படு கிறதோ - அவனால் அது தாங்கப்படுகிறது என்பது இரண்டாவது லக்ஷணம். தர்ம பூத ஞானத்தினால் ஜீவன் ஸர்வதா ஆதாரமாக விருப்பதால் ஆதேயம் பேசப்படுகிறது. மூன்றுவதாக - சேஷத்வம். ஜீவன் சேஷி - சரீரம் சேஷம் (சேஷைதக ஸ்வரூபம்) மூன்றுவது லக்ஷணம். ஆகவே நியந்தும், தாரயிதும் சேஷத்வம் - மூன்றும் சேர்ந்து சரீர லக்ஷணங்களாக ஓதப்படுகின்றன. சேஷைதக ஸ்வரூபம் - என்பதற்கு இன்னொன்றின் அதீனத்தில் இல்லை - अशेषत्वानर्हमित्यर्थः:—) அந்த ஜீவனுக்கே அடங்கியுள்ளது.

ஆகையால் ஸர்வம் பரம புருஷனால் தன் காரியத்திற்க்காக - தன் விஷயத்திலே - தன் சரீரத்தினாலே - நியாம்யம் (கட்டளையிடுதல்) தார்யம் (ஆதாரமாக விருத்தல்—தரித்தலால் யேற்படுவது) - தச்சேஷைதக ஸ்வரூபமிதி - அதற்கு ஆக்ஞையிடும்படி உரித்ததாக விருப்பது - பராதீனம் இல்லை) - இம்மாதிரி மூன்று லக்ஷணங்களால் எல்லாச் சேதன அசேதன வர்க்கங்கள் பரமாத்மாவுக்குச் சரீரமாக விருக்கின்றன. கடவ. 2-22 - अशरीरं शरीरेषु - பரமாத்மா தேகங்கள் உள்ளவைகளில் தேகமில்லாமல் இருக்கிறார் - என்பதால் அவருக்கு கர்ம நிமித்த சரீரப்ரதிஷேத பரம் என்று அர்த்தம் - ஏனென்றால் - சுருதிகளிலே மேலே காட்டியபடி - பரமாத்மா தான் ஆத்மாவாகவும் எல்லாப் பதார்த்தங்களையும் தன் சரீரமாகக் கொண்டிருக்கிறார்.

இனி சொல்லப்போகும் அதிகரணங்களில் - இந்த விஷயமே விரிவாகச் சொல்லப்படும். अपीतौ तद्वत्प्रसङ्गाद समञ्जसम् - (பி. சூத். 2-1-8) பிரளயத்தில் உலகைப்போலவே பரமாத்மாவுக்கும் விகாரமடைதல் முதலிய தோஷங்கள் ஏற்படுமாகையால் - அஸமஞ்ஜஸம் - வேத வசனங்கள் பொருந்தாது - என்கிற சூத்ரத்தினாலும் பிரு. சூ 2-1-21

इतरव्यपदेशात् பிருஹ்மத்தை ஜீவனுகக் கூறுவதால் பிருஹ்மம் தனக்குத்தானே நல்லதை செய்து கொள்ளவில்லை - இந்த ஜகத் ஸ்ருஷ்டியினுல் - தீயதையே செய்து கொள்கிறது என்கிற தோஷங்கள் யேற்படும் - ஆக இந்த இரண்டு சூத்ரங்களின் வசனங்களால் - இந்த அதிகரண ஸித்தமான விஷயமே நினைவுப் படுத்தப்படுகிறது.

**விளக்கம்:—**

(அதாவது சரீர தோஷங்கள் ஆத்மாவாகிற பிருஹ்மத்தை ஒட்டாது. லய கிரமத்திலே ஓதப்படும் விஷயம் (பிருஹ்மத்திலே எல்லாம் ஒடுங்குகின்றன - அதனுலே சொல்லப்படுவது பிருஹ்மமும் ஜகத்தும்-திரவியம் ஒன்றுகுமானுல் - காரியமான உலகத்தின் தோஷங்கள் பிருஹ்மத்தை அடையும் (எப்படி காரியமான கடத்திலிருக்கும் மண்ணுயிருக்கும் தன்மை காரணத்தில் (மண்கட்டியில்) இருக்கும் - அதேபடி சேதன அசேதன விகாரங்கள் பிருஹ்மத்தினிடம் தோன்றும். வேதாந்தங்கள் விகாரித்வம் பிருஹ்மத்திற்கு இல்லை என்று சொல்கின்றபடியால் - இரண்டும் ஒரே திரவியமல்ல என்று கொள்ளவேண்டும் - இல்லாதபோனுல் உபாதானத்வம் யேற்படாது - பிருகிருதிக்கே ஏற்படும். இரண்டாவது சூத்ரத்தால் உலகம் துன்பமயமானது - எல்லாம் அறிந்த பிருஹ்மம் இந்த உலகத்தை ஸ்ருஷ்டிப்பதால் யாது லாபம்? தனக்குத் தீமையைத் தேடிக்கொண்டதுதான். இந்த இரண்டு சூத்ரங்களும் பரிகரிக்கப்பட்டு - பிருஹ்மம் நிமித்த காரணமாத்திரமல்ல - உபாதான காரணமும் கூட என்று சொல்லப்படுகிறது; சரீரதோஷங்கள் ஆத்மாவை ஒட்டாது. ஸ்வரூப ஐக்யம் இல்லாமல் சரீர ஆத்மபாவமே பேசப்படுகிறது. ஸ்ருஷ்டிக்கும் பரமாத்மாவின் ஸ்வரூபம் வேறு, ஸ்ருஷ்டிக்கப்படும் ஜீவனுக்கும் ஸ்வரூபம் வேறு என்று காட்டி - ஸ்வரூப பேதம் யேற்படுகிறது. ஆகவே பூர்வபக்ஷி சொல்வது - தீமையே செய்து கொள்கிறது ஸ்ருஷ்டியினுல் என்று-அது தவருகும். ஆகவே பேதம் ஸித்தம் - சரீர சரீரிபாவத்தால் ஐக்யம் பேசப்படுகிறதே ஒழிய - ஸ்வரூப ஐக்யமில்லை என்ப

தாகும். காரிய காரண வைலக்ஷண்யம் யேற்படலாம் சரீர ஆத்மபாவத்தினுலே - சித் அசித் ஈஸ்வரன் மூன்று தத்வங் களும் பேத ஏவ என்றும் ஸ்தாபிக்கப்படுகிறது. இதனுல் இந்த அதிகரணவிஷயமே சித்தாந்தமாகவும் - அதற்குள்ள ஆட்சேபங்களும் அந்த இரண்டு சூத்ரங்களில் பரிகரிக்கப் பட்டிருக்கின்றன என அர்த்தம்.

(மீண்டும் சுருக்கமாக விளக்குவோம். பிரகிருதி அதி கரணத்தில் விசிஷ்ட பிருஹ்மம் உபாதானகாரணமாகிறது. ஆரம்பண அதிகரணத்திலே, அநன்யதவம் ச ஸ்தாபிதம். அசித் விஷயத்திலே அஹிகுண்டலாதி கரணத்தில் ஸித்தமான அம்ச அம்சீபாவம், பேதத்தை உபஜீவித்தே காட்டப்படுகிறது. இதர வ்யபதேசாதிகரணத்தில் ஸித்த மான விஷயமே அம்சாதிகரணத்தில் ஸ்தாபித்த அர்த் தத்தை உப ஜீவித்தே காட்டப்படுகிறது. சரீரதோஷங்கள் மாறுதல்களாகிற பாலயுவா திருஷ்டாந்தத்தால் ஆத்மாவை ஸ்பர்சிக்கமாட்டா என்றும் காட்டப்பட்டது. இந்த விஷயங் கள் தர்க்க பலத்தினுலும் - சுருதி பிரமாணங்களாலும் உதாரணமாக दृश्यते तु என்கிற சூத்ரத்தில் பரிகரிக்கப்படு கின்றன: ஸத்காரியவாதம் - यत् विलक्षणं, तत् सत्कार्यकारणं न भवतीत्यपि न व्याप्तिः என்பதும், கோமயத்திலிருந்து தேள் உண் டாவது முதலிய விபரீத காரியங்கள் திருஷ்டாந்தங்கள் காட்டப்பட்டன. மீதியுள்ள ஆட்சேபங்கள் வியத்பாதத் தில் பரிஹரிக்கப்பட்டன. இதனுல் சாங்கிய மதம் முழு வதும் நிராகரிக்கப்பட்டு - உபபிருஹ்மணங்களும் இதையே சொல்கின்றன எனவும் பிரகிருதித்பதி கரணத்திலே காட்டப்பட்டதாகும். (உத்தமூர் ஸ்வாமி).

சூத்ரம் स्वपक्षदोषाच्च (2-1-10)

ஸ்வபக்ஷதோஷாச்ச (2-1-10)

ஸ்வபக்ஷதோஷாத்ச - சாங்கிய பக்ஷத்திலும் தோஷ மிருப்பதாலும், பிருஹ்ம உபாதான காரணவாதமே ஒப்புக் கொள்ள வேண்டியது.

(இங்கே சாங்கிய பக்ஷத்தில் உள்ள தோஷம் சொல்லப் படுகிறது. சாங்கியன் பிரகிருதி புருஷனுடைய ஸந்நிதி யாலே (நெருக்கத்தாலே) பிரகிருதியின் கர்த்ருத்வம் புருஷ னிடமும் - புருஷனுகிற சைதன்யம் பிரகிருதியிலும் அத்யா ஸிக்கப்படுவதால் - ஏறிட்டுப்படுவதாகச் சொல்கிருன். அத்யாஸம் ஒரு பொருளில் இன்னொரு பொருளின் தன்மையை அனுஸந்திப்பது - ஆரோபிப்பது. புருஷன் என்பதால் பரமாத்மா என்று கொண்டால், விகாரமற்ற பரமாத்மாவுக்கு எப்படி அத்யாஸத்திஞல் யேற்படும் விகாரத்வம் ஒட்டும்? புருஷனுடைய சைதன்யத்வம் அசேதனமான பிரகிருதிக்கு எப்படி யேற்படும்? ஆகவே இக்காரணங்களால் சாங்கியபக்ஷம் நிராகரிக்கப்படுகிறது.)

**ஸ்ரீபாஷ்யம்:**—கேவலம் பிருஹ்மம் ஜகத் உபாதான நிமித்த காரணம் என்பதில் தோஷம் ஏதும் இல்லை என்பதி ஞல் மட்டுமல்ல - எதிர் (சாங்கிய) பக்ஷத்திலும் தோஷங்கள் இருப்பதாலும் - சாங்கிய பக்ஷம் தள்ளப்படவேண்டியதே - அதாவது பிரதானம் உபாதான காரணம் என்பதும் தோஷ முள்ளதாகவும் - நிராகரிக்கப்படத் தக்கது ஆகும் (விடப் படவேண்டியதே). பிரதான காரணவாதியிஞல் ஜகத்தின் பிரவிருத்தி நன்ருகக் காட்டப்பட வில்லை. (பிரவிருத்தி என்பது ஜகத் உற்பத்தி. சாங்கியன் சுத்த பிருஹ்மம் காரணமாவதும் - அதற்கு விகாரம் ஸ்ருஷ்டியிஞல் யேற் படுவதும் விருத்தம் - ஏனெனில் ஹேய ப்ரத்யனீகய நிர்விகாரமான பிருஹ்மத்திற்கு ஜகத் காரணத்வம் எப்படி யேற்படும்?)

(சாங்கியன் சொல்லும் சமாதானம் - शक्तितः प्रवृत्तेश्च - என்று உற்பத்தியை பிரவிருத்தி - என்கிருன். ஜகத் உற் பத்தி என்கிற பெயர் பிரகிருதியின் விக்ரியைச் (காரியங் களுக்கு) சொல்வதாகும். புருஷனுடைய ஸந்நிதியிலே பிரதானம் செயல்படுகிறது. பிரதானத்தின் கர்த்ருத்வம் புருஷனிடமும் புருஷனின் சைதன்யம் பிரகிருதியிலும் அத்ய ஸிக்கப்படுகிறது - இதஞல் நித்யமாகவே ஸர்வதா ஸர்க்கம்

(ஸ்ருஷ்டி) ஏற்படுகிறது - என்று சொல்லவேண்டும் - அநித்யமாக (சந்நிதி) இருக்கிறது என்று சொல்லப்போமாகில் - புருஷனுக்கு விகாரம் எப்படி ஏற்படும் - அவன் நிர்விகாரனல்லவோ - ? இதனால் விகாரம் பிரகிருதிக்கு யேற்பட்ட விகாரம் என்று சொல்லவேண்டியது - இல்லாத போனால் பிரகிருதி நிர்விஹாரம் - விகாரமற்றது என்று சொல்லவேண்டியதாகும். புருஷபிரகிருதி சேர்க்கையாலே யேற்படும் அத்யாஸம் - அதனால் ஜகத் உற்பத்தியாகிறது அதன் அதீனத்தில் பலவஸ்து இருப்பதும் ஸர்வம் இல்லாமையும் என்பது சரியாகாது). ஆகவே வேதாந்தி பக்ஷத்தில் தோஷமில்லை; சாங்கிய பக்ஷத்திலே தோஷமிருக்கிறது - என்கிறபடியாலே பிரதான காரணவாதியின் பக்ஷம் ஒப்புக்கொள்ளப்படமாட்டது.)

ஆகவே நிர்விகார சிந்மாத்திரமே ஏகரஸம் - அதுவே ஸ்வரூபம் எனப் புருஷனுக்கு சாங்கியனால் ஓதப்படுகிறது. அந்த புருஷனின் ஸ்வரூபம் பிரகிருதி ஸந்நிதானத்தினாலே, பிரகிருதி தர்மங்கள் அத்யஸிக்கப்படுகின்றன. அதனாலே ஜகத் உற்பத்தியாகிறது - பிரகிருதியிலுள்ள கர்த்ருத்வம் புருஷனிடமும், புருஷனிடமுள்ள சைதன்யம் பிரகிருதியிலும் அத்யஸிக்கப்படுகிறது. அதனால் ஜகத் உற்பத்தி யேற்படுகிறது என்கிறான் சாங்கியன். விகாரமற்ற புருஷனுக்கு அத்யாஸத்தினால் யேற்படும் விகாரம் ஒட்டாது. பிரகிருதியின் தர்மங்களின் அத்யாஸத்தின் காரணமாகவும்-புருஷன் பிரகிருதிஸந்நிதானத்தில் எந்த ரூபத்தில் இருக்கிறான்-இது அநிர்வசனீயம் என்றால்-பிருகிருதியின் ஸத்பாவமா? அல்லது அதற்குள்ள ஸ்வரூபத்தின் மாறுதலா? அல்லது பிரகிருதியின் மாறுதல் புருஷனில் அத்யஸிக்கப்படுகிறதா? புருஷனுக்கு விகாரமற்ற ஸ்வரூபமாதலால் அதன் ஸ்வரூபத்தின் மாறுதலாக விருக்க முடியாது - பிரகிருதியின் விகாரத்தின் அத்யாஸத்தினால் யேற்படுவது (காரியம்) அது அத்யாஸத்திற்கு காரணமாகாது. பிரகிருதியின் ஸத்பாவம்தான் புருஷனுடைய ஸந்நிதியில் (நெருக்கத்தாலே) யேற்படுவது என்று ஒப்புக்கொள்ளப்பட்டால், அந்த ஸத்பாவம் முக்தனுக்கும்

யேற்படவேண்டும் என்கிற பக்ஷம்யேற்படும். (सद्भाव-मात्रस्य संनिधानत्वे मुक्त-स्याप्यभोगप्रसङ्गः -) ஆகவே உன் பக்ஷப் படி ஜகத் உற்பத்தி சரியாக விளக்கப்படவில்லை: இந்த விஷயங்கள் மீண்டும் விவரமாக சூத்ரம் 2-2-8ல் अभ्युपगमे-ऽप्यर्थाभावात् அனுமானத்தினால் பிரதானம் ஜகத்காரணமாக ஸித்திக்கிறது என்று ஒப்புக் கொண்டாலும், அதனால் எந்த பயனும் யேற்படாது - பயனில்லாமையாலே பிரகிருதி அனுமானத்தினால் ஸாத்யமன்று.

(இங்கு சொல்லப்படுவது - சாங்கியன் சொல்கிறான் பிரகிருதியிலிருந்து விடுபடுவது புருஷனுக்கு மோக்ஷம் என்கிறான். பிரகிருதியின் ஸந்நிதானத்தில் இருப்பது போகம் என்கிறான். புருஷனின் ஸ்வரூபம் விகாரமற்றது-சுத்தசிந்மாத்திர ஏகரஸம். போகம் அனுபவிப்பது பிர கிருதியிலிருந்து விடுபடுவது - இரண்டும் விகாரங்கள் - இவை ஒட்டாது. பிரகிருதியும் புருஷனும் நித்யமாகவே சேர்ந்திருப்பதால் ஸ்ருஷ்டிதான் யேற்படும், மோக்ஷம் யேற் படாது - ஆகவே அனுமானத்தினால், பயனில்லாமையாலே-பிரகிருதி ஸாதிக்கத்தக்கதன்று என்பதாகும்.)

சூத்ரம் तर्काप्रतिष्ठानादपि (2-1-11)

தர்க்கபிரதிஷ்டாநாதபி (2-1-11)

தர்க்கப்ரதிஷ்டாநாத் அபி தர்க்கம் ஒரு நிலையில்லாதது என்பதாலும் - சுருதி ஸித்தமான பிருஹ்ம காரணவாதமே கைக்கொள்ளத்தகுந்தது. (இங்கே பிரதான வாதி தர்க் கத்தை நம்பிதன் பக்ஷத்தை ஸ்தாபிக்கப் பார்க்கிறான் - அவனுக்கு தர்க்கம்-நிலையில்லாதது-வேறு ஒரு பிரபல தர்க் கத்தால் அடிபட்டுப் போகலாம்-தர்க்க சம்மதமான வேதத் தைக் கொண்டே.. பிருஹ்ம காரணவாதம் ஒப்புக்கொள்ளத் தக்கது - இதனால் நமக்கு தர்க்கம் வேத சுருதிக்கு அனு ஸரணையாக விருப்பின் - ஒப்புக்கொள்ளத் தக்கது. தர்க்கம் வேதத்திற்கு முரண்பாடாக ஆகக்கூடாது), கேவலம்

தர்க்கத்தை ஆதாரமாக வைத்து யுக்திவாதத்திஞல் மட்டும் எதையும் ஸாதிக்க முடியாது

(சுருதி ஸித்தமான பிருஹ்மம் தான் ஜகத்காரணம் என்பதே ஒப்புக் கொள்ளப்படவேண்டியது. பிரதான காரண வாதியிஞல் சம்மதிக்கப் படமாட்டாது. அது யுக்திவாதமாகும். தர்க்கம் நிலையில்லாதது. சாங்கிய - புத்த அக்ஷபாத க்ஷபண (அதாவது சாங்கிய புத்த வைசேஷிகன் அக்ஷபாதனின் பக்ஷத்தினர்கள்.) அதே பிரகாரம் கபில பதஞ்ஜலி, இவர்களின் தர்க்கம் அனுமான்ய வ்யபதேசங்கள்-ஒன்றுக்கொன்று முரண்பட்டிருப்பதாலே - தர்க்கம் நிலையில்லாதது என்பது ஸ்தாபிக்கப்படுகிறது சாங்கிய - உலூக்கிய அக்ஷபாதன் - க்ஷேபண (ஜைனன்) கபில, பதஞ்சலி தர்க்கரீதியாக தங்கள் பக்ஷங்களாகிற மதங்களை ஸ்தாபித்தனர். நான்கு பெயர்கள் புத்தன் - கணாதன் - கௌதம - ஜைன; பதஞ்ஜலி யோக சாஸ்திரத்தின் கர்த்தா.) அதிகரண ஸாராவளி ஸ்லோகம் सौत्री तर्कप्रतिष्टा श्रुतिपयमुखस्वैर वादेषु योज्या என்பதாகும். ஔலூக்யன் - காணுதனைக் குறிக்கும் - மஹேஸ்வர உபதிஷ்ட கிராஹிகாணுத: ; வேதவிரோதத்திஞல் இவை அனைத்தும் தள்ளப்பட வேண்டியதாகும். - ஆகவே விசிஷ்டாத் வைதிகள் வேதங்களை ஆதரிப்பவர்கள் அவர்கள் மதம் வைதிகமதம். அத்வைதிகள் வேதவாக்யங்களை ஒப்புக் கொண்டாலும் சில சுருதிகளை விட்டு விட்டு அபேத சுருதிகளை கையாண்டார்கள். விசிஷ்டாத்வைதிகளுக்கு பேத - அபேத - கடக சுருதிகள் அனைத்தும் ஸம்மதம். அத்வைதிகள் குத்ருஷ்டிகளாகவும் - மற்றவர்கள் வேதபாஹ்யர்கள் என்றும் சொல்லப்படுகின்றனர்).

சூத்ரம் - अन्यथानुमेयमिति चेत् एवमप्यनिर्मोक्षप्रसङ्गः (2-1-12)

அந்யதாऽநுமேயமிதி சேத்தே - த்வமப்யநிர்மோக்ஷ பிரஸங்க: (2-1-12)

அந்யதா - வேறுவிதமாக (அதாவது பிரதானமே ஜகத் காரணம் என்றும்) அதை வேறுவிதமாக - மற்ற பக்ஷங்

களில் சொல்லிய பிரகாரம் அநுமேயம் - அநுமானம் செய்ய வேண்டியது இதிசேத் எனில், ஏவம் அபி - இப்படி அநு மானம் செய்தாலும் அநிர்மோக்ஷபிரஸங்க: (தர்க்கம் முடிவில்லாதது என்கிற முந்தின சூத்ரத்தின் தோஷத் தைப்போல இங்கும் விடுபடமுடியாமற்போய்விடும். (அதா வது இங்கேயும் தோஷமிருக்கும் அதிலிருந்து விடுபடமுடி யாது).

இங்கே பிரதானகாரணவாதி தர்க்கம் தோற்றுப் போன தும் யுக்தி மேதாவிலாஸத்தாலே வேறுவழியிலே கண்டு பிடித்து அனுமானம் செய்ய வேண்டியது - என்று சொல்ல அதுவும் சரியில்லை என்று சொல்லி பிரதான காரணவாதம் விடப்படவேண்டியதே என்பதாகும்.

இங்கே அறியப்பட்ட பௌத்தர்கள் — அதுபோல மற்ற பக்ஷிக்காரர்களின் அபிப்ராயம் தர்க்கத்தையே ஆதாரமாகக் கொண்டு வாதிப்பதில் தோஷங்களாலே, अन्यथा - வேறு வழி யிலே, பிரதான காரணவாதி - இந்த தோஷங்களை சரிக் கட்டி - நாம் (சாங்கியன்) மீண்டும் பிரதானத்தையே ஜகத் காரணம் என்று காட்டுவோம் - என்கிறான். அவ்விதம் அவன் சொல்லிடினும், நாம் (வேதாந்தி) சொல்வது - அந்த வழியினாலேயும் தோஷங்கள் ஏற்படும் - எப்படி தர்க்க வழி யிலே காணப்பட்டதோ அது போல - "உன்னுடைய (சாங் கியனுடைய) பேச்சு தேசாந்தர காலாந்தரங்களில் பல வேறு பட்ட சாமர்த்திய முள்ளவர்களால் குதர்க்க வாதம் சொல்லி- எப்படி தோற்றுப் போனார்களோ - அதுபோல உன்னால் சொல்லப்படும் अन्यथा - வேறு வழியும் அடையும். தேசாந்தர காலந்தரங்களில் குதர்க்க குசலர்கள் (ஸாமர்த்திய முள்ளவர் கள்) புத்தியை ஆதாரமாக வைத்து, தர்க்க வழி(யுக்தி)யினா லே வாதிப்பதாலும் அந்த தோஷங்களைப் போக்க முடியாது. அவைகளிலிருந்து விடுபட முடியாது. ஆகவே அதீந்திரிய விஷயங்களில் சாஸ்திரமேவ பிரமாணம் ஆகும். அதை உப ஜீவித்தே - அதற்கு அநுஸரணையாக - தர்க்கம் கை யாளப்படவேண்டும். (தத் உபப்ருஹ்மணையைவ தர்க்க

உபாதேய:) மனு முதலியவர்கள் அவ்விதமே சொல்கிறார் கள் - மனு ஸ்மி. 12 - 106 - आर्षं धर्मोपदेशं च वेदशास्त्राविरोधिना। यस्तर्केणानु संधत्ते स धर्मवेद नेतर: - வேத சாஸ்திரத்திற்கு விருத்த மின்றி எவன் தர்க்க உதவியினால் ரிஷிகள் சொன்ன தர்ம சாஸ்திரத்தை ஒன்றாக சரியாக்குகிறானோ, அவனே தர்ம சாஸ்திரம் அறிந்தவன் - மற்றவர்கள் அல்லர். இங்கே வேதாக்ய - शास्त्राविरोधिनेत्यर्थ: - சாஸ்திர விரோதம் ஏதும் இருக்கக்கூடாது - ஆகவே வேதங்களை விரோதிப்பதால் வேதார்த்தங்களை விசதமாக தெளிவுபடுத்துகிறோம் என்கிற வேஷத்திலே, வேதோப பிருஹ்மண தர்க்கத்தை ஸதாபிப் பவர்கள், அதாவது வேத விருத்தமான சாங்கியஸ்மிருதிகள் தள்ளப்பட வேண்டியவர்களாகும் - அநாதரணீயம்.

## அதிகரணம் — 4

शिष्टापरिग्रहाधिकरणम् (2-1-4)

ஸூத்ரம் एतेन शिष्टापरिग्रहा अपि व्याख्याता: (2-1-13)

ஏதேந சிஷ்டாபரிக்ரஹா அபி வ்யாக்யாதா: (2-1-13)

ஏதேந - இவ்வளவால் சிஷ்டா பரிக்ரஹா: அபி - வேதத் தினால் ஆதரிக்கப்படாத (நையாயிகம் முதலான) மற்ற பரமாணு காரணவாத பக்ஷங்களும் - வ்யாக்யாதா:-தள்ளப் படவேண்டியவை என அறியத்தக்கது. (சித்தாந்த ஸூத்ரம்)

शिष्टा:-परिशिष्टा:-என அர்த்தம். வேதத்தை ஒப்புக்கொள் ளாத பாஹ்யர்கள். (இங்கு ராமானுஜருக்கு அபிப்ராயம் - இவர்களுடன் சாங்கிய ஸ்மிருதியையும் சேர்த்துச் சொல்வ தாகும். புத்தர்கள் - நையாயிகர்கள் தர்க்கத்தை வெகுவாக நம்பிவாதாடுபவர்கள். ஆனால் இங்கே ராமானுஜர் பரமாணு காரணவாதிகளை மனதில் வைத்துக் கொண்டு அவர்களை வேதபாஹ்யர்கள் என்கிறார்). शिष्टाश्च परिग्रहाश्च शिष्टापरिग्रहा: एतेन - ஆகவே இவர்களுடைய அபிப்ராயங்களும் கைவிடப் படவேண்டியதே எவ்விதமெனில் एतेन எந்த வழியினால்

சாங்கியஸ்மிருதி தள்ளப்பட்டதோ - அதே வழியினாலே. இந்த வேதபாஹ்யர்கள் (நையாயிகம் முதலான குதர்க்க வாதிகள்) மற்ற பரமாணு காரணவாதிகள் - யாவரும் தள்ளப்படவேண்டியவர்களே. சாங்கியபக்ஷம் வேதவிருத்த மாதலால் தள்ளப்படவேண்டியது. அதே காரணத்தினால் வைசேஷிகர்கள், நையாயிகர்கள், ஜைன புத்தர்கள் - இவர் களும் தள்ளப்படவேண்டியவர்களே.

(மேலும் ஒருசந்தேகம், இங்கு இதரபக்ஷத்தினர்கள் ஜகத் உற்பத்திக்கு பரமாணு காரணவாதிகளாவர், இவர்கள் பர மாணுவே ஜகத்காரணம் என ஒப்புக் கொள்கிறார்கள்; இம் மாதிரி காரணவஸ்து விஷயத்திலே தர்க்கத்தினால் முடிவான நிலை சொல்லமுடியாது. அதற்கு சரியான ஆதாரமுமில்லை. மேலும் அவர்களுக்குள்ளே அபிப்ராய பேதங்கள் இருக்கின் றன - பரமாணு விஷயத்திலே. சிலர் பரமாணுவின் ஸ்வரூ பத்திலே சூன்யத்வம் - சூன்யத்வமில்லை என்றும்; ஞானாத் மகம் என்றும் - விஷய ஆத்மகம் என்றும் (அதாவது அர்த் தாத்மகம் என்றும்) சிலர் ஞானத்தை க்ஷணிகம் என்றும் சிலர் நித்யம் என்றும் ஏகாந்தத்வம் (ஒன்றே என்றும்) அநே காந்தத்வம் (பலவென்றும்), ஸத்யம் என்றும் அஸத்யம் என் றும், இப்படி பலதரப்பட்ட அபிப்ராய பேதங்கள் அவர்களுக் குள்ளேயிருப்பதால் அவர்களுடைய தர்க்க வழிகளும் தள்ளப் படவேண்டியதே(உதாரணமாக பரமாணுகாரண வாதிகளில் மாத்யாமிகர்கள் (பௌத்த மதத்தைச் சேர்ந்தவர்கள்) அணு வுக்கு சூன்யத்வம் உண்டு என்றும்; யோகாசாரன் (பௌத் தனில் ஒருபகுதி) ஞான ஸ்வரூபம் என்றும்; மாத்யாமிகனைத் தவிர மற்ற புத்த வகுப்பினர்கள் அணுவை க்ஷணிகம் என் றும்; ஜைனர்கள் அது இடத்திற்கு தகுந்தாற்போல மாறு கிறது என்றும்; யோகாசாரன் அது அஸத்யம் என்றும் வைசேஷிகனும் நையாயிகனும் அதை ஸத்யம் என்றும்; இப்படி பலதரப்பட்ட அபிப்ராயம் உள்ளவர்கள். இவர் களின் பக்ஷம் சூத்ரம் **2-1-13**ல் விசாரிக்கப்படுகிறது.)

சித்தாந்தம்—இந்த வேதபாஹ்யர்களின் பக்ஷமாகிற பரமாணு காரணவாதம் தள்ளப்படவேண்டியது. இங்கே

அதிகப்படியான சந்தேகம் எழுப்பியதற்கு இப்படி பலமதங் களைச் சேர்ந்தவர்கள் தங்கள் தங்கள் தர்க்கங்களாலே பர மாணுவே ஜகத்காரணம் அதனால் தர்க்கம் நிலையில்லாதது என்கிற தோஷம் வராது என்று அதிகப்படியான சங்கை எழ அதற்குப் பரிகாரம் முன்வழியாலே தள்ளப்படவேண்டி யதே. அவர்கள் வேதத்தை ஒப்புக் கொள்ளாதவர்கள். பரமாணுவின் ஸ்வரூபத்தில் அவர்களுக்குள்ளே அபிப்ராய பேதங்கள் இருக்கின்றன. பரமாணுவை சிலர் சூன்யம் என் றும் சூன்யமன்று என்றும், சிலர் அது ஞான ஸ்வரூபம் என்றும் சிலர் அர்த்தஸ்வரூபமென்றும் சிலர் அதுக்ஷணிக மென்றும் மற்றும் சிலர் நித்யம் என்றும் ஒருபடிப்பட்டது பலபடிப்பட்டது என்றும் ஸத்யம் - பொய் என்றும் கூறு கின்றனர். ஆகவே சிஷ்டங்களாய் முன் நிரஸிக்கப்பட்ட ஸாங்கிய மதத்தைக் காட்டிலும் - வேறுபட்டதாய் - அபரி கிருஹங்களான - (வேத பாஹ்யர்கள் - பரமாணு காரண வாதிகளும்) - முன் சொன்ன "தர்க்கம் நிலை நில்லாது" என்கிற காரணங்களாலே நிரஸிக்கப்பட்டன.

போக்த்ராபத்த்யதிகரணம் (2-1-5)

சூத்ரம் भोक्त्रापत्तेरविभागश्चेत् स्याल्लोकवत् (2-1-14)

போக்த்ராபத்தேராபத்தேரவிபாகஸ்சேத் - ஸ்யால்லோகவத் (2-1-14)

போக்த்ராபத்தே: - (பிருஹ்மம் சேதனா சேதனங்களைச் சரீரமாகக் கொண்டதென்று இசைந்தால், சரீர முடைய ஜீவனைப் போல, சரீரமுடைய பிருஹ்மமும், சுக துக்கங்களை அனுபவிக்க நேரிடும் - (அதனால்) அவிபாக: சேத் - (ஜீவ னுக்கும் பிருஹ்மத்திற்கும் வாசியில்லாமல் (வித்யாஸமின்றி போய்விடும் என்று சொல்லப்படுமாகில் - (அதற்குப் பதி லாக) லோகவத் ஸ்யாத் - உலகில் அரசன் பிரஜை ஆகிய இருவரும் சரீர முடையவராயிருந்த போதிலும் - அரசனின் ஆணையை மீறுவதால் யேற்படும் துக்கானுபவம் பரதந்திர னான பிரஜையாகிய ஜீவனுக்கே யொழிய - ஸவதந்திரனை

அரசனுக்கு யேற்படாதது போல) இங்கும் பரதந்திரனுன ஜீவனைக் காட்டிலும் - வேறுப்பட்டவனும் ஆள்பவனுமான பரமாத்மாவுக்கு வாசி உண்டு.

(சங்கதி) ஸ்மருதி அதிகரணத்திலும் விலக்ஷணத் வாதி கரணத்திலும் சாங்கிய பக்ஷத்தின் தோஷங்களைக் காட்டி அதுவிட வேண்டியது எனச் சொல்லபபட்டது. இங்கே — பிருஹ்ம காரணவாதத்திலும் தோஷம் உண்டு என்று சாங்கியன் மீண்டும் ஆட்சேபிக்க - அந்த தோஷமாவது - பிருஹ்மத்திற்கு உலகைச் சரீரமாகக் கொள்வதால் சரீரமுடைய பிருஹ்மம் ஜீவனைப்போல சுகதுக்கங்களை அனுபவிக்க நேரிடும் - அதனுல் இரண்டும் வித்யாஸமில்லாமல் போய்விடும் இதற்கு சமாதானம் சுகதுக்கங்கள் யேற்படுவது கர்மத்தால்; இங்கு பரமாத்மாவின் நியமனத்வத்தினுல்-தான் எவராலும் நியமிக்கப்படாதவனுக விருக்கையாலே தோஷமில்லை என்பதாகும்). (பரமாத்மாவுக்கு சரீரத் த்வாரத்தினுலே, அந்த சரீரத்திற்குப் பதியாகிருன். சரீரம் கர்மத்தினுல் யேற்படுவது யென்ருலும் - ஸ்வாமியாக விருப்பவனுக்கு கர்ம பலனுகிற சுக துக்கங்கள் யேற்படுவதில்லை. பரமாத்மாவின் ஸ்வரூபமே ஆனந்தம். லோகவழி - த்ருஷ்டாந்தமும் காட்டப்படுகிறது. ஸமுத்ரம் அலை - அரசன் பிரஜை உதாரணங்கள் திரமிட பாஷ்யத்தில் காணப்படுகின்றன - பரிஹாரமாக.)

மீண்டும் சாங்கியன் ஆட்சேபிக்கிருன் - என்ன சொல்லப்பட்டதென்ருல் — இதுவரை வேதாந்தி சொல்லியதை சாங்கியன் திரும்பச் சொல்கிருன் - ஸ்தூல ஸூக்ஷ்ம சித் அசித் வஸ்து சரீரத்தினுல் மேலான பரபிருஹ்மம் கார்யமாகிறது - அதுவே ஸூக்ஷ்ம தசையில் காரணமாக விருக்கிறது - ஜீவபிருஹ்மத்தின் சம்பந்தம் இவ்விதம் சரீர ஆத்ம பாவத்தினுல் யேற்படுகிறது - அப்போது ஜீவபிருஹ்மத்திற்கு ஸ்வபாவத்தினுல் வித்யாஸம் யேற்படுகிறது. என்று சொல்லப்பட்டால் - அந்த விபாகம் (வித்யாஸம்)

வாஸ்தவத்திலே இருக்காது-ஏனெனில் பிருஹ்மம் தன்சரீரத்தினுல் அந்த சரீரகாரணமாகவே-போக்த்ருத்வத்தை (அனுபவிப்பதைக்) காரணமாக உடையது. அந்த சரீரத்தினுலே ஜீவ ஈஸ்வரனுகவிருப்பினும், சரீரம் ஏற்படுவதாலே சுக துக்கங்களின் அனுபவங்களை அனுபவிப்பதை தடுக்க முடியாது.

இவ்விதம் சொல்வது சரியில்லை - வே. சூ. 1-2-8ல் संभोगप्राप्तिरिति चेन्न वैशेष्यात् - சரீரத்தினுள்ளிருப்பதாக ஒப்புக் கொண்டால் - சுக துக்க அனுபவம் பரமாத்மாவுக்கும் ஒப்ப வேண்டிவருமே - என்ருல் - ந - வராது. வைசேஷ்யாத் - வேறு காரணத்தால் - ஏனெனில் பரமாத்மா கர்ம வசப்படாதவனுகையால் - ஜீவனுக்கு யேற்படுவதுபோல - அவனுக்கு இன்ப துக்கமில்லை. ஆகையால் சரீரத்தினுல் பிருஹ்மத்திற்கு போக பிரஸங்கம் யேற்படுவதில்லை.

மீண்டும் சாங்கியன் வாதிக்கிருன் - இப்படிச் சொல்வதில் சுக துக்க அனுபவம் பிருஹ்மத்திற்கு இல்லை - என்பதில்லை. அந்த சூத்ரம் (பி. மீ. 1-2-8 संभोग:); ஸர்வத்ர பிரஸித்யதிகரணத்தில் வருகிறது - அதன் முக்கிய நோக்கம் - உபாஸனைக்காக ஹ்ருத்யத்தில் வீற்றிருக்கும் பரமாத்மாவை உபாஸிக்கவேண்டும் என்று சொல்வதாக விருக்கிறது; அவனுக்கு ஹ்ருதயமாகிற சிறிய ஸ்தானத்தை சொல்லிற்று. இதனுல் பரமாத்மா சிறியவனுகமாட்டான் அவன் சரீரத்திலிருப்பதால் - அந்தர்வர்த்திப்பதாலே - அவனுக்கு சுகதுக்க போக பிரஸங்கம் யேற்படுவதில்லை - என்பது சரியாகும். ஆனுல் இங்கே ஜீவனைப்போல பிருஹ்மமும் சரீரத்தைக் கொண்டதாலே - சுகதுக்கங்களின் போக்திருத்வத்தின் பிரஸங்கம் யேற்படாது என்பது தவிர்க்க முடியாது. நாம் நேரில் பார்க்கிருேம் - ஜீவனுடைய சரீரத்தில் யேற்படும் மாறுதல்களாகிற பாலனுகவிருப்பது - யுவா அவஸ்தையை அடைவது - இத்யாதி விகாரங்கள் யேற்படுவதாயினும், ஜீவர்களின் ஆத்மாக்களுக்கு இத்தகைய விகாரங்கள் யேற்படுவதில்லை. ஆயினும் சரீர தாது ஸாம்ய

மாக (ஸமநிலையிலிருப்பது) - வைஷம்யத்தை அடைவது (மாறுதலை அடைவது) சுகதுக்க நிமித்த காரணமாகவே ஆகின்றன. சுருதியும், இவ்விதமே ஓதுகிறது. சா. உ. 8-12-1ல் न ह्वै सशरीरस्य सतः प्रियाप्रिययोरपहरति अशरीरं वा व सन्तं न प्रियाप्रिये स्पृशत: எவனுக்கு எதுவரை சரீரமிருக்கிறதோ-அவனுக்கு பிரியங்கள் அப்பிரியங்கள் நசிக்கிறதில்லை. சுகதுக்கங்கள் சரீரமில்லாதவனை ஸ்பர்சிப்பதில்லை. ஆகையால் ஸசரீர-சித் அசித் சரீரத்தினோடு விருக்கும் பிருஹ்மமே ஜகத் காரணம் என்று சொல்லுகிற விஷயத்தில்; ஜீவ ஈஸ்வர ஸ்வபாவ விபாகம் (வித்யாஸம்) (சரீரமிருப்பதாலே) ஏற்படாததாகையாலே, கேவல பிருஹ்ம காரணவாதி விஷயத்திலும் மிருத்-சுவர்ணம் போன்றவைகளைப்போல, ஜகத்திற்கு யேற்படும் அபுருஷார்த்தங்கள் அதன் ஆஸ்ரயத்திற்கும் (பிருஹ்மத்திற்கும்) யேற்படும்-இது யாதவபிரகாசரின் அபிப்ராயம். ஆகவே சாங்கியன் சொல்வது-மேலான அபிப்ராயமாகும் - ஏற்கத்தக்கதே ஆகும். ஆகவே சாங்கியன் பக்ஷத்தில் இவரும் சேர்ந்தவராவர்.

**விளக்கம்:—**

(இங்கு சொல்லப்படுவதை நன்கு கவனிக்கவேண்டும் கர்மம் தான் சரீர உற்பத்திக்குக் காரணம்; சரீரத்தின் வாயிலினால் சுக துக்க அனுபவம் ஜீவனுக்கு யேற்படுகிறது இப்படிப்பட்ட அனுபவம் பிருஹ்மத்துக்கும் ஏற்படலாமல்லவா? சித்தாந்தியின் அபிப்ராயம் வேறு, பிருஹ்மத்துக்கு விகாரங்கள் அஸம்பாவம் - கேவலம் திருஷ்டாந்த மாத்திரத்தினாலே அல்ல - சூத்ரத்தின் அர்த்தத்தினாலும் யேற்படுவது. லோகவத் - திருஷ்டாந்தங்கள் - விதிநிஷேதா விஷயத்வமேவ லோகவத் - என்று இந்த பாஷ்யத்தில் விரிவாகச் சொல்லப்படுகிறது. அதாவது இந்த சூத்திரத்தில் சொல்லப்பட்ட சரீர தோஷங்கள் - இன்னும் இரண்டு சூத்ரங்களிலும் (ஆக மூன்று சூத்ரங்களின் விஷயமாக) சொல்லப்படுகின்றன - மற்ற இரண்டு சூத்ரங்கள் (பி. மீமா) 1-2-8 ஸம்போக ப்ராப்திரிதி சேந்ந வைசேஷ்யாத் என்பதிலும்; பி. மீமா. 3-2-12 नदा दिति चेन्न प्रत्येकमतद्वचनात् (3-2-12) லும் சுத்த ஜீவனுக்

கும் சரீர சம்பந்தத்தால் தோஷம்வருவது போல - தோஷங்கள் யேற்படலாம். 1-2-8ல் பிருஹ்மம் சரீரத்தினுள்ளிருப்பது காரணமாகவே ஜீவன் இன்ப துக்கங்களை அனுபவிக்கிருன் என்பது தவறு - ஜீவனைப்போல கர்மவசப்படாதவன் என்று சொல்லிற்று ஜீவன் பிருஹ்மத்தை உபாஸிப்பதற்காகவே ஹ்ருதயத்தில் இருக்கிருன் என்பதற்க்காக ஹ்ருதய ஸந்நிவேசம் ஓதப்பட்டது. இதனுல் சரீரதோஷங்கள் சரீரபதியான ஜீவனைத் ஸ்பர்சிக்குமா என்பதற்கு - பதில் ஜீவன் சரீரபதியினுல் சுகதுக்கங்களை அடைவதில்லை - கர்மபலனுக அடைகிருன். இந்த பலன்கள் பகவத் அனுக்ரஹ நிக்ரஹ ரூபத்திலே உள்ளது. மற்ற சூத்திரத்தில் 3-2-12ல் அந்தர்யாமித்வத்தினுல் பிருஹ்மம் ஒவ்வொரு சரீரத்திலும் நுழைகிறது. அவன் உள்நுழைவது - தன் இச்சையால் ஏற்படுவதால் - ஜீவனைக் கட்டளையிடுவது - இதனுல் பிருஹ்மத்திற்கு அபுருஷார்த்தம் யேற்படாது - அதாவது எல்லா வஸ்துக்களும் ஸ்வரூபத்திலே அனுகூலமே - பிரதி கூலமில்லை - கர்மத்தினுல் அபுருஷார்த்தங்கள் யேற்படுகின்றன. கர்ம ஸ்வபாவ அனு குண்யத்தாலும், பரமபுருஷனுடைய சங்கல்பத்தினுலும் வஸ்துக்கள் காலபேதத்தினுல் புருஷபேதத்தினுல் சுகதுக்கங்களை உண்டு பண்ணுகிறபடியால் - அசேதன வஸ்துக்கள் ஸ்வரூபத்திலே அபுருஷார்த்தமில்லை என்று சொல்லப்பட்டது.)

(ஆகவே யாதவபிரகாசன் சாங்கியபக்ஷத்தை ஆதரிப்பதுபோலச் சொல்வதாலே) - அதற்கு நாம்பதில் சொல்கிரேும். स्याल्लोकवत् - इति விபாகம் (வித்யாஸம்) ஏற்படக் கூடும் - உலகில் அரசன் பிரஜை இருவரும் சரீரமுடையவராயிருந்த போதிலும், அரசனின் ஆணையை மீறுவதால் யேற்படும் துக்காநுபவம் பிரஜைக்கே ஒழிய - அவனுடைய எஜமானனுகிற அரசனுக்கு யேற்படாது. அதுபோல பரதந்திரனை ஜீவனைவிட ஸ்வதந்திரரான பரமாத்மாவுக்கும் வித்யாஸம் ஏற்படத்தான் செய்யும், அதனுல் கிடையாது.

**स्यादेव विभागो जीवेश्वरस्वभावयोः न हि जीवस्य शरीर-धातुसाम्यवैषम्यनिमित्तं सुखदुःखयोर्भोक्तृत्वं सशरीरत्वकृतम्**

ஜீவன் துக்க சுக அனுபவங்களை அனுபவிப்பது சரீரத்தின் காரணமாக அல்ல - (சுகதுக்கங்கள் அவனுடைய சரீர தாதுக்களின் ஸாம்யம் - வைஷம்யம் யேற்படுவதால் அனுபவிக்கப்படுகின்றன). இந்த சுகதுக்கங்களானுபவங்கள் கர்ம பலன்களின் காரணமாகவே - ஜீவனுடைய புண்யபாபரூப கர்ம கிருதம் என அர்த்தம். न ह वै सशरीरस्य - எவனுக்குச் சரீரமிருக்கிறதோ - என்கிற சாந்தோக்ய உப 8-12-1) சுருதி கர்ம காரணமாக உண்டாக்கப்பட்ட சரீரத்தையே சொல்கிறது (கர்மாராப்த தேஹவிஷயம்) ஏனெனில் கர்மாக்களிலிருந்து விடுபட்ட முக்தனுக்கு, அவனுடைய ஸ்வ (சொந்த) ஸ்வரூபம் ஆவிர்பவித்த உடனே அப்போது அவனுக்கு சரீரம் யேற்பட்டால் அதில் லவலேசமும் அபுருஷார்த்தங்கள் அடையப்படுவதில்லை. இப்படி சுருதிகள் ஓதுவதால் அதற்குப் பிரமாணமாகும்.

न हवै सशरीरस्य - எவனுக்குத் தேகமிருக்கிறதோ (சா. உ. 8-12-1) இதில் கர்மாவினுல் யேற்பட்ட சரீரத்தைச் சொல்வது ஏனெனில் முக்தனுக்கு கர்மபந்தங்கள் நசிப்பதாலே அபுருஷார்த்தங்கள் யேற்படுவதில்லை. சா.உ. 7-26-2 स एकधा भवति त्रिधा भवति - (முக்தன் அவன் ஒருவனுகவும் மூன்ருகவும் ஆகிருன். சா. உ. 8-12-3ல் स यदि पितृलोककामो भवति அவன் பித்ரு லோகமடைய இச்சைப்பட்டால்; சா. உ. 8-12-3ல் स तत्र पर्येति जक्षत् क्रीडन् रममाणः (முக்தன்) அவன் அங்கே சஞ்சரித்துக் கொண்டும் சாப்பிட்டுக் கொண்டும், விளையாடிக் கொண்டும், அனுபவித்துக் கொண்டும் விருக்கிருன். அதே மாதிரி பரமாத்மாவுக்கும் அபுருஷார்த்தங்கள் யேற்படுவதில்லை. அபஹதபாப்மன: - பாபமில்லாமை இயற்கையாகவே பரமாத்மாவுக்கு விருப்பினும், அவர் ஸ்தூல சூக்ஷ்மரூப சம்பூர்ண ஜகத்தை தனது சரீரமாகக் கொண்டாலும், அவனுக்கு கர்ம சம்பந்தம் துளிக்கூட இல்லை, அதனுல் அவனுக்கு அபுருஷார்த்தங்கள் யேற்படுவதற்கு துளிக்கூட சந்தர்ப்பமில்லை.

(இங்கு சொல்லப்படுவதைக் கவனிக்க வேண்டியது. சாங்கியனும் வேதாந்தியும் வெவ்வேருக சுருதியை அர்த்தம் செய்கிருர்கள். கேவலம் சரீர சம்பந்தம் மாத்திரம் போதும் அபுருஷார்த்தங்களுக்கு என்கிருன் சாங்கியன். வேதாந்தி அப்படி சொல்லவில்லே. கர்மாவினுல் யேற்பட்ட சரீரமாக விருந்தால்தான் சுகதுக்கங்களாகிற அபுருஷார்த்தங்கள் யேற்படக்காரணமாகலாம் முக்தனுடைய உதாரணம் காட்டப்படுகிறது. அவனுக்கு கர்ம சம்பந்தமில்லேயாதலால், சரீரம் உண்டாளுலும் சரி - இல்லாதபோமுலும் சரி — அவனுக்கு துக்க அனுபவம் இல்லே. அதே பிரகாரம் கர்ம சம்பந்த சரீரமில்லே. அதனுல் அவனுக்கு தோஷங்கள் அபுருஷார்த்தங்கள் கிடையாது).

लोकवत् லோகத்தில் காணப்படுவது போல. உலகில் ஒரு அரசன் - அவனுடைய பிரஜை - இவர்கள் விஷயத்தில் பிரஜை அரசனின் கட்டளேயை மீறினுல், தண்டனேயும் அதன்படி நடந்தால் அரசனின் ப்ரீதியும் (அனுக்ரஹமும்) யேற்படுகிறது. இந்த சுகதுக்க அனுபவம் பிரஜைக்குத்தான் யேற்படுவது - கட்டளேயிடும் அரசனுக்கு யேற்படுவதில்லே. சரீரம் இருப்பினும் அரசனுக்கு ஏற்படுவதில்லே. சரீரமிருப்பதாலே பிரஜைக்குயேற்படுகிறது.

திரமிடபாஷ்யக்காரர் यथा लोके राजा प्रचुरदन्दशूके घोरेऽनर्थ संकटेऽपि प्रदेशे वर्तमानो व्यजनाद्यवधूतदेहो दोषैर्न स्पृश्यते, अभिप्रेतांश्च लोकान् परिपालयति, भोगांश्च गन्धादीन् अविश्वजनोपभोग्यान् धारयति, तथाऽसौलोकेश्वरो भ्रमत्स्वसामर्थ्यचामरो दोषैर्न स्पृश्यते, रक्षति चलोकान् ब्रह्मलोकादीन् भोगांश्चाविश्वजनोपभोग्यान् धारयति - इति இவ்விதம் இதையே சொல்கிருர் - அதாவது-எப்படி உலகில் ஒரு அரசன் புழுபூச்சிகள் நிறம்பின இடத்தில் - மனத்திற்கு அருவெறுப்பான தோஷங்கள் நிறம்பின இடத்தில் இருப்பினும், அவனுக்கு அந்த தோஷங்கள் பாதிக்காமல் - தன்

காரியமாகிற பிரஜா ஸம்ரக்ஷணத்தைச் செய்கிருனே, அவன் அனுபவத்திற்கு உரிய சந்தனம் போன்ற வாசனைத் திரவியங்களை, சாதாரண மனிதர்களால் அடையப்படாத சுகங்களை அனுபவிக்கிருனே - அதேபோல லோகேஸ்வரனுகிற பரமாத்மா தனது சொந்த சாமர்த்தியம் எனப்படும் சாமரம் வீசுவதாலே ஒருவித தோஷத்தையடைவதில்லை, லோகங்களை பிருஹ்மா ரக்ஷிப்பது போல, ரக்ஷிக்கிருர். போகங்களை அனுபவிக்கிருர் - அந்தபோகங்கள் சாதாரண மனிதர்களால அடையப்படுவதில்லை-அனுபவிக்கப்படுவதுமில்லை. ஆகவே பிருஹ்மத்தின் நிஜஸ்வரூபம் பரிணமத்திஞலே ஏற்படுவதில்லை - ம்ருத்சுவர்ணம் போன்ற உதாரணங்களில் காரணத்தசையில் யேற்படுவதுபோல - பரமாத்மாவினுடம் ஸம்பவிப்பதில்லை. அதஞல் பரமாத்மா अविकारत्व निर्दोषत्वात् - என்று சுருதிசொல்லியபடி - ஸ்வரூப ஸ்வபாவமாறுதல்கள் இல்லாதவன்.

**விளக்கம்:**—இதஞல் சரீரமிருந்தால்போதும் - சுகதுக்க அனுபவங்கள் ஸ்வரூப மாறுதல்கள் யேற்படும்-என்கிருனே பூர்வபக்ஷி அவனுடைய பக்ஷம் முழுதும் நன்ருகவே கண்டிக்கப்பட்டது. லோக நியாய பிரதர்சனேன் - இங்கே மீண்டும் பரமாத்மா ஹேயபிரதிபடன் - கல்யாண குணங்களுக்கு இருப்பிடம் என்பது பிற்பாடு மூன்ரும் அத்யாயத்தில் உபயலிங்காதி கரணத்தில் சுருதிகள் மூலமாக நன்கு விளக்கப்படும். திரமிட பாஷ்யத்தின் நோக்கம் தன் ராச்சியத்தில் கட்டளையிடுபவன் அதிவிருத்தி செய்பவன் மாத்திரமல்ல - பிரஜைகளைக் காக்கிறவன் - எனப்படும் அனுவிருத்தி. அதிவிருத்தி - பல ப்ரதன் (அனுக்ரஹ நிக்ரஹம் செய்ய யோக்யதையுள்ளவன்) - இத்யாதி ரக்ஷண காரியத்திஞல் யேற்படுவது. இதேமாதிரி உதாரணம் சமுத்திர ஜலம் - அதில் உண்டாகும் நுரை அலைகள். இவைகளால் சமுத்திரத்திற்கு ஸ்வரூபத்திலே யாதொரு மாறுதல் கிடையாது-எப்படி அரசனுக்கு யேற்படுவதில்லையோ-அதுபோல அரசன் போகங்களை அனுபவிக்கிருன் - பிரஜை சுக துக்கங்களை அனுபவிக்கும் - இருவருக்கும் சரீரமிருப்பினும் - அரச

னுக்கு சுக துக்க அனுபவம் இல்லே; அதுபோல சமுத்திர ஜலத்திற்கும் இல்லே).

இவ்விதமிருப்பினும் - பர பிருஹ்மம் ஜகத் காரணம் என்பதில் போக்த்ரு போக்ய விபாகம் (பிரிவு - வித்யாஸம்) இல்லாமலிருப்பது-என்கிற சங்கை (சந்தேகம்) எழ, சமுத்ரம் (காரணம்) பேநதரங்கம் (நுரை - அலேகள்) இந்த திருஷ்டாந்தத்திலுலே - நன்கு விபாகம் (வித்யாஸம்) செய்யப்பட்டதாகும் - இதுதான் இந்த சூத்திரத்தின் நோக்கம் (போக்திரா ...லோகவது) என்று சொல்வது பொருந்தாது. (இங்கே இதே அபிப்ராயத்தை சங்கரர் - பாஸ்கரர் - யாதவ பிரகாசர் சொல்கிருர்கள். சங்கரருக்கு - உலகில் சமுத்திரத்தில் அலே என்றும் குமிழி என்றும் காணப்படுகின்றன. இங்கு குமிழிக்கு அலேயுடன் ஒன்றுபட்ட சமுத்திரத்துடன் அபேதம் தர்க்கபலம் கொண்டு சொல்லக் கூடுமானுலும், இதுதான் குமிழி - இது தான் அலே - என்கிற பேதவிய வஹாரம் யேற்படுகிறது - எவ்விதமோ, அவ்விதமே போக்ய பிரபஞ்சத்துக்கும் போக்திரு ஜீவா பின்னமான பிருஹ்மத்துடன் அபேதம் வந்த போதிலும், தனித்து போக்தாவென்றும், தனித்துப் போக்ய மென்றும், பேதவியவவஹாரம் இருக்கலாமே - இதற்கு தடையாதுமில்லே - என்பது ஸ்யாத் லோகவத் (சூத்திரத்தின் பின் பகுதி.) இதஞல் விலக்கப்பட்டதாகிறது. சமுத்திரம் ஒரு பக்கம் - பெண் அலே, ஆண் அலே, குமிழி இவற்றுக்குப் பரஸ்பர பேதமும் ஒன்ருக ஒன்றையொன்று ஒட்டினதாயுள்ள வியவஹாரமும் காணக் கிடைக்கிறது - காரணத்திலே அபேதமும் காரியத்தில் பேதமும் ஏற்படுவது போல - போக்தா போக்யம் என்பதும் கிடைக்கிறது. பிருஹ்மம் அனுப்ரவேசம் செய்வதால் - விகாரமடையாத ஸ்ரஷ்டாவுக்கே தனது காரிய அனுப்ரவேச மூலம் போக் திருத்வத்தைச் சுருதி சொல்வதாலே, உபாதி நிமித்தமாக ஆகாசத்துக்கும் குடம் முதலிய உபாதியை நிமித்தமாகக் கொள்வது போல (புத்தி முதலிய) உபாதிகளே நிமித்தமாகக் கொண்ட விபாக (பேதம்) இருக்கின்றது - என்கிற இந்தக் காரணத்தாலே, பரம காரணமான பிருஹ்

மத்தை விட அன்னியமாக வில்லாவிடினும் கூட, போக்த்ரு போக்ய லக்ஷணமான பேதமான சமுத்திரம் - அலை - குமிழி- முதலியவற்றுக்குச் சொன்ன நியாயத்தை ஒட்டி - பொருத்த முள்ளாதாகவே ஆகும்.

அதாவது ஜீவ பிருஹ்மங்களுக்கோ ஸ்வரூப ஐக்யம் ஒப்பப்படினும்கூட - உபாதி நிமித்தமான பேதத்தை அங்கீ கரிப்பதால் இங்கும் ஜகத்தும் பிருஹ்மமும் ஸாங்கர்யம் (கலந்து நிற்றல்) ஸம்பவிப்பதற்கில்லை என்பதாகும். அவித் யைதான் உபாதி சங்கரருக்கு-அதே பாஸ்கரருக்கும் உபாதி; யாதவ பிரகாசருக்கும் சக்தி சாமர்த்திய விசேஷம் உபாதி யாகும்-ராமானுஜரும் நிம்பர்க்கரும் சொல்வது-போக்த்ராபத் தியை-பிரும்மத்திற்கு அனுபவித்தல் என்கிற நிலையை அடை தல்; சங்கரருக்கு விஷய வஸ்துவே போக்தாவாகிறது-வல்ல பரும் சங்கரரைப்போலச் சொல்கிறார் - மாத்வர் பிரும்மத்துக் கும் ஜீவனுக்கும் மோக்ஷ தசையில் விபாகம் ஏற்படுவதாக வும்-மோக்ஷதசையிலும், சம்சாரத்தில் எந்த வித்யாஸம் விருந் ததோ - அதேபடி வித்யாஸம் விருக்கும் என்பதாகும் - (ஸ்ரீபாஷ்யம் - by M. Rangacharya - English)

(स्यात् लोकवत् - தார்க்கிக ஸித்தாந்தத்தில் - உபாதான காரணமான கபாலம் முதலிய திரவியத்தைக் காட்டிலும் குடம் முதலிய உபாதேய (காரிய) திரவியமானது வேறு பட்டது என்றும், காரியகாரணங்களுக்கு ஸமவாயம் (இணை பிரியாமலிருத்தல்) ஸம்பந்தம் என்று சொல்லப் படுவதுபோல; ஔபநிஷத் சித்தாந்தத்தில் உபாதான உபா தேய (காரிய காரண) பாவம் கூறுமிடத்தில் இரண்டு பொருள்கள் ஒப்பப்படுவதில்லை. ஒரே திரவியமானது பிண்டாவஸ்தாரூபமான (மண் உருண்டை நிலை) தர்மத்தை விடுத்து குயவன் முதலிய காரக (agent - நிமித்தம்) விசே ஷத்தின் உதவி கொண்டு, சங்கு போன்ற கழுத்து முதலி யன உருவத்தை அடைந்ததாக பானை ஆகின்றது எனப்படு கிறது. ஆகவே இந்த மண் உருண்டையேதான் குட மாகிற்று - என்பதாய் - ஸமானாதிகரணத்தினால் (ஒன்று

பட்ட தோற்றமானது) ப்ரதீதியானது - யேற்படுகிறது. இந்த பிருஹ்மமன்றோ எல்லாமும் ஆகும் – इदंसर्वं என்கிற உதாரணத்தைப்போல). ஆகவே ஜீவபிருஹ்மத்திற்கு ஸ்வரூப ஐக்யம் ஒப்பப்படினும் - உபாதி நிமித்தமான பேதத்தை அங்கீகரித்து யிருப்பதன் மூலம் இங்கும் ஸாங்கர்யம் (கலந்து நிற்றல்) சம்பவிப்பதற்கில்லை எனக் கண்டு கொள்ளவேண்டியது.)

(அத்வைதி அஸ்திபாதி பிரியம் என்பவை பிருஹ்மத்துக்கும் ஸ்வரூபமாயும் ரூபம் நாமம் இரண்டும் ஜகத்தின் ஸ்வரூபம் என்றும் - ஜகத்ரூபத்தில் அனுப்ரவேசத்தை யடைந்த பிருஹ்ம ரூபியான தர்மியைக் கொண்டு-அபேதம் பொருத்தமாகிறது – என்கிருன். நாமரூப அம்சத்துக்கோ பிருஹ்மத்துடன் கூட ஸ்வரூப-சம்பந்தமாகிற தாதாத்மிய ஸம்பந்தமே (பிரிதில்லாதிருத்தல்) ஒழிய - ஐக்யம் ஸம்பவிப்பதில்லை - ஆதலால் பிருஹ்மத்துக்கும் ஜகத்துக்கும் ஸாங்கர்யம் (கலந்து நிற்றல்) ஸம்பவிப்பதில்லை - என்கிருன் - அதாவது உபாதி நிமித்தமான பேதத்தை அங்கீகரித்து ஸ்வரூப ஐக்யமும் ஒப்பப்பட்டாலும் ஸாங்கர்யம் (கலந்து நிற்றல்) யேற்படுவதில்லை-என்கிருன் அத்வைதி, விளக்கம் முற்றிற்று.)

**ஸ்ரீபாஷ்யம்:**—இன்னும் மற்றவர்களால்-சங்கரர்-யாதவ பிரகாசர் - பாஸ்கர மதத்தைச்சேர்ந்தவர்கள் - பரப்பிருஹ்மம் தான் உபாதான காரணம் என்பதில் போக்த்ரு போக்ய விபாக (பிரிவு) இல்லாதபடியாலே - (அதாவது பிருஹமம் ஜீவன் இவர்களுக்கு பேதமில்லாதபடியாலே) சமுத்திரம் - நுறை அலைகள் என்கிற திருஷ்டாந்தம் கொண்டு முதலில் சந்தேகத்தைப் (விபாகம் உண்டு என்று) எழுப்பி பிறகு சமுத்திரம் - நுறை அலைகள் என்கிற உதாரணத்திஞல் வித்யாஸம் இல்லை என்று சாதிக்கிருர்கள் - இதஞல் பிருஹ்மத்திற்கு உபாதான காரணத்வம் உண்டு என்கிருர்கள் - விபாக ப்ரதிபாதனபரம் இந்த சூத்ரத்தை அர்த்தம் செய்வதால், விபாகம் இல்லை என்கிருர்கள், நாம் சொல்வது -

இவ்விதம் சொல்வது சரியில்லை - ஏனெனில் எவர்கள் பிருஹ் மத்திற்கு ஜகத் காரணம் ஒப்புக்கொள்கிறவர்கள்-அதாவது ஸ்ருஷ்டி பிருஹ்மத்தினிடமிருந்து உண்டாகிறது என்று சொல்பவர்கள் - அவர்கள் அந்தர்பாவித (உள்ளிருக்கும்) சக்தி, அவித்யா உபாதி பிருஹ்மத்தினிடமிருப்பதாக-ஒப்புக் கொள்கிறுர்கள். அவர்களுக்கு இந்த அதிகரணம் நமக்கு பொருத்தமாகிறபடி - அவர்களுக்கு ஒட்டாது - அதாவது ஆட்சேபித்து அதற்குப் பரிகாரம் சொல்வது என்பது முடியாது. (ஆட்சேப பரிகாரயோர ஸங்கதத்வாத்). பிருஹ் மத்திற்கு (அதாவது காரணத்திற்கு) அந்தர்கதசக்தி

(உள் இருக்கும் சக்திவிசேவும்) அவித்யா - உபாதியின் சம்பந்தத்தால் அதற்கு போக்திருத்வம் (அனுபவிக்கும் தன்மை) யேற்படாது; பிருஹ்மத்திற்கும் - உபாதிக்கும் - இரண்டும் விலக்ஷணமாக வெவ்வேருகவிருப்பதால், அவை களுக்குள்ளே பரஸ்பரம் ஸ்வரூப ஐக்யம் ஒப்பப்படினும் - ஸர்ங்கர்யம் ஏற்படுவதில்லை. (கலந்து நிற்றல் யேற்படு வதில்லை - பேதம் உபாதி நிமித்தமாக யேற்படினும் கூட என்பதாம்). பரஸ்பர பாவாபத்திர்ஹி நஸம்பவதி - ஸ்வரூப பரிணுமாப்யுபகமேரபீதி । — (நாம் சொல்வது போக்யத்வம் போக்திருத்வரூப விகாரம்—பிருஹ்ம ஸ்வரூபத்தில் ஏற்படு வதில்லை. சரீரத்திற்கே பரிணுமம். மேலும் பிருஹ்மம் ஸர்வேஸ்வரன். ஜீவன் பரமாத்மாவை அண்டிபிழைப்பவன். பரமனே இன்ப துன்பமற்றவனுய் உலகிற்கு உபாதான காரணமாகவும் ஆகிருன்-என்று நாம் சொல்வது-அநவத்யம் தோஷமற்றது.)

பிருஹ்மத்திற்கும் உபாதிக்கும் அவை விலக்ஷணமான படியால் - ஏகதாபத்தி ஆகமுடியாது. அந்த பக்ஷங்களின் சார்பிலும் ஸ்வரூப பரிணுமம் ஏற்படுவதில்லை. (சுத்த பிருஹ்மம் தான் ஸ்ருஷ்டிக்கு முன்பு இருந்தது அந்தர்கத சக்தி விசேஷத்திருலே, உபாதியிருலே - ஸ்ருஷ்டியேற்படு கிறது - ஸ்வரூப பரிணுமம் யேற்படுகிறது. ஆகவே உபாதி அழிந்ததும் - சுத்தபிருஹ்மமே நிலைக்கிறது, இதனுல்

போக்ய போக்திருத்வம் யேற்படுவதில்லை என்கிற ஆட்சேபம் பரிஹரிக்கப்படவில்லை. பிருஹ்ம ஸ்வரூபம் இந்த பரிணாமத்தினால் மாறுவதில்லை - பரிணாமம் தோற்றமே என்கிறார்கள்).

சாரி. சூ. 2-1-35 - न कर्माविभागादिति चेन्नानादित्वात् - उपपद्यते चाप्युपलभ्यतेच (ந கர்ம ஸ்ருஷ்டிகாலத்தில் கர்மமில்லை. அவிபாகாத் (அக்காலத்தில்) பிருஹ்மத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லை. என சுருதி சொல்லுகிறது. )இதனால் ஜீவனில்லை என்று தேறுகிறது), இதிசேத் என்று சொல்லப் படுமாகினால் ந அது சரியில்லை. (ஏனெனில்) ஜீவன் அநாதித்வாத் - அநாதியாகையாலே; உபபத்யதே ச - அநாதி என்றாலும் பிருஹ்மம் ஒன்றே (ஏகமேவ) இருந்தது (சுருதி) என்பது பொருந்தும். எங்கனமெனில் உபலப்யதேச-(ஜீவன் அநாதி என்று சுருதியிலும் ஓதப்படுவதால்). (இங்கு ஜீவன் மாத்திரமில்லை அநாதி-அவனுடன் சம்பந்தப்பட்ட கர்மமும் அநாதி; கர்மம் அழிந்து போகிறது என்றால் ஸ்ருஷ்டியில் ஏற்றம் தாழ்வு ஏன் யேற்படுகிறது? மேலும் ஸ்ருஷ்டி காலத்தில் ஜீவன் படைக்கப்படும்போது அவனுக்கு இல்லாத கர்மங்களின் பலன் யேற்படுகிறது - என்கிற தோஷம் தவிர்க்கமுடியாது. சுருதி ஜீவனை ந ஜாயதே ம்ரியதே வா விபஸ்சித் - என்று நித்யம் எனச் சொல்கிறது.) இதனால் க்ஷேத்ரக்ஞர்களான ஜீவர்களுக்கு அவரவர்களின் கர்மமும் அநாதியாகும் - என்று சொல்லப்படுகிறது. பிரும்மத்திற்கு ஸ்வரூப பரிணாமம் ஜகத் விஷயத்தில் யேற்படுவதானால் (மேல் சொல்லப்பட்ட சூத்ரம் 2-1-35 என்பதன் விஷயமாக), போக்த்ருத்வ (அனுபவிப்பவன்) போக்ய (வஸ்து) என்கிற பிரிவு (வித்யாஸம்) யாவரிடமும் ஒருக்காலும் ஏற்படுவதற்க்கில்லை. ம்ருத் சுவர்ணாதி பரிணாமரூப - கடம் - தட்டு - (அதே மாதிரி ஸ்வர்ணத்தின் மாறுதல்களான வளை - நெக்லஸ் - முகுடம் இத்யாதி - விபாகங்களைப்போல (காரணப் பொருள் - காரியப் பொருள்கள்) என்கிற வித்யாஸங்களைப் போல) போக்த்ரு போக்ய விபாகம் (பிரிவு) ஏற்படக்கூடும். ஸ்வரூபத்தில் பிருஹ்மத்திற்கு மாறுதல் இருக்குமாயின்

பிருஹ்மத்திற்கே இரண்டு நிலைகள்-போக்த்ருத்வம், போக்ய த்வம் (விஷயமாக விருப்பது) யேற்படக்கூடும். இம்மாதிரி யாக அந்த பரபக்ஷங்களிலே (சங்கர - யாதவபிரகாச - பாஸ்கர பக்ஷங்களிலே) - தோஷம் ஏற்படுவதாலே அஸமஞ் ஜஸமாகும்.

## ஆரம்பணாதிகரணம் 2-1-6

**तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः** (2-1-15)

*ததநந்யத்வமாரம்பண சப்தாதிப்ய:* (2-1-15)

ததநந்யத்வம்-காரணமான பிருஹ்மத்தைக் காட்டிலும் (காரியமாகிற உலகம்) வேறு படாமலே உள்ளது. (அதாவது இரண்டும் ஒன்று) - ஆரம்பண சப்தாதிப்ய: - வாசாரம் பணம் முதலான வேதவாக்யங்களிலிருந்து - இது தேறு கிறது. (இரண்டும் காரிய காரண ஐக்யம் - ஒன்று.)

(**உத்தமூர் ஸ்வாமி** - அஸத் காரியவாதிகளின் சங்கை இதில் பரிஹரிக்கப்படுகிறது - எப்படி யெனில் - **अनन्यत्व** என்பது ஸ்தாபிப்பதாலே. ஜகத் காரணத்வம் நிமித்தம் என்றும் உபாதானம் என்றும் இருவிதம் - ஸர்வ காரணமும் ஸர்வ காரியமும் ஒன்றே என்பதாகும். தார்க்கிகன் நிமித்தம் மட்டும் பிருஹ்மத்திற்குச் சொல்லி - உபாதான மில்லை என்கிறன். காரியம் வேறனது - காரண த்ரவியத் தைவிட; காரியம் அநேக அவயவஸம்யோகத்தினல் அடையப்படுகிறது. பிருஹ்மத்தின் ஒரு அவயவத்தி லிருந்து உற்பத்தி யேற்படுமானல் - திரவியம் ஒன்றே உபாதான காரணமாக ஆகாது - எல்லா அவயவங்களும் ப்ரதி யேற்படவேண்டியது - அப்படி ஒரே திரவ்யத்திலி ருந்து இன்னெரு திரவியம் உற்பத்தியாகிறது என்று சொன்னலும் கூட, முதலில் ஒன்றுகவேயிருந்த பிருஹ்மம் அது காரியமாக ஆகிவிட்டால் - பரம்பரையாக தொடர்ச்சி யாக யேற்படும் காரியங்களுக்கு பிருஹ்மம் காரணமாக மாட்டாது.

அதாவது कार्यकारणयोरनन्यत्वे (வேறுபடாமலேயுள்ளதால் तु, तदभिन्नाभिन्नस्य तदभिन्नत्वम् इति न्यायात्, सर्वकारणत्वं संभाव्यत तदेव-नेति । சித்தாந்தியாகிற நாம் சொல்வது - ஏக விக்ஞானத்திஞல் ஸர்வ விக்ஞானம் யேற்படுகிறது - (பிரதிக்ஞை பூர்த்தியாகிறது) - இதெப்படி நிர்வஹிப்பது யென்ருல் - உபாதான உபாதேய பாவத்திஞல் ஐக்யம் - இது தவறு என்று பூர்வபக்ஷி சொல்லி - भिन्नयोरेवोपादानोपादेयभावदर्शनात् । என்கிருன். நாம் சொல்லி நிர்வஹிப்பது - காரிய காரணமும் வேறு படாமலிருப்பது - இதஞல் பிருஹ்மம் ஜகத் காரணம் என்பது ஸ்தாபிதம். இரண்டாவது காரியம் என்பது அவஸ்தாபேதமே ஒழிய வேறில்லை - பிருஹ்மத்திற்குக் காரிய நிலையாகும். - அதஞல் காரிய காரணங்கள் வேறு படாதவை. சரீரத்தின் மாறுதல்கள் பிரும்மத்திற்கு ஒட்டாது. ஆகவே இரண்டு அவஸ்தைகளிலும் பிருஹ்மத்திற்கு பரிணமம் சூக்ஷ்ம ஸ்தூல பரிணமங்கள் சரீரத்வாரா யேற்படுவதால் - ஆத்ம ஸ்வரூபத்தில் விகாரங்கள் இல்லை. (பிருஹ்மம நிரவயவம்) ஏற்கனவே விலக்ஷண்த்வாதி கரணத்திலுள்ள ந து த்ருஷ்டாந்த்பாவாத் (2-1-9) என்னும் சூத்ரத்தைப் பார்க்கவும்).

**ஸ்ரீபாஷ்யம்:**—சாரி. மீ. 2-1-7ல் असदिति चेन्न प्रतिषेधमात्रत्वात् கார்யம் காரணத்தில் இல்லாமற்போகிறதே என்ருல் ந - இல்லாமற் போகாது பிரதிஷேத மாத்ரத்வாத் (கார்ய காரணம் ஒரேமாதிரியாக–ஸலக்ஷணமாகயிருக்க வேண்டும் என்கிற நியமத்தை தள்ளுகிருேமே ஒழிய-ஆஞல் காரிய காரணங்கள் ஒரே வஸ்து என்பதைத் தள்ளவில்லை. இங்கே சொல்லப்படுவது ஜகத் விசிஷ்ட பிருஹ்மத்தையே காரணமாகவும், காரியமாகவும் ஒப்புக்கொள்வதாலே, இங்கே காரிய காரணங்களுக்கு இடையையே ஸாலாக்ஷண்யமுள்ளதே யொழிய - வைலக்ஷண்யமில்லை என்பதாகும். ஆகையால் பிருஹ்மம் காரண பூதமாகவும் - அதுவே காரிய பூதமாகிற ஜகத்தாகவும் இருக்கிறது - அதஞல் இரண்டுக்கும் அநன்யத்வம் (ஐக்யம்) ஓதப்படுகிறது - பிருஹ்மமே ஜகத் காரணமாகவும்-ஜகத் அதன் காரியமாகவும் ஆகிறது

இங்கே - இந்த அதிகரணத்தில் இந்த ஐக்யம் (அநன்யத்வம் முதலில் ஆட்சேபிக்கப்பட்டு - பிறகு அது ஸ்தாபிக்கப்படு கிறது.

(இங்கே உபாதான உபாதேயங்களில் அன்யத்வம் அநன்யத்வம் இருக்கிறதா என்பது விசாரம், அன்யத்வம் உண்டு என்பது தார்க்கிகனின் பூர்வபக்ஷம் நாம் ஸத் காரியவாதி இதில் சாங்கியனும் வேதாந்தியைப்போல விருக்கிறுன். சாங்கியனின் பக்ஷம் -

कारणवत् कार्यमपि सर्वदाऽस्त्येव; किंतु कदाचित् तस्याभिव्यक्तिभवति; तदाव्यवह्रियते; तावता नासत्वं, नापिकारणात् कार्यस्यान्यत्वमित्याह । வேதாந்தி (நாம்) சொல்வது - एकमेव द्रव्यं पूर्वकाले कारणं पश्चात् कार्यं भवति । पूर्वस्थितावस्थापेक्षयाऽवस्थान्तरं तत्रैव द्रव्ये अवस्थान्तरं तत्रैव द्रव्ये आरभ्यते, तदा तत् कार्य मित्युच्यते । न तु अवस्थाविशेषाणामपि, तस्यानभिव्यक्ततया सत्वं प्राक् । अथापि, द्रव्यस्य सत्त्वात् सत्कार्यवाद इति प्राहा । अयमेवसिद्धान्तो भवति— (உத்தமூர்ஸ்வாமி)

ஸ்ருதப்ரகாசிகையில் किं ब्रह्मकार्यत्वे जगतः श्रुतिसिद्धं ब्रह्मणोऽनन्यत्वं संभवति–नेति, । किं वाचारम्भण मित्यादि वाक्यानि कारणस्यैवावस्थान्तरा पत्तयो कार्यत्वं बोधयितुं प्रभवन्ति, नेति । அதாவது किं बुद्धिशब्दान्तरा दयोऽवस्थाभेदनिबन्धनाः; उतद्रव्यभेदनिबन्धनाः इति...... कार्यस्य कारणादनन्यत्वेन जगतो ब्रह्मानन्यत्वसिद्धेस्तदनन्यतया व्यपदिश्यमानस्य ब्रह्मणो जगत्कारणत्वं संभवतीति सिध्यति ।

(இதன் மொத்த அர்த்தம் யாதெனில் - காரண காரியங்களுக்கு வைலக்ஷண்யம் (வேற்றுமை) இருக்கலாம்

என்றால் ஸத்காரியவாதிகளாகிற நமக்கு ஜகத் பிருஹ்ம விஷயத்தில் பிருஹ்மத்தில் ஜகத் ஏற்கனவே இல்லை என ஆகிவிடும்? இதனால் கஷ்டம் - இல்லாததத்திலிருந்து ஒரு வஸ்து எப்படித் தோன்றும்? தோன்றும் பொருள் தன்னிடமிருந்தும் தோன்றுவதில்லை. சட்டி சட்டியிலிருந்து தோன்றுவதில்லை. இப்படிச் சொல்வதால் **सर्वं खल्विदं ब्रह्म** இதெல்லாம் (ஜகத்) பிருஹ்மம்தான் என்கிற வ்யவஹாரம் அர்த்தமில்லாமல் போகும். முந்தின அதிகரணத்தில் ஸாலக்ஷண்யத்வம் என்கிற நியமம் இல்லை காரிய காரணங்களுக்கு அதாவது காரியத்தைக் கண்டதும் - இது அதன் காரியம் என்கிற உணர்வு யேற்படுவதற்க்கான அசாதாரன அம்சம் தொடர்ந்து காணப்படவேண்டும் (அனுவிருத்தி அவசியம்) என்பது இல்லை - அனுவிருத்தி அவசியமில்லை ஆனால் காரியம் வேறு திரவியம் - காரணம் வேறு திரவியம் என்று கூறப்பெறவில்லை. தேள் - புழு - தேனீ இந்த உதாரணங்களில் திரவிய வேறுபாடில்லை - அவை ஸஜாதீயமில்லையே என்பது அறியத்தக்கது.

ஆனால் அத்வைதியின் பக்ஷம் - காரிய காரணங்களுக்குப் பேதம் - அபேதம் இரண்டும் உண்மையில் உள்ளவையா - அல்லது வ்யவஹாரிகமா? பூர்வபக்ஷம் - உண்மையில் உள்ளவை (தாத்துவிகங்களே) - என்பது. வாசாரம்பணம் விகாரோ நாம தேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம் - என்று சுருதியினாலும் யுக்தியினாலும் பாதிக்கப்படும். இந்த பேதாபேதம் வியவஹாரகங்களே (பிருஹ்ம ஞானம் யேற்படும் வரை) ஸத்யம் இதனால் காரண காரியங்களுக்கு பேதமின்மை யேற்படுவதால் - பிருஹ்மம் அத்வைதம் - அபேதம் உண்மையில் யேற்பட்டதாகிறது காரியம் தோற்றமேயாகும் - அநிர்வசனீயம். என்பது அவர்கள் சித்தாந்தம்.

**ஸ்ரீபாஷ்யம்:—** சூத்ரத்தில் சொல்லப்பட்ட விஷயம் தொடர்ந்து சொல்லப்படுகிறது - (காரண காரிய ஐக்யம் முதலில் மறுக்கப்பட்டு - மீண்டும் ஸ்தாபிக்கப்படுகிறது - என்கிற) விஷயம் - இங்கே முதலில் வைசேஷிகர்கள் (காணா

தர்கள் சொல்கிறார்கள் - தார்க்கிகன் தன் பக்ஷத்தைச் சொல்வது போல சாங்கியனின் பக்ஷத்தை முதலில் கண்டித்து - பிறகு அத்வைதியின் பக்ஷத்தையும் கண்டிக்கிறான்.)

1. வைசேஷிகன் (காணாதன்) சொல்கிறான் - न कारणात् कार्यस्य अनन्यत्वं संभवति - காரியமும் காரணமும் ஒன்றாக விருக்கமுடியாது. ஏனெனில் காரியம் காரணத்திலிருந்து வேறான அவஸ்தையைக் குறிக்கிறது. (இங்கே விலக்ஷண (வேறுபட்டைக் காண்பிக்கும்) புத்தி போத்யத்வாத் - அறியப்படுவதாலே, காரிய காரண அவஸ்தைகளில் (மாறுபாட்டுகளில்) உதாரணமாக காரணமான நூல் அதன் காரியமாகிற துணி - ம்ருத் (களிமண் மொந்தை) - அதன் காரியமாகிற பானை, சட்டி இத்யாதி மாறுபாடுகள்; இவை புத்தியில் ஒரே அதே உருவத்தில் காணப்படவில்லை, (புத்தி பேதம்).

2. மேலும் துணி-நூல்-அதுபோல களிமண் - பானை-சட்டி இப்படி சப்த பேதங்களும் இருக்கின்றன - அதே மாதிரி நூல்கள் துணியாவதில்லை - துணிகள் நூல்கள் எனக் கூப்பிடப்படவில்லை. - பானைகள்; இத்யாதி வித்யாஸப்பட்ட சப்தங்கள் காரிய காரணங்களுக்கு இருக்கின்றன. (நாமபேதம்)

3. காரண காரிய பேதங்களும் காணப்படுகின்றன - அவைகளின் காரியங்களிலே. உதாரணமாக தண்ணீர் களிமண் மொந்தையினால் கொண்டுவரப்படுவதில்லை அதற்கு பானை வேண்டும்; அது போல ஒரு சுவர் ஒரு பானையினால் கட்டப்படவில்லை களிமண்வேண்டும்-காரியபேதங்கள் ஒரே காரண வஸ்துவில் யேற்படுகின்றன. (காரியபேதம்)

4. காலபேதமும் காரிய காரணங்களுக்கிடையே தோன்றுகிறது - அது பூர்வ காலம் காரணம் - பிற்காலம் காரியமாகிறது. (காலபேதம்)

5. ஆகார (வடிவ) பேதங்கள் - மண் பிண்டா காரம் காரணம் - அதன் காரியம் பானை தலை வட்டமாகியும் அடி அகன்றும் இருப்பது. (ஆகாரபேதம்)

6. ஸத்யாமேவ ம்ருத் கடோநஷ்ட இதி-வ்யவஹாரத் திலே, பானை அழிந்து உடைந்து போகிறது-ஆனால் (அதன் உபாதான காரணமாகவிருக்கும்) களிமண் மாத்திரம் அழி கிறதில்லை. ஸத்பாவத்துடன் இருக்கிறது-7) எண்ணிக்கை. (ஸங்க்யா) பேதமும் காணப்படுகிறது. நூற்கள் பல உள. காரியமாகிற துணி ஒன்ருகவிருக்கிறது.

மேலும் காரகவ்யாபாரம் (காரியத்தை ஆக்குபவன்) வீணுகிவிடும்; (எப்போது) காரியமே காரணமாகிவிட்டால் காரகனுல் என்ன ஸாதிக்கவிருக்கிறது? நீ சொல்லலாம் காரியம் பூர்வமாகவே காரணத்திலேயே யிருக்கிறது என் ருல் காரகனுடைய வ்யவஹாரம் (அதை செயலாக்குவதற்கு) தேவைப்படும் - சக்தி காரியமான வஸ்து உபயோகமுள்ள தான வஸ்துவாக பரிணமிப்பதற்கு-உதாரணமாக ஒருபானை தண்ணீர்கொண்டு வருவதற்கு உபயோகம் - இதனுல் காரக விருத்தி தொடர்ந்து காரியத்தில் இருக்கவேண்டியது - ஆகவே எல்லாக் காரியவஸ்துக்களும் எப்போதும் இருக்க வேண்டிய படியாலே நித்ய அநித்யவிபாகம் அவைகளுக்கு இல்லாமல் போகிறது எனக் கூறலாம்.

(இங்கு எட்டுக் காரணங்கள் தார்க்கிகனுல் (காணு தன்) சொல்லப்படுகின்றன - ஏன் காரிய காரணங்களுக்கு ஐக்யம் (ஒற்றுமை) இருக்கக்கூடாது என்பதற்கு - 1. முத லில் எண்ணங்கள். 2. சப்தங்கள் காரண காரிய வஸ்துக் களிடையே பேதம். 3. ஆகாரம் இரண்டுக்கும்வேறு 4. எண் ணிக்கை 5. வேவ்வேறு உபயோகம் காரண காரிய வஸ்துக் களுக்குள் 6. வெவ்வேறு கால பேதங்கள் 7. காரியம் கார ணத்தின் செயலால் யேற்படுகிறது. 8. வஸ்துக்களின் அநித் யத்வம் - இவை காரண காரியங்கள் வேறு என்று காட்டு கின்றன. 9. மாறுதலிலும் - அளவிலும் யேற்பட்டுள்ள

வித்யாஸம் 10. காரணம் இருக்கும் போது - காரியம் இருப்பதில்லை - அதேபடி - காரியம் இருக்கும் போது காரண மும் இருப்பதில்லை.)

மேலும் (காணுதன் சொல்கிறன்) - ஒரு காரியம் பூர்வ மேவ (முன்னுடியே) காரணத்தில் அடங்கியுள்ளது - அபி வ்யக்தம் (காணப்படாமலிருக்கிறது); காரக வியாபாரத் தினுல் அது பிரகடனப்படுத்தப்படுகிறது - ஆகையால் (நாம் சொல்வோம்) காரகனுக்கு ஒரு உபயோகம் இருக் கிறது - அதனுல் நித்யத்வம் அநித்யத்வம் என்கிற விபாகம் (பிரிவு) வஸ்துக்களுக்கு யேற்படுகிறது. இவ்விதம் சொல் வது சரியல்ல. - ஏனெனில் ஒரு அபிவ்யக்த வஸ்துவுக்கு இன்னெரு அபிவ்யக்த வஸ்துவின் உதவி தேவையாகும் என்ருல் அன்யோன்ய ஆஸ்ரய தோஷம் ஸம்பவிக்கும். சரி, தேவையில்லை என்று சொன்னுல், காரியம் அழியாமலே தொடர்ந்து அறிவு முன்பு (புத்தி முன்பு) நீடித்திருக்க வேணும். மேலும் - அபிவ்யக்திக்கு ஏதாவது ஒரு காரணம் யேற்பட வேண்டியது - (காணப்படாமல், புத்திக்கு விஷய மாகாதபடியிருத்தலுக்கு) அதுவிருக்குமானுல் - காரியம் காரணத்தில் அடங்கியில்லை - அஸத் காரிய வாதம் பிரஸங்கம் யேற்படும்.

(இங்கே காணுதர்கள் வேதாந்தியைப் போல அஸத் காரணத்தை எதிர்க்கிருர்கள் - மூன்று விதமாக எதிர்க்கிருர் கள் = மூன்றும் தர்க்க பலமில்லாதவை என்று காட்டப் படுகின்றன.)

மேலும் நீ சொல்வாயாகில் - காரகனின் உதவியினுல் அந்தர்கதமான வஸ்து வெளிப்படுகிறது - என்ருல், அதி லிருந்து நாம் அறியக்கூடும், அதே காரகனுல் எப்படி பானை உருவமாக வெளி வந்ததோ, அதேபடி சந்யாஸியின் கமண் டலமும் அதுபோல பல வஸ்துக்களும் களிமண்ணிலிருந்து வெளிவரலாம். மற்ற வஸ்துக்களை வெளிப்படுத்த சக்தி தீபம் முதலியவைகளுக்கும்-வ்யஞ்சபாவம்-இருக்குமானுலும்-

அந்த தீபம் குறிப்பிட்ட வஸ்துக்களையே வெளிப்படுத்தும்-சிலவற்றை வெளிப்படுத்த (பிரகாசப்படுத்த மாட்டாதவை என்று) அவைகளுக்கு தடை, விசேஷ நியமம் ஒன்றுமில்லை. உதாரணமாக ஒரு தீபம் பானையைத் தெரியும்படி உபயோகப்படும் போது காட்டுகிறது; அது சன்யாஸியின் கமண்டலத்தை பிரகடனப்படுத்தாது - ஆகையால் அஸத்திலிருந்து (இல்லாததிலிருந்து) காரியம் உற்பத்தியாகிறது என்கிற காரணத்திலேலே (ஹேதுவினாலே) காரகனுடைய வ்யாபாரம் (செய்கை) ஒரு நோக்கத்தைக் கொண்டதாக விருக்கிறது. அதனால் இருக்கிறதிலிருந்து தான் (ஸத்திலிருந்துதான்) காரியம் உண்டாகிறது என்பது சரியில்லை; யேற்படாது.

(இங்கு சொல்லப்படுவது - எள்ளிலிருந்து எண்ணை உற்பத்தியாகிறது - எள் தைலத்துக்காக உபயோகப்படுவதில் - எள் ரூப உபாதானமாகிறது - तिल एव तत्सत्त्वादेव हि । तथैव सर्वत्रेति भाव: - நியதகாரண உபாதானம் எனச் சொல்லலாம்).

இவ்விதமாக நியத காரண உபாதானம் எனச் சொல்லப்படும் விஷயம் - அதாவது காரியம் காரணத்திலே பூர்வமாக அந்தர்கதம் - (உள் அடங்கியிருக்கிறது) - இந்த அபிப்ராயமும் தள்ளப்படவேண்டியது. ஏனெனில் இவ்விதம் காரியம் இருக்கிறது என்பது - ஸத் ஏவ . என்பது சொல்ல முடியாது. ஏனெனில் காரண சக்தி வஸ்துவில் பூர்வமாக அடங்கியிருக்கிறது, காரணசக்தி நியமாதேவ - காரியத்தின் உற்பத்திக்கு காரணமாகிறது.

(வேதாந்தி ஸத்கியாதி வாதி. ஆனால் காணுதன் சொல்வது காரியம் புதிதாகவே விருக்குமானால், ஏன் குறிப்பிட்ட காரணங்கள் குறிப்பிட்ட வஸ்துக்களை உண்டாக்கச் சக்தி பெற்றது எதற்க்காக? எல்லா வஸ்துக்களையும் உண்டாக்கச் சக்தி பெற்றவையாக விருக்கலாமே. இதற்குச் சமாதானம் - ஒரு குறிப்பிட்ட காரணத்திற்கு தனிப்பட்ட சாமர்த்தியம் (யோக்யதை) உள்ளது - அதனுடன் சம்பந்தப்

பட்ட வஸ்துவை உண்டாக்குவதற்கு) உதாரணமாக குய வன் களி மண்ணிலிருந்து பானையை உண்டாக்குகிறன். அவனுக்குத் தெரியும் களி மண்ணிற்கு அந்த சாமர்த்தியம் உண்டு - என்று; இங்கே பானை களிமண்ணில் உள் அடங்கி யிருக்கிறது என்று என்பதால் அல்ல. ஆகவே காரச னுடைய சாமர்த்தியத்தைப் பொறுத்தது - வஸ்துவின் சாமர்த்தியமல்ல.)

அஸத் காரியவாதி - (இல்லாததிலிருந்து காரிய வஸ்து உண்டாவது என்று சொல்பவன்) விஷயத்திலும் கூட கார கனுடைய சாமர்த்தியம் பிரயோசனப்படுவதில்லை என்று ஆட்சேபிக்கப்படுமாகுல், சரி அந்த காரசனுடைய சாமர்த்தி யம் இந்தக் காரியத்தில் இல்லாமல் வேறு வஸ்துக்களில் இருக்கக்கூடும் - ஏனெனில் காரியம் காரணத்தில் பூர்வமாக அந்தர்கதமாக (உள் அடங்கி)யில்லாத படியாலே, அந்த விஷயத்திலே - மாறுபட்ட வஸ்து உற்பத்தியிலே - (கார ணத்தில் காரியம் இல்லாதபடி - நிச்சயிக்கப்பட முடியாத படியிருக்குமோ - அந்த விஷயத்திலே,). இன்னொரு உதாரணம் காரகனுடைய சாமர்த்தியம் நூலை உண் டாக்க சக்தி பெற்றது - அதே சக்தி பானையையும் உண் டாக்க சக்தியாக உபயோகப்படலாம். (தந்துகத காரகவ்யா பாரத்திஞல், கடோத்பத்திரபி பிரஸஜ்யதே - உண்டாக்கும்) இவ்விதம் சொல்வதும் சரியில்லை-எந்த காரிய ஊற்பத்திக்கு எந்த காரணத்திற்கு சக்தி (யோக்யதை) உள்ளதோ - அதே சக்தியின் உதவியிஞல் காரகன் (காரியத்தை உண்டு பண்ணுபவன்) தனது சாமர்த்தியத்திஞல் - அந்த காரி யத்தை செய்து முடிக்கிறன் - तत्कार्योत्पत्तिसिद्धेः (இதிலிருந்து தெரியவருவது - காரியம் உள் அடங்கியிருக்க வேண்டியது (காரணத்துக்குள்); மேலும் காரகனுக்கு சாமர்த்தியமும் இருக்கவேண்டும்).

இந்த விஷயத்தில் சிலர் (இங்கே அத்வைதியின் பக்ஷத்தை தார்க்கிகன் கண்டித்து தன்கருத்தை ஸ்தாபிக்கப் பார்க்கிறன்-ஆகவே அத்வைதபக்ஷம் சொல்லப்படுகிறது.)-

(அத்வைதிகள்) சொல்கிருர்கள் - காரியம் காரணத்தைவிட வேறல்ல - இரண்டும் ஒன்றே - ஏனெனில் பரமார்த்தமாக (உண்மையாக) காரியம் என்று ஒன்றுமேயில்லை (பிருஹ்மத்தைத்தவிர); காரணத்திற்கு வேருக காரியம் என்கிற பெயரில் வஸ்து என்பது ஒன்றும் இல்லை. அவித்யையினுல் கட்டுப்படுத்தப்பட்ட ஸகல காரியங்களும் வ்யவஹாரத்திற்கே உபயோகப்படுகின்றன. உதாரணமாக காரியங்களாகிற பானைகள் - தட்டுக்கள் வ்யவஹாரயோக்யதையை அடைவதற்கு உபயோகப்படுவதால், யேற்படுகிறபடியால் காரணப்பொருளான களிமண்தான் ஸத்யம், அதன் காரியங்களாகிற பானைதட்டுக்கள் அபரமார்த்தம் மித்யையாகும். (அழிய வேண்டியவை); ஆகவே காரணபூத திரவியமே ஸத்யம்; அவ்விதமே நிர்விசேஷ சின்மாத்திர பிருஹ்மமே காரணமாவதால் பிருஹ்மத்தைத்தவிர அன்னிய வஸ்துக்கள் - அஹங்காரம் முதலியவை வ்யவஹாரத்தில் உபயோகப்படுபவை இவை எல்லாமாகிற இந்த ஸம்பூர்ண திருஸ்ய பிரபஞ்சம் மித்யையாகும் (அவர்கள் சொல்வது-காரணபூதம் ஸன்மாத்திரம் பிருஹ்மைவஸத்யம் ஆகவே காரணத்தைவிட வேருன — வ்யதிரிக்த காரியம் என்பது இல்லை - காரணத்தைவிட்டு தனியாகவில்லை. ஆகவே கார்யமே காரணமாகும். नास्तीति कारणादनन्यत् कार्यम् ।

இவ்விதம் சொல்லக் கூடாது மேல்காட்டிய களிமண் பானை உதாரணத்தில் அஸத்யத்வம் (மித்யாத்வம்) ஸ்தாபிக்கப்படவில்லை - எதுமாதிரி - உதாரணமாக முத்துச் சிப்பியில் வெள்ளி எவ்விதம் அஸத்யமாகக் காணப்படுகிறதோ அந்த திருஷ்டாந்தத்தைப்போல. அங்கேகூட, களிமண் (காரணவஸ்துவே) மாத்திரமே ஸத்யமாக வ்யவஸ்தாபிதமாகிறது - அந்தக் களிமண்ணுக்கு வேருன எதுவும் யுக்தியினுல் பாதிக்கப்பட்டிருக்கிறது.

இங்கே யுக்தி (தர்க்கமாகிறயுக்தி) யாது? நாம் ஏற்கனவே சொல்லியாய்விட்டது ம்ருத் (களிமண்) திரவிய மாத்திரம் தொடர்ந்து (காரியத்திலும்) காணப்பட்டு-அறியப்

படுவதாலே அதற்கு விரோதமாக எதுவாகிலும் தள்ளப்பட வேண்டியதாகும் மித்யையென்று. ரஜ்ஜுவில் ஸர்ப்பம் தோன்றுகிறது - அதில் அந்த காட்சியில் தொடர்ந்து விருக்கும் அதிஷ்டானமே (ரஜ்ஜுவே) ஸத்யம் (ஆரோபித மான ஸர்ப்பம் மித்யை);அதற்கு வேருென்ருகத் தோன்றும் (ஸர்ப்பமாகிற) வஸ்து (இங்கே ஸர்ப்பம் - அதுபோல மற்ற உதாரணங்களாகிற ஜலம் வார்த்தல், (அம்புதாரை) பூமியின் பிளவு இத்யாதி) மித்யையே ஆகும். முதலில் காணப்பட்ட காட்சிக்கு தோற்றமாக விருப்பது எதுவோ அது மித்யையாகும். அவ்விதமே அனுவர்த்திக்கிற அதிஷ் டானமே ம்ருத் (களிமண்ணுகிற) ஆகிற காரணவஸ்துவே ஸத்யம். (ம்ருத் திரவ்யமேவ ஸத்யம்). அதிலிருந்து வேறு பட்டகடம்-தட்டுக்கள் இவை அஸத்யபூதா:-ஏனெனில் ஸத் தாகிற ஆத்மாவுக்கு விநாசம் ஒருக்காலும் யேற்படாது- அஸத்என்று சொல்லப்படும் வஸ்து ஒருக்காலும் இல்லாதது; உதாரணமாக முயற்கொம்பு (ஆகாயத்தாமரை) போன்றவை அறிவுக்கு விஷயமாகாது (வஸ்துவே இல்லையாதலால்); இங்கே ஒரு காரியம் உபலப்திக்கு (அறிவுக்கு விஷயமாகுதல்) விநாசமாகும் போது அது இல்லாமல் இருக்கும்போது - ஸத்தாக விருக்கிறதா - அல்லது அஸத்தா என்று சொல்ல முடியாதபடி அநிர்வசனீயம் - என்று ஆகிறது (காரியம் ஆகிறது) (பாதிதமாவதற்கு உபாதியில்லை-ஸதஸத்பாவம். சுக்தி ரஜத உதாரணத்தில் பாதிதம் யேற்படுவதால் - உபா தியும் பாதிக்கப்படுவதால் - அதேமாதிரி (உபாதியிராத) ஸத ஸத் அநிர்வசனீயத்வம் ஸித்தம். நல்ல தூக்கத்தில் (சுஷுப்தியில்) பாதிதமில்லாதபடி - உபாதிக்கு பிரளயம் யேற்படுகிறதைக் கொண்டே ஸித்தம் என்கிறபாவம்).

(**விளக்கம்:**—இங்கு என்ன சொல்லப்படுகிறதென்ருல் பிருஹ்மமே ஸத்யம் - காரியமாகிற பிரபஞ்சம் தோற்றமே மித்யையாகும். இதற்குக் காரணம் பிரபஞ்சம் ஒரு தத்வ மாகவில்லை. பிருஹ்மத்தைப் போலவொ - அஸத்தாகிற முயற்கொம்பு (ஆகாய தாமரை) போலவும் இல்லை. களி மண் திருஷ்டாந்தத்தில் காரியங்களாகிற பாத்ரை - தட்டு

அபரமார்த்தம் (மித்யை), ரஜ்ஜீவில் ஸர்ப்பம் தோன்றுவது போல (முத்துச்சிப்பியில் வெள்ளி தோன்றுவது போல)' இங்கே மித்யாத்வம் என்பதற்கு அறிவுக்கு (உபலப்திக்கு) தொடர்ந்து விருப்பதால் விஷயமாவதில்லை என்கிற அர்த்த மில்லை. பின்னுல் சரியான ஞானத்திஞல் கற்பிக்கப்பட்ட வஸ்து பாதிதமாகக்கூடும் என அர்த்தம். அத்வைதிகளில் ஒரு பக்ஷத்தினராகவிருக்கும் விவரண வாதிகள் (பத்ம பாதரை பின்பற்றுபவர்கள் இவ்விதம் மித்யாத்வத்திற்குப் பொருள் கூறுகின்றனர்) - அநிர்வசனீயத்வம் - முத்துச்சிப்பி யில் வெள்ளியைத் தேடுவது வீணுகும் பாதிதமாகிற படியால் (சரியான ஞானத்திஞல்); அநிர்வசனீயத்வம் என்பதற்கு பார்ப்பதற்கு விஷயமாதலும் அந்தக்காட்சியிஞல் யேற்பட்ட அறிவு சரியான ஞானத்திஞல் பாதிதமாகிறபடியாலே.)

**ஸ்ரீபாஷ்யம்:—**

மேலும் கேள்விகேட்கப்படலாம் - காரணதிரவியம் அதன் காரியங்களாகிற பானை- தட்டுக்களை பானைகளை உரு வாக்வதற்கு முன்பு, அதன் காரண நிலையில் இருக்கும்போது அது அந்த காரியங்களை உண்டு பண்ணுகிறதா - அல்லது அவ்விதம் காரணநிலையில் உற்பத்தி செய்யக் கூடுமாஞல் அது ஒரு அவஸ்தையை (மாறுதலை) முன்னமே அடைந் திருக்கும். நிச்சயமாக - அந்த காரணவஸ்து அவ்விதம் அவஸ்தையை உற்பத்தி செய்வதில்லை - இல்லாதபோஞல் அதிலிருந்து தெரியக்கூடும் அது எப்போதும் காரியங்களை உண்டுபண்ணிய வண்ணமாகவிருக்கும். ஆகவே அந்தக் காரணவஸ்து ஒரு அவஸ்தையையடைந்து காரியங்களை உண்டுபண்ணுவதில்லை. இம்மாதிரி அவஸ்தையை கற்பனை செய்வது என்பதும், இதேமாதிரி இன்ஞெரு முந்தி யேற் பட்டதான கற்பிதமான அவஸ்தையை ஆதாரமாகக் கொண்டது - அதஞல் முந்தி கற்பிக்கப்பட்ட அவஸ்தை அதற்கு முந்தி இருக்கும் கற்பிக்கப்பட்ட அவஸ்தையை நம்பியிருக்கும் என்று சொல்வது - இவ்விதமாக அநவஸ்தா தோஷம் யேற்படும்,

மேலும் சொல்லப்படலாம் - அவிகிருத நிலையில் (அதா வது காரணவஸ்து காரண நிலையில் காரியமாக மாறுபடாத தசையில்) அந்தவஸ்து தேசகால நிமித்த காரணத்துடன் விசேஷமாகச் சம்பந்தம் கொண்டு, காரியத்தை உற்பத்தி செய்கிறது - என்றால் அதுவும் சரியில்லை ஏனெனில் தேசாதிகால நிமித்த விசேஷ சம்பந்தம் பெற்றிலும் கூட, மேலே சொன்ன காரணங்களாலே, அந்த சம்பந்தம் ஏற்படு வதில்லை, அதற்கு அவிகிருத (காரியமாக ஆகாத) காரண நிலையிலோ, அல்லது ஒரு குறிப்பிட்ட அவஸ்தையை அடை யும் போதோ - யேற்படுவதில்லை.

(இங்கு ஆட்சேபம் - அனுமானமாகிற பானைகள், தட்டு கள் முதலியவை அபரமார்த்தம் - ஏனெனில் அவைபிரத் யக்ஷக் காட்சியில் பாதிதமாவதில்லை (காரண நிலையில்). அந்த ஆட்சேபத்திற்கு பதில் உரைக்கப்படுகிறது. பாதிதம் அபரமார்த்தத்துடன் கூடவிருப்பதில்லை. ஓரிடத்தில் - ஒரு காலத்தில் பார்க்கப்படும் வஸ்து - அது இன்னொருகாலத்தில் அல்லது தேசத்தில் பாதிதமாவதில்லை - அது அபரமார்த்த மாக சேர்ந்துமிருப்பதில்லை. எப்போது பாதிதம்ஏற்படக் கூடும் - அபரமார்த்தம் ஏற்படக்கூடும் என்றால் - எப்போது உபாதிக்கு பாதிதம் யேற்படும்போது. முத்துச் சிப்பியில் வெள்ளி தோன்றி தவறான அறிவு ஏற்படுவதுபோல பானை- தட்டுக்களில் அத்தகைய தோற்றம் அறியப்படுகிறதில்லை, உதாரணமாக புகை இருந்தால் நெருப்பு அனுமானிக்கப் படும்; இங்கேகூட புகை ஈரவிறகிலிருந்து உண்டாகலாம். எல்லா நெருப்புக்களிலும் யேற்படாது. இதற்குப்பதில் காரியம் உண்மையாக வேண்டி அது அனுமானிப்பதற்கு இடம்தரவேண்டும், ஆனால் அது அவ்விதமில்லை அது அதனால் அபரமார்த்தம். இப்படித்தான் அத்வைதிகள் நாம ரூப வியாகரணத்திற்கு சமாதானம் சொல்கிறார்கள் - ஜிக்ஞாஸாதிகரணம் பார்க்கவும்)

இதனால் சொல்லக்கூடாது-காரியங்களாகிற பானைகள் தட்டுக்கள் - நெக்லஸ்-தயிர் இவை காரண வஸ்துக்களாகிற

களிமண் - தங்கம், பால் - இத்யாதிகளிலிருந்து உண்டாகின்றன - இதற்கு பாதிதம் ஒன்றும் யேற்படவில்லை. - தேசத்திலோ-காலத்திலோ ஏற்படுவதில்லை-ஆனால் சிப்பியில் வெள்ளி தோன்றுவதுபோல - இங்கே பிரத்யட்சத்திற்கு பாதிதம் யேற்படுகிறது. ஆகையால் எவர்கள் பிரத்யக்ஷத்தையே நம்பியிருப்பவர்களோ அவர்களுக்கு காரணத்திலிருந்து காரிய உற்பத்தி அவசியம் யேற்படுகிறது. இம்மாதிரிச் சொல்வதும் சரியில்லை ஏனெனில் விகல்பத்தை தாங்கிக்கொள்ளமுடியாதபடியால் (வேறு ஒரு அபிப்ராயம் ஒத்துக்கொள்ளப்படமுடியாது என்பதால்.)

இவ்விதமாக, (தார்க்கிகன்) "கேள்வி ஏன் கேட்கக்கூடாது - தங்கம் மாத்திரமா (அதுபோல மற்ற காரண வஸ்துக்கள்) ஸ்வஸ்திகா (பதக்கம், நெல்லஸ்)வாக ஆகிறது அல்லது ஸ்வஸ்திகா உருவம் தான் காரணமாகிறதா ? - அல்லது தங்கமேநெக்லஸ்ஸுக்கு ஆதாரமாகவிருக்கிறதா?" (இங்கே தங்கம்-கட்டித்தங்கம் எனப்படும் காரண வஸ்து; ருசகம் - ஸ்வஸ்திகா - செயின் (பதக்கம்) காரியவஸ்து நெக்லஸை உண்டாக்குவதற்கு, தங்கம் மாத்திரமா-அல்லது தங்கத்தின் உருவமாகிற நெக்லஸ் காரணமாகிறதா-?வேறு ஒன்றின் உதவியில்லையா?) (ருசகம் என்பது நெக்லஸ்) நிச்சயமாக நாம் சொல்லலாம் - தங்கமும் (மற்ற காரண வஸ்துக்களும்) தாமே அவைகளுக்குக் காரணமாவதில்லை - ஏனெனில் தங்கத்தை விட வேறான (வ்யதிரிக்த) வஸ்து ஸ்வஸ்திகா காரியமாகவில்லை - மேலும் தானே தனக்குக் காரணமாக ஆவதில்லை. (ஸ்வாத்மாநம் பிரதி, ஆத்மந் ஆரம்பகத்வம் அஸம்பவாத்). தங்கத்தைவிட, வேறான ஸ்வஸ்திகா (நெக்லஸ்) தங்கமாகிற காரணத்தில் கண்களால் காணப்படுகிறதேயென்றால், இல்லை-அது ஹேமவியதிரிக்தம் (வேறுபட்டு) இல்லை, முந்திப்பார்த்த தங்கத்தையே ஞாபகப்படுத்துகிறது-அங்கே தங்கத்தைத் தவிர, வேறு ஒன்றும் அதிகமாகக் காணப்படுவதில்லை-புத்திக்கும், சப்தத்திற்கும் தனி விஷயமாக. அவ்விதம் யேற்படும் வித்யாஸத்தினலே-மற்ற வஸ்துக்களிலிருந்தும் பிரித்துக் காட்டும் வித்யாஸங்களாலே

ஆகிறது என்றால், அதற்குப் பதிலாக நாம் சொல்வது சரி யில்லையென்போம். ஏனெனில் சபதங்களாலும் புத்தியினாலும் கற்பிக்கப்பட்ட வித்யாஸங்கள்-உபாதியினால் யேற்பட்டவை பிராந்தி மூலமாக வஸ்துவாகிற ஸத்பாவத்தை அடைவ தால் - அதற்கு உண்மையான ஆதாரம் (அதிஷ்டான) மில்லை. (அதாவது பேதஞானத்தினால் - பேதவாஸனரூப தோஷம் உற்பத்தியாகும் என்று அர்த்தம்). முத்துச் சிப்பி யில் வெள்ளியாகத் தோன்றுதலும், ஸ்வஸ்திகாவில் ருசகம் தோன்றுவதும், துணியில் நூல் தோன்றுவதும் - எல்லாம் மித்யையாகும். இம்மாதிரியான வித்யாஸங்கள் காரணத் தைத் தவிர வேறு ஒருதத்வத்தை நிரூபிப்பதற்கு அசக்தம் (முடியாது) (பேதவாஸனையினால் யேற்பட்ட தோஷ மூல கத்வம் என்று அர்த்தம்). தங்க நெக்லஸ் (காரியம்) ஸ்வஸ்திகாவிற்குக் (காரியம்) காரணமாவதில்லை-ஏனெனில் காரியப் பொருளாகிற தங்க நெக்லஸ் காரியமாகிற ஸ்வஸ்தி காவில் காணப்படுவதில்லை. எப்படி துணியில் நூல்களைப் பார்க்க முடிகிறதோ - அதுபோல இல்லை. மேலும் தங்கமே நெக்லஸ்ஸுக்கு ஆஸ்ரயமாகவில்லை. ஏனெனில் தங்கம் ஸ்வஸ்திகாவில் காணப்படுவதில்லை - எந்த ரூபத்தில் அது தங்க நெக்லஸ்ஸின் ஆதாரமாக விருக்கிறதோ. அதாக வில்லை என்று அர்த்தம்.

ஆகவே களிமண் முதலான காரணவஸ்துக்களுக்கு வேறான கார்யம் அஸத்யமாகத் தோன்றுவதாலே, காரியம் அபரமார்த்தம் அதுபோல பிருஹ்ம வ்யதிரிக்த இந்த ஸம் பூர்ண ஜகத்காரியத்வேந மித்யையாகிறது - அஸத்யமாகத் தோன்றுகிறது. அந்த ஜகத் பிருஹ்ம வியதிரிக்தம் (வேறு பட்டது) மித்யையாக ஆவதால் அதுமாதிரி கல்பிக்கப் பட்ட மிருத் (களிமண்) முதலிய காரண வஸ்துக்கள் ஸத் யத்தை ஆஸ்ரயித்திருப்பதால் (ஸந்மாத்திரம்) அதன் காரி யங்களாகிற பானை - தட்டு முதலியவை அஸத்யத்வம் எனக் காட்டப்படுகிறது. பரமார்த்தம் யாதென்றால், ம்ருத் சுவர் ணம் அம்மாதிரி காரணப் பொருள்களாகும்-அதன் காரியங் கள் கடகம், ருசகம் இத்யாதி காரியங்களாக ஆவதால் மித்யா

பூதம்; ஏனெனில் இவை எல்லாம் பிருஹ்மத்திலிருந்து காரியங்களாக ஆக்கப்பட்டவை, ஆதலால் (பிருஹ்ம கார்யத்வா விசேஷாத்) (இது அத்வைதிகளின் கருத்தாகும். காரண வஸ்துதான் ஸந்மாத்ரம் தான் பரமார்த்தம், காரிய வஸ்துக்கள் மித்யாபூதம் (வாசாரம்பணம் விகார: வ்யவஹாரத்திற்கே யேற்பட்டது காரியம், வாஸ்த்வத்தில் இல்லை. வாசாரம் பணம் ஸம்ஸ்தபதம்)

சா. உ. 6-8-7 एतदात्म्यमिदं सर्वं तत् सत्यम् இந்த உலகம் எல்லாம் ஸத்தை ஆத்மாவாக உடையது அதுதான் ஸத்யம்; (கட. 4-11) नेहनानास्ति किञ्चन । मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति (न इह नानास्ति किञ्चन - இவ்வுலகில் பலவென்று சொல்லக்கூடியது எதுமில்லை பலவகைப்பட்டது என்று சொல்லக்கூடியது ஒன்றுமில்லை, எவன் இவ்வுலகைப் பலவாகப் பார்க்கிறானோ (அதாவது அபிருஹ்மாத்மகமாகப் பார்க்கிறானோ என்று அர்த்தம்) அவன் சம்சாரத்தை மீண்டும் மீண்டும் அடைகிறான். பிரு. உ. 4-4-14 यत्र हि द्वैत मिव भवति तदितर इतरं पश्यति । यत्रत्वस्य सर्वमात्मैवा भूत् तत् केन कं पश्येत् (எங்கே த்வைதம் இருக்கிறதோ - அங்கே ஒருவன் வேறொருவனைப் பார்க்கிறான். எங்கே எல்லாம் ஒருவனுக்கு ஆத்மாவாக விருக்கிறதோ (அதாவது எவன் எல்லாவற்றையும் ஆத்மா வாகப் பார்க்கிறானோ, அங்கே யார் எவனை எதனால் பார்ப்பான்? பிரு. உ. 4 5-29) इन्द्रीमायाभि: पुरूरूप ईयते (இந்திரன் தன் மாயாசக்தியினால் பல உருவங்களை அடைகிறான் எனத் தெரியப்படுகிறது. இந்த சுருதி வாக்யங்களால் காட்டப் படுகிறது பிருஹ்ம வ்யதிரிக்த (வேறான) பொருள்கள் மித்யாத்வத்தை அடைகின்றன.

மேலும் நீ எண்ணக்கூடாது சுருதியின் நோக்கம் (அதன் அர்த்தத்தினால் நோக்கம் யாது என்று தெரியப்படு கிறது) பிரத்யக்ஷ விரோதமாக விருக்கிறது என்பது (சந்தேகம்), ஏனெனில் மேல் சொன்ன பிரகாரம் (பிருஹ்மவியதிரிக் தம்மித்யை) ஒவ்வொரு காரியமும் மித்யையாகும். பிரத்யக்ஷ மாவது ஸந்மாத்திரமேவ அதையே விஷயமாகக் கொண்டது. சுருதிக்கும் பிரத்யக்ஷத்திற்கும் விரோதம் ஏற்படின் சுருதியே

ரொம்ப பலியஸ். அதுவே பிரமாணமாகும் (இங்கு சுருதி யின் ஆதாரம் தர்க்கத்திற்கு பலமாகக் காட்டப்படுகிறது. முதலில் சொல்லப்பட்ட சா. உபநிஷத் சுருதி ஸாமாந்ய அதிகரணத்தினுல் ஜகத்தின் பரமார்த்ததிற்கு பாதிதம் யேற்படுவதால் அதனுல் அதுவும் மித்யை, பிருஹ்மம் ஒன்றே ஸத்யம் என்று ஸ்தாபிக்கப்படுகிறது எவ்விதம் ஒருகற்தூண் திருடன் என்று சந்தேகப்பட்டு பிறகு சரியான ஞானத்தினுல் பாதிதமாகிறதோ அதுபோல ஜகத்தும் பாதிதமாகிறது).

சாஸ்திரம் ஏன் பலீயஸ் - அதற்குக்காரணம் - அதற்கு பிரமம் விப்ரலம்பம் இத்யாதிகளால் யேற்படும் தோஷங்கள் இல்லை; உள்ளிருக்கும் பேத வாஸஸனகளால் ஏற்படக் கூடிய தோஷங்கள் இல்லை. இவை மற்ற பிரமாண ஸாத னங்களால் அமையும். ஸ்வரூபஸத்பாவம் பிரத்யக்ஷக்காட்சி களுக்கு அபேக்ஷிக்கப்படும். ஆனுல் அவை சாஸ்திரத்திற்கு தேவை இல்லை - ஸ்வதந்திரமாகவே நிராகாங்க்ஷம் - நிராகா ஸம் (இடைவெளியில்லாதது) அதனுல் தோஷ ரஹித சாஸ் திரம் மிக்க பலீயஸ் ஆகும். ஆகவே காரணபூதமாகிற பிருஹ்மத்தைவிட அன்யது (காரியம்) - ஸர்வம் மித்யை யாகும் (இது அத்வைத பக்ஷம்),

அவன் மீண்டும் சொல்கிருன். சரி, பிரபஞ்சம் மித்யை என்கிற காரணத்தினுல் ஜிவனுக்கும் மித்யாத்வம் யேற்படு கிறது என்று நினைப்பது தவறு, ஏனெனின் பிருஹ்மமே ஜீவபாவத்தையடைகிறது. பிருஹ்மமே ஸர்வ சரீரங்களிலும் ஜீவபாவத்தையடைந்து அனுபவிக்கிறது. சா. உ. 6-3-1 अनेन जीवेनात्मनाऽनुप्रविश्य பிருஹ்மம் சங்கல்பித்து - நான் இந்த ஆத்மாவுடன் உள்நுழைந்து - நானே தான் என்று சொல் லும்படி; (இங்கு ஆத்மா - ஜீவாத்மா); ஸ்வே. 6-11 एको देवः सर्वभूतेषु गूढः (ஒரே தேவன் - எல்லாப் பிராணிகளிலும் ஒளிந் திருக்கிருன். யஜீ. ஆர. 3-एको देवोबहुधा निविष्टः (ஒரே தேவன் பலவிடங்களில் இருந்தான்.) एष सर्वेषु भूतेषु गूढोत्मा न प्रकाशते - இந்த ஆத்மா - எல்லாப் பிராணிகளிலும் ரஹஸ்யமாக விருக்

கிறதால் (அவர்) பிரகாசிப்பதில்லை - பிரு. உ. 11-3-23 नान्यो-ऽतोऽस्ति द्रष्टा - பரமாத்மாவைத் தவிர - பார்க்கிறவன் வேறு யாருமில்லை.

நீ சொல்கிறபடியில்லை - (சொல்பவர் ஸ்ரீமத் ராமானுஜ ராக விருக்கலாம் - அல்லது பேதாபேதவாதிகளாக விருக்க லாம்) - பிருஹ்மம் ஏகமேவ. ஒன்றே ஒன்றுதான் - அது சர்வ சரீரங்களிலும் ஜீவபாவத்தை அனுபவிக்கிறதுயென் ருல், அந்த பிருஹ்மமாகிற ஜீவனுக்கு, 'என் பாதங்களில் வேதனை; पादे मे वेदना शिरसि मे सुखं - (சிரஸில் எனக்குச் சுகம்) என்கிற ஸர்வ சரீரங்களிலும் சுகதுக்க பிரதி ஸந்தானம் (அனுபவம்)வித்யாஸம் ஏற்படும், அவ்விதமாகில் ஜீவ ஈஸ்வர பத்த முக்த, சிஷ்ய ஆசார்ய, அறிவில்லாதவன் அறிவுள்ள வன் என்கிற அவஸ்தைகளும் இல்லையென்று ஆகிவிடும்.

(இந்தவிடத்தில் இன்னும் சிலர் (இவர்கள் அத்வைத பக்ஷத்தில் ஒரு பகுதியினர் - வாசஸ்பதி மிஸ்ராவை அனு சரிப்பவர்கள் - இவர்கள் அவித்யை ஜீவனில் இருக்கிறது என்பவர்கள் - இவர்கள் சொல்வதாக) - பிருஹ்மம் ஏகமேவ அத்விதியம் அவர்கள் சொல்வதாகச் சொல்லப்படுகிறது. ஒரேபிருஹ்மம் பிரதிபிம்பமாத்திரமாக விருக்கும் எல்லா ஜீவர் களுக்கும் சுகதுக்க அனுபவங்கள் அதேமாதிரி இதர அனுப வங்கள்-ஜீவ பிரதிபிம்பங்களுக்கு யேற்படுகின்றன, உபாதி யின் நிமித்தமாக - எப்படி ரத்தினம் - கத்தி - கண்ணாடி இவைகளில் ஓரே வஸ்து ஒரு முகத்தில் தோன்றுபவை பல பிரதிபிம்பங்களாக (Reflection) - அளவில் அல்பத்வம் மஹத்வம் - அழுக்குள்ளவை, விமலத்வம் இம்மாதிரி குணங் கள் உபாதியினல் உண்டாக்கப்படுகின்றன. ஆனுல் அவை முகத்திற்கு (வஸ்துவுக்கு) இல்லை: - அதுபோல; ஆகவே உபாதிவசத்தினுல் பலவிதமாகத் தோன்றுகின்றன. (இங்கே ரங்கராமானுஜர் வாசஸ்பதி மிஸ்ராவை (பாமதியை) குறிப்பிட்டுச் சொல்கிருர். அவித்யா ஜீவனில் இருப்பதால் (ஒவ்வொரு ஜீவனும் வெவ்வேறு அக்ஞானத்தை உடைய தாகவிருக்கிறது). அவர் அபிப்ராயப்படி-ஜீவனின் ஸ்வரூபம்.

சுத்தசைதன்யம், அஹங்காரத்திஞல் களங்கமடைகிறது. பிருஹ்மத்துக்கு அவித்யை என்று கொள்ளாமல்-இவ்விதம் ஜீவனுக்கு யேற்பட்ட அவித்யயை பல உருவங்களாக (பிரதிபிம்பங்களாகச்) சொல்கிருர்.]

மேலும் ஆட்சேபிக்கப்படும். மேலே காட்டியபடி ஜீவர்கள் பிருஹ்மத்தைவிட வேருகவில்லை - சுருதியில் சொல்லப்பட்டபடி சா. உ. 6 - 3 - 2 - अनेन जीवेनात्मनाऽनुप्रविश्य - நான் இந்த ஜீவனுக்குள் உள்நுழைந்து (பிருஹ்மம் நினைத்தது இவ்விதமாக) என்பதால் ஜீவன் பிருஹ்மத்தை விடவேருகவில்லை. ஸத்யம் - பரமார்த்தம் தான். இங்கு வ்யவஸ்தை செய்யப்படுவது-வெறும் (கேவலம்) கல்பனிகம் (கற்பிக்கப்பட்டவை) — பேதத்திஞல் யேற்பட்டவை. யாருடைய கல்பனை ? பிருஹ்மத்தின் கல்பனையாகவிருக்க முடியாது ஏனெனில் பிருஹ்மம் பரிசுத்தஞான ஸ்வரூபமே - அதனது ஆத்மஸ்வரூபம் ; அதற்கு கல்பனை யேற்படாது (கற்பனை மித்யாத்வம் என்கிற அர்த்தம்) ஜீவனின் கற்பனையாகவிருக்க முடியாது - ஏனெனில் (அவ்விதம் ஜீவனுக்குச் சொல்லப்படுமாகில்) அன்யோன்ய ஆஸ்ரயத் தோஷம் யேற்படக்கூடும். எவ்விதமெனில் ஜீவனின் ஸ்வபாவம் கற்பனையே (மித்யையை) நம்பியது-கற்பனையோ (மித்யையோ) ஜீவனை நம்பியுள்ளது.

இவ்விதம் சொல்வது சரியல்லை - (அத்வைதி பதில் சொல்வது) ஏனெனில் அவித்யையும் அதஞல் பிருஹ்மம் ஜீவபாவத்தை அடைதலும் அநாதி, அதஞல் எது முந்தி எது பிந்தி யேற்படுகிறது என்று சொல்லமுடியாதபடியாலே இரண்டையும் சொல்வது பீஜாங்குர நியாயத்தைப் போல இரண்டும் அநாதியாகும் (எது முந்தியேற்படுகிறது என்று சொல்ல முடியாது). மேலும் ஒரு மந்திரவாதி ஒரு அரண்மனையை முழுங்கிவிடுகிருன், அதுமாதிரி மந்திரஜாலத்தாலே பல அர்த்தமில்லாத வஸ்துக்களை உண்டாக்குகிருன், அதஞல் யேற்படும் உண்மையான வஸ்துக்களின் தோஷங்கள் ஏற்படத்தான் செய்யும், அதுமாதிரி ஆஸ்ரயத்திஞல் யேற்படும்

தோஷங்கள், இதேபடி அன்யோன்ய ஆஸ்ரயத்வாதி தோஷங்கள் இவை எல்லாம் மேல் சொல்லப்பட்ட ஜீவ அவித்யையை நிஷ்பிராமாணமாக்குவதற்கு உபயோகப்படுவதில்லை.

(இங்கு சொல்லப்படுவது அவித்யையயின் காரியமாகிற ஜீவனும் அவித்யைக்கு ஆஸ்ரயமாகமாட்டான். வே. சூத். 1-4-3ல் வாசஸ்பதி மிஸ்ரா சொல்கிறார் - (தததீநத்வாத் அர்த்தவத்-பரமேஸ்வரனின் அதீனமாகவே பிரதானம் செயல்படும்) என்பதில் மாயையை பிரகிருதியாகவும் மஹேஸ்வரனை அதற்கு நியந்தாவாகவும் (அதிஷ்டானமாகவும்) அறியவேண்டியது, அதில் பீஜாங்குர நியாயம் சொல்லப்பட்டு இதனால் அன்யோன்ய ஆஸ்ரய தோஷமில்லை என்று காட்டப்படுகிறது - அதேபடி இங்கேயும் அவித்யை ஜீவனுக்கு ஒரு அவஸ்தையை உண்டுபண்ணி அது ஜீவனில் யேற்கனவே யேற்பட்டுள்ள அவித்யையைவிட வேறாகவும் இருக்கிறது.)

நாம் (அத்வைதி) சொல்வது யாதெனில் - ஜீவாத்மாக்கள் (வஸ்துக்கள்) பிருஹ்ம வ்யதிரிக்தமாகவில்லை (வேறாக வில்லை), அதனால் அவைகள் ஸ்வயமாகவே சுத்தமாகவிருப்பவை. ஆயினும் உபாதியின் சம்பந்தத்தால் - கத்தி - கண்ணாடி இவைகளின் பிரதி பிம்பங்களில் கருப்பு நிறம் - அசுத்தத் தன்மை உபாதியினால் யேற்படுவது போல யேற்படுகின்றன. ஆகவே இந்த ஜீவர்களுக்கு யேற்படும் தோஷங்களாகிற அவித்யை முதலியவை கல்பனீகம் (உபாதியினால் உண்டாக்கப்பட்டது). இல்லாதபோனால் ஜீவர்களுக்கு சம்சாரத்திலிருந்து விடுதலை எப்படியேற்படும்? எவ்விதம் கருப்பு நிறம் - அமலத்வம் கண்ணாடியின் பிரதி பிம்பங்களில் தோன்றுகிறதோ - அதுபோல விமர்சிக்கப்பட வேண்டியது - உபாதியின் சம்பந்தத்தால் யேற்படும் ஜீவர்களின் தோஷங்கள்); அல்பத்வம் - அமலத்வம் இத்யாதி ஔபாதிக தோஷங்கள் — எப்போது நசிக்கும்? உபாதி நசிக்கிற போது நசிக்கும். இல்லாதபோனால் விடுதலையே அவர்

களுக்கு இராது. அவைகள் நசிக்கிறதில்லை என்றால் - மோக்ஷ பிரஸங்கமேயிராது; ஆகவே மித்யா ரூபமாகிற பிரவாஹம் அதற்கு ஆதியில்லாதபடியால் - அது எப்படி உற்பத்தியாகிறது என்பது விசாரிக்கப்பட வேண்டாம் - (என்று நாம் சொல்வோம்).

(இங்கு ஜீவன் அவித்யையினால் உண்டாக்கப்படுகிற வன் என்றால் - அவனே அவித்யைக்கு ஆஸ்ரயம் (இருப்பிட மாகவிருப்பது) தருவது யேற்படாது. (பீஜ - அங்குர நியாயம் சரிப்பட்டுவராது. ஒரு செடியிலிருந்துவரும் பீஜம் இன்னொரு செடிக்குக் காரணமாகிறது ஒழிய அதே செடிக் குக் காரணமாவதில்லை. அதுபோல அவித்யையும், ஒரு ஜீவனுக்கு முதலில் யேற்பட்டு - அது அந்த ஜீவனில் உபாதி யினால் இருக்கும் இன்னொரு அவித்யைக்கு காரணமாகி வேறாகவிருக்கிறது - ஆகவே அவித்யை எவ்விதம் யேற்படு கிறது - என்பது ஆராயத்தகுந்ததில்லை. (இது வாசஸ்பதி மிஸ்ராவின் கருத்தாகும்). (இன்னும் அவித்யை பிரவாஹ மாகத் தொடர்ந்து வரும் என்றால் - அன்யோன்ய ஆஸ்ரய தோஷம் யேற்படாது.)

**ஸ்ரீபாஷ்யம் :—**

மேலே சொல்லப்பட்ட வாக்யங்கள் - அத்வைத சாஸ் திரத்தின் உண்மையை அறியாதவர்களாலே (அதாவது பேதவாதிகளாலே) சொல்லப்பட்டதாகும்; இப்படிச் சொல்வ தால் அவர்கள் தங்கள் பக்ஷத்திற்கு ஆதரவும் கவுரவமும் கிடைப்பதாக நினைக்கிறார்கள் - ப்ரமாண பதவியுள்ளதாக - பேதவாதிகளால் ஒப்புக் கொள்ளும்படியிருக்கின்றது - என நினைக்கிறார்கள், இவ்விதமாகச் சொல்லப்படுமாகில் - ஜீவனின் இயற்கையானதும் அகல்பித ஸ்வபாவத்திலே - ஜீவன் அவித்யைக்கு ஆஸ்ரயமளிப்பதாகவும் ஆகிறான் என்றால் - அந்த வாக்யத்தின் அர்த்தம் பிருஹ்மமே அவித் யைக்கு ஆஸ்ரயமளிக்கிறது என்று அர்த்தம். அவ்விதமா னால், இயற்கையானதும், ஸ்வாபாவிகமான அவஸ்தைக்கு வேறாக கல்பிக்கப்பட்டால் - அது ஏற்படுகிறது என்றால் -

ஜீவன் அவித்யைக்கு ஆஸ்ரயமளிக்கிறது என்றால் - அசேதன வஸ்து கூட அவித்யைக்கு ஆஸ்ரயம் அளிக்கிறது - கல்பித ஆகாரத்தில் அவித்யா ஆஸ்ரயத்வே - ஜடஸ்ய அவித்யா ஸ்ரயத்வமும் யேற்படுவதாக ஆகும். வாஸ்தவமாக அத்வைதிகள் இந்த இரண்டு ஆகாரங்களைத் தவிர (இயற்கை - கல்பிதம்) - உபய வ்யதிரிக்த ஆகாரங்களை ஒப்புக் கொள்ளுகிறதில்லை. சரி இப்படிச் சொல்லலாம். அதன் நிஜஸ்வரூபத்திலே - பிரமையினால் (அவித்யையினால்) கல்பிக்கப்பட்ட ஆகார சம்பந்தத்தால் ஜீவன் ஸ்வரூபேண - அவித்யைக்கு ஆஸ்ரயமளிக்கிறான் என்றால்- அப்படி சொல்வதும் சரியில்லை - ஏனெனில் ஜீவனின் இயற்கையான ஸ்வரூபம் அகண்டைக (ஞான) ஸ்வரூபமாதலால் – அதற்கு அவித்யா மாத்திரத்தாலே விசிஷ்டரூபத்தை உடையது (இப்படி கல்பிக்கப்பட்ட ஆகாரத்துடன் கூடியது) என்பது ஸித்தமாவதில்லை – (ஸ்தாபிக்கப்படவில்லை)—இதனால் அவித்யா ஆஸ்ரய ஆகாரமே உன்னால் **(அத்வைதியினால்)** சொல்லியபடி நிரூபிக்கப்பட்டது எனலாம்.

(இங்கே பிருஹ்மத்திற்கு ஜீவநிலையை கற்பிக்கப்பட்டு அடைவதாலே பிருஹ்மமே அந்த ஆகாரத்தை அடைவதாகவிருக்கிறது. இங்கே இரண்டு பக்ஷங்கள் அத்வைதிகளில் இருக்கிறார்கள். ஜீவாக்ஞானவாதிகள்-பிரும்மாக்ஞானவாதிகள். அக்ஞானம் பிரும்மத்தினிடமே ஆஸ்ரயம் - அதன் ஆகாரத்தில் இல்லை - என்பது பிரும்மா க்ஞானவாதிகளின் பக்ஷம் - ஏனெனில் பிருஹ்மத்தைத் தவிர மற்றது மித்யை- அவித்யை அசேதனமாகிறபடியால் அசேதனம் தர்மமாகாது. எவர்கள் இதை மறுத்து-ஜீவனில்தான் அவித்யை ஆஸ்ரயம் என்று சொல்பவர்கள் அவர்கள் உண்மையான அத்வைதிகளல்லர். பிருஹ்மம் அவித்யைக்கு ஆஸ்ரயமாகாது - அவித்யையிருப்பதால பிருஹ்மத்திற்கு ஆகாரம் யேற்படுகிறது-அந்த ஆகாரமே (வடிவமே) அவித்யைக்கு ஆஸ்ரயத்தை உண்டுபண்ணுகிறது - என்கிற அபிப்ராயம் அவர்களுக்கு.)

மேலும் பந்தம் மோக்ஷம் ஆகிற வ்யவஸ்தைகளை யேற் படுத்துவதற்கு - ஜீவாக்ஞானவாதம் - ஜீவனே அவித் யைக்கு ஆஸ்ரயம் என்கிற அபிப்ராயம் ஒத்துக் கொள்ளப் படுகிறது. ஆனால் இந்த (வியவஸ்தை) நிச்சயம் ஜீவாக் ஞான பக்ஷத்திலும் ஸித்திப்பதில்லை என நாம் சொல்வோம். அவித்யா நாசமே - மோக்ஷம். அவ்விதமானால் ஒரே ஒரு ஜீவன் முக்தனாக ஆகிவிட்டால், அவித்யை நஷ்டமாகிறது அதனால் மற்ற எல்லா ஜீவாத்மாக்களும் முக்தியடைவார்கள் என்பதாகும். அதே மாதிரி சொல்லக்கூடும் - இன்னும் மற்ற ஜீவாத்மாக்களும் முக்தியடைய மாட்டார்கள். அத னால் அவித்யை தொடர்ந்து கொண்டு, அழியாமலிருக்கிறது. அப்பொழுது ஒவ்வொரு விஷயத்திலும் ஒரு ஜீவாத்மாவுக்கும் மோக்ஷம் யேற்படாது - ஏனெனில அவித்யை பூர்ணமாக நஷ்டமாகாதபடியால் (கடைசி அவித்யை நாசமானால்தான் - எல்லோருக்கும் மோக்ஷம் யேற்படலாம்).

சரி இப்படி சொல்லலாம் - பிரதி ஜீவாத்மாவுக்கும் அவித்யாபேதம், பலதரப்பட்டது கல்பிக்கப்படலாம். அந்த விடத்தில் எவனுடைய அவித்யை நஷ்டமாகிறதோ, அவன் மோக்ஷமடைகிறான்; எவனுடைய அவித்யை நஷ்டமாக வில்லையோ, அவன் பந்தத்தில் மூழ்கி விடுகிறான் - என்று சொல்லப்படுமாகில் - அது சரியில்லை என்று நாம் சொல் வோம். ஏனெனில் பிரதி ஜீவன் விஷயத்திலே ஜீவபேதம் ஒப்புக் கொள்ளப்படவேண்டியது. சரி - அந்த ஜீவபேதம் எத்தன்மையது? ஸ்வாபாவமாக யேற்பட்டதா - அல்லது அவித்யையினால் கற்பிதமா? ஸ்வாபாவிகமாகவில்லை—ஏனெ னில் அது உன்னால் ஒப்புக் கொள்ளப்படவில்லை; மேலும் அவித்யையே (அம்மாதிரி விஷயத்தில்) கல்பிதம் அது பேதத்தை ஸ்தாபிப்பதற்கு உபயோகப்படுகிறது. இப்படிப் பட்ட கல்பித அவித்யையினால் ஒரு பித பிரயோசனமில்லை.

சரி நீ சொல்லலாம். பேதம் ஸித்திக்கிறது-அவித்யை யினால்; அவ்விதமாகில் நாம் கேட்பது - அவித்யா ஜீவர்களி டம் அவித்யையை உண்டாக்குகிறதா - அல்லது அது

பிருஹ்மத்துக்கு சொந்தமா அல்லது அது ஜீவர்களைப் பற்றி யதா? பிருஹ்மத்தைப் பற்றியது என்றால் - நீ என் அபிப் ராயத்துக்கு ஒத்து வருகிறாய்-(அதாவது பிருஹ்மத்தினிடம் அவித்யை ஆஸ்ரயம் - பிரும்மாக் ஞானவாதம்). இல்லை அது ஜீவனைப் பற்றியது என்றால் - நாம் கேட்பது இந்த அவித்யையினால் யாது பிரயோசனம் - பேதத்தை ஜீவர் களிடம் உண்டு பண்ணுவதைத் தவிர.

சரி ஜீவன் அக்ஞானத்திற்கு ஆஸ்ரயம் என்றும் அது வ்யவஸ்தையை (எதில்) பந்தம் மோக்ஷம் இத்யாதிகளில் நிச்சயிப்பதற்கு, கற்பிதம்; அப்படியானால் பிரதி ஜீவனிடம் அவித்யையும் கற்பிக்கப்படவேண்டும். இவ்விதம் ஜீவபேதம் யேற்படுமாகில் - இந்த பேதம் அந்த பலவகைப்பட்ட (ஜீவர் களின்) அக்ஞானத்தினாலேயே பிரமாணிக்கப்படுகிறது. இவ்விதமானால் ஜீவபேதம் வாஸ்தவமேயாகும். இவ்விதம் அன்யோன்ய ஆஸ்ரய தோஷம் ஏற்படும்.

பீஜாங்குர நியாயம் இங்கு சொல்வதும் சரியாகாது. பீஜாங்குர நியாயத்தில் ஒரு பீஜம் (விதை) இன்னொரு செடிக்குக் காரணமாகிறது - அதே செடிக்குக் காரணமாவ தில்லை. இங்கு சொல்லப்படுகிற விஷயத்தில் எந்த ஜீவாத் மாக்கள் எத்தகைய பலவகைப்பட்ட அவித்யையினால் உண்டாக்கப்படுகிறார்களோ - அந்த ஜீவாத்மாக்களையே பலவகைப்பட்ட அவித்யை நம்பியிருக்கிறது. (இங்கே அன்யோன்ய ஆஸ்ரய தோஷமில்லை என்கிற அபிப்ராயத் தில் - பிஜாங்குர நியாயம் சரியில்லை. எங்கனமெனில் ஒரு அவித்யை (பிரும்மத்துக்கு) ஒரு ஜீவனை உண்டாக்கும். அந்த ஜீவன் இன்னொரு அவித்யை உண்டாக்கக் காரண மாகிறான். அதனால் இங்கே இப்படிப்பட்ட நியாயம் பிர யோகமில்லை என்பதாம்.)

நீ சொல்லலாம் பீஜாங்குர நியாயத்தின் ஆதாரத்தாலே ஒரு அவித்யை முந்தியே ஜீவனிடம் ஆஸ்ரயிக்கிறது அத னால் அந்த அவித்யை பிற்பாடு ஒரு ஜீவனை உண்டாக்கு

கிறது. அப்படியானல் - ஜீவனுக்கு அநித்யத்வமாகிற அழிவுயேற்படும்; மேலும் ஜீவனின் அனுபவத்தை ஒப்புக் கொண்டு - காரியங்கள் அதன் அழிவு - எல்லாம் ஒப்புக் கொள்ளப்படவேண்டும். அந்தக் காரணத்தினுல் இந்த பிருஹ்மாக்ஞான வாதம் இல்லாமல்போகிறது - பிருஹ்மத் தினிடமிருந்து ஒவ்வொரு அவித்யையும் ஏற்கனவே ஜீவனில் விருப்பதால் - அது ஜீவத்தன்மையை உண்டாக்கு கிறது. (அதாவது அநாதியாக பிரவாஹம் மாதிரி பெருகும் ஜீவர்கள் உண்டாக்கப்படுவது இங்கு மறுக்கப்படுகிறது) அவித்யா பிரவாஹம் தொடர்ந்து யேற்படுவது என ஒப்புக் கொள்ளப்பட்டால் - அதே பிரகாரம் அதே ஜீவன் அதே அவித்யையின் அவஸ்தையை அடைவதால் ஜீவத்தன்மை (பாவம்) அநாதியாகவும்-துருவமாக (நிச்சயமாக) விருக்கும் ஜீவத் தன்மைக்கு அந்த நித்யத்வமே விரும்பப்படுகிறது - அந்த ஜீவத்தன்மை முக்தியேற்படும் வரை — நீடிக்கிறது - அவ்விதமானல் நித்யத்வம் ஜீவனுக்கு யேற்படாது.

(அத்வைதிகள் சொல்வது — ஜீவத்தன்மை அநாதி - அது முக்தி கிடைக்கும் வரை இருக்கவேண்டியது - அப் போதுதான் சுருதி விரோதம் யேற்படாது. ஜீவன் அநாதி என்பது இதன் அபிப்ராயம் (यच्चोक्तम्) (அதாவது அவர் களின் அபிப்ராயம்-ஜீவன் ஈஸ்வரன் அவித்யை ஆகிய இம் மூன்றும் அனுதி என்பதாகும்.)

மேலே சொல்லப்பட்டது என்னவென்றுல், அவித்யை என்பதற்கு அவஸ்துத்வம் (வஸ்துவாக வில்லாமலிருப்பது - அது முன் பின் முரண்பாடாகவுள்ள ரூபமுள்ளது என்பதால் எந்த தோஷங்கள் நிஜமான வஸ்துவுக்குச் சேருமோ - (அந்த தோஷங்களானவை - அன்யோன்ய ஆஸ்ரயத்வம் - இத்யாதி) அவை இத்தகைய அவித்யைக்கு யேற்படவில்லை; அதனுல் ஜீவதத்வத்திற்கு விரோதமான பிரமாணமாகவிருக்கிறது என்று சொல்ல முடியாது. அந்த சந்தர்ப்பத்திலே, அவித்யை முக்தாத்மாவிடமும் - எப்படி பரபிருஹ்மத்தினிடமிருக்கின்றதோ அதுபோல -

விருக்க நேரிடும், ஆஸ்ரயம் செய்யக்கூடும். மேலும் இதற்கு பதில் சொல்லக்கூடும் - சுத்த வித்யா என்பதற்கு ஸ்வரூபத்திலே அசுத்த ரூபம் ஏற்படினும் - அதனுல் ஜீவன் பாதிக்கப்படமாட்டாது. (किंचेति) அப்போது (எம்மால்) கேள்விக் கேட்கப்படும் – இந்த அவித்யை எதில் (அதாவது உபபத்தியில் - தர்க்கமாக ஸாதிக்கப்படும் விஷயத்தில்) அனுவர்த்திக்கிறதா? அப்படியானுல் - மேல் காட்டப்பட்ட தர்க்கபலத்தாலே, அவித்யை ஜீவனிடமும் ஆஸ்ரயிக்காது. மேலும் ஜீவனிடம் (அவித்யை) ஆஸ்ரயம் கொண்டது என்ருல் ஜீவனுடையதத்வ ஞாஞேதயத்திற்கும் நாசம் யேற்படுகிறது. அப்படியானுல் மோக்ஷம் என்பதற்கு அர்த்தம் ஜீவனின் நிஜஸ்வரூபமும் நாசமாகுவதேயாகும். அப்படியில்லையென்ருல் - அவித்யை நாசமான பிறகும் முக்தி (மோக்ஷம்) ஏற்படாது - ஏனெனில் பிருஹ்மஸ்வரூப வ்யதிரிக்த ஜீவத்வம் இன்னும் தொடர்ந்து கொண்டு இருப்பதாலே.

(அத்வைதிகள் சொல்வது - ஜீவத்தன்மை அநாதி முக்தியேற்படும் வரை அது நீடிக்கவேண்டும். அப்போது தான் சுருதி வாக்யங்களுக்கு ஒத்தாப்போலே விருக்கும். அதாவது எப்படி ஜீவன் ஈஸ்வரன் அநாதியோ - அவித்யை யும் அநாதி, மேலும் புத்தர்களின் அபிப்ராயத்தில்-மோக்ஷம் எனப்படுவது ஜீவனின் நிஜஸ்வரூபம் நாசமாகுதல். அது போல இங்கு சாயை காணப்படுகிறது).

(உத்தமூர் ஸ்வாமி - வாக்யாங்வயாதி கரணத்தில் ब्रह्मणो जीवो भाविक एवांश:, न काल्पनीक என்று சொல்லும் பாஸ் கரமதத்தைக் கண்டனம் ராமானுஜர் செய்யும் போது - अस्तु वाऽनुपपत्तिरेव कार्यकारण-योर्मायात्मकत्वात् अनुपपत्तिर्हिमायामुपद्दलयति; अनुपपद्यमानार्थत्वान्मायाया:-इति அவித்யையின் दुर्घटत्वपक्ष: சொல்லப் படுகிறது. அதை நினைவில் கொண்டு - மேலே சொல்லப் பட்டது (यच्चोक्तम् என்கிருர் ஶ்ரீபாஷ்யக்காரர்). (அதேபடி ஜீவகால்பனீகத்வ பக்ஷத்திலும் தோஷம் இருக்கிறபடியால் किञ्चेति என்கிருர்.)

மேலே சொல்லப்பட்டது - நாம் சுத்தம் அசுத்தம் என்கிறதைப்பற்றி வ்யவஸ்தை செய்யவேண்டியது - இவ் விதம் நிச்சயிப்பதால் நாம் சரியாகத் தெரிந்துகொள்ள முடியும் - (எதை) மணி - (Gems) கத்தி, கண்ணுடி இத்யாதி வஸ்துக்களில் அழுக்கு யேற்பட்டுவிட்டால் - அவைகளின் பிரதி பிம்பங்களிலும் அதேபடி அழுக்கு - அல்லது விமலத் வம் (சுத்தத்தன்மை) யேற்படுவதைக் காணலாம். இதை நாம் மீண்டும் விவரிப்போம். உபாதியினுலே அல்பத்வம் (சிறிய அளவாக விருப்பது) மலினத்வம் (அழுக்கடைந் திருப்பது) - அதுமாதிரி பல தவருன ஔபாதிகமான தோஷங்கள் - எப்போது இவை நசிக்கக்கூடும்? அதற்குப் பதிலாக - கத்தி முதலியவைகளில் உபாதியினுல் யேற்படும் மலினத்வம் இத்யாதி தோஷங்கள் நீக்கப்பட்டால் - அவை நசிக்கக்கூடும் - அவ்விதமாளுல் நாம் சொல்வது, இந்த அல் பத்வம், மலினத்வம் ஆகியவை பிரதிபிம்பத்தில் அந்த சமயம் இருக்கின்றனவா-அல்லது இல்லையா? இருக்கின்றன என்று நீ சொன்னுல்-அப்போது அந்த ஜீவன் (இங்கே பிரதி பிம்பத்திற்குச் சமமாகவிருக்கிருனே - பிருஹ்மத்தின் பிரதி பிம்பமாகவிருக்கிருனே அவன்) - அப்போதும் இருக்கிருன். அதனுல் மோக்ஷ பிரஸங்கம் அவித்யை நாசமடைந்த பிறகும் அவனுக்கு யேற்படாது; அது இல்லையென்று நீ சொல்வா யாகில், அதே பிரகாரமாக, ஜீவனும் அழிந்துபோகிருன் அதனுல் முக்தி என்பது - ஜீவனுடைய ஸ்வரூபமும் அழியப் பட்டதாலே ஜீவநாசமாகும்!

(இங்கே ஜீவன் பிரதிபிம்பம் என்கிற அபிராயம் கண் டிக்கப்படுகிறது-வாசஸ்பதிமிஸ்ராவின் சூத். 2-3-40ல் சொல் லப்பட்டது இங்கு விஷயம். வாசஸ்பதி மிஸ்ரா பிரதிபிம் பத்தை ஒப்புவதில்லை. பிரதிபிம்பமாவது ஜீவனும் ஈஸ்வர னும் பிருஹ்மத்தின் பிரதிபிம்பங்கள் அல்லது ஜீவன் ஈஸ்வர ரின் பிரதிபிம்பம் எனச் சொல்லப்படுகிறது.)

மேலே சொல்லப்பட்ட அத்வைத பரவாக்யங்கள் அபுரு ஷார்த்தரூப தோஷங்களை எடுத்துக் காட்டுவதாகும். அவை

களைத் தள்ளுவதே புருஷார்த்தமாகும். (ராமானுஜர் கேள்வி கேட்கிறார்) அவ்விடத்தில் (நாம்கேட்பது) ஔபாதிகம் பந்தம் என்கிறாயே அது எத்தகையது? எப்போது யேற்படுகிறது? பிம்பம் என்கிறதற்கு அர்த்தம் யாது - பிருஹ்மத்தை தவிர. பிரதிபிம்பத்தில் தோஷம் யேற்படுகிறது என்றால் - பிருஹ்மத்துக்கே தோஷம் ஏற்படுகிறதென்று அர்த்தம். ஜீவ நிலையை பிருஹ்மம் உபாதியினால் அடைகிறது என்றால் - பிருஹ்மத்திற்கே அவித்யை யேற்பட்டு - அதன் ஸ்வரூபம் நாசமடைகிறது. இம்மாதிரி உபாதியினால் கல்பிதம் என்று சொல்வது தகாது. முகம் - அதன் பிரதி பிம்பம் இவைகளில் அல்பத்வம் முதலிய தோஷங்கள் தோன்றுபவையாகவிருப்பது சூன்யமாகிற காரணத்தினால் ஆகாது- ஆகவே ஜீவனும்-பிருஹ்மமும் அவித்யை தோஷத்திற்கு ஆஸ்ரயமாகாது - அவ்விதமாக இருப்பின், இவைகளுக்கு ஸ்வரூப நாசம் தான் யேற்படும் - வேறு ஒன்று - இயற்கைக்கு விரோதமாகவிருக்கும் ஸ்வரூபம் கல்பனீகமாக இருக்கிறது என்று சொல்லப்படுமானால்-(நாம் சொல்வோம்) அசேதன வஸ்து அவித்யைக்கு ஆஸ்ரயமாகும். ஆனால் அத்வைதிகள் இதை ஒத்துக்கொள்கிறதில்லை. ஆகவே பிருஹ்மத்தில் தோஷம் பிராதிபாஸம் - (தோற்றமே) பிருஹ்மத்திற்கு அவித்யை பிரஸங்கமாதலால். அசேதனத்திற்கும் ஒட்டாது. ஆகவே பிருஹ்ம - ஜீவ - இவைகளைத் தவிர வேறு இல்லாதபடியால் - ஜீவபிருஹ்ம வியதிரிக்தமாக (ஒன்றுமே) இல்லாதபடியால் - அத்வைத பக்ஷம் சரியில்லை.

மேலும் அவித்யை ஜீவனுக்கும் யேற்படுகிறது (என்று சொல்கிறாயே) - ஜீவபாவனையை உண்டாக்குகிறது- அது எத்தகையது என்பது நிருபிக்கப்படவேண்டியது. அது அசேதனமாதலால் அசேதனத்துக்கு ஏற்படாது. ஜீவனுக்கும் யேற்படாது - ஆத்மாவுக்கு ஆஸ்ரய தோஷத்தினால் - தோஷம் யேற்படும். சிப்பியில் வெள்ளியின் தோற்றம் எப்படியோ - அதுபோலவென்றால் - அவித்யா ஜீவபாவத்திற்கு கல்பனீகம். பிருஹ்மத்துக்கே கல்பனீகம் என்றால்-பிருஹ்மாக்ஞான மேவ சொல்லப்படவேண்டும்.

(அத்வைதிகளில் பிருஹ்மாக் ஞானவாதிகளும் - ஜீவாக்ஞானவாதிகளும் உளர். பிருஹ்மத்திற்கே அவித்யையேற்படுகிறது என்றும் - ஜீவனுக்கே அவித்யா சம்பந்தம் யேற்படுகிறதென்றும் இருபக்ஷங்கள் சொல்லப்படுகின்றன. அவித்யா பிருஹ்மத்திற்கு ஸ்வயமாகவே இல்லை - மாயா சம்பந்தத்தால் யேற்படுகிறது என்கிறுர்கள் சிலர். அவித்யை மாயை இரண்டும் வேறு - பின்னம். ஜீவன் அவித்யைக்கு ஆஸ்ரயம் அளிக்கிறுன்; பிருஹ்மம் மாயைக்கு ஆஸ்ரயம். விவரணக் காரர்களைக் கண்டனம் செய்வது - எவ்விதமென்ருல் - பிருஹ்மத்திற்கு ஸ்வயமாகவே பிராந்தி யேற்படுகிறதா - வேருெருவரால் ஏற்படுகிறதா - என்பது முதலில் தெளியவேண்டும். அதாவது மாயையினுல் பிருஹ்மத்துக்கா - அல்லது அக்ஞானத்தினுல் ஜீவனுக்கா ? எவ்விதமாயினும் சரி - அபுருஷார்த்தமே. அபுருஷார்த்த தரிசனத்தைக் காட்ட ஹேதுவாக விருப்பதாலே, அவித்யாலக்ஷணம் சரியான காரணமாகாது - ஏனெனில் அத்வைதிகள் यत्र हि த்வைதம்; यत्र त्वस्य - என்று சொல்கிறுர்களே - அது எப்படி ? இதற்கு அத்வைதிகளின் சமாதானம் அத்வைத சுருதிகள் த்வைத அபாவத்தை அவ்விதம் போதிக்கின்றன என அர்த்தம்; த்வைத தரிசன அபாவத்தையே அவை காட்டுபவை. இன்னெரு வகையான சுருதிகள் தசா பேதத்தினுல்-த்வைதம் - அதன் அபாவம் - என்பதைப் போதிக்கும் ஜீவவிஷயங்களாகும் இதனுல் இரண்டுக்கும் விரோதமில்லை - ஈஸ்வரன் நித்யமாகவே பரமார்த்த பூத அத்வைத தர்ஸி. ஆயினும் மாயையின் சம்பந்தத்தால் அபுருஷார்த்தத்தை யடைகிறது. மாயைக்கு அவித்யையின் லக்ஷணமும் உரைக்கப்படுகிறது. ஆகையால் பிருஹ்மத்துக்கு அவித்யை விலக்க முடியாதபடியிருக்கிறது.

(அத்வைதிகளிலே-சுரேஸ்வராச்சாரியாரைப் பின்பற்றுபவர்கள் - ஸம்பந்த வார்த்திகா என்கிறநூலில் - அவித்யை பிருஹ்மத்தில் ஆஸ்ரயம் என்பார்கள். இவர்கள் வாசஸ்பதி மிஸ்ராவின் கருத்துக்களைக் கண்டிப்பவர்கள் - அத்வைத பக்ஷசகாயமாக விருக்கிறபடியால்).

**ஸ்ரீபாஷ்யம்:**—மேலும் பிருஹ்மத்துக்கு உபாதியினுல் அக்ஞானம் யேற்படுகிறதென்றுல் - அது எப்படி - பிருஹ்மம் ஜீவர்களாகத் தன்னைப் பிரமத்தினுல் பார்க்கிறதினுல் யேற்படுகிறதா - பார்க்காமலே யேற்படுகிறதா? பார்க்காமலே என்றுல் பிருஹ்மத்திற்கு ஸ்ருஷ்டி சங்கல்பம் முதலில் யேற்பட்டு பிற்பாடு விசித்திரஸ்ருஷ்டி - நாமரூப வ்யாகரணம் - இத்யாதிகளைக் கொண்ட ஸ்ருஷ்டிக்கு ப்ருஹ்மம் காரணமாகவிருக்க முடியாது; பிருஹ்மம் ஜீவனுகத் தன்னையே பார்க்கிறது - என்றுல் பிருஹ்மத்தின் ஸ்வரூபம் ஞான அகண்டைகரஸம் (ஞானஸ்வரூபமே) பிருஹ்மம் என்பதால் அவித்யா பிருஹ்மத்துக்கு யேற்படாது. ஜீவனுகத் தன்னை மதிக்கிறது யென்றுல் - பிருஹ்மத்துக்கு அத்தகைய அவித்யை யேற்படாது-ஸ்வரூபமே ஞானமாதலால் अविद्याश्रयकार एव हि निरूप्यते—

ஆகவே அத்வைதிகளில் விபாகம் ஏற்பட்டிருக்கிறது. மாயை - அவித்யை இவைகளால் யேற்படும் வாதங்கள் எல்லாம் கண்டிக்கப்பட்டன. அக் ஞானத்தினுலே மாயின் என்று சொல்லப்படும் பிருஹ்மம் (மாயையைத்தன்வசம் வைத்திருக்கும் ஈஸ்வரன்) தான் ஜீவனுக ஆவது என்பது ஒருக்காலும் இல்லை - அந்த மாயாவி - மற்ற பரவஸ்துக்களைக் கண்டு, மோஹத்தை அடையமாட்டாது. ஆதலால் மாயை மாயாவிக்கு தர்சன ஸாதனமாக அமையாது. தாமுகவே பார்த்துப் பிரமிப்பதும்-பரவஸ்துக்களைக் கண்டு மோஹமடைவதும் - பிருஹ்மத்துக்கு யேற்படாது. ஆகையால் பிருஹ்மத்திற்கு மாயையோ அதனுல் யேற்படும் ஜிவத்தன்மை - ஜீவன் மோஹமடைதலைக் காரணமாக உள்ளது என்று சொல்லப்படுமாகில் - அப்போது (நாம் கேட்பது) பரிசுத்த அகண்டைகரஸ ஸ்வபிரகாச பிருஹ்மத்திற்கு - பரதர்சனம் (பிறவஸ்துக்களைக் கண்டு மோஹமடைதல்) - மாயையினுல் - மாயையின் காரியமாக அவித்யையே யாகும் என்பதாகும். ஆகவே நாம் சொல்வது - விபரீததர்சன ஹேதுவினுல் அவித்யை யேற்படுகிறது; மாயை என்பது மித்யாபூதம்; பிருஹ்ம வ்யதிரிக்த (வேருன)

எல்லா வஸ்துக்களும் மித்யாத்வத்தைக் காட்டுகின்றது - அதனால் பிருஹ்மம் விபரீததர்சனஹேதுவாக அமையாது. அப்படியானால் பிருஹ்மத்திற்கு அவித்யை யேற்படாது.

நீ சொல்வதும் சரியில்லை. சந்திரன் ஒன்றுதன் - ஆனால் திமிர தோஷத்தினால் இரட்டை சந்திரர்கள் தோன்றுகிறார்களே இதுவும் அவித்யையைப் போலவே. ஆகவே பிருஹ்மம் மித்யையை அடைந்ததால் - தன்னைவிட வேறு ஒன்றைக் அறிகிறதே - அதற்கு அது மோஹத்தை அடைகிறது என்று அர்த்தமில்லை. மாயைக்கு தர்சன ஸாதனம் ஒன்றுமில்லை. அதனால் அது மித்யாத்வேந அறிவுள்ளவர்களை மோஹிக்கச் சக்தியுடையது என்று சொல்லப்படுவதற்கில்லை.

ஆகவே, அவித்யை அபுருஷார்த்த-அபரமார்த்த தர்சன ஹேதுவாகும். ஆனால் மாயையோ பிருஹ்மத்துக்கு அபுருஷார்த்தத்தைக்காட்ட ஸாதனமாகாது-அது (அவித்யைக்குத் தான் உண்டு). ஆகவே இவர்களுடைய மதம் அவித்யாத்வம் என்பது இல்லை. மாயை தான் என்றால் அதுவும் இல்லை என்போம். நாம் த்விசந்திர ஞானத்தில் துக்க ஹேது இல்லாதபடியால்-இதில் அபுருஷார்த்தமும் இல்லை. ஆனால் அவித்யை விஷயத்தில் அவ்விதமல்ல. அவித்யையை ஒழிப்பதற்கு வேதாந்த சிரவணம் இத்யாதி முயற்சி எடுக்கிறார்கள் - (நீ சொல்கிறபடி) - மாயை அபுருஷார்த்தத்தைக் காட்ட ஹேதுவாக வில்லாத போனால், அதை அனுசரிப்பதால் நித்யமாகவுள்ள பிருஹ்மஸ்வரூபம் அதன் தோஷத்தை அடையலாம். என்ன தோஷம் இருக்கக்கூடும் என்றால் - த்வைத தர்சனமேவதோஷமாகும். அபேத சுருதிக்கு விரோதம் யேற்படும். பிரு. உ. यत्र हि द्वैतमिव भवति यत्रत्वस्य सर्वं मात्मैवाभूत्..तत् केन कं पश्येत् । (எங்கே இரட்டையாக விருக்கிறதோ - எங்கே எல்லாம் ஆத்மபாவமாக ஒன்றாக ஆகிறதோ அவன் அங்கே எதைப்பார்ப்பான்-யார் பார்ப்பான் எவனை எதனால்? (ஸ்வரூப ஐக்யம் பேசப்படுகிறது). இம்மாதிரி சுருதிகளுக்கு பேததர்சனம் விரோதிக்கிறது.

(இங்கே சொல்லப்படுவது மாயைக்கும் அவித்யைக்கும் உள்ள தாரதம்யம். மாயை ஒரு வஸ்துவை மித்யையாகவே காட்டுகிறது அவித்யையோ பலவகைப்பட்ட மித்யா தர்சனத்திற்கு ஹேதுவாகிறது. பிருஹ்மத்தைத் தவிர வஸ்து ஒன்றுமில்லை - அதனுல் மாயை பிருஹ்மத்தினிடம் அவித்யையை உண்டாகக் காரணமாகாது. இவ்விதம் சொல்வதும் தவறு. இரட்டை சந்திரர்கள் தோன்றுகிருர்களே என்ருல் இது அவித்யையினுல் கல்பிதம். பிருஹ்மத்திற்குத் தன்னைத் தவிர வேறு ஒரு வஸ்துவுமில்லை - அது இருந்தால் மித்யை - அப்படியானுல் மாயை பிரும்மத்தின் ஞானத்தை மறைக்காது என்பதாகும்).

(இன்னொரு அபிப்ராயமும் சொல்லப்படுகிறது - அவித்யையே தவருன காட்சிகளுக்குக் காரண ஹேது, மாயை பிருஹ்மத்தினிடம் அவ்விதம் தோன்றுவதற்குக் காரணமாகாது. ஆகவே மாயைக்கு அவித்யா தோஷம் இல்லை - இதுவும் தவறு. இரட்டை சந்திரர்களின் காட்சி அபுருஷார்த்தங்களாகிற சுகதுக்கங்களுக்கு காரணமாகாது. அதனுல் அடையப்படவேண்டிய புருஷார்த்த லாபமாகாது - அது அவித்யையினுல் உண்டாக்கப்படுகிறது. அதனுல் அவித்யை நீங்குவதற்கு முயற்சிக்கிருர்கள்; வேதாந்த சிரவணம் செய்கிருர்கள்.

இதனுல் மாயை பிருஹ்மத்தை விட்டுப் பிரியாத ஸ்வரூப சேர்க்கை கொண்டது. இதனுல் பிருஹ்மத்துக்கு யாதொரு தோஷம் சம்பவிக்காது. இவ்விதம் சொல்வதிலும் தவறு உண்டு. பிருஹ்மம் மாயையினுல் த்வைத பாவத்தை அடையும். எங்கேயும் இரட்டையாகப் பார்ப்பது அபேத சுருதிக்கு விரோதம். இவ்வளவு அர்த்தங்கள் மேற்சொல்லப்பட்ட விஷயங்களால் காட்டப்படுகின்றன).

**ஸ்ரீபாஷ்யம்:**—மேலும் இங்கு சொல்லப்படும்-பரமார்த்த விஷயத்திலே அத்வைத சுருதிகள் சொல்லும் போது - பிருஹ்மத்தை அபரிச்சின்னமாகச் சொல்கின்றன - அபரிச்

சின்ன ஆனந்தைக ஸ்வரூபம் பிருஹ்மம் என்று சொல்லும் போது - மாயையோ அபரமார்த்தத்தை ஸ்வரூபமாக உடையது - என்று சொல்வதால் - விரோதம் யேற்படுமே யென்ருல் - அபரிச்சின்ன ஆனந்தைக ஸ்வரூபமாகவுள்ள பிருஹ்மம் - மாயையின் தரிசனமோ அபரமார்த்தம்; அதனுடன் சேர்க்கை சம்பந்தம் அவித்யைக்கு இல்லாமையாலே-பிருஹ்மத்திற்கு யேற்படுகிறதில்லை. (அவித்யைதான் காரணமாகும் - அதில்லாதபடியால் மாயையின் சம்பந்தம் யேற்படாது பிருஹ்மத்திற்கு) - (அத்வைதி) (சுருத பிரகாசிகை - மாயா பர ப்ரம ஹேது ; அவித்யா - ஸ்வ ப்ரம ஹேது - என்கிறது. (அதாவது பிருஹ்மம் தன்னிடமே மாயையின் ஸ்வரூபத்தை கற்பிக்கிறது-மாயா ரூப தரிசனம் என்பதற்கு அர்த்தம். மாயா சம்பந்தத்திஞல் அவித்யை உண்டாகிறது; மாயை பிருஹ்மத்தின் அதீனமாக கார்யமாகவிருப்பினும் - பிருஹ்மம் ஸ்வரூபத்திலே அபரிச்சின்ன ஆனந்தத்துடனிருக்கிறது.) அப்பேற்பட்ட அபரமார்த்தமாகிற மாயையினுல் பிருஹ்மத்திற்கு யாது பிரயோசனம் என்று கேள்வி கேட்கப்படுகிறது - ஜீவனை மாயை வசப்படுத்துகிறது என்ருல் - அப்படிப்பட்ட மோஹத்திஞல் யேற்படும் அபுருஷார்த்தத்திஞலே யாது பிரயோசனம் ? क्रीडेति चेत् - பிருஹ்ம்த்துக்கு லீலையாகிறது - விளையாடுகிறது. அபரிச்சின்ன ஆனந்த ஸ்வ ரூபமாகவிருக்கிற பிருஹ்மத்துக்கு எதற்கு க்ரீடை (ஆனந்த மாயோ மயஸ்வரூபத்வே ஸ்வரூப தரிசனம் அவர் ஜனீயம் ஸ்வாபாவிக மிதிஸ்யாது - ததபாவாத வித்யயைவ ததுபபாத்ய மிதிபாவ: - (உத்தமூர் ஸ்வாமி).

பரிபூர்ண போகம் என்பதே க்ரீடை (அதாவது இங்கு கேள்வி - மாயையினுல் பிருஹ்மத்துக்கு யாது உபயோகம்? அந்த மாயையே அபர மார்த்தமாகவிருக்கிறது. அது ஜீவனை மோஹித்து வஞ்சிப்பதற்காக வென்ருல் - அது அபுருஷார்த்தமாதலால் அதனுல் என்ன உபயோகம் ? எல்லாம் க்ரீடை என்ருல் ஸ்வரூபமாகவே ஆனந்த ஏகரஸமாகவிருக்கிற பிருஹ்மத்துக்கு க்ரீடையால் யாது பிரயோ

சனம்?). அதற்குப் பதிலாக - பரிபூர்ண போகங்களை அனுபவிக்கும் மேலான புருஷனுக்கே க்ரீடையே பரம புருஷார்த்தமாகவிருக்கிறது - அது லோகத்தில் காணப்படுகிறதே என்றால் - இங்கே இந்த உதாரணத்தினால் சொல்வது சரியல்ல. க்ரீடையோ அபரமார்த்தம்; க்ரீடோப கரணங்களும் அபரமார்த்தம். ஆகவே தோற்றத்தால் யேற்படுவதும், ஸாதனங்களால் அபர மார்த்தமாகவிருக்கும் இந்த விளையாட்டு அதுவே அபர மார்த்தமாகவிருப்பதாலே - அது பைத்தியமில்லாதவர்களன்றி மற்றவர்களில் உற்பத்தியாகாது (அதாவது இப்படி நீ சொல்கிறாயே-அது பைத்தியகாரத்தனம் தான் என்பதாகும் - இது நமது பதில்-அத்வைதிக்கு).

மேலும் முன் சொல்லப்பட்ட பிரகாரம் மாயை பிருஹ்மத்தை ஆஸ்ரயம் செய்வதால், அதற்கு விரோதமாக அவித்யை ஜீவனை ஆஸ்ரயிக்கிறது - இது கல்பிதம் என்பதும் அஸம்பவம். (அதாவது ஜீவகல்பகத்வம் பிருஹ்மமே என்று சொல்வது - இதனால் பிருஹ்மத்திற்கு அக்ஞானம் யேற்படுவதாக அத்வைதி சொல்வது அவர் ஜனியம் - விலக்கமுடியாதது - அதனால் பிருஹ்மமே ஜீவனாகிறது - என்று சொல்லப்படுமானால் - அப்படியானால் மாயா - அவித்யா என்று விபாகம் யேற்படுகிறது. மாயா ஸ்ரயதயா என்று ஏன் சொல்லவேண்டும். அவ்விதமாகில் ஜீவாக்ஞான பக்ஷம் நிரஸனம் என்பதாகும்). அதனால் பிருஹ்மமே அநாதி அவித்யையின் சம்பந்தத்தால் பல பாகங்களாகப் பிரிக்கப்பட்டு அதனாலே அந்த பிருஹ்மத்திற்கு நானாத்வம் (பஹுத்வம்) தன்னிடமே பார்க்கும்படி நேரிடுகிறது; என்பதை சொல்பவர்களால் பிருஹ்மம் அத்வீதீயம் என்பதை ஒப்புக் கொள்பவர்களால், இதுவும் ஒப்புக்கொள்ள வேண்டியதாகும்.

மேலே சொல்லப்பட்டது - பத்தன் (ஸம்சாரீ) - முக்தன் எனப்படும் அவஸ்தை நிச்சயிக்கப்படமாட்டாது; இந்த ஆட்சேபம் பிருஹ்மாக் ஞானவாதிகளால் சொல்லப்படமாட்டாது.

கீழ் சொல்லப்படும் இந்தக் காரணங்களாலே. பிருஹ்மம் ஒரே ஒன்று - அது அக்ஞானமடைகிறது - அந்த அக்ஞானம் நசித்ததும் அதற்கு பந்த மோக்ஷம் யேற்படுகிறது, இப்படியிருக்கும்போது, பத்தமுக்தாதி வ்யவஸ்தை இருக்கமுடியாது அவசியமில்லே. நாம் வ்யவஹரிக்கிறேமே - பத்தன்முக்தன் சிஷ்யன் ஆசார்யன் இத்யாதி வித்யாஸங்கள் எல்லாம் கால்பனீகம்தான் - எங்கனமெனில் ஸ்வப்னதர்சனத்தில் யேற்படுவதுபோல எல்லாம் அவித்யாகல்பிதம். ஸ்வப்னதர்சனம் ஒரு வ்யக்திக்கு ஏற்படுகிறது. (கல்பனீகம்) இவன் சிஷ்யன் ஆசார்யன்-இத்யாதி எல்லாம் அவித்யா கால்பநீகம். ஆகையாலே அபரமார்த்தமாகவிருக்கும் அவித்யை ஒரே ஒன்றுதான் - பல என்று சொல்வது யுக்திக்கு பொருத்தமல்ல.

(அத்வைதி) பிரயோகம்-வ்யவஹாரகமாக ஒப்பப்படும் பந்த மோக்ஷ அவஸ்தை, பிருஹ்மம்தான் ஸத்யம் - அது தவிர ஸர்வம் அபரமார்த்திகம் (மித்யை) என்று வாதிப்பவர்கள், அந்த பிருஹ்மத்திற்கு அவித்யா கல்பிதம் - இவை எல்லாம் ஸ்வப்னதிருஷ்டி எவ்விதம் கல்பிதமோ அதுபோலவாகும். சரீரத்தினுள்ளே - நானேதான் ஆத்மாவாகவிருக்கிறேன் இந்த சரீரத்தினுள்ளேயிருப்பது போல. அதாவது வ்யாப்தியைச் சொல்வது அனந்தபதம் அஸங்குசித விருத்தி அவ்விதம் சரீரத்தினுள்ளேயிருப்பினும் நான் என்பது அவித்யா கல்பிதம், (எவ்விதமாகும்?) சரீரத்வாத் அந்த சரீரம் செய்யும் கார்யத்வாத்; ஜடத்வாத் - இவை எல்லாம் இந்த சரீரத்தின் கல்பிதங்கள் வஸ்து அந்தரத்வம் - வஸ்து பரிச்சேதமாக விருக்கிறது என அர்த்தம். (இங்கே த்வைத கண்டனம் செய்கிறன் அத்வைதி).

வ்யவஹாரிகதசையிலே நாம் விவாதிக்கிற போது - அத்யாஸம் யேற்படுகிறதே-சேதன ஜாத அஹமேவ-என்கிற சைதன்யத்தால், - அதே மாதிரி நான் இல்லே - அங்கே அசேதனம் காணப்படுகிறது. எப்படி பானே முதலியவையோ அது போல. ஆகவே பிருஹ்மத்திற்கு தன்னிடமே ஆரோபிக்கப்படும் விபாகம் - பத்தன் முக்தன் சிஷ்யன்

ஆசார்யன் - இவை எல்லாம் அவித்யா கல்பிதம். (அப்போது என்ன யேற்படும் பத்தன் என்பவன் ஒருவனுமில்லை. அதுபோல் நான் முக்தன் என்று சொல்லப்படுவதுமில்லை). (இது த்வைத கண்டனம்). (அவிகாரத்வஸ்ருதிக்கு விரோதம்.)

வாஸ்தவமாகவே பத்தன் - முக்தன் என்கிற அவஸ்தைகள் ஜீவனுக்கு யேற்படுகின்றன. இவையெல்லாம் கல்பனை ஒரு கல்பத்தில் ஒவ்வொரு முக்தனும், அதாவது எல்லோருக்கும், மோக்ஷ ஸம்பவிக்கிறது என்று சொல்வது சரியாகும். கணக்கற்ற எண்ணமுடியாதபடி அமுக்தர்கள் (பத்தர்கள்) இருக்கிறார்கள் என்று சொல்லப்படின் - இந்த அனந்தத்வம் எப்படி வந்தது? கணக்கற்றவர்கள் என்று இல்லையென்றால், அல்ப அறிவுள்ளவன் - பல எண்ணிக்கை கணக்காக உள்ளவனாயினும், ஈஸ்வரன் ஸர்வக்ஞன், ஆனால், ஸங்க்யையாக (எண்ணும்படி) ஒருத்தனாகவிருக்கிறான். அவனுக்குக் கூட ஸர்வக் ஞத்வம் ஏற்படாது. ஆத்மா எண்ணிக்கை அற்றதாயும்-ஈஸ்வரனுக்கு அவித்யையினால் பல கணக்கற்ற அத்யாஸரூபங்கள் (நானாத்வம்) இல்லாதபடியாலே - அவனுக்கு ஸர்வக்ஞத்வம் யேற்படுவதில்லை என்று சொல்லப்படுமானால் - பின்ன பின்னமாக விருக்கும் ஆத்மாக்கள் எண்ணிக்கைக்கு அதீதமாகச் சொல்லப்படுவதில்லை. தான் எண்ணிக்கைக்கு உட்படுவதாயினும் - பின்னத்தாலே - பயிறு - கடுகு - பானை - துணி இவைகளைப் போல பலவாகின்றன - பின்னத்வத்தினாலும் ஆத்மாவுக்கு பானையைப் போல ஜடத்வம் அநாத்மத்வம் அழியும் தன்மை எல்லாம் யேற்படுவதாகிறது.

பிருஹ்மம் அனந்தம் என்பது இல்லையானால் - அனந்தத்வம் என்றால் - பரிச்சேதரஹிதத்வம். பேதவாதிகளும் கேட்கிறார்கள் - வஸ்து ஸ்வரூபத்திலே மற்ற வஸ்துக்களை விட விலக்ஷணமாக விருப்பதால் - பிருஹ்மத்திற்கு வஸ்து பரிச்சேதரஹிதத்வம் (அளவிடும்படி இல்லாமல் இருப்பது) சொல்ல முடியாது. வஸ்து பரிச்சின்னமாக (அளவிடும்

படி) யிருப்பது அந்த வஸ்துவின் இருப்பின் பாவமேதான் (ஸ்வரூபமாக விருப்பதே). ஒரு வஸ்துவுக்கு குறிப்பிட்ட ஸத்பாவம் இருக்குமாகில் - அது தேசத்தாலோ - காலத் தாலோ - அபரிச்சின்னமாக விருக்கிறது - என்று சொல்லப் படமாட்டாது. அந்த வஸ்து ஸ்வரூபத்திலே மற்ற வஸ்து களைவிட விலக்ஷணமாக விருக்கிறது என்றால் - அந்த வஸ்து பரிச்சின்னமாகத்தான் இருக்கிறது. கடாதிகள் தேசம் காலம் இவைகளினால் பரிச்சின்னமாகக் காணப்படு கின்றனவே - அதுபோல. அப்படி எல்லாச் சேதனர்களும் பிருஹ்ம வஸ்துக்களாக ஆகிறபடியால் பரிச்சின்னத்வம் (அளவிடும்படி எண்ணிக்கையுள்ளவர்கள்) தேசகாலம் முத லியவைகளிலும் அளவிடும்படி பரிச்சின்னமாக ஆகின்றனர். அவ்விதமானால் சுருதிக்கு விரோதம் யேற்படுகிறது. சுருதி யிலே தை ஆ. 1-1ல்) सत्यं ज्ञानं अनन्तम् (ஸத்யமாகவும் ஞான மாகவும் அனந்தமாகவுமிருக்கிறது (ஸ்வரூபேண) பிருஹ் மம்) இப்படி பரிச்சேதரஹித பிருஹ்மம் என்று சொல்லப் பட்டதற்கு விரோதம் யேற்படுகிறது. உத்பத்தி விநாசம் முதலியவை ஜீவனுக்கும் பிருஹ்மத்திற்கும் யேற்படும். (ஒரு வஸ்துவுக்கு) காலபரிச்சேதமே உற்பத்தி விநாசம் இரண்டும் அதனால் அடையப்படும் நிலையாகும்.

(இவ்விதமாக அத்வைதிகளில் ஒரு பகுதியினர் பிருஹ்ம அக்ஞானத்வபக்ஷத்தை கூறி முடிக்கிறார்கள் தார்க்கிகன் பிரதான பூர்வபக்ஷி அவன் பின்னால் பதில் சொல லப் போகிறான். இப்போது அத்வைதபக்ஷம் சுருக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது). (விவர்த்த வாதத்தில் அத்யாஸ அதிஷ்டானம் யேற்படுகிறது - பரிணாமமில்லை என்று அர்த்தம்).

**தீர்மானம்:**—ஆகையால் ஒரே ஒரு அபரிச்சின்ன பிருஹ்மம் விஅத்யையை அடைந்து அதனால் மோஹித்துப் போய் பிருஹ்மம் முதற்கொண்டு ஸ்தம்பம் (புல்) வரை சம் பூர்ணம் ஜகத் சுகதுக்க பிரதி வஅஸ்தைகளை அடை கின்றனர், ஸ்வப்னாவஸ்தையில் அவித்யையினால் ஸ்வபாவ்

யம் பேதப்படுவதுபோல. ஆகையால் ஒரே பிருஹ்மம்-நித்ய சுத்த முக்த ஸ்வபிரகாச ஸ்வபாவமுள்ள பிருஹ்மம்-அநாதி யாகவரும் அவித்யையின் வசமடைந்து - ஜகத்வடிவமாக (நான் பலவாக ஆவேன்என்று சொல்லும்படி) விவர்த்த இதி (தோன்றுகிறது) என்றும்; பிருஹ்மம் ஸ்வரூபத்திலே பரமார்த்தம் - அதைவிடவேருனதில்லையான ஜகத் (அனன்யத்வம் तत् जगत :- அது ஜகத் என்பதாகும் (மித்யையாகும்) (அதாவது பிருஹ்மம் அத்யாஸத்திற்கு இருப்பிடமாகி - ஜகத்தாகத் தோன்றுகிறது; பிருஹ்மத்தைத் தவிர வஸ்து வேறு ஒன்றுயில்லாதபடியால் ஜகத் பிருஹ்மத்துடன் ஒற்றுமையை அடைகிறது (வ்யவஹாரிக தசையில்); (பாதிதமும் ஆகிறது) பரமார்த்த தசையில். ஆகவே பிருஹ்மம் காலதேச ரஹித அனந்தத்துவம் கொண்டது எப்போதும் எங்கேயும் இருக்கிறது. அதைத்தவிர வேறுவஸ்து இல்லை. இதனுல் வேறு ஒரு வஸ்து ஸத்யம் என்ருல் - பிருஹ்மத்திற்கு இல்லையென்று ஆகிவிடும். ஏகமேவ அத்வீதீயம் என்பதால் பிருஹ்மமே பரமார்த்தபூதம்-அதைவிட அந்யத்வம் (ஜகத்) மித்யை என்பதாகும்.)

தார்க்கிகன் (வைசேஷிகன்) பதில் சொல்கிருன் - பிரதானபூர்வபக்ஷி - நிர்விசேஷ ஸ்வபிரகாசமாத்திரம் பிருஹ்மம் அநாதி அவித்யையினுல் மறைக்கப்பட்டு-தனது சொந்த ஸ்வரூபத்தை இழந்து-அதனுல் தனக்குள்ளே யேற்படும் நாநாத்வம் (பேதம் - அநேகம்) கொண்டதாகப்பார்க்கிறது - அதனுல் அதன்பிரகாச ஸ்வரூபம் பிரகாச நிவிருத்திருபமாகிறது - திரோதனத்தால் - (பிரகாச நிவிருத்தி என்று அர்த்தம்) அதாவது பிருஹ்மம் ஸ்வரூப நாசத்தை அடைகிறது-திரோதானம் அஸம்பவம் (ஏற்படப்படாது). அது ஸகலபிரமாண விருத்தம் - அத்வைதியின் சொந்த வசனத்துக்கே விரோதம் - என்று முன்னமே சொல்லப்பட்டதாகும். அதைச்சொன்னுல் புநருக்த தோஷம் யேற்படும். காரணத்திலிருந்து வேருன காரியம் - எப்படி சிப்பியில் வெள்ளியின் தோற்றமோ அதில் சிப்பியின் தோற்றம் பாதிதமாவதால்-அந்த உதாரணத்தைப் போல-பிரமம்

தான். இவ்விதம் சொல்வது அயுக்தம் - ஏனெனில் யுக்தி இல்லாதபடியால். ஒரு காரணவஸ்து அது தொடர்ந்து விருக்குமானுல் ஸத்யத்வமாகிறது (உண்மையாகிறது) - அதனுடைய காரியங்கள் வேருனபடியால் கடம்-தட்டு-இத்யாதி காரியங்கள் அஸத்யத்வம் (மித்யை) என்று சொல்லப் படுகின்றன (அழியக்கூடியவை).

அப்படியிருந்த போதிலும், இந்த (சுக்தி) வாக்யம் பாதிதமாகிறது-பாதிதம் என்பது ஒரு இடத்திலே யிருந்து இன்ஞெரு இடத்தில காணப்படுவது; - இன்ஞெரு தேசத்திலிருந்தால் பாதிதமாவதில்லை - வஸ்துவின் ஐக்யம் பாதிதமாவதில்லை என்கிற ஆட்சேபத்திற்கு சமாதானம் பூர்வமேவ கூறப்பட்டது. ஏனெனில் (முந்தியே சொல்லப்பட்டது) காரியம் என்பதற்கு அஸத்யத்வம் யேற்படுகிறது - அதற்கு விநாசம் யேற்படுவதாலும்-கண்ணுக்கு (அறிவுக்கு) புலப்படுவதாலும் ஸத் - அஸத் என்கிற (இருக்கிறதா - இல்லையா என்கிற) அநிர்வசனீய்த்வம் (உரைக்க முடியாதபடி) யேற்படுகிறது. அதனுல் கார்யம் மித்யை என்பது அஸத் (சரியாகாது) (அத்வைதி ஸத் - அஸத் என்பதை அநிர்வசன்யம் என்கிருன் - ஆனுல் இது ஆகாசத்தாமரையைப் போல அஸத்யமான வஸ்துவில்லை என்கிருன்.)

ஔபாதிகமாக காலம் முதலியவைகளால் பாதிதம் என்கிற விஷயம் முன்பேகூறப்பட்டதாகும். மித்யை அநித்யமாதலால் பேதம் ஏற்படுகிறது. இங்கேயும் ஔபாதிகமாக யேற்படுவதாகும். தேசகாலங்களில் யேற்படும் பிரமும் கூட ஔபாதியினுல்-உபாதி நஷ்டமடைந்தால்-பாதிதம் ஆகிறது. தேசகால ப்ரமம் எப்படி ஏற்படும் - என்பதற்கு சுருத பிரகாசிகையில - ஒரு துர்த்தினத்தில் (மழைவிடாமல் பெய்து கொண்டிருக்கும் தினத்தில்) ஆதித்யன் காணப்படுவதில்லை-சாயம் வந்துவிட்டதா எனத் தெரியவில்லை - பிற்பாடு ஆதித்யனைக் கண்டதும் प्रबुद्ध एवं मन्यते - அதுபோல अहं बुद्धः ஆனுல न तदानीं प्रभातमिति च; यथाहं सुप्तः; नायं स देश इत्यादि).

**ஸ்ரீபாஷ்யம்:—**அவ்விதம் சொல்வது சரியில்லை - ஏனெனில் பிரத்யக்ஷ அறிவினால் (உபலப்தி) இருப்பதாகவும், அது நாசத்தை அடைந்து விட்டதாகவும்-என்பதினால் அந்த வஸ்து மித்யையாகவுள்ளது என்பதை ஸாதிக்காது - ஏனெனில் காரியம் அநித்யம். எந்த எந்த தேசகால ஸம்பந்தத்தினால் எது பிரத்யக்ஷத்திற்கு (அறிவுக்கு) விஷயமாகிறதோ அந்த அந்த தேசகாலசம்பந்தத்தினால் பாதிதத்வம் யேற்படுமே ஒழிய - அது மித்யாத்வத்திற்கு ஹேதுவாகாது. தேசம் காலம் இவைகளுடன் சம்பந்தத்தால் யேற்பட்ட உபலப்தி (ஞானம்) அன்ய தேசகால சம்பந்தத்தால் பாதிதமாகிறது என்றால் அர்த்தம் இதுதான் - தேசாந்தரகாலாந்தர வ்யாப்தி அதற்கு உண்டா இல்லையா-என்பதை ஸாதிக்கிறது - அதனால் न तु मिथ्यात्वम् அது பொய்யாகாது. प्रतिप्रयोगश्च - (Counter Syllogism) - கடாதி கார்யங்கள் ஸத்யம் தேசகாலாதி உபாதிகள் காணப்படுவதாலே, அதனாலே அபாதிதமாகாது - ஆத்மாவைபோல (பாதிதம் அந்த அந்த தேசகாலங்களால் ஏற்படணும். அதில்லாத போனால் - வியாப்தியில்லையே ஒழிய - பாதிதமில்லை என்பதாகும். அதனால் காரியம் மித்யை அல்ல - ஸத்யமே ஆத்மாவைப் போல - ஆத்மா நித்யம். (இங்கே ஒப்புக் கொள்ளப்படுகிறது அத்வைதியினாலேயும்-வைசேஷிகனாலேயும் அந்த அந்த தேசகாலத்துடன் சம்பந்தப்பட்ட பானை ஆத்மாவைப் போல நித்யம் அங்கே பாதிதம் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. உபாதிகள் தேசகாலத்தைத்தவிர வேறு இல்லை - அதனால் பிரமம் யேற்படுவதும் சரியாகும் என்கிறார்கள்).

மேலே என்ன சொல்லப்பட்டது என்றால், காரண ஸ்வரூபத்திலிருந்து - அதாவது முந்தியிருந்த அவிகிருத நிலை அல்லது பிற்பாடு யேற்பட்டுள்ள மாறுதலான நிலையிலேயும் — இரு நிலைகளிலும் ஸ்வரூபத்திலிருந்து காரியம் உண்டாவதில்லை (ஏற்படுவதில்லை) என்று நீ சொல்வாயாகில் - அதற்கு நாம் பதில் சொல்வது அது அஸத்தாகும்.

தேச காலாதி ஸஹவாசத்துடன் காரணம் இருந்து-காரியம் உற்பத்தியாகிறது. இந்த சம்பந்தம் (ஸஹவாசம்) காரணத்திற்கு அதன் இரு நிலைகளிலும் (விக்ருத-அவிகிருத நிலைகளிலும்) ஏற்படுவதில்லை என்று சொல்வதும் அயுக்தம் ஏனெனில் எது முந்தி அவிகிருத நிலையில் இருந்ததோ-அது தான் தேசகால சம்பந்தம் பெறக்கூடும். மேலும் நீ சொல்ல லாம் - அவிகிருத நிலை மாறுவதில்லை - என்பதால் - தேச கால சம்பந்தம் அதற்கு முந்தியே யேற்படுகிறது. இப்படி சொல்வாயாகில், நாம் பதில் கூறுவது - தேசகால சம்பந்தம் (ஜீவனின் கர்மம் - பகவானின் சங்கல்பம்) போன்றவைகளை நம்பியது - அதனால் காரணத்திற்கு காரியத்தை நம்பிய தாதுகா.

(இங்கே சொல்லப்படுவது - காலம் அநாதி - தேசம் அநாதி. காரியம் காரணத்திலிருந்து உண்டாவதற்கு பஹிர் காரணங்கள் தேவைப்படும் - ஜீவனின் கர்மம் - பகவத் சங்கல்பம் இத்யாதி).

ஆகையால் ஒரு காரணம் ஒரு குறிப்பிட்ட தேசம் காலம் இவைகளுடன் சம்பந்தப்பட்டு ஒரு காரியத்தை உண்டாக்குகிறது. இப்படி சொல்வதால் தவறு இல்லை. இதனால் மறுக்கப்படவில்லை - முடியாது - எது (காரணமாக விருந்து) அபாதிதமாகவிருக்கிறதோ - அதற்கு காரியத்தை உண்டுபண்ண சக்தி யுண்டு. எந்தப் பிரகாரமும் இதை பாதிப்பதற்கு (மறுப்பதற்கு) முடியாது.

மேலே காட்டியபடி, தங்கம் முதலிய காரண வஸ்துக் கள் ருசகம் (நெக்லஸ்) போன்ற காரியங்கள் - இவைகளுக்கு (இல்லை - தங்கத்திற்கே அதன் காரியங்களுக்கு) - ஸ்வதந் தரமாக காரியங்களுக்கு இருப்பிடமாக ஆவதில்லை - இவ் விதம் கூறுவதும் சரியில்லை - நாம் சொல்வது தங்கம் - தேசகால சம்பந்தத்தால் காரியங்களை உண்டாக்க சக்தி பெற்றவை. அதனால் இந்த காரியம் அதன் காரணமாகிற தங்கத்தைத் தவிர வேறு ஒன்றையும் இல்லை - எனச் சொல்

லக்கூடாது - ஏனெனில் ஸ்வஸ்திகா (காரியம்) தங்கத்தை (வ்யதிரிக்த) விட வேறு ஒன்ருகக் காணப்படுகிறது. மேலும் காரணத்தைத் (தங்கத்தை இங்கே) தவிர வேறு ஒன்று இருப்பதாக ஸ்தாபிதம் - புத்தி சப்தாந்தரத்திலே இது தங்கம் - இது ருசகம் என்று அறிவுக்கு வித்யாஸ மாகக் காட்டுவதாலே - இரு வஸ்துக்களிலும் உள்ள வித்யா ஸங்களாலே தெரியவரும்.

சுக்தி - ரஜதம் (முத்துச் சிப்பி - வெள்ளி) இந்த உதார ணத்திலே, வெள்ளி தவருகக் காணப்படுவது பொய் அல்ல. (பிரமத்திஞல் அல்ல) - ஏனெனில் ஒரு வஸ்து அது உற்பத்தி காலத்திலும் - அதன் அழிவு காலத்திலும் - அந்த தேசகாலாதிகளால், பாதிதமாவதில்லை. இதில் யேற்படும் அந்த உபலப்திக்கு (அறிவுக்கு) பாதிதம் செய்வதற்கு ஒன்றுமில்லை. (இதனல் உற்பத்தி - அழிவு (ஒரு வஸ்து வுக்கு அந்த வஸ்து அநித்யம் அல்லது பொய் என்பதைக் காட்டும்). அதே மாதிரி முந்தியிருந்த (காரணப் பொருள்) தங்கம் - பிற்பாடு ஸ்வஸ்திகா என்று ஆவது (காரியம்) - இவைகளின் அறிவு காணப்படும் சமயத்திலும் - காரிய மாவதற்கு முந்தின சமயத்திலும் பிந்தியும் - இரண்டு தசை களில் தொடர்ந்து காரணவஸ்துவே காரியத்திலும் காணப் படுவதால் - யாதொரு விரோதமில்லை. (ஆகவே காரணத் திலும் காரியம் இருக்கும் - தங்கமே ஸ்வஸ்திகா ஆவதற்கு இருப்பிடமாக விருப்பதால்.)

(ஆகவே நாம் சொல்வது (விசிஷ்டாத்வைதி) - சுருதி களால் முந்தியே காட்டப்பட்டது - ஜகத் மித்யை அல்ல என்று. இப்போது நாம் சொல்வது பிரத்யக்ஷ விரோதமும் சுருதிக்கு இல்லை என்பதாகும். प्रत्यक्षाविरोधादि प्रतिवक्तव्यम् तदपि सर्वं पूर्वमेव सूक्तम्.)

(சித்தாந்த ஆரம்பம்) (அத்வைதிகள் சொல்கிருர்களே) சாஸ்திரம் பலியஸ் - பிரத்யக்ஷ விரோதம் யேற்படின் என் கிருர்கள் - வேதங்கள் காரியத்தை மித்யையென்றும் - அது

பிரத்யக்ஷத்திற்கு விரோதமானாலும், வேதம் சொல்வதால் நாம் ஒப்புக் கொள்ள வேண்டியது - என்பது இதற்கு நாம் பிரதி உத்தரமாகச் சொல்வது - பிரத்யக்ஷத்திற்கும் சாஸ்திரத்திற்கும் விரோதம் யேற்படவில்லை என்பதாகும், (ஏனெனில் காரணமும் ஸத்யம் காரியமும் ஸத்யம் என்பதாகும்.)

என்ன விதமாக மேலே (அத்வைதிகளால்) சொல்லப் பட்டதோ ஒரே ஒரு ஆத்மா-அதுவே ஏகஜீவபாவம் அதுவே எல்லாச் சரீரங்களையும் அடைகிறது ஆத்மவந்தி - என்று சொல்வது சரியில்லை ஏனெனில் அந்த ஒரே ஒரு வ்யக்தியில் எல்லாச் சரீரங்களால் யேற்படும் சுகதுக்கங்கள் யேற்படும்- என்பதாகும். (एकस्यैव सर्वशरीरप्रयुक्तसुखदुःखप्रतिसन्धानप्रसङ्गात्) ஸௌபரி ரிஷியை இதற்கு உதாரணம் காட்டப்படுகிறது. ஒரே ஆத்மா பல சரீரங்களில் சஞ்சரித்துக் கொண்டு சுக துக்கங்களை அனுபவிக்கிறது, என்று அத்வைதிகள் சொல்வது - அதற்கு நாம் சொல்வது — அவ்விதம் சொல்வது சரியில்லை - அந்த अहं என்கிற பதம் (நான்) அதற்கு அறிகிறகுணம் உண்டு அப்படி பல சரீரங் களிருப்பின் - அவைகளின் அனுபவங்களை ஒன்று சேர்த்து இதுதான் 'நான்' என்று சொல்லமுடியாது ஏனெனில் சுக துக்கங்கள் பலவிதம் - பலவகைப்பட்டது - ஆனால் அனு பவிக்கிற ஆத்மா ஒன்றுதான் - பலவாகவில்லை. இதனால் ஆத்மா அறிபவனாக விருக்கிறான் (கேவலம் ஸ்வரூப ஞான மாத்திரமில்லை) आत्मा ज्ञातैव - அறிகிறவனாகவிருக்கும் நான். என்பவனே - स चाहमर्थ एव - (இங்கே சங்கரர் அந்தக் கரணத் தைப் பற்றிச் சொல்கிறார். அதமூலே) அந்தக் கரணபூத மான அஹங்காரம் என்பது மனத்தினுள் இருக்கும் ஒரு அவயவம் - இந்திரியத்தைப்போல விருப்பது - அது அசே தனம் அறிமாட்டாதது - அது எப்படியோ அதுபோல சரீரங்களும் வெளிஇந்திரியங்களும் அசேதனமானபடியாலே அறியமாட்டார்கள். जडत्वात् करणत्वाच्च शरीरेन्द्रियादिवन्न ज्ञातेत्युप- पादितत्वात्)

மேலும் சொல்லப்பட்டது - எல்லாச் சரீரங்களும் ஒரே ஒரு அவித்யையினுல் கல்பிக்கப்பட்டவை - ஏனெனில் அவைகளுக்கு சரீரத்வம் யேற்படுவதும் ஜடமாகவிருப்பதும் அவை காரியங்களாக விருப்பதாலே. அப்படியாயினும் அது சரியாகாது, ஏனெனில் எல்லாத் தேகங்களுக்கும் அவித்யா கல்பிதத்தினுல் யேற்பட்டவை ஆகாது; அவ் விதம் இல்லாமலிருப்பது அபாதத்தினுல் யேற்பட்டதான படியால், அதற்கு ஸத்யத்வம் உண்டாகக்கூடும்.

(இங்கு இரண்டு விஷயங்கள் சொல்லப்படுகின்றன. ஒன்று ஸௌபரி உதாரணத்தினுல் ஏகஜீவபாவம். அதற்கு சமாதானம் - அந்த ஒரே ஆத்மாவுக்கு எல்லா சுக துக்கங் களும் அனுபவிக்கநேரிடும் - அதற்கு எல்லாவற்றையும் சேர்த்து ஒரே படியாகச் சொல்ல இயலாது. இன்னொரு விஷயம்-அத்வைதி சொல்வது அறிகிற தன்மை அத்யாஸத் தினுல் அஹங்காரத்தில் யேற்படுகிறது - நாம் சொல்லும் ஆட்சேபம் அஹங்காரம் ஒரு இந்திரியசமானமே-அசேதனம்• "நான்" என்பவன் அறிபவனுக விருக்கிருன் - அத்வைதி சொல்வது "நான் என்பது அஹங்காரம் (அந்தக் கரணம்) அதனுலே பல தேகங்களின் அனுபவங்கள் பிரதி ஜீவனுக்கு யேற்படுகிறது. ராமானுஜர் - வைசேஷிகர்கள் சொல்வது நான் அறிபவனே. வைசேஷிகனுக்கு ஞானம் வந்தும் போய்க் கொண்டிருக்கும் - க்ஷணிகம் - ராமானுஜருக்கு ஞானம் ஸ்வரூபமாயும்-குணமாகவுமுள்ளது, தர்மிபரமாகவு முள்ளது. இவ்விதம் வித்யாஸமிருப்பினும் - இரண்டு பேர்களும் சேர்ந்து அத்வைதியைக் கண்டிக்கின்றனர்).

மேலும் சொல்லப்பட்டது. எது சேதனத்வத்தைவிட அன்யமாக விருக்கிறதோ - அதற்கு ஜடத்வம் உண்டாவ துண்டு. எல்லா சேதன வஸ்துக்களும் ஒரே மாதிரியாக விருக்கும், ஆயினும் இதுவும் மறுக்கப்பட்டது - சுகதுக்க வ்யவஸ்தைகளில் (கர்மம், காலம், பகவத் சங்கல்பம் காரண மாக) பிரதி ஜீவர்களுக்கும் வித்யாஸம் இருக்கக்கூடும் - என்பதும் மறுக்கப்பட்டது (அதாவது பிரயோகத்தில்

(Syllogism) ஒரே ஒரு அவித்யை எல்லாத் தேகங்களையும் உண்டாக்காது. இந்த தேகங்கள் அநித்யம் - ஆனால் மித்யை அல்ல.)

மேலே சொல்லப்பட்டது - நானே ஆத்மா எல்லாச் சரீரங்களுக்கும் - இந்த சரீரங்கள் என்னுடைய அக்ஞானத் தினால் உண்டாயிற்று - ஆகவே "நான்" எனப்படும் வஸ்து (ஆத்மா) எல்லாச் சேதன வஸ்துக்களாக விருக்கிறேன் - अहमेव ஸர்வ சேதன जातमित्यहमर्थस्यैक्यमुपपादितम् तत् நான் என்பது ஒன்றே ஒன்று - என்று எவன் சொல்கிறானோ அவனுக்கு தன் பக்ஷத்தின் (ஸ்வ) சித்தாந்தம் என்பது சரி யாகத் தெரியவில்லை - பிராந்தி ஜல்பிதம் என்போம் (நாம் அத்வைதியை நோக்கிச் சொல்வது) - உன் அபிப்ராயத்தில் ஆத்மா சிந்மாத்திரமே அது अहं त्वं இவைகளிலிருந்து விலக்ஷணமானது (வேறுபட்டது).

(இங்கே சொல்லபபடுவது - ஆத்மா, நான்-நீ என்பவை களின் வேறாகவிருப்பதால் - அது "நான்" என ஆக மாட்டாது. அதனால் - "என் அவித்யா" என்று சொல் கிறாயே - அதனால் நீ என்ன ஸாதிக்க விரும்புகிறாய்).

மேலும் (அத்வைதி சொல்வது) நிர்விசேஷசிந்மாத்திரம் ஸத்யம் - அது தவிர ஸர்வமும் மித்யை என்று சொல்கிறார் களே அவர்களுக்கு மோக்ஷார்த்தம் பிரயத்னமாக விருக்கும் ஸ்ரவண - மநன - நிதித்யாஸம் - இத்யாதி எல்லாம் வ்யர்த் தமே (நிஷ்பலனே) ஏனெனில் அது அவித்யையின் காரிய மாக விருக்கிறது; எதுபோல சுக்தியில் (சிப்பியில்) வெள்ளித் தன்மையை திரட்டி ஒருங்கே எடுப்பதற்கு செய்யப்பட்ட முயற்சிகளை போல; அதுபோல மற்ற பிரத்யக்ஷக் காட்சி களிலும் தவறாக யேற்பட்டுள்ள அறிவுகளும் முயற்சிகளும் (ஆகும்). மோக்ஷார்த்த பிரயத்னங்கள் எல்லாம் வீணே ஏனெ னில் மோக்ஷம் ஒரு காரியமாகிறது; அது பொய்யான ஆசார் யனால் உபதேசிக்கப்பட்ட பொய்யான ஞானத்தின் காரிய மாகும்-(எப்படிப்பட்ட ஆசார்யர்கள்?) சுகர் பிரஹ்லாத வாம தேவாதிகளின் பிரயத்னங்களைப் போலவாகும். (இவர்கள்

மிகப் பெரிய ஆசார்யர்களாவார்கள். பிருஹ்ம வ்யதிரிக்த (வேருன) எல்லாம் மித்யையான படியால் இந்த ஆசார்யர் களும் பொய்யாக நினைக்கப்படுவார்கள்). மேலும் तत्त्वमसि- முதலான மஹா வாக்யங்களினுல் யேற்படும் வாக்ய ஜன்ய ஞானம் - அது பந்தத்தை நிவர்த்தி செய்யாது - ஏனெனில் இந்த ஞானமும் அவித்யையினுல் உண்டாக்கப்பட்ட சுருதி ஞானமாகும். (அவித்யாகல்பித வாக்ய ஜன்யத்வாத்) - அல்லது ஸ்வயமேவ அவித்யையை ஆத்மாவாக உடைய தால் - அவித்யா ஸ்வரூபமாக விருப்பதால் அல்லது அவித்யையினுல் கல்பித ஞாதா (அறிகிறவனை) ஆஸ்ரயம் செய்வதால்-அல்லது கல்பித ஆசார்யரிடமிருந்து ஸ்ரவண ஜன்ய (ஸ்ரவணத்தினுல் யேற்பட்ட) ஞானமாகும் - எது போல-ஸ்வப்நத்தில் ஸம்சாரபந்த நிவர்த்தனம், வாக்ய ஜன்ய ஞானத்தினுலே யேற்படுகிறதே - அது போல வாகும். (இந்தக் காரணத்தினுல் (இதற்கு சமாதானமாக) அத்வைதிகள் பரமார்த்த நிலையை விட்டு விட்டு - வ்யவஹா ரிக நிலையையும் உபதேசிக்கிருர்கள்).

மேலும் நிர்விசேஷசிந்மாத்திரம் பிருஹ்மம் - மித்யை யாகும் - ஏனெனில் அந்த பிருஹ்மம் அவித்யாகார்யமான ஞானத்தினுல் அடையப்படுவதாலே; அல்லது அவித்யா கல்பிதமானதும் அந்த அவித்யை அறிபவனை ஆஸ்ரய ஞானத்தினுல் (பிருஹ்மம்) அடையப்படுவதும் ज्ञात्राश्रयज्ञान-गम्यत्वात् அல்லது அவித்யாத்மக (தனது ஸ்வரூபமாகக் கொண்ட) ஞானத்தினுல் (பிருஹ்மம்) அடையப்பட வேண்டிய விஷயமாகும். எவ்விதமாயினும் அந்த பிருஹ் மம் அறியப்பட்டால், (இம்மூன்றில் ஏதேனும் ஒன்றினுல்) அதற்கு மித்யாத்வம் யேற்படக் கூடும்-எப்படி ஸ்வப்நத்தில் கந்தர்வ நகரம் காணப்படுகிறதோ அது போல. (வானத் தில் கானல் நீரை ஒரு நகரமாகக் கண்டாற்போல மித்யை யாகும்).

(ஆகவே நாம் சொல்வது) நிர்விசேஷ சிந்மாத்திரம் பிருஹ்மம் தானே ஸ்வயமாக பிரகாசிப்பதில்லை. அதற்கு

பிரமாணாந்த்ரம் தேவைப்பட வேண்டியதில்லை. ஏற்கனவே எது சொல்லப்பட்டதோ - அதாவது ஸ்வயம் பிரகாச ஞானம் அதற்கு ஆத்மா சாக்ஷியாக விருந்து பார்த்துக் கொள்கிறது என்பதற்கு அர்த்தம் யாதெனில் ஸ்வயம் பிரகாச ஞானத்திற்கு அறியப்பட வேண்டிய விஷயங்களில் ஸித்திரூபம் (அறியப்படுகிற யோக்யதை) - அறிகிறவனாக விருக்கும் சம்பந்தத்தினால் அல்லவோ யேற்படுகிறது. (அதாவது அத்வைதி சொல்வது சாக்ஷி கூடஸ்தன்; நாம் சொல்வது ஆத்மாவே அறிகிறவனாகிறான்) (அதாவது ஸ்வயம் அப்ரகாஸாத் ஆஸ்ரய ஸித்திரிதி பாவ: அதாவது கர்த்ருகர்மாதி விசேஷ விசிஷ்டஞானம்; न तु ब्रह्मेति भाव:).

இந்த விஷயம் பூர்வமேவ சொல்லப்பட்டது. நிபுணத் வத்துடனும் தர்க்க சாமர்த்தியத்துடனும் எந்த வாதங்கள் நிர்விசேஷசிந்மாத்திரத்திற்கு ஸாதகமாக சொல்லப்படு கின்றனவோ (Self luminous knowledge being நிர்விசே ஷம்) அவை எல்லாம் ஒதுக்கித் தள்ளப்பட வேண்டியவை யாகும். ஏன் தெரியுமா? ஏனென்றால், பிற்பாடு இந்த பிர கரணத்திலே சொல்லப்படும் காரணங்களாலே - சிந்மாத்திர ஞானம் அவித்யையின் காரியமாகும் என்பதால் (நிரஸ்தம்). (சிந்மாத்திரம் என்பதற்கு இங்கு அர்த்தம். வெளிவிஷயங் களை பிரத்யட்சக்காக்ஷியினால் அறிவுக்குக் காட்டிக் கொடுக் கிறது என்று) இங்கே நாம் சொல்வது ஆத்மாவே ஸ்வயம் பிரகாசம் தன்னையும் காட்டிக் கொடுத்து பரவஸ்துக்களையும் காட்டிக் கொடுப்பதால் - पराप्रकाशकमपि सविशेषमेव प्रकाशते - न तु निर्विशेषं प्रत्यक्त्वैकत्वग्रहादिति भाव:)

மேலும் நிர்விசேஷ சிந்மாத்திரம் (ஞானம்) - அதற்கு அக்ஞான சாக்ஷித்வம் யேற்படாது, அதற்கு அஹங்காரத் தினால் யேற்படுவதான ஜகத் பிரமம் ஏற்படாது; மேலும் ஸாக்ஷித்வ - பிரமம் அதற்கு யேற்படுவது (அத்வைதி சொல் கிறபடி) - (எப்போது) குறிப்பிட்ட ஞாத்ரு விசேஷ (அறிகிற வனைப் பொருத்திருக்கிறது) எனக் காணப்படுகிறது (அறிகிறவனுக்கில்லை); அது கேவலம் ஞானத்துடன்

சம்பந்தப்பட்டதால் அல்ல - (ज्ञप्ति मात्रमेव); கேவலம் ஞான மாத்திரமே. மேலும் அதன் பிரகாசத்வம் தன்னிடத்திலேயே யிருக்கும் பிரகாசத்தை நம்பியதல்ல - பிரகாசத்வம் என்றால் என்ன? ஒரு குறிப்பிட்ட வஸ்துவை குறிப்பிட்ட புருஷனுக்கு அறியும்படி யோக்யதையை அளிக்கிறது. வாஸ்தவத்திலே இந்தக் காரணமாகவே ஸ்வயம் பிரகாசத்வம் நிர்விசேஷசிந்மாத்திரத்திற்கு உன்னாலே ஒப்பப்படுகிறது. तस्य स्वयम्प्रकाशतोपपाद्यते भवद्भिरपि பிரகாசத்வம் இதை விட மாறான (சுத்தஞானத்திற்கு - நிர்விசேஷ சுத்தஞானத்திற்கு) ஏற்படுவதில்லை.

(இங்கு சங்கரரின் கருத்துக்கள் பரிசீலிக்கப்படுகின்றன. அத்வைதிகளுக்கு ஆத்மா கேவலம் ஞப்தியே (ஞானஸ்வரூபமே) இதனால் வஸ்து விஷய சம்பந்தம் போதிக்கப்படவில்லை. ஆனால் ஸ்ரீராமானுஜருக்கு, ஆத்மா ஞப்தி ஸ்வருபமாயினும், அந்த ஞானம் வஸ்துவுடன் சம்பந்தப்பட்ட போதுதான் யேற்படுகிறது. இதனால் வ்யக்தி - வஸ்து சம்பந்தம் இருக்க வேண்டும். அத்வைதிகளால் அந்த வ்யக்தி வஸ்து சம்பந்தத்தாலே பிரகாசத்வம் நிர்விசேஷசிந்மாத்திரத்திற்கு யேற்படுகிறது, எனச் சொல்லப்படுகிறது. இது ஜிக்ஞாஸ அதிகரணத்தில் விரிவாகச் சொல்லப்பட்டது. (அனுபவரூப பிரகாசதாபிததா நிர்விசேஷத்வே ந பவதீத் யர்த்த: - மோக்ஷாதி பிரயத்னங்களும் வ்யர்த்தம்).

மீண்டும் உங்கள் கோஷ்டிகளிலே (பக்ஷங்களிலே) கோஷிக்கப்படுகிறது - ஒரு உண்மையான காரியம் அபரமார்த்தமான காரணத்திலிருந்து உண்டாகிறது என்பது காணப்படுகிறது; இந்த அபிப்ராயமும் தவறாகும் என்பது உன்னாலேயே ஒப்புக்கொள்ளப்படுகிறது. (எங்கனமெனில்) அந்தக் காரியங்கள் - பாதிதமாகாதபடியாலே, எல்லாமே உண்மையாகவும்-வ்யவஹாரிக யோக்யதையை 'அடைந்து ஸத்யமாக விருக்கின்றன; ஆனால் அவை பரமார்த்த தசையில் அவித்யையை ஸ்வரூபமாகவுடையது (ஆத்மக); இந்த அபிப்ராயமும் நம்மால் பொதுவாக நிரஸிக்கப்பட்டது

(எங்கனமெனில்) ஸர்வத்ர எல்லாக் காரியங்களும் பரமார்த்தமான காரணத்திலிருந்து உற்பத்தி ஆனவை என்று நாம் விளக்கிக் காட்டியபோது; (ஸர்வ கார்ய உற்பத்தி உண்மையான காரணத்திலிருந்து யேற்படுகிறது. இது வைஷ்ணவ சித்தாந்தம்). ஆகவே உங்களால் சொல்லமுடியாது - இம் மாதிரியான அநுமானங்கள் சுருதிகளுக்கு விரோதம் என்று, ஏனெனில் சுருதிகளே (உங்கள் அபிப்ராயப்படி) அவித்யையின் காரியமாகவும்-அவைகளுக்கு அவித்யையை ஸ்வரூபமாக உடையதாலே (ஆத்மகத்வேன)-இங்கே கூறப்பட்ட திருஷ்டாந்தங்களுக்கு எதிராக ஒரு விசேஷமான விஷயமும் சொல்லப்படவில்லை - (இங்கே சொலலப்பட்ட திருஷ்டாந்தங்கள் கந்தர்வ நகரம் - ஸ்வப்னக் காட்சிகளில் கட்டுண்டு இருத்தல் - சிப்பியில் ரஜத தோற்றம். இவை பிரத்யக்ஷ பிரமாணமாயிருப்பினும் - பாதிதமாகாதவரை ஸத்யமே.)

மேலும் என்ன சொல்லப்பட்டது - பிருஹ்மம் அபரமார்த்த வஸ்துக்களினுல் யேற்பட்ட ஞானத்தினுல் அடையப்படுவதாக விருப்பினும் பின்னுல் யாதொரு பாதிதம் தர்சனமில்லாதபடியாலே - பிருஹ்மம் ஸத்யமேவ; இப்படிச் சொல்வதும் அஸத்தாகும். என் என்று கேட்பாயோ (நீ சொல்கிருயே) பிருஹ்மம் துஷ்டகாரண ஜன்ய ஞானத்தினுல் (அதாவது தவருன காரணத்தினுல்) அறியப்படக் கூடும். அவ்விதம் சொல்லிவிட்டு பிறகு நீ சொல்கிருயே - அபாத தர்சனம் இல்லாதபடியாலே பிருஹ்மம் ஸத்யமேவ - பிற்பாடு எதற்கு அபாதிதம் யேற்படவேண்டும்? (அதாவது கந்தர்வநகரம்-இத்யாதி உதாரணங்களில் காரணம் காரியம் இரண்டுமே அபரமார்த்தம். ஆனுல் பாதிதமாகாதபடியால்) எங்கள் பக்ஷத்தில் பரமார்த்தம் என்பதால் தோஷமில்லை - என்பதாகும். இதுவும் ஜிக்ஞாஸாதிகரணவிஷயம் தான்). மேலும் உதாரணமாக, பாதிதம் இந்த "சூன்யமேவதத்வம்" - என்பதற்கு பிற்பாடும் யேற்படவில்லை. அதனுல் வாக்ய ஜன்ய ஞானத்திற்கு - பிற்பாடு சூன்யத்த்வத்திற்கு அபாதிதம் இல்லாதபடியாலே, அது சரியாகுமா? ஆகவே எது நிச்சயிக்கப்படவேண்டியது

முதலிலே - தோஷமூலத்வம் உள்ளதா? காரணம் தோஷ முள்ளதா - அபரமார்த்தமா? அதற்குப் பிறகே அது அஸத்யமா - அர்த்தத்தில் என்பது தெரியும்.

(இங்கே கூறப்படுவது - சுருதிகளிலே பிருஹ்மஸ்வரூபம் கூறப்பட்டிருக்கின்றது - அவைகளிலிருந்து பிருஹ்மம் அறியப்படும்).

மேலும் கீழ்கண்ட சுருதிகள் ஓதுகின்றன கட. 2-4-11 **नेह नानाऽस्ति किञ्चन** (இங்கே பலவாகவும் - பலவகைப்பட்டதாகவும் ஒன்றுமில்லை); அதாவது அப்ருஹ்மாத்மகமாக ஒன்றும் இல்லை என்று அர்த்தம் பிரு. உ. 2-9-28 **विज्ञानमानन्दं ब्रह्म** - பிருஹ்மம் (ஸ்வரூபமாகவே) விக்ஞானம் - ஆனந்தம். இவை கடைசியில் வருகின்றன (அந்தவிடங்களில்) முதலில் சுத்த விக்ஞானத்தைத் தவிர மற்ற எல்லா வஸ்துக்களை நிஷேதித்துவிட்டு, **कृत्स्नस्य वस्तुजातस्य निषेधकत्वेन सर्वस्मात् परत्वात्**; இதனுல் இங்கே ஒரு பாதிதம் இந்த சுருதிகளுக்கு இல்லையென்று சொல்லப்படுகிறது - **पश्चात्तनबाधादर्शनमुच्यते** (நாம் சொல்கிறேம்) எவன் அபிப்ராயத்தில் "சூன்யமேவ தத்வம் - அதனுல் சுத்த விக்ஞானம் (உன்றுல் சொல்லப்படுகிறதே - அதுவும்) இல்லை யென்று அவன் சொல்வது சரியாகுமே - ஏனெனில் அந்த அபிப்ராயம் சுத்த விக்ஞானத்திற்குப் பிற்பாடு வரும் வஸ்துவுடன் சம்பந்தப்பட்டதாலே கடைசியாக அது பாதிதம் செய்கிறபடியால். சூன்யத்வத்தைவிட வேறு ஒரு நிஷேதமும் இருக்க முடியாது - எல்லாவஸ்துக்களின் ஞானத்திற்கு (ஸர்வ சூன்யத்வாதிரேகி நிஷேதாஸம்பவாத் - தஸ்யைவ பஸ்சாத்தன பாததர்சனம்). ஆகவே, இந்த சூன்யத்வத்திற்கு யாதொரு பிற்பாடுயேற்படும் பாதிதமில்லை - (அதனுல் அது சரியாகுமா?) பிரத்யக்ஷயதீனமான வஸ்துக்களுக்கு தோஷமூலத்வம் யேற்படக்கூடும். அதேமாதிரி வேதாந்த ஜன்ய ஞானமும் ஸர்வ சூன்ய ஞானமும் தோஷமூலத்தை கூடியதாகலாம்- அடையலாம்.

(இங்கே நிஷேதம் (ஸர்வ சூன்யத்வம்) முதலிலும் பிற்பாடு வரும் குணநிஷேத வாக்யமும்; அதேமாதிரி பிருஹ்மத்தின் குணங்களும் முதலிலும் நிஷேதமும் பிற்பாடு வருகின்றன. சங்கரர் அபச்சேத நியாயத்தால் பிற்பாடு வரும் சுருதி பலீயஸ் என்கிருர் அதனுல் நிர்விசேஷ பிருஹ்மம் ஒப்புக் கொள்ளப்பட்டு தர்மங்களும் ஜகத்தும் நிஷேதிக்கப்படுகின்றன - (சங்கரர் மூர்த்தம் அமுர்த்தம் என்று இரண்டையும் நிஷேதித்து பிருஹ்மத்தை மாத்திரம் மிச்சப் படுத்தி பிற்பாடு இதற்குமேல் परं अस्ति என்கிருர்) (नेतिनेति என்கிற இரண்டு நிஷேதம் காட்டப்படுகின்றன). ஆனுல் மாத்யாமிகன் நிர்விசேஷ பிருஹ்மத்தையே நிஷேதிக்கிருனே - அது இங்கு உதாரணமாகக் காட்டப்படுகிறது இதன்படி உன் அபிப்ராயமும் பாதிதமாகுமே).

ஆகையால் सर्वं विज्ञानजातं (எல்லா ஞானமும்) பாரமார்த்திகமான அறிகிறவன் என்பவனுக்குள்ளே தர்மமாகவிருக்கிறது - அதனுல் அது உண்மையாகும் - ஸ்வயம் பாரமார்த்திகம் அந்த ஞானமும் பாரமார்த்தம் - இவ்விதமான ஞானத்திற்கு வஸ்துக்களைக் காட்டுவதில் ஸித்தி யேற்படுகிறது. அதிலே சில ஞானப்பகுதிகள் தோஷமூலமாகவும்; அந்த தோஷமும் வாஸ்தவமேயாகும். அதேபோல இன்னெரு (ஞான) பகுதி தோஷமில்லாத (நிர்தோஷ) ஸாமக்ரியைகளிலிருந்து உற்பத்தி-அதனுல் பாரமார்த்திகம். இவ்விதமான பாகுபாட்டை (அத்வைதியை நோக்கி-சித்தாந்தி (சொல்வது நீ ஒத்துக் கொள்ளாதவரையில், எது ஸத்யம் எது மித்யை என்கிற வித்யாஸம் விய வஸ்தையாக மாட்டாது; அதனுல் லோகவியவஹாரமும் இருக்கமாட்டாது. லோகவியவஹாரம் என்பது பாரமார்த்திகமாகவும் (உண்மையாகவும்) மித்யையாகவும் இருக்கிறது - அது அறிகிறவனுடைய பிரகாசத்வத்தை - அர்த்த விசேஷத்தை காட்டுவதால் - பிராந்திருபமாகவும் (சில சமயங்களில்) (அதேபடி) பாரமார்த்திகமாகவும் காணப்படுகிறது. அதனுல் நீ சொல்கிருயே (அத்வைதியை நோக்கி) - निर्विशेष சிந்மாத்ரமே - ஸத்யம்-அப்படிபட்ட நிர்விசேஷ ஸந்மாத்ரம் பாரமார்த்திக-

அபரமார்த்திக தோற்றங்களுக்குக் காரணமாகாது-(உண்மையான-மித்யையான வஸ்துக்களைத் தோற்றவைக்காது) அதனால் நாம் சொல்வது - உலகவியவஹாரமே யேற்படாது. (இந்த ராமானுஜரின் கருத்து பிரமாணானுபத்தி-5-வது ஆட்சேபம் ஜிக்ஞாஸாதிகரணத்தில் விளக்கப்பட்டது.) लोकव्यवहारो न संभवति;

மேலும் அவர்களால் (அத்வைதிகளால்) என்ன சொல்லப்பட்ட தென்றால் அதிஷ்டானமில்லாமல் பிரமம் (அஸம்பவம்) ஏற்படாது என்கிற காரணத்தினால், ஸன்மாத்ரம் இருக்கிறதே - எது ஸர்வ அத்யாஸங்களுக்கு அதிஷ்டானமாக விருக்கின்றதோ - அதற்கு பரமார்த்திகத்வம் யேற்படுகிறது - (என்று அவர்களால் சொல்லப்பட்டதோ) - அது சரியானதில்லை யென்று நிரூபிக்கப்பட்டது. ஏனெனில தோஷங்கள் தோஷாஸ்ரயம் செய்யும் வஸ்து மித்யையாக விருப்பினும் ஏற்படக் கூடும் - எவ்விதம் தோஷங்கள் தவறான காரணத்தினாலும் ஆஸ்ரயத்வம் ஞாத்ருத்வம் (அறிகிற தர்மம்), அல்லது ஞானம் இத்யாதி அபரமார்த்தமாக விருப்பினும் ஏற்படக்கூடும். (அதாவது வைசேக்ஷிகன் (தார்கிகன்) மாத்யாமிகனைக் கேள்வி கேட்கிறான் - ஏன் பிரமம் அபரமார்த்தமான அதிஷ்டானத்தில் ஆஸ்ரயிக்கக் கூடாது - என்று). பிரமத்தின் அதிஷ்டானம் அபரமார்த்தமாக விருப்பினும் ஏற்படக்கூடும் என்பது பொதுவாக நிரஸனம் செயயப்பட்டது. ஆகையால் அதிஷ்டானம் அபரமார்த்தமாக விருப்பினும் - ஒரு சமயத்திலும் பிரமம் காணப்படுகிறதில்லை என்று சொலவதானால், ஸன்மாத்திரம் தான் பாரமார்த்திகம் (நிஜம்) என்பது ஒத்துக் கொள்ளப்பட வேண்டியதாகும். ஆனால் பிரமமோ எங்கேயும் காணப்படுவதில்லை - தோஷம் அல்லது தோஷா ஸ்ரயத்வம் - அல்லது ஞாத்ருத்வம் (அறிகிறவனாகவிருப்பது) - ஞானம் - இவை எல்லாம் அபரமார்த்தமாக விருக்கும் போது - உறபத்தி யாகிறதில்லை). அவர்கள் விஷயத்திலும் கூட, என்ன காணப்படுகிறதோ அதற்கு அனுகுணமாக, அவைகளுக்கும் பாரமார்த்திகத்வம் (உண்மையாக விருப்பது) அவசியம்

ஒப்புக் கொள்ளப்படவேண்டும். இவ்விதமாக - (அத்வைவதியை நோக்கிக் கூறுவது) - யாதொரு விசேஷமும் உன் விஷயத்தை ஆதரிப்பதாக - உன் உத்ஸாஹத்தைத் தவிர - வேறு ஒன்றுமில்லை - (அதாவது உன் அபிப்ராயம் சரியில்லை என்பதாகும் பிரமம் பொய்யான அதிஷ்டானத்தில் அறியப்படுவதில்லை - அத்வைதிகளின் அபிப்ராயப்படி. அபரமார்த்தமானதும் தோஷமுள்ள காரணங்கள் பிரமத்தை உண்டாக்காது - என்பது வைசேஷிகனின் அபிப்ராயமாகும்). (இத்துடன் அத்வைத கண்டனம் முடிகிறது)

சரி, பேதவாதிகளின் பக்ஷத்திலே-அதீதமான கல்பனைகள் பலவாக விருப்பதால், (எண்ணிக்கையிலே அனந்தமாக விருப்பதால்,) எல்லா பத்த ஆத்மாக்களும் முக்தியை அடைந்திருக்க வேண்டும். அதனால் பத்த ஜீவர்களோ இருக்க முடியாது, பத்த முக்த வ்யவஸ்தையேற்பட முடிகிறதில்லை என்பதால் - இவ்விதம் ஜீவர்கள் அனந்தமாக விருக்கிறார்கள் என்பதும் தள்ளப்படவேண்டியதாகும். மேலே சொல்லப்பட்டது - ஜீவர்களில் ஒவ்வொருத்தனும் வித்யாஸமாக விருக்க வேண்டுமானால், அவர்களுக்கு உளுந்து, கடுகு, பானைகள், துணிகள் போல எண்ணிக்கை பலவற்றைக் கொண்டதாக விருக்கவேண்டியது; இங்கே, (இந்த விஷயத்தில்) பானைகள் முதலியன அனந்தமாக விருப்பதால், திருஷ்டாந்தத்திலே ஸாத்யம் சரியாகவில்லாதபடியால் குறைவு பட்டதாகும் - நிருபிப்பதற்கு முடியாது. இப்படிச் சொல்லலாம் - பத்துப்பானைகள் - ஆயிரம் உளுந்துகள் - இங்கே ஸங்க்யை (எண்ணிக்கையை) உடையது காணப்படுகிறதே யென்றால், ஸத்யம் தான். ஆனால் அந்த தர்மம் (எண்ணிக்கையாகிற தர்மம்) பானைகளின் நிஜஸ்வருபத்திற்கு சொந்தமாவதில்லை - ஆனால், உபாதிகளாகிற தேசம் காலம் முதலிவைகளை உடைய பானைகளுக்கு ஸ்வருபமாக யேற்படலாம். நாம் ஆத்மாக்களுக்கு ஸங்கியாத்வம் (எண்ணிக்கை கொண்டது) என்பதை ஒப்புக் கொள்கிறோம். ஆனால் இவ்விதமாக - நாம் தீர்மானிக்க முடியாது - ஸர்வ

முக்தி பிரஸங்கம் யேற்படும் என்பது. ஆத்ம ஸ்வரூபமோ (தேசகால உபாதி நீங்கலாக) பலவாக (அனந்தமாக) விருக்கிறது.)

மேலே சொல்லப்பட்டது-ஜீவர்கள் (ஒவ்வொருத்தனும்) பின்னமாக (வித்யாஸமாக) விருப்பதாக ஒப்புக்கொள்ளப் பட்டால், அவர்களுக்கு பானை விஷயங்களில் யேற்படுவது போல, அசேதனத் தன்மை - அநாத்மத்வம் - அழிகிற தன்மை யேற்படக்கூடும் - என்று சொல்வது அயுக்தம் (சரியில்லை). ஏனெனில் ஏகஜாதிக்குரிய பேதங்கள் (ஸஜாதீய பேதங்கள்) அந்த ஜாதிக்கு வேருன இன்னொரு ஜாதியின் வஸ்துக்களை உண்டாக்கக் காரணமாவதில்லை. உதாரணமாக கடாதிகளின் பேதங்கள் துணிகளின் தர்மத்தை உண்டாக்குவதில்லை.

(இங்கே சொல்லப்படுகிற விஷயம் - ஜீவர்கள் பலவாக கணக்கில்லாமலிருக்கிருர்கள் - ஏனெனில் அவர்கள் ஒவ்வொருத்தரும் வேறுபட்டு - பின்ன பின்னமாக விருக்கிருர்கள். உதாரணமாக - உளுந்து - கடுகு என்பதைப்போல. இதற்கு பலகருத்துக்கள் கூறப்படுகின்றன. 1) எண்ணிக்கையின் தர்மம் அவர்களுக்குள்ளே பேத தர்மத்தை நம்பியதல்ல - ஆனுல் உபாதிகளாகிற தேசம், காலம் முதலியவைகளை நம்பியது. 2) ஜீவாத்மாக்கள் தேசகாலம் போன்ற உபாதிகள் நீங்கியதும் எண்ணிக்கையில்லாமல் போகின்றனர். 3) இதேமாதிரி உளுந்து - கடுகு முதலியவைகளும் உபாதிகளாகிற தேசம் காலம் நீங்கியதும்-எண்ணிக்கையை இழந்து விடுகின்றன. ஆகவே திருஷ்டாந்தம் கூறப்பட்டது சரியாகவில்லை.)

மேலே என்ன சொல்லப்பட்டதென்ருல், பின்னத்வம் (பிருஹ்ம விஷயத்திலே) இருக்குமானுல், தேசகாலங்களாகிற உபாதிகளால் யேற்படும் பரிச்சேதத்வமும் பிருஹ்மத்திற்கு யேற்படக்கூடும், அதனுல் பிருஹ்மத்திற்கு அனந்தத்வம் யேற்படாது; இவ்விதம் சொல்வதும் அயுக்தம், ஏனெனில் வஸ்துக்கள் விஷயத்திலே பரிச்சின்னத்வம் யேற்படுமாகில்,

தேசகால உபாதிகளாலே அதிகம் குறைச்சல் என்பது யேற் படும். எத்தனை தூரம் தேசகால சம்பந்தம் விருக்கிறதோ அதற்கு வஸ்துத்வத்தைவிட மற்றபிரமாணுந்தரங்களை நம்பி யிருக்கும் ஸ்திதியே நிர்ணயம் செய்யப்பட வேண்டியது. ஆகையால் பிருஹ்மத்திற்கு எக்காலத்திலும் (ஸர்வகாலத் திலும்) தேசகால சம்பந்தமிருப்பினும், மற்றைய பிரமாணுந் தரங்களாலே அடையப்படும் என்பது தர்க்கத்திற்கு விரோத மில்லை. (இங்கே சொல்லப்படுவது பிருஹ்மத்திற்கு வஸ்து பரிச்சேதம் கிடையாது என்பது அநந்த பதத்தினுல் அர்த் தம். அத்வைதி சொல்வது, வஸ்து பரிச்சேதம் என்பதின் பொருள் இந்த வஸ்து இந்த மற்றொரு வஸ்துவாக ஆவ தில்லை. இதனுல் - தேசகால உபாதிகள் யேற்படலாம் இதற்கு ராமானுஜரின் பதில் (1) காலதேசங்களில் மாறு பாடுகள் ஏற்படலாம் - ஆனுல் வஸ்து பரிச்சேதத்திற்கு யேற்படக்கூடாது. (வஸ்து ஸர்வதேச காலங்களில் இருந் தால் தான்-வஸ்து பரிச்சேதத்வம் இல்லை). (2) இன்னும் சில விடங்களில் அளவு காலம் வஸ்து பரிச்சேதத்தினுல் யேற் படுவதில்லை; அதனுல் தேசகாலத்தினுல் பாதிதம் ஆகாது (3) வஸ்து பரிச்சேதம் என்பதில் யாதொரு தர்மமும் (attribute) இல்லை. அதை தேசகாலத்திற்குச் சமமாகச் சொல்லும்படி தர்மத்தின் மாறுதல் என்று சொல்லும்படி ஒன்றும் இல்லை என்பதாகும்.

வஸ்து பரிச்சேதம் ஏற்பட்டிருக்கிறது என்பதால் மாத்திரம் ஸர்வபிரகார பரிச்சேத ரஹிதம் என்பது இல் லாமையாலே, அதனுல் பிருஹ்மத்திற்கு அனந்தத்வம் ஸித்திக்கிறது என்பாயாகில், அதற்கு நாம்பதில் சொல்வது- ஐயா - உமது விஷயத்திலும் அதே தோஷம் ஏற்படுகிறது, ஏனெனில் நீ ஒப்புக் கொள்கிருய் பிருஹ்மம் அவித்யா விலக்ஷணத்வம் (வேறுபட்டது) என்பதால் உனக்கும் இது ஸமான தோஷமாகும். ஆகையால் ஸத் (ஸந்மாத்திரம்) அவித்யா விலக்ஷணத்வம் (வேறுபட்டுள்ளது) என்பதை நீ ஒப்புக் கொள்வாயாகில், அப்போது உன்னுல் பிருஹ்ம விஷயத்தில் பின்னத்தினுல் யேற்பட்ட பேதம் முதலிய

தோஷங்கள்-அந்த தோஷங்கள் பேதத்தினுல் யேற்படுபவை-உன் விஷயத்திலும் யேற்படும். உன்னுல், அவித்யையிலிருந்து பிருஹ்மம் வேறுபட்டது - அந்த பேதம் உன்னுல் ஒப்புக் கொள்ளப்படாவிட்டால், பிருஹ்மமும் அவித்யையின் ஸ்வரூபமாக விருக்கும் (அவித்யாத்மகமேவ பிருஹ்மம் இருக்கும்). இந்தக் காரணத்தினுலே - சுருதி பிருஹ்ம ஸ்வரூபத்தை இப்படி ஓதுகிறது.

தை ஆ. 1-1 सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म-என்கிற பிருஹ்மலக்ஷண வாக்யமும் தவறுன அர்த்தத்தைக் கொடுக்கும். பேதம் என்பது ஒரு தத்வம் என்பது ஒப்புக் கொள்ளப்படாவிட்டால், ஸ்வபக்ஷம் எது, பரபக்ஷம் எது என்பதை நிரூபிப்பதில்ஸாதன தூஷணுதி (பொருந்தாதாக) யேற்பட்டு அதனுல் அவிவேகமும் போகாது. அதனுல ஒவ்வொன்றும் சரியானதாக அமையாது; இதனுல் எல்லாம் அஸமஞ்ஜஸம் ஆகும்.

பிருஹ்மத்திற்கு அனந்தத்வம் ஸ்தாபிதமாகுதல் பிரஸித்தி-தேசகால பரிச்சேத ரஹித த்வமாத்திரத்தினுல் தான். அதனுல் வஸ்துத்வமும் கூட பரிச்சேத ரஹிதமாகவிருக்கிறது என்பதல்ல. ஏனெனில் சில வஸ்துக்கள் அறிவுக்கு விஷயமாவதில்லை சசிவிஷாணம் (முயற்கொம்பு - ஆகாசத் தாமரை) வஸ்துக்களாகவே இல்லாதபடியால் தேசகாலபரிச்சேதம் ஏற்படாது. பேதவாதிகள் விஷயத்திலே ஸர்வசித் அசித் வஸ்துக்கள் பிருஹ்மத்திற்கு சரீரமாகின்றன அதனுல் பரமாத்மாவுக்கு ஸ்ர்வ பிரகாரத்தினுலும் ஸ்வத: (தனக்குத் தானேயும்) பரத: (பிறராலும்) யேற்படும் உபாதிகளால் பரிச்சேதம் இல்லை என்பதாகும் - ब्रह्मण: सर्वप्रकारत्वात् स्वत: परत: ऽपि न विद्यते இந்தக் காரணத்தினுலே - காரணத்திலிருந்து பின்னமான (வேறுபட்ட) காரியம் ஸத்யத்வத்தை (உண்மையான நிலையை) அடைகிறது—அதனுல் இந்த ஸம்பூர்ண ஜகத் பிருஹ்மத்தின் காரியமாதலால் பிருஹ்மத்தைவிட அன்யதேவ (வேறுனதாகும்) (இது தார்க்கிகனின் (வைசேஷிகனின்) அபிப்ராயம் - காரியம் காரணத்திலிருந்து வேறுபட்டது அவன் இந்த அதிகரணத்திற்கு முக்கியமான பூர்வபக்ஷி). तदेव कारणाद्भिन्नस्य कार्यस्य सत्यत्वात् ब्रह्मकार्यं कृत्स्नं जगद् ब्रह्मणोऽन्यदेव:

# அனுபந்தம்

இங்கு சாரீரக காரிகாவளியில் - சில விஷயங்கள் இந்த அதிகரணம் பற்றி சொல்லிருப்பதை நாம் கீழே தருகிறோம். (நன்றி).

(பூர்வபக்ஷம்) உலகில் எங்குமே காரண வஸ்துவைக் காட்டிலும் காரிய வஸ்து வேறுப்பட்டதாகவே காணப்படுவதால், காரணமான பிருஹ்மமும் காரியமான ஜகத்தும் வேறுபடாமல் (ஒன்றாக) விருக்கமுடியாது காரண வஸ்துவைக் காட்டிலும் காரியப் பொருள் வேறாகவேயிருக்க வேண்டும் என்பதைக் காட்டும் ஹேதுக்கள் பலவிருக்கின்றன. அவையாவன - (1) புத்திபேதம் - காரணமான மண்கட்டியும் காரியமான குடமும் வெவ்வேறு அறிவினால் அறியப்படுகின்றன. (2) நாமபேதம் - மண்கட்டியைக் குடம் என்பதில்லை. " குடத்தை மண்கட்டி யென்பதில்லை. (3) ஆகாரபேதம் - மண்கட்டி உருண்டை வடிவை உடையதாகவிருக்கிறது - குடம் அடி பருத்து நுணி சிறுத்து வட்ட வடிவமாகவுள்ளது (4) காரியபேதம் குடத்தைக் கொண்டு நீர் கொண்டு வர முடிகிறதே யொழிய, மண்கட்டியைக் கொண்டு நீர் கொண்டு வரமுடியவில்லை. மண்ணைக் கொண்டு மண்சட்டி செய்ய முடிகிறதே யொழிய, குடத்தை கொண்டு சட்டி செய்ய முடிகிறதில்லை. (5) காலபேதம் - மண் இருப்பது முன் காலத்திலே; குடமிருப்பது பின் காலத்திலே இவ்விதமாக காரணத்திற்கும் காரியத்திற்கும் இப்படி ஐந்து வித பேதமிருப்பதாக விளங்குகிறது. மேலும் காரண்மான மண் கட்டியைக் காரியமான குடமாக்குவற்குக் குயவன் மண்கட்டியை சக்கரத்தில் வைத்துச் சுழற்றுவது முதலான செய்கைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது.

இந்த செயல்களே காரகவியாபாரம் எனப்படும். மண்ணும் குடமும் ஒன்றேயாகில் மண்ணைக் குடமாக்க, இந்த காரகவியபாரம் தேவையில்லை என்று கொள்ளவேண்டிவரும்.

இது பிரத்யக்ஷவிருத்தம். ஆக, மண்கட்டியை குடமாக்கக் காரகவியாபாரம் தேவைப்படுவதிலிருந்து காரணப் பொருளைக் காட்டிலும், காரியப் பொருள் வேறுபட்டதே எனத்தெரிகிறது. ஆகையால் பிருஹ்மத்தின் காரியப் பொருளான உலகம் காரணமான பிருஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டதேயாக வேண்டும் என்பது நிச்சயம். பிருஹ்மமும் உலகமும் ஒன்றே என்று கூறும் வேதவாக்யங்களுக்கு நேரான பொருளைக் கொண்டால் இப்படி பிரத்யக்ஷவிரோதம் வருகிறபடியால் அந்த சுருதிகள் 'உலகம் பிருஹ்மத்தில் அடங்கியிருக்கிறது' என்னும் கருத்தையுடையவை என்று அவற்றுக்கு லக்ஷணையாகப் பொருள் கூறுவதே பொருந்தும்.

[இதற்குப் பதிலும் சித்தாந்தமும் கூறப்படுகிறது. சித்தாந்தத்தில் மனிதனுடைய தேகமாறுதல்களான யுவா - கிழவன்-மனிதன் வேறுப்பட்டவனல்ல என்பதை உணர்த்துகின்றது - அதுபோல - காரண நிலையைக்காட்டிலும் வேறுபட்டகாரிய நிலையை உண்டுபண்ணுவதில் காரக வ்யாபாரம் பயன்படுகிறது. ஆகையால் காரக வியாபாரம் வீணாகிவிடுகிறது - என்னும் தோஷமும் இல்லை. இனி காரணமான பிருஹ்மமே காரியமாக ஆகும்போது, அவஸ்தாபேதம் உண்டாகிறது - அதன்படி ஸ்தூலசித்அசித் விசிஷ்ட பிருஹ்மம் (ஸ்ருஷ்டியில்) ஆகிறது - இந்த ஸ்ருஷ்டி பிருஹ்மத்தின் காரியநிலையாகும். காரணநிலை (ஸ்ருஷ்டிக்கு முன்பு) பிருஹ்மத்திற்கு சூக்ஷ்மசித் அசித் பிருஹ்மமாக விருக்கிறதைச்சொல்லும். இரண்டு நிலைகளிலும் பிருஹ்மம் ஒன்றே தான்-காரிய காரணங்கள் வேறுபடாதவையே என்று காட்டுகிறது. இப்படி பிருஹ்மத்திற்கு சேதநாசேதனங்கள் சரீரமாயிருந்தால் - சேதநா சேதனங்களிலுள்ள தோஷங்கள் பிருஹ்மத்தினிடம் ஒட்டமாட்டாதோ - யெனில் ஒட்டமாட்டா என்பதாகும். விலக்ஷணத்வாதி அதிகரணத்தில் இந்த விஷயம் கூறப்பட்டிருக்கிறது - 2-1-9 சூத்ரம் ந து திருஷ்டாந்தபாவாத் - என்பதில்]

**ஸ்ரீபாஷ்யம் —**

**சித்தாந்தம்—**இவ்விதம் நீ சொல்வாயாகில், நாம்பதில் சொல்வோம் - **तदनन्यत्वमारम्भण शब्दादिभ्यः तस्मात्** காரணமான பிருஹ்மத்தைக் காட்டிலும் (காரியமான உலகம்) வேறுபடாமலேயுள்ளது. ஆரம்பண சப்தாதிப்ய: - வாசாரம்பணம் முதலிய வேதவாக்யங்களிலிருந்து இது தெரியவருவதால்; ஆகையால் ஜகத் பிருஹ்மங்கள் வேறுபடாதவையே (இந்த அர்த்தம் முந்திச் சொன்னபடி அஸதிதி சேந்ந பிரதிஷேத மாத்ரத்வாத் (சூத்ரம் 2-1-7) முதலானவிடங்களில் காரண மான பிருஹ்மமும் கார்யமான உலகமும் வேறு படாமலிருப் பவையே - அதனால் பிருஹ்ம்மே ஜகத்காரணம் - என்று நிலைநிறுத்தப்பட்டதே - அது மீண்டும் ஊர்ஜிதமாகிறது - அதாவது காரிய காரணங்கள் வேறாக விருக்கவேண்டும் என்று வாதாடும் தார்க்கிகனின் பக்ஷம் நிரஸனம்.) **तस्मात्** பிருஹ்மமே பரம காரணமாகும். **अनन्यत्वे** - வேறுபடாமலே யுள்ளது (உலகம் - பிருஹ்மத்தைக் காட்டிலும்) - ஜகத்தும் பிருஹ்மமும் ஒன்றாகவேயுள்ளது என்பதும் பிருஹ்மம் பரம காரணம் ஜகத்திற்கு என்பதும் ஆரம்பண சப்தங்களால் இவைகளை விளக்கிக் காட்டுவதால் யேற்படுகிறது.

(ஆரம்பண சப்தம் - ஏகவிக்ஞானத்தினால் ஸர்வ விக்ஞானம் போதிக்கப்படுகிறது. ஸதேவஸோம்யேதமக்ர மாஸீத் - இத்யாதி அபேத வாக்யங்களில் - ஔபசாரிக மாக வில்லாமல்-ஐக்ய வ்யபதேசம் முக்யார்த்தமாக முதலில் காட்டப்படுகிறது). 'அதில் வாசாரம் பணமிதி என்கிற வாக்யமிருக்கிறது).

ஆரம்பண சப்தமும் மற்ற சுருதிகளும் ஆரம்பண சப்தத்தை ஆரம்பத்தில் உடையவையாக விருக்கின்றன. **वाच्यारम्भणशब्दादीति - वाचारम्भणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम्** - யையா - ம்ருத் (களிமண்) ஒன்றுதான் ஸத்யம். காரியங் களாகிற சட்டி - தட்டுக்கள் இவைகள் வாக்குக்கு மாத்ரம் (பிற்பாடு கிரியை வருவதற்க்காக) விஷயமாக மாறுதல்களை அடைந்திருக்கின்றன. காரணப்பொருளான களிமண்ணோ

ஸத்யம். (சா. உ 6. 1. 4); सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम् तदैक्षतबहुस्याम् प्रजायेयेति । त तेजोऽसृजत अनेन जीवेनाऽऽत्मनानुप्रविश्य...... सन्मूला: सोम्येमा: सर्वा: प्रजा: सदायतना: सत्प्रतिष्टा: । ऐतदात्म्यमिदं सर्वंतत् सत्यं स आत्मा तत्वमसि श्वेतकेतो என்பதால் வாக்கை முன்னிட்டுக் கொண்டு ஏற்படும் பேச்சு வ்யவஹாரம் ஸித்திப்பதற்காக, மண் கட்டியாகிற காரண வஸ்துவே உருவமாறுதலையும் குடம் என்னும் பெயர் கொண்டு வேறு பாட்டையும் அடைகிறது - காரியப் பொருளான குடமும் உண்மையில் மண்ணுகவேயிருக்கிறது; சா. உ. 6. 2. 1; இவ்வுலகம் முதலில் ஸத் என்னும் பிருஹ்மமாகவிருந்தது. ஒன்ருகவே அத்வீதீயமாகவிருந்தது; அது சங்கல்பித்தது - நான் பலவாக ஆவேன் - பிறப்பேன் என்று சங்கல்பித்து - தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்தது. அது ஜீவனுடன் உள் நுழைந்து - தாஞகவே என்று சொல்லும்படி - ஆயிற்று; இந்த உண்டாக்கப் பட்ட வஸ்துக்கள் எல்லாம் ஸத்தையே மூலமாகக் கொண்டன - ஸத்திலேயே பிரதிஷ்டாபிதம். (சா உ. 6. 8. 4 & 6); இவை எல்லாம் (பிருஹ்மத்தை) அதை (तत्) ஆத்மாவாகக் கொண்டவை. அதுதான் ஸத். அதுதான் ஆத்மா- ஸ்வேத கேதோ - நீ அந்த பிருஹ்மமாக (ஸத்தாக) விருக்கிருய்.

ஆகவே இந்த வாக்ய பிரகரணத்திலேயும் மற்ற அது போன்ற வாக்யங்களிலும் - சொல்லப்படுகிறது - இந்த சித் அசித் வஸ்துக்களடங்கிய உலகமும் (காரியமும்) பிருஹ்மமும் (காரணமும்) ஒன்ருகவேயிருக்கிறது. (இங்கு சொல்லப் பட்ட சாந்தோக்ய உபநிஷத் வாக்யங்கள் - வேதாந்த சூத்ரம் (1-4-23) பிரகிருத்யதி கரணத்தில் முதல் சூத்ரம் பிரகிருதிஸ்ச பிரதிக்ஞா திருஷ்டாந்தாநுபரோதாத் - என்பதற்குப் பின்பு வருவதால் - அந்த சுருதி முடிக்கிறபோது - तत्वमसि श्वेतकेतो - என்பதாலும் - ராமாநுஜர் வாசாரம் பணம் என்கிற பதத்தை இரண்டாகப் பிரித்து - வாக் (சா) ஆரம் பணம் என்று காட்டி - ஸத்த்வம் அஸத்த்வம் (உள்ளதாயிருக்கை - இல்லாதாயிருக்கை)-என்று இரண்டு தர்மங்கள் ஏற்படுகின்றனவே - காரிய நிலை காரண நிலை என்று

சொல்லுகிறார் - அதனால் வாசா (குடத்தில் நீர் கொண்டுவா என்கிற கிரியை யேற்படுவதற்கு - வ்யவஹாரம் ஸித்திப்ப தின் பொருட்டு - வாசா என்பது வாக் பூர்வக வ்யவஹா ரார்த்தம் என்றும்; விகார: - (உருவமாறுதலும்) நாமதேயம்- குடம் முதலான பெயர் மாறுதலைச் சொல்வதும்; ஆரம் பணம் - உபாதானப் பொருள் (காரணப் பொருள் மண் கட்டி - தொடர்ந்து வ்யவஹார யோக்யதைக்காக விகார நாமதேயங்களை அடைகிறது - ஆரம்பணம் . ஆரப்தம் - ஸ்ப்ருஷ்டம் என்று அர்த்தம்). காரியம் வேறு திரவிய மாகக் காணப்படுவதில்லை - மண் கட்டியே ஸத்யம்-அதுவே பரிமாணங்களால் ஆகிறது. காரணமும் காரியமும் ஒன்றே தான்; இதேபடி பிருஹ்மமும் (காரணம்) காரியமான உலக மாயிருக்கிறது என்பதாகும். ஆகவே பிருஹ்மமும் ஜகத் தும் இரண்டுமே ஸத்யமாகும்.

**விளக்கம்**: - (முன் காட்டப்பட்ட புத்தி பேதம்-நாம பேதம்-ஆகார பேதம், காரிய பேதம் - கால (தேச) பேதம் ஆகிற ஐந்து விதமாக பேதங்களையும், கார்யமும் காரணமும் வெவ்வேறானவையே - என்று கொண்டுதான் நிர்வஹிக்க வேண்டும் என்பதில்லை. அவஸ்தா பேதத்தால் மாறுதல் - அதனால் மேற் சொன்ன பேதங்களை நிர்வஹிக்கலாம்).

**ஸ்ரீபாஷ்யம்**:— பிரகரண முடிவிலும் - மற்ற சுருதி களிலும், இதேபடி - एतानि हि वाक्यानि चिदचिदात्मकस्य जगत: (உலகமும்) परस्माद ब्रह्मण: अनन्यत्वमुपपादयन्ति - பிருஹ்மமும் ஒன்றேயாகும் - வேறுபட்டவையல்ல.

சரி- இந்த சுருதியில் - स्तब्धोऽस्युत तमादेशमप्राक्ष्यो येनाश्रुतं श्रुतं भवत्यमतं मतमविज्ञातं विज्ञातम्-என்று (உத்தாலகர் என்கிற ரிஷி) (தகப்பன்) தம் பையன் ஸ்வேதகேதுவிடம் சொன்னார்- நீமுட்டாள் - நீ உன் ஆசார்யாரிடமிருந்து ஆதேசத்தைக் கேட்டாயா - ஒருவனைத் தெரிவதாலே-எவன் நினைக்கப்படா மலிருந்ததோ அது (அவன்) நினைக்கப்பட்டவனாகவும், எவன் அறியப்படாமலிருக்கிறானோ - அவன் அறியப்பட்டவனாக ஆகிறான்-என்று சொல்லி சம்பூர்ண ஜகத்திற்கு பிருஹ்மமே

ஏக காரணம் அந்த காரணமும் காரியமும் - ஒன்றுதான் (வேருனவையில்லை) என்று பிரதிக்ஞைசெய்து திருஷ்டாந் தங்கள் மூலமாகக்காண்பித்தார். அதாவது காரணபூத பிருஹ்ம விக்ஞானத்திஞல் காரியபூதமாகிற உலகம் அறியப் படுகிறது - இதனுல் ஏகவிக்ஞானத்திஞல் ஸர்வ விக்ஞானம் யேற்படுகிறது - ஸம்பூர்ண உலகத்திற்கும் பிருஹ்மம் எப்படி காரணமாகும் - என்பதை நன்ருக அறியாத சிஷ்ய ஞல் மீண்டும் கேள்விகேட்கப்படுகிறது - பகவானே कथं नु भगवः स आदेशः- எவன் எல்லாவற்றையும் ஆள்கிருனே-அவன் யார்? எப்படி? இதன் அர்த்தம் ஒருவனை (காரணப் பொருளை) அறிவதால் மற்ற எல்லாமும் அறியப்பட்டதாகும்? (அதன் காரியங்கள்); அதனுல் உத்ஸாஹமடைந்த ஆசார்யர் ஸ்வேத கேதுவுக்கு உபதேசித்தார்-சோதிதவாக்யங்களாலே (காரண வாக்யங்களாலே) - ஜகத் பிருஹ்மத்தின் காரியம்-பிருஹ்மம் ஏக காரணமாதலால் - ஜகத் பிருஹ்மத்தையே தனக்குக் காரணமாக (ஆத்மாவாகக்) கொண்டது - அதனுல் திருஷ் டாந்தமாகிற களிமண்ணுல் (காட்டப்பட்டது). ஒருபிடி களிமண் எப்படி பானையாகிறதோ-அதேபோல். காரண வஸ்துவைத் தெரிவதால் காரியமாகிற பானை-தட்டு இத்யாதி அறியப்பட்டவையாகும். அதேமாதிரி காரணமாகிற பிருஹ்மமும் காரியமாகிற ஜகத்தும் ஒன்ருகும் - அதனுல் பானை தட்டு இத்யாதிகளுக்கு களிமண்ணைத் தவிர வேறு ஒரு திரவியமாகவில்லை.

அதனுல் அந்த காரியங்கள் காரணவஸ்துவாகிற களிமண்ணை அறிவதால் அறியப்பட்டதாகும் (இங்கே ஒரு பிடி களிமண் காரியங்களில் இருக்கிறதாக அர்த்தமில்லை - அதைப்பற்றிய ஞானம் என்று அர்த்தம். காரணவஸ்துவின் ஞானம் காரியவஸ்துவின் ஞானத்தை உண்டாக்கும். இதனுல் காரணுத் காரியம் அனன்யத்வம் (ஒன்ருகவேயிருக் கிறது-வேறுப்பட்டதில்லை) என்பதாகும். यथा सोम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृन्मयं विज्ञातं स्यात् என்பதைக்காட்டுகிறது - एकज्ञानेन (காரண அறிவிஞல் காரிய அறிவு)- (ज्ञातत्वम्:) யேற்படு கிறது

இங்கு காணுதன் வாதிக்கிறுன் - விகாரம் (நாமதேயம்) वाचारम्भणं வாக்குக்கு விஷயமாக (பிற்பாடு அது கிரியை செய்வதற்கு உபயோகப்படுவதாலே) களிமண் அடையப்படுகிறது. मृत्तिकेत्येव ஸத்யம் (களிமண்ணே ஸத்யம்) (சா. உ. 6-1-4) இங்கே ஆசார்யன் காரணமும் காரியமும் ஒன்றேதான் என்றும், இந்த விஷயம் லோகபிரத்யக்ஷப்பிரகாரமும் காணப்படுகிறது-இந்த ஆட்சேபத்தை சாதிப்பதற்கு காணுதனின்வாதங்கள் - என்ன வென்ருல் காரியத்திற்கு காரணத்திலிருந்து வேறுப்பட்ட திரவியமாக (Substance) விருக்கிறதன்மை யேற்படுகிறது. இந்த சங்கையைப்பரிஹரிக்க மேல் சொல்லப்பட்டது - மீண்டும் சொல்லப்படுகிறது. वाचारंभणं विकारो नामधेयं...मृत्तिकेत्येव सत्यम् என்பதால் யேற்படும்; இங்கே आरभ्यते-आलभ्यते स्पृश्यते इत्यारम्भणं-எல்லாம் ஒரே அர்த்தம் அடையப்படுகிறது. कृत्युल्युटो बहुलम्-கர்மணில்யுட்-கிரியையும் "ல்யுட்" என்கிற பிரத்யயமும் சேர்ந்து எல்லாவற்றையும் காட்டுவதற்கு உபயோகப்படுகிறது (பாணினி 3-3-1/3) வாசா என்பதற்கு வாக்-பூர்வமாக வ்யவஹார ஹேதுவாக விருக்கிறது. இந்த குடத்தில் தண்ணீர் கொண்டுவா என்று வாக்கிஞல் முன் சொல்லப்பட்ட பின்பு - ஒருவன் குடத்தில் தண்ணிரைக் கொண்டு வருகிறுன். (கிரியை வாக்பூர்வத்தை தொடர்கிறது). இந்த வ்யவஹார கிரியைக்கு ஒருவிதமான விகாரம் (காரணத்தின் மாறுதலாகிற பானை) அதற்கு ஆகாரம் - அடிபருத்து - நுணிவாய் சிறுக - விருப்பது) அதற்கு பல தர்மங்கள் - ஒரு "பானை" எனப்படும் நாமதேயம் இவை எல்லாம் யேற்பட்டாலும் - இவை காரணப் பொருளாகிற களிமண்ணிஞல் அடையப்பட்டதாகும். (तेनैव मृद्द्रव्येन) விகார: - ஸம்ஸ்தான விசேஷம். கட என்கிற பெயருடன் நாமதேயம்: - தண்ணீரைக் கொண்டு வருவதற்கு உபயோகம். களிமண்ணே இவ்வித விகாரத்தையும் நாமதேயத்தையும் அடைகிறது.

ஆகவே கடம் - தட்டு இத்யாதிகளும் मृत्तिकेत्येव களிமண்ணைப்போல ஸத்யம் - (ஸத்காரியவாதம் - திரவியத்தை உண்டாக்குகிறது). மிருத்திகாதிரவ்ய மித்யேவ ஸத்யம்

காரியதிரவியம் காரண திரவியத்தைப் போல-அந்த அறிவி ஞல் அடையப்படுகிறது-அதனுல் வேறு ஒரு திரவியமல்ல. (இங்கே ஸ்வேத கேதுவின் சந்தேகத்தைப் போக்க பானை தட்டு முதலியவை களிமண்ணின் காரியங்களாகும். இதனுல் மிருத்தி கேத்யேவ ஸத்யம் - என்பது தம் பக்ஷத்திற்கு ஸாதகம் - அது அத்வைதிக்கு ஒட்டாது என்று ராமானுஜர் கருதுகிருர். இதனுல் காரியமும் ஸத்யம் - களிமண்ணைப் போல பானை போன்ற காரியங்களும் ஸத்யம் அதனுல் களி மண் மாத்திரம் தான் ஸத்யம் என்று அத்வைதி சொல்வது சரியில்லை என்பதாம்).

ஆகையால் கடம் சம்பந்தப்பட்டவரை ம்ருத்கேத்யேவ ஸத்யம் - மிருத் என்கிற திரவியமே - அதுவே காரிய காரண தசைகளில் ஸத்யம் - பிரமாணங்களால் அறியப்படு கிறது என்று அர்த்தம்-வேறு ஒரு திரவியத்தினுல் அறியப் படுவதல்ல. (அதற்குள் இன்னொரு திரவியம் இருப்பது என்பதுமல்ல). ஆகையால் களிமண் - தங்கம் இன்னும் மற்ற திருஷ்டாந்த காரண திரவியங்களே - திரவிய ஸம்ஸ்தானங் களே-(சேர்க்கை) அதனுல் காரியங்களாகிற பல நாமதேயங் கள்-எல்லாம்சரியாகும்-எப்படி புத்திவிஷயத்திலே இம்மாதிரி மாறுதல்கள் சரியாகும் யெனின் - உதாரணமாக தேவதத் தன் என்பவனுக்கு உடம்பிலே பாலன் - யுவா - கிழவன் அம்மாதிரி காரியங்களாகிற விகாரங்கள் யேற்படுகின்ற னவோ அதற்குச் சமமாகும். (இங்கே தேவதத்தன் தேகத் தைக் குறிக்காது ஒரு மனிதனைக் குறிக்கும்). ஒரே மனித னுக்கு வெவ்வேறு அவஸ்தைகள் ஏற்படுகின்றனவே - அது போல என அர்த்தம்.)

மேலே சொல்லப்பட்டது - காரியம் காரணத்திலிருந்து வேருனது - ஏனெனில் வ்யவஹார தசையில் - காரணத்தை விட காரியம் வேறுதான் - அதற்கு உற்பத்தி, விநாசம் முதலியவை யேற்படக்கூடும்-உதாரணமாக பானை (காரியம்) உடைந்து போனுல், வ்யவஹாரத்தில் காரியம் நஷ்டம் - ஆனுல் களிமண் இருக்கத்தான் இருக்கிறது - ஆகவே அவை

வேறு என்கிற இந்த வாதம் தள்ளப்படுகிறது-ஏனெனில் ஒரு பொருளுக்கு உற்பத்தி - விநாசம் அந்த காரண வஸ்துவின் அவஸ்தைகளின் மாறுதலாகும். ஆகவே இப்படிச் சொல்வது சரியாகும் - அதாவது ஒரே ஒரு திரவியம் - குறிப்பிட்ட அவஸ்தைகளில் குறிப்பிட்ட பதங்களால் அறியப்படும் அது - குறிப்பிட்ட அவஸ்தைகளில் குறிப்பிட்ட காரியங்களாகவும் அறியப்படும். ஒரு திரவியம் வெவ்வேறு அவஸ்தைகளை அடைவது காரகனின் வ்யாபரத்தினுலும் யேற்படும். அதனுல் உற்பத்தி செய்கிறவனின் செயல் அந்தக் காரியத்திற்கு அர்த்தமுள்ளதாகிறது.

(அபிவ்யக்தி - காரணத்துக்குள் காரியம் அடங்கியிருக்கிறது - அது பிரகாசமாகாமல் உள்ளடங்கியிருக்கிறது. இது சாங்கியனின் பக்ஷம் - அதாவது கார்யாகார நித்யத்வம், நமக்கு அது சம்மதமில்லை - கடம் நாசமடைகிறது என்றுல் - கடத்வரூபம் இன்னொரு அவஸ்தையையடைகிறது. ஸத்காரியவாதியின் கருத்தை ஸ்வீகரிப்பது திரவிய தர்மம் உற்பத்தியாகிறது) - (இங்கே காரக வியாபாரம் என்பதில் காரிய காரண ஐக்யமாகவிருப்பின் ஆட்சேபிக்கப்படும் எப்படி யெனில் காரகனின் செயல் உபயோகமில்லாமல் போய்விடும் என்று முந்திச் சொல்லப்பட்ட ஆட்சேபத்திற்கு இது சமாதானமாகும்).

அபிவ்யக்திக்கு யேற்படும் ஆட்சேபங்களை நாம் தள்ளுகிறோம் - ஏனெனில் நாம் அதை ஒப்புக் கொள்ளவில்லை. காரணத்திலிருந்து காரியம் உண்டாகிறது என்றுல் - காரியம் காரணத்தினுள் அடங்கியிருக்கிறது என்பது விரோதிக்கப்படவில்லை - ஏனெனில் காரிய உற்பத்தியில் எது காரணமாகவிருக்கிறதோ அதைச் சேர்ந்ததாகவிருக்கிறது; (ஸத்காரிய வாதியின் அபிப்ராயம் காரியம் காரணத்துள் உள்ளடங்கியிருக்கிறது - இந்த அபிப்ராயத்துக்கு யாதொரு விரோதமில்லை. ஆகவே ஸத்யேவ உற்பத்தி செய்கிறது.)

விரோதத்வம் இம்மாதிரி யேற்படுகிறது எனச் சொல் லக்கூடும் - காரியம் காரணத்திலே ஏற்கனவேயிருக்கிறது; காரியமும் உண்டாக்கப்பட்டது - என்பதாகும். எவனுக்கு வஸ்துக்களின் உற்பத்தி - விநாசம் பற்றிய அறிவு இல்லையோ, அவனுக்கு இந்த சந்தேகம் ஏற்படும். ஒரு திர வியத்தின் அதற்குப் பிற்பாடு யேற்படும் ஸம்ஸ்தானத்தின் சேர்க்கை (சம்பந்தம்) என்பது அந்த திரவியத்தின் முந்தி யிருந்த ஸம்ஸ்தானத்தின் அழிவாகும் - அதனாலே அதனு டைய திரவியமாகிற இருப்புக்கு இன்னொரு அவஸ்தையை உண்டாக்குவதாகும். (பூர்வ பூர்வ ஸம்ஸ்தான ஸம்ஸ்திதி யின் விநாசம் - அதனால் யேற்படுவது தன் அவஸ்தைக்கு இன்னொரு உற்பத்தி. (மாறுதல்) ஆகையால் ஒரு திரவியத் தினுடைய ஸர்வ அவஸ்தைகளைப் பார்க்கும் போது அந்த திரவியம் ஸத்தாக (இருக்கிறதாக) விருக்கிறது. அதனாலே ஸத் காரியவாதிக்கு விரோதம் ஒன்றுமில்லை.

(ஸத்காரியவாதி - எவன் காரியம் காரணத்துள் இருக் கிறது என்று சொல்கிறானோ - அவன் ஸத்காரியவாதி விசிஷ்டாத் வைதவாதிகள் ஸத்காரியவாதிகள்). சரி, இவ் விதம் சொல்லப்படுமாகில், உண்மையாகவில்லாத ஸம்ஸ் தானத்தை ஒப்புக் கொள்வதால், காரியம் காரணத்தில் இல்லை என்கிற அபிப்ராயம் யேற்படும் - அப்போது எவன் இந்த அபிப்ராயத்தை (காரியம் காரணத்தில் இல்லை) என் கிற அஸத்காரியவாதியினுடைய உற்பத்தியினால் வழக்க மான தர்மங்களை, அந்த ஜாதிக்குரிய தர்மங்களை வஸ்து கொண்டதில்லை என்கிறானோ -- அவனுடைய அபிப்ராயம் (ஸத்காரியவாதிக்கு) காரியம் - காரணத்தில் உள்ளது என்பதற்கு பிரஸங்கம் (உண்டாவதற்கு) யேற்படும். அனுகூலமாகும்.

(அஸத் காரியவாதி நோsப்யுத்பத் தோனுத்பத்திமத்வே ஸத் காரியவாத பிரஸங்க: ; உத்பத்திமத்வே சாநவஸ்தா.) ஒரு உற்பத்தியான பொருள் அதன் ஜாதிக்குரியதர்மங் களைக் கொள்ளுமானால், அதன் உற்பத்திகு அதே தர்மம்

உள்ளதாயிருக்க வேண்டும் அதனால் அநவஸ்தா தோஷம் யேற்படக்கூடும். எமது அபிப்ராயத்திலே, ஒரு திரவியத்தின் அவஸ்தை (பிரதக் பிரதிபத்தி கார்யயோ காரார்ஹத்வாத்) அதன் தனித்தனியான காரியங்கள் அல்லது காரிய உருவங்கள் இவைகளுடன் சம்பந்தப்பட்டிருக்க வேண்டும் இவ்விதமாக எந்த திரவியத்திற்கு இந்த அவஸ்தைகள் யேற்கனவே உள்ளனவோ - உற்பத்தியாக்குகிறதோ-இந்த மாதிரி அவஸ்தைகளை (ஏற்படுத்தக் கூடும்)-இப்படிச் சொல்வதால் யாதொரு தோஷமில்லை நிரவத்யம். (அவஸ்தாவத ஏவோத்பத்த்யாதிகம் ஸர்வமிதி நிரவத்யம்).

(அதாவது ராமானுஜரின் அபிப்ராயம் - உற்பத்தி (காரியம்) என்பது அந்த திரவியத்தின் வேறு ஒரு அவஸ்தையை உண்டாக்குகிறது. உற்பத்தி ஒரு அவஸ்தையாகும். இந்த அவஸ்தை அந்த திரவியத்தின் ஸத்தாவுக்கு (இருப்புக்கு) வேறானதாகவில்லை. ஒரு கபாலம் (பானை) இருக்கிற அவஸ்தை ஒன்று. அது உடைந்துபோய் சூர்ணமாக ஆகிறது - முந்தின கட அவஸ்தையின் விநசாமாகும். பிண்டத்வ அவஸ்தை (களிமண்பிடி) அதில் பல மாறுதல்கள் உண்டாவதால், முந்தின அவஸ்தையின் விநாசம் - அது நாசமானால் - பஹித்வம் நாசமாகி ஏகத்வம் ஆகிறது - இதனால் தர்க்கத்திற்கு விரோதம் ஒன்றுமில்லை. (முந்தி சொல்லப்பட்ட வாதம் எண்ணிக்கையில் (ஸங்க்யையில்) வித்யாஸம் (காரணம் காரியத்திற்கும்) இதனால் இரண்டும் வெவ்வேறாக விருக்கின்றன காரணமும் காரியமும், அவை அந்த திரவியத்தின் வெவ்வேறு காலங்களிலுள்ள அவஸ்தைகளாகும்.

**விளக்கம்:—**

(அதாவது ஒரு வஸ்துவுக்கு பல அவஸ்தைகள் உண்டு. அங்கே புத்தி - பேச்சினால் (சப்தாதி) பேதங்கள் யேற்படுகின்றன. வ்யவஹாரத்தில் யேற்படுகிறது. நம் சரீரத்திற்கு பால்யம் - யௌவநம் வயோதிகம் ஏற்படும் அவஸ்தைகள் பலவாயினும் அந்த மனிதன் விஷயத்தில் யுவா—

விருத்தன் என்று அவஸ்தையை உபயோகிக்கமால் - புருஷனேயே குறிக்கிறேம். வஸ்துக்கள் வெவ்வேருக விருப் பினும் அங்கும் மண் கட்டை ஸ்வர்ணம் என்கிற புத்தி சப்தாதி பேதங்கள் காணப்படுகின்றன இப்படி இரண்டுவித மான நிலேகள் இருக்கும் போது மண், பானே இத்யாதி கார்ய காரண பாவஸ்தலத்தில் - புத்தி - சப்தாதி பேதங்களுக்கு அவஸ்தா பேதமே இருக்கிறது-என்று எப்படி உறுதியாகச் சொல்லப்படும்? இதற்கு அடுத்த சூத்திரத்தில் பதில் அளிக் கப்படுகிறது.)

(இங்கே சில விஷயங்கள் விளக்கப்படும். ஆரம்பண சப்த: ஆதி யேஷாம்வாக்யாநாம் தாநி ஆரம்பண சப்தாநி; தேப்ய: வாசாரம் பணம் விகாரோ நாமதேயம்; மிருத்தி கேத்யேவ ஸத்யம - ஸதேவ ஸௌம்யேத மக்ராஸீத் - என்கிற வாக்யங்கள் - இங்கே ஜகத: - என்பதை சேர்த்துக் கொண்டு - கார்யமான ஜகத்துக்கு, ததந்யத்வம் - காரண மான பிருஹ்மத்தைவிட ஸ்வரூபபேதமின்மை: ஆரம்பண சப்தாதிப்ய:- மேற் சொல்லப்பட்ட வாக்யங்களால் அறியப் படுகிறது என்பது சூத்ரார்த்தம். அத்வைதிகள் வாசாரம் பணம் என்பதை ஒரே பதமாக (ஸம்ஸ்தபதமாக) வாகாலம் பநம் - வ்யவஹாரிகம் என்கிற அர்த்தத்தில் சொல்கிருர்கள். அப்போது ததந்யத்வம் வாசாரம்பண சப்தாதிப்ய: - என்று அமைந்திருக்க வேண்டும். ஆரம்பண சப்தாதிப்ய: என்றும் வாசா என்பது தனிப்பதம் என்பதும் ராமானுஜரின் கருத்து. கார்ய காரணங்களுக்குப் பேதத்தைச் சொல்லும் காணுத மதத்தை முதலில் ராமானுஜர் சொல்லி; காணுதமத கண்டந மாக அத்வைத பக்ஷத்தைச் சொல்லி - அதன் கண்டநமாக ஜீவாக்ஞானவாதிகளின் மதத்தைச் சொல்லி, அந்த ஜீவாக் ஞானவாத கண்டநமாக - சாங்கரர்களே கூறியிருப்பதைச் சொல்லி-இவ்விதமாக காணுதன் சாங்கரமதத்தைக் கண்டிப் பதை விவரித்து - பிறகு தாமே அதைக் (காணுதமதத்தை) கண்டித்து தமது சித்தாந்தத்தைச் சொன்னுர். மொத்த மாக - ஒரே வஸ்துவுக்கு அவஸ்தா பேதங்கள் புத்தி சப்தாதி பேதங்களால் காணப்படுகின்றன.

(நம் சரீரத்திற்கு பால்யம் கௌமாரம் - வயோதிகம் யேற்படுவது - ஆயினும் வஸ்து ஒன்றே. (அவஸ்தைகள் பலவாகவிருப்பினும்). அவஸ்தைகளைக் குறித்து சப்தம் பிரயோகிப்பதில்லை. புருஷனைக் குறித்தே வ்யவஹரிக்கப் படுகின்றன. யுவாவையும் பாலன் என்பதில்லை. பாலனைப் பார்த்து இவன் யுவா என்றும் (உத்தர உத்தர அவஸ்தை களால்) நினைப்பதில்லை. காரியம் காரணத்தில் இருக்கிற படியால் காரிய காரணங்களுக்கு அபேதமே ஏற்கத்தகுந்தது. நேற்று மண்ணாகவிருந்தது·இன்று பானை-நாளை உடைந்து போய் மீண்டும் மண்ணாகிற்று. வேதமும் ஸதேவ ஸோம் யேதமக்ர ஆஸீத் - இந்த ஸ்தூல சேதந அசேதந விசிஷ்ட பிருஹ்மம் ஸ்ருஷ்டிக்கு முன்பு - பிரளய காலத்தில் - சூக்ஷ்ம சேதநா சேதநவிசிஷ்ட பிருஹ்மமாகவே இருந்தது - நேற்று யிருந்த வஸ்துவே - இன்று இவ்வாறு அவஸ்தையை அடைந்திருக்கிறது - இது தவிர வேறு திரவியமன்று என்பது பிரத்யக்ஷத்தாலும் வ்யவஹாரத்திலும் ஸித்திக் கிறது. ஸோயம் என்பது அது இது (பிரத்யபிஜ்ஞை - ஞாபகப்படுத்திச் சொல்லுகிறது. நேற்று பானையில் மண் தோன்றியது இன்று அந்த மண்தான் இந்தப் பானையாகும். அதுவே நேற்று மண்ணாகவிருந்தது.)

(ஆகவே ஒரே திரவியமே என்ற புத்தி; - அது வ்ய வஹாரம் வித்யாஸம்எனத் தோன்றும். வஸ்து மாறுத லடைந்தால அந்த நிலையில் இல்லை-ஜகத் அப்போது சூக்ஷ்ம மாக - நாம ரூப விகாரம் ரஹிதம் - இப்போது ஸ்தூலமாகி- நாம ரூப விபாகம் யேற்பட்டு-வித்யாஸப்படுத்தப்படுகிறது, அதனுல் ஸத் - அஸத் வார்த்தைகள் பிரயோகப்படுகின்றன. ஸர்வாத்மநா - ஒன்றும் இல்லை என்கிற அர்த்தமில்லை. தர்மாந்தரேண - என்பதற்கு இந்த நிலையில் இல்லை என்ப தாகும்). ஸர்வாத்மநாதுச்சத்வம் வஸ்துவுக்கு யேற்படாது- யுக்தி பிரத்யக்ஷத்திற்கு விரோதம் - என்பது ராமாநுஜரின் கருத்து).

**ஸ்ரீபாஷ்யம்:**–அவ்விதமே **सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम्**. ஸௌம்ய - ஸத் ஒன்றுதான் பிரளயத்தில் இருந்தது. ஒன்றுகவே - அத்வீதீயமாக விருந்தது என்பது. சா. VI - 2 - 1 வாக்யம். இதில் சொல்லப்படுகிறது-ஸத்யேவ இதம். இது எல்லாம் ஸத் என்று சொல்லப்படும் பிருஹ்மமே. அது இப்போது நாம ரூபவிபாகம் யேற்பட்டதால் இந்த உலகம், விபக்த நாம ரூபத்வேந - நாநா (பல) ரூபத்தை ஜகத் அடைந்தது. அப்போது ஜகத் நாம ரூபமில்லாமையாலே ஒன்று- இப்போது விபாகத்தால் நாநுத்வம் அதற்கு யேற்பட்டது. அக்ரே - ஸ்ருஷ்டிக்கு முன்பு - பிரளயத்திலே - நாம ரூப விபாகம் இல்லாதபடியாலே - ஏகமேவ ஆஸீத். அப்போது அந்த பிருஹ்மம் ஒன்றுகவே - இரண்டில்லாதபடி அதைப் போல இன்னென்று இல்லாதபடி அத்வீதீயமாக எப்படி யிருந்தது வென்ருல் - ஸர்வ சக்தித்வம் அதிஷ்டிதம் செய்யப்பட்டதாலே - பிருஹ்மத்தைப் போல இன்னெரு ஸர்வ சக்தியுள்ள வஸ்துவை சஹிக்கமாட்டாதபடி - ஜகத்தை நியமனம் செய்வதில் இன்னென்று அதைப் போல வில்லாதபடி - அத்வீதீயம் - என்று சொல்லப்பட்டது - இதனுல் ஜகத்திற்கும் பிருஹ்மத்திற்கும் ஐக்யம் (அநந்யத்வம்) உபதேசிக்கப்படுகிறது. அவ்விதமே - **तदैक्षत बहुस्याम् प्रजायेय**- அது ஸங்கல்பித்தது - நான் பலவாக ஆவேன் - பிறப்பேன்- (சா. உ. 6. 2. 2) என்பதால் ஸ்ருஷ்டிக்கப் பெற்ற தேஜஸ் முதலான விவித விசித்திர சர அசர வஸ்துக்களை ரூபமாகக் கொண்ட ஜகத்திற்கு பிருஹ்மம் ஆத்மாவாக விளங்கிற்று. ஸ்ருஷ்டி சங்கல்பத்தாலே அந்த பிருஹ்மம் பஹுபவனம் (பலவிதமாக ஆவேன் - ஸ்ருஷ்டி). என்பதால் ஜகத்தின் ஸ்ருஷ்டியைச் சொல்லி-கார்ய பூதமாகிற ஜகத்திற்கும் அதற்குக் காரணமான பிருஹ்மத்திற்கும் ஐக்யம் சொல்லி பிருஹ்மம் பரம காரணமாக விருப்பதாலே - **परमकारणात्परस्माद्ब्रह्मणोऽनन्यत्वमवसीयते** - இரண்டுக்கும்ஐக்யம், காரண காரிய ஐக்யம்- பிருஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் ஐக்யம் சொல்லப்பட்டதாகும்.

காரணுதனை நோக்கி - (நீ கேள்வி கேட்கலாம்) ஸத் சப்த வாச்யமான மேலான பிருஹ்மம் ஸர்வக்ஞன்-ஸத்ய ஸங்கல்பம் இத்யாதிகளால் நிரவத்யம் - ஸ தேவமிதி - இந்த ஜகத் ஸத்தே தான் என்று காட்டிச் சொல்லப்படுவதாலே - ஸச் சப்த வாச்யத்தினுலே - ஜகத் (உலகம்) நாமரூப விபாகமில்லாமல் (முந்தி) ஏகத்வம் (ஒன்ருகவே) யிருந்தது. ஜகத்திற்கும் அதிஷ்டானம் செய்வதற்கு பிருஹ்மத்தைத் தவிர வேறு ஒன்றும் அபேக்ஷையில்லை; மீண்டும் ஸ்ருஷ்டி சமயத்திலே; அந்த உலகம் பிருஹ்மத்தைத் தவிர வேறு ஒன்றையும் அதிஷ்டாதாவாக அபேக்ஷிக்க அவசியமில்லை. அந்த பிருஹ்மமே ஸ்ருஷ்டியில் சரீரமாகவிருக்கும் ஜகத் த்வாரா - விசித்திர சர அசர ரூப ஜகத்தினுலே-பஹீபவனம் (ஸ்ருஷ்டி) ஸங்கல்ப ரூப ஈக்ஷணம் அபேக்ஷிப்பதாலே எப்படி இச்சித்ததோ - அப்படியே அந்த ஸத்தே ஸங்கல்பித்தது - ஸ்ருஷ்டியை - எப்படி அந்த பிருஹ்மத்திற்கு ஈக்ஷணம் (ஸங்கல்பிக்கும் குணம்) யேற்பட்டு - பஹீபவனம் என்று ஆயிற்று என்கிற சந்தேகத்தைப்போக்க-सेयं देवतैक्षत அந்த தேவதையே சங்கல்பித்தது.

हन्ताहमिमास्तिस्रो देवता: अनेन जीवेनाऽऽत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणीति तासां त्रिवृतं त्रिवृतम् इत्यादि–

அதே தேவதை (ஸ்ரீ மந்நாராயணன்) நினைத்தது-நான் இந்த மூன்று தேவதைகளிலும் (தேஜஸ் நீர் ப்ருத்வி) மூன்றிலும் இந்த ஜீவனுடன் உள்நுழைந்து, நானேதான் அது என்று சொல்லும்படி - நாமரூபவ்யாகரணம் செய்வேன் - திருவிருத்கரணம் செய்வேன் - என்று நினைத்தது.

(இங்கே சொல்லப்படுவதை நோக்கவும்-ஒன்றே ஒன்று தான் இருந்தது - அதாவது உபாதானகாரணம் - இரண்டில்லாமல் அத்வீதீயம் என்பதால்-உபாதானகாரணமும் நிமித்த காரணமும் ஒன்றே ஆகும். திரிவிருத்கரணம் என்று இங்கேயும் இன்னொருவிடத்தில் பஞ்சீகரணமும் சொல்லப் பட்டதால்-அதற்கு உபலக்ஷணம். நானே என்று சொல்லும்

படி என்பதற்கு அநுப்ரவேசத்திஞல் என்னை ஆத்மாவாகக் கொண்டது - மதாத்மக ஜீவேந - என்று அர்த்தம். ஜீவே நாத்மநா-அந்தர்யாமியிஞம் தானே ஆகும்படி வாச்யார்த்தம் சரீர ஆத்ம பாவத்திஞல் ஐக்யம். ஸமஷ்டி ஸ்ருஷ்டிக்குப் பிறகு இந்த சரீர ஆத்ம பாவம் ஸித்திப்பதாகவிருப்பினும், பிரளயத்திலே அதே ஸத்தே (அதே பிருஹ்மமே - सदेवसोम्येति प्रलये - பிருஹ்மம்மாத்திரம் சொல்லப்பட்டதாலே - தேஜோ ரூபஜடாத்யைக்யம் ஸாக்ஷாத்தேவ-வக்தவ்யம் (சொல்லப்பட வேண்டியது - என்பது எப்படி நிரவத்யம் என்கிறதை நிரூபிக்கிறது - பின்ஞல் சொல்லப்படும் तदेव च तत्वमिति)

तिस्रोदेवताः ஸம்பூர்ண அசேதன வஸ்துக்கள் எல்லாவற்றையும் "மூன்று தேவதைகள்" (தேஜஸ் அப்பு பிருத்வி - இவைகளின் அபிமானிதேவதைகள்) - என்று காட்டி, அது (சுருதி) சொல்லிற்று - இந்த வஸ்துக்களை ஸ்வாத்மக - அநு பிரவேசத்திஞல் யேற்பட்ட சரீர ஆத்ம சம்பந்தம்-மதாத்மக வஸ்துக்கள்)-இதஞல் விசித்திர நாமரூபங்களை கொண்டபடி நான் வித்யாஸப்படுத்துவேன். अनेन जीवेनात्मना - மதாத்மக ஜீவன். பிருஹ்மம் ஆத்மாவாக விருப்பதாலே - விசித்திர நாமரூப ஸ்ருஷ்டியைச் செய்தது என்று அர்த்தம். அதாவது பிருஹ்மத்துக்கும் ஜீவனுக்கும் நாமரூப விபாகம் யேற்பட்டது. நாமரூப பாக்த்வம் - என்று அர்த்தம் - தை. ஆ. 6-2- तत् सृष्ट्वा तदेवानुप्रविशत् - तदनुप्रविश्य सच्चत्यच्चाभवत् - இவ்விதமாக ஜகத்தை ஸ்ருஷ்டித்து, பிருஹ்மமே ஸத்தாகவும் த்யுத்தாகவும் (சேதன அசேதன வஸ்துக்களாகவும்) ஆயிற்று-சேதன ஜீவர்கள் கூடிய ஜகத், பிருஹ்மம் அதற்கு ஆத்மாவானபடியால், சரீரமாயிற்று. (அநுப்ரவேசத்திஞல் யேற்பட்டது).

அதாவது सजीवं जगत् परेण பிருஹ்மணு ஆத்மதயா - அனுப்ரவிஷ்டமிதி என்று அர்த்தம். ஸ்ருஷ்டியை பிருஹ்மத்தின் காரியாவஸ்தையாகவும்-பிரளயத்திலே காரணாவஸ்தையாகவும் சொல்லி - முந்தி பிரளயத்தில் இருந்த சூக்ஷ்மசித் அசித் வஸ்துக்கள் ஸ்ருஷ்டியிலே ஸ்தூல சித் அசித் விசிஷ்ட பிருஹ்மமாக மாறுவது - பரப்பிருஹ்ம சரீரத்தில்-யேற்பட்ட

அவஸ்தாமாறுதல்களாகும். பரபிருஹ்மத்தின் சரீரத்வம்- எப்படி யெனில் परस्य ब्रह्मण: आत्मत्वमन्तर्यामि ब्रह्मणादिषु सिद्धम् அது நினைக்கத்தகுந்தது. இவ்விதமாக முந்தி யேற்பட்ட சங்கை (ஸமஷ்டி ஸ்ருஷ்டிக்கு அப்புறமே சரீர ஆத்மபாவம் - அனு ப்ரவேசம் - அதற்கு முந்தி எப்படி என்கிற சங்கைக்கு) பரி ஹாரம் (நிரஸ்தா) (பிரளயத்திலும் ஸூக்ஷ்ம சேதனு சேதன ஸத்பாவ: - அதெப்படி? சுருதி சொல்கிறது. तम: परेदेवे एकीभवति; तमसागूढमग्रे प्रकेतम्-न कर्माविभागादित्वात्-என்பதால் ஸித்தம்.)

(ஆகவே நாமரூப விபாகம் யேற்பட்டது-எங்கனமெனில் பிருஹ்மம் அசித் வஸ்துக்களுக்கு ஆத்மாவாக விருப் பதாலும் - அந்த அசித் வஸ்துக்கள் ஜீவனுடன் சம்பந்தப் பட்டிருந்ததால் - இரண்டிற்கும் பிருஹ்மமே ஆத்மாவாகவே விளங்கியது - இரண்டும் சரீரமாக ஆயிற்று. பிருஹ்மம் ஸர்வக்ஞ - ஸத்யஸங்கல்ப - நிரவத்யமானது; அது எப்படி தோஷங்களுக்கு இருப்பிடமான ஜகத்தாக ஆயிற்று? உலகமோ ஜடம் - ஈக்ஷணம் கிடையாது-அதனுல் சந்தேகம் யேற்பட்டு, அது போக்கப்படுகிறது. இரண்டுவிதமாக முத லில் ஸம்ஷ்டி ஸ்ருஷ்டி - மூலப்பிரகிருதியிலிருந்து பஞ்சபூதங் கள் வரை சொல்லப்பட்டு-அதில் பிருஹ்மத்தின் உள் நுழை வது (அநுப்ரவேசம்) அந்த ஜீவர்களுடன் அநுப்ரவேசம் - ஆத்மதயா என்று சொல்லிற்று. மூன்று தேவதைகள் தேஜஸ் அப்பு ப்ருத்வியைக் குறிக்கும்; மூலபிரகிருதி "த்யுத்"; ஜீவன் "ஸத்தாகும்". மாறுதலே அடைவது பிரகிருதி - அதனுல் த்யுத். ஜீவன் மாறுதல் (ஸ்வரூபத்தில்) இல்லாத படியால் ஸத். ஸத் - த்யத் என்பவை வ்யஷ்டி ஸ்ருஷ்டியைக் குறிக் கும். ஸ்ருஷ்டிக்கு முன்பு பிரளயத்திலே - ஸத்த்யத் என்ப தில்லாமல் அவ்யக்தமாக விருந்தது - நாம ரூபவிபாகமின்றி என அர்த்தம்).

**ஸ்ரீபாஷ்யம்:—**

ஆகையால் அந்த பிருஹ்மமே இந்த சித் அசித் வஸ்து களைச் சரீரமாகக் கொண்டதாலே, பிருஹ்மமே ஜகத்தாக, ஜகத்சப்வாச்யமாக ஆயிற்று. ஸத் ஒன்றுதான் இருந்தது

ஏகமேவ ஆஸீத் - என்பது சரியாகும் - சரீர ஆத்மதயா ஒன்ருகவேயிருந்தது. जगच्चस: என்பதாகும். சரீரமாக விருக்கும் சித் அசித் வஸ்துக்களுக்கே எல்லா விகாரங்களும் சுகதுக்கமாகிற அபுருஷார்த்தங்கள் யேற்படுவதால் பிரும் மத்துக்கு யேற்படாதாகையால் (ஆத்மதயா) பிருஹ்மம் நிரவத்யத்வம் - கல்யாணகுணு கரத்வம் எல்லாம் சொல்லப் பட்டவை சரியாகும். (सर्वमुपपन्नतरम्) ஆகையால் சூத்ரக் காரரே - சூத். 2-1-22ல் अधिकं तु भेदनिर्देशात् (ஜீவனைக் காட்டி லும் பிருஹ்மத்தை வேருக வேதங்கள் கூறுவதாலே ஜீவனைவிட பரமாத்மா வேறுதான். சரீர ஆத்மாபாவத் திஞல் ஒன்று - ஆஞல் தத்வங்கள் வேறு; ஸ்வரூப ஐக்யமு மில்லை - ஸ்வரூபபேதமே இரண்டுக்கும் ஸித்திப்பது)-என்று பிற்பாடு சொல்லப்போகிருர். அதே போல சா. உ. 6-8-7ல் ऐतदात्म्यमिदं सर्वं-இந்த உலகமனைத்தும் பிருஹ்மத்தை ஆத்மா வாகக் கொண்டது. இதஞல் ஸம்பூர்ணசேதன அசேதன வஸ்துக்கள் பிருஹ்மத்துடன் தாதாத்மியம் (ஒற்றுமையை) அடைகிறது - என்று உபதேசிப்பதாலே - அதே ஒற்றுமை (तदेव च। तत्त्वमसि நீ பிருஹ்மமாக விருக்கிருய்-என்று ஜகத் பிருஹ்ம ஐக்யத்தைக் கூறிமுடிக்கிறது.

இம்மாதிரியான ஒற்றுமை ஜகத்திற்கும் பிருஹ்மத்திற் கும் மற்ற சுருதிகளாலும் காட்டப்படுகிறது-பிரு. உ. 6-14-1 सर्वं खल्विदं ब्रह्म - இவை எல்லாம் பிருஹ்மமே - பிரும்மத்தை ஆத்மாவாகக் கொண்டது. "இதம்" என்பதற்கு அத்வைதி (பிரமையுள்ள) பிருஹ்மணி என்கிருன்; நாம் ஜகத் என் கிறோம்) பிரு. உ. 6-6-5-6- आत्मनि खल्वरे दृष्टे श्रुते मते विज्ञाते इदं सर्वं विदितम्...इदं सर्वं यदयमात्मा - எப்போது அந்த ஆத்மா பார்க்கப் படுகிறதோ - கேட்கப்படுகிறதோ-நினைக்கப்படுகிறதோ-அறி யப்படுகிறதோ, அப்போது எல்லாம் அறியப்பட்டதாகும். ब्रह्मैवेदं सर्वं - இது எல்லாம் பிருஹ்மமே ஆகும்-என்பதற்குப் பொருள் இது எல்லாம் பிருஹ்மத்தையே ஆத்மாவாகக் கொண்டது. आत्मैवेदं सर्वं - இத்யாதி வாக்யங்களால் ஜகத் பிருஹ்மத்திற்கு ஒற்றுமை போதிக்கப்படுகிறது.

இதேமாதிரி அன்யத்வம் (வேறுகவிருக்கிறது) என்பதும் இந்த சுருதிகளாலே நிஷேதிக்கப்படுகிறது. பிரு. உ. 6-5-9 - सर्वं तं परादात् योऽन्यत्रात्मनः सर्वं वेद (எல்லா வஸ்துக்களும் அவனை விட்டு விடுகின்றன. (எவனை) - எவன் இந்த எல்லா வஸ்துக்களையும் ஆத்மாவைத் தவிர வேருக விருப்பவை (அபிருஹ்மாத்மகமாக) என்று எவன் அறிகிருனோ - அவனை; பிரு. உ 6-4-8 - नेह नानास्ति किंचन; मृत्योः स मृत्युमाप्नोति य इह नानेव पश्यति - இங்கு (பிருஹ்மாத்மகமாகவில்லாமல்) பலவாகவும் பலவகைப்பட்டதாகவும் இல்லை. எவன் இந்த ஜகத்தைப் பலவாகப் பார்க்கிருனோ அவன் மிருத்யுவை (சம்சாரத்தை) அடைகிருன். இதே மாதிரி இந்த சுருதியும் பிரு உ 4- 4-19 - கட. உ. 4-10) यत्र हि द्वैतमिव भवति तदितर इतरं पश्यति यत्र त्वस्य सर्वमात्मैवाभूत्, तत् केन कं पश्येत् - எங்கே இரட்டையிருக்கிறதோ, அங்கே ஒருவன் மற்றென்றைப் பார்க்கிருன். ஆனால் எவனுக்கு இவை எல்லாம் ஆத்மாவாகவிருக்கிறதோ, அங்கே எதனால் (எந்த ஸ்வதந்திர உருப்பினால்) ஒருவன் தனியாக எதைப் பார்ப்பான்? இந்த சுருதி அவித்வானுக்கு (அதாவது பிரும்மாத்மகமாக விருக்கின்றது எல்லாம் - என்று பார்க்காதவன் அவித்வான்) - அவனுக்கு த்வைத (இரட்டை) தர்சனம் யேற்படுகிறது; அதேமாதிரி எல்லாவற்றையும் பிரும்மத்தை ஆத்மாவாகவுடையது என்று பார்க்கிருனே - அவன் கோஷிப்பது யாதென்றால் अनन्यत्वमेव तात्त्विकमिति प्रतिपादयति - ஜீவ பிருஹ்ம ஐக்யம் மாத்திரமே தத்வமாகும் - உண்மையாகும். இவ்விதமாக-சுருதி காட்டுவதாலே - இந்த சுருதிகளின் ஆதாரத்தாலே ஆரம்பணம் என்கிற சப்தம் (ஸ்பருச்யதே இதி) - சொல்லப்படுகிறது. அதனால் ஜகத: परमकारणात् परस्मात् ब्रह्मणोऽनन्यत्वमुपपाद्यते - ஐக்யம் (ஒற்றுமை) ஜகத்திற்கும் பரம காரணமாகிற பிருஹ்மத்துக்கும் ஸ்தாபிதமாகிறது. இது பகவத் ராமானுஜரின் அபிப்ராயம். (இதனால் அத்வைதிகள் சொல்லுகிறபடி - ஸ்வரூப ஐக்யமில்லை).

(இனி விசிஷ்டாத்வைத சித்தாந்தம் சொல்லப்படுகிறது). ஆகவே தத்வம் (உண்மை) இதுதான். சித் அசித்

வஸ்துக்களைச் சரீரமாகக் கொண்ட பிருஹ்மம் - இவைகளை பிரகாரங்களாகச் கொள்வதாலே, பிருஹ்மம் ஸர்வதா-ஸர்வ சப்தங்களாலும் காட்டப்படுகிறது. (ஸர்வ சப்த வாச்ய பிருஹ்மம் இதி). அந்த பிருஹ்மம் சில சமயங்களில் காரண தசையாகிற பிரளயத்தில் எல்லா சித் அசித் வஸ்துக்களையும் சூக்ஷ்மமாக தன் சரீரமாகக் கொள்வதாலே - அவை அந்த சமயத்தில் பிருஹ்மத்தை விட்டுப்பிரிக்கமுடியாதபடி சூக்ஷ்ம தசையிலிருந்து கொண்டும் சரீரமாகவிருந்து கொண்டுமிருக்கின்றன; அவை ஸ்ருஷ்டி சமயத்தில் விரிவடைந்து ஸ்தூலமாக ஆகி பிரத்யக்ஷம் யுக்தி இத்யாதிகளுக்கு விஷயமாகின்றன; வித்யாஸங்கள் நாமரூபங்களால் யேற்படுத்தப்படுகின்றன. அந்த சமயம் பிருஹ்மம் காரிய அவஸ்தையை அடைந்திருக்கிறது-இவ்விதமாக பரமகாரணமாகிற பிருஹ்மம் காரிய ரூபமாகிற ஜகத்துடன் ஒன்றுக விருக்கிறது. சரீரபூத சித் அசித் வஸ்துக்கள் பிருஹ்மத்துக்குச் சரீரமாவதாலே இரண்டு தசைகளிலும் - காரண அவஸ்தை, காரிய அவஸ்தை ஆகிற உபய அவஸ்தைகளிலும் பிருஹ்மமே அவைகளுக்கு ஆத்மாவாக விருப்பதாலே, அவைகளுடைய ஸ்வபாவ வயவஸ்தைகள், குணதோஷங்கள் அந்த அந்த அவஸ்தைகளில் யேற்படுபவை-இவை பல நூற்றுக் கணக்கான (श्रुतिशतसिद्धया) -சுருதிகளாலே ஓதப்படுகின்றன. இதையே சா. மீ. 2-1-9 சூத்ரம் न तु दृष्टान्तभावात् - (பிருஹ்மத்தினிடம் உலகினுடைய தோஷங்கள் ஸ்பர்சிக்காது - (ஒட்டாது) - ஏனெனில் வேதாந்தவாக்யங்கள் பொருந்தாப் பேச்சாகமாட்டா; திருஷ்டாந்தமிருக்கையாலே). விளக்கிக் காட்டுகிறது - இது முன்பே சொல்லப்பட்ட விஷயமாகும்.

இங்கே அத்வைதிகளால் சொல்லப்படுகிறது - காரிய காரணங்களின் வேறுபடாமலிருப்பது (ஒற்றுமை) யேற்படுகிறது இதனுல் - அதாவது காரியம்மித்யை - அந்தமித்யை பிருஹ்மத்தை ஆஸ்ரயிக்கிறபடியால் - காரிய காரண ஐக்யம் ஸித்திப்பதில்லை. (பிருஹ்மம் வேறு-காரியம் வேறு மித்யை) - ஒன்று தான் ஸத்யம் (அதாவது பிருஹ்மம்); மித்யையாகிற ஜகத் (காரியம்) ஆகிறது. ஆகையால் ஸத்யம்

மித்யைகளுக்கு அர்த்தமுள்ள வற்றில் ஐக்யம் சம்பவிப்ப தில்லே. அப்படி ஒற்றுமை இருக்குமாகில், பிருஹ்மத்திற்கு மித்யாத்வமும் ஜகத்திற்கு நித்யத்வமும் யேற்படும்.

பாஸ்கர பக்ஷத்தினர்கள் சொல்கிருர்கள் - நாங்கள் காரியத்தை பாரமார்த்திகம் (உண்மை) என்று ஒப்புக் கொண்டு மீண்டும் சொல்வது - जीव ब्रह्मणोयोरौपाधिकमन्यत्वम् स्वाभाविकं चानन्यत्वम् । अचिद्ब्रह्मणोस्त् द्वयमपि स्वाभाविकम् என்கிருர்கள் (அதாவது-ஜீவபிருஹ்மபேதம் உபாதிகளால் யேற்படுவது-அவைகளுக்கு ஒற்றுமையே இயற்கையான ஸ்வரூபம்; பிருஹ்மத்திற்கும் அசேதன வஸ்துக்களுக்கும் - இண்டும் அதாவது பேதமும் ஒற்றுமையும் (ஐக்யமும்) இயற்கையானது; அவர்கள் அபிப்ராயப்படி உபாதியும் பிருஹ்மத்தையும் தவிர उपादिब्रह्मव्यतिरिक्तवस्त्वन्तराभावात् ஒருதத்வமும் இருக்கமுடியாது, நிரவயவமானதும் அகண்டிதமான பிருஹமத்துடன் எப்போதும் உபாதி சம்பந்தப்பட்டிருப்பதாலே, பிருஹ்மஸ்வரூபமே ஹேயாகாரமாக (தோஷமுள்ளதாக) பரிணமித்து விளங்குகிறது. பிருஹ்மத்தின் ஸ்வரூபமே பரிணமத்தை அடைகிறது - தோஷமுள்ளதாக ஆகிறது; இவ்விதம் ஒப்புக்கொள்வதால், பிருஹ்மத்திற்கும் அந்த சக்திக்கும் ஐக்யம் (ஒற்றுமை) யேற்படுகிறது; (நாம் சொல்வது) இப்படி நீ சொல்வாயாகில் - ஜீவ பிருஹ்மத்திற்கு கர்ம வச்யமாக யேற்படுவதும், அதேபோல பிருஹ்மத்திற்கு இயற்கையாகவுள்ள அபஹதபாப்மத்வாதி குணங்களின் வ்யவஸ்தைகளும் - இந்தக் காரணங்களாலே - சுருதிகளுக்கு (பேதத்தை உபதேசிக்கும் சுருதிகளுக்கு) விரோதமாகின்றன-அவை விரோதிக்கும்; இன்னும் சில சுருதிகளின் சொற்களும் - அசித் வஸ்துக்கள் பரிணமந்தை (விகாரத்தை) அடைகின்றன-பிருஹ்மம் நிர்விகாரம் (மாருதது-ஸத்யம்) என்பதுடன் விரோதிக்கும்.

(பாஸ்கரபக்ஷம் இங்கு சொல்லப்படுகிறது - ஹேயா காரபரிணமாத் - தேஹ இந்திரியாதி உபாதி - அதனல் ஜடபிரபஞ்சரூபேண பரிணமாத் - யாதவ பிரகாசரின்

பக்ஷமும் சேர்ந்து இதில் சொல்லப்படுகிறது. பாஸ்கரீயர் கள் - பிரும்ம ஜீவபேதம் உபாதியினுல் (தேக இந்திரியங் களால்) ஏற்படுவது - உபாதி நீங்கப்பெற்றதும் ஸ்வரூப ஐக்யம் ஜீவபிரும்மத்திற்கு யேற்படுகிறது. கடா ஆகாசம் உடைந்ததும் பரமாகாசமாகிறது - கடா காசம் ஜீவனுக்கு ஒப்பிடப்பட்டு - அந்த ஜீவன் பிருஹ்மத்துடன் ஒன்ருகிவிடு கிறது (உபாதி நீங்கியதும்); என்பதாகும்; யாதவ பிரகாசர்- ஒருபிடி களிமண் பானைதட்டு ஆகிற பலவஸ்துக்களுக்குக் காரணம் - அதே சமயம் மற்ற களிமண் மொந்தை உப யோகப்படாமல் அப்படியே இருக்கும் - அதுபோல பிருஹ் மம் தன் ஒரு பகுதியிலிருந்து ஜீவனை உண்டாக்குகிறது - பிருஹ்மத்தின் இன்னெரு பகுதி அப்படியே மாருமலிருக் கிறது. ஆகவே பிருஹ்மம் ஜீவர்களைவிட வேருகவும் - ஜீவர்களுடன் ஐக்கியமாகவும் இருக்கிறது-என்பது காட்டப் படுகிறது,

ஸர்வசக்தி - போக்திருபோக்ய ஈஸ்வராதி பரிணும அர்த்த சக்தி என்று அர்த்தம். சமுத்திரம் - அதன் அலை நுரைகள் புத்தி தோஷமே - போக்ய நியந்திரு போக்திருஷ் க்ரமேணபாவ்யம்).

**ஸ்ரீபாஷ்யம:—**அவர்கள் (பாஸ்கரர்கள்) அபிப்ராயப் படி - பிருஹ்ம ஸ்வரூபமே தோஷமுள்ளதாக பரிணமிக் கிறது - ஆகவே ஐக்யம் அந்த பிருஹ்ம சக்திக்கும் - பிருஹ் மத்திற்கும் யேற்படுகிறது - இப்படிச் சொல்வதால் பேத சுருதிகளுக்கும் அதேமாதிரி ஈஸ்வரனுக்கு மாறுதலே இல்லை (நிர்விகாரம்) என்பதற்கும் விரோதம் யேற்படும். அதேபடி யாதவ பிரகாசரின் பக்ஷத்தினர்கள் சொல்வது-பிருஹ்மமும் ஜகத்தும் வேறுபட்டதல்ல - ஐக்யமே (ஒன்றேயாகும்). இந்தக் காரணங்கள் காட்டப்படுகின்றன. ஸன்மாத்திரமே நிஜம் - யாதொரு விகாரங்களை அடையாது - நிரஸ்த நிகில போக்த்ருத்வம்-ஸன்மாத்திரத்திற்கு ஸர்வசக்தித்வம் உள்ளது அதுவே காரண பிருஹ்மம்; பிரளய காலங்களிலே, பிருஹ் மத்திற்கு சுகதுக்கானுபவங்கள் ஒடுங்கி அமைதியாகிவிடு

கின்றன; சாந்தமடைகின்றன; அந்த பிருஹ்மம் ஸ்வயம் பிரகாசமாக விருப்பினும் ஜீவனைப் போல சுஷீப்தியில் ஆழ்ந்து போசின்றது-அச்சமயம் அசித் வஸ்துவைப் போல ஆகி - பிரிக்கமுடியாதபடி ஒன்ருகவிருக்கிறது. ஸ்ருஷ்டி வேளையில் பிருஹ்மம் மூன்று அவஸ்தைகளை அடைகிறது - அந்த அவஸ்தைகள் பிருஹ்மத்தின் அம்சங்களேயாகும்.

பிருஹ்மமே போக்த்ரு போக்ய நியந்திருருபேண - அம்சங்களாகின்றன. (அனுபவிக்கிறவன், அனுபவிக்கப் படும் வஸ்து - நியந்தா (கட்டளையிடுபவன்) - எபபடி ம்ருத் பிண்டம் களிமண்ணிலிருந்து பானை-தட்டுக்களாகிற ரூபங் களாக மாறுகின்றதோ - எப்படி சமுத்திரம் அலை நுரை - குமிழிகளாக ஆகின்றதோ-அந்த அந்த காரியங்களால் பேத மாகச் சொல்லப்படுகின்றதோ - இம்மாதிரி போக்ய போத்ரு நியந்தாவாக விருப்பதால் அதனுல் யேற்படும் குணதோஷங் களும் பிருஹ்மத்திற்கு யேற்படுகின்றன. போக்ய போக்த்ரு நியந்தாவாக விருப்பினும் - அதனுல் தோஷங்கள் ஏற்படி னும், எல்லாவற்றிற்கும் பிருஹ்மம் ஆத்மாவாக விருப்ப தால் – ஸங்மாத்திர திரவியமே ஸர்வ அவஸ்தைகளிலும் ஸ்திதம்-என்பதால் பிருஹ்மத்தைவிட ஜகத் அனன்யத்வம் யேற்படுகிறது. இவைகளுக்கு அதிஷ்டானத்திருல் ஐக்யம் பேசப்படுகிறது என்று அர்த்தம்.

யாவதபிரகாசரின் பக்ஷத்தினர்கள், சுருதி - ஸ்மிருதி - இதிஹாஸபுராணங்களுக்கும் நியாய விரோதமாகவும் சொல் கிருர்கள். எல்லாசுருதிகளும் ஸ்மிருதிகளும் இதிஹாஸ புராணங்களும் ஸத்தாகிற பிருஹ்மத்தையே ஸ்ர்வேஸ்வர ஞகவும் ஸர்வக்ஞகவும் ஸர்வ சக்தி ஸத்ய ஸங்கல்பம் உள்ளவராயும் எனச் சொல்வதில் - நிரவத்யம், தேசகாலாதி களால் அவச்சின்னராகவும்-நிரதிசய ஆனந்தமுள்ளவராக வும் ஜகத்திற்கு பரம காரணமாகவும் சொல்லுகின்றன. அவைகள் ஸ்தாபிப்பதில்லை (எதை) - ஸங்மாத்திரம் ஈஸ்வர னைக் காட்டிலும் மேலானது - அந்த ஸங்மாத்திரத்திலிருந்து ஈஸ்வரன் ஒரு அம்சம் என்று (ஸ்தாபிப்பதில்லை). அவ் விதமே இந்த சுருதிகளும் கூறுகின்றன,

சா. உ., 6-2-1 सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम् - तदैक्षत बहुस्यां प्रजायेयेति - ஸௌம்யா - ஸத் ஒன்று தான் முதன்முதலில் இருந்தது-அத்வீதீயமாக ஒன்றே ஒன்ருக விருந்தது. அது நினைத்தது - நான் பலவாகப் பிறப்பேன் என்று; பிரு. உ.

3-4-11. ब्रह्म वा इदमग्र आसीदेकमेव । तदेकं सन्नव्यभवत् । तच्छ्रेयो रूपमत्य सृजतक्षत्रम्; यान्येतानि देवत्रा क्षत्राणीन्द्रो वरुणः सोमो रुद्रः पर्जन्यो यमो मृत्युरीशान इति -

பிருஹ்மம் - ஒன்றே ஒன்ருக முதன் முதலில் இருந்தது. ஒருவனுகவிருந்ததால் - (அது) அவன் தன்னை பலமுள்ள வனுக நினைக்கவில்லை. அந்த பிருஹ்மம் க்ஷத்திரியர்களை நல்ல ருபத்துடன் - மற்றவர்களைவிட மேலானவர்களாக ஸ்ருஷ்டித்தது. க்ஷத்திரியர்களுள் பலதேவதைகளாக விருக் கின்றனர் - வருணன் - சோமன் - ருத்ரன்-பர்ஜன்யன்-யமன் ம்ருத்யு ஈசானன் என்று பலர் இருக்கின்றனர். ஐத். 1-1-1- आत्मा वा इदमेक एवाग्र आसीत् नान्यत् किञ्चन मिषत् । स ईक्षत लोकान्नु सृजा इति - ஆத்மா - முதன் முதலில் ஒன்ருக விருந்தது- செயல்படுவதாக ஒன்றுமில்லை. அது நினைத்தது. நான் உலகத்தைப் படைப்பேன். மஹோ. 1-1

एको हवै नारायण आसीत्, न ब्रह्मा नेशानो नेमेद्यवा पृथिवी न नक्षत्राणि नापो नाग्निर्न सोमो न सूर्यः । स एकाकी न रमेत । तस्य ध्यानान्तः स्थस्य -

வாஸ்தவத்திலே நாராயணன் ஒருவரே இருந்தார். பிருஹ்மா இல்லை - ஈசாநர் இல்லை - ஆகாயம் பூமியும் இல்லை. நக்ஷத் திரங்கள் - ஜலங்கள் - அக்னி - சந்திரன் - சூரியன் ஒருவரும் இல்லை. தனியாகவிருந்ததால் அவர் சந்தோஷமாகவில்லை. அவர் தியானத்தின் முடிவில் இருந்தார். (அதற்குப் பிறகு என்று அர்த்தம்).

இம்மாதிரி சுருதி வசனங்களாலே, இன்னும் சிலவற்று லும், ஸ்ரீமந்நாராயணனே பரம காரணமாகவும், ஸர்வேஸ்வர

ளுகவும், விருந்தார். ஸத்-பிருஹ்மந்-ஆத்மந் ஆகிற சப்தங்கள் இம்மாதிரி பிரகரண வாக்யங்களிலே - அதேமாதிரி துல்ய பிரகரணங்களிலே - நாராயண சப்தத்தால் விசேஷிக்கப்பட்டிருக்கின்றன. அந்த பரமாத்மாவையே காட்டுகின்றன. (இங்கு ஸத் - பிருஹ்மந் - ஆத்மந் - பரம காரணமாகக் காட்டுகின்றன என்று சொல்லப்பட்டிருக்கின்றன- அவைகளில் ஸத் ரொம்ப பொதுவான பதமாகவும்; பிருஹ்மந் - குறைக்கப்பட்ட (நிஷ்கர்ஷ) சப்தமாகவும்; ஆத்மந்-ஞானம் என்பதாகவும் பிரயோகம். நாராயணனைச் சொல்லும்போது - எல்லாச் சந்தேகங்களும் அழிகின்றன - இம்மாதிரி ஸத் போன்ற பொதுவான பதங்களால் எது காட்டப்பட்டதோ - அந்த பொருள் குறிப்பிட்ட புருஷனை நாராயணனையே காட்டுகிறது). ஸ்ரீமந்நாராயணனுக்கே பரம காரணத்வம் இம்மாதிரி சுருதிகளில் ஓதப்படுகிறது.

ஸ்வே. 6. 7 - तमीश्वराणां परमं महेश्वरं - நாங்கள் அறியலாமா - அந்த மேலான் பிரபுவை - எவர் மஹேஸ்வரராகவிருக்கிறாரோ - அவரை; ஸ்வே. 6. 6. - सकारणं करणाधिपाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिपः - அவரே காரணம், அவரே பிரபு - அவரே கர்ணாதிபதியான ஜீவனுக்குப்பதி; அவரை உற்பத்தி செய்தவர் யாருமில்லை - அவருக்கு மேலானவர் யாருமில்லை. இவைகளால் பரம காரணத்வம் அவருக்கு ஓதப்படுகிறது. स्मृति களிலே - மனு ஸ்மிருதி (1·6) ततः स्वयम्भूर्भगवान् - பிறகு ஸ்வயம் புவான பகவான்-என்று ஆரம்பித்துச் சொல்கிறது. 1. 7-सोऽभिध्याय शरीरात् स्वात् सिसृक्षुर्विविधाः प्रजाः । अप एव ससर्जादौ तासु वीर्यमपासृजत् அவர் "நான் பலவாக ஆவேன்" என்று நினைத்து - அவர் தன் சரீரத்திலிருந்து பல பிராணிகளை உற்பத்தி செய்ய ஆசைகொண்டு, முதலில் தண்ணீரை ஸ்ருஷ்டித்தார். அதிலே அவர் தமது வீர்யத்தை விட்டார். இதிஹாஸ புராணங்களும் புருஷோத்தமனான ஸ்ரீமந் நாராயணனேயே ஜகத்தின் பரமகாரணம் என்று சொல்கின்றன. பாரதம் சாந் (மோக்ஷ தர்மம்) नारायणो जगन्मूर्तिरनन्तात्मा सनातनः - ...ससिसृक्षुः सहस्रांशादसृजत् पुरुषान् द्विधा - நாராயணன் ஜகந் மூர்த்தி - அவர் ஜகத்தைச் சரீரமாக உடையவர். அவர் அநந்த ஆத்மா (பல

ஜீவர்களுக்கு ஆத்மா); ஸநாதந: அவர் ஸ்ருஷ்டிக்க ஆசைப் பட்டார். அவர் தன் உடம்பின் ஒரு ஆயிரத்தின் ஒரு அம்சத் திலிருந்து இருவகை பிராணிகளை ஸ்ருஷ்டித்தார். வி. பு. **1-1-31** - பகவான் விஷ்ணுவினிடமிருந்து இந்த உலகம் உண்டாயிற்று. அவரிடமே அது ஸ்திரமாக விருக்கிறது - **विष्णोस्सकाशादुद्भूतं जगत् तत्रैव च स्थितम्**-) (இந்த சுருதிகளில் நாராயணன் - விஷ்ணுவே உலகைப் படைத்தார். "ஸத்" என்கிற பதம் சொல்லப்படவில்லை.)

மேலும் ஸந்மாத்திரம்தான் ஈஸ்வரன் என்று சொல்ல முடிகிறதில்லை - ஏனெனில் அவர் ஒரு அம்சமாக விளங்கு கிறார் என்று ஒப்புக் கொள்ளப்படுகிறது - அவர் ஸ விசேஷ மாக (யாவரையும் நியமிக்கும் நியத்தாவாக விருக்கிறார்.) ஆகையால் இப்படிச் சொல்ல முடிகிறதில்லை - அவருக்கு ஞான ஆனந்தாதி அநந்த கல்யாண குணயோகம் எப்பொழு தாவது (சிலசமயங்களில்) யேற்படுகிறது என்று. ஏனெ னில் இவை நித்யம்—ஸ்வபாவமாகவேயிருக்கின்றன என்று ஒப்புக் கொள்ளப்படுகின்றன.

யாதவபிரகாசர் சொல்கிறார் - இந்த குணயோகம் நித்ய மில்லை - எப்பொழுதாவது யேற்படுகிறது, அதற்குமாறாக - சுருதிகள் இவ்விதம் ஓதுகின்றன-ஸ்வே. உ. இதில் பகவா னுக்கு ஞானம் பலம்-கிரியா இத்யாதி குணயோகம் (சம்பந் தம்) இயற்கையாகவே எப்போதுமிருப்பதாக சொல்லப்படு கிறது-) ஆகவே இந்த குணயோகம் எப்பொழுதும் பிருஹ் மத்துக்கு ஸ்வபாவமாகவே விருக்கிறது - இந்த அபிப்ராயம் இந்த சுருதியில் ஓதப்படுகிறது - ஸ்வே. உ. 6 - 7ல் **परास्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया** அவருடைய மேன்மையான சக்தி வெளிக்காட்டப்படுகிறது பலவித மாகவும் - ஸ்வாபாவிகமாயும் - அது ஞான பலகிரியா வாகவும் சொல்லப்படுகிறது - (அவர்களால்) இங்கே இதை லக்ஷணபிரஸங்கம் எனச் சொல்லப்படுகிறது மு. உ. **1-1.6** **यः सर्वज्ञः सर्ववित्** இத்யாதிகளால் - அவர் ஸர்வக்ஞர் - ஸர்வத் தையும் நன்றாகவும் பொதுவாகவும் விசேஷமாகவும் அறிந்த

வர் என்று கூறப்படுகிறது. ஞான ஆனந்தாதி சக்தியோகம் பிருஹ்மத்திற்கு ஸ்வாபாவிகம்; என்று இங்கே காட்டப்படுவதால், அதை லக்ஷணபிரஸங்கமாகிறது என்று நீ சொல்லாதே-(பாசகாதிவத்) கௌணமாகவில்லை. (இது ராமானுஜரின் பதில்-யாதவ பிரகாசரின் பக்ஷத்திற்கு) ஸர்வக்ஞ: இத்யாதிகளில் சக்தி மாத்திரை எனப்பொருள்படும்படி இல்லை. சூத்திரத்திலும் அவ்விதம் க்ருத்ப்ரத்யயம் இருக்கிறது என்று சொல்வதற்கில்லை - இங்கே க்ருத் ப்ரத்யய மாத்ரை சக்தியை (சாமர்த்தியத்தை) நினைவுப்படுத்துகிறது (பாசக சப்தத்தில் க்ருத பிரத்யயம் அந்த சமைக்கிற சக்தியைச் சொல்லுமே தவிர சமைக்கிற வஸ்துவைப்பற்றிச் சொல்லாது. அதுபோல ஸர்வக்ஞ பதம் அவ்விதமில்லை. அவர் சாமர்த்தியத்தை ஸ்வாபாவிகமாக கொண்டதாகவும் - அத்துடன் அவர் எப்போதும் குணயோகத்துடன் விருப்பதைச் சொல்லும். க்ருத்பிரத்யயம் சக்தி சாமர்த்தியத்தைக் காட்டப் பிரயோகம் செய்யப்படும் போதும் ஹஸ்திந் கவதா என்கிற பதத்தில் உயோகப்படுத்தப்பட்டு அதனால் ஒரு சம்பந்தத்தைக் காட்ட ஒரு சாமர்தியத்தை - காட்டுகிறது - (பாணினி 3-2-54) சில கிருத் பிரத்யயங்கள் சாமர்த்தியத்தைக் குறிக்கும். ஆனால் பாசக - அதுபோன்ற மற்ற பதங்கள் உபயோகப்படும்போது இன்னும் சில வேறு (காரக) சம்பந்தமான அர்த்தத்தைச் சொல்லும் என ஒப்புக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் யேற்படுகிறது.

(**விளக்கம்** - க்ருத் பிரத்யயம் - காரகனைக் குறிப்பதற்கு உபயோகப்படுத்தப்படும். சில விதிவிலக்குகள் உள. உதாரணம் - ஹஸ்திக்ந (யானையைச் கொல்பவன்; கவாடக்ஞன் - கதவைத் திறப்பவன் (கள்ளன்) இங்கே இவை காரகனைக் குறிக்கும் - (மாஹீத்தன்-திருடன் என்பதாகும்.) இங்கே இவர்களின் சாமர்த்தியத்தை குறிக்கும் வாஸ்தவமாக அவர்கள் யானையைச் கொல்பவர்கள் அல்ல - திருடனும் அல்ல அவர்களின் சாமர்த்தியத்தைக் குறிக்கும் பதங்கள் என்பதாம்) க்ருத்ப்ரத்யயாநாம் சக்தி விஷயத்வ ஸ்மரணாத் பாசகாதி ஷ்வத்வகத்யா லக்ஷணா ஸமாஸ்ரியதே) - ஹஸ்திக்ந: கவாடக்ந: (சோரன்); ஹஸ்தே: டகு பிரத்யயம்).

மேலும் ஈஸ்வரனுக்கு - அவன் (ஸத்தின்) ஒரு அம்சத்திருல், அந்தஸத் - முழுவதாகவும் - அவயவங்கள் (அம்சங்கள்) நிரம்பியதாகவும் விருக்குமாகுல் அதேபோல அது முழுவதாக விருப்பது அதன் அம்சத்தைவிட பெரிய தாகையால் - ஈஸ்வரன் அந்த ஸத்தில் ஒரு அம்சமாக விருப் பது - என்பது விரோதமாகும் - எப்படி சமுத்திரம் அதன் அம்சங்களாகிற அலேகளேவிடப் பெரியதாயும் ஆகுமோ - அதுபோல. இதுமாதிரி பல ஆயிரக்கணக்கான சுருதிகள் (இம்மாதிரி கீழே காட்டப்பட்ட சுருதிகளேப்போல) பரமாத் மாவின் பெருமைகளேச் சொல்வதாகும் உதாரணம்-तमीश्वराणां परमं महेश्वरं (அந்த பரமாத்மாவைப்பற்றி அறிவாயா? (அவனே) (எவன் மஹேஸ்வரனுக விருக்கிருனே அவரை) ஸ்வே. 6-7; न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते அவருக்குச் சமமாகவோ மேலானவரோ காணப்படவில்லே); இவை பரமாத்மாவின் மேலான தத்வத்தை குறிக்கின்றன - இவைகளேப் பாதிக்கும் இப்படி அம்ச விசேஷத்தைச் சொல்வதாலே - ஆகவே அது சரியாகாது.

மேலும் ஸங்மாத்திரம் எல்லா வஸ்துக்களுக்கும் கொண் டால், அதுவே ஸர்வாத்மகமாகவும் விருக்குமாகுல், ஈஸ் வரன் அந்த ஸங்மாத்திரத்தின் ஒரு அம்சம் என்ருகுமாகுல் அந்த ஸத்தின் ஸர்வாத்மகத்வமும் அம்சியாக விருப்பது மாகிற உபதேசங்கள் - எல்லாம் விரோதிக்கும், வாஸ்தவத் திலே பானேகள் - தட்டுக்கள் இவை தண்ணீர் கொண்டு வரும் பானேகளால் ஆவதில்லே - அவை தண்ணீர் பானே களின் அம்சங்களாகவும் இருப்பதில்லே.

(இங்கே சொல்லப்படுவது - பானேகள் தட்டுக்கள் நீர் பானேகள் இவை, ஜீவாத்மாக்களேயும் - அசேதன வஸ்துக் களேயும் ஈஸ்வரனேயும் குறிப்பவை - அதாவது அவை இவை களுக்காக விருப்பவை, யாதவபிரகாசரின் அபிப்ராயம் - ஸத்தில் ஒரு அம்சம் இம்மாதிரி ஜீவாத்மா - பிரகிருதி - ஈஸ்வரன் என்று பிரிகிறது. எப்படி ஒரு பிடி களிமண் பானே, தட்டு, நீரப்பானே என்று ஆகிறதோ அதுபோல-இது

உதாரணமாக காட்டப்படுகிறது. ஆகவே ஸத் இம்மூன்றும் சேர்ந்து ஆகின்றது-ஆனால் ஜீவாத்மாக்கள் பிரக்ருதி ஈஸ்வரனாக ஆகிறதில்லை - பானைகள் தட்டுக்கள் நீர்ஜாடிகள் களிமண்ணால் ஆனவை. ஆனால் பானைகள், தட்டு-நீர் ஜாடிகளால் ஆனவையல்ல) - ஆகவே அஸமஞ்ஜஸமாகும்.

இவ்விதம் சொல்லலாம் - ஸத் பூர்ணமாக தனது ஒவ்வொரு அம்சத்திலும் விருப்பது - அதன் அம்சம் எனச் சொல்லப்படும் ஈஸ்வரனிலும் பூர்ணமாகவிருப்பது-இவ்விதமாக எல்லா வஸ்துக்களும் ஈஸ்வரன்-அவனுடைய அம்சங்கள் என்று ஆகின்றன - ஆனால் இவ்விதம் சொல்வது சரியில்லை - ஏனெனில் ஸந்மாத்திரம் ஒரு பானையிலும் பூர்ணமாகவுள்ளது - (ஸந்மாத்திரத்தாலே பானையும் பூர்ணமாகவுள்ளது) அதனால் என்னவேற்படுவது - பரமாத்மாவும் பானையாக விருக்கிறார் – அதன் அம்சமாகவிருக்கிறார் என்பதாகும்.

மேலும் சிலபதங்கள் - घटोऽस्ति – பானையிருக்கிறது - पटोऽस्ति துணியிருக்கிறது - என்று சொல்லும்போது - ஸந்மாத்திரமே வஸ்துக்களின் தர்மமாகிறது-அப்படி யென்றால் அதுதிரவியமும் ஆகாது - அல்லது அதற்குக் காரணமுமாகாது. ஸந்மாத்திரம் என்பதால் வ்யவஹார யோக்யதைக்கு அதன் இருப்பால் யேற்படுகிறது-வஸ்துவாக விருப்பதால் உண்டாகிறது. அந்த வஸ்துவின் இருப்புக்கு விரோதமாக வ்யவஹாரம் செய்யப்படுமானால்-அதற்கு அஸத்வம் யேற்படுகிறது. திரவியமே ஸத்தாகவிருக்குமாகில், அதனால் பிற்பாடு அதை சம்பந்தித்து கிரியைகள் யேற்படுகின்றன. க்ரியாதீநாம ஸத்வ பிரஸங்கம் யேற்படுகின்றது). குசத்திற்குப் பதிலாக வைதிக சடங்குகளில் காசம் என்கிற புல் ஒப்புக்கொள்ளப்படுமாகில், அதேகாரணத்தினாலே, இரண்டும் ஒரே ஜாதி வகையாகும். அதனால் ஸ்தாபிக்கமுடிகிறதில்லை-கிரியா விஷயங்களில் - எல்லாவற்றிற்கும் ஏக ரூபம்-ஸத்து என்று சொல்லும்படி ஸ்தாபிப்பது எளிதில் முடிகிதில்லை.

**விளக்கம்:—**

இங்கே யாதவபிரகாசர் சொல்வது — ஸந்மாத்திரம் ஒரு திரவியம் அல்லது ஒருதர்மம் என ஆகலாம். தர்மமாக விருப்பின் அது எப்போதாவது ஸம்பவிக்கிறதாக விருக்க முடியாது-அதனுல் ஜகத் உண்டாகிறது என்று சொல்லும் படி; அதுதிரவியமானுல், கிரியா விஷயங்களில் இல்லாமை யாக விருக்க வேண்டும். ஸத் என்பது திரவியம் முக்யார்த்த மாகவும் - கிரியை என்பது கௌணமாகவும் இருக்கமுடியும். காசம் குசத்திற்குப் பதிலாக உபயோகப்படுத்தப்படுகிறது - ஸத் என்பதற்கு ஜாதி இத்யாதி பிரிவுகள் தனக்கு இல்லே. காசகுச நியாயம் சிலசமயங்களில் உபயோகப்படும் - எப் போதுமில்லே-இங்கே காசம் முக்யமில்லே-அது ஒரு மாற்றுப் பொருள் - குசத்திற்கு என்பதாகும்).

ஸத் என்னும் பிருஹ்மம் ஆத்மாவாக விருப்பதாலே எல்லா வஸ்துக்களும் ஒன்றேதான் - அபின்னமாக விருப்ப தாலே-எல்லாமுமே ஸர்வக் ஞத்வம் கொண்டதாக விருக்கும்; அதனுல் ஸர்வ வஸ்துக்களின் ஸ்வபாவமும் ஒன்ருகவே அவைகளில் இருக்கும் என்று ஒத்துக் கொண்டு, அதனுல் ஸர்வ வஸ்துக்களுக்கும் குணமும் தோஷமும் உண்டு - மிஸ்ரமாக விருக்கும் - என்கிற விஷயம் முன்பே சொல்லப் பட்டதாகும். சாரீ. சூத். 2-1-14 போக்தரா பத்தேர விபாக ஸ்சேத்ஸ்யால் லோகவத் - என்பதில் ஆரம்பத்திலே) சொல் லப்பட்டதாகும். சரீரமிருக்கும் வரை பிரியா அபிரியங்கள் சுக துக்கங்கள் அழியாது இத்யாதி. ஆகையால் (நாம் சொல் லியபடித்தான்) பிருஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் - அநந்யத் வம் (ஒற்றுமை) யேற்படுகிறது - அத்வைதிகள் சொல்லிய படி ஸ்வரூப ஐத்யமில்லே. (நாம் சொல்வது - காரிய காரண பாவம் சரீர ஆத்ம பாவமேயாகும், அதனுல் எல்லாம் ஒன்று - ஆனுல் திரவிய ஸ்வரூபங்கள் வேருனது.)

ஆகவே அவர்களால் (தார்க்கிகர்களால் - வைசேஷிகர் களால்) சொல்லப்படும் - அவஸ்தாந்தர பேதங்களாகிற பால்யம் - யுவா - வார்த்திகம் என்பவைகளுக்கு வெவ்வேறு

அர்த்தம் - அதைக் காட்டக்கூடிய சப்தபதங்களும் புத்திக்கு விளங்கும்படி - ஒரு மனிதனுக்கு யேற்படும் பல மாறுதல் களைக் காட்டி விளக்குவது போல - பலவகைப்பட்ட வஸ்துக் களுக்கு - இது மண், இது அரணிக்கட்டை இது தங்கம் - என்று சொல்லும்படி திரவிய பேதங்களும் காணப்படு கின்றன. அவ்விதமிருக்கும் போது - உன்னால் கேள்வி கேட்கப்படும் - எப்படி காரண காரியங்களில் புத்தி சப்த பேதங்கள் நிச்சயிக்கப்படும்? - இது களிமண் இதுபானை என்று சொல்லும் சப்தங்கள் அவஸ்தா பேதங்களைத்தானே காட்டும் என்று? இதற்கு நாம் பதில் சொல்கிறோம்.

(இங்கே சொல்லப்படும் ஆட்சேபம் - யுக்தி; சப்தங் களால் யேற்படும் பேதங்கள் அவஸ்தா பேதங்கள்தான் என்று பொதுவாகச் சொல்லமுடியாது. ஏனெனில் திரவிய பேதங்கள் விருக்கின்றன; அவைகளுக்கு பேதம் சொல்ல முடியுமா? இதற்குப் பதில்-அவை அவஸ்தா பேதங்களைத் தான் காட்டும் அதே சமயம் இரண்டுக்கும் (காரண காரியத் திற்கும்) ஒற்றுமையையும் (ஸம்பந்தத்தையும்) அறியப்படுத் தும் - இதற்கு அடுத்த சூத்ரம் பார்க்கவும்.)

சூத்ரம் भावे चोपलब्धेः (2-1-16)-

பாவே சோபலப்தே: (2-1-16)

பாவே - காரிய நிலையில் உபலப்தே: ச (காரணத்தின்) நினைவு யேற்படுகையாலும் (காரிய காரணங்கள் ஒன்றே).

(மண் கட்டியானது குடமான பின்பும் "இந்தக் குடம் மண்ணே" - என்று குடமாகிற கார்ய நிலையிலும் மண்ணு கிற காரணப் பொருள் தொடர்ந்து காணப்படுவதிலிருந்தும் காரிய காரணங்கள் ஒன்றே என விளங்குகிறது. பிரத்ய க்ஷத்தினால் வஸ்து பேதம் தெரிவதில்லை - மண்ணில் தங்கம் காணப்படுவதில்லை - ஆகவே மண் - பானை முதலியவை களில் காரிய காரண பாவமே - அதன் உள் அமைப்பில் உள்ள வேறுபாட்டை அநுஸரித்தே புத்தி சப்தாதி பேதங் கள் யேற்படுகின்றன என்பது தெளிவு.

குண்டலங்கள் முதலிய காரியங்களில் ஸத்பாவமும் அதற்குக் காரணமாகிற ஹிரண்யத்திற்கும் உள்ள சம்பந்தமும் பிரத்யக்ஷத்தால் அறியப்படுகிறது. इदं कुण्डलं हिरण्यं - இந்தக் குண்டலம் தங்கம் - என்று தங்கத்தினுல் பண்ணப்பட்டதாகையாலே பிரத்யபிக்ஷாஞானம் யேற்படுகிறது - என்று அர்த்தம். பிரத்யக்ஷத்தினுல் வேறு பொருள் இல்லை என்று அர்த்தம். சூத்திரத்திலுள்ள च காரத்தினுல் அபேதத்தில் பாதகமின்மையும், பேதத்தில் பாதகத்தையும் சேர்த்துச் சொல்கிறது - (ஸமுச்சயமாகச் சொல்கிறது). (முன் சூத்ரத்திலுள்ள காரணத்தை இது ஸமுச்சயிககவில்லை.) இதற்கு மாருக - களிமண் பானை விஷயத்தில் - அது போல மற்ற காரண காரிய வஸ்துக்களிலும் இம்மாதிரி உள் இருக்கும் திரவிய ஒற்றுமை காணப்படுவதில்லை - ஏனெனில் அவை திரவியபேதங்களான படியால். ஆகையால் பால-யுவா-என்கிற உதாரணத்தைப்போல, காரண பூதமான திரவியமே (வ்யக்தியே) அவஸ்தா பேதங்களை அடைகிறது. அதனுல் காரியங்கள் என்று சொல்லப்படுகின்றன. இன்னெரு காரணமும் (கார்ய காரணங்களின் ஒற்றுமை) விருக்கிறது. எவன் காரிய காரணங்கள் வெவ்வேறு திரவியங்கள் என்று சொல்கிருனே, அவனுலும் ஒப்புக் கொள்ளப்படும். காரணத்திற்கும் அவஸ்தா பேதத்துடன் சம்பந்தமிருக்கும் (எப்படி நூல் என்கிற காரணவஸ்து — துணி காரிய வஸ்து) = பல நூல்கள் சேர்ந்து துணியாவதால் அவஸ்தா பேதமே - நூலுக்கும் சம்பந்தம் தொடர்ந்திருக்கிறது. அதனுல் புத்தி-சப்தாதி விஷயங்களுக்கு வெவ்வேறு வஸ்துக்களாக (துணி-நூல் என்று) அறியப்படுகின்றன. அதனுல் ஒருவன் தீர்மானிக்க முடியாது-காரணம் ஒரு வஸ்து - காரியத்தில் வேறு வஸ்து என்று வித்யாஸமாக எண்ணக்கூடாது. மேலும் இம்மாதிரி பிரத்யக்ஷக் காட்சியிலே ஜாதிக்குரிய தர்மங்கள் அறியப்படுகிறதில்லை - (இந்த உதாரணத்தில் - இது அந்த அதே பசு தான்) - ஆகவே ஜாதிகளில் ஆஸ்ரய பூதமாகவிருக்கும திரவியங்களுக்கு வேறு ஒன்ருக - பிரத்யக்ஷத்தினுல் அறியப்படுகிறதில்லை. ஒரே ஒரு வஸ்து

(ஏகமேவ) ஹேம ஜாதி திரவ்யம் - அது இரண்டு அவஸ்தைகளாகிற காரண-காரியமாகவிருக்கிறது. (உபய அவஸ்தையாகக் காணப்படுகிறது) திரவ்யாந்தரே என்பதற்கு இன்ெனுரு (வேறு) (திரவியத்வயம்) இல்லை என்று அர்த்தம்:

ந ச திரவிய பேதம் காரண காரியங்களாக விருக்கின்றன - என்பது இல்லை. காரணவஸ்து (உபாதான காரணம்) தொடர்ந்து காரியத்தில் அனுவர்த்திக்கிறபடியால் - திரவிய பேதம், ஸமவாயிகாரணம் தொடர்ந்து காரியத்தில் இருப்பதால் - ஏற்படுமாகில் - காரணத்தை காரியத்திலிருப்பதாகச் சொல்வது அசக்தம் (முடியாது) - அதாவது திரவியபேதம் இல்லாதபடியால் - காரண காரியம் (காரியம்-அதன் மூலம்) அறியப்படுகிறது. இரண்டு திரவியங்கள் இருக்கின்றன வெவ்வேருக என்ருல் - இந்த எல்லாக் காரண காரிய பேதங்களும் பாதகமாகும். காரியம் ஹிரண்யமாக விருப்பினும் - ஸமவாயி காரணம் (உபாதான காரணம் தொடர்ந்து விருப்பதால் ஸ்வர்ணம் தான் ஹிரண்யத்வாத் - இதம் குண்டலம் ஹிரண்யமிதி என்கிற வ்யவஹாரம்-இந்த அபிப்ராயம் நிரஸிக்கப்படுகிறது) - மற்ற உதாரணங்களில் (களிமண் இத்யாதிகளில்) உபாதான காரணம் (மண்) காரியத்தில் பிரத்யக்ஷத்தில் காணப்படுவதில்லை - காரணம் தொடர்ந்து விருப்பதாக அறியப்படுகிறதில்லை).

சரி - கோமயம் (சாணியிலிருந்து) தேள் உற்பத்தி - அதேமாதிரி மற்றக் காரணங்கள் காரியங்களில் காணப்படுவதில்லை-என்று சொன்ருல்-நாம் சொல்வது அது சரியில்லை என்போம் - ஏனெனில் இங்கே கூட, மூலகாரணமாகிற பூமி திரவியம் - முதற் காரண வஸ்துவாக விருப்பது - அது காரியத்திலும் பிரத்யபிக்ஞை யேற்படும். அக்னி - புகை காரணம் காரியம் - இதில் காரணமாகிற அக்னி புகையில் காணப்படுகிறதில்லை. (பிரத்யபிக்ஞை இல்லை) என்று நீ சொல்வாயாகில், இங்கே கூட, நாம் சொல்வது தோஷமில்லை - அக்னி நிமித்த காரணமாக விருப்பதாலே. (கட்டை எறிகிறது - அக்னி எறிய வைக்கிறது - புகையேற்படுகிறது)

புகைக்கும் நனைந்ததுமான விறகு எறிகிறதாலே-விறகுக்கும் சம்பந்தம் இருக்கிற படியால்புகை உண்டாகிறது). ஆகவே புகை விறகினுல் யேற்படுகிறது - அக்னி காரகன் (நிமிர்த்த காரணம்).

(இந்த சூத்ரத்தில் காரியம் காரணத்தில் அந்தர்கதம் என்பதால் இரண்டும் ஒன்றேயாகும் என்று சொல்லப்படு கிறது. அவைகளுக்குள்ள வித்யாஸம் அவஸ்தாபேதமே - திரவிய (இரண்டு வேருன) பேதமல்ல. இரண்டு பானைகள் என்று நாம் சொல்லும்போது - ஒரே ஜாதியில் இரண்டு வேருன பொருள்கள்-அதுபோல இங்கு திரவியம் பேதமல்ல திரவிய பேதம் என்ருல்-ஒரே காரணம் (உபாதான காரண வஸ்து) - இது தொடர்ந்து காரியத்தில் காணப்பட முடியாதது எல்லா உதாரணங்களிலும்) - (இதற்கு விதி விலக்குகள் பின்பு சொல்லப்படும்)

ஆகையால் எங்கே காரியம் இருக்கிறதோ, அங்கே இது அந்த வஸ்து என்று பிரத்யக்ஷ அறிவு யேற்படுகிறது (இந்த காரியம் - இந்தக் காரணமானது) - புத்திசப்தத்திற்கு யேற்பட்டாற்போல அவஸ்தா பேதமாத்திரமே ஆதாரமாகக் காட்டப்படுகிறது - तस्मात् कारणादनन्यत् कार्यम् காரியமும் காரணமும் ஒன்றே தான்-வேறு அல்ல.

இந்தக் காரணத்திஞலும் (கார்ய காரண ஒற்றுமை) யேற்படுகிறது.

சூத்ரம் सत्वाच्चापरस्य (2-1-17)

ஸத்வாச்சாபரஸ்ய (2-1-17)

அபரஸ்ய (முற்கூறிய காரணப் பொருளைக்காட்டிலும் வேறுபட்ட காரியப்பொருள்)-ஸத்வாத்ச (காரணப்பொருளா கவே) இருந்ததாகக் காணப்படுவதாலே - (காரிய காரணம் ஒன்றே - ஐக்யமே).

(முன் இருந்த காரணப்பொருளே காரியத்திலே அறியப் படுகிறது - பிரத்யபிஜ்ஞை உண்டாகிறது அதனுல் ஒன்று

எனச் சொல்லப்படுகிறது - நேற்று மண்ணாகவிருந்தது இன்று குடமாகிறது — என்பதைப்போல)

முந்திக் சொல்லப்பட்ட காரணப்பொருளைக் காட்டிலும் வேறுபட்ட காரியப்பொருள் காரணத்திலே இருந்ததாகக் காணப்படுவதாலே - காரியமும் காரணமும் ஒன்றே வேறல்ல. லோகத்திலும், வேதங்களிலும் காரியமே காரண மாக வ்யபதேசிக்கப்படுகிறது. எப்படி உதாரணமாக-இந்த உலகில் இவ்விதம் சொல்லப்படுகிறதோ - இந்த எல்லாம் பானைகள் தட்டுக்கள் - நேற்று (முந்தினதினத்தில்) ம்ருத் (களிமண்ணாகவே) ஆகவேயிருந்தது - (இன்று இப்போது மாறியிருக்கிறது) என்று; வேதத்திலும் அதேபடி - **सदेव सोम्येदमग्र आसीत्** - ஸௌம்ய - ஸத் ஒன்றுதான் முதன் முதலில் இருந்தது. (சா. உ., 3-19-1); (முந்தின 16ம் சூத்ரத்தில் காரிய காரண ஐக்ய அறிவு ஏற்படுகிறது என்றும் - இதில் ஐக்யமே இருக்கிறது என்றும் காரிய காரண அபேதம் ஏற்கத்தக்கது என்று போதிப்பது. உலகிலும் வேதத்திலும் திருஷ்டாந்தமாக அறிவுறுத்தப்படுகிறது-பிரளய காலத்தில் சூக்ஷ்மசேதன அசேதன வஸ்துக்கள் கொண்ட விசிஷ்ட பிருஹ்மம் ஸ்ருஷ்டிக்குப்பின் ஸ்தூல சேதன அசேதன வஸ்துக்கள் கொண்ட விசிஷ்ட பிருஹ்மமாயிற்று. நேற்று இருந்ததே இன்று வேறு அவஸ்தையை அடைந்தபடியால்- இதுவேறு திரவியமன்று என்பது பிரத்யக்ஷ-வேத ஸித்தம் வ்யவஹாரத்திலும் கூடஸித்தம் என்பதாகும்.)

சூத்ரம் **असद्व्यपदेशान्नेति चेन्न धर्मान्तरेण; वाक्य शेषात् युक्तेः शब्दान्तराच्च** (2-1-18)

**அஸத்வ்யபதேஸாந்நேதி சேந்நதர்மாந்தரேண வாக்யசேஷாத்யுக்தே: ஸப்தாந்தராச்ச (2-1-18)**

அஸத் வ்யபதேசாத்-உலகம் அஸத்தாகவேயிருந்தது என்று ஒரு வேத வாக்யம் கூறுகிறது; ந (காரியம் ரரணத்தில் இருக்கிறது என்பது) இல்லை (தவறு); இதிசேத்க

என்பாயாகில்; ந - அப்படி சொல்ல இயலாது - (ஏனெனில்) தர்மாந்தரேண -(அந்தவஸ்து) வேருெரு இன்ெனுரு நிலையை உடைத்ததாக விருப்பதுபற்றியே - (அங்கு அஸத் என்று கூறப்படுகிறது) இந்த விஷயம் வாக்ய சேஷாத் (மனேகுருத) (ஸங்கல் பித்தது) என்னும் வாக்ய சேஷத் திலிருந்தும் யுக்தே:- யுக்தியிலிருந்தும் ஸப்தாந்தராத்ச வேறு வாக்யத்திலிருந்தும் (விளங்குகிறது).

முந்திச் சொல்லப்பட்டது - காரணத்தில் காரியம் இருக்கிறது (ஸத்வம்) லோகம் வேதம் இவைகளிலிருந்து தெரியவருகிறது - என்பது அயுக்தம் (சரியில்லை). असद्व्यपदेशात् உலகம் அஸத்தாகவே விருந்தது என்கிற சுருதி உபதேசத்தாலே. (அந்த வேதமே அஸத் கார்யபக்ஷத்தைச் சொல்கிறது. அதனுல் காரிய காரண ஐக்யம் ஏற்படுகிறது என்பதில்லை). (சுருதி என்ன சொல்கிறது என்பதற்கு)- சா. உ. 3-18 असदेवेदमग्र आसीत् - (இவ்வுலகம் அஸத்தாகவிருந்தது. அதாவது தர்மாந்தரேண - இன்ெனுரு நிலையை உடைத்ததானது பற்றி - உலகம் அஸத் என்று கூறப்பட்டது). தை. ஆ ர असद्वा इदमग्र आसीत् (இவ்வுலகம் முதலில் அஸத்தாகவே (நாம ரூபவிபாகமின்றி ஒன்ருக) விருந்தது. (அதாவது வ்யவஹார யோக்யதைக்கு வஸ்துவுக்கு ஸத்வம்; அதற்கு எதிராக வ்யவஹார யோக்யதை அநர்ஹதம் - அஸத்வம்) என்பதாகும்). யஜீ. அஷ். 2-2-9ல் इदं वा अग्रे नैव किञ्चनासीत् - முதலில் இவ்வுலகம் இருந்ததில்லை - இதனுல் காரியமான உலகம் காரணத்தில் இல்லை என்று சொல்கிறது. லோகத்திலும் சொல்லப்படுகிறது - सर्वमिदं घटशरावादिकं पूर्वाह्णे नासीत् - இந்த பானைகள் தட்டுக்கள் - மற்ற காரியங்கள் முந்தின பகலில் இல்லை. ஆகவே முன் சூத்ரத்தில் சொல்லப்பட்டது சரியில்லை. (நேற்று இல்லை என்பதால் காரணத்தில் இல்லை என்று அர்த்தம். அதனுல் காரியம் காரணம் இரண்டும் வேருனதாகும்.)

ஆகையால் முந்திச் சொல்லப்பட்டது - (காரணத்தில் காரியம் உள்ளது - என்பது சரியில்லை - என்று நீ சொல்வா

யாகில் - ந - அப்படிச் சொல்லமுடியாது - (ஏனெனில்) தர்மாந்தரேண-வேறொரு நிலையை அடைந்திருப்பது என்கிற உபதேசம் இருப்பதாலே - (அங்கு அஸத் என்று கூறப்படு கிறது என்றால்-ஏனெனில் அதே காரியம் இன்னொரு தர்மத் துடன் சம்பந்தப்பட்டிருப்பதாலே இங்கே தர்மம் என்பது ஸம்ஸ்தானம் (ஒரு சேர்க்கை) (வாக்யசேஷத்தில் அஸத் தான் முதலில் இருந்தது என்று சொல்லப்பட்டது.) அஸத் வ்யப்தேசம் காரியதிரவயத்தின் பூர்வகாலத்தில் தர்மாந்த ரேண - ஸம்ஸ்தாநந்தரேண என்று அர்த்தம். உன் அபிப் ரயம் அஸத் என்பதற்கு ஒன்றுமே இல்லை, (துச்சத்வம் அல்லது சூன்யத்வமோ)-அவ்விதமில்லை என்பதாம். அதா வது வேறு ஒரு அவஸ்தையை யடைந்திருப்பது என்று அர்த்தம்.

ஒரு வஸ்து ஸத்தாகவோ அல்லது அஸத்தாகவோ இருப்பது - இவை த்ரவிய தர்மங்களாகும். ஸத் என்கிற தர்மத்தைவிட வேறானது அஸத் என்பது. इदं சப்தம் என்ப தற்கு உலகம் என்று அர்த்தம். (इदं सर्वं) அந்த ஜகத்திற்கு ஸத்வ தர்மம் நாமரூபத்தினால் யேற்படுகிறது. அஸத்வ தர்மமோ ஸத்திற்கு விரோதமாகவிருக்கும் சூக்ஷ்ம அவஸ்தை. ஆகவே ஜகத்திற்கு நாமரூப யுக்தம் (ஸத் என்பதாலும்) அதற்கு விரோதியான சூக்ஷ்ம தசையை அடைந்திருப்பது அஸத்வம் (நாமரூப விபாகமில்லாத அவஸ்தை). ஆகவே இரண்டு நிலைகளும் உலகத்திற்கு யேற்படுகிறது.

அது எப்படி யேற்படுகிறது - वाक्यशेषात् युक्तेः शब्दान्त - राच्च - (ஸந்மனோகுருத) சங்கல்பித்தது என்னும் வாக்ய ஸேஷத்திலிருந்தும் யுக்தே: - யுக்தியிலிருந்தும். சப்தாந்த ராத்ச வேறு வாக்கியத்திலிருந்தும் விளங்குகிறது. வாக்ய சேஷ: என்றால் - इदं वा अग्रे नैव किञ्चनासीत् - (யஜ. அஷ்ட. தை. உ) 2-2-9-ல் முதலில் இவ்வுலகம் இருந்ததில்லை-தை. 2 (ஸத் என்று नासीत् என்பதற்கு அபாவம் பேசப்படுகிறது.) பிறகு சுருதி ஓதுகிறது - तदसदेव सन्मनोऽकुरुत, स्यामिति - அந்த அஸத்தே தனக்குத்தானே நினைத்தது - "நான் இருப்பேன்"

ஒன்று; (இங்கு சங்கல்பம் சொல்லப்படுகிறது). இந்த வாக்ய சேஷத்தினுல் யேற்படுவது - ஸங்கல்பம் செய்யப்படு கிறது என்பதாலே — அஸத் என்பதற்கு அர்த்தம் என்ன - மனஸ்காரலிங்கம் அஸத் என்பதற்கு யாது? - ஒன்றுமில் லாத துச்சத்வமா-அதைவிட வேருன நிலையா என்று? இதே அர்த்தம் இன்னொரு சுருதியிலும் (ஐக்யார்த்தம்) சொல்லப் படவேண்டும் - அதாவது असदेवेदम् - அஸத் ஒன்றுதான் இதுவாகவிருந்தது. ஒரே அர்த்தம் இரண்டுக்கும் ஸம்ப விக்கவேண்டும். (சா. உ. 3-19-1); (தை. உ. வாக்கியத்தி லுள்ள அஸத் என்பது துச்சத்வத்திற்கு வேருனது. அதே அர்த்தம் (வேருனது) - சா. உ. வாக்யத்திற்கும் பொருத்த வேண்டும் ஐக்யார்த்தம் யேற்படுவதற்கு).

யுக்தியினுல் அஸத் என்பதற்கு (காரியத்தின்) வேறு ஒரு தர்ம ஸ்வரூபமாகவுள்ளது - யுக்தினுல் ஒரு பதார்த்த துக்கு ஸத்பாவம் அஸத் பாவம் என்கிற திரவிய தர்மங்கள் பேசப்படுகின்றன. ம்ருத்திரவியம் - அதற்கு ஒரு ஆகாரம் (ரூபம்) அடிபருத்து அகண்டு - வாய் சிறுத்து - உள்ள ஒன்றுமில்லாமலிருப்பது (hollow) - இதனுல் காரண களி மண்ணிற்கு பானை என்கிற காரிய வஸ்துவுடன் சம்பந்தம் பேசப்படுகிறது - घटोऽस्ति பானை இருக்கிறது என்கிற வ்யவ ஹாரம் யேற்படுகிறது.

மேற் சொன்ன ஆகாரம் பானைக்கு இல்லாமற் போனுல் (பானை உடைந்தால்) அந்த வ்யவஹாரயோக்யதைக்கு யிருந்த ரூபம் அதற்கு இல்லை-அதாவது அந்த பானை 'அஸத்' என்பதாகும். घटो नास्ति इति வ்யவஹாரஹேது - இல்லை என்று ஆகிறது. (எதற்கு) முந்தியிருந்த காரண வஸ்து வாகிற களிமண்ணிற்கு (களிமண் பானையாகி - பானையும் உடைந்துபோனுல் - களிமண்ணிற்கு யேற்பட்ட சம்பந்தம் இல்லையென்று ஆகிறது) கபாலாதி அவஸ்தையும்-அதற்கு விரோதமான (உடைந்து தூளாகி போதல்) என்கிற அவஸ் தையும் - அதனுல் கடம் என்கிற அவஸ்தை (களிமண் ணிற்கு) இல்லை என்கிற வ்யவஹாரம் உண்டாகிறது. சரி.

பானை பாதியாகி விட்டால் - அந்த பாதியும் முந்தியிருந்த பானையின் ஆகாரத்திற்கு (அது அகண்டு இருப்பது) விரோதிப்பதால் - இந்த அரை (பாதி) பானையும் (பானை என்கிற முழு ஆகார அவஸ்தைக்கு) அந்த பானையின் "அஸத்" பாவத்திற்குக் காரணமாகிறது. இதைத் தவிர வேறு ஒன்றும், "கடம் இல்லை" என்கிற சப்தத்துக்கு அறிவு யேற்படுகிறதில்லை. நாமாகவே உண்டு என்று கல்பிக்கவும்கூடாது; (ஏனெனில்) நாம் சொல்லியபடி தான்- அஸத் பாவம் ஒரு வஸ்துவுக்கு அறியப்ப டுவதாகும், அனுபவப் பட்டதாகும்).

(இங்கு சொல்லப்படுவது - அஸத் - என்றால் பொருளே இல்லை - துச்சத்வம் என்று அர்த்தமில்லை. முயற் கொம்பு ஆகாசத் தாமரை இதுபோல). முதல் நாள் பானை களிமண் உருவில் இருந்தது பானை உருவில் இல்லை. நேற்று மண் - இன்று பானை; இதே போல வேதமும் சொல்லிற்று பிரளய காலத்தில் இந்த உலகம் ஸூக்ஷ்ம நிலையாகிற நாமரூபவிபாக மின்றி - அஸத்தாக விருந்தது. சூன்யமாக அல்லது துச்ச மாகவில்லை. ஸ்ருஷ்டிக்குப் பிறகு நாம ரூபவிபாகத்தால் ஸ்தூல நிலையை ஜகத் அடைகிறது-இது மூன்று காரணங் களால் விளங்குகிறது. 1) வாக்யஸேஷம் - இதம் வா அக்ரே நைவகிஞ்சநாஸீத் - என்கிற வாக்யத்திற்கு அடுத் தாற்போல உள்ள வாக்யத்தில் தத்ஸதேவ ஸந்மநோ குருத ஸ்யாமிதி. (யஜு. அஷ். 2-2-9) அது இல்லாததாகவே (நாமரூபவிபாகமின்றி) இருந்து கொண்டு - அது சங்கல் பித்தது "நான் பலவாக ஆவேன்" - என்று ஓதப்படுகிறது. முதல் வாக்யத்தில் சூன்யத்வம் இருந்தால் சங்கல்பம் எப்படி வரும்? வாக்யசேஷம் கூறுவதால் - அஸத் என்பதற்கு நாமரூபவிபாகம் இல்லை (அற்றது) எனப் பொருள் கொள்ள வேண்டும்.

2) யுக்தி - உள்ளதான பொருளுக்கே ஸத்த்வம் (உள்ளேயிருக்கை) அஸத்தவம் (இல்லாமையாகிற யிருக்கை என்கிற இருதர்மங்கள் வஸ்துவுக்கு யேற்படுகின்றன,

ஆகாசத் தாமரை, முயற் கொம்பு இதுபோல வஸ்துவே இல்லை என்பதில்லை. குடம் இருக்கிறது (ஸத்பாவம்) குடம் இல்லை (அஸத்பாவம்) என்று வ்யவஹாரிகமாக நாம் பேசுகிறோம். குடம் இருக்கிறது என்றால் அதன் ஆகாரம் வடிவம் அப்படியே இருக்கிறது - குடம் இல்லையென்றால் மண்கட்டி நிலையில் - அல்லது குடம் உடைந்து சல்லி தூளாகி விருக்கிறதே ஒழிய - அடிபருத்து நுனி சிறுத்திருக்கும் பானை நிலையில் இல்லை என்ற பொருள் - தார்க்கிகன் கூறுவது அபாவம் (இன்மை) என்று ஒரு தனிப்பதார்த்தம் கிடையாதாகையால் - அதைக் கொண்டு "இல்லை" என்று வ்யவஹரிப்பது (வஸ்துவுக்கு) பொருந்தாது.

3) சப்தாந்தரம் - முன்பு சொல்லப்பட்ட ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸித் (சா. உ. 6-2-1) கார்யமான இந்த உலகம் முதலில் ஸத்தாக விருந்தது என்கிற பிரகரணத்தில் - இந்த வாக்யம் காணப்படுகிறது - தஸ்மாத ஸதஸ் ஸஜ்ஜாயத அஸத்தான பொருள் உண்டாகிறது என்பதால் அஸத் காரிய வாதத்தை எடுத்து - குதஸ்து கலு ஸோம்ய ஏவம் ஸ்யாதிதிஹோவாச கத மஸதஸ்ஸஜ்ஜாயேதேதி - (சா. உ. 6-2-2) குழந்தாய் - இது எப்படி சரியாகும்? இல்லாத பொருள் எப்படி உண்டாக முடியும்? (அவசியமில்லையே என்கிற பொருளிலே) என்று கூறினார் - இந்த வாக்யத்தாலே அதைத்தள்ளி (முந்தினதை தள்ளி) - பிறகு சொன்னார் ஸத்த்வேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் ஏகமேவாத் வீதீயம் - (சா. உ. 6-2-2) குழந்தாய் இவ்வுலகம் உள்ளதாகவே முதலில் யிருந்தது, ஒன்றாகவே இரண்டில்லாமலே யிருந்தது - என்பதால் உலகத்தின் காரண நிலை விளக்கப்பட்டு - அந்த (சூக்ஷ்ம) நிலையில் உள்ளதாகவே இருந்தது (நாமரூபவிபாகரஹிதம்) - இதற்கு அஸத்தாகவே யிருந்தது என்று பொருள் கொள்ளவேண்டும் அந்த உலகம் இப்போது காரியமாகி - ஸ்தூல பிரபஞ்சமாகி நாமரூபவிபாகங்களுடன் ஆயிற்று. தத்தேதம் தர்ஹ்ய வ்யாகிருத மாஸீத்தந்நாமரூபாப்யாம் வ்யாகிரியத - ப்ரு. உ, 3-4-7ல் அத்தகைய உலகம் இப்போது நாமரூபவ்யா

கரணம், ஆயிற்று ஆகவே "அஸத்" சப்தத்தை "அவ்யா கிருதம் என்று விளக்குவதின் மூலம் - தெளிவாக அர்த்தத் தைக் காட்டிற்று).

அதன்படி சப்தாந்தராஸ்ச - பூர்வகாலே காரியமான உலகம் முதலில் ஸத்தாகவே யிருந்தது - ஸதேவஸோம்யேத மக்ர ஆஸீத் என்று தொடங்கும் பிரகரணத்தில் தஸ்மாத ஸதஸ் ஸஜ்ஜாயத (அஸத்தான பொருள் உண்டாகிறது என் னும் வாக்யத்தால் அஸத் காரியவாதத்தை எடுத்து-குதஸ்து கலு ஸோம்ய ஏவம் ஸ்யாதிதி ஹோவாச கதமஸ்தஸ் ஸஜ் ஜாயே தேதி-சா. உ. 6. 2. 2 குழந்தாய்-இது எப்படி ஒட்டும்? இல்லாத பொருள் எப்படி உண்டாகமுடியும் என்று கூறி ஞர் - ஆகவே இம்மாதிரி சுருதிவாக்யங்கள் சொல்கின்றன- காரியத்துக்கு பூர்வகால சம்பந்தம் - வேறொருதர்மத்தினுல் காட்டப்படுகிறது-அந்த சுருதிகள் மேல் சொல்லப்பட்டவை யாகும் - மேல் சொல்லப்பட்டதில்-இல்லாத பொருள் எப்படி உண்டாகமுடியும் என்று கூறினுர்—என்னும் வாக்யத்தாலே அதைத்தள்ளி - सत्त्वेव सोमयेदमग्र आसीत् என்று (பிள்ளாய்) இவ்வுலகம் ஸத்தாகவே (உள்ளதாகவே) முதலில் இருந்தது ஒன்ருகவும் இரண்டற்றதாயுமிருந்தது - என்னும் வாக்யத் தில் உலகம் காரண (சூக்ஷ்ம) நிலையில் உள்ளதாகவே யிருந்தது - என்று ஸ்தாபிதம். பிரு. உ. 3. 4. 4 तद्धेदं तर्ह्य- व्याकृतमासीत् तन्नामरूपाभ्यां व्याक्रियत என்று (அத்தகைய இந்த உலகம் அப்போது நாமரூப வ்யாகரணம் செய்யப்படாத தாக விருந்தது. அது பிறகு நாமரூப வ்யாக்ரணம் செய்யப் பட்டது - என்னும் வேதவாக்யம் "அஸத்" என்னும் சப் தத்தை "அவ்யாகிருதம்" என்று விளக்குவதின் மூலம் இந்த அர்த்தத்தை தெளிவுகாட்டியது (சித்தாந்தம்).

இப்போது இந்த உதாரணமாக காரிய காரண ஒற்றுமையை (ஐக்யத்தை) விளக்குவதற்கு சூத்ரக்காரர் இன்னும் இரண்டு உதாரணங்களை இரண்டு சூத்திரங் களால் காட்டுகிருர்.

(ஸி) சூத்ரம் पटवच्च (2-1-19)

படவச்ச (2-1-19)

படவத் ச (நூல்கள்) வஸ்திரமாகும்போது - அந்த இடத்தைதப்போன்றது - (பிருஹ்மம் உலகமாக ஆகுமிடம்) நூல் (காரணம்) துணி (காரியவஸ்து) என்பதுபோல பிருஹ்மம் உலகமாகும்).

எப்படி காரணவஸ்துவாகிற நூல்கள்-குறுக்கு நெடுக்குமாக ஒன்றுசேர்ந்து ஒருவிதமாக ஒன்றாகவதாலே-வேறு ஒரு காரியமாகிறதோ-அதனால் அந்தக் காரியம் "துணி" என்கிற நாமரூப காரியாந்தரத்திலே சொல்லப்படுகிறதோ - அதைப் போல பிருஹ்மமே உலகமாகிறது. (அதாவது நாமரூப காரியபேதங்கள் இருந்தபோதிலும், நூல்கள்தான் இப்படி துணியாகமாறியிருக்கிறது. வேறு ஒருபொருள் உண்டாக வில்லை என்று அறிகிறோம். அதைப்போல பிருஹ்மம் உலகமாகும் போதும் பல பேதங்களிருந்த போதும், காரணமான பிருஹ்மமும் காரியமாகிற உலகமும் வேறல்ல - ஒன்றேயாகும். (இந்தவிடத்தில் பிருஹ்மம் சூக்ஷ்மசித் அசித்விசிஷ்ட பிருஹ்மம் என்பதாகவும்-உலகம் என்பது ஸ்தூலசித் அசித் விசிஷ்ட பிருஹ்மம் என்று கொள்ளவேண்டும்)

(ஸி) சூத்ரம் यथा च प्राणादि: (दि) (2-1-20)

யதா ச பிராணாதி:

பிராணாதி: யதா ச — (ஒன்றான) பிராணன் (வாயு) அபானன் - ஸமானன் முதலான நாம ரூபகார்ய பேதங்களை அடைவது போல (ஒன்றான) பிருஹ்மம் காரியமாகிற உலகமாகும் போது பல பேதங்களை அடைகிறது.

எப்படி ஒரே வாயு ஒன்றாகவே-பிரதி சரீரத்தில் விருத்தி (செயல்பட) பல விசேஷ நாம ரூபமாகப் பார்க்கப்படுகின்றதோ - பிராணன் - அபானன் இத்யாதி நாம ரூபபேதங்களை கார்யவசாத் அடைகின்றதோ - அதைப் போல பிருஹ்மம்

ஏகமேவ; அதுவே காரியமாகிற உலகமாகும் போது விசித்திர சர அசர வஸ்துக்களாக உடைய ஜகத்தாக ஆகிறது. ஆகவே பிருஹ்மமே பரம காரணமாதலால் - பிருஹ்மத்தை விட காரியமாகிற ஜகத் வேறு இல்லை - இரண்டும் ஒன்றே என்பது ஸித்தம். ஆகவே நாம ரூப பேதங்களிருந்த போதிலும், காரிய காரணங்கள் ஒன்றே என்று ஜகத் பிருஹ்மம் ஒற்றுமை - நிரூபிக்கப்பட்ட உண்மையாகும்

(இத்துடன் பிருஹ்மம் உபாதான காரணம் என்கிற பக்ஷம் முடிவடைகிறது. ஆட்சேபங்கள் பரிகரிக்கப் பட்டன.

(ஆரம்பணாதிகரணம் முற்றும்)

## இதரவ்யபதேசாதி கரணம் 2-1-7

**इतरव्यपदेशात् हिताकरणादिदोषप्रसक्तिः**

(ஸூ. ஸூத்ரம்) இதரவ்யபதேசாத்ஹிதா கரணாதி தோஷ ப்ரஸக்தி: (2-1-21)

இதரவ்யப்தேசாத் (பிருஹ்மத்தை) ஜீவனுக்க் கூறுகையால் ஹிதாகரணாதிதோஷ பிரஸக்தி: - (பிருஹ்மம் தனக்குத் தானே) நல்லதைச் செய்து கொள்ளவில்லை - தனக்குத் தோஷத்தை உண்டு பண்ணிக் கொள்கிறது - என்பதாகும்.

(இதுவரை பிருஹ்மம் உபாதான காரணமாகாது - அப்படி கொண்டால் கபில ஸ்மிருதிக்கு விரோதம் யேற்படும் என்று சொல்லப்படும்-அந்தவாதம் தள்ளப்பட்டது. மேலும் உபாதானம் என்று பிருஹ்மம் ஆவதால் காரணகாரிய ஐக்யம் யேற்படாது - பிருஹ்மம் வேறு — உலகம் வேறு என்கிற தார்க்கிகனின் வாதம் தகர்க்கப்பட்டது. இப்போது பிருஹ்மம் நிமித்த காரணம் என்று வேதாத்தியின் வசனத்திற்கு ஆட்சேபம் எழ - அதுவும் பரிஹரிக்கப்படுகிறது. ஜீவனில் வேறுபடாத பிருஹ்மம் தனக்குத் தானே துன்பத்தை அளிக்கும் ஜகத்தை உண்டாக்காது - என்கிற

வாதம் இதில் தள்ளப்பட்டு - பிருஹ்மமே நிமித்த காரண மாகும் என்று சொல்லப்படும்.)

ஜகத்தும் பிருஹ்மமும் ஒன்றேதான் - வேறல்ல என்று சொல்வதால் சா. உ. 6-8-7 - तत्त्वमसि நீ பிருஹ்மமாக விருக்கிருய்; பிரு. உ. 6-4-7 - अयमात्मा ब्रह्म இந்த ஆத்மா பிருஹ்மம் தான் இத்யாதி சுருதிகளில் பிருஹ்மமும் ஜீவனும் ஒன்று என்று சொல்லப்பட்டிருக்கிறது - என்பது சரியாகும். இதற்கு விரோதமாக இந்த ஆட்சேப சொல்லப்படுகிறது. (इतरस्य) வேருன - அதாவது பிருஹ்மம் இந்த சுருதிகளிலே ஜீவபாவத்தை அடைகின்றது என்ருல் - அப்போது அந்த பிருஹ்மத்திற்கு ஸர்வக்ஞத்வம், ஸத்ய ஸங்கல்பாதி குணங்கள் ஓதப்படுகின்றனவே அத்தகைய பிருஹ்மம் தனக்கு ஹிதரூப ஜகத்திற்குக் காரணமாகாது - அதாவது தனக்கு தீமையைச் செய்து கொண்டதாகும் - ஜகத்தை உற்பத்தி செய்வதால்; அஹிதரூப ஜகத்காரணம் கொண்டதாகும். (ஏனெனில் உலகம் சுகதுக்கங்களைக் கொண்டது). அந்த தோஷங்கள் நிறைந்துள்ள உலகத்தை உண்டாக்குவதால் பிருஹ்மம் தனக்குத் தீமையையே செய்து கொள்கின்றது-என்கிற தோஷம் யேற்படும். ஜகத்தில் ஆத்யாத்மிக, ஆதிதைவிக ஆதிபௌதிகங்களால் யேற்படும் துக்கங்கள் அனந்தம். ஸ்வதந்திரமான ஒரு புத்திமான் இம்மாதிரி துக்கங்கள் நிறைந்த காரியத்தை (உலகத்தை) ஸ்ருஷ்டிக்கப் புறப்பட மாட்டான் (பிரவேசிக்க மாட்டான்) ஜீவனைவிட வேருனது பிருஹ்மம் என்று சொல்லும் வேதவசனங்கள் உன்னுல் விடப்பட வேண்டியதாகும் (எவனுல் பிருஹ்மமும் உலகமும் ஒன்றே என்று சொல்கிறவனுல் - விடப்பட வேண்டியதாகும்) இப்படி பேதம் இரண்டுக்கும் ஸித்திக்குமானுல், ஒற்றுமை இரண்டுக்கும் (உலகம் பிருஹ்மம்) யேற்படாது.

(இங்கு சொல்லப்படுவது-காரணமும் காரியமும் ஒன்று என்று சொல்பவர்கள் - அத்வைதிகள் - பேதாபேதவாதிகள் விசிஷ்டாத்வைதவாதிகள். ஒற்றுமை (अनन्यत्वं) என்பதற்கு

பல அர்த்தங்கள் உள. எது எப்படி அறியப்படவேண்டியது ஸ்வரூப ஐக்யமா-சரீர ஆத்மபாவமா? அத்வைதிகள் அனன்யத்வம் என்று சொல்வதற்குக் காரணம் பிருஹ்மமே ஜீவனுகிறது; விசிஷ்டாத்வைதிக்கு - ஸ்வரூப ஐக்யமில்லை. காரண காரிய ஐக்யம் ஆனுல் ஸ்வரூபபேதமே) அத்வைதிகள் சொல்வது பிருஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டவனுகத் தோன்றும் ஜீவனும் பிருஹ்மமாகவே கூறப்படுகிருன் என்று சொல்கிருர்கள்) இங்கே விஷயம் ஜகத்தின் உற்பத்தி - அது யாருக்கு அஹிதத்தை உண்டு பண்ணுகிறது? ஜீவனுக்கு அஹிதம் யேற்படுமாகில் துக்கத்தால் யேற்படுவதாகும். பாஸ்கரபக்ஷம் - ஔபாதிகம் என்கிருர்கள். சங்கரபக்ஷம் - ஜீவன் என்கிருர்கள். ஜீவாக்ஞான பக்ஷமாகவிருந்தாலும் பிரும்மாக்ஞான பக்ஷமாக விருந்தாலும் - இரண்டுக்கும் ஒன்றுதான். அத்வைதிகள் ஈஸ்வரனை ஒப்புக்கொள்ளுகிற படியால் - ஸர்வக்ஞனை பரமாத்மா ஸ்ருஷ்டிக்கிருன் - அவனுக்குத் தோஷம் ஜகத் ஸ்ருஷ்டியினுல் யேற்படுகிறது - என்பது எவ்விதம் பொருந்தும் என்பது ஆராயப்படுகிறது - அதற்கு பதில் ஜீவாக்ஞானம் என்கிருர்கள்).

**ஸ்ரீபாஷ்யம்;**—(முதலில் பாஸ்கரபக்ஷம் ஆராயப்படுகிறது) இவர்கள் சொல்கிருர்கள் - பேதசுருதிகள் ஔபாதிகமாக யேற்படும் பேதவிஷயங்களாகும். அபேத சுருதிகள் ஸ்வாபாவிகமாக யேற்படும் அபேதமாகும் - (ஜீவபிரும்ம ஐக்யம்). அப்படியானுல் (நாம் கேட்பது) பிருஹ்மம் ஜகத் காரணம் - அது உபாதிகளோடு சம்பந்தம் கொண்டதாக வில்லை - அத்தகைய பிருஹ்மம் (அதாவது ஸ்வபாவமாகவும். தன்னிலும் அபின்னமாக விருக்கும் ஜீவனை) - அந்த ஜீவனை அறிகிறதா இல்லையா? அந்த ஜீவன் (எத்தகையவன்?) தன்னிலிருந்து வேருகவில்லாதவனுன ஜீவனை - அறிகிறதா இல்லையா? அறிகிறதில்லையென்ருல் - அதனுடைய ஸர்வக்ஞத்வத்திற்கு ஹானி யேற்படும். அறிகிறது என்ருல்-தன்னிலிருந்து வேறுபடாத (அபின்ன) ஜீவனுக்கு துக்கம் - யேற்படும் போது - அந்த துக்கம் பிருஹ்மத்துக்கே யேற்பட்டதாகும் - தோஷங்களின் களங்கம் - அதர்

வது தனக்குத் தானே நன்மையைச் செய்து கொள்ளாமல் தீமையைச் செய்து கொண்டதாகும். இந்த தோஷப் பிரஸங்கம் - தவிர்க்க முடியாததாகும்.

**விளக்கம்:—**

இங்கே சொல்லப்படும் விஷயம் - முன் அதிகரணத்தில் (ஆரம்பணுதிகரணம்) பிருஹ்மமும் ஜகத்தும் ஒன்றே - காரண காரியம் ஐக்யம் - அநந்யத்வம் ஸ்தாபிதம்; அவ்விதமானல் பிரபஞ்சத்திற்கு யேற்படும் தோஷங்கள் பிருஹ்மத்துக்கு வருமா - அல்லது பிருஹ்மத்திஞல் யேற்பட்டதா? மேலும் பிருஹ்மமும் ஜீவனும் ஒன்றுதான் என்ருல் (ஐக்யம்) ஜீவ தோஷங்களும் ஜகத்துக்கும் ஜகத்தின் தோஷங்கள் ஜீவனுக்கும் யேற்படும். ஜகத் ஸர்வ ஹேயத்திற்கு யிருப்பிடம் (ஆஸ்பதம்) யாவராலும் ஒப்புக்கொள்ளப் பட்டது. முந்தின விலக்ஷண அதிகரணத்தில் பிரதான காரணவாதியான சாங்கியன் தர்க்கபலத்திஞல் பிருஹ்மத்தின் உபாதான காரணத்தை ஆட்சேபித்தான்; சரீரதோஷங்கள் சரீரியைச் சேராது; உண்மையில் ஜகத் விசிஷ்ட பிருஹ்மத்தையே காரணமாகவும் காரியமாகவும் ஒப்புக் கொள்வதால் - ஸாலக்ஷண்யமுள்ளதே ஒழிய-வைலக்ஷண்யமில்லை. உலகமும் பிருஹ்மமும் ஒரே திரவியங்களானபடியால் - வேறுபட்ட லக்ஷணங்கள் உள்ளன என ஒப்புக் கொண்டாலும், அவை காரிய காரணமாகக் குறையில்லை - என்பது ஸ்தாபிதம். விசிஷ்ட வேஷத்திஞல் அநந்யத்வம் (ஒன்று தான்) ஸ்தாபிதம்; அப்படியிருப்பினும் சரீரகத தோஷங்கள் சரீரியைச் சேரலாம் என்று ஆட்சேபித்தாலே (அதேபடி நிமித்த காரணத்தையும் ஆட்சேபிப்பதாலே) அதற்கு மேல் போக்த்ராபத்தி அதிகரணத்தில் கர்மத்திஞல் சுகதுக்கங்கள் யேற்படுகின்றன, கர்மவசப்படாத பரமாத்மாவிற்கு ஜீவனைப் போல பிராகிருதமான சுகதுக்கங்களின் அனுபவம் இல்லை என்றும் சொல்லப்பட்டது - சேதனனுக்கு மாத்திரம் சுக துக்கானுபவம் என்று சொல்லப்பட்டது.

அசேதனவிஷயத்தில் இம்மாதிரி யேற்படவில்லையாயி னும், பிருஹ்மம் விசிஷ்ட வேஷத்தினால் அநன்யத்வம் (ஒற் றுமை) நிர்வஹிக்கப்பட்டாலும்-ஜீவ பிருஹ்ம விஷயங்களில் சேதனத்வம் அவிசேஷாத் - (சுத்த பிருஹ்மமானபடியால்) அநந்யத்தினால் (ஒற்றுமையினால்) யேற்படுவதான ஏகவிக் ஞானத்தினால் ஸர்வ விக்ஞானமாகிற பிரதிக்ஞையின் அர்த் தத்தை நிர்வஹிப்பதற்கு - ஜீவன் பிருஹ்மகாரியமாதலால்- பிருஹ்மைவ - பிருஹ்மமே தான் - என்பதால் இவ்விதமாக அநந்யத்வத்தின் (ஒற்றுமை) உத்தரா வஸ்தை விசேஷ விசிஷ்டம் ஜீவசப்தம் எனச் சொலலப்படுகிறது - இதுதான் சித்தாந்தியின் அபிப்ராயம்-என்று சொல்கிறான் (பூர்வபக்ஷி) (நாம் சொல்வது) காரிய காரண பாவம் யேற்படுவதால் ஐக்யம்-தத்வமஸ்யாதி வாக்யத்தின் அர்த்தத்தின் ஒற்றுமை அறியப்பட வேண்டியது - என்பதுஇந்த பிரகரண விஷய மாகும்.

இவ்விதமாக அநந்யத்வத்தின் (ஒற்றுமை)மூலமாக - சங்கதி சொல்லப்படுகிறது - ஜகத் - என்று. ஜீவமாத்திர விஷயத்தில் யேற்பட்ட சங்கை சூத்ரத்தால் அறியப்படும் - இதரபதத்தினால் பஹீலம் ஜீவ ஏவ பிரயோகம். இதனால் பேததிருஷ்டாந்தம் சொல்லப்படுகிறது. நமது சித்தாந்தமோ அசேதனப் பொருள் எப்படி பிருஹ்மமாகாதோ, அதேபோல ஜீவனும் ஸர்வக்ஞ ஸர்வ சக்தியுடைய பிருஹ்மமாக முடி யாது - ஐக்யம் என்பதால் ஸ்வரூப ஐக்யம் இல்லை – சரீர ஆத்ம பாவத்தினால் யேற்பட்டதாகும். இப்படி உரைப்ப தால் பிருஹ்மம் காரணமாவதும் ஜகத் காரியமாவதும் - சேதனு சேதன ஈஸ்வரனின் தன்மைகள் ஒன்றொடொன்று கலவாமலிருப்பதும் - வேதாந்த சுருதிகளுக்கு விரோதமில் லாதிருப்பதும் – பொருத்தமாகின்றன - அதனால் ஸ்ரீமந் நாராயணனே நிமித்த காரணமாகும்)

**ஸ்ரீபாஷ்யம் :—**

இபபடியும் சொல்லக்கூடும் - பிருஹ்மத்திற்கும் ஜீவ னுக்கும் பேதம் அவித்யையினால் யேற்படுசிறது - பேத

சுருதிகளும் அந்த விஷயத்தையே ஓதுகின்றன - பேதம் அக்ஞானம் க்ருதம் என்று; இவ்விதம் சொன்னாலும்-இங்கே கூட ஜீவாக்ஞான பக்ஷத்தில் நாம் யேற்கனவே சொன்ன விகல்பம் - இதுவா அல்லது வேறு ஒன்று என்கிற மாற்று அபிப்ராயங்கள் - அந்த அந்த அபிப்ராயத்தினால் யேற்படும் பலன்கள் - யேற்படும். (ஆரம்பணாதி கரணத்தில் பார்க்கவும்). பிருஹ்மா க்ஞானபக்ஷத்திலே – (பிருஹ்மத்திற்கே உபாதியினால் அவித்யை யேற்படுகிறது - அப்போது அந்த பிருஹ்மம் ஸ்வரூபத்திலே ஸ்வபிரகாசமுள்ளது - அதற்கு அக்ஞானஸாக்ஷித்வம் யேற்படாது - அதனால் சாக்ஷியான பிருஹ்மத்தினிடமிருந்து ஜகத் உற்பத்தி அஸம்பவம் யேற்படாது). சரி - அக்ஞானம் பிருஹ்மம் பிரகாசமடையாதபடி திரோஹிதம் (மறைத்தல்) செய்கிறது என்றால் - (நாம் சொல்வது) திரோதானம் என்பதால் பிரகாச நிவிருத்தியைச் செய்தால் அந்த பிரகாசமே ஸ்வரூபமாதலால் - ஸ்வஸ்வரூப நிவிருத்தியென்றால் - ஸ்வஸ்வரூப நாசம் என்கிற அர்த்தம் இத்தகைய ஸஹஸ்ர தோஷங்கள் யேற்படும். ஆகவே இத்தகைய அவித்யாவசமுள்ள பிருஹ்மம் ஜகத் காரணமாகாது.

**விளக்கம்:—**

(அத்வைதிகளால் மீண்டும் சொல்லப்படுவது - வ்யவஹாரதசையில் பேதம் - அக்ஞானம் நீங்கினதும்-அதாவது முக்ததசையில் அபேதம் என்றால்; அநந்யத்வம் (ஒற்றுமை) இல்லாதபடியால் - அதனால் யேற்படும் விஷயங்கள் பிரஸங்கமாகும் - என்பதனால் பிருஹ்மாக்ஞானம் - என்று சொல்லப்பட்டது - அதற்கு நாம் மேற்கூறியபடி; ஸ்வரூப நாசம்தான் உண்டாகும். ஆரம்பணாதி கரணத்தில் இது நன்கு விளக்கப்பட்டு - பிரும்மாக்ஞானபக்ஷமும் கண்டிக்கப்பட்டது. தோஷஸஹஸ்ரம் - என்பதற்கு பல என்று அர்த்தம். ஈஸ்வரனுக்கு பிருஹ்மத்தினால் ஸ்ருஷ்டி யேற்படுமாகில் - ஸர்வேஸ்வரத்வம் அஸித்தம். கல்பிதம் என்றால் அந்த ஜீவனும் பிருஹ்மமும் ஒன்றேயாதலால் அவ்விதம்

அறிந்ததும் பிருஹ்மம் தத்வக்ஞனுக ஆகிறது. இல்லையென்று அறிந்தால் - அதுவும் இல்லாமல் போகிறது (नास्तीति) அப்படிப்பட்ட பிருஹமம் தன்ஹிதத்திற்காக ஸ்ருஷ்டிக்கிறது என்பது சரியாகாது).

பிருஹ்மம் தனக்கே விபரீதமான உலகைப்படைக்க மாட்டாது-அதனுல் நிமித்த காரணமாகாது; இவ்விதம் சொல்லப்படுமாகில் - அதற்கு சூத்ரக் காரரே பதில் அளிக்கிருர்.

(ஸி) சூத்ரம் - अधिकं तु भेदनिर्देशात् (2-1-22)

அதிகம் து பேத நிர்தேசாத் (2-1- 22)

(பேதநிர்தேசாத்-ஜீவனைக்காட்டிலும் பரமாத்மா வேருக வேதங்கள் கூறுவதாலே - அதிகம் து - ஜீவாத்மாவைக் காட்டிலும் பரமாத்மா) வேருனதாகும். அதாவது ஜீவனும் பிருஹ்மமும் ஒன்றில்லை - வேறுபட்டது - பின்னமே.) பேத சுருதிகள் இங்கே பேசப்படுகின்றன).

து சப்தம் மேலே காட்டப்பட்ட பக்ஷத்தைத்தள்ளுகிறது (சித்தாந்த சூத்ரம் இது); - பிருஹ்மம் வேறுதான் - ஆதியாத்மிகாதி துக்கங்கள் ஜீவனைப் பிடிக்கும் - ஏன் ? பிரத்யகாத்மா பிருஹ்மத்தை விடவேருனது என்று சுருதிகளே காட்டுகிறது. अधिकम् - ஜீவன் வேறுப்பட்டதாகும். (பிருஹ்மத்தைவிட) எப்படி - भेदनिर्देशात् - பேத சுருதிகள் இருப்பதாலே - பிரத்யகாத்மா பரம்பிருஹ்மத்தைவிட பேதமானதென சுருதிகள் ஓதுகிறபடியால்; பிரு.மா.6-7 य आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरो यमात्मा न वेद यस्याऽऽत्मा शरीरम् य आत्मानमन्तरो यमयति स त आत्माऽन्तर्याम्यमृत: (எவன் ஆத்மாவில் நிற்கிருனே - எவனை ஆத்மா அறியாதோ எவனுக்கு ஆத்மா சரீரமோ, எவன் ஆத்மாவினுள் உள்நுழைந்து நியமிக்கிருனே-அவன் தான் ஆத்மா அந்தர்யாமி - அம்ருதன் ஸ்வே. உ. 1 - 6 पृथगात्मानं प्रेरितारं च मत्वा जुष्टस्ततस्तेनामृतत्वमेति - ஆத்மாவையும் (ஜீவனையும்) அவனையும் நியமிக்கும் பரம்பொருளையும் வேருக அறிந்து - அந்த பரமாத்மாவினுல் அனுக்ரஹிக்கப்

பட்டு மோக்ஷமடைகிறான்; ஸ்வே உ. 6-8 स कारणं करणाधिपाधिप:- பரமாத்மாவே காரணம் - பரமாத்மா கரணங்களுக்கு அதிபதியான ஜீவனுக்கும் பதி; ஸ்வே. 4-6 - तयोरन्य: पिप्पलं स्वादिति अनश्नन्यो अभिचाकशीति - அந்த விருக்ஷத்தில் உள்ள (தேகத்திலுள்ள) இரண்டு பக்ஷிகளுள் - ஒருபக்ஷி பிப்பலம் (பழத்தைச்) சாப்பிடுகிறது; இன்னொன்று சாப்பிடாமல் இருந்துகொண்டு பிரகாசிக்கிறது.

ஸ்வே. 1 - 9 ज्ञाज्ञौ द्वावजावीशनीशौ பரமனும் ஜீவனுமாகிற இருவரும் முறையே எல்லாம் அறிந்தவராகவும் (ஜீவன்) அறியாதவராகவுமுள்ளனர்; பிரு. உ. 6 - 3 - 21 प्राज्ञेनाऽऽत्मना संपरिष्वक्त: பரமாத்மாவினால் ஜீவன் தழுவப்படுகிறான். பிரு. உ. 6-3-5 प्राज्ञेनाऽऽत्मनाऽन्वारूढ: பரமாத்மாவினால் தழுவப்பட்டு சவாரி செய்யப்படுபவனாக; (வெளிக்கிளம்புகிறான்) ஸ்வே. உ. 4-8. अस्मान्मयीसृजते विश्वमेतत् तस्मिंश्चान्यो मायया संनिरुद्ध: இந்த பிரகிருதியிலிருந்து எந்த பரமாத்மா மாயையைத்தன்வசம் வைத்திருப்பவன் - அவன் உலகத்தை ஸ்ருஷ்டிக்கிறான் அதில் இன்னொரு பிராணியை: (அதாவது ஜீவனை) மாயையினால் கட்டுப்படுத்துகிறான் (ஸ்வே. 4-9) ஸ்வே. 6·16 प्रधानक्षेत्रज्ञपतिर्गुणेश: பரமாத்மா பிரகிருதியின் பதி - ஜீவனுடைய பதி - அவரே குணங்களுக்கும் ஈசர் ஸ்வே. 6 - 13 नित्योनित्यानां चेतनश्चेतनानामेको बहूनां यो विदधाति कामान् - நித்யருக்குள் நித்யர் சேதனர்களுக்குள் சேதனர் அவர் ஒருவரானாலும் பல பேர்களின் அபிலாஷைகளைப் பூர்த்தி செய்கிறார். சுபோல 7- योऽव्यक्तमन्तरे संचरन् यस्याव्यक्तं शरीरं यमव्यक्तं न वेद, योऽक्षरमन्तरे संचरन् यस्याक्षरं शरीरं यमक्षरं न वेद, एष सर्वभूतान्त रात्माऽपहतपाप्मा दिव्योदेव एको नारायण:—

இத்யாதிகளால் பரமாத்மா ஜீவனைவிட வேறு என்று காட்டப்படுகிறது. (எவர் அவ்யக்தமாகிற பிரகிருதியில் சஞ்சரித்துக் கொண்டு, எவருடைய சரீரம் அவ்யக்தமாக (பிரகிருதியாக) விருக்கிறதோ - எவரை அவ்யக்தம் அறிகிறதில்லையோ...எவர் அக்ஷரத்தினுள்ளே சஞ்சரித்துக்கொண்டு எவருடைய சரீரம் அக்ஷரமாக விருக்கிறதோ, எவரை

அக்ஷரம் அறிகிறதில்லையோ-அவரே ஸர்வபூத அந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவர்-ஏகர் ஸ்ரீமந்நாராயணராகும்.

(இங்கே சுருதபிரகாசிகையில் அஹ் சப்தம் முக்தனைவிட வேருனவனைச் சொல்கிறது. பிருஹ்மம் முக்தனையும்விட வேருனவர் என்று சுருதிகள் சொல்கின்றன என்கிறது).

ஜீவனைவிட பரமாத்மா வேறு என்ருல் - தத்வமஸி வாக்யத்தில் உள்ள ஐக்யம் எப்படி சரியாகும்? சரீர ஆத்ம பாவத்தினுல் ஒன்று எனப்பொருந்தும்; ஸ்வரூப ஐக்யமில்லை என்பதால் ஸ்வரூப பேதமும் ஸித்தம். ஜீவனுக்கு கர்ம காரணமாக சுக துக்கங்கள் யேற்படினும் பிருஹ்மத்துக்குத் தனக்குத் தீமையையே செய்து கொள்கிறது என்று பூர்வ பக்ஷத்தில் சொன்னதோஷம் ஒட்டாது. ஆதலால் பிருஹ்மம் நிமித்த காரணமாவதில் எக்குறையுமில்லை. ஜீவனை பகவான் என்பது சரீர ஆத்மபாவஸம்பந்த நிபந்தகம் என்பது காசுகி ருத்ஸன்னரால் சொல்லப்பட்டது. அவஸ்திதேரிதி காசுகி ருத்ஸநர் - என்பதில் நிரூபிக்கப் பட்டது. (அந்தர்யாமி பிராஹ்மணம்). சித் அசித்பிருஹ்ம ஒற்றுமை ஸாமாநாதி கரணத்தினுலும் நிர்வஹிக்கப் பட்டது.

(ஸி) சூத்ரம் - अश्मादिवच्च तदनुपपत्तिः (2-1-23)

அஸ்மாதிவசச ததநுபபத்தி: (2-1-23)

அஸ்மாதிவத்ச - கல் முதலான ஜடப் பொருள்களுக்குப் போலே - ததநுப பத்தி: - ஜீவனுக்கும் பரமனேடு ஸ்வரூப ஐக்யம் ஒட்டாது. (சூத்ரார்த்தம்-கல் கட்டைக்கும் பிருஹ்ம ஸ்வரூபத்துக்கும் ஒற்றுமை(அபேதம்)எப்படி பொருந்தாதோ அதேபடி ஜிவனுக்கும் பிருஹ்மத்துக்கும் பொருந்தாது - அஸம்பாவிதம் அசம - கல் ஆதிபதம் கட்டை - காஷ்டம். (அதாவது ஸமாநாதிகரணத்தினுல் பிருஹ்ம ஜட-ப் பொருள் (அசேதனம்) ஐக்யம், (துல்யம் என்று) சொல்லப்படினும் ஸ்வரூப ஐகயம் யேற்படாது; பிருஹ்மாஞான வாதியினுல் சொல்லப்பட்டது வ்யாவிருத்தியினுல் (ஐக்யம்) ஏற்படலாம். அவ்விதமே அசேதனப் பொருளுக்கும் யேற்படலாமல்லவா?

ஜீவன் பிருஹ்மத்தின் பரிணாமத்வம் என்று சொல்வது தவறு—सदेव सोम्येति என்கிற வசனத்தினால்).

**ஸ்ரீபாஷ்யம்:**—கல் கட்டை, லோஷ்டம், புல் - மற்ற அசேதனப் பொருள்கள் எப்போதும் ஹேயமாகவும் தாழ்வுள்ள ஸ்திதியிலிருப்பவை - மேலும் எப்போதும் விகாரத்தை அடைந்தவண்ணமாக விருப்பவை- அந்த ஜடப் பொருள்கள் நிரவத்ய (தோஷமில்லாத) நிர்விகார நிகிலஹேய ப்ரத்யனீக கல்யாணைகதான - ஸ்வேதர ஸமஸ்த வஸ்து விலக்ஷணமாகவும, அனந்த ஞான ஆனந்தைக ஸ்வரூபமுள்ளவரும், நானாவிதான அநந்த மஹா வீபூதி கொண்டது பிருஹ்ம ஸ்வரூபம் - அத்தகைய பிருஹ்மத்தின் ஸ்வரூபத்துடன் (அசேதனப் பொருள்களுக்கு) எவ்விதம் ஐக்யம் ஏற்படாதோ அதே பிரகாரம் சேதனர்களுக்கும் பிருஹ்மத்துக்கும் ஸ்வரூப ஐக்யம் யேற்படாடது - ஏனெனில் ஜீவனுக்கு அனந்தமான துக்கங்களின் சம்பந்தத்தாலே - அநர்ஹன் (இன்னொரு விதத்திலும் - அவன் மின்மினி பூச்சியைப்போல விருப்பவன், பகவான் ஆயிரம் கோடி சூர்யனைப்போல விருப்பவன்- இவர்களுக்கு ஒற்றுமை (ஸ்வரூப ஐக்யம்) எப்படி ஏற்படும்? அந்த பிருஹ்மம் சா. உ. 8-1-5-ல் अपहतपाप्मा - பாபமின்மை இத்யாதி வாக்யங்களால் யேற்படும் ஸகல ஹேய ப்ரத்யனீகன் - (எதிர்தட்டு)-அநவதிகாதி சய அஸங்க்யேய கல்யாண குணகரன் - பர பிருஹ்மம் என்று ஓதப்படுவதாலே.

ஸாமாநாதிகரணத்தினால் காட்டப்பட்ட ஒற்றுமை (ஐக்யம்) பிரு. மா. 6-5-ல் यस्यात्माशरीरं - (எவனுக்கு இது சரீரமோ - அவன் ஆத்மா) என்கிற சுருதிகளில் ஜீவன் பிருஹ்மத்தின் சரீரமாவதால் - பிருஹ்மமே ஜீவ சரீரதயா (சரீரத்தினால்) (அதற்கு) ஆத்மாவாகவிருப்பதாலே அவஸ்திதே: பரமாத்மா ஜீவனுக்குள் நிற்கையாலே ஜீவனைச்சொல்லும் பதங்கள் பரமாத்மாவையும் (சரீரியையும்) குறிக்கும். (அத்வைதி சொல்வது போல ஸ்வரூப ஐக்யமில்லை). ஜீவ ப்ரகார பிரகாரியான பிருஹ்மத்தை பிரதிபாதிக்கும். இதனால் யாதொரு விரோதமும் இல்லை - (சரீர ஆத்ம பாவத்

திற்கும் பிருஹ்ம ஜீவ ஐக்யத்திற்கும் (அபேதத்திற்கும்) இல்லாதபடியால் அதனதன் ஸ்வரூப பேதமும் ஸித்திப்ப தாகும். அதற்கு ஹானியில்லை. நித்யசுத்த முக்த ஸ்வரூப பிருஹ்மம் ஸர்வசக்தி ஸர்வக்ஞத்வம் கொண்டது எப்படியோ அவ்விதமே ஜீவனுக்கும் சுக துக்கானுபவங்கள் உண்டு. பரமாத்மாவுக்கு கரிமவஸ்யமான சுக துக்கானுபவமில்லை. இந்த விஷயங்கள் முன்பே நன்கு விளக்கப்பட்டன - अवस्थितेरितिकाशकृत्स्न: என்கிற சூத்ரத்திலும் பரமாத்மா அந்தர் யாமியாகவிருப்பதால் - சரீரவாசி சப்தங்கள் சரீரயான பரமாத்வரை சொல்லும் என்பதாகும். (அதாவது ஜீவபிருஹ் மத்தை ஒரே வேற்றுமையில் படிப்பது ஜீவன் சரீரம் - பரமாத்மா ஆத்மாவாகவிருப்பதால்) இதனால் பிருஹ்மம் உலகத்திற்கு (காரியத்திற்கு) காரணமாகும். இரண்டும் ஒன்றென்று உரைப்பதால் - ஸ்வரூபபேதம் அதனதன் தன்மைகள் ஒன்றோடொன்று கலவாமல் இருப்பது-ஸித்தம் வேத முரண்பாடுமில்லை. ஆகவே ஸ்ரீமந்நாராயணன் நிமித்த காரணமாகலாம் என்பது சித்தாந்தியின் கருத்து).

ஆகையால் ஸர்வ அவஸ்தைகளிலும் பிருஹ்மத்திற்கு சித் அசித் வஸ்து சரீரமாக விருக்கிறது - அதாவது பிரளய தசை (காரணதசை)யில் ஸூக்ஷ்ம சித் அசித் வஸ்து சரீரம் பிருஹ்மகாரணம். அதே பிருஹ்மம் ஸ்தூல சித் அசித் வஸ்து சரீரம் ஜகதாக்யம் (கொண்ட ஜகத்) காரியம் - என்ப தால் ஜகத் பிருஹ்மத்திற்கு ஸமானாதிகரணத்தினால் ஐக்யம் யேற்படுவதாகிறது - அதனால் பிருஹ்மத்திற்கு ஜகத்காரிய மாகிறது. காரண காரியதசைகளில் அந்த ஜகத்தும் பிருஹ் மம் அநன்யத்வம் (ஒன்று) தான்; அசித் வஸ்துக்களும் ஜீவனும் பிருஹ்மத்திற்கு பரிணாமத்தினால் யேற்படுவதாக வும் - அதனால் சேதனர்களுக்கு துக்கமுள்ளவை, (ஈஸ்வர னுக்கு) கல்யாண குணங்கள் உள்ளவை — இத்தகைய ஸ்வபாவ மாறுதல்களுக்கு யாதொரு ஸங்கரம் (கலப்பு) இல்லாமல் - ஸ்வரூப பேதத்துடனே - ஜீவன் - அசித் - ஈஸ்வரன் ஆகியவர்கள் தனித்தனியாக விளங்குகின்றனர்; இதனால் ஸர்வ சுருதிகளுக்கும் விரோதமில்லை.

சா. உ. 6-2-1 सदेव सोम्येदमग्र आसीत् एकमेव - ஸௌம்யஸத் ஒன்றே தான் முதலில் இருந்தது - ஏகமேவ; இதனால் அவிபாக (நாமரூப வ்யாகரணமில்லாத) அவஸ்தையில் அசித் சித் வஸ்துக்கள் பிருஹ்மத்தின் சரீரமாக - சூக்ஷ்மரூப (ஸ்வரூபமாக) விருந்தது என்று அவசியம் ஒப்புக் கொள்ள வேண்டியதாக விருக்கிறது. சரரீ. 2-1-34 वैषम्यनैर्घृण्येनसापेक्षत्वात् அந்த அவஸ்தையில் பிருஹ்மத்திற்குப் பக்ஷபாதமும் கருணையின்மையும் யேற்படமாட்டா - ஏனெனில் ஏற்றம் தாழ்வுள்ள ஸ்ருஷ்டி கர்மத்தினால் யேற்படுகிறது - சுருதி யும் அவ்விதமே சொல்லுகிறது; அதே போல பிரு. சூ. 2-1-35 न कर्माविभागादिति चेन्नानादित्वादुपपद्यते चाप्युपलभ्यते च ஸ்ருஷ்டி காலத்தில் கர்மமில்லை; அக்காலத்தில் பிருஹ்மம் தவிர்த்து வேறு ஒன்றில்லை. ஜீவன் அநாதி; அநாதியாயி னும் பிருஹ்மம் ஒன்றேயிருந்தது என்று சுருதி சொல்கிறது. இந்த இரண்டு சூத்ரங்களால் (இங்கே ஜீவனும் கர்மமும் அநாதி என்பதால்) அவிபாகம் (நாமரூப விபாகமில்லாத அவஸ்தை) - ஸூக்ஷ்மரூப அவஸ்தையாகச் சொல்லப்படு கிறது — अविभागस्तु नामरूप विभागाभावात् - ஆகையால் பிருஹ்ம காரணத்வம் யேற்படுவதாகிறது.

(இப்போது அத்வைதி பக்ஷம் சொல்லப்படுகிறது) எவர்கள் அவித்யையிலிருந்து விடுபட்ட அவஸ்தை ஜீவனுக்கு யேற்படுகிறதே - அதை மனத்தில் வைத்துக்கொண்டு அதை பிருஹ்மத்திற்குச் சொல்லி அந்த ஜீவனுடன் பிருஹ் மத்திற்குப் பேதமேற்படுகிறது என்று அபிப்ராயம் கொள் கிறார்கள். அவர்கள் பக்ஷத்தில் இவ்விதம் (நீங்கள்) சொல்வது அஸங்கதம் = பொருத்தமிராது - என்போம்.

(இங்கே சங்கரரின் அபிப்ராயம் - 2-1-22ல் பிருஹ்மம் ஜீவனைவிட வேறுபட்டதாகும் - சுருதியில் வ்யவஹார தசை யில் பேதம் சொல்லப்பட்டிருப்பதே — அதன் காரணமாகும். ஸர்வக்ஞத்வமும் ஸர்வசக்தித்வமும் நித்ய சுத்தபுத்த முக்த ஸ்வபாவமுமான பிருஹ்மம் ஜீவனைவிட வேறானது (அதிகம்) வ்யவஹார தசையில் சொல்லப்பட்டது - ஜகத்

திற்கு பிருஹ்மம் ஸ்ரஷ்டா - உண்டாக்கியவன். அந்த பிருஹ்மத்தினிடமிருந்து ஹிதத்தைச் செய்யாமை முதலிய தோஷங்கள் பிரஸங்கமாவதில்லை - நித்ய முக்த ஸ்வரூபமாக விருப்பதே அதன் காரணமாகும் - யாதொரு தடையும் பிருஹ்மத்திற்கு (ஞானபிரத்பந்தமோ - சக்தி பிரதிபந்தமோ இல்லை - இம்மாதிரி ஜீவனில்லை - அவனை அதனால் ஸ்ரஷ்டா வாகநாம் சொல்வதில்லை. இரண்டுக்கும் பேதம் வ்யவ ஹார தசையில் நிர்தேசமிருப்பதே - அதன் காரணமாகும். ராமானுஜர் கேள்வி கேட்கிறார் - இந்த "அதிக"த் தன்மை (வேறுபட்டது) ஓதப்படும் பிருஹ்மம் அவித்யையுடன் சம் பந்தப்பட்டுள்ளதா - இல்லையா - ஸர்வக்ஞத்துவம் ஸர்வ சக்தித்வம் பிருஹ்மத்திற்கு அவித்யையினால் யேற்படுகிறதா அவஸ்தையாகிறதா? சாரீரக சாஸ்திரம் இரண்டாம் அத்யா யம் அவித்யையினாலேற்படும் பிருஹ்ம ஜீவ பேதங்களைச் சொல்லாது). (அத்வைதியின் சமாதானம்-ஜீவன் ஸம்சரிப்ப தும்,பிருஹ்மத்துக்கு ஸ்ருஷ்டுருத்வமும் விலகினதாகவாகின் றது - பொய்யான அக்ஞானத்தால் தோற்றத்தை அடைந்த பேதவ்யவஹாரம் ஸம்யக் ஞானத்தினால் பாதிதமாகிறது - அந்த நிலையில் ஸ்ருஷ்டி எங்கிருந்து உண்டாகப் போகிறது? உபாதியின் வசமடைந்த பிராந்தியே ஹிதத்தைச் செய் யாமை முதலிய லக்ஷணங்கள் வாய்ந்த ஸம்சாரமாகிறதே ஒழிய - உண்மை நிலையில இல்லை, தோற்றமே எனக் கருத்து).

இப்படிக் கருத்துக் கொண்ட அத்வைதிகளுக்கு எல்லாம் அஸங்கதம் (பொருந்தாது). ஏனெனில் பிருஹ்மத் திற்கு அந்த அவஸ்தையில் (சூக்ஷ்ம அவஸ்தையில்) கல் பிதம்; உண்மையில் ஸர்வக்ஞத்வம், ஸர்வேஸ்வரத்வம், ஸமஸ்த காரணத்வம், ஸர்வாத்மத்வம், ஸர்வ நியந்திருத்வம் இத்யாதி யேற்படுவதில்லை. அந்த ரூபத்திலே - பிருஹ்ம ஜீவபேதம் சுருதிகளாலே ஓதப்படுகிறது - அதாவது நித்ய சுத்த பிருஹ்மத்திற்கு ஹேயகுணரஹிதத்வம் ஓதப்படு வதால் பிருஹ்மம் நிர்தோஷ கல்யாணகுணாகரம். அந்த அவஸ்தையில் ஜீவபேதம் இருக்கிறது - ஸர்வ முக்தி இல்லை

என்று சொல்லப்படுமாகில், அதுவும் நிரஸிக்கப்படுகிறது. न च அவித்யா என்பதால். அதனால் முமுக்ஷுவுக்கு ஜிக்ஞாஸ்யத்வம் யேற்படாது - முமுக்ஷு ஜீவனைவிட வேறானதாக வில்லாதிருப்பதால் - அயுக்தமாகிறது. இதற்குப் பரிஹார மாகவ்யவஹார தசையில் எல்லாதோஷங்களும் யேற்படு கின்றன என்பதும் தவறு. ஐகாத்ம்யவாதத்தில் ஸர்வதுக்க ஆஸ்ரயத்வம் அவர் ஜனீயம்.) பிரத்யாகாத்மாவினோடு, பேதம் (பிருஹ்மத்திற்கு) சுருதியினால் சொல்லப்பட்டது - இது எல்லாம் அவித்யா பரிகல்பிதம். (என்று நீ நினைக் கிறாய்)

நாம்சொல்வது)அவித்யையினால் பரிகல்பிதமில்லை. அவ்வித மான அவித்யையின் அவஸ்தையில் சூக்திக்கும் (கிளிஞ்சல்) வெள்ளிக்கும் உள்ள பேதம் - பரஸ்பரம் பேதம்தான் என்று சூத்ரக்காரரே சொல்கிறார் - अधिकं तु भेदनिर्देशात् (निर्देशात्)-பேதம் சுருதிகளாலே காட்டப்படுவதாலே - ; (பேதம் இரண்டுக்கும் பேத சுருதிகளாலே ஒப்புக் கொள்ளப்படுவதாலே); இங்கே பேதம் சுக்திரஜதம் இத்யாதிகளுக்குள்ள பேதமாகும் (அவித்யா கல்பிதமான பிருஹ்மத்திற்கும் ஜீவனுக்கும்). அவித்யா தசையில்தான் இருக்கும் அந்த பேதம். ஜிக்ஞா ஸாதிகரணத்தில் பிருஹ்ம ஜிக்ஞாஸ கர்த்தவ்யம் செய்ய வேண்டியது ஜிக்ஞாஸத்தினால் - பிருஹ்மமே வேதாந்த வேத்யத்வம் அறியப்படவேண்டியது) என்று ஜகத்ஜன்மாதி காரணத்தின் பொருள்-இதற்கு ஸ்மிருதி-ந்யாயவிரோத பரி ஹாரம் யேற்படுகிறது - அதனால் இந்த அபிப்ராயத்திற்கு விரோதம் பரிஹரிக்கப்படுவதால் விரோதம் இல்லையென்று ஆகிறது - (சரியானதாகும் இந்த அபிப்ராயம் என்பதாகும்)• இதனால் அதிகரணத்தின் பிரதான சங்கைக்குப் பரிஹாரம் இல்லாதபடியால், அதனால் அந்த சங்கை யேற்படாது என்பது அயுக்தமே. ஆகவே இந்த அதிகரணத்தில் பேத சுருதிகளின் விஷயம் - முக்யமான படியால - அவை ஆதரிக் கப்படவேண்டியது என்பது ஸ்தாபிதம்).

ஸ்ரீ-பா. (சா.மீ 2-1-8) अपीतौ तद्वत्प्रसङ्गादसमञ्जसं - (பிரளயத்தில் (உலகைப்போலவே) பரமாத்மாவுக்கும் விகாரமடைதல்

முதலான தோஷங்கள் யேற்படுவதால், வேதாந்த வாக்யங்கள் பொருந்தமாட்டா; न तु दृष्टान्तभावात् अपीतौ (2-1-9) பிருஹ்மத்தினிடம் உலகத்தின் தோஷங்கள் யேற்படாது. இதற்கு வேதாந்த திருஷ்டாந்தங்கள் காணப்படுவதாலே). இந்த இரண்டு சூத்ரங்களாலும் முன்பு சொல்லப்பட்ட பேத சுருதிகளின் விஷயம் ஸ்தாபிதமாகும். இந்த சந்தர்ப்பத்திலே (பிரகரணத்திலே) கார்ய காரணபாவம் விலக்ஷண வஸ்துக்களுக்கும் யேற்படும். இதுவே இந்த அதிகரணத்தின் முக்ய அர்த்தமுமாகும். ஆகவே இந்த அதிகரணத்திற்கும் விலக்ஷணத்வாதி கரணத்திற்கும் சம்பந்தம் யேற்படும். அப்படியானல் அபேத ஸ்ருதி வ்யர்த்தமா - என்கிற ஆட்சேபத்திற்கு முந்திச் சொன்ன अपीतौ - नतु த்ருஷ்டாந்த பாவாத் - என்பவை பரிஹரிக்கிறது. (ஆரம்பணாதி கரணத்திலும் சொல்லப்பட்டதும் சரியாகும்) அதாவது ஜீவர்கள் பின்னமாவதால் எப்படி கார்யம் ஆகிறது; அதுஎப்படி பிருஹ்மத்துடன் ஒற்றுமை(அநன்யத்வம்) ஏற்படும் ? அதேபடி ஏக விக்ஞானேன ஸர்வவிக்ஞான நிர்வாஹம் - என்று ஆட்சேபம் சொல்லப்படுமாகில் - எல்லாம் ஆத்மாதி கரணத்திலும் அம்சாதி கரணத்திலும் அறியப்பட வேண்டியதாகும்- விலக்ஷணத்வாதி கரணத்தில் ஜட விஷயத்திலே சொல்லப்பட்ட நியாயத்தினல் - சரீர ஆத்ம பாவத்தினல் எப்படி சரியாகுமோ - அதேபோல ஜீவ விஷயத்திலும் சரீர ஆத்மபாவத்தினல் சரியாகும் என்பதே இதன் அர்த்தம். துன்பம் நிறைந்த ஜீவன் பிருஹ்மமாக ஆகமுடியாது. முக்தன் விஷயத்திலும் இதேபடிதான். ஆயினும் ஸாமாநாதி கரணத்தினல் तत्त्वमसि வாக்யத்தில் ஒரே வேற்றுமையில் இரண்டும் ஒன்று என்று உரைப்பது ஸ்வரூபபேதம் இருந்தாலும் - சரீர ஆத்மபாவத்தால் காரிய காரண ஐக்யம் ஒன்று என்று சொல்வது சரியாகும். வேத சுருதியும் பொருந்தும்-ஆகையால் ஸ்ரீமந்நாரணன் நிமித்த காரணமாக ஆவதில் எக்குறையுமில்லை. (பேத சுருதிகளால் நிமித்த காரணத்வம் ஸ்தாபிதம்).

## உபஸம்ஹாரதர்ஸநாதி கரணம் (2-1-8)

उपसंहारदर्शनान्नेति चेन्न क्षीरवद्धि (2-1-24)

உபஸம்ஹாரதர்ஸந்நந்நேதி சேந்ந க்ஷீரவத்தி (2-1-24)

உபஸம்ஹாரதர்ஸநாத் - உலகில் காரியப் பொருள்களை உண்டாக்கும் போது உபகரணங்களை உதவியாகக் கொள்வதை நாம் காண்கிறோம் - ந — அத்தகைய உபகரணங்கள் அற்ற பரம் பொருள் காரணமாக மாட்டாது. இதி சேத் என்றால் ந - இந்த ஆட்சேபம் பொருந்தாது - க்ஷீரவத் பால் உபகரணங்களின் உதவியின்மையால் தயிராகுமிடத்தில் போல் (உபகரணமற்ற பிருஹ்மமும் காரணமாகலாம்) - ஹி - இது உலகில் பிரஸித்தம்.

இந்த அதிகரணத்தில் பகவான் ஸங்கல்பத்தாலே ஸ்ருஷ்டிக்கிறான் என்பது பொருந்தாது - ஸங்கல்பத்தாலே மட்டும் ஸ்ருஷ்டிப்பது - சரியில்லை) - என்கிற ஆக்ஷேபம் தள்ளப்படுகிறது. இதுவும் பிருஹ்ம நிமித்த ஸஹகாரி காரணத்திற்கு ஆட்சேபம். அது தள்ளப்படுகிறது. பிருஹ்மத்திற்கு உபகரணமில்லாதபடியால் நிமித்த உபாதான காரணம் யேற்படாது என்பது நிரஸனம்.

மேலான பரபிருஹ்மத்திற்கு ஸர்வக்ஞத்வம் - ஸத்ய ஸங்கல்பத்வம் - ஓதப்படுவதாலேயும் - அந்த பிருஹ்மமே ஸ்தூல சூக்ஷ்ம - அவஸ்தைகள் இரண்டிலும் - ஸர்வசேதன அசேதனவஸ்துக்களைச் சரீரமாகக் கொள்வதாலே - ஸர்வ பிரகாரத்வேந - அதேமாதிரி பிருஹ்மம் ஸர்வ ஆத்மவத்தினால் ஸகலேதர விலக்ஷணமாக விருப்பதாலும் (ஸ்வரூப பேதம் ஸித்திப்பதாலும்) - இவை எல்லாம் அவிருத்தம் இதி, விரோதம் ஒன்றுமில்லை என்பது ஸ்தாபிதம். இங்கே பரஸ்ய பிருஹ்மம் ஸத்ய ஸங்கல்பம் செய்வதால் (ஸஹகாரி காரணம என்பதற்கு) - எப்படி தன் சங்கல்பத்வாரா விசித்திர ஜகத்ஸ்ருஷ்டியோகம் யேற்படக்கூடும் என்பதற்கு யாதொரு விரோதமில்லை என்பது ஸ்தாபிதம் (அதாவது ஸஹகாரிகாரணம் நிமித்த காரணத்வம் கொண்ட சேதன

ஞல் ஏற்படுறது - அதுபோல ஸ்ருஷ்டி ஆரம்பத்தில் உப கரணங்கள் ஒன்றுமில்லாத படியால் பிருஹ்மம் நிமித்தமும் உபாதானமும் - இரண்டும் ஒன்று சேர்ந்து ஒரேவிடத்தில் இருக்கலாம் என்பதற்குள்ள ஆட்சேபம் நிராகரிக்கப்படு கிறது). ஸர்வாத்மத்வம் - எல்லாம் ஒன்று - ஸர்வ அநன்ய த்வம் (வேறில்லை) என்பதாகும்.

(நீ சொல்வது சரியில்லை என்று ஆக்ஷேபிக்கிறன் பூர்வ பக்ஷி) ननु च; பரிமித (அளவு கொண்ட - பரிச்சின்ன) சக்தி கொண்டவர்களுக்கே - ஒருவஸ்துவை உண்டாக்குவதில் ஸஹகாரியாக பல உபகரணங்களின் சேர்க்கை தேவைப் படும் என்பது லோகத்தில் காணப்படும் உண்மை. ஆனால் பிருஹ்மமோ ஸர்வசக்திகளுக்கும் இருப்பிடம் - காரக விஷ யத்தில் ஸஹகாரிகாரணத்வம் - உ ப க ர ண ங் க ளி ன் றி (அபேக்ஷையின்றி-) ஜகத்காரணத்வம் ஆகமுடியாது - இதனுல் யேற்படும் விரோதத்திற்கு எப்படி பரிகாரம்? அதற்கு நாம் பதில் சொல்வோம்-லோகத்தில் நாம் காண்பது அந்த அந்தகாரியங்களுக்கு உற்பத்தி செய்யும் சக்தி ஒருவ னுக்கு யேற்பட்டாலும் - அந்த காரகனுக்கு சில உபகரணங் கள் அபேக்ஷிக்கப்படும் - (குயவனுக்கு சக்ரம்-தண்ணீர் தடிவேண்டும்; அதேமாதிரி நெசவுத் தொழிலாளிக்கும் மற்ற உபகரணங்களும் தேவைப்படும்). அதுமாதிரி ஸர்வ சக்தியுக்த பரபிருஹ்மத்திற்கும் அந்த அந்த வஸ்துக்களை ஸ்ருஷ்டிக்கும்போது உபகரணங்கள் இல்லாமலிருப்பது அப்படி இல்லாதபடி ஸ்ருஷ்டிப்பது யேற்படாது - இவ்விதம் சொல்லப்படுமாகில், அந்த சங்கையை நாம் நிராஹரிக் கிறோம் - பானை - துணி இவைகளுக்கு நிமித்த காரணமாக விருக்கும் குயவன் - நெசவன் - அவர்களுக்கு காரிய ஸாமர்த்தியம் ஸத்யமாயினும் - ஏதாவது உபகரணங்களும் கூட தேவைப்படும் - அதன் உதவியினுல் காரிய உற்பத்தி உண்டாகிறது என்பது காணப்படுகிறது. இதுதான் வித்யாஸம் உபகரணமின்றி உற்பத்தி செய்வதில்லை. அஸா மர்த்தியகாரகர்கள் உபகரணங்கள் இருந்தும் உற்பத்தி செய்ய முடிகிறதில்லை.

மேலும் பிருஹ்மம் ஸர்வசக்தி கொண்டிருப்பினும் ஸர்வ பொருள்களையும் உற்பத்தி செய்ய சக்தி கொண்டது. அதுவும் யாதொரு உபகரணமும் தேவையில்லாமலே செய்கிறது என்பதும் கிடைக்கப்படாதது. ஸ்ருஷ்டிக்கு முன்பு பிருஹ்மம் ஒன்றுதான் இருந்தது. அதற்கு உதவி செய்வதற்கு ஒன்றுமே இல்லை என்பதும் ஸஹகாரிகாரணமின்றி இல்லை என்பதும் சுருதி ஸித்தம். சா. உ. 6-2-1 - **सदेव सोम्येदमग्र** आसीत् (ஸத் ஒன்று தான் முதன் முதலில் இருந்தது); மஹோ - 1-1 - **एको हवै नारायण आसीत्** நாராயணன் ஒருவரே யிருந்தார் - என்பதால் தெளிவுறும். ஆகையால் ஸ்ருஷ்டி உபகரணங்களின்றி - அஸஹாயத்வம் கொள்வதால் யேற்படாது என்பது சரியாகும். இவ்விதம் சந்தேகம் ஏற்படுமாகில்—அது தவருகும் - **उपसंहारदर्शनान्नेति चेत्** சூத்ரக்காரரே இது பொருந்தாது **न** என்பதால் சொல்கிருர்.

எப்படி பரிஹரிக்கிருர் **न क्षीरवत्** - பால் உபகரணங்கள் இல்லாமல் தயிராகிறது. (மோர் விடுவது சுவைக்காகவே). அதுமாதிரி உபகரணமற்ற பிருஹ்மம் காரணமாகலாம் - ஹி-இது பிரஸித்தம். எல்லா உண்டாச்கப்பட்ட வஸ்துக்களுக்கும் உபகரணங்கள் அவசியம் என்பதில்லை. எப்படி பாலிலிருந்து தயிர் உண்டாகிறது. அவைகளுக்கு உபகரணம் தேவையில்லை' அதேபடி பிருஹ்மம் ஸ்வயமாகவே ஸர்வ வஸ்துக்களையும் உண்டாக்க சக்தி பெற்றது. அதனுல் எல்லா வஸ்துக்களுக்கும் அதுவே காரணம். ஹி - என்பது லோகபிரஸித்தம், ஆட்சேபத்தின் துர்பலத்தைக் குறிப்பது. நாம் பாலுக்கு மோர் விட்டு உறையாக்குவது ருசிக்கே - தயிர் மாறுதலுக்கு அது அவசியமில்லை. பாலைக்காய்ச்சி- ஆறினதும் உறை குத்துவது - என்பதற்கு இது தவிர அர்த்தம் வேறில்லை. உறை குத்தாத போனுல் திரிந்து கட்டியாகி விடுகிறது. அதனுல் உபகரணங்கள் தேவையில்லை என்பது தெளிவு. சீக்கிரம் தயிராக மாறுவதற்கும் ரஸவிசேஷார்த்தம் மோர் சிறிதளவு சேர்க்கப்படுகிறது

## சூத்ரம் - देवादिवदपि लोके (2-1-25)
## தேவாதி வதபி லோகே (2-1-25)

லோகே - லோகத்தில் தேவாதிவத் அபி - தேவர் முதலானோர் ஸங்கல்ப மாத்திரத்தினுல் -ஸ்ருஷ்டிக்கிருர்கள் எனச் சொல்லப்படுகிறது - (சாஸ்திரத்திலிருந்தும் அறியப்படுகிறது). (அதுபோல பிருஹ்மத்தினுல் முடியும் - சங்கல்பத்தால் உபகரணங்கள் உதவியின்றி).

எப்படி தேவாதிகள் அவர்களைப்போல மற்றவர்களும் ஸங்கல்பமாத்திரத்தால் ஸ்ருஷ்டி செய்கிருர்கள் - தங்கள் இஷ்டப்படி-அதுபோல புருஷோத்தமரான ஸ்ரீமந்நாராயணன் ஸ்வசங்கல்பத்தால் ஸம்பூர்ண ஜகத்தை ஸ்ருஷ்டிக்கிருன். தேவதைகளுக்கு இத்தகைய சக்தி வேதங்களிலிருந்து அறியப்படுவதாகிறது. - அந்த வேதங்களின் உதவியினுல் அதே திருஷ்டாந்த உதவியினுல் பிருஹ்மத்திற்கும் அத்தகைய சக்தி உண்டு என அறிகிறேம் - वेदावगतशक्तेः सुखग्रहणायेति प्रतिपत्तव्यम्.

எப்படி சாஸ்திரம் தெரிவிக்கிறது என்ருல் தேவதாநாம் பரமம் ச தைவதம் (தேவதைகளுக்கும் மேலான தேவதையை); புருஷோத்தமன் (ஸ உத்தம புருஷ:); नारायणात् பிருஹ்மா ஜாயதே; नारायणात् ருத்ரோ ஜாயதே - பால்தயிராக பரிணமிக்குமிடம் பிருஹ்மம் உபாதான காரணமாவதற்கும் தேவர்கள் ஸங்கல்பமாத்ரத்தால் ஸ்ருஷ்டிக்குமிடம் நிமித்த காரணமாவதற்கும் - திருஷ்டாந்தம் காட்டப்பட்டதாகும்.

## க்ருத்ஸ்நபிரஸக்தியதிகரணம் (2-1-9)
## பூ. சூத். कृत्स्नप्रसक्तिर्निरवयवत्वशब्दकोपो वा (2-1-26)
## கிருத்ஸ்நப்ரஸக்திர் நிரவயத்வஸப்தகோபோ வா (2-1-26)

பிருஹ்மம் உபாதான காரணம் என்று ஒப்புக் கொண்டால் - க்ருத்ஸ்ந பிரஸக்தி: அந்த பிருஹ்மம் நிரவயவமாகயிருக்கையால், பிருஹ்மமே முழுதும் காரியப் பொருளாக

பரிணமிக்கவேண்டிவரும். இந்த தோஷத்தைத் தவிர்க்க- அதை (பிருஹ்மத்தை) அவயவமுள்ளது என்று ஒப்புக் கொண்டால், நிரவயவத்வ சப்த கோப:வா - பிருஹ்மம் அவ யவமற்றது என்று கூறும் வேதவாக்யங்கள் பாதிக்கப் பட்டனவையாக ஆகும்.

**விளக்கம்:** — (பிருஹ்மம் உபாதான - நிமித்த காரணம் என்பதற்கு ஆட்சேபம் மீண்டும் எழுப்பப்படுகிறது. துணி நூலால் யேற்பட்டகாரியம் என்ருல் - தந்துநாப: (நூல்), தான் நிரவயவமாயினும் தன் சரீரத்தினுல் நானுதந்துவே துணியாக நெய்யப்படுகிறது. அதுபோல பிருஹ்மத்தைவிட வேருகஜகத் இல்லாதபடியால் सदेव என்று ஆரம்பம்) சா. உ. सदेव सोम्येदमग्र आसीत् ஸோம்ய, ஸத் ஒன்றுதான் முதன் முதலில் ஒன்ருகவே யிருந்தது. இந்த உலகம் முதலில் ஸத்தாக விருந்தது).

யஜு. அ. 2. 8 इदं वा अग्रे नैव किञ्चनासीत् - வாஸ்தவமாக, முதன் முதலில் இது ஒன்றுமாக இல்லை - ஐத். 2. 1. 1 आत्मा वा इदमेक एवाग्र आसीत् - வாஸ்தவமாக ஆத்மா - இந்த ஒன்றுதான் முதன் முதலில் இருந்தது - என்கிற வாக்யங் களால் காரண அவஸ்தையில் பிருஹ்மம் ஏகமேவ (ஒன்ரு கவே) விருந்தது - நிரவயவமாக (அவயவமற்றதாக) விருந் தது. காரண அவஸ்தையில் நிரஸ்த சித் அசித் விபாகமின்றி ஒன்ருகவே - நிரவயவமாக - விருந்தது என்பது சரியாகும். அவிபாகம் நிலையில் ஏகம் நிரவயவம் பிருஹ்மம் என்பது சரி. சா. உ. 6. 2. 3 - बहु स्याम् -நான் பலவாக ஆவேன் என்று சங்கல்பித்து-தானே ஆகாசம் வாயு முதலிய விபாகம் யேற் படுத்தி विभागविभक्तः - என்று சொல்லும்படி ஆகி - அப்போது ஜீவாத்மாவாகிற சதுர்முக பிருஹ்மா (வ்யஷ்டிசிருஷ்டியின் முதல் புருஷன்) கொண்டு ஸ்தம்பம் (புல் வரை) பரியந்தம் - க்ஷேத்ரக்ஞ விபாகம் - ஆயிற்று என்று சொல்வது சரியா கும். இவ்விதம் இருப்பதால், அந்த பரபிருஹ்மம் முழு வதுமே காரியமாக ஆவதில் உபயோகப்பட்டது என்று ஒப்புக் கொள்ளவேண்டியது.

(இங்கே ஆட்சேபம் யாதெனில் – முதலில் சாங்கியன் வருகிருன் - அவன் அபிப்ராயம் யாதவ பிரகாசரின் அபிப்ராயம் போல விருக்கிறது - இங்கே சுருதி காரணப் பொருளை ஸத் என்றும் ஆத்மந் என்றும் - பிருஹ்மத்தை ஏகமேவ என்று சொல்லுகிறது - அத்வைதியின்படி பிருஹ்மம் ஒன்று தான் வேறு ஒன்றுமில்லை (குணமாகவோ வேறு வஸ்து எதுவுமில்லை-ஏகமேவ.) ராமாநுஜர் இதை சூக்ஷ்ம நிலை-அவிபாக அவஸ்தை என்கிருர். சாங்கியனின் அபிப்ராயம் ஏக என்பதற்கு - நிரவயவம் (அவயவமற்றது) என்கிருன்.)

**ஸ்ரீபாஷ்யம்:—**

மேலும் சித் அம்சம் க்ஷேத்ரக்ஞன் என்று சொல்லும்படி விபாகம் செய்யப்பட்டது; அசித் அம்சம் ஆகாசம் முதலிய அசேதனப் பொருள்களாக விபாகம் செய்யப்பட்டது என்று சொலலப்படலாம் - அதனுல் சா. உ. 6. 2. 1 - सदेव सोम्येदमग्र आसीत् एकमेवाद्वितीयम् ब्रह्मएकमेव - आत्मैक एव - பிருஹ்மம் ஒன்ருகவே இரட்டையில்லாதபடிவிருந்தது-பிருஹ்மம் ஒன்ருகவே யிருந்தது (பிரு. உ. 1. 4. 11); ஆத்மா ஒன்றுதான் - ஒன்ருகவே முதன் முதலில் இருந்தது (பிரு. உ. 1. 4. 17) இவைகளால் காரணப் பொருளாகிற பிருஹ்மம் நிரவயவமாக விருந்தது - என்பதற்கு कुप्येयुः - பிருஹ்மம் நிரவயவமாக விருப்பது - இந்த வாக்யங்கள் பாதிதமாகும் (எப்போது அவயவமுள்ளது என்று ஒப்புக் கொண்டால்), (ஏகம் நிரவயவமிதி என்று சுருதி சொல்கிறபடியால்). வேதாந்தியினுல் ஒப்புக்கொள்ளப்படுகிறது-காரணதசையில் சூக்ஷ்மசித் அசித் வஸ்துக்கள் பிருஹ்மத்திற்கு சரீரமாக விருந்தது-பிருஹ்மம் காரண வஸ்துவாகவிருந்தது – காரியதசையில் ஸ்தூலசித் அசித் வஸ்துக்கள் பிருஹ்மத்துக்கு சரீரமாக விருந்தன - அதனுல் அவை பிருஹ்மத்தின் காரியமாகிறது-அவ்விதமாயினும் - சரீரத்தினுடைய தோஷங்கள் - காரியமாகிறபடியாலே - அதாவது சரீரமுள்ள பிருஹ்மத்தின் ஒரு அம்சம் காரியமாகிறபடியாலே-பிருஹ்மத்தின் தோஷங்கள் காரியத்திலும் இருக்கும் - என ஒப்புக்கொள்ளவேண்டியது (இது பூர்வபக்ஷம்)

(ஆனால் ராமானுஜர் வேறுவிதமாக எண்ணுகிறார் சரீரம் ஆத்மா என்கிற சம்பந்தம் ஜகத்திற்கும் பிருஹ்மத்திற்கும் இருக்கிறது - ஆயினும் தோஷங்கள் பிருஹ்மத்திற்கு ஒட்டாது. இங்கேவாதம்-பிருஹ்மத்தின் ஒரு அம்சமே ஜகத்தாக பரிணாமமடைகிறது- அதனால் பிருஹ்மம் விகாரத்திற்கு ஆளாகும். ஏக என்பதால் நாமருப விபாகரஹிதம் - என்று ராமானுஜர் கருதுகிறார். பிருஹ்மம் நிஷ்களம் - நிஷ்கிரியம் (பரம்பொருள் அவயவமற்றது-கிரியையற்றது- என்பதற்கு-) பிருஹ்மத்தின் அவயவங்களை ஒப்புக்கொண்டு- ஒருபகுதி காரண நிலையில் இருப்பதாயும் - மற்றொரு பகுதி பல பாகங்களாகப் பிரிந்தது காரியப் பொருள்களாக ஆகிறது என ஒப்புக்கொண்டால் - மேற்கூறப்பட்ட நிஷ்கிரியம் நிஷ்களம் என்பதோடு விரோதம் யேற்படும். அதனால் சூத்ரத்தில் பிருஹ்மத்தை அவயவமுள்ளது என்று ஒப்புக்கொண்டு இப்படி ஒருபகுதி மாறுகிறது என்றால் பிருஹ்மம் அவயவமற்றது-கிரியையற்றது என்கிற சுருதிக்கு பாதிதம் யேற்படும்). பிருஹ்மம் நிரவயவமானபடியால் - பஹுபவனம் (ஸ்ருஷ்டி) (பலவாக ஆவது) யேற்படாது; அதனால் காரணதசையில் ஒருபகுதி இருப்பதாகவும்-இன்னொரு பகுதி பலவிதமாக மாறுகிறது என்றால் - அதுவும் தவறாகும். ஆகவே எல்லாம் அஸம்ஞ்ஜஸம்-ஆகவே பிருஹ்ம காரணத்வம் ஸ்தாபிக்கப்படவில்லை-பிருஹ்மம் ஜகத்தின் காரணமாக மாட்டாது.

**விளக்கம்:—**

(பூர்வபக்ஷம் மேல் சொல்லப்பட்டது - சித்தாந்தி இந்த ஆட்சேபத்திற்கு பதில் சொல்கிறார் அடுத்த சூத்ரத்தில் - இங்கு சொல்லப்படுவது - இரண்டுவிதமாக , முதலாக வேத வாக்யங்களுக்குள்ளே பிருஹ்ம ஸ்வரூபம் அவயவமுள்ளது எனின், நிரவயவம்-என்பது பாதிதம் ஆகும்-பிருஹ்மம் நிரவயவம்என சுருதி கூறுகிறது. இரண்டாவது சூக்ஷ்மசித் அசித் வஸ்துக்கள் ஸ்ருஷ்டியிலே ஸ்தூலசித் அசித் வஸ்துக்களாக மாறுகிறபடியாலே - பிருஹ்மமே சரீரத்வாரா ஆகிறபடியால் விசேஷணமான அசேதனாம்சம் அவயவமுடையதாக

இருப்பதைக்கொண்டு, காரிய காரணபாவத்தை நிர்வஹித்து விடலாம் என்றால் - அப்படிக்கொண்டாலும், சரீரியான பிருஹ்மம் ஒரு சில அம்சப்பொருள்களுக்கே சரீரியாகயிருக்க முடியுமேயொழிய - பல பொருள்களுக்கு சரீரியாகவிருக்க முடியாது என்னும் தோஷம் வந்தே தீரும். ஆகையால் அவயவமற்ற பிருஹ்மத்தை பல பொருள்களுக்கு உபாதான காரணமாகக் கொள்ள முடியாது. (இதற்குப் பதிலாக அடுத்த சூத்ரம் ஸித்தாந்த சூத்ரமாகும்).

ஸி.சூ. श्रुतेस्तु शब्दमूलत्वात् (2-1-27)

ஸ்ருதேஸ்து ஸப்தமூலத்வாத் (2-1-27)

ஸ்ருதே:து - சுருதியில் கூறியிருக்கிறபடியால் (நிர்விகாரம் பிருஹ்மம்); சப்தமூலத்வாத் - பிருஹ்மத்தை அறிவதற்கு சாஸ்திரம் யேகயேவ பிரமாணம் ஆவதால் - பிருஹ்மம் உலகிற்காணும் பொருள்களைவிட வேறுபட்டது - அதற்கு ஜகத்காரணமாவதில் தோஷமில்லை.

து சப்தம் மேல் சொல்லப்பட்ட பரிணும தோஷத்தை நீக்குகிறது. பிருஹ்மம் நிரவயவம்தான். பரிணமம் சரீர த்வாரயேற்படுவதால் அது நிர்விகாரம். பஹுரூபத்வம் ஸ்வரூபத்தினுல் ஏற்பட்டாலும் - நிர்விகாரமாக இருந்து கொண்டே ஜகத்காரணமாகிறது என்று நிர்துஷ்ட பிரமாண மான சுருதி சொல்வதால் - அதை ஒப்புக்கொள்ள வேண் டியது. "நெருப்பால் நனைக்க வேண்டும்" என்று கூறுவ தற்கு பொருந்தாத அர்த்தத்தைச் சொல்லாது சுருதி. நிர் விகாரமாக இருந்துகொண்டு - பிருஹ்மமே உபாதானமாக உலகிற்கு ஆகிறது என்பது பொருந்தாத பேச்சு. குடம் முதலியவை பிரத்யக்ஷத்தாலோ அனுமானத்தாலோ அறி யப் படலாம். பிருஹ்மம் அப்படியில்லை. சாஸ்திரம்தான் பிரமாணம். அந்த சாஸ்திரம் போதிப்பது - நிர்விகாரம் - உபாதான காரணமாகவும் இருக்கவல்லது, அதே சமயம் விசித்திர சக்தி கொண்டது. ஆகவே சுருதியின் அபிப்ராயம் ஏற்கத் தகுந்தது-(ஸித்தாந்தியின் அபிப்ராயம்). அதனுல்

மேற்படி சொல்வதால் பொருந்தாத பேச்சு (அஸமஞ்ஜஸ்யம்) என்று இல்லை. எப்படி ஸூத்ர: சுருதி நிர்விகாரம் என்றும் நிரவயவம் என்றும் சொல்வதால் ஒப்புக்கொள்ள வேண்டியது. நிரவயவமாயினும் விசித்திர ஸ்ருஷ்டியை பிருஹ்மம் உண்டாக்குகிறது. சப்தைக பிரமாணம் என்பதால் எப்படி சுருதி ஓதுகிறதோ - அது ஒப்புக்கொள்ளப்பட வேண்டும் என்று அர்த்தம் (சப்த மூலத்வாத் என்பதற்கு).

மேலும் சுருதியில் अग्निना सिञ्चेदिवत् (தண்ணீரை) அக்னியினுல் தெளிக்கப்பட வேண்டும் என்று கூறுவதுபோல இங்கே பொருந்தாத பேச்சை சுருதி சொல்லாது. அதாவது பிருஹ்மம் நிர்விகாரமாகதான் இருந்து கொண்டு-உலகிற்கு உபாதானமாகவு மாகிறது - என்பது இப்படி பொருந்தாத பேச்சல்லவோ? அதனுல் சூத்ரக்காரரே பதில் அளிக்கிருர் - சப்த மூலத்வாத் - பிருஹ்ம விஷயத்திலே சப்தயேகயேவ பிரமாணம். (உதாரணமாக) வேதம் சொல்கிறது - பாவ அபாவமாக - பல விஷயங்கள் சொல்லப்படுகின்றன. தர்க்க விரோதமாக அக்ஞன், ஸர்வக்ஞன், நித்யத்வ-அநித்யத்வ, அணு மஹாந் துக்கி ஆனந்த - இத்யாதிஹேய அஹேய வஸ்துக்கள் சொல்லப்படுவதற்குக் காரணம் - ஜீவனுடைய தோஷங்கள் பரமாத்மாவிடம் சேராது - ஸாமாந்ய திருஷ்டியினுல் லோக பிரமாணங்களால் பிரத்யக்ஷ அனுமாநாதிகளால் பிருஹ்மத்தைப் பார்க்கப்படாது. ஸஜாதீய தோஷங்கள், விஜாதீய தோஷங்கள் இவை பிருஹ்மத்தினிடம் காணப்படமாட்டா.

இதனுல் பிருஹ்மத்திற்கு வஸ்து விசேஷத்வம் சொல்லப்படுகிறது. லிங்கம் இருவிதம்-ஸாமாந்யம், விசேஷம் என அறியப்பட வேண்டியது. (சாஸ்திர யோநித்வாதிகரணத்தின் விஷயம் இங்கே பேசப்படுகிறது.) சப்தைக பிரமாணத்தினுல் பிருஹ்மம் ஸகலேதர விலக்ஷணவஸ்து-ஸஜாதீய விஜாதீய விலக்ஷணத்வம் பேசப்படுவதால் விசித்திர சக்தி யோகத்துடன் கூடி இருப்பதால் ஒன்றும் விரோதமில்லை. ஆகவே ஸாமாந்ய திருஷ்டியினுல் அமையப்பெறும் ஸாதனம்

தூஷணம்-அதற்கு அர்ஹதையும் இல்லை-பிருஹ்மம் விசேஷ வஸ்துவாக இருப்பதாலே (விலக்ஷணத்வாத்). ஆகையால் ஸாவயவத்வம் பிருஹ்மத்திற்கு இல்லாதபடியால் நிரவய வத்வம் என்பதற்கு விரோதமும் இல்லாதபடி ஆகிறது. பிருஹ்மம் நிரவயவம்-பரிணமம் சரீரத்வாரா. சரீரத்தின் தோஷங்கள் ஆத்மாவாகிற பிருஹ்மத்திற்கு சேராது. சுருதி அவ்விதம் சொல்வதால் ஒப்புக்கொள்ள வேண்டியது. (ஆகவே பிருஹ்மம் காரணமாகவும் காரியமாகவும் இருக் கிறது. இது சாங்கியனுக்குப் பதிலாகும்)

ஸ்ரீ. சூ. आत्मनि चैवं विचित्राश्च हि (2-1-28)

ஆத்மநி சைவம் விசித்திரா ஸ்சஹி (2-1-28)

ஆத்மநிச-ஜீவாத்மாவிடத்திலும் (அசேதனப்பொருள் களின் ஸ்வபாவம் ஏற்படாமலிருக்கும் விஷயத்திலும்)-ஏவம் இவ்வண்ணமேயுள்ளது-விசித்ரா: சஹி-அசேதனப் பொருள் களினுள்ளும் ஒன்றின் தன்மை மற்றொன்றில் இல்லாதபடி தன்மைகள் வேறாகவும் விசித்திரமாக வன்றோ உள்ளன.

(இங்கே உலகில் காணப்படும் அசேதனப் பொருள் களின் தன்மைகள் - அஸ்திரம் — அல்பமாயிருக்கை-இப்படி பல தோஷங்கள் உண்டு. இவை சரீரியாகிற ஆத்மாவிடம் இருக்கவேண்டும் என்று சொல்ல முடியுமோ ? சுருதி சொல் கிறது - ஆத்மா அசேதனப் பொருளைவிட வேறானது-ஸ்வா நுபாவத்தாலும் சுருதியினாலும் அறியப்படுகிறது. உதாரண மாக நெருப்பின் உஷ்ணத்வம்-பஞ்சீகரணமான பொருள்கள் எல்லாவற்றிலும அது காணப்படவேண்டும். அம்மா திரியே நீரின் சீதளத்வம் - குளர்ச்சி. ஆகவே அந்தந்த தன்மைகள் அந்த அந்த பொருள்களுக்கே உரியவை என்று தானே பதில் கூறவேண்டும். அதுபோல பிருஹ்மமும் ஆகும். நிர்விகாரமாகவும் - உபாதான காரணமாகவும் — விசித்திர சக்தியுடன் எப்போதும் கூடியது பிருஹ்மம்-என அறியத் தகுந்தது).

**ஸ்ரீபாஷ்யம்:—**

மேலும் இம்மாதிரி ஒரு வஸ்துவின் சம்பந்தப்பட்ட தர்மம் (விசேஷணம்) இன்னொரு வஸ்துவில் ஆரோபிதம் செய்யப்பட்டால் - உதாரணமாக அசேதன வஸ்துவாகிற கடம் முதலிய வஸ்துக்களின் தர்மங்கள்-அசேதன விஜாதீய மான ஜீவர்களிடம் களங்கத்தை யேற்படுத்தக்கூடும்- ஆயினும் ஜீவனின் ஸ்வரூபம் அசேதன வஸ்துவைவிட வேறானது. இரண்டுக்கும் பாவம் ஸ்வபாவம் வேறுபட்டவை **வைசித்ரியாதிஹி** - அசேதனப் பொருள்களிலேயும் ஒன்றின் தன்மை மற்றொன்றில் இல்லாதபடி-விசித்திரமான தன்மை கள் எப்படி அக்னி - ஜலம் முதலிய வஸ்துக்கள் வேறான வையோ - அந்த அக்னிக்கு உஷ்ணமும் ஜலத்திற்கு குளிர்ச் சியும்-வேறான வஸ்து தர்மங்களாக விருக்கிறதாக பார்க்கப் படுகிறது. அதைப்போல, லோகத்திலே காணப்படும் பல விசித்திர ஆயிரக்கணக்கான சக்திகள் மேலான பரப்பிருஹ் மத்தில் இருக்கின்றன, ஆயினும் அந்த பிருஹ்மம் லோகத் காணப்படும் பொருள்களை விடத்தனியாக - விலக்ஷணமாக விருக்கிறது-இதனால் யாதொரு பொருந்தாமை ஒன்றுமில்லை.

ஆகவே - மேலே சொல்லப்பட்ட ஆட்சேபம் பகவான் பராசரரால் எழுப்பப்பட்டு - பரிஹரிக்கப்படுகிறது. **निर्गुणस्याप्रमेयस्य शुद्धस्याप्यमलात्मनः**:- ஸத்வ முதலிய குணங்களில்லாத நிர்குண பிருஹ்மத்திற்கு - அப்ரமேயன் - சுத்தம் - அமலாத் மந: (ஒருவித தோஷமுமில்லாதது) - அந்த பிருஹ்மம் **सर्गादिकर्तृत्वं ब्रह्मणोऽभ्युपगम्यते** அதற்கு உலகத்தின் ஸ்ருஷ்டி முதலியவற்றிற்கு கர்திருத்வம் யேற்படுகிறது - (இதற்கு அவரேபதில் சொல்கிறார் - ஸாமாந்ய திருஷ்டியினால் யேற் படும் ஆட்சேபத்திற்கு -

**"शक्तयः सर्व भावानामचिन्त्यज्ञान गोचराः यतोऽतो ब्रह्मण-स्तास्तु सर्गाद्या भावशक्तयः । भवन्ति तपतां श्रेष्ठ ! पाव-कस्य यथोष्णता इति ।**

(வி. பு. 1-3-1); ஸத்வாதி குணங்களற்றவனும்-தேசம் காலம் முதலான அளவற்றவனும் சரீரமற்றவனும் - புண்ய பாபங் களில் நனைக்கப்படாத பரமாத்மாவுக்கு - உலகஸ்ருஷ்டி முதலிய காரியங்கள் எப்படி ஒப்புக்கொள்ளப்படும்? (அதா வது மைத்ரேயர் பராசரரைக் கேள்வி கேட்டார் - ஸத்வாதி குணமுள்ளவர்களும் தேசகாலம் முதலான அளவுகளை உடைவர்களாய் - சரீர (அவயவமுள்ளவர்களாக) குயவன் முதலியோர் செயலில் ஈடுபட - பகவானுக்கு இத்தன்மையற் றது எப்படி பொருந்தும்? அதற்குபதிலாக நெருப்புக்கு உஷ்ண சக்தியைப் போல-ஒவ்வொரு பொருளுக்கும் அதற்க் குரிய தன்மைகள் சக்திகள் - தர்க்கத்திற்கு நிலமல்லாத வகையாக - அந்தப் பொருளைத் தெரிவிக்கும் அசாதாரண தர்மத்தாலே (பிரமாணத்தாலேயே) அறியப்படும். அப்படி யிருக்க பிருஹ்மத்திற்கு ஸர்க்காதி சக்திகள் இயற்கையா கவே உள்ளன. அதற்கு உறுப்பான சக்திகள் இத்தகை யாகவே இருக்கின்றன.

இதே பிரகாரம் சுருதிகளும் ஓதுகின்றன-யஜு. அ. 2-2-7

किं स्विद्वनं कउ स वृक्ष आसीत् यतोद्यावापृथिवीनिष्टतक्षुः । मनीषिणो मनसा पृच्छतेदु तत् यदध्यतिष्ठन् भुवनानि धारयन् । ब्रह्म वनं ब्रह्म स वृक्ष आसीत् यतो द्यवापृथिवी निष्टतक्षुः । मनीषिणो मनसा विब्रवीमि वो ब्रह्माध्यतिष्टद्-भुवनानि धारयत्

எது வனம்? எது அதன் மரம்? இவைகளிலிருந்து உண் டாக்கப்பட்ட த்யுலோகம் (ஸ்வர்க்கம்) பிருத்வீ எது? அறிவாளிகளே—உங்கள் மனத்தையே கேளுங்கள் - எந்த வஸ்துக்களை அவர் அதிஷ்டானம் செய்தார்? எவர் (அந்த பரமாத்மா) இந்த உலகங்களைத் தரித்துக்கொண்டும், தாங் கிக்கொண்டுமிருக்கிறார்? பிருஹ்மமே வனம் - பிருஹ்மமே அந்த மரம் - அவைகளிலிருந்து அவர் த்யுலோகம் - பிருத் வியை உண்டாக்கிறார். அந்த பிருஹ்மமே புவனங்களைத் தரிக்கிறார். அவரே தன்னையே (இந்த பொருள்கள் உருவ

மாகவிருக்கும் தன்மையே) தன் மனத்தினுல் அத்யசஷிக்கிருர். இதற்கு அர்த்தம்-ஸாமாங்ய திருஷ்டியினுல் ஏற்படும் ஆட்சேபம் பிருஹ்ம விஷயத்தில் ஒட்டாது. ஏனெனில் பிருஹ்மம் ஸர்வ வஸ்துவிலக்ஷணமுள்ளது - அதற்கு இம் மாதிரி ஆட்சேபங்கள் செல்லாது.

ஸ்ரீ. சூ. स्वपक्षदोषाच्च (2-1-29)

ஸ்வபக்ஷ தோஷாச்ச (2-1-29)

ஸ்வபக்ஷ தோஷாச்ச-(சாங்கியன் சொல்லும் பிரதானம் முதலானவை காரணம்.) அது உங்கள் பக்ஷத்திலும் தோஷமுள்ளதாகையால் (எங்களுக்கு இல்லை-அதனுல் பிருஹ்மமே உபாதான காரணமாகும்).

(இங்கே காட்டப்படுகிறது - எந்த தோஷம் பிருஹ்ம உபாதான காரணத்தில் பூர்வ பக்ஷியால் சொல்லப்பட்டதோ - அந்த தோஷம் சாங்கியன் பக்ஷத்திலும் வரும். பிரதானத்தை அவன் அவயவமற்றதாகவும் சொல்கிருன்; அந்த பிரகிருதி உபாதான காரணமாவதால் – முழுவதும் காரணப்பொருளாக ஆகமுடியுமேயொழியே பல காரியப் பொருள்களாக சிலவற்றிற்கு ஆகமுடியாது என்கிறதோஷம் வரும். இதே மாதிரி அவயவமற்றதான அணுவைக் காரணமாக ஒப்புக்கொள்கிறவர்களின் பக்ஷத்திலும் இந்த தோஷம் வரும். மேலும் பிரதானம், பரமாணுக்களும் உலகிற் காணும் காரியப் பொருள்களோடு ஒரேவகைப் பட்டவையாகையால் - அவற்றைக் காரணமாக ஒப்புக்கொள்கிறவர்கள் பக்ஷத்திலும் - இந்த தோஷம் தவிர்க்க முடியாது. ஆனுல் நம் பக்ஷத்தில் பிருஹ்மம் லோகவிலக்ஷணமானது. சுருதி ஏக ஏவ பிரமாணம் - லௌகிக பொருள்களைவிட வேருனது. அதனுல் தோஷம் ஸம்பவிக்காது).

**ஸ்ரீபாஷ்யம் :—** ஸ்வபக்ஷே - பிரதானம் முதலானவைகளைக் கூறும் சாங்கியன் பக்ஷம் - பரமாணுகாரணம் என்று கூறுபவர்களின் பக்ஷம் - இவர்கள் பக்ஷத்தில் லௌகிக

வஸ்துக்கள் உலகில் காணப்படும் வஸ்துக்களுக்கு வேறின்றி-இல்லாதபடியால்-உலகில் காணப்படும் தோஷங்கள் அங்கேயும் ஏற்படும்; இவர்களாலும் ஒப்புக்கொள்ளப் படவேண்டியது பிருஹ்மைவ (பிருஹ்மம் தான்) ஸகலேதர விலக்ஷண வஸ்துவாக இருப்பதால் - அதுதான் ஜகத்காரணம் என்று (ஒப்புக் கொள்ள வேண்டியது). பிரதானமும் நிரவயவம்; அதனால் நிரவயவமாக இருந்து கொண்டு மஹத் ஆதி விசித்திர ஜகத் ஆரம்ப வஸ்துக்களை எப்படி உபாதானமாக ஆக்கமுடியும்? சரி, பிரதானத்திற்கு அவயவங்களாக ஸத்வம் ரஜஸ் தமஸ் இருக்கிறதென்று சொன்னால், அப்போது விவேசனீயம் (தீர்மானிக்கப்பட வேண்டியது) பிரதானம் ஸத்வரஜஸ் தமஸ்ஸீக்களின் ஸமூஹத்தினால் (சேர்க்கையினால்) ஆக்கப்பட்டதா அல்லது பிரதானமே ஸத்வரஜஸ்தமஸ்களால் உண்டாக்க ப்பட்டதா? இரண்டாவது பக்ஷமாகில் உன்னால் சொல்லப்படுகிறதே (பிரதானம் தான் ஜகத்காரணம் என்று) என்பதற்கு விரோதம் ஏற்படும். பிரதான காரணவாதிகளால் இருபத்து நான்கு தத்வங்கள் ஒப்புக்கொள்ளப் பட்டதிற்கு விரோதமும் ஏற்படுகிறது. மேலும் இன்னொரு விரோதமும், நிரவயவமான குண ஸமூஹங்களிலிருந்து காரிய ஆரம்பம் ஏற்படுகிறது என்கிறதற்கு விரோதம் உண்டாகும். ஸமூஹ பக்ஷத்தினர்களுக்கும் - மூன்று குணங்கள் ஸமூஹமாகச் சேர்ந்து - பிரதானமாகிறது - அதுவே ஜகத்காரணம் என்றால் - இந்த குணங்கள் நிரவயவமாகவிருப்பதால் அவை ஒன்றாகக் கூடுமா? - பிரதேச (தேச) பேதத்தை விரும்பாமலே, அவைகளுக்கு ஸ்தூலமாக வஸ்துக்களை உண்டாக்குகிற சக்தி - அவைகளுக்கு உண்டாகுமா?

(இங்கு சொல்லப்படுவது - பிரகிருதிபக்ஷம், முக்குணங்கள் கொண்ட பிரதானம் - அது ஒரு பிரதேசத்தை சேர்ந்திருக்குமாகில் - அதற்கு நீளம் - அகலம் - கனபரிமாணம் இத்யாதி தேவைப்படும் — அவைகளை உடைத்ததாகில் அது அவயவமாக கொண்டதாகும். நிரவயவமாக எவ்வளவோ இருப்பினும் - அது ஸ்தூல வஸ்துக்களை தேசத்தை ஆக்ர

மிக்கும்படி ஆகமுடியாது. இந்த விஷயம் பிரு. சூத். 2-2-10 மஹத் தீர்க்காதி கரணத்திலே காணவும்).

**விளக்கம்:**—பிரதானம் நிரவயவம் - அது மஹத்தாதி தத்வங்களாகப் பரிணமிக்கிறது என்கிருன் சாங்கியன். பிரதானம் லோகவஸ்துக்களைவிட விலக்ஷணமானதன்று - பிருஹ்மத்தைப் போல. வஸ்து பரிணமிக்கிறபோது - வ்யாப்தி யேற்படும் - பிரதேசத்தை ஆக்ரமிக்கும். பரிண மிக்கும் வஸ்து ஸாவயவமாகவே உள்ளது என்பது லோக பிரஸித்தம்—பிரத்யக்ஷம் முதலியவைகளால் காணப்படுவது. ஆகவே சாங்கியன் சொல்வது-நிரவயவத்வே ந பலவாருகப் பரிணமிக்கிறது என்பது சரியில்லை.) ஸ்தூலேதி - விபுத்வ மில்லாத படி-ஸத்வாதி குணங்கள் அவைகளை உண்டாக்கும் போது-ஸ்தூலதசை யேற்படுகிறது. மஹத் போன்றவை ஸ்தூல ஸ்ருஷ்டிகளாகும். பரிணமிக்கும் போது-பரிமிதத்வம் (அளவு உள்ளதாக) யேற்படுகிறது யென்ருல், அபரிமித மாகவிருக்கும் தன்மையும் நிரவயவமாக விருப்பதும் அதனுல் பரிமிதத்வம் (அளவு பட்டிருப்பதும்) எப்படி யேற்படும்? நிரவயவமாகவும் - பரிணமிப்பதும் யேற்படாது - அஸங் கதம்).

சரி பரமாணு காரணவாதிகளின் பக்ஷத்திலும் கூட பரமாணுக்களும் நிரம்ஸ: - (நிரவயவம்) - இது முந்திச் சொல்லிய பிரகாரம் - ப்ரதேசபேதத்தை அபேக்ஷிக்காமல் (ஒரு குறிப்பிட்டவிடத்தில் அடங்கியிராமல்) - பரஸ்பரம் ஒன்று சேர்ந்து உண்டாக்க சக்தி பெற்ருலும் - அவை களுக்கு ஸ்தூல காரியங்களை உண்டாக்க சக்தியிராது. (நிரம்ஸா—நிஷ்ப்ரதேசம்; ஒரு குறிப்பிட்ட இடத்தில் சேர்ந்து இராமல் - வ்யாப்தி யேற்படுவதற்கு); ஸம்யோகத்திஞல் பிரதேசபேதம் யேற்படும் - அது நிரவயவமாக விருக்கும் போது, காரியத்வம் எப்படி யேற்படும்?).

ஸித். சூத்ரம் सर्वोपेता च तद्दर्शनात् (2-1-30)

ஸி. சூ. ஸர்வோபேதா ச தத்தர்ஸநாத் (2-1-30)

ஸர்வோ பேதா ச-(பரதேவதை) எல்லாசக்திகளை உடையது - தத்தர்ஸநாத் - அதற்கு ஆதாரமாக சுருதிகள் கூறுவதாலே.

இது நமது சித்தாந்தத்திற்கு முக்கியமானது). பரமாத்மா ஸகல வஸ்துக்களுக்கும் - வேறு ஜாதியின் வஸ்துக்களையும் விடவேறான - ஸகலேதர விலக்ஷண பரமாத்மாவுக்கு எல்லாவித (ஸர்வ) சக்திகளும் உண்டு—(ஸர்வ விலக்ஷணத்வம் - ஸர்வ சக்தித்வம்) இம்மாதிரியே சுருதிகளும் அவனுடைய பெருமைகளை ஓதுகின்றன - ஸ்வே. 6-8 पराऽस्यशक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च அவனுடைய சக்திகள் இயற்கையானதாய் = விதவிதமானதாய் – ஞான பலக்ரியா உள்ளதாகக் கூறப்படுகிறது. அவ்விதமே சா. உ. 8-अपहतपाप्मा विजरो विमृत्युर्विशोको विजिघत्सोऽपिपासः - அபஹத பாப்மின்மை - கிழத்தனமில்லாமை ம்ருத்யு இல்லாமை - சோகமில்லாமை - பசிதாகமின்மை இத்யாதி கல்யாண குணங்கள் ஓதப்படுகின்றன - என்று காட்டி; மீண்டும் சுருதி சொல்கிறது - சா. உ. 8 - 1 - 1 - सत्यकामः सत्यसङ्कल्पः ஸத்யகாமனுகவும்-ஸத்ய சங்கல்பத்தை உடையவனுகவும்- இத்யாதி ஸர்வசக்தி யோகம் - என்பதையும் பிரதிபாதிக்கிறது. அவ்விதமே சா. உ. 3-14-2 - मनोमयः प्राणशरीरो भारूपः सत्यसङ्कल्प आकाशात्मा सर्वकर्मा सर्वकामः सर्वरसः सर्वमिदमभ्यात्तोऽवाक्यनादरः- அவர் மஞேமயனுகவும், சரீரத்திலே பிராணனை உடையவராயும், பிரகாசத்தைதன் உருவமாகவும் - சத்ய காமசத்ய ஸங்கல்பம் உள்ளவராயும், ஆகாசத்திற்கு ஆத்மாவாயும, ஸர்வகர்மாவாகவும் - ஸர்வகாமங்களாகவும் ஸர்வரஸங்களாகவும் இந்தகுண ஸமூஹங்களை எப்போதும் உடையவராகவும் - அவாக்கி (பேச்சிலாதவரும்) கவலையற்றவராகவுமிருக்கிருர்.

(இங்கே பிரதானம் நிரவயவமானாலும் காரணமாகாது; பரமாணுக்களுக்கு ப்ரதேசபேதம் வேண்டப்பட்டதாலே சேர்க்கை ஏற்படாது - என்று சொல்லி சாங்கிய, தார்க்கிக பக்ஷங்களைக் கண்டித்து-பிரக்ருதி-பரமாணுக்களும் ஜீவனைச் சொல்லலாமே யென்றால் ஜீவனுமில்லை-அவன் உபாதான காரணமாக மாட்டான்-அவனே பிருஹ்மத்திற்கு விசேஷண மாவதாலே, சுருதி பிரமாணிப்பதால், தர்க்கம் பிரத்யக்ஷம் இவைகளால் பாதிக்கப்படாத சுருதியேக யேவபிரமாணத் தாலே, பிருஹ்மத்தை तदैक्षत - என்று சொல்லி - ஸாமான்ய மாகக் காட்டப்பட்ட "ஸத்" எனப்படும் பிருஹ்மம் - அனுப்ர வேசத்தினால் — सेयंदेवतैक्षतेति - தேவதாபதத்தால் தேவதை விசேஷமாகிற ஸ்ரீமந் நாராயணனைக்காட்டி - அவனுக்கு ஸர்வசக்தி யோகம் ஜகத்ஸ்ருஷ்டிக்கு நிருபாதிகமாகவேயிருக் கிறது - ஸ்திரிலிங்கேந நிர்தேசம்; प्रतिपादयन्ति - சுருதிகள். நிரவயவ வஸ்த விஷயத்தில் சம்பூர்ண ஏக தேசவிகல்பயேவ நாவதரதீதி। ஒவ்வொரு வஸ்துவிலும் நுழைந்தும் - தான் பூர்ணமாகவிருக்கிறது (தனக்கு சக்திகுறையாமல்—அதற்கும் சக்தியை உண்டாக்குகிறது). ஸர்வப்ரதேச அவச்சின்ன சம்பந்தருபத்தினால் வ்யாப்தி ஏற்பட்டு-அதனால் பிருஹ்மமே ஸர்வசக்தி யோகத்துடன் விலக்ஷணமாக விளங்குகிறது. அத்தகைய ஸர்வயுத்தமான பிருஹ்மமே உபாதான நிமித்த காரணமாகிறது என்பதாகும்).

ஸித். சூத்ரம் विकरणत्वान्नेति चेत् - तदुक्तम् (2-1-31)

ஸி. சூ. விகரணத்வாந்நேதி சேத் ததுக்தம் (2-1-31)

விகரணத்வாத்-(பிருஹ்மத்திற்கு) சரீரமும், இந்திரியங் களும் இல்லாமையால் - ந (பிருஹ்மம்) நிமித்த காரணமாக மாட்டாது - இதிசேத் - எனில்; தத் உக்தம் - இந்த விஷயத் தில் முன்பே பதில் உரைக்கப்பட்டது, முன்புகூறப்பட்டது யாதெனில் - ச்ருதேஸ்து சப்த மூலத்வாத் - விசித்ராஸ் சஹி இத்யாதி சூத்ரங்களில் - ஸர்வவிலக்ஷணமாய் ஸர்வசக்தி ஸர்வயுக்தமான பிருஹ்மத்தின் விஷயத்தில் உலக ரீதியைப் புகுத்தக் கூடாது என்பது தெளிவாக்கப் பெற்றது). சுருத

பிரகாசிக்க - நிரவயவத்வ ஆகாஸரூப ரஸாதீநாம்........ ஸாவயவதயாபரிணாமபிரதி ப ட மி த் யு க் த தோஷத்தை போக்க; பிருஹ்மம் ஏகமாகவிருந்தாலும்-ஆனால் அது ஸகல வஸ்துக்களை விட விலக்ஷணமாயுள்ளதாகவும் - ஸர்வ சக்தி யோகத்துடன் கூடியதாலே, அவ்விதமாயினும் ஸ்வே. உ. 6-5 - न तस्य कार्यं करणं च विद्यते-பிருஹ்மத்திற்கு (காரியமாகிற) ச ரீ ர மி ல் லை. கரணங்களுமில்லை (இந்திரியங்களில்லை) அதனால் கரணவிரஹிண பிருஹ்மத்திற்கு காரிய ஆரம்பம் யேற்படாது - (லௌகிக திருஷ்டியில் குலாலன் பானையை கரணங்களால் செய்கிறான்). அதுபோல,

அவ்விதம் சொல்லப்படுமாகில், அதற்குப் பதில் நாம் சொல்வது शब्दमूलत्वात् - சப்தமாகிற சுருதியினாலே பிருஹ்மம் ஜகத் காரணம் என்று அறியப்படுகிறது. ஸர்வ விலக்ஷணத்வம் ஸகலேதர விலக்ஷணத்வம் - இத்யாதி: वि चित्राश्च हि அதனுடைய சக்திகள் விசித்திரமாயும், பலவகைப் பட்டதாயும் இருப்பதால்—என்று சொல்லப்பட்டது. சப்தம் ஒன்றினாலேதான் பிருஹ்மம் பிரமாணிகம்; ஸகலேதர விலக்ஷணம் அந்த காரியங்களுக்கு அந்த அந்த இந்திரியங்கள் இல்லாதிருந்தாலும், அந்த அந்த காரியங்களை சங்கல்பத்தாலே செய்து முடிக்கிற சாமர்த்தியம் அதற்கு உண்டு என்பதாகும். (விபுத்வத்தினால்-வ்யாப்தியினால்-ஸர்வ வஸ்துக்களாக பரமாத்மா இருக்கிறார்; கால்கள்-கைகள்-அஹங்காரம் முதலிய இந்திரியங்கள் இலாவிடினும் - அந்த காரியங்கள் நடைபெறுகின்றன - (எப்படி ஸாத்யமாகும்?) பிரகிருதி தேஜஸ் இவைகளுக்கு அவச்சேதந வெட்டி ஒன்றை இன்னொன்றுடன் சேர்ப்பதால் - காயம் (சரீரமில்லாமல்) அல்லாமல், எப்படி அந்தக் காரியங்கள் நடைபெறுகின்றனவோ, அதேபோல பிருஹ்மத்திற்கும் சரீரம் அவசியமில்லை. இது தான் சமாதானமாகலாம்). - அப்படியே சுருதியும் கூறுகிறது ஸ்வே. 3-16 पश्यत्यचक्षुः (கண்களில்லாமல் பார்க்கிறார்) स शृणोत्यकर्णः अपाणिपादो जवनो ग्रहीता காதுகள் இல்லாமல் அவர் கேட்கிறார்; கால்கள் இல்லாமல் நடக்கிறார் அவர் எல்லா வஸ்துக்களையும் கிரஹிக்கிறார். (ஏற்கனவே ஸஹகாரி

நிமித்த காரணங்கள் இன்றி பிருஹ்மம் ஸ்ருஷ்டிக்க முடியாது என்பதற்கு சூத்ரம் 24ல் உபகரணங்கள் இல்லாமல் பிருஹ்மம் காரணமாகலாம் என்று சொல்லப்பட்டது. இங்கே இந்திரியங்கள் இன்றி ஸ்ருஷ்டி செய்ய முடியுமா என்கிற சந்தேகம் போக்கப்படுகிறது). (ஆகவே பிருஹ்மம் நிமித்த உபாதான - ஸஹகாரி காரணமாகலாம்)

ப்ரயோஜ ந வத்த்வாதி கார ணம் (2-1-10)

பூ. ஸு. न प्रयोजनवत्त्वात् (2-1-32)

ந பிரயோஜனவத்த்வாத் (2-1-32)

பிரயோஜநவத்வாத் - (ஸ்ருஷ்டி முதலானது) ஒரு பயனை உடையதாயிருக்க வேண்டுமாகையால்)-ந (எல்லாப் பயனையும் பெற்றிருக்கும் அவாப்த ஸமஸ்த தாமனுக விருக்கும் பரமாத்மா) ஜகத் காரணமாகாது.

(முன் அதிகரணங்களில் ஜகத் ஸ்ருஷ்டி பரமாத்மாவின் இச்சையினுல் - யேற்படுவதாகக் கூறப்பட்டது. இப்படிப் பட்ட ஜகத்ஸ்ருஷ்டியினுல் பிரயோஜனம் எதுவும் பரமாத்மாவுக்கு இல்லாமையாலே, அது ஜகத்காரணமாகமாட்டாதென்கிற ஆக்ஷேபம் தள்ளப்படுகிறது. இங்கே விஷயம் ஸ்ருஷ்டி யாருக்கு பிரயோஜனம் பதில் ஸபிரயோஜனம் ஆகும். பரமாத்மாவுக்கும் எப்படி? அவன் அவாப்த ஸமஸ்தகாமனுக விருப்பினும், அவனுக்கு ஸ்ருஷ்டி லீலையாகும் என்கிற ஒரு பக்ஷம் இருக்கட்டும். விளையாட்டிலும் - அவனுடைய கருணை விளங்குகிறது. இந்த சேதன அசேதனங்கள் உஜ்ஜீவித்துப் போகட்டும் என்று ஸங்கல்பித்து-सुकज्ञानं जनयेत् जगत् करुणया सृजन् என்று சூக்ஷ்ம அவஸ்தையில் இருப்பதை ஸ்தூலமாக்கி-சாஸ்திரங்களை வெளியிட்டு-ஆசார்யர்களை அனுப்பி-தானும் அவதரித்து நடத்திக் காட்டினுன். இது கருணையினுல் யேற்பட்டதாகும். பூர்வபக்ஷம் பிரயோசனம் அபாவாத்; லீலாயா; கைவல்யம்; உதாரணமாக ராஜாவின்பிள்ளை பந்து விளையாடிதான் ஆனந்திப்பதுபோல அதுபோல தானும் இன்புறுகிருன். அதைவிட ஜீவர்களை உத்தாரணம்

செய்வதற்கே ஸ்ருஷ்டிக்கிருன் - எனக் கொள்வதே சிலா (ந்ருஸிம்ஹ ப்ரியா) கியம். அவனுடைய கருணை பிரஸித்தி பெற்றதாலே; அவதாரங்களாலே தெரியவரும்). அதாவது பிறப்பையடைந்தவர்கள் ஞானத்தை சம்பாதித்து - பக்தி பிரபத்தி செய்து மோக்ஷத்தையடையலாம். ஆகவே கிருபையுடன் புருஷார்த்தமாகும். பகவான் கிருபாவிசிஷ்டனுக லீலாரஸத்தை அனுபவிக்கிருன்.

பரமேஸ்வரன் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஒருவனுகவேவிருந்து கொண்டு - சித் அசித் வஸ்துக்களில் வேறுபட்டவனுகவும் (ஸக லேதர விலக்ஷணத்வேந) ஸர்வார்த்த சக்தியுக்தனுகவும் தானே ஸ்வயமாகவே விசித்திர ஜகத் ஸ்ருஷ்டியை உண்டாக்கிருன் அவ்விதமாயினும் ஈஸ்வரனுக்கு காரணத்வம் (இங்கே ஒரு பிரயோஜனத்தை எதிர்ப்பார்த்துக் காரியம் செய்தல்) யேற்படுவதில்லை - அபேக்ஷையின்றி ஸ்ருஷ்டிக்கிருன். ஸ்ருஷ்டி விசித்திரமாயும் பலவகைப்பட்டதாயும் உள்ளது. ஆனுல் 'அவாப்தஸமஸ்த காமனுகிற பரமாத்மாவுக்கு, ஸ்ருஷ்டியால் யாது பிரயோஜனம் 'யேற்படக்கூடும்? பிரயோஜனம் अभावात् இல்லாதபடியால் ஸ்ருஷ்டி நிஷ்ப்ரயோஜனம்-ஒருவித ப்ரயோஜனமோ இல்லை. இங்கேபூர்வ பக்ஷி நிஷ்பிரயோஜனம் என்பதைச்சொல்லி விளக்குகிருன்).

புத்திபூர்வமாக ஒரு காரியம் ஆரம் பிக்கப்படு முன்பு - அந்த காரியத்திஞல் பிரயோஜனம் ஸ்வார்த்தம் (தனக்கு என்றும்) பரார்த்தம் (பிறரின நன்மைக்காகவும்) யேற்படலாம். இங்கே பரமாத்மாவுக்கு யாது பிரயோஜனம் இருக்கக்கூடும்? ஏனெனில் அவன் ஸ்வபாவமாகவே அவாப்தஸமஸ்தகாமன். ஜகத் ஸ்ருஷ்டியினுல் பிரயோஜனம் அவாப்தஸமஸ்தகாமனுக்கு யேற்படாது. ஸ்ருஷ்டி பரார்த்தமாகவும் விருக்க முடியாது. ஒருவன் அவாப்த ஸமஸ்தகாமன் என்கிற பெயரை எப்போது அடைகிருன்? பிறர்களை (தன்னை வந்து பணியும் அடியார்களை) அனுக்ரஹிப்பதால் - பலன்களை சுபமாகத் தருவதால் யேற்படுவதாகும். ஆனுல் ஸ்ருஷ்டியிலோ - அபுருஷார்த்தங்கள் பல

விருக்கின்றன - பலவிதமாயும் பலவகைப்பட்ட துக்கங்கள் நிறைந்ததாயும் - கர்ப்ப - ஜன்ம - ஜரா - மரணாதி - நரகாதி நாநாவித அனந்த துக்கங்கள் கொண்ட ஸம்சாரமாகிய ஜகத்; அதை ஸ்ருஷ்டிக்க - கருணையுள்ளவன் எவன் செய்வான்? பரமாத்மா ஆனந்த ஸ்வரூபியாகவுள்ளதால் - அவன் தான் ஸ்ருஷ்டித்தான் என்றால் இந்த ஜகத் 'ஸுகைகதானமேவ' சுகத்தின் இருப்பிடமாக உலகத்தைப் படைத்திருப்பான். அதனால் பிரயோஜனம் பிருஹ்மத்திற்கு அபாவாத் (இல்லாத படியாலே) ஜகத் துக்கமயமாக விருப்பதாலே - பிருஹ்மம் காரணத்வம் ஆகமாட்டாது - (பூர்வபக்ஷம்).

இவ்விதம் சொல்லப்படுமாகில்-நாம் பதில் கூறுகிறோம்

ஸி. சூத்ரம் लोकवत्तु लीलाकैवल्यम् (2-1-33)

லோகவத்து லீலா கைவல்யம் (2-1-33)

லோகவத்து - உலகில் (காணப்படும் அரசர்களின் பந்தாடுதல் முதலிய விளையாட்டுகளின் செயல்களைப்போல) லீலா கைவல்யம் - கேவல லீலையே - ஜகத் ஸ்ருஷ்டியின் பலனாகும் - பிரயோஜனவத் ஆகும். लीलाया: कैवल्यम् கேவலம் लीलेति-) ஸ்வயமேவ பிரயோஜனம் - லீலையே பிரயோஜன மாகும். (அத்துடன் பிருஹ்மத்திற்கு ஸர்வ காரணத்வமும் ஸர்வ நியந்திருத்வமும் ஸர்வசக்தித்வமும் பிரயோசன மாகும், ஜகத் காரணம் பிருஹ்மத்திற்கு ஸித்திப்பதாலே).

எப்படி லோகத்திலே ஏழுதீவுகளும் அடங்கிய பூமியை அதிஷ்டிக்கும் (இங்கே நியந்தாவாகவிருப்பது சொல்லப்படு கிறது)பிருஹ்மத்திற்கு ஸம்பூர்ண சௌர்ய வீர்ய-பராக்ரமம் பொருந்திய மஹாராஜனுக்கு (அவாப்த ஸமஸ்தகாமனாகிற அவனுக்கு) கேவலம் லீலையையே பிரயோஜனமாகவுடைய கந்துகவிளையாட்டு (பந்து) காணப்படுகிறதோ அதைப் போல பரமாத்மா விஷயத்திலேயும் ஸ்வசங்கல்பமாத்ர விசேஷத்தாலே ஏற்பட்ட ஜகத் ஜன்ம ஸ்திதி - த்வம்சம் இவை எல்லாமே லீலாமாத்திரமே-அதுவே பிரயோஜனவத்- என்று சொல்வது நிரவத்யம் (தோஷமற்றது).

ஆயினும் பரமபுருஷன் ஸகலேதரசித் அசித்வஸ்து விலக்ஷணன்; அசிந்தியசக்தி யோகம் படைத்தவன்; இப்படி ஸ்ருஷ்டி செய்யப்படுவது - ஸ்வசங்கல்பத்தாலே - நிரவயவமான பிருஹ்மத்தினுல் ஆக்கப்படுவது-விசித்திர சித் அசித் மிஸ்ர ஜகத் ஸ்ருஷ்டி யேற்படுவதாகும்; அவ்விதமாயினும் தேவதிர்யக் - மனுஷ்ய-ஸ்தாவர வர்க்கங்களைப்படைப்பதில் இவ்விதமான உத்கிருஷ்ட (மேலானபடைப்புக்கள்) அபகிருஷ்ட (தாழ்வுள்ள பிறப்புக்கள்)-ஸ்ருஷ்டியினுலே பரமாத்மாவுக்கு தோஷம் ஸம்பவிக்கிறது-அதனுல் பக்ஷபாதம் என்கிற தோஷம் யேற்படுவதாகவிருக்கிறது - அதிகோரதுக்க யோக ஸ்ருஷ்டியை (துக்கங்களை விளைவிக்கும் சம்சாரத்தை) படைப்பதால் - நைர்கிருண்யம் (இரக்கமில்லாமை பகவானுக்கு) விலக்க முடியாதபடியிருக்கும். (உத்கிருஷ்ட ஜன்மம் பக்ஷபாதத்தினுல் (விருப்பால்) யேற்பட்டது; தாழ்வுள்ள படைப்பு இரக்கமின்மையால் யேற்பட்டது - இதனுல் லீலையாகுமானுல் இவ்விதமான தோஷம் யேற்படுமே - ஆகவே பிருஹ்மம் காரணமாகமாட்டாது). (லீலை என்பதற்கு அனுகூலமான வஸ்துவை அனுபவிப்பதில் விசேஷ ஆனந்தம் யேற்படுவதாகும். அதற்கு வேறுபட்டது ஆனந்தம் இல்லாமல்-கேவலம் லீலையே பிரயோஜனமிதி. இதற்கு அடுத்த சூத்ரம் பதில் கூறப்படுகிறது.)

(இங்கே சுருதப் பிரகாசிகைகாரர் பிரயோசனம் என்பதற்கு அர்த்தம் சொல்லும்போது - ஒருவிதமான பந்தய போட்டியில்லை - சூது விளையாட்டில்போல வஸ்து லாபம் நஷ்டம் ஒன்றுமில்லை; ஏவ பதத்தாலே ஸ்வயமேவ பிரயோஜனம்). ஸ்ரீபாஷ்யமங்கள ஸ்லோகத்திலே விளையாட்டாகவே செய்கிருன் - என்பதை நினைக்கவும். நம்மாழ்வாரும் அதே சொன்னுர். அலகிலா விளையாட்டை உடையவர் - வைஷம்யம் - பக்ஷபாதம்; ஈஸ்வரன் பலன் கொடுப்பதால் கர்ம அபேக்ஷையிருக்கிறது; ஆயினும் வைஷம்யாம்சம் யேவ - அதுவே அபேக்ஷை. கர்மபலத்தால் விஷம (தாழ்வுள்ள) ஸ்ருஷ்டி; நிமித்த காரணம் ஈஸ்வரன்; ஸாதாரண

(பொது) காரணமும் ஆவான். பீஜசக்தி விசேஷத்தாலே அங்குர விசேஷம் யேற்படுவதுபோல-ஈஸ்வரன் பொதுவான காரணம் - கர்மங்களே விஷம ஸ்ருஷ்டிக்கு அஸாதாரண காரணமாகும் - பிரதான காரணமாகும்.)

ஸித் சூத்ரம் वैषम्यनैर्घृण्ये न सापेक्षत्वात् तथा हि दर्शयति (2-1-34)

வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத்
ததாஹி தர்ஸ்யதி (2-1-34)

வைஷம்ய நைர்த்ருண்யே - தேவர் முதலான ஸ்தாவரம் வரை ஏற்றதாழ்வுள்ள படைப்பினுல்) பரமாத்மாவுக்கு பக்ஷபாதமும் கருணையின்மையும். ந பிருஹ்மத்திற்கு பொருந்தா, ஏனெனில் ஸாபேக்ஷத்வாத் - பிருஹ்மம் பலனை அளிப்பதாக விருப்பதால் கர்மத்தை அனுஸரித்து பலன் அளிக்கிறது. கர்மத்தை எதிர்பார்ப்பதால் ததாஹிதர்ஸயதி இவ்விதமே சுருதிகூறி - பரமாத்மாவுக்கு விருப்பு வெறுப்பு இன்மையைக் காட்டுகிறது.

न सापेक्षत्वादिति - பிருஹ்மம் விளையாட்டுக்காக உலகைப் படைப்பதாலுல் - யாதொரு அபேக்ஷையும் எதிர்ப்பார்க்கப் படவில்லை என்று சொல்வதால் அர்த்தம் யாது? அபேக்ஷிப்பதாக விருந்தால் பரமாத்மாவுக்கு நிர்தயன் என்பதும் வைஷம்யம் நைர்க்ருண்ய தோஷங்கள் யேற்படாதா? பதில்-ஏற்படாது லீலையே ஸபிரயோஜனம் என்றுல்; அதெப்படி சரியாகும் कुत: - सापेक्षत्वात् (பரமாத்மா) ஏற்றதாழ்வை கர்மத்தின் பிரகாரம் அளிக்கிறபடியால் கர்மத்தை எதிர் பார்க்கிறுன். உண்டாக்கப்பட்ட ஸ்ருஷ்டியில் தேவாதி - க்ஷேத்ரக்ஞ - இவர்களின் கர்மங்களை ஒட்டி-மேன்மையுள்ள பிறப்புகளையும் தாழ்வான (விஷம) ஸ்ருஷ்டியும் யேற்படுகிறது. அதாவது தேவர்களுக்கு-புண்ய பலவிசேஷத்தாலே தேவர்களாகப் பிறக்கிறுர்கள்; அதேபடி மனிதர்களாகவும் பாபபுண்யங்களை ஒட்டி பிறக்கிறுர்கள், தேவாதி சரீர

யோகம் அந்த அந்த கருமங்களை அபேக்ஷித்து யேற்படுவ தால் கர்மமே பிரதானகாரணம் - என்று சுருதி ஸ்மிருதி களால் காட்டப்பட்ட விஷயம். பிரு. உ. 6-4-5 साधुकारी साधुर्भवति; पापकारिपापो भवति; पुण्य: पुण्येन कर्मणा भवति; पाप: पापेन (நற்கர்மம் செய்பவன் நல்ல சரீரத்தை அடைகிறான். தீய கருமம் செய்தவன் தாழ்வான சரீரத்தை (பிறப்பை) அடை கிறான். ஆகவே சேதனனுடைய புண்யபாப கர்மங்களை ஒட்டி - சுகதுக்கம் அனுபவம் அதனால் யேற்றம் தாழ்வுள்ள ஸ்ருஷ்டி உண்டாகிறது.

இவ்விதமே பராசரபகவானால் அருளப்பெற்றது. தேவாதி போன்ற விசித்திரமான உயர்ந்த பிறப்புக்களுக்கு ஹேது அவரவர்களின் முந்தின கர்மபலனாகும். படைக்கப் படப்போகிற க்ஷேத்ரக்ஞர்களுக்கு (ஜீவர்களுக்கு) அவர் களின் பிராசீன (முந்திச் செய்த) கர்மங்களே அதன் சக்தி களே காரணம் என்று சொல்வது சரியாகும். வி. புரா. 1-4-52ல்

निमित्तमात्रमेवासौ सृज्यानां सर्गकर्माणि, प्रधान कारणभूता: यतो वै सृज्यशक्तय:, निमित्तमात्रं मुक्त्वैव नान्यत् किंचिदपेक्षते, नीयते तपतां श्रेष्ट स्वशक्त्यावस्तु वस्तुताम्

என்றார் - அதாவது படைக்கப்படும் பொருள்களை உண்டாக் கும் விஷயத்திலே பகவான் நிமித்த மாத்ரமாக (அபிரதான காரணமாக) விருக்கிறார். உண்டாக்கப்படும் ஜீவர்களின் கர்மவாஸனைகளாகிற சக்திகளே இவ்விஷயத்தில் முக்ய காரணமாகின்றன தேவர்களாகிற படைப்பிற்கு நிமித்த காரணமாக பகவானே ஆவார். வேறொரு நிமித்தத்தை அபே க்ஷிப்பதில்லை. அதனதன் கர்மவாஸனைகளாலே அந்த அந்த காரியப் பொருளாக விருக்கும் தன்மை அடையப்படுகிறது. (கர்மத்தினால் யேற்படுவதானல்—பீஜசக்தியினால் நல்ல முளையாகிறது. நல்ல செடியாகிறது. அந்த சக்தியை பர மாத்மாவே அளிப்பதாக விருப்பதால் அவனும் முக்யமாகும்.

स्वस्वत्वा - தனது பலத்தின் ஆதாரத்தினுலே, தன் கர்மபலத் தினுலே - தேவாதி வஸ்துத்வம் (சரீரம்) அடையப்படுகிறது. என்று சொல்லப்படுமாகில், பதில் அடுத்த சூத்ரத்திலே.

ஸித். சூத்ரம் न कर्मविभागादिति चेन्नानादित्वादुपपद्यते चाप्युपलभ्यतेच (2-1-35)

ந கர்ம விபாகாதிதி சேந்நாநாதித்வாதுபபத்யதே சாப்யுபலப்யதேச (2-1-35)

ந கர்ம (ஸ்ருஷ்டி காலத்தில்) கர்மமில்லை. அவிபாகாத் அக்காலத்தில் பிருஹ்மம் தவிரவேறு ஒன்றுமில்லை. அபேதம் ஜீவனுக்கும் பிருஹ்மத்திற்கும் என சுருதிகூறுகிறது. இதிசேத் என்றுல் ந அது சரியில்லை. அநாதிவாத் ஜீவன் அநாதியாகையால்; உபபத்யதேச அநாதியாயினும் பிரும்மம் ஒன்றே அத்வீதீயமாக விருந்தது எனச்சுருதி கூறுவதால் உபலப்யதேச - ஜீவன் அநாதி என்று சுருதியிலும் காணப் படுகிறது. ஸ்ருஷ்டிக்கு முன்பு பிரளயதசையில் க்ஷேத்ரக்ஞ (ஜீவன்)எனப்பெயருடைய வஸ்துக்கள் இல்லை இது எப்படித் தெரியும் ? अविभागश्रवणत् - வித்யாஸம் (ஜீவனுக்கும் பிருஹ் மத்திற்கும் இல்லை யென்று (அபேதம்) என்று சுருதி சொல் வதால். (உதாரணமாக) சா. உ. 6-2-1-सदेव सोम्येदमग्र आसीत् ஸ்ருஷ்டிக்கு முன்பு ஸத் (பிருஹ்மம்) ஒன்றுதான் இருந்தது.

அதனுல் அந்தசமயத்தில் ஜீவாதமாக்கள் இல்லாதபடி யாலே அவைகளுக்கு கர்மம் இருந்திருக்கமுடியாது; எப்படி கர்மத்தை அபேக்ஷித்தே ஸ்ருஷ்டியில் வைஷம்யம் ஏற்படு கிறது எனருல், அதற்கு நாம்பதில் அளிப்பது ந (அது சரி யல்ல. ஜீவாத்மாக்கள் ஸ்ருஷ்டிக்கு முன்பு யிருந்தார்கள் என்பதாம்) अनादित्वात् ஜீவன் அநாதியாகையால்; க்ஷேத்ரக் ஞர்களுக்கு அவர்களுடைய கர்ம பிரவாஹமும் இருந்தது. அவைகள் அநாதியாயினும் அச்சமயம் இருந்தாலும் கூட अविभाग நாமரூபவ்யாகரணம் யேற்படாமல், சுருதி சொல்வ.

னாலே उपपद्यते च பிருஹ்மம் ஒன்றே யிருந்தது என்று சுருதி சொல்வதும் சரியாகும். எந்த வஸ்து க்ஷேத்ரக்ஞன் (ஜீவன்) என்று சொல்லப்படுகிறதோ, அது நாமரூபத்தை விட்டு விட்டு அவிபாக நிலையில் பிருஹ்மத்துடன் ஒட்டிக்கொண்டு அதற்கு சரீரமாக விருந்தது. அச்சமயம் (தனியாகவும்) நன்றாகவும் அறியமுடியாதபடி அதிசூக்ஷ்மதசையில் விருந்தது அநர்ஹமானதசையில் ஈஷிக்கொண்டிருந்தது. அதி சூக்ஷ்மத்வத்தினாலே; அவ்விதமான அநாதித்வம் விருந்தும் அதி சூக்ஷ்மமாக விருந்ததால் பிரித்துச் சொல்ல இயலாத படி ஜீவன் பிருஹ்மத்திற்கு சரீரமாக விருந்தது என்பதை ஒப்புக்கொள்ளாத போனால், செய்யாத கர்மங்களுக்கு பலன் அளிக்கப்படுவதும் க்ருத (செய்யப்பட்ட) கர்மாக்களுக்கு பலன் இல்லாமையும் யேற்படக்கூடும். (அதாவது ஒவ்வொரு கர்மத்திற்கும் பலன் உண்டு என்பதாகும்).

இதுவும் (கர்மபிரவாஹம் அநாதி - கர்மத்தை ஒட்டியே பலன் யேற்படுகிறது) उपलभ्यते च சுருதியிலும் காணப்படு கிறது. ஜீவன் அநாதி என்பதற்கு சுருதிபிரமாணம் கட.உ 1-2-28 न जायते म्रियते वा विपश्चित् - அறிவுடையவனாக ஜீவன் பிறப்பதுமில்லை அழிவதுமில்லை என்பதால் ஜீவன் நித்யம்; ஸ்ருஷ்டி பிரவாஹம் தொடர்ந்து கொண்டு வீருகிறது அநாதியாக விருப்பது என்பதற்கு சுருதி பிரமாணம் தை. நாரா. 1.14 - सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वमकल्पयत् ஸர்வேஸ்வரன் சூரிய சந்திரர்களை முன் கற்பத்திற்போலவே படைத்தான்; பிரு. உ. 3-4-7ல் तद्धेदं तर्ह्यव्याकृतमासीत् । तन्नामरूपाभ्यां व्याक्रियत அப்போது அது நாமரூப விபாகமின்றி ஒன்றாகவேயிருந்தது அது இப்போது (ஸ்ருஷ்டிக்குப் பின்பு) நாமரூப வ்யாகரணம் யேற்பட்டு வித்யாஸமடைந்தது. அதாவது நாமரூபவ்யாகரணம் மாத்ரம் சொல்லப்படுவதாலே, க்ஷேத்ரக்ஞர்களின் ஸ்வரூபம் அநாதியாகவுள்ளது என்பது சுருதிஸித்தம். ஸ்மிருதியிலும் கூட கீதை 13-16ல் प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि நீ அறிந்து கொள் பிரகிருதியும் புருஷனும் (ஜீவனும்) இரண்டுமே அநாதியாகும்.

ஆகையால் பிருஹ்மம் ஸர்வவிலக்ஷணத்வாத் ஸர்வ சக்தித்வாத் லீலைக ப்ரயோஜநத்வாத் இவைகள் ஸித்திப்ப தாலே-க்ஷேத்ரக்ஞனுகிற ஜீவன் கர்மானு குண்யமாக (அனு ஸரணையாக) விசித்திரஸ்ருஷ்டியை அடைகிருன் என்பதால் பிருஹ்மமே ஜகத்காரணம் என்பது ஸ்தாபிதம்.

अत: பிருஹ்மம் உபாதானத்வ நிமித்தத்வம், ஆவதற்கு இத்யாதிகளுக்கு ஆக்ஷேபங்கள் சொல்லப்பட்டு பரிகரிக்க பட்டன. அநேக அதிகரணங்களின் விஷயம் முடிவாக (நிகமமாக) சொல்லப்பட்டது. இதனுல் பிற்பாடுவரும் சூத்ரம் ப்ரகிருத்தாதிகரணமாத்திரம் சேஷமில்லை ஆனுல் ஸர்வத்திற்கும் சேஷம் என அறியப்படவேண்டியது.)

ஸித். சூத்ரம் सर्वधर्मोपपत्तेश्च (2-1-36)

ஸர்வதர்மோபபத்தேஸ்ச (2-1-36)

ஸர்வதர்மோபபத்தே: ச - பிரதானம் பரமாணு முதலா னவை காரணமாகாது. எல்லாத் தர்மங்களும் பிருஹ்மத்தி னிடமே பொருந்தியிருக்கையால் பிருஹ்மமே ஜகத்காரணம்- ஸ்ரீமந்நாராயணனே உலகிற்கு நிமித்த உபாதான ஸஹகாரி எல்லாக்காரணமும் ஆகிருன்.)

பிரதான பரமாணுவாதிகள் சொல்லும் காரணத்வம் என்பதற்கு எந்த எந்த தர்மவைகல்யம் (முறண்பாடு குறைவு(தோஷம்) சொல்லப்படுமோ, அதனுல் அந்த காரண வாதம் ஸத்யமாகாதோ அந்த தர்ம குறைவுகள் (தோஷங் கள்) இல்லாதபடியாலும், எல்லாத் தர்மங்களின் விஷயமாக யேற்படும் ஜகத்காரணத்வம் பிருஹ்ம விஷயத்தில் சரியாகச் சொல்லப்பட்டவையாகுமோ, அந்தக் காரணத்திஞல் ब्रह्मैव பிருஹ்மமே ஜகத் காரணம் என்பது ஸ்திதம் (ஸ்தாபிதம்). (பிரதானம் பரமாணுக்கள் காரணமாகமாட்டாது).

இந்த முதற்பாதத்தில் பரமத தூஷணம் இல்லை. ஆனால் தன் மதவிஷயத்திலே யேற்பட்ட சந்தேகங்களை பரிஹாரம் செய்யப்பட்டதாகும். அதனால் सर्वधर्मोपपत्तेरित्युक्तम् - இந்த தர்மங்கள் சுருதியினால் ஓதப்பட்டவை. அதனால் ஸ்தாபித மானபடியால், தர்க்க மூலத்வம் இல்லாதபடியால் எல்லாம் பொருத்தமாகும்.)

ஸ்ரீமதே ராமானுஜ விரசிதே ஸ்ரீபாஷ்யே

இரண்டாம் அத்யாயம் - முதற்பாதம் ஸம்பூர்ணம்

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

சுபமஸ்து.



ஸ்ரீ:

ॐ



ஸ்ரீமதே ராமானுஜாயநம:

ஸ்ரீமதே வேதாந்ததேசிகாய நம:

ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்த

தேசிக யதீந்திர மஹாதேசிகாய நம:

**பிருஹ்மவித்யா - நான்காம் பாகம்**

ஸ்ரீபகவத் ராமானுஜ விரசிதே (ஸ்ரீபாஷ்யே)

# ஸ்ரீ சாரீரக மீமாம்ஸ பாஷ்யம்—

## இரண்டாம் அத்யாயம்—இரண்டாம் பாதம்

### ரசநாநுபபத்யதி கரணம் (2-2-1)

ஸ்ரீ. சூத். रचनानुपपत्तेश्च नानुमानं प्रवृत्तेश्च (2-2-1)

ரசநாநுபபத்தேஸ்ச நாநுமாநம் ப்ரவிருத்தேஸ்ச (2-2-1)

ரசநாநுபபத்தே:ச (சேதனனுல் அதிஷ்டிக்கப்படாவிடில்) உலகத்தை உண்டாக்குவது பொருந்தாது - அசேதனமான பிரதானத்திற்கு); - ப்ரவிருத்தே: (தர்ஸநாத்) ச (சேதனனுல் அதிஷ்டிக்கப்பட்டாலேயே) அசேதனப் பொருள்கள் செயல் படுகின்றன - என்பதை நாம் காண்கிறோம் (பிரத்யக்ஷம் - அநுமாநம். இத்யாதிகளால்) அநுமாநம் ந-ஆகவே அநுமானத்தால் அறியப்படும் மூலபிரகிருதி ஜகத் காரணமாகாது.

**சங்கதி:—**

இங்கே பிருஹ்மம் ஜகத்காரணம் என்னும் நமது ஸித்தாந்தத்தில் பல ஆக்ஷேபங்கள் - தோஷங்கள் (முதற்

படும் பக்ஷத்தை - ராமானுஜர் "குத்ருஷ்டிகள்" - என்று சொல்லி - பிற்பாடு சொல்லப் போகிறார். அது இந்த பாதத்தின் விஷயமல்ல-ஆனால் ஆங்காங்கு அவர்களின் கருத்துக்களும் சொல்லப்பட்டு - கண்டிக்கப்படும்). ஆகையால் பர பக்ஷத்திற்கு பிரதிக்ஷேபம் சொல்லப்படுவதாகிறது - இந்த உம்பாததில்.

இந்த விஷயத்தில்-முதலாவதாக, கபிலமஹரிஷியினால் சொல்லப்பட்ட மதமாகிற ஸாங்கியம் நிரஸிக்கப்படுகிறது. வைதிக மதத்திலே அனுக்ரஹிக்கப்பட்ட (அதாவது ஒப்பப்பட்ட) ஸத்காரியவாதிகளின் அபிப்ராயம் (அதாவது காரியம் காரணத்தில் இருக்கிறது ; இருக்கிறதுதானே உண்டாகும் என்று அபிப்ராயப்படும் ஸத்காரியவாதம் நாமும் ஒத்துக்கொள்வதாலே - ஸாங்கியனும் ஒத்துக்கொள்வதாலே-அவர்களுடைய ஸத்காரியபக்ஷம் தவறாக அறிந்து கொள்ளப்படும் - ப்ரமஹேதுவிற்குக் காரணமாவதாலே - அவர்களுடைய மதம் நிரஸிக்கப் படவேண்டும். (இங்கு அறியவேண்டியது - நமக்கும் சாங்கியனுக்கும் ஒற்றுமை இரண்டு விஷயங்களில். முதலில் ஸத்காரிய வாதம்-ஆனால் அதில் அவன் ஈஸ்வரனை சாஸ்திரயேக பிரமாணமாக ஒப்புக்கொள்ளவில்லை. இன்னொன்று - அவனால் சொல்லப்படும் 24 தத்வங்கள் பிரகிருதி புருஷனிலிருந்து அவரோஹண ரீதியாக நம்மாலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றன. ஆனால் அவன் மூலபிரகிருதியே உபாதான காரணம் என்றும் ஈஸ்வரன் நிமித்த காரணமாக ஆகிறது என்றும் சொல்கிறான் இது தவறாகும். இந்த விஷயம் பிரகிருத்யதி கரணம் - ஜகத்வாசித்வாதி கரணம் காரணத்வாதி கரணங்களில் சொல்லப்பட்டவை-நாம் பிருஹ்மம்தான் உபாதன நிமித்த ஸஹகாரி காரணம் - அதனாலே பிருஹ்மந்தினாலே அதிஷ்க்கப்பட்டு அனுப்ரவேசம் செய்யப்பட்ட பிரகிருதி செயல்படுகிறது என்கிறோம).

இந்த விஷயம் ईक्षतेर्नाशब्दम्-(ஸத்வித்யையிலே சொல்லப்படும் ஸத் எனப்படும் ஜகத் காரணப்பொருள் - பிருஹ்மம்

சப்தத்தால் (வேதத்தால்) அறியப்படாததான மூலபிரகிருதி ஆகாது; அது அசேதனம். அதற்கு ஈக்ஷதே எனப்படும் ஸங்கல்பம் ஓதப்படுவதாலே-பிரு. மீ. (சூத் 1-1-5) பிரதானத்திற்கு ஜகத் காரணத்வம் ஸித்திக்காது. வேதாந்த வாக்யங்கள் பிருஹ்மத்தையே சொல்கின்றன. ஆகவே இங்கு பரீசீலிக்கப்படுகிறது - அவர்களின் பக்ஷத்திற்கு ஸ்வரூபமாக விருக்கும் சாங்கிய பக்ஷத்திற்கு - எதிராகச் சொல்லி - அந்த பக்ஷம் தவறு என்று காட்டப்படுகிறது. இதனல் புநருக்தி யேற்படவில்லை. முமுக்ஷீவுக்கு அந்த பக்ஷத்தின் தோஷங்கள் அறியப்பட வேண்டும் என்பதே முக்கிய நோக்காகும்.

ஸாங்கிய காரிகையில் இவ்விதம் சொல்லப்படுகிறது.

मूलप्रकृतिरविकृतिर्महदाद्याः प्रकृतिविकृतयः सप्त ।
षोडशकश्च विकारो न प्रकृतिर्न विकृतिः पुरुषः ॥

சாங்கியகாரிகை (ஈஸ்வரபட்டர்).

ஸாங்கியமதத்திலே - மூலபிரகிருதி என்னும் தத்வம் ஸத்வ ரஜஸ்தமஸ் என்னும் மூன்றும் சேர்ந்தது-இவை திரவியங்கள் குணங்களல்ல. சுகம், துக்கம் மோஹமாகும். இம்மூன்றும் ஸமநிலையிலிருக்கும்போது ஒன்ருய் - அப்போது அசேதனமாய் சேதனர்களின் போகமோக்ஷத்திற்கு யேற்பட்டது-பிரளயதசையில் ஸமம். சேதனர்களின் ஸந்நிதியிலே இது விகாரத்தையடைந்து - அப்போது பல தத்வங்கள் உண்டாவதற்குக் காரணமாகிறது. பிரகிருதியிலிருந்து மஹத்தும் - மஹத்திலிருந்து அஹங்காரமும்; (ஸாத்விக) அஹங்காரத்திலிருந்து பதினெரு இந்திரியங்களும் (தாமஸ) அஹங்காரத்திலிருந்து ஐந்து தன் மாத்திரைகள்; (ராஜஸ) அஹங்காரம் மற்ற இருவகை அஹங்காரத்திற்கும் உதவி புரிந்து செயல்படுகிறது. சப்த தன் மாத்திரையிலிருந்து ஆகாசமும் - சப்த தந்மாத்ரையோடு கூடிய ஸ்பர்ச தந்மாத்திரையிலிருந்து வாயுவும்; அக்னி ஜலம்-பிருத்வி என்கிற பஞ்சபூதங்களும்; உண்டாகின்றன.

இவ்வாறு உற்பத்தியாகும்போது - மூலபிரகிருதிதான் இன்னொன்றின் காரியமாகாமல் (மற்றொன்றின் விகாரமில்லாமல்) மற்ற அனைத்துக்கும் உற்பத்திக்குக் காரணமாகவிருப்பதாலே - மூலப் பிரகிருதி யென்று அழைக்கப்படுகிறது. மஹத், அஹங்காரம், 5 தன்மாத்திரைகள் ஆகிய ஏழும் சில தத்வங்களின் விகாரங்களாகும்; ஆனால் அவை மற்ற சிலதத்வங்களுக்குக் காரணமாயிருக்கிறபடியால் இவைகளை பிரகிருதி விக்ருதிகள் (பிரக்ருதியின் காரியங்கள் அதாவது பிரகிருதி ஸ்வயம் அவிகிருதி, மற்றவை பிரகிருதி விகிருதிகள். இவை 16 தத்வங்களாகும்). புருஷன் எனப்படுபவன் பிரகிருதியினோடு சேர்ந்திருப்பவன் சைதன்ய அம்சமுள்ளவன். அவன் ஸந்நிதியிலே - பிரகிருதிக்கு விகாரங்கள் பேசப்படுகின்றன. 16 தத்வங்கள் ஏகாதச இந்திரியங்கள்; ஐந்து பூதங்கள் - இவை காரியங்களாகும். (மஹத் அஹங்காரம் தன்மாத்திரைகள் 5 - ஆக ஏழும் காரணமும் (மற்ற தத்வங்களை உண்டு பண்ணுவதாகவும்) காரியமாகும் (பிரக்கிருதியின் மாறுதல்களாகும்). எல்லாவற்றிற்கும் மூலபிரகிருதி மூலகாரணம். ஆக மூலபிரகிருதி (1)-7 தத்வங்கள் (8); மற்ற 16 தத்வங்கள் (ஆக 24 தத்வங்கள்); புருஷன் காரியமும் காரணமும் ஆகமாட்டான் புருஷதத்வம் பரிணாமமில்லாத தாகையால் எதற்கும் பிரகிருதியாகவே-விகிருதியாகவே அல்லாமலிருப்பது. அதனால் புருஷதத்வம் - குணமற்றதாய், கேவலம் சைதன்ய ஸ்வரூபமாய், நித்யமாய் - செயலற்றதாய் - எங்குமிருப்பதாய் ஒவ்வொரு சரீரத்திலும் வேறாயிருந்து கொண்டு - விகாரமற்றதாய் - செயலற்றதாய் இருப்பதால் புருஷன் கர்த்தாவுமல்ல போக்தாவுமல்ல. பிரகிருதி புருஷன் ஸந்நிதிமாத்திரத்தாலே, புருஷனுகிற சைதன்யத்தை பிரகிருதியிலே அத்யாஸிப்பதால் - பிரகிருதி கர்த்தாவாகிறது - அதன் கர்த்திருத்வத்தைப் புருஷனிடம் யேறிட்டு 'நானே கர்த்தா - போக்தா' என நினைக்கிறார்கள். இப்படிப்பட்ட அக்ஞானத்தால் ஸம்சாரமும் - முற்கூறிய தத்வங்களின் ஞானத்தால் (அதாவது அழியக் கூடியவை) மோக்ஷம் யேற்படுகிறது - பிரகிருதி அத்தகைய ஞானவானைத் தானேவிடுகிறது.

இம்மதத்திற்கு அநுமாநம் (Inference) பொருந்தியதாக விருக்கிறது - எப்படி யெனில் சரீரம், உலகம் முதலான உண்டாக்கப்பட்ட (காரியப்) பொருள்கள் தம்மைப் போன்ற அசேதனப் பொருளையே காரணமாகக் கொண்டவை. காரியமாக விருக்கும்போது பிரத்யக்ஷம் அனுமானுதிகளால் அறியப்படுவதாக விருக்கிறது - குடத்தைப்போல. உலகில் இப்படியன்றோ பொருள்கள் காணப் படுகின்றன. ஒவ்வொன்றுக்கும் பக்ஷம் ஸாத்யம் ஹேது அவசியம்; பக்ஷமான சரீரம் முதலானவை சுகதுக்கமயமாக விருப்பதால் - பிரகிருதியே இவற்றை உண்டாக்கி - ஸஜாதீயமாயிருப்பதால்—காரணமாகிறது. ஆகவே ஸாங்கியன் ஸத்காரியவாதியாகிருன். அவனுடைய 24 தத்வங்கள் நம்மாலும் ஒப்புக் கொள்ளப்படுகின்றன.) புருஷன் தனி - விசிருதியில்லை (மாறுதலில்லை). பிரகிருதியும் மாறுதலில்லை; ஸத்வரஜஸ்தமஸ்ஸுகளை உடையது பிரகிருதி. ஸ்ஷ்ருடி என்பது ஸமத்வ நிலையின் சலனத்தை (சேதனனுடன்) அடைந்து - (புத்தி) மஹத் அஹங்காரதன் மாத்திரைகளாக பிரகிருதியாகின்றது. பஞ்சீகரணத்தால் ஒன்று இன்னென்றுடன் சேர்ந்து-ஸ்ருஷ்டியின் பிரகரணம் வரிசை உண்டாகி - பலவேறுபட்ட குணஸ்வபாவங்களை அடைந்து - சேதன அசேதன வஸ்துக்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அதனுல் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியான நாமம் ரூபம்-குணம் ஆகாரம்-தர்மம் யேற்படுகிறது. இத்தகைய சேதன அசேதன வஸ்துக்கள் பரமாத்மாவுக்கு பிரளயகாரண தசையிலும் காரியதசையிலும் சரீரமாக (காரியகாரண ஐக்யமாக)விருக்கின்றன - என்பது வேதாந்தியின் கருத்து. பிரளயத்தில் அவை சூக்ஷ்ம அவஸ்தையிலும்; காரியத்தில் ஸ்தூல அவஸ்தையிலும் இருந்தது. இது சாங்கிய பக்ஷத்திற்கு விரோதமாகும்).

(சாங்கியகாரிகை ஈஸ்வரபட்டர்:-ஆகவே சாங்கியனின் தத்வங்கள் 24; மூலப் பிரகிருதி யாதொரு விகாரத்தை அடையாமல் மற்ற எல்லாப் பொருள்களின் உற்பத்திக்குக் காரணமாகிறது. சிலதத்வங்கள் காரிய காரணங்களாகவும்

யால் - அந்த புருஷனுக்கு கர்திருத்வம் - போக்திருத்வம் யேற்படுவதில்லை.

இவ்விதமிருந்தாலும் - தத்வங்களை அறியாத மூடர்கள் பிரகிருதி புருஷ ஸந்நிதி மாத்திரத்தாலே - புருஷனுடைய சைதன்யம் பிரகிருதியிலே அத்யஸிக்கப்படுவதாலே, பிர கிருதியின் கர்த்ருத்வம் புருஷனுக்கு யேற்படுகிறது - அதே மாதிரி பிருகிருதியும் விகாரமடைகிறது புருஷஸந்நிதியிலே. (அதனால் புருஷன் கர்த்தா போக்தாவாகவும் ஆகிறான்) - எதுபோல வென்றால் ஸ்படிகமணியின் அருகே ஜபாகுஸும புஷ்பம் (செம்பருத்தி பூ) கொண்டுபோகப்பட்டால் - மணி இரத்தநிறமாக பிரகாசிக்கிறதே அதுபோல - புருஷனில் அத்யாஸம் யேற்படுவதால் - நான் கர்த்தா-போக்தா-என்று அறிவிலியான மனிதர்கள் எண்ணுகிறார்கள். இம்மாதிரி அக்ஞானத்திலிருந்து போகம் யேற்படுகிறது-தத்வ ஞானத் தினாலே அபவர்க்கம் (மோக்ஷம்) யேற்படுகிறது.

மேற்சொல்லப்பட்ட விஷயங்களை சாங்கியர்கள் பிரத் யக்ஷம் அநுமானம் ஆகமம் (வேதசுருதிகளால்) பிரமாணப் படுத்தி ஸாதிக்கிறார்கள். அங்கே - பிரத்யக்ஷ ஸித்தமான பதார்த்தங்களில்-சாங்கியனுக்கும் வேதாந்திக்கும் விவாதம் ஒன்றுமில்லை. ஆகமவிஷயத்திலே - கபிலாதி மஹரிஷிகள் ஸர்வக்ஞர்களாகவும், ஞானமூலமாக விஷயங்கள் சொல் கிறார்கள் என்கிற விஷயம் முதற்கண்டத்திலே (பூர்வமீமாம் ஸகத்தில்) பிரமாண லக்ஷணங்கள் சொல்லப்படும் பிரகர ணத்திலே நிரஸனம் செய்யப்பட்டதாகும். இங்கே பிரதானமே ஜகத்காரணம் என்று அவர்கள் அநுமானத்தி னால் சொல்கிறார்களே-அந்த அபிப்ராயாம் இதில் நிரஸிக்கப் படும்-அவர்களுடைய மதம் இவ்விதமாக முழுவதும் நிரஸ் தம் (கண்டனம்) செய்யப்பட்டது, அதனால் சாங்கிய பக்ஷம் ஒப்புக்கொள்ளப்படாமல் ஆகிறது.

(முதலில் தவறான பிரமை யேற்படும் - சாங்கிய பக்ஷத் தில் சில அம்சங்களை நாம் ஒத்துக்கொள்வதால் - அவர்கள் பக்ஷத்தை ஆதரிக்கிறோம் என்கிற தவறான அபிப்ராயம்

பிரமம் யேற்படும் - அதற்க்காக நாம் முதலில் அவர்கள் பக்ஷத்தைக் கண்டிக்கிறோம் என்று பகவத் ராமானுஜர் சொன்னாரே - அது மேலே சொல்லப்படும் விஷயமாகும். இப் போது இங்கே பிரத்யக்ஷம் அநுமாநம் சுருதி இம்மூன்றும் சாங்கியபக்ஷத்தை ஆதரிப்பதாகச் சொல்லப்படுகிறது. இவைகளில் வேதாந்திக்கும் சாங்கியனுக்கும் பிரத்யக்ஷத் தினால் காணப்படும் வஸ்துக்களில் அபிப்ராய பேதமில்லை. மேலும் நாமும் சாங்கியனும் ஒத்துக் கொள்கிறோம் காரிய மும் காரணமும் ஒன்றே. காரியம் காரணத்தில் உள்ளது. ஆயினும் நமக்கும் அவர்களுக்கும் சில விஷயங்களில் வித்யாஸமுள்ளது. சாங்கியனுக்கு கபிலரிஷியின் உப தேசங்களே ஆதாரம் - பூர்வமீமாம்ஸையில் சுருதி யாது என நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதமாக சாங்கியன் தன் பக்ஷத்திற்கு அநுமாநத்தைப் பெரிதாக நம்பியிருக் கிறான். அவர்களின் அநுமாந பலம் தகர்த்தப்பட்டால் அவர்களின் பக்ஷம் துர்பலமாகி-அவர்கள் பக்ஷம் முழுவதும் கண்டிக்கப்பட்டதாகிறது. இதுதான் மேல் சொல்லப்படும் விஷயமாகும்).

அவர்கள் மீண்டும் வர்ணிக்கிறார்கள். இந்த ஸம்பூர்ண ஜகத்திற்கு ஒரே ஒரு காரணம் (மூலதத்வம்) அவஸ்யம் ஒப்புக் கொள்ளப்படவேண்டியது. காரியங்களோ பலவாக விருக் கின்றன. இப்படி பலவகைப்பட்ட காரியங்கள் ஒரே வஸ்து விலிருந்து உற்பத்தி ஆகாமல் - பல பல காரணங்களிலி ருந்து உற்பத்தியாகுமானால், அநவஸ்தா தோஷம் யேற்படக் கூடும் - காரணத்தை நிர்ணயிப்பதில். உதாரணமாக நூற் கள் இன்னும் சில சேர்ந்து ஒரு துணியாக ஆகிறது. பல அவயவங்களான அவை ஆறுபக்கங்களிலும் ஒன்று சேர்த்து கோர்க்கப்பட்டு-ஒரு துணி எனப்படும் பொருளாக ஆகிறது. இந்த அவயங்களாகிற நூல்கள் - ஒரே மாதிரியாக விருப் பவை-ஒன்று சேர்வதால்-அந்த அவயவங்களும் அதனுடைய அம்சங்களால் ஆக்கப்பட்டு - முந்தியிருந்த நிலையைப்போல் விருந்து கொண்டு - இங்கே மறுபடியும் ஆறுபக்கங்களிலும் சேர்க்கப்பட்டு துணியாகிறது. இங்கே நாம் ஒப்புக்கொள்ள

வேண்டியது - பரமாணுவாக - அணுவாகவிருக்கும் போது ஒன்ருயும் - இந்த அணுவுக்கும் ஆறுபக்கங்களிலும் ஒன்று சேர்ந்து - துணி எனப்படும் காரியத்தை உண்டாக்குகின்றன; ஸம்யுஜ்ய மானத்திஞல் (ஒன்று சேர்ப்பதால்) பரமாணுக்களே காரியமாக ஆகின்றன; இப்படி ஒப்புக்கொள்ளாதபக்ஷத்தில் பிரதிமா அநுபபத்தே: - (இது வைசேஷிகர்களின் அபிப்ராயமும் ஆகும் இது அடுத்த அதிகரணத்தில் விவரிக்கப்படுறது.)

ஆகவே பரமாணுக்களாயினும், அம்சமாகவிருப்பதாலே - அவை ஒன்று சேர்க்கப்படுவதாலே - காரியமாகிறது - (அதன் அவயவங்களால் - அந்த அவயவங்களும் அதனுடைய அம்ச (அவயவங்களால்) உண்டாக்கப்படுகிறது. இவ்விதமாக காரியம் யேற்படுவதால் - எதுதான் காரணம் என்று சொல்லக் கூடிய வ்யவஸ்தை - எங்கே காரணம் இருக்கிறது என்று நிச்சயமாகச் சொல்ல முடிகிறதில்லை. ஆகையால் காரண வ்யவஸ்தை யேற்படாதபடியால் ஒரே ஒரு திரவியம் பலவித விசித்திர பரிணாம சக்தி கொண்டதாக தானே யாதொரு விகாரத்தை - ஸ்வரூபத்திலே அடையாமல் (स्वयमप्रच्युतस्वरूपमेव) தன்னில் ஒரு அம்சம் (பகுதி) மாறுதலடைகிறபடியால் - அந்த மூலபிரகிருதியே மஹத் முதலிய அநந்த அவஸ்தைகளை அடைந்திருக்கும் அவைகளுக்குத் தானே காரணமாயும் - தான் எதற்கும் காரியமாகாமலே விருப்பதால் அத்தகைய ஒரு திரவியம் மூலகாரணமாக ஒப்புக்கொள்ளப்பட வேண்டியதாகும்.

இந்த ஏகமான காரணம் - குணத்ரயஸாம்ய நிலையை (ஸத்வரஜஸதமஸ் ஆகிற முக்குணங்கள்) அடைந்து இந்த ஸாம்யரூபம் பிரதானமாக - மூலபிரக்ருதி என்று சொல்லும்படி ஆகிறது. இம்மாதிரி காரணமாகக் கல்பிக்கப்பட்ட ஹேதுவிற்கு - பல காரணங்களைக் காட்டுகிருர்கள் - ஸாங். காரிகை 15-16.

भेदानां परिमाणात् समन्वयाच्छक्तितः प्रवृत्तेश्च ।
कारण कार्यविभागादविभागाद्वैश्वरूप्यस्य ।।
.........कारणमस्त्य व्यक्तम् इति

காரியங்கள் பரிமாணத்திஞல் யேற்படுகின்றன - மூலபிர கிருதியே இப்படிப்பட்ட பல ரூபங்கள் கொண்ட ஜகத்திற்கு காரணமாகிறது - இந்த பரிமாணம் ஸமந்வயத்திஞல் (ஒன்று சேர்ப்பதால்) - அம்சங்களாகிற அவயவங்கள் ஒன்று சேர்க்கப்பட்டு - (எப்படி பாஜ்ஜ முதலிய காரியங்கள் களிமண்ணின் அம்சங்களின் சேர்க்கையால் — ஸர்வகாரிய மாக ஆகின்றதோ - அதுபோல). பிரவிருத்தி விஷயங்களில் சக்தியிருப்பதாலே - யேற்படுகிறது - காரியம் காரணத்தின் அவயவங்களின் சேர்க்கையால் உண்டாகிறது. இப்படி காரியம் காரணம் ஆகிற விபாகம் (பிரிவு); (காரணத்தி லிருந்து காரியம் ஆவிர்பவிப்பது - விபாகம்) — அப்படி யில்லாதபடி அவிபாகாத் — (இப்படி விசித்திரமாக ஒன்று சேர்க்கப்பட்ட காரியம் முடிந்து லயமாகிறது - அழிந்து போன தசையில்) வைஸ்வரூப்யஸ்ய - விஸ்வரூபமாக - ஆகிறது; (அதாவது ஜகத் உற்பத்தியாகி - லயமடைவது இரண்டிலும் எதிலோ - அதுவே காரணப் பொருளாகும்).

(இங்கே சாங்கிய பக்ஷத்தில் மூலபிரகிருதி என்கிறது காரணப் பொருள். குணத்ரய ஆத்மகமேவ காரணம். மஹத் முதலியவை தாங்களே பரிஞமமடைவதால் - அவை களுக்கு இன்ஞென்று காரணமாகக் கல்பிக்க வேண்டுமாஞல் அநவஸ்தா தோஷமும் யேற்படும் என்கிற பயமும், அபரி மிதம் - பரிஞமமடையாது - என்பது சுலோக அர்த்தமாகத் தேறும். அதஞல் குணத்ரய ஸாம்யரூபம் என்பதை ஸமன் வயாதித்வத்திஞல் - வ்யாக்யானம்) காரியத்தின் பிரவிருத்தியை - உற்பத்தி என்கிறோம். சூத்ரத்திலே ரசஞ் என்கிற சப்தத்தால் சேதனனுடைய வ்யாபாரம் அதிஷ்டிக் கப்படுவது - அதாவது அசேதனம் மாத்திரம் கார்யத்வமாக மாட்டாது - சேதனனுடைய செயலை எதிர்பார்க்கிறது.

மூலபிரகிருதி அசேதனமாகையால் - அநுமாநத்திருலும் ஜகத் காரணமாகமாட்டாது. சேதனன் அதிஷ்டிக்கப்பட வேண்டும். அவனுடைய செயலைக் காரணமாகவும் கொண்டு அசேதனப் பொருள்கள் செயல்படுகின்றன. ஆகவே அநு மாநத்தால் அறியப்படும் பிரதானம் ஜகத்காரணமாகாது).

மேற்சொன்ன भेदानं...कारणमस्त्यव्यक्तम् - என்பதற்கு அர்த்தம் - விஸ்வரூபமேவ - வைஸ்வரூப்யம் விசித்திர ஏற்பாடுகள் - பலவகைப்பட்ட சரீரங்கள் இவை எல்லாம் சேர்ந்த ஜகத் (உலகம்) என ஆகிறது. அந்த ஜகத்தில் பலவிதமான (ஸம்நிவேசத்வேந) ஏற்பாடுகள் விருப்பதால் பலவகைப்பட்ட காரியங்களாக காணப்படுகின்றன. இவைகளுக்கு மூலகாரணமாக - தானே ஸ்வயம் இன்னென்றின் காரியமாகாமல் - மற்ற உற்பத்தி செய்யப்பட்ட காரியங்களுக்கு ஒரே காரணமாகவிருப்பது अव्यक्त - மூலபிரகிருதியாகும் - (நாமரூபவிபாகமின்றி ஒரே வஸ்துவாகத் தோற்றமளிக்கும் காரணம்) எப்படி-காரியத்திற்கே காரணரூபமிருப்பதாலே.(காரணத்திற்கு காரியத்தின் ஸ்வரூபமிருப்பதாலே-) வாஸ்தவமாகவே ஒவ்வொரு காரியமோ அதனதன் சொந்த காரணத்திலிருந்து வித்யாஸப்படுத்திச் சொல்வதாலே - அந்தக் காரணத்திற்கு அதே ஸ்வரூபமிருப்பதாலே; மேலும் காரியமும் அழிந்தபின்பு லயமடைவது காரணத்துடன் ஒன்ருகி விடுகிறதாலே - அதனுல் காரியமும் காரணமும் ஐக்யம் - அவஸ்தாபேதமே ஒழிய திரவிய மாறுதல் இல்லை. உதாரணமாக ம்ருத் - சுவர்ணம் போன்ற காரண திரவியங்கள் - அவை காரியமாகும்போது பானை தங்க நெக்லஸ் - கிரீடம்என ஆகின்றபடியால்-காரணத்திலிருந்து காரியங்களைப் பிரித்துக் காட்டப்படுகின்றன - அவைகளிலிருந்தே முதலில் இருந்தாலும் - அவிபாகமாக (நாமரூபமாகிற வித்யாஸப்படாமல் இருந்தாலும்). ஆகையால் என்ன தேறுகிறது - விஸ்வரூபமான ஜகத்திற்கு அதே ரூபத்துடன் (तत्स्वरूपात्) விருக்கும் பிரதானம் உற்பத்திக்குக் காரணமாகிறது. (प्रधानात् जगत् उत्पत्तिः) அந்த பிரதானத்திலே ஜகத் லயமடைகிறது - இதனுல் ஜகத்தின் உற்பத்தி லயஸ்தானங்களுக்கு

இருப்பிடமாக பிரதானமிருப்பதால் - பிரதானமே ஜகத்கார ணம் என்பதாகும் (பூர்வபக்ஷம்).

(மீண்டும் வீளக்கப்படுகிறது) குணத்ரய ஸாம்யரூபம் ஒன்று சேர்ந்துள்ள ஸமமான நிலையில் பிரதானம் தான் - அந்த ஜகத்திற்கும் பிரதானத்திற்கும் ஒற்றுமையிருப்பதால்- ஜகத் காரணம்-ஏனெனில் இந்த உலகம் சுகதுக்கங்களையும் மோஹமாகிற அவித்யைகளையும் கொண்டது. இதற்குக் காரணம் ஸத்வரஜஸ்தமஸ் ஆகிற (திரவியங்களே) குணங் களேயாகும். உதாரணமாக ம்ருத்திஞல் உண்டாக்கப்பட்ட கடம் (பானை) - அதற்கு மிருத் (களிமண்) திரவியமே கார ணம். களிமண்ணுகிற காரண வஸ்துவே அந்த பானையின் உற்பத்திக்கும் - லயத்திற்கு இடமும் ஆகிறது. அந்த பிர தானமே உலகத்தின் செயல்படுதலுக்கு சக்திகளைக் கொண்ட தாகிறது. இந்த விஷயம் பார்க்கப்படுவதாலே - அவ்யக்த மாகிற மூலபிரகிருதிக்கு காரணத்வம் முக்குணங்கள் ஸாம்ய (ஸமமான நிலையையடைவதாலும் - தேசம் காலம் இத்யாதிகளால் அபரிமிதமாக (பாதிதமாகாதபடி) அவை விருப்பதால் மூலபிரக்ருதிதான் ஜகத் காரணமாகிறது - காரி யங்களாகிற அதன் பேதங்கள் - மஹத் அஹங்காரதன் மாத்திரைகள் பரிமிதமாக ஆகின்றன - (அளவுபட்டு போகிறபடியால்). இவை காரண வஸ்துவிலிருந்து பிரித்துக் (நாமரூபம் கொண்டதாக) காட்டப்படுகின்றன - மஹத் முதலியதத்வங்கள் — கடங்களைப்போல அளவில் சிறியவை களாகவிருப்பதால் - அவைகள் ஸம்பூர்ண ஜகத்தின் உற்பத்திக்குக் காரணமாவதில்லை. ஆகையால் தீர்மானிக் கப்படுகிறது). திரிகுணங்கள் கொண்ட ஜகத் குணத்ரய ஸாம்யரூப (சமான நிலையையடைந்த) பிரதானத்தையே தன் உற்பத்திக்கு ஏககாரணமாகக் கொண்டது (பூர்வபக்ஷம்).

விளக்கம் :-

சாங்கியன் சொல்வது, மூலபிரகிருதிதான் ஜகத்திலிருக் கும்விசித்திர ரூபங்களுக்கு காரணம், ஏனெனின் உற்பத்தி செய்யப்பட்ட (நாமரூப வித்யாஸப் படுத்தப்பட்ட) வஸ்துக் கள் அளவிலும் சக்தியிலும் பரிமிதமானவை. 2 காரண

காரியரூபத்திலே ஸாம்யம் (ஒற்றுமை) 3. பிரவிருத்தி (உற்பத்தி) மூலபிரக்ருதியின் சக்தி சாமர்த்தியத்தால் யேற்படுகிறது. 4. காரியம் காரணம் இவைகளுக்கு பேதமும் ஒற்றுமையும் இருக்கிறது (சா. காரிகை 15-6)

ஸ்ரீபாஷ்யம் :-

இதற்கு நாம்பதில் கூறுகிறோம் - **रचनानुपपत्तेश्च नानुमानं प्रवृत्तेश्च ।** சேதனனுல் அதிஷ்டிக்கப்படாத பிரதானம் உலகை உண்டாக்கமாட்டாது—பிரவிருத்தேஸ்ச-சேதனனுல் அதிஷ்டிக்கப்பட்டால் அசேதனப்பொருள் செயல்படுகிறது - தர்சனாத்ச - இது, பிரத்யக்ஷம் - சுருதியில் காணப்படுவதாலும் அநுமாநம் ந அனுமானத்திருல் அறியப்படும் பிரதானம் ஜகத் காரணமாகாது. **अनमीयत इत्यनुमानं**-அனுமானத்திருல் ஸித்திக்கப்படும் பிரதரனம் ஜகத் காரணமாகமாட்டாது-அது அசேதனம். அசேதனப் பொருள்கள் சேதனனுல் அதிஷ்டிக்கப்பட்டால் செயல்படுகின்றன - மேலும் பிரதானம் பிருஹ்மம் அதிஷ்டிக்கப்படாமல் அது உலகை உண்டாக்குவதற்கு சக்தி பெற்றதல்ல - சூத் II - 2 - 1) - (அநுமானத்திருல் அறியப்படுவது-சுருதப் பிரகாசிகையில் கொடுக்கப்பட்டிருக்கிறது-உலகம் ஒரு காரியம். பலவகைப்பட்ட யேற்பாடுகளைக் கொண்டது - ஒரு தேரைப்போல. அது காரியமாவதாலே-உலக்மதனது உற்பத்தியின் காரணமாக அதுபோல ஒன்றை உள்ளது - ஏனெனில் எதுகாரியமோ-அதற்கு காரணம் அதைப்போல ஒன்றுளது-எப்படி பானைக்கு களிமண் காரணமாக ஆகுமோ). **रचना** சேதன வியாபாரத்தில் பிரயோகம். சேதனன் அதிஷ்டிக்காமல் அசேதனம் மாத்திரம் செயல்படாது - அகார்யவத்)

பிரதானம் (உன்ருல் அதாவது சாங்கியனுல் அனுமாநரீதியாக காரணமாக ஒப்புக் கொள்ளப்படுகிறதே) அது இம்மாதிரியான பல வகைப்பட்ட ஆச்சரியத்தக்க வஸ்துக்களடங்கிய உலகத்தை உண்டாக்கக் காரணமாகாது - ஏனெனில் - அது ஒரு அசேதனம் - அறிவுள்ள சேதனனுல் அதிஷ்டிக்கப் படாமல் இருப்பதால். எது இவ்விதமாக அசேதனமாகவும் சேதனனுல் அதிஷ்டிக்கப்படாமல் இருக்

கிறதோ - அது இன்னொரு வஸ்துவை ஸ்வயமாகவே உண் டாக்கச் சக்தி பெற்றதில்லை. உதாரணமாக ஒருமரம் - ஒரு அரண்மனையை நிர்மாணம் செய்வதற்கோ - ரதத்தை உண்டாக்கவோ-முடியாது. ஒரு நிமித்தகாரணம் தேவை-சேதனனால் அதிஷ்டிக்கப்பட்டு-அது செயல்படவேண்டியது. இது உலகில் காணப்படுகிறது. அந்த சேதனன் அசேதன வஸ்துவின் தன்மையை நன்கு அறிந்திருக்கவேண்டும். என்ன காரியம் இதிலிருந்து உண்டாக்கக் கூடும் என் பதை அவன் ஆராய வேண்டும். ஆகவே சூத்ரத்திலே சொல்லப்பட்டது சரியாகும். பிரதானம் சேதனனால் அதிஷ் டிக்கப்படாவிடில் - ஒரு வஸ்துவை உண்டாக்க காரண மாகாது. न प्राज्ञान धिष्टितं प्रधानं कारणमित्युक्तं भवति । (இங்கே பிரதானம் என்பது ஸத்வரஜஸ் தமஸ் ஆகிற ஸமுச்சிய குணங்கள் திரவியமில்லை.)

இங்கே உத்தமூர்ஸ்வாமி அருளியது -

अत्र व्यतिरेकमुखेनापि व्याप्यव्यापक भावसिद्धिं दर्शयितुं एततर्कानुग्राह्य मनुमानं दर्शयितुञ्च सूत्र प्रवृत्तश्चेत्युक्तम् । जगत् प्राज्ञाधिष्टितकारणकम् उत्पद्यमानत्वात् घटादिव दिति प्रयोगः । न च तर्ह्यनुमानेनैवेश्वर सिद्ध्यापत्तिः । सांख्य संमत जीवविलक्षणाभिज्ञानेकचेतनग्रहणेनो प्यनुमानपर्यवसानस्य शास्त्र योनित्वादिकरणे उक्तत्वात् । एवं तर्क प्रमाणयोः समुच्चयाय द्वितीयश्चकारः । प्रथमस्तु रचनानुप पत्तिवत् समन्वयानुपपत्तिरप्यस्तीत्यनुक्तसमुच्चा-यकः । तदाह चकारादिति ।

ஆகையால் ஸர்வேஸ்வரனால் அதிஷ்டக்கப்படாத பிர தானம் ஜகத்காரணம் என்னும் சாங்கியமதம் பொருந்தாது யுக்திகளுக்கு. குணங்களாயிருப்பவை என்றே லோகவேதங் களில் பிரஸித்தியுள்ளபடியால் - குணங்களால் அவை உலகிற்கு உபாதான காரணமாக முடியாது என்பதை சூத்திரத்திலுள்ள அநுக்த ஸமுச்சாயகமான முதல் च (சகாரம்) உணர்த்துகிறது.

च कारदन्वयस्यानैकान्त्यं समुच्चिनोति ।
न ह्यन्वितं शौक्ल्य गोत्वादि कारणत्वव्याप्तम् ॥

[அனுபந்தம்:-உத்தமூர்ஸ்வாமி-ஐ - 2 (ஸீதாரஸமஞ்ஜரி). சாங்கியன் வேதாந்தியின் கருத்துக்களுக்குமிக நெருங்கிய வன். அவனது ஸத்காரிய வாதத்திலும் சிறிது வாசியுண்டு. உலகில் உள்ள கார்யங்கள் எல்லாம் காரணங்களில் மறைந் திருக்கின்றன - சிலசமயம் தோன்றுகின்றன. (ஆமையின் உடலில் அவயவங்கள் மறைந்து இருப்பதுபோல; எள்ளில் எண்ணெய்) இதை தார்க்கிகர் பொறுக்கவில்லை. மண் உருண்டையில் பானைகள் காணப்படவில்லையே - ஆகவே முன் இல்லாத திரவியங்கள் புதியனவாக உண்டாகின்றன, என அஸத் காரியவாதம் செய்தனர். இதனை ஆரம்பணுதி கரணத்தில் முன்னரே நிரஸிக்கப்பட்டது. பிராமாணிகமான பிரகிருதி முதலான திரவியங்களைவிட்டு, அப்ரமாணிகமான பரமாணுக்களை கற்பித்து-அவற்றிற்கு குணங்களின் உற்பத் தியைக்கூறி-அதில் ஜாதி என்று பிரிவையும்-வஸ்துவையும் சொல்லி - இவற்றில் ஆதார ஆதேயம் என்கிற பேதம் இருப்பதால் அதற்காக ஸமவாயம் என்கிற சம்பந்தத்தைச் சொல்லி, இவை மொத்தம் பாவபதார்த்தங்கள், அதுபோல அபாவபதார்த்தங்கள் பலவிருக்கின்றன என்று சொல்லினர் தார்க்கிகர்கள். இது எல்லாம் ஆபாஸக கற்பனைகள் அபரிக்ரஹாச்ச அத்யந்தம் அநபேக்ஷா - என்று மேலே பாஹ்ய துல்யமாக தூஷிக்கப் போகிறார்.)

முதலில் வரும் ச காரம் (சூத்ரத்திலுள்ளது) அதனால் இன்னொருகாரணமாகவும் - அதேசமயம் மறுப்பாகவும். சொல்லப்படுகிறது - ஸத்வரஜஸ் ஆகிறகுணங்கள் ஒன்று சேர்ந்து இருப்பவை - காரியத்துடன் சேர்ந்திருப்பது-இங்கு காரியமாகிற உலகில் - எப்போதும் இருப்பது என்கிற நியமமில்லை. இதனால் ஸதாசம்பந்தம் பெற்றுள்ள ஸத்வரஜஸ் ஸாதி காரணத்வம் - ரொம்ப பலஹீனமானது - அதனால் சுக்லத்வம் என்கிற குணம் - கோத்வம் என்கிற ஜாதி இவை களுக்கு யேற்படும் என்பது சரியாகாது.

(இங்கு சொல்லப்படுவது - சுக்லத்வம் (வெண்மை) காரணத்தின் குணமாகுமாகும் போது - அது காரியத்திலும் காணப்படலாம் (வெள்ளை நூல் - வெள்ளைத்துணி) ஆனால்

அந்த குணம் துணியாவதற்குக் காரணமாகாது. அதே மாதிரி கோத்வம் - ஒரு ஜாதியின் ஸமுச்சய சேர்க்கை-அதுவும் காரணமாகாது. அதனுல் ஸத்வரஜஸ்ஸாதி குணங்கள் காரணமாகாது - ஏனெனில் அவை திரவியமில்லை என்கிற படியால்).

இந்தக்காரணத்தால் சொல்லக்கூடாது - சுக்லத்வம், அதுபோன்ற தர்மங்கள்-எப்போதும் காரியங்களில் காணப்பட்டாலும், காரணத்வத்தைக் கொள்ளாது-திரவியமில்லாத படியால். ஆனுல் தங்கம் போன்ற திரவியங்கள் காரியங்களாகிற வளைகள் - க்ரீடம் முதலியவைகளுடன் சேர்ந்திருப்பதும் — அதற்கு காரணத்வம் உண்டு - (காரணத்வ வ்யாப்திரஸ்த்யேவ) ; அதுமாதிரி ஸத்வம் முதலிய திரவியங்களும் காரியமாகிற (உலகில்) எப்போதும் காணப்பட்டாலும் அவைகளுக்கும் காரணத்வ வ்யாப்தி (காரணமாக ஆவதில்) உண்டு-என்று சொல்வது சரியாகாது-ஏனெனில் ஸத்வம் முதலியவையோ திரவிய தர்மங்கள் - அவைகள் திரவிய ஸ்வரூபமல்ல. மேலும் ஸத்வாதி அவைகள் லகுத்தன்மை, பிரகாசம் முதலியவைகளுக்குக் காரணமாகும் போது, இவை ப்ருதிவியாதிகளில் இருப்பினும், நிச்சயமாக அந்த திரவியங்களுக்கு குறிப்பிட்ட ஸ்வபாவ விசேஷங்களாக அமைகின்றன-ஆகவே ம்ருத்-தங்கம் இத்யாதிகளைப் போல-அவை காரியங்களுடன் எப்போதும் சம்பந்தப்பட்டது திரவியங்களாகச் சொல்லும்படி - (உதாரணம் ம்ருத் - சுவர்ணம் போல) அறியப்படுவதில்லை नकायान्विता उपलभ्यते; மேலும் ஸத்வரஜஸ்தமஸ்-இவை குணங்களாகவே பிரஸித்தி (திரவியமல்ல)-(இங்கே சொல்லப்படுவது - ஸத்வரஜஸ்ஸாதி காரணமாகாது - (உலகில் காணப்படினும்). சுக்லத்வம் - அவை காரியங்களில் குணங்களாகக் காணப்படுகின்றன - உதாரணம் பிரகாசத்வம் வெளுப்பு - இதுபோல)

ஆகவே இதுவரை சொல்லப்பட்டது - காரண வ்யவஸ்தையை நிச்சயிப்பதற்கு - ஜகத்திற்கு (உலகுக்கு) ஒரு காரணம் (ஏக மூலத்வம்) இருக்கவேண்டும் - இப்படிச் சொல்

வது சரியாகாது. ஏனெனில் ஸத்வம் ரஜ்ஸ்ஸாதி ஒன்றுக்கு மேல்பட்ட எண்ணிக்கை (மூன்ருக) விருக்கின்றன - ஏகத்வ மில்லெ). ஆகையினுல் தான் காரண வ்யவஸ்தையும் நிச்சயிக்கப்படாமலிருக்கிறது. நீ (ஸாங்கியனைப்பார்த்து) சொல்கிருய் - ஸத்வரஜதமஸ் இவை ஸ்ாம்யாவஸ்தையில் - ஸத்வாதியேவ - அதுவே பிரதானம் என்கிருய் - உன் மத மாக. ஆகையால் பலகாரணங்கள் (ஏகத்வமில்லெ)என இருக் கிறபடியால்-அநவஸ்தாதோஷம் யேற்படும்-இது உன்னுலே சொல்லப்பட்டு - பரிகரிக்கப்பட முடியாதபடி அதேபிரகாரம் இருக்கிறது). மேலும் இந்த ஸத்வாதி குணங்களை-உன்னுல் சொல்லப்படுகிறபடி - அபரிமிதமாக விருக்கின்ற படியால் - (பலவஸ்துக்களுக்கு பலவகைப்பட்ட காரணங்களாக விருக் கின்றன) - அதனுல் காரணமாக நிச்சயக்கமுடிகிறதில்லெ. அபரிமித (எண்ணிக்கை பலவாக விருப்பதால் - இந்த மூன்று குணங்களுக்கும் எங்கும் வ்யாப்தி - ஸர்வகதத்வே ந யேற்படுகிறது ; அதனுல் ஒன்று இன்னென்றை விட கூடவோ குறைந்திருப்பதோ யேற்படாது - அதனுல் வைஷ்ம்ய ஸித்தி (சமத்வ நிலெக்கு சலனத்தினுல் யேற்படும் மாறுதல்) அதிலிருந்து யேற்படுவதில்லெ. இதிலிருந்து தெரிவது என்னவென்ருல் - ஒரு காரியமும் உண்டாகாது. (காரியாரம்பம் யேற்படாது). ஆகவே காரிய ஆரம்பம் யேற்படுவதற்கு, ஸத்வம் முதலியவைகளுக்கு பரிமிதத்வம் (சிறிதளவு) அவசியம் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும்.

அந்த உதாரணங்களில் (ரதம் - அரண்மணை - நாம் காண்கிருேம் ஸ்பஷ்டமாக - சேதனன் அதிஷ்டிப்பது - (தலெவனுக விருந்து செயல்படுத்துவது) - அதற்கு எதிராக மற்ற உதாரணங்களில், அசேதனத்திற்கு சேதனன் அதிஷ் டிப்பதாலே காரியம் உண்டாகிறது. அதனுல் சூத்ரக்காரர் அன்வய வ்யதிரேகமாகக் காட்டுகிருர்.

(இங்கே சொல்லப்பட்டது - ஜகத் ஒரு காரியம் - அது அசேதனம் ; அதன் உற்பத்திக்குக்காரணம் இன்னெரு அசேதனமாக (பிரதானமாக) ஆகமாட்டாது. பிரதானம்

பிருஹ்மம் அதிஷ்டிக்கப்பட்டால் காரணமாகலாம் - எது காரியமாகிறதோ - அதற்கு உபாதான காரணமாக அசேதனத்தைக் கொள்ளாது. குயவன் பானை - ரதம் ரதத்தை நிர்மாணிப்பவன் இத்யாதி உதாரணங்களால். இவ்விதம் சேதனன் அதிஷ்டிக்கப்படாவிடில் - அசேதனம் உற்பத்திக்குக் காரணமாகாது - அது காரியமாகவும் ஆகாது. என்பதாம்).

ஸி. சூத்ரம். पयोऽम्बुवच्चेत् तत्रापि (2-2 2)
பயோம்புவச்சேத் தத்ராபி (2-2-2)

பயோம்புவத் சேத் - பாலும் நீரும் (சேதனனால் அதிஷ்டிக்கப்படாமலே பரிணமிப்பது) போல, பிரதானமும் தானாகவே பரிணமிக்கலாம். எனில், தத்ர அபி - அங்கே கூட - சேதனனால் அதிஷ்டிக்கப்பட்டே, பரிணாமம் உண்டாகிறது.

முன்பு பார்த்தோம் பால் தயிராக மாறுவது. அதேபடி மேக நீர் தானாகவே இளநீர் - மாம்பழரஸம் - இத்யாதிகளாக மாறுவதைக் காண்கிறோம். இதேபோல ஏன் பிரதானம் சேதன அதிஷ்டானம் இல்லாமலே, தானே பரிணாமமடையலாமே—அதற்கு குறையில்லை. (சித்தாந்தம் இது தவறு - சேதனன் அதிஷ்டிக்கப்படாமல் பிரகிருதி பரிணமிக்க முடியாது – மேல் சூத்ரத்தில் சொன்னதே சரியாகும்.)

மேலே சொல்லப்பட்டது பிரதானம் ஒரு சேதனனால் அதிஷடிக்கப்படாவிடில், விசித்திர ஜகத் ஸ்ருஷ்டியை உண்டாக்குவது பொருந்தாதாகையால், என்றால் - அது சரியாகாது. எப்படி பால் - தண்ணீரைப்போல - பால் தயிராக மாறுகிறது; மழை நீர் இள நீர் - பழரஸமாக மாறுகிறது - அதைப்போல செயல்தானாகவே ஏற்படக்கூடும். இதன் அர்த்தம் - பால் தயிராகும் போது – பரம்பரையாக பல மாறுபாடுகள் தொடர்ந்து யேற்படுகின்றன. இதற்கு வேறு உதவி தேவையில்லை - தானே உண்டாக்கிக் கொள்கிறது.

எப்படி மேக நீர் - மழை - ஒரேபடியாகத் தண்ணீராயி னும் தென்னை மரம் - பனை மரம் - மாமரம் வில்வப்பழம், விளாமரம், எலுமிச்சை புளிமரம்—இன்னும் பலவற்றில் விழுந்து அந்த அந்த மரங்களின் விசித்திர பழங்களின் ரஸமாகிறதோ - தானே காரணமாகிறதோ - அதேபடி யாக பிரதானத்திற்கும் கூட பரிணமத்வம் ஸ்வய மாகவே யேற்படுகிறது. இங்கே சேதன அதிஷ்டானம் யேற்படுகிறதில்லை. அதேபடி பிரதானத்திற்கும் மாறும் ஸ்வபாவம் (பரிணமத்வம்) உண்டு. அன்ய அதிஷ்டான த்வம் வேண்டாம். பிரளயத்திலே, அதேபடி ஸ்ருஷ்டி வேளைகளிலே, அது பரிணமத்தை அடைகிறது. ஸத்ருச மான பரிணமத்தை அடைகிறது - ஸ்ருஷ்டியிலும் (எப்படி) குண வைஷம்ய நிமித்த விசித்திர பரிணம அவஸ்தைகளை அடைகிறுப்போல. இதே மாதிரி - சாங்கி கார்கை 16-ல் சொல்லப்படுகிறது - परिणामत: सलिलवत् प्रतिप्रतिगुणाश्रयविशेषात्- இயற்கையாகவே சுலபமாக பரிணமம் அடைகிறதே - அது போல் தண்ணீர் (எப்படி பிரதானம் ஸ்ருஷ்டியிலே செயல் படுகிறதோ அது போல) ஆகிறது - முக்குணங்களின் ஸமத்வ நிலையில் சலனம் யேற்பட்டு - பிரதானம் உற்பத்தி செய்கிறது. இப்படிச் சொல்வது இதற்குச் சமானமாகும் ஒவ்வொரு வஸ்துவின் உள்ளே ஒவ்வொரு குணம் ஆஸ்ரயம் செய்கிறதாலே - எப்படி அம்ச அம்சிபாவ சம்பந்தம் யேற் படுவதுபோல வஸ்துவும் குணமும் யேற்பட்டதாகிறது.

இதே பிரகாரம் அவ்யக்தமாகிற முலபிரக்ருதி சேதன னுடைய உதவி அபேக்ஷையின்றி - தானே ஸ்வதந்திரமாக பரிணமம் அடைகிறது என்றுல் - அதற்கு நாம்பதில் அளிக் கிறேம் - तत्रापि - அங்கேயும் கூட ; (அந்த உதாரணங்களி லும் கூட) பால் தயிராகிறது என்கிற உதாரணத்திலே, (உன்முல் சொல்லப்படுகிறதே) - இங்கேகூட பிருஹ்மம் அதிஷ்டிக்கப்படாமல், யாதொரு செயலும் பிரதானத்திற்கு யேற்படாது, அதாவது இந்த உதாரணங்களிலும் கூட - பிருஹ்மம் அதிஷ்டிக்கப்படுவதால் இம்மாதிரியான மாறு தல் யேற்படுகின்றன. இந்த விஷயம் சூத்ரம். உ. 1-24

उपसंहारदर्शनान्नेति चेन्न क्षीरवद्धि - உலகில் காரியப் பொருள்களை உண்டாக்கும்போது - உபகரணங்களை உதவியாகக் கொண்டு-ஆகின்றன எனநாம் காண்கிறோம்-ந (அத்தகைய உப்கரணங்களற்ற பரம் பொருள்) காரணமாகமாட்டாது ; இதிசேத் (என்று சொல்வாயாகில்) ; ந - இந்த ஆட்சேபம் சரியாகாது ; க்ஷீரவத் - பால் தயிராவதில் உபகரணமற்ற பிருஹ்மும் காரணமாகலாம்-ஹி—இது உலகில் பிரஸித்தம் - இதன் அர்த்தம் பரமாத்மா வேறு உபகரணங்களின் சம்பந்த மின்றி (தன் சரீரத்தைவிட்டு வேறு உபகரணங்களின் உதவியின்றி) - பரமாத்மா பரிணாமத்தை தனது சரீரத்வாரா (சரீரமுலமாக) - தனக்குள்ள அஸாதாரண மகிமையாலே - அடையக்கூடும். என்று சொல்லிப்பட்டது. இங்கே பிருஹ் மத்தின் அதிஷ்டானத்வம் பிரதானத்தின் விஷயத்திலேயும் சிறிதளவும் கவனிக்கப்படாமல் தள்ளப்படவில்லை. (पराकृत अதாவது பிரதான விஷயத்திலும் பிருஹ்மம் அதிஷ்டிக்கப் பட்டு - அது செயல்படுகிறது என்று அர்த்தம்). இதையே சுருதி சொல்கிறது - योप्सु तिष्ठन् அந்தர்யாமி பிராம்மணத் திலே - எந்த பரமாத்மா தண்ணீரில் விருந்து கொண்டு - (அதை செயல்படவைக்கிறார்).

(இங்கே சொல்லப்படுவதை நோக்கவும் - சூத் **2-1-24**ல் பிருஹ்மம் தன் சங்கல்பத்தாலே - வேறு உபகாரணங்களின் உதவியின்றி - ஸஹகாரணமில்லாமல் - ஸ்ருஷ்டிக்கிறது - ஆனால் பிரதானத்தை பிருஹ்மம் அதிஷ்டிக்காமல், பிரதானம் செயல்படமுடியாது. அந்தர்யாமி பிராம்மணத் திலே ஓதப்படுகிறது-பிருஹ்மம் எல்லாவஸ்துக்களிலும் உள் உறைந்து எல்லாவற்றையும் நியமனம் செய்கிறார் என்ப தாலே.

இன்னொரு விஷயம் - மூலபிரகிருதியாகிற அசேதனம் பிரளயதசையிலும் மாறுதலையடைகிறது. அவ்விதமாகும் போது குணங்கள் மாறுபாட்டை அடைகிறதில்லை - ஒவ்வொரு காரியத்தின் காரணத்தின் மாறுதலாகும். (இது ஸ்ருஷ்டியிலே யேற்படுகிறது.)

ஸி. ஸூத்ரம். व्यतिरेकानवस्थितेश्चानपेक्षत्वात् (2. 2. 3)
வ்யதிரேகாநவஸ்திதேஸ்சாநபேக்ஷத்வாத் (2. 2. 3)

அநபேக்ஷத்வாத் - சேதனனால் அதிஷ்டிக்கப்படுவதை எதிர்பாராமையால் - (அதாவது அத்தகைய காரணத்தை அபேக்ஷிக்காமலே) வயதிரேகா ந வஸ்திதே: ச - ஸ்ருஷ்டியிலேயும் வேறான நிலையான லய நிலையில் நில்லாமல் (ப்ரகிருதிக்கு எப்போதும் ஸ்ருஷ்டியே யேற்பட்டுக் கொண்டு இருக்க வேண்டிவருமாகையாலும் - ஸ்வதந்திர பிரகிருதி (சேதன அதிஷ்டானமில்லாத பிரக்கிருதி) ஜகத் காரணமாக மாட்டாது.

(இங்கே அசேதனமாகிற பிரதானத்துக்கு எப்போதும் ஸ்ருஷ்டியே ஏற்பட்டுக் கொண்டிருக்கும் - லய நிலையிலும் கூட. இல்லாவிடில் லயநிலையே இல்லை எனச்சொல்லலாம். ஸ்ருஷ்டியில் மாத்திரம் ஆனால் சரி; அப்படி பிரளயத்திலும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் - ஒரே மாதிரியாகவிருக்கவேண்டியதாலே - அசேதனமாக விருப்பதாலே. சேதனன் அதிஷ்டத்தால் இம்மாதிரி நிலை பிரதானத்துக்கு யேற்படாது. விஷம ஸ்ருஷ்டியும் - சுகமய ஸ்ருஷ்டியும் யேற்படுகிறதே - ஸ்வதந்திரமான பிரகிருதிக்கு இது ஒட்டாது.)

ஸத்ய சங்கல்பத்தால் ஈஸ்வரனின் அதிஷ்டாதாவாக விருப்பதை அபேக்ஷிக்காமல் - பிரதானம் ஸ்வயமாகவே பரிணமிக்கிறது - என்று சொல்லப்படுமாகில் - ஸர்க்கம் எனப்படும் (ஸ்ருஷ்டிக்கு) வேறாக லயநிலை யேற்படாவண்ணம் ஒரு நிலை யேற்படும் (அதாவது பரிணாமம் கால வரையின்றி ஓயாமல் நடந்து கொண்டிருக்கும் - ஸ்வதந்திர பிரதானத்திற்கு). பிரதி ஸர்க்க அவஸ்தையிலும் அநவஸ்தை யேற்படும். பிரதானத்தை சேதனனாகிற பரமாத்மா அதிஷ்டிக்காவிடில் - இந்தக் காரணத்தாலே சேதன அதிஷ்டாதாவாகவில்லாத பிரதானம் ஜகத் காரணமாகமாட்டாது. பிருஹ்மம் பிரதானத்தை அதிஷ்டித்தால்- (அதாவது சேதன அதிஷ்டானம் யேற்பட்டால்) தான் அந்த

ஈஸ்வரன் ஸத்ய சங்கல்பத்தால் எல்லாவற்றையும் நிறை வேற்றுகிறபடியால் - ஒவ்வொரு ஸ்ருஷ்டியிலும் விசித்திர ஸ்ருஷ்டி வ்யவஸ்தை யேற்படுகிறது. அதாவது அத னுடைய சங்கல்பத்தால் ஒரு சமயம் ஸ்ருஷ்டி - இன்னொரு சமயம் பிரளயம் - இப்படி வரிசை வரிசையாக க்ரமமாக நடைபெறுகிறது.

இவ்விதம் சொல்வதும் சரியில்லை. பிருஹ்மம் பிர தானத்தை அதிஷ்டித்தாலும் - அந்த பரமாத்மா அவாப்த ஸமஸ்தகாமனுகிறபடியாலே - பரி பூர்ண பிருஹ்மமாகிற படியாலே - அநவதி காதிஸய ஆனந்த ஸ்வரூபமாதலாலே, அதேமாதிரி நிரவத்யம் (தோஷமற்றவனுகவும்) நிரஞ்ஜன மாகவும் (களங்கமில்லாதவனுயும்) - (அதாவது கர்மா முதலிய ஹேதுக்கள் இல்லாதபடியாலே) - அத்தகைய பிருஹ்மமாகிற பரமாத்மாவுக்கு ஸர்க்கம் - பிரளயம் ஆகிற வ்யவஸ்தையின் காரணமில்லாதபடியாலே - அவனுக்கு (பிருஹ்மத்திற்கு) விஷம (ஏற்றதாழ்வுள்ளது) ஸ்ருஷ்டிக்க வும் நிர்தயத்வம் (தயையுடன் இல்லாமலிருப்பது) யேற்படு வதாகும். ஆகவே இம்மாதிரி தோஷம் பிரதான விஷயத்தி லும் சரி - பிருஹ்ம விஷயத்திலும் சரி - ஸமானமாகவிருக்கும்- என்று (கொள்ளலாம்); இவ்விதம் சேதன அதிஷ்டானத்திற்கு ஆட்சேபம் (உன்னுல்) சொல்லப்படுமாகில் - நாம் அதற்குப் பதில் சொல்வது - பிருஹ்மம் புரிபூர்ணமாக விருந்தாலும் - லீலார்த்தம் பிரவிருத்தி அவனுக்கும் யேற்படுவதாகும். பரமாத்மா ஸர்வக்ஞன் - அவனுக்கு ஏதாவது ஒரு தனிப் பட்ட காரணம் ஏற்படக் கூடும்-அதனுல் ஸ்ருஷ்டி பிரளயம் என்பதை வ்யவஸ்தை செய்வதற்கு அந்த தனிப்பட்ட காரணம் - ஈக்ஷணம் (பார்த்தல - சங்கல்பித்தல் ஆகும்); அந்த சங்கல்பம் பிரதான விஷயந்திலே - அதாவது யேற் கனவே பரிணும விசேஷத்தை அடைந்திருந்த பிரக்கிருதி யின் விஷயத்திலே - ஈக்ஷணம் செலுத்தப்பட்டதாகும். அதனுலே அவன் சங்கல்பத்தாலே (இஷ்டத்தாலே) பிர கிருதிக்கு ஸர்க்க பிரதி ஸர்க்க விசேஷ ஹேதுவினுல் பரிணும த்வம் யேற்படுகிறது; அதே பிரகாரம் ஜீவாத்மாக்

களுக்கும் அவரவர்களின் கர்மாக்களையே காரணமாகக் கொண்டு பிறப்பு இறப்பு யேற்படுவதால் - பரமாத்மாவினால் விஷம (ஏற்றதாழ்வுள்ள)ஸ்ருஷ்டி வ்யவ ஸ்தையும் உண்டா கிறது (அதாவது தோஷம் விஷம சிருஷ்டியினால் பரமாத்மா வுக்கு இல்லை - பிரதானத்திற்கு அதன் அதிடாதாவாகிற பரம புருஷனுடைய ஸங்கல்பத்தாலே மாறுதலும் - ஜீவ னுக்கு அவனுடைய கர்மத்தாலும் ஏற்றம் தாழ்வு யேற்படு கிறது என்பதாகும்). (இங்கே சொல்லப்படுவது - ஸ்ருஷ்டி பிரளயம் பிருஹ்மத்தின் ஸங்கல்பத்தாலே யேற்படுகிறது. இவை பிரதானத்தின் அவஸ்தைகளாக சில சமயங்களில் உண்டாகவோ-அல்லது சமமாகவோ இருக்கலாம் என்றாலும் அதனால் பிருஹ்மம் அதிஷ்டாதாவாக விருப்பதாலே-அதன் ஸ்வதந்திரத்தன்மைக்குப் பாதிதமாகாது. ஸர்வேஸ்வரன் பிரதானத்திற்கும் அந்தர்யாமியாதலால் - எக்காலத்திலும் அவனுடைய நியமன்மே நடைபெறும்).

மேலும் நீ சொல்லலாம் - இம்மாதிரி சந்தர்ப்பங்களிலே எல்லா நிச்சயமான வ்யவஸ்தைகளும் யேற்படுகின்றன - ஜீவர்களுககு அவர்களின் கர்மானு குணமாகவும்; அதாவது அவர்களின் புண்யபாப ரூபகர்மாக்களாலே-எல்லா வ்யவஸ் தைகளும் யேற்படுகின்றன - அதனால் நீ சொல்லாம் ஜீவனை அதிஷ்டிக்க ஒரு ஈஸ்வரன் அவசியமில்லை ; பிரதானமோ புண்யபாபரூப அனுஷ்டித கர்மஸம் ஸ்ருதியினாலே (அநாதி காலமாக தொடர்ந்து வருவதாலே) (ஸம்ஸ்கிருதா - கர்மாக் கள் செய்யப்பட்டதாலே அடையாளம் செய்யப்பட்ட பிரதானம்) - அந்த அந்த புருஷார்த்தனுரூபமாக மாறுதலை அடைகிறது - இம்மாதிரி உதாரணங்களிலே அன்ன பாமு திகள் - சிலசமயங்களில் அவை விஷமாகவும் ஆகக்கூடும் அல்லது புதிததாகவும் தோன்றவும் கூடும்-இவை எல்லாம் நல்ல மருந்துகளால் பலப்படுத்தப்பட்டு - அதனால் சுக துக்க ஹேது பூதங்களாக - தேசகாலங்களில் வ்யவஸ்தை செய்யப்பட்டு ஆகின்றன(அசேதனப் பொருள்கள்) - என்று நாம் காண்கிறோம். ஆகையால் ஸர்க்கம்-பிரளயம் ஆகிற அவஸ்தைகளால் உண்டாகும் தேவாதி மனுஷ்ய முதலியு

ஏற்றதாழ்வுள்ள விஷம ஸ்ருஷ்டிகள்-அதேமாதிரி ஜீவனுக்கு முக்தியாகிற கைவல்யாவஸ்தை - எல்லாமுமே ஸர்வபிரகார பரிணும சக்தியுள்ள பிரதானத்தினிடமிருந்து உற்பத்தி யாகிறது - என்று நீ சொல்வாயாகில் — நாம் அதற்குப் பதில் அளிப்போம்,

' ஐயா, உங்களுக்கு (சாங்கியனுக்கு) புண்யபாப கர்ம ஸ்வருபத்தை தெரியவில்லை'' என்போம். புண்யபாபஸ்வரு பம் என்பது சாஸ்திரம் ஒன்றிலிருந்தே அறியப்படுகிறது. சாஸ்திரங்களும் அ௱ுதி நிதன அவிச்சின்னபாட ஸம்பிர தாயம் - இதற்கு யாதொரு தோஷங்களும் இல்லை. தோஷங் களாவது அநாக்ராத ப்ரமாதாதி உபகந்த (அக்ஞானம் பிரமம்-கவனியாமல் அலட்சியம்செய்தல் விப்ரலம்பம் சோகம் மோஹாதி இத்தகைய (தோஷங்களற்றவை) சாஸ்த்ரம் இவை வேதங்களாகிய அக்ஷர ராசிக் கூட்டங்கள்; அந்த வேதம் சொல்கிறது யாதெனில் பரமபுருஷனை ஆராதித்து திருப்தி செய்விப்பது புண்யமென்றும் பகவானுடைய நிக்ரஹத்தை பாபமென்றும் இப்படிப்பட்ட கர்மாக்களே புண்ய பாபங்களாகும் (சாஸ்திரம் ஒன்றினுலே - அறியப்படு வதாகும்.) பகவத் திருப்தி அனுக்ரஹம், அதிருப்தி நிக்ரஹ மாயும் - அதனுடைய பலஞக சுகதுக்கம் என்று வேதம் சொல்கிறது. परमपुरुषाराधनतद्विपर्ययरूपे कर्मणी पुण्यपापे, तदनुग्रहनिग्रहायत्ते च तत्फले सुखदुःखे इति वदति

இந்த விஷயத்தை திரமிடாசார்யரும் இவ்விதமாகச் சொல்கிறுர் - பிரு. உ-8-4-

फलसंबिभन्त्सया हि कर्मभि रात्मानं पिप्रीषन्ति । स प्रीतोऽलं फलायेति शास्त्र मर्यदा

சாஸ்திரத்தின் மரியாதை - யாதென்றுல் ஜனங்கள் பரமாத் மாவைக் கர்மாக்களாலே ஆராதித்து திருப்தி செய்துவிக்க ஆசைப்படுகிறுர்கள்-(இந்த எண்ணத்தாலே - ஆசையாலே) அதன் பலன்களை அடையவிரும்பி; அந்த பரமாத்மா திருப்தி செய்யப்பட்டால், நல்ல பலன்களை அனுபவிக்கிறுர்கள்.

இவ்விதமே சுருதியும் சொல்கிறது தை. நா - इष्टापूर्तं बहुधा जातं जायमानं विश्वं बिभर्ति भुवनस्यनाभि: - பரமாத்மா புவனத்திற்கும் எல்லாவற்றிற்கும் ஆதாரமானபடியால்) உலகத்தின் நாபியாகிற நடுவிலே அமர்ந்து கொண்டு - அவருடைய ஆராதனரூபமான எல்லாக் கர்மாக்களையும் (செய்கிறார்கள்). அதாவது கர்மாக்கள்என்பது இருவிதம் விதிநிஷேதம்; இவை சுருதி ஸ்மிருதிகளில் சொல்லப்படுபவை-இவை யேற்கனவே இருக்கின்றன - அல்லது இனி உண்டாகப் போகிறவை - இந்தக் கர்மாக்கள் இஷ்டாபூர்த்தம் (யாகம் செய்தல் கிணறு குளம் வெட்டுதல்-இத்யாதி பலவிதரூபங்களாக உள்ளவை (மஹா. நா. 2-1-6)

(இங்கே கொடுக்கப்பட்ட சுருதிகள் வேதார்த்த ஸங்கிரஹத்தில் நன்கு விளக்கப்பட்டவை. இஷ்டாபூர்த்தம் யாக யக்ஞாதி - கிணறு குளம் வெட்டுதலாகிற பொதுபணிகள் - இவை மற்ற யாகயக்ஞாதிகளுக்கும் உபலக்ஷணம். ஸ்ருதி ஸ்மிருதிகளில் சொல்லப்பட்டவையாகும்).

(இங்கே ஸர்வேஸ்வரனே கர்மங்களுக்குப் பலன் அளிப்பவன். மீமாம்ஸகன் சொல்லும் அபூர்வம் இல்லை. அபூர்வம் அசேதனம். சேதன அதிஷ்டானமின்றி பலன் கொடுக்காது)

பரமாத்மாவே ஸ்வயமாகவே அருளுகிறார் கீதையில்

यत: प्रवृत्तिर्भूतानां येन सर्व मिदं ततम् । स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धि विन्दति मानव:

பிராணிகளுக்கு உற்பத்தி - ஸ்திதி வ்யாபாரங்கள் எல்லாம் எவனுக்கு (அதாவது பகவானுக்கு) அதீனமோ - எவனால் இதெல்லாம் வியாபித்திருக்கிறதோ சூழப்பட்டிருக்கிறதோ - அந்த ஸர்வேஸ்வரனை (என்னை) தனக்கு விதிக்கப்பட்ட வர்ணாஸ்ரம தர்மங்களால் நன்றாக ஆராதித்து - என் அனுகிரஹ பிரஸாதத்தாலேயே - என்னை யடைவதான ஸித்தியைப் பெறுகிறான். இவை எல்லாம் என்னால் உண்டாக்கப்பட்டு - என்னாலேயே வியாபிக்கப்பட்டிருக்கின்றன). அதேபடி கீதை 18-19ல்

तानहं द्विषतः क्रूरान् संसारेषु नराधमान् । क्षिपाम्यजस्र-मशुभान् आसुरीष्वेव योनिषु

என்னை எவர்கள் த்வேஷிக்கிறார்களோ - அவர்களையும், க்ரூரர்களையும் நராதமர்களையும் அசுபர்களையும், பிறப்பு கிழத்தனம் மரணம் முதலியவைகளையுடைய சம்சார பரம்பரைகளில் ஆஸீர ஸ்வபாவமுடைய ஜாதிகளிலேயே தள்ளுகிறேன். கெட்ட புத்தியையும் நானே கொடுக்கிறேன். (இந்த மகிமை பகவான் அந்தர்யாமியாக விருப்பதால் ஏற்பட்டாலும் பாபங்களில் பிரவிருத்திப்பதற்குக் காரணமாகிய கெட்ட புத்தியைக் கொடுப்பதும் பகவானுக்கு வைஷம்யம் நைர்கிருண்யம் - பக்ஷபாதம் தயை இல்லாமை என்கிற தோஷம்யிருப்பதாகச் சொல்லமுடியாது. எனெனில் சேதனனுடைய புண்யபாபகர்மாக்களே காரணமாகும்).

அந்த பகவான் புருஷோத்தாமன் - அவாப்தஸமஸ்த காமன் ஸர்வக்ஞன், ஸர்வேஸ்வரன் ஸத்ய ஸங்கலபன் தன் மஹாத்மியத்துக்கு யேற்ப லீலா பிரவிருத்தி செய்பவன் - அந்த பிரபு விதிகளாக கர்மங்களை வகுதித்திருக்கிறார்; இவை நல்லவை (நற்பயனைக் கொடுப்பவை), இவை கெட்டவை (கெட்டபலனைக் கொடுப்பவை) - அந்த கர்மங்களைச் செய்வதற்கு உபாதானமாகவும் உசிதமாகவும் தேகத்தையும் இந்திரியங்களையும் அவைகளை அடக்கும் சக்தியையும் எல்லா ஜீவாத்மாக்களுக்கும் ஸாமாந்யமாகக் கொடுத்து (துஷ்டனுக்குக்கூட சிலசமயங்களில் விவேக புத்தியிருக்கும் சமயத்தில் ஸத்கர்மாக்களைச் செய்வதற்கு சக்தியை அளிக்கிறான்). இவ்விதமாக பகவான் எல்லா ஜீவர்களுக்கும் தேகம் முதலியவற்றை அளிப்பதில் ஸர்வகாரணமாகிறார், தனிநியமனத்தாலே வாழவேண்டும் என்பதற்க்காக, அவற்றை விளக்குவதற்கு சாஸ்திரத்தை உண்டாக்கி, அந்த ஜீவாத்மாக்களை தன் சாஸனங்களைப் பரிபாலித்து நடத்துவதற்க்காக, ஜீவாத்மாக்களில், பரமாத்மா அனுப்ரவேசித்து (உள்நுழைந்து) (அநுமந்த்ருதயா ச நியச்சம் ஸ்திஷ்டதி);

(ஜீவனால் செய்யப்படும் ஒவ்வொரு கர்மத்திற்கும் பொதுக் காரணமின்றி - அத்துடன் அநுமதியையும் தருபவனாகவும், இவ்விதமாக சக்தி, தேஹே இந்திரிய, சாஸ்திர உபதேஸ, ஸ்வரூபதாரணம் இத்யாதிகளுக்கு பரமாத்மா காரணமாகி பிரதமபிவிருத்திக்கும் ஜீவனுக்கு ஸ்வதந்திரம் கொடுத்து - தான் அநுமந்தாவாகிறான். இது தயவினால் யேற்படுவதாகும்).

பிறகு ஜீவன் தன் இஷ்ட பிரகாரம் பிரவர்த்திக்கும் போது, அதை ஆமோதித்தோ நிக்ரஹித்தோ பலனையளிக்கிறான். (இங்கே கவனிக்கவும். பரமாத்மா திவ்யமான கல்யாண குணங்களையும் ஹேய ப்ரத்யனீகனாகவுமிருக்கிறார். அதனால் அவரால் தான் ஸ்ருஷ்டி செய்ய முடியும்- ஸ்ருஷ்டி ஜீவனுக்குப் பிரயோஜனமாகவும் பரமாத்மாவுக்கு லீலையாகவுமிருக்கிறது. கர்மாக்களை தன் சங்கல்பப்படி நல்லது கெட்டது என்று பாகுபடுத்தி, ஜீவனுக்கு சரீர இந்திரியங்களைக் கொடுத்து - தகப்பன் தன் பிள்ளைகளுக்கு சொத்து தேடிவைப்பது போல, ஹிதமாகவிருக்கிறார். அந்த சொத்து நல்லவழியில உபயோகப்படுத்தப்பட வேண்டியது பரமாத்மாவின் பொருப்பல்ல. ஜீவனின் கடமையாகும்(ஸ்ருத பிரகாசிகை). (இன்னொரு விஷயம் - முதல் பிரவிருத்தியில் ஜீவனுக்கு ஸ்வதந்திரமுண்டு - பரமாத்மா அனுமந்தாவாகவிருக்கிறான். அச்சமயம் பரமாத்மா உபேக்ஷகனாகவும் ஜீவன் பிரயோகயித்ரியாகவுமிருக்கிறார்கள். பிற்பாடு பகவான் அநுமந்தாவோடு சரி. செயல் நல்லது என்றால் பரமாத்மா அதற்குள்ள விக்னங்களை நீக்குகிறான்; நற்பயன் களையுமளிக்கிறான். துஷ்டகர்மாக்களையும் கோபத்தில் அனுமதித்து - பிறகு அவைகளுக்குரிய கெட்டபலன்களை யுமளிக்கிறான். கெட்டதைச் செய்வதற்கு சம்மதிப்பது ஒரு வித நிக்ரஹமாகும். (சுருத பிரகாசிகை) (இது பிற்பாடு பராயத் அதிகரணத்தில் விளக்கப்படும்.)

ஜீவாத்மாக்கள் பகவானிடமிருந்து சக்தியைப் பெற்று- அதற்கேற்ப கரணங்கள் தேகங்களை யடைந்து அவைகளின்

ஆதாரத்தினால் (பலத்தினால்) ஜீவாத்மாக்கள் ஸ்வயமேவ - தங்கள் தங்கள் இச்சைக்கு அனுகுணமாக புண்ய பாபரூப கர்மாக்களை தேர்ந்து எடுக்கிறார்கள். (இது கர்ம வாசனை யினால் யேற்படுவது. ஜீவன் தான் கர்மம் செய்யும் கர்த்தா. அவனுக்கு ஸ்வாதந்திரியத்தை பகவான் கொடுத்திருக் கிறான்; சரீரம் இந்திரியங்கள் சக்தி இவைகள் பகவானால் அவனுக்குக் கொடுக்கப்பட்டவை). பிறகு, புண்ய பாபரூப கர்மாக்களைச் செய்யும் ஜீவாத்மாக்களை - இவர்கள் தன் சாஸனப்படி நடக்கிறார்களா (என்று கவனித்து) - அவ்விதம் நடப்பவர்களாகவிருந்தால் தர்மார்த்த காம மோக்ஷ பலன் களை யடையும்படி உதவுகிறான். தன் சாஸனங்களை மீறு கிற ஜீவாத்மாக்களை நற்பயன்களுக்கு எதிராக அப்பலன் களைக்கொடுத்து - அவர்களை நிக்ரஹிக்கிறான்; ஆகையால் பரமாத்மாவுக்கு ஸ்வாதந்திரியமில்லாமை — அதனால் யேற் படும் கஷ்டங்களுக்கு அவகாசமில்லை. (இவை சொல்லப்படு வதால்) (இங்கே தயாகுணம் ஏன் பகவானுக்கு இருக்கக் கூடாது, க்ருத கர்மாக்களுக்கு மாத்திரம் பலன் கொடுப்பது -இதனால் யேற்படும் வைகலயம் (கஷ்டங்கள்)- தோஷங்கள். இவைகள் யேற்படுவதற்கு இடமில்லை - என்பதாகும்).

(இங்கே சாங்கியன் கேள்வி கேட்கிறான் - தயா பூர்ண பரமாத்மா ஒரு ஜீவனைத் தனக்கு அஹிதம் செய்து கொள் ளும்படி கர்மாங்களைச் செய்ய ஏன் அனுமதிக்கவேண்டும்? பகவத் கோபமும் தயையும் ஜீவனுடைய கர்மாவின் பலன்க ளாகும்-அவ்விதம் சொல்லப்படுமாகில் பரமாத்மா ஸ்வதந்திர மாக எதையும் செய்யமுடியாதா? அவன் ஸ்வதந்திரனாகவும்- ஜீவனும் பரமாத்மாவும் தன் இஷ்டப்படி காரியம் செய்வா னாகில்-ஜீவனுக்கு கர்மத்தின் பொறுப்பு எவ்விதம் யேற்படும்.? இந்த கேள்விகளுக்கு பதில் அளிக்கப்படுகிறது). (இங்கு அறியவேண்டியது — ஸத்விஷயமானால் பகவானுடைய அநுமந்திருத்வம் கல்யாணகுணத்தினாலே; பாப விஷயத் தில் தயையின்மையும் இதனாலே தான் என்று காட்டப் படும்).

தயை என்கிற பெயருடையது—பிரஸித்தமாகவிருப்பது தனக்கு ஆகவேண்டியது அதனுல் ஒன்றுமில்லே (ஸ்வார்த்த நிரபேக்ஷா); பரதுக்கங்களேக் கண்டு சகிக்கமுடியாமலிருப் பது (அஸஹிஷ்ணுதா); (ஈஸ்வரன் அவாப்தஸமஸ்தகாமன், ஸர்வசேஷீ, ஸ்வரூபமாகவே ஆனந்தமயன் பிறர் துக்கங் களால் ஸ்பர்சிக்கப்படமாட்டாமல் இருப்பவன். பிறர்களின் துக்கங்களேப்போக்க சாமர்த்தியமும் உள்ளவன். அஸ ஹிஷ்ணு என்பதால் தான் வருத்தமுற்ருலும், துக்க நிவா ரணத்திற்கு பயன்படுபவன். (ஸ்வார்த்த நிரபேக்ஷதயா).

அப்பேற்பட்ட அஸஹிஷ்ணு - தன்ருல் உண்டாக்கப் பட்ட சாஸனங்களே தொடர்ந்து மீறிக் கொண்டு இருக்கும் ஜீவாத்மாவின் விஷயத்தில் அவனுடைய (பரமாத்மா வினுடைய) தயையினுல் பிரயோசனமிராது - (தயை, தப்பு செய்கிறவனுக்குச் செய்தால் தயைக்கு என்ன அர்த்தம்? அதனுல் பரமாத்மா நிக்ரஹ சங்கல்பனுகவே அவன் விஷயத் திலிருக்கிருன். அதனுல், தயை உள்ளவனுக்கு ஹானி யேற்படும். தப்பு செய்கிறவனே தண்டிப்பது பகவானுக்கு ஒரு கல்யாண குணமாகும். (அதுவே அவனே மீண்டும் பாபம் செய்யாதபடி - அனுக்ரஹசித்த முள்ளீதாகவிருக்கும். (तन्निग्रह एव तत्र गुण:); இல்லாவிடில் சத்ருக்களே அழிப்பது - இதுமாதிரி பல நிக்ரஹ தொழிலுக்கு (ஸங்கல்பத்திற்கு) ஒரு புனிதம் யேற்படாது. தன் கட்டளேயாகிற சாஸ்திரத்தை உல்லங்கனம் செய்கிறவனே தண்டிப்பதால் யாதொரு தோஷமில்லே. ஆயினும் அத்தகைய "பாபி" தன் குற்றங் களேப் பொறுக்கும்படி பகவானிடம் பிரார்த்தித்து, மன்னிப்பு கேட்பானுகில் - அவனுடைய பாபச்சுமைகளே தன் தயை என்கிற குணநிதியால் நீக்குகிருன். ஜீவனுக்கு அநாதி அநந்த கல்பகோடி ஜன்மங்களில் யேற்பட்ட துர்விஷயங் களால் பாபங்கள் யேற்படுகின்றன, அந்த பாபவாசனே யினுல் ஜீவன் பாபகர்மாக்களில் பிரவேசிக்கிருன். பர மாத்மா ஒருசமயம் தயாவானுக ஆகி அத்தகைய கொடிய வனுக்கும் கருணே செய்கிருர். தன்னிடம் த்வேஷம் இல்லா மல் இருக்கும்படி அனுக்ரஹித்து, அவனே நாளடைவில்

சீர்திருத்துகிருன். பிராயசித்தம் யேற்பட்டு அபத்யம் ஔஷதத்திஞல் எவ்விதம் போக்கடிக்கப்படுகிறதோ, அது போல (நிர்ஹேதுக க்ருபை என்றும் சிலர் சொல்வார்கள்).

ஆஞல் புண்யகர்மாக்கஊச் செய்பவனிடத்தில் அவனுடைய தயை பிரஸித்தமானது. அவர்களுக்கு நிரதிஸயசுக ஸம்வ்ருத்தியை தானே அளிக்கிருன். இந்த விஷயம் கீதையில், 10-10, 11) சொல்லப்படுகிறது.

तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।
ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥ १० ॥

என்ஞேடு எப்பொழுதும் சேர்ந்திருக்க வேண்டும் என்கிற ஆசையை உடையவர்களாய், என்ஊ அன்புடன் உபாஸிப்பவர்களுக்கு என்ஊ அடைவதற்கு உபாயமான முதிர்ந்த பக்தி யோகத்தை (ஸம்யக் புத்தியை) நான் ப்ரீதியோடு கொடுக்கிறேன்.

तेषामेवानुकम्पार्थ महमज्ञानजं तमः ।
नाशयाम्यात्माभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११ ॥

பக்தி யோகத்தை அடையச் செய்ய வேண்டும் அதிகாரிகளுக்கு - அவர்களுக்கு அனுக்ரஹம் செய்யவேண்டும் - என்கிற எண்ணத்திஞல் என்ஊப் பற்றிய ஞானமாகிற தீபத்திஞல் - அவர்களுக்கு முன்பு யேற்பட்ட பாப விஷயங்களில் இருக்கும் ஆசையாகிய இருட்டை நாசம் செய்கிறேன்- அநுகம் பார்த்தம் (அவர்களின் அநிஷ்டத்தைப் போக்கி - இஷ்டமாகிற நற்பலன்கஊப் பெற நான் விசேஷ கருணை செலுத்தி - அவர்கஊ உய்விக்கிறேன் – அவர்களின் மஞேவ்யாபாரத்தில் நின்று அவர்கஊக் காக்கிறேன் - பாபங்களில் மீண்டும் இழியாத படி. இதெல்லாம் பகவானுடைய கல்யாண குணங்களாகும்).

ஆதலால் பிரதானம் பிருஹ்மம் அதிஷ்டிக்கப்படாவிடில் ஜகத் காரணமாகாது.

சரி - இவ்விதம் ஆக்ஷேபிக்கக்கூடும் - பிரகிருதி பிருஹ் மத்தினுல் அதிஷ்டிக்கப்படாமல் - ஸ்வயமாகவே பிரவிருத்தி யில் ஈடுபடாது - யேற்படாது என்பது சொல்லப்பட்டது சரிதான். ஆயினும் அதற்கு பரிணுமத்வம் (மாறுதல்) வெளி உதவியின்றி யேற்படக்கூடும் (அநபேக்ஷயா ஏவ பரிணும பிரவிருத்தி: ஸம்பவதி) ஏனெனில் உலகில் அவ் விதம் காணப்படுகிறதே. உதாரணமாக புல், ஜலம் முதலியவை ஸ்வயமேவ பாலாக (கோக்களில்) மாறுகிறதே- பரிணமிக்கிறது காணப்படுகிறதே. ஆகையால் ப்ரகிருதி கூட ஸ்வயமேவ ஜகத் வடிவமாக பரிணமித்திருக்கக் கூடும் - என்று சொல்லாலமே. (இது பூர்வ பக்ஷம்)

இதற்கு நாம்பதில் அளிக்கிறோம்.

ஸி. சூத்ரம். अन्यत्राभावाच्च न तृणादिवत् (2. 2. 4)
அந்யத்ராபாவாச்ச ந த்ருணுதிவத் (2. 2. 4)

திருணுதிவத்ச—(ப க வி ஞ ல் உண்ணப்படும்) புல் முதலானவை (சேதனனுல் அதிஷ்டிக்கப்படாமல் பாலாக ஸ்வயமேவ பரிணுமமடைவது) போல இதுவும் ஆகிறது என்று கூறுவதும்-ந - சரியில்லை (ஒட்டாது); அந்யதா-காளை முதலானவற்ருல் உண்ணப்படும் புல் முதலான வற்றுக்கு - அபாவாத் (பாலாக பரிணுமமடைவது) காளை முதலிய வற்றில் காணப்படாமையால், இங்கும் சேதனு திஷ்டாநம் உள்ளது என அறியவேண்டியது.)

நீ சொல்வது சரியாகாது. புல் முதலியவை சேதனன் அதிஷ்டானமில்லாதபடி - மாறுதலை அடையாது-திருஷ்டாந் தங்களால் காட்டப்படுகிறதில்லை. எப்படி அஸித்தி திருஷ் டாந்தத்திற்கு யேற்படுகிறது? अन्यत्राभावात् - காளை முதலான பிராணிகள் புல்லைக் சாப்பிட்டாலும் பால் ஏற்படுகிறதில்லை. (இதனுல் சேதன அதிஷ்டானம் அவசியமே). புல்லும், தண்ணீரும் காளைகள் உபயோகப்படுத்தினுலும் - நிராகரித்தாலும் பாலாக பரிணமித்தால், நீ சொல்வது சரி யாகும். அந்த புல்லே சேதன அதிஷ்டானமின்றி பாலாக

மாறுகிறது. அம்மாதிரியில்லையே. ஆகையால் உன்னால் ஒப்புக் கொள்ளப்படாத சேதனனால் (பிருஹ்மத்தினால்) அதனுடைய மகிமையினால் புல் பாலாக மாறுகிறது - பசுக்கள் சாப்பிட்டப்போது எனச் சொல்லலாம்.

(இங்கு ஐந்து ஹேதுக்கள் புல் பாலாக மாறுவதற்கு கூறப்படுகின்றன. (1) ஸ்வயமேவ புல்லே பாலாக மாறுகிறது. (2) ஒரு சேதன ஸந்நிதியிலே யேற்படுகிறது. (3) சேதனனுக்கு அதிருஷ்டம் யேற்பட்டு விடுகிறது. (4) சேதனனுக்கு ஒரு குறிப்பிட்ட நோக்கம் (தீர்மானம்) உண்டாகிறது. (5) பிருஹ்மம்தான் இதற்குக் காரணம். முதல் மூன்றும் இந்த கேள்விகளால் நிராகரிக்கப்படுகின்றன. 1) புல்-பசுக்கள் சாப்பிடாமல் இருக்கும்போது, ஏன் பாலாக மாறுவதில்லை? (2) காளை சாப்பிடும்போது - பால் உற்பத்தி புல்லினால் ஏன் யேற்படுவதில்லை? (3) சேதனனுக்கு அதிருஷ்டம் ஏன் ஸம்பவிக்க வேண்டும்? அது பசுக்கள் விஷயத்தில் யேற்படலாம். காளைகள் விஷயத்தில் யேற்படாது - ஏன்? புல்லைச் சாப்பிடாத மற்ற பிராணிகளுக்கும் ஏன் அதிருஷ்டம் வரப்படாது?

ஆகவே நான்காவதானது சாங்கியனாலே ஒப்புக் கொள்ளப்படவில்லை. ஐந்தாவதான பிருஹ்மம் எல்லா ஆட்சேபங்களுக்கும் சரியான பதிலாகும். அந்தக் கருத்து வேதாந்திகளுக்கும் சம்மதம்).

மேலே என்ன சொல்லப்பட்டதென்றால் - சூத்ரத்திலே சா. மீ. 2 - 2 - 2 - पयोम्बुवच्चेत्तत्रापि - பாலும் நீரும் (சேதனனால் அதிஷ்டிக்கப்படாமலே பரிணமிப்பது) போல் (பிரதானமும் தானாகவே பரிணமிக்கலாம்) எனில், தத்ரஅபி - அங்கேயும் கூட சேதன அதிஷ்டாதாவாக விருப்பதாலே பரிணாமம் யேற்படுறது - என்பதாகும். இந்த விஷயம் முழுவதும் முன்னாலே சொல்லப்பட்டது. இங்கே எழும் சந்தேகத்தையும் மறுக்கவும்-அந்த பால் முதலான திருஷ்டாந்தங்களிலும் கூட சேதன அதிஷ்டானம் தான் பரிணாமத்திற்குக் காரணம்.

அதனால் வ்யபிசாரம் (தவறு) ஒன்றுமில்லை. (இங்கே இன்னும் ஒரு விஷயம் - அதிருஷ்டம் பரிணாமத்தின் காரணமாக விருக்கலாம் என்றால் - முன்னால் சொல்லப்பட்ட ஆக்ஷேபங்கள் அதிருஷ்டம் மற்ற பிராணிகளுக்கோ - காளைக்கோ ஏன் ஏற்படக்கூடாது. பசுக்குத்தான் யேற்படணுமா?) प्रदर्शनाय திருஷ்டாந்தத்தின் உண்மையை ம றுப்பதற்கு என அர்த்தம் (வ்யதிரேகத்தால்).

ஸூ. சூத்ரம் पुरुषाश्मवदिति चेत् - तथापि (2-2-5)

புருஷாஸ்மவதிதி சேத்ததாபி (2-2-5)

புருஷாஸ் மவத் இதிசேத் - கண்ணுள்ள நொண்டியின் உதவியாலே குருடன் செயல்படுவதுபோல - காந்தக்கல்லின் ஸந்நிதியில் இரும்பு செயல்படுகிறது. (அதுபோல புருஷனுடைய ஸந்நிதியில் பிரகிருதி செயல்படலாம்) என்றால் ததா அபி - இந்தவிடங்களிலும் வாசி உண்டாகையால் (புருஷ ஸந்நிதானத்தால் மட்டும் ஸ்வதந்திர பிரக்ருதி பரிணமிக்க மாட்டாது).

(கண் தெரியும் ஒருவன் நொண்டி ஆயினும் - நடக்க வல்ல குருடனின் உதவியினால் செயல்படுகிறான். இது மாதிரி பிரவிருத்தி சக்தியற்ற புருஷனுடைய ஸந்நிதியிருக்கும்போது, அறிவற்ற பிரதானம் செயல்புரியத்தட்டில்லை. இதுசரியாகாது - புருஷன் பிரதானத்தை தன்போகத்திற்க்காகவும் மோக்ஷத்திற்க்காகவும் ஸந்நிதானத்தை ஏற்படுத்திக்கொள்கிறான் - (இங்கு சொல்லப்படுவது ஸ்வதந்திர பிரதானம் புருஷஸந்நிதிமாத்திரத்தாலே ஜகத்காரணமாகலாம் என்பது. இதுசரியில்லை என்பது ஸித்தாந்தம். ஒரே மாதிரி பிரவிருத்தி தொடர்ந்து பிரதானத்திற்கு யேற்படணும்-சம்சாரபந்தம் இல்லாவிடில் புருஷனுக்கு மோக்ஷத்வம் யேற்படாது) அதாவது சம்சாரபந்தம் இருந்து கொண்டேயிருக்கும்.

**ஸ்ரீபாஷ்யம்:**—அதற்கு நாம்பதில் சொல்கிறோம். நீ சொல்கிறப்போலே (சாங்கியனைப்பார்த்து) சைதன்யமாத்திர ஸந்நிதியாலே - பிரதானம் பரிணாமமடைவதானால்,

உன்னால் சொல்லப்படும் புருஷன் நிஷ்கிரியன் (செய்லற்ற வன்) ; பிரதானமும் கூட பார்க்கிறசக்தியைப் பெற்றதல்ல (அசேதனமாதலால்); ஆயினும் புருஷ ஸந்நிதானத்தாலே அசேதனமாகிற பிரதானம் பிரவர்த்திக்கிறது - அப்படி லோகத்தில் காணப்படுகிறது - கமன (செல்வதற்கு) சக்தி நொண்டி ஒருவனுக்கு - அவனுக்குக் கண்கள் இருப்பதால் பார்க்கக் கூடியவனாயினும் - யேற்படுவதில்லை - ஆனால் குருடனுக்கு கமன சக்தியிருப்பினும் - பர்க்கமுடிகிறதில்லை. ஒருவரை ஒருவர் ஆஸ்ரயிப்பதால் இருவர்களுக்கும் கமன சக்தி உண்டாகிறது. (குருடன் ஏறிக்கொண்டும், நொண்டி வழி காட்டிக்கொண்டும் - இருவர்களும் செயல்படுகிறார்கள்) அயஸ்காந்த ஸந்நிதியில்-இரும்பு செயல்படுகிறது - இவ்வித மாக பிரகிருதி புருஷஸம் யோகத்தினால் ஜகத்தின் ஸருஷ்டி யேற்படுகிறது.

पुरुषस्य दर्शनार्थं कैवल्यार्थं तथा प्रधानस्य । पंग्वन्धवदुभयो-रपि संयोगः तत्कृतः सर्गः इति - (சா. க - 21)

இம்மாதிரி சாங். காரிகை வசனங்களிருக்கின்றன - புருஷன் அறிவதற்கும் போகிப்பதற்கும் பிரதானத்தை ஆஸ்ரயிக்கிறான் - அதேமாதிரி அவன் அபவர்க்கம் பெறுவ தற்கும் புருஷபிரகிருதி ஸம்யோகம் யேற்படுகிறது - இந்த ஸம்யோகம் குருடனுக்கும் நொண்டிக்குமுள்ள சம்பந்தத் தைப்போல. ஸர்க்க: (ஸ்ருஷ்டி) இதுமாதிரி யேற்படுகிறது- சாங். காரி. 21.

இதற்கு அர்த்தம், பிரதானம் ஸ்ருஷ்டிக்காக முயல்கிறது புருஷ ஸந்நிதியிலே யிருப்பதால் - புருஷன் பிரதானத்தை அனுபவிப்பதற்க்காகவும், மோக்ஷத்தையடைவதற்கும் புருஷ பிரதானம் சேர்க்கை. இதற்கு (வேதாந்தி) பதில் சொல்கிறான் तथापीति - அங்கேயும்கூட - பிரதானம் ஜகத்தை உண்டாக்க முடியாது - இவ்விடங்களிலே வாசி (வித்யாஸம்) உண்டா கையாலே - பிரதானத்திற்கு பிரவிருத்தி அஸம்பவும். ஜகத்தை உண்டாக்காது.

நொண்டிக்கு கமன சக்தியில்லாத போறுலும் - அவன் வழி காட்டுவான் - இம்மாதிரி பல ஆயிரக்கணக்கான விசேஷங்கள் இருக்கக்கூடும் - அவன் வழி காட்டுவான். குருடன் சேதனனுயினும் நொண்டி வழி சொன்ன பிரகாரம் நடக்கிருன்-அம்மாதிரி காந்தத்திற்கு இரும்பை தன் சமீபம் கொண்டுவர சக்தி பெற்றது. இங்கே புருஷன் நிஷ்கிரியன் அவனுக்கு இம்மாதிரி விகாரங்கள் யேற்படுவதில்லை - ஸந்நிதான மாத்திரமே (புருஷபிரதானத்திற்கு) காரண மாகாது. புருஷன் நித்யம், அதனுல் ஸர்க்கமும் நித்யமேவ. ஸந்நிதானமும் நித்யமாகும். புருஷன் நித்ய முக்தன் ஸ்வ ரூபத்திலே அவனுக்கு பந்தபாவமில்லை-அவனுக்கு மோக்ஷம் கிடைக்காது - அதாவது எப்போதும் ஸ்ருஷ்டி நடந்து கொண்டிருக்கும், புருஷனை பிரகிருதி சம்பந்தமில்லாத நித்ய முக்தனுக சாங்கியனுல் ஒப்புக் கொள்ளப்படுவதால்- அவனுக்கு ஸம்சாரித்வமும் மோக்ஷம் ஏற்படாது अपवर्गाभावाच्च.

ஸி. சூத்ரம் अङ्गित्वानुपपत्तेश्च (2-2-6)

அங்கித்வாநுபபத்தேஸ்ச (2-2-6)

அங்கித்வாநுபபத்தேஸ்ச - குணங்களில் ஒன்றின் (ஏற்றத்தால் வரும்) அங்கித்வம் பொருந்தாது. அதனுல் ஸ்வதந்திர பிரகிருதி ஜகத் காரணமாகமாட்டாது.

உன்னுல் ஒப்புக் கொள்ளப்பட்டது-ஜகத் பிரவிருத்தி யேற்படுகிறது - ஒவ்வொரு வஸ்துவில் இருக்கும் குணங் களாலே - அங்கம் அங்கீபாவமாக அந்த குணங்களும் பிரத் யேகமாக ஒவ்வொரு வஸ்துவுக்கும் உள்ளது என்று சொல்லாம். குணங்கள் பிரபல்யமாகிற போது - தாழ்வை யடையும் போது - அந்த வஸ்து உண்டாக்கப்படுகிறது. காரிகை प्रतिप्रतिगुणाश्रयविशेषात् (ஒவ்வொரு வஸ்துவில் ஆஸ்ர யித்திருக்கும் குண விசேஷத்தாலே) என்று. ஒவ்வொரு பிரளயத்திலும் ஸத்வரஜஸ்தமஸ்ஸாதி குணங்கள் ஸாம்யா வஸ்தையில் இருந்து கொண்டு - சலனம் இல்லாதபடியால், ஒன்று மற்றொன்றைவிட அதிகமாகவோ, குறைவாகவோ

இல்லாதபடியால், ஸ்ருஷ்டி யேற்படாது. ஆயினும் இந்த குணங்களுக்கு வைஷம்யம் ஒப்புக் கொள்ளப்பட்டால், (அதாவது சமத்வ நிலையின்றி - ஒரு குணம் மற்றொன்றை விட ஏற்றம் - தாழ்வு - யேற்படுமாயின்) அப்போது நித்ய மாகவே ஸ்ருஷடி யேற்பட்டுக் கொண்டிருக்கும். ஆகையால் பிரதானம் பிருஹ்மம் அதிஷ்டிக்கப்படாவிட்டால் ஜகத் காரணமாகாது.

(இங்கு சொல்லப்படுவது - ஸமத்வ நிலையை அடைந்த குணங்களிலிருந்து - பிரளய காலத்தில் - எப்படி அந்த குணங்கள் சலன மடைந்து, ஸ்ருஷ்டி யேற்படும்? யேற்றம் தாழ்வடைந்த குணங்களுக்கு மீண்டும் ஸ்ருஷ்டியிலே ஸமத்வ நிலையை அடையும்? இரண்டுக்கும் சரியான விளக் கம் சாங்கியனால் அளிக்கப்படவில்லை. (அதாவது குணங் களில் ஏற்றம் தாழ்வு யேற்படும்போது ஸ்ருஷ்டியும், பிரள யத்தில் சமத்வ நிலையை அவை அடைவதாகக் கூறப்படு கிறது. அப்படியிருக்கும்போது ஏன் ஒரு குணம் மிக அதிக மாகவும் மற்றது குறைவாகவும் யேற்படுவதற்குக் காரணம் சொல்லப்படவில்லை. சாங்கிய மத்தத்தில் ஸ்ருஷ்டி ஏற்படு வதற்குக் வழியில்லை இல்லாவிடில் ஸ்ருஷ்டியே நித்யமாகவும் பிரளயம் இல்லாமலும் ஆகிவிடும். பிருஹ்மம் ஞான சக்தி களை உடையவனாதலால் - பிரக்ருதியை அதிஷ்டித்து - முக் குணங்களில் ஏற்றம் தாழ்வை உண்டாக்குகிறது - இக் காரணத்தால் பிராக்ஞன் எனப்படும் ஸர்வேஸ்வரனோடு தொடர்பற்ற ஸ்வதந்திர பிரகிருதி ஜகத் காரணமாகமாட் டது. (ஸித். சூத்ரம்).

ஸி. சூத். अन्यथाऽनुमितौ च ज्ञशक्तिवियोगात् (2. 2. 7)

அந்யதாநுமிதௌச ஜ்ஞஸக்தி வியோகாத் (2, 2. 7)

அந்யதாநுமிதௌ ச - (வேறு விதமாக) பிரதானத்தை அநுமானம் செய்தாலும் - ஜ்ஞஸக்தி வியோகாத் - அறிவு டைத்ததாயிருக்கும் சக்தி இல்லாமையால் - பிரதானம் ஜகத் காரணமாக மாட்டாது.

நாம் கண்டித்த பிரகாரத்தைத் தவிர வேறுவிதமாக அநுமாநத்தாலே பிரதானம் ஜகத் காரணம் என்பது ஸித்திக்குமானுல் - பிரதானத்திற்கு அறிகிற தன்மையில் லாத துர்பலத்தால் - அவர்கள் பக்ஷம் நமது ஆட்சேபத் திற்கு முன் நிற்காது. ஆகையால் எந்தவிதத்திலும் - பிரதானம் அநுமாநத்திஞலும் ஜகத் காரணமாகமாட்டாது.

(நாம் சொல்வது – ஜகத் ஒரு காரியமாதலால் - அதை உண்டாக்க அசேதனத்தால் முடியாது. உதாரணம் பானை. அசேதன வஸ்து உபாதான காரணமாக வேண்டி, பிருஹ்ம அதிஷ்டானமின்றி யேற்படாது. சாங்கியன் சொல்வது காரணமும் காரியமும் ஒன்றுகவிருக்கவேண்டும். ஸலக்ஷண வஸ்துவே காரணமாக விருக்கவேண்டும். உலகில் காணப் படுகிறதே ஒரு காரியம் அதன் காரணமாக – அதைப் போல ஒன்றை உள்ளது - பானை உதாரணம் பிரதானம் அசேதனமாக விருப்பதாதாலே - அதனுல் பிருஹ்மம் அதற்கு நியந்தா என்று யேற்படாது - இது சாங்கியன் சொல்வது). (சாங்கியன் மேலும் சொல்லக்கூடும் - ஒரு சமயத்தில் குணங்களில் ஏற்றத்தாழ்வை விளைவிக்கும் சக்தி மூலபிரகிருதிக்கு உள்ளது. அதனுல் சலனம் யேற்பட்டு விஷம ஸ்ருஷ்டியாகிற காரியம் யேற்படலாம். இந்த சக்தி யாகிற காரணத்தை அநுமானம் செய்வதாக ஸாங்கியர்கள் கூறினுலும் - பிரகிருதி அசேதனமாதலால் - முன் சொன்ன ரசனாநுபபத்தி முதலான தோஷங்கள் யேற்பட்டேதீரும். அதனுல் மூலபிரகிருதி ஜகத்காரணமாக மாட்டாது).

ஸ்ரீ. ஸூத். अभ्युपगमेऽप्यर्थाभावात् (2-2-8)

அப்யுகமே அப்யர்த்தாபாவாத் (2-2-8)

அப்யுபகமே அபி (அநுமானத்திஞல் பிரதானம் ஜகத் காரணமாக ஸித்திக்கிறது என்று) ஒப்புக் கொண்டாலும் - அர்த்தாபாவாத்-அதனுல் எப்பயனும் யேற்படாது. ஆகவே அநுமானம் செய்யக் கூடாது.

(போகம் - மோக்ஷம் என்பது பிரதானத்தை அநுபவிப்பதாலும், பிரதானத்தை விடுவதுமாக - சொல்லப்படுகிறது. புருஷன் விகாரமற்றவனுனபடியாலும்—பிரகிருதி புருஷனின் ஸந்நிதியிலிருப்பது நித்யமாதலால் - எப்போதுமே போகம் உண்டாகி - மோக்ஷம் யேற்பட இடமில்லாமற் போகும்.) அநுமானத்திறைல் பிரதானம் ஜகத்காரணம் என்று ஒப்புக்கொண்டாலும், பிரதானத்திறைல் பிரயோஜனம் ஒன்றுமில்லை. சா. காரிகை சொல்வது புருஷன் காண்பதற்க்காக (போகத்தை அநுபவிப்பதற்க்காக) பிரதானத்தைப் பார்க்கிறுன்; மோக்ஷமடைவதற்க்காகவும் அவ்விதமே பிரதானம் உபயோகப்படுகிறது; पुरुषस्य दर्शनार्थं कैवल्यार्थम् तथा प्रधानस्य; என்று பிரதானத்தின் பிரயோஜனம் போக அபவர்க்கநிமித்தம். ஆயினும் இவை ஏற்படாது. புருஷன் சைதன்யமாத்திரமே வடிவம் - (விகாரமற்றவன்) நிஷ்கிரியன்-நிர்விகாரன் நிர்மலன் - அதேகாரணமாக நித்யமுக்த ஸ்வரூபன், அவனுக்கு எப்படி பிரகிருதி தர்சனரூபமாகிற போகமோ - அதை விடுவதால் அபவர்க்கமோ ஏற்படாது. இத்தகைய புருஷனுக்கு பிரகிருதி ஸந்நிதானத்தாலே, அந்த சுகதுக்க தர்ஸன ரூபமான போகம் யேற்படுகிறது - அந்த பிரகிருதிக்கும் பரிணும் விசேஷமான சுகதுக்கதர்ஸன ரூபமான போகம் யேற்படுகிறது என்றுல், அந்த பிரகிருதியின் ஸந்நிதியானது நித்யமாகையால்-ஏப்போதாவது கூட அபவர்க்கம் யேற்படுகிறதில்லை. இப்படி பயனில்லாமையாலே பிரகிருதி அநுமானத்திறைல் ஸாதிக்கத்தக்கதன்று).

ஸி. ஸூ. विप्रतिषेधाच्चासमञ्जसम् (2-2-9)

விரப்திஷேதாத் ச அஸமஞ்ஜஸம் (2-2-9)

விப்ரதிஷேதாத் ச - முன்னுக்குப் பின்முரணுகப் பேசுவதால் அஸமஞ்ஜஸம் (ஸாங்கியமதம்) பொருந்தாது. அதனுல் சாங்கிய பக்ஷம் நிராகரிக்கப்படுகிறது.

முன்னுக்குப் பின்னும் முரணுகப் பேசுவதால், சாங்கிய மதம் பொருந்தாது. இவ்விதமாக, அவர்கள் புருஷனை அதிஷ்டாதாவாகவும், சாக்ஷியாகவும் திருஷ்டாரம் (பிரகிருதி

யைப்பார்க்கிறவனுகவும் -) ஒப்புக் கொண்டு, இந்த பிர கிருதி பரார்த்தமாக (பிறர்களுக்கு) உபயோகப்படும்படி விருப்பதாலும், த்ருஸ்யத்வமாகவும் (பிறரால் பார்க்கும்படி வஸ்து விஷயமாக விருப்பதாலும்), போக்யபதார்த்த மாகவும் இருப்பதாலே - இப்பேற்பட்ட பிரகிருதியை அனு பவிக்கிற புருஷன் - அவன் அதிஷ்டார்தாவாகவும், திருஷ்டா சாக்ஷியாகவும் இருப்பதால் - ஒன்றுக்கொன்று பொருந்தா மல் இருப்பதாகும் அவர்கள் பக்ஷம். (இங்கே பல குறை கள் சாங்கிய பக்ஷமாகிற பிரகிருதிக்கும், புருஷனுக்கும் சொல்லப்படுகின்றன: சாக்ஷியாக புருஷன் பிரகிருதியின் ஸ்வபாவத்தை தன் மனதில் உணருகிருன்-பார்க்கிறவனுக அவன் பிரகிருதியை இந்திரியங்களின் உதவியினுல் காண கிருன் - அனுபவிக்கிருன். பரார்த்தமாக பிரகிருதியிருப் பதால் புருஷன் பிரகிருதிக்கு அதிஷ்டாதாவாகவும் விருக் கிருன்). சாங்க்யர்கள் அபிப்ராயப்படுகிறார்கள் - புருஷ னுடைய ஸ்வரூபம் - பிரகிருதியை ஸாதனமாகக் கொண்டு, கைவல்யமாகிற மோக்ஷத்தை அடைகிறது, புருஷன் நித்ய மாகவும் நிர்விகாரமாகவும் சைதன்ய (சச்சித் ஸ்வரூபமாக) விருப்பதாகவும் - அந்த புருஷனுக்கு காரியம் ஒன்றும் செய்யாமை (அகர்திருத்வம்) - இயற்கையாகவும் இருப்ப தாக அவர்கள் சொல்கிறார்கள் - இது தான் புருஷஸ்வரூபம் என்கிறார்கள். அப்படியானுல் அவர்கள் சொல்வது பந்த மோக்ஷம் பிரகிருதிக்குத்தான் யேற்படும் - புருஷனுக்கில்லை.

அந்த பிரகிருதியை ஸாதனமாக வைத்து மோக்ஷம் அடையப்படும் புருஷனுக்கு; பிரகிருதி தான் பந்த மோக்ஷத்தை உண்டாக்குகிறது - பிரகிருதியிலிருந்து விடு படுவது - மோக்ஷமாகிற கைவல்யம். இப்படிப்பட்ட நிர் விகார, உதாஸீன, புருஷ ஸந்நிதானத்திலே பிரகிருதி புருஷன் பரஸ்பரம் யேற்படும் அத்யாஸத்தினுலே, பிரகிருதி (புருஷனுடைய செயலாகிற) ஸர்கம் (ஸ்ருஷ்டி) பிரளயம் இத்யாதிகளில் பிரவர்த்திக்கிறது; — அவ்விதமாயினும் புருஷனை போகத்தை அனுபவிப்பதற்கும், அபவர்க்கம் (மோக்ஷம்) அடைவிப்பதற்கும் உதவுகிறது. சாங்கிய காரிகை - 17 - 19 .

सङ्घातपरार्थत्वात् त्रिगुणादिविपर्ययादधिष्टानात् । पुरुषोऽस्ति भोक्तृभावात् कैवल्यार्थप्रवृत्तेश्च ।

புருஷன் இருக்கிறான் - ஏனெனில் பிரகிருதியின் வஸ்து சேர்க்கை பிறர் உபயோகத்திற்கர்க விருக்க வேண்டும் — ஏனெனில் பிரகிருதி முக்குணங்களால் ஆனது, அந்த குணங்களுக்கு எதிராக ஒரு வஸ்து இருக்க வேண்டும் - அந்த வஸ்து புருஷனுகும் - அங்கே அதிஷ்டாதாவாக விருக்கிறான். அவனே போக்தாவாகவும், முயற்சிக்கிறான் - (சாங்கிய மதம் பொதுவாக இங்கு சொல்லப்படுகிறது - ஒவ்வொரு வஸ்துவும் முக்குணங்களின் சேர்க்கை - ரதம் என்பதைப் போல-பிறர் உபயோகத்திற்க்காக விருக்கிறது. பிரகிருதி காரண தசையில் முக்குணங்களின் ஸங்காதம் (சேர்க்கையாகும்); காரிய தசையில் குணங்களின் காரியங்களாக வஸ்துக்களைப் பார்க்கிறோம் - ஆகவே பரார்த்தமாக பிரகிருதி விளங்குகிறது.

**விளக்கம்:—**

போக்தாவாக விருப்பவன் குணங்களின் சேர்க்கையாக முடியாது - இல்லாத போளுல் அந வஸ்தா தோஷம் யேற்படும். புருஷன் இவ்விதமாக பிரகிருதிக்கு எதிராக, தனிப்பட்டவனுக, குணங்களின் சேர்க்கையில்லாதபடி விளங்குகிருன் - பிரகிருதியை அதிஷ்டிக்கிருன். அந்த புருஷன் போக்தாவாகவிருப்பதால் - அவன் போகங்சளில் திருப்தி பெருமல், விமுகனுக - வைராக்யமடைந்தவனுக, கைவல்ய ப்ராப்தியை அடைவதற்கு பிரவர்த்திக்கிருன்.

तस्माच्च विपर्यासात् सिद्धं साक्षित्वमस्य पुरुषस्य । कैवल्यं माध्यस्थ्यं द्रष्टृत्वमकर्तृभावच्च इति

அதனுல் சாங்கியர்கள் சொல்வது - இம்மாதிரி வேருக விருப்பதால் - புருஷன் சாக்ஷியாகவும், தனிப்பட்டவனுகவும், உதாஸீனனுகவும் (மத்ய ஸ்தனுகவும் - எதிலும் சம்பந்தப்

படாமல்) எல்லாவற்றையும் பார்ப்பவனுகவும், கார்யம் செய்பவனில்லாமலும் விருக்கிருன். (அகர்த்ருபாவமுள்ள வனுகவிருக்கிருன்). சா. கா. 57 - पुरुषविमोक्षनिमित्तं तथा प्रवृत्तिः प्रधानस्य - (ஆகவே பிரதானத்தின் செய்கை புருஷனை மோக்ஷமடையச் செய்வதற்காகவே யேற்பட்டதாகும் - மோக்ஷம் நிமித்தமாக. என்று சொல்லிவிட்டு மீண்டும் அவர்கள் சொல்வது - சா. கா. 61 -

तस्मान्न बध्यतेऽद्धा न मुच्यते नापि संसरति कश्चित् । संसरति बध्यते मुच्यते च नानाश्रया प्रकृतिः –

ஆகையால் இந்தவிதமாக, ஒரு புருஷனும் பந்தமடைவதில்லை, மோக்ஷமும் அடைவதில்லை, அவன் ஸம்சாரமாகிற பிறப்பு இறப்பு சுழல்களில் சஞ்சரிப்பதில்லை. ஆனல் பிரகிருதி அவ்விதமில்லை - சா. கா. 20 - 21 -

तस्मात् तत्संयोगादचेतनं चेतनावदिव लिङ्गम् । गुणकर्तृत्वे च तथा कर्तेव भवत्युदासीनः ।। पुरुषस्य दर्शनार्थं कैवल्यार्थं तथा प्रधानस्य । पंघबन्धवदुभयोरपि संयोगः तत्कृतः सर्गः इति –

ஆகையால் (அவர்கள் சொல்வது) கர்திருத்வமும் சேதனத்வமும் ஒரே விடத்தில் இல்லாமையால் - ஆனல் அசேதனமான பிரகிருதி புருஷ ஸந்நிதானத்திலேயிருப்பதால் - அந்த ஜடலிங்கம் (பிரகிருதி தன்னிலிருந்து மஹத் அஹங்காராதி தன் மாத்திரைகளை தோற்றுவிப்பதால்) (புருஷ அத்யாஸத்திலே) தோன்றுகிறது - (எவ்விதமெனில்) சேதனத்தைப் போல தோற்றமளிக்கிறது. உதாஸீனனுன புருஷன் அதேபடி அத்யாஸத்திலே, கர்த்தாவாகவும் குணங்கள் காரியங்களுக்குக் காரணமாயும் இருக்கின்றன. (இங்கே நம்மைப் போல சேதன ஜீவர்களுக்கு - தப்பான அபிப்ராயம் யேற்படுவதற்கு-'நாம செய்கிறோம்' என்கிற கர்த்ருபாவத்தை அடைவதாகும் - இது தப்பான அபிப்ராயம் என்கிறார்கள். உண்மையில் பிரகிருதிதான் எல்லாம் செய்கிறது - புருஷன்

அத்யாஸத்தினுல் அதை அடைகிருன் என்கிற கருத்து). புருஷனே (தர்சனார்த்தம் - கைவல்யார்த்தம் - போக்தாவாக பிரதானத்தை அனுபவித்து - அதிலிருந்து ஒரு நாள் விடு பட்டவனுக வைராக்ய பாவத்தை யடைந்தவனுக - முயற்சிக் கிருன். இந்தவிதமான புருஷ பிரகிருதி சேர்க்கை சம்பந்தம் முடவன் கண்ணில்லாத அந்தன் ஆகிற இருவர்களின் சேர்க்கையைப் போன்றது. (ஒருவன் மற்றொருவனின் உதவியினுல் செயல்படுகிருன்). இவ்விதமாக இவர்களின் சேர்க்கையினுல் ஸர்கம் (ஸ்ருஷ்டி) யேற்படுகிறது. (அத்யா ஸம் பிரமத்தை உண்டுபண்ணுகிறது - விவேகத்தினுல் பிரமம் நீங்குகிறது.)

**விளக்கம்:—**

(இங்கு சொல்லப்படுவது - மூல பிரகிருதி - இருவிதம் ஒன்று அவ்யகிதம் இன்னொரு விதம் வ்யக்தம். வியக்த மான பிரகிருதி முச்குணங்களைக் கொண்டது - அது தானே காரியங்களை உண்டாக்க சக்தி பெற்றதில்லை. அது அசேதனம், விகாரஸ்பதம் (மாறிக் கொண்டிருப்பது) பிரதானமும் இவ்விதமே. புருஷனே அதற்கு எதிர்தட்டு (இங்கு இன்னொரு அர்த்தம் காட்டப்படுகிறது. தாய்ப் பசு தன் கன்றுக்குப் பாலைத் தோற்றுவிக்கிறது. அதனுல் பிரகிருதியின் தன் நலமற்ற உபயோகம் சொல்லப்படு கிறது. மேலும் சா. காரிகையில் 62-ல் பந்தமும் மோக்ஷமும் பிரகிருதிக்குத்தான் உண்டு. அத்யாஸத்தினுலே பந்தம் மோக்ஷம் புருஷனுக்கு ஆரோபிக்கப்படுருறது. வாசஸ்பதி மிஸ்ரா இதை விளக்கி - ஒரு ராஜா தன் சேனை வெற்றியோ தோல்வியோ அடைந்தால்-அந்த வெற்றியோ தோல்வியோ ராஜாவுக்குச் சேருவதுபோல — புருஷனுக்கு பிரகிருதியின் தர்மங்கள் அத்யாஸிக்கப்படுகின்றன).

புருஷனுக்கு ஸாக்ஷித்வமும், த்ரஷ்டருத்வமும் (பார்ப்ப தும்) அவனே அநுபவிக்கிற போக்தாவாகவும் இருப்பது என்கிற தர்மங்கள் ஏற்படுவதற்கு ஸாத்யமில்லை-ஏனெனில் அவன் ஸ்வரூபத்திலே நித்ய நிர்விஹார, அகர்த்ரு (செய்கை யில்லாதவன்) உதாஸீனன் - அவன் ஸ்வரூபமே கைவல்யம்

(ஏகஸ்வ ரூபம்) - அத்தகையவனுக்கு மேற் சொன்ன தர்மங்கள் ஏற்படுவதில்லை. மேலும் அவனுக்கு அத்யாஸமும் யேற்படுவதற்கு பிரஸக்தியில்லை - அத்யாஸ மூலமாக பிரமமும் யேற்படாது. (பிரமம் அத்யாஸத்தினுல் யேற்படுகிறது என்கிருன் சாங்கியன் - அது தவருகும்) அத்யாஸத் பிரமம் யேற்பட வேண்டுமானுல், விகாரம் யேற்படுவதாகி விடும் (புருஷனே நிர்விஹாரம் எனச் சொல்லப்படுகிருன்).

இந்த தர்மங்கவ் ஜடமான பிரகிருதிக்கும் யேற்படாது-ஏனெனில் இவை சேதன தர்மங்களாகும். அத்யாஸம் எனப்படுவது ஒரு சேதனனுடைய தர்மங்கள் இன்னொரு சேதனனிடம் ஆரோப்பிதம் ஆகக்கூடும். அது ஒரு சேதன தர்மம்; விகாரத்தை உண்டு பண்ணக்கூடியது. மேலும் அத்யாஸம் புருஷனுக்கு பிரகிருதியின் ஸந்நிதிமாத்திரத்தால் யேற்படாது-ஏனெனில் சாங்கிய புருஷன் நிர்விகாரன். சரி, யேற்படக்கூடும் என்று நீ சொல்வதை ஒப்புக்கொண்டால், அந்த விகாரம் புருஷனுக்கு நித்யமாக யேற்படக்கூடும். இப்பேற்பட்ட ஸந்நிதியினுல் யாதொரு பிரயோசனமுமில்லை - என்பது ச. மீ. சூ 2-1-4 न विलक्षणत्वात् உலகம் பிருஹ்மத்தின் காரியமாகமாட்டாது - இந்த உலகம் பிருஹ்மத்தைவிட வேறுபட்டிருக்கையால்-என்பதில் உரைக்கப்பட்டது.

சரி - பிரகிருதிதான் ஸம்சரிக்கிறது, அதுதான் பத்த மோக்ஷத்தையடைகிறது யென்ருல்-(நாம்கேட்பது) இதனுல் எப்படி நித்யமுக்தனுன புருஷனுக்கு உபயோகமாகும்? வாஸ்தவத்திலே, இம்மாதிரி சாங்கியர்கள் சொல்கிருர்கள் -

**नानाविधैरुपायैरुपकारिण्यनुपकारिणः पुंसः । गुणवत्यगुणस्य सतस्तस्यार्थमपार्थकं चरति –**

பிரகிருதி புருஷனுக்கு பலவிதங்களில் உபயோகப்படுகிறது-அந்த புருஷனுல் அதற்கு உபயோகமில்லை. குணங்களைக் கொண்டதாகிற (அதாவது முக்குணங்களாகிற) பிரதானம்

தனக்கு ஒருவித பிரயோசனமிமுன்றி குணமில்லாத புருஷனை சேவிக்கிறது - அவனுக்கு உபயோமாக விருக்கிறது.

(அவர்கள் சொல்வது) - அவ்விதமே பிரகிருதிதானே புருஷனிடமிருந்து விலகுகிறது-எந்த புருஷனுல் அது அதன் ஸ்வபாவத்துடன் காணப்பட்டதோ-அப்போது அதுவிலகி-புருஷன் நிவர்த்தியையடைகிருன். சா. காரி. 59-61-ல் रङ्गस्य दर्शयित्वा निवर्तते नर्तकी यथा नृत्यात् । எப்படி நர்த்தகிதன் காரியம் முடிந்ததும் ரங்கமேடையிலிருந்து விலகுகிருளோ, அதுபோல பிரகிருதியும் விலகுகிறது (தன்காரியம் முடிந்ததும்) ; पुरुषस्य तथाऽऽत्मानं प्रकाश्य विनिवर्तते प्रकृतिः । புருஷனும் அறிவைப்பெற்றவனுகிருன். (அதாவது-எப்போது பிரகிருதி புருஷனுல் பார்க்கப்பட்டதோ - அதன் நிஜஸ்வரூபம் அறியப்பட்டதோ அது புருஷனை விடுகிறது-ராமானுஜரின் அபிப்ராயம் சாங்கியனின்படி - புருஷன் பிரகிருதியை பார்க்கமுடியாது.) என் அபிப்ராயப்படி பிரகிருதியைவிட சுகுமாரமான வஸ்து ஒன்றுமில்லை. அந்த பிரகிருதி எப்போது நான் காணப்பட்டேனே-அப்போது அது மீண்டும் புருஷனுடைய திருஷ்டிக்குவருவதில்லை. (या, दृष्टास्मि, इति पुनर्नदर्शनमुपैति पुरुषस्य); என்று சாங்கியன் கூறுவதும் அஸங்கதம் - பொருந்தாது.

புருஷனே நித்யமுக்தன் (ஸ்வரூபத்திலே), நிர்விகாரன் அதனுல் அவன் பிரகிருதியைப் பார்ப்பதில்லை - அவனுக்கு அத்யாஸமும் யேற்படுவதில்லை. பிரகிருதியோ ஸ்வயம் (தன்னையோ) பார்க்காது, ஏனெனில் அது ஜடம். (அசேதனமானபடியால்). அந்த பிரகிருதியும் புருஷனுக்கு தவறான அத்யாஸத்தை உண்டாக்காது-தன்னைப் புருஷன் பார்க்கும்படி செய்து கொள்வதோ - தன்னையே காண்பதோ ஸ்வதந்திரமான ஜடமான பிரகிருதிக்கு செய்ய முடியாது ஸ்வயம் அசேதனமானபடியால் - புருஷனுக்கும் பிரகிருதியைப் பார்ப்பதால் விகாரம் யேற்படுவதும் அஸம்பவம். ஆகையால் ஸந்நிதி மாத்திரத்தினுல் தர்சனம் என்று சொல்லப்படுமாகில் - இந்த ஸந்நிதி, நித்ய தர்சனமாக விருப்பதற்கு ஹேதுவாக அமையும் (பார்ப்பதும் நித்யமாகும்

என்று சொல்வதும் சரியாகும். நிச்சயமாக, எப்போதாவது யேற்படும் ஸந்நிதி - அதன் ஸ்வரூபமாக எப்போதுமிருக் காது - அப்பேற்பட்ட ஸந்நிதி புருஷனுக்கும் யேற்படுவ தில்லை - ஏனெனில் புருஷனும் நித்ய நிர்விகாரன்.

மேலும் புருஷனுக்கு மோக்ஷ ஹேது பிரகிருதியையே பார்ப்பது - தன் அருகேயிருக்கும் பிரகிருதியையே, காண் பது என்று சொல்லக்கூடுமானல், பந்தஹேதுகூட அது வாகவே இருக்கும், ஆகையால் பந்தம் மோக்ஷம் நித்ய மாகும். சரி, பந்தத்திற்கு ஹேது தவறான தோற்றமே யென் றால் அந்த மோக்ஷ ஹேது வஸ்துக்களின் யாதாத்மிய (உண்மையான) ஸ்வரூபத்தைப் பார்த்தல் என்பதால், இவ் விதமான இரண்டு தர்சனமும் - (தோற்றமும், யாதாத்மிய தர்னமும்) எது ஸந்நிதானரூபந்தில் பார்க்கப்பட்டதோ அதைவிட்டு வேறாகவில்லை - என்றால் (ஸ்வஸம் நிதான ரூபமேவ தர்சனம் என்றால்)-இதனுல் இரண்டும் நித்யமாக விருக்கக்கூடும். (அதாவது - புருஷன் நித்யமுக்தன் - அவனுக்கு பிரகிருதி எப்படி விடுதலை அளிக்கக்கூடும்) ஸந்நிதி நித்யம் என்றால், அதனுடைய ஹேது (காரணம்) தேடப்பட வேண்டியதாகும் - அப்போது காரணத்திற்குக் காரணமும் தேடப்பட வேண்டியதாகும். இதனுல் அநவஸ்தா தோஷம் யேற்படும். இந்த தோஷத்தை பரிஹரிப்பதற்காக, ஸ்வரூபஸத்பாவமே ஸந்நிதி என்றால், அப்போது ஸ்வரூபம் நித்யமாதலால், பந்தமும் நித்யமாகும். ஆகையால் இம்மாதிரி முன்னுக்குப் பின்னும் சொல்லப் படும் முரண்பாடுகள் (விரோதங்கள்) சாங்கிய பக்ஷத்தை பொருந்தாதபடி ஆக்குகின்றன-அஸமஞ்ஜஸம் என்பதாகும். (அதாவது சைதன்ய ஸ்வரூபம் அறிவுதான்; அதனுல் அத் யாஸம் யேற்படாது. ஆத்மா பஹூத்வம் அத்வைதிக் கில்லை, ஆனுல் சாங்கியனுக்கு உண்டு. ஸந்நிதானமும் தர்சனமும் ஒன்றே. ஆகவே பந்தமும் மோக்ஷமும் நித்ய பார்த்தலேயாகும். மோக்ஷ ஹேது பிரக்கிருதியின் தர்சனம். பந்தஹேது புருஷஸந்நிதானம், இம்மாதிரி பல முறண்பாடு கள் உள்ளதால் சாங்கிய பக்ஷம் அஸமஞ்ஜஸம்).

(அத்வைத பக்ஷம் இப்போது பேசப்படுகிறது). அத்வைதிகள் சொல்வது - ஆத்மாகூடஸ்தன் (மாறுபாடில்லாதவன்) நித்யன்; குணரஹிதன் (நிர்விசேஷ); ஸ்வபிரகாச சிந்மாத்திரம பிருஹ்மம்; அதற்கு அவித்யைக்கு சாக்ஷியாகவிருக்கும் தன்மையால் அபரமார்த்தமான (பொய்யான) பந்தம் மோக்ஷம் இரண்டும் யேற்படுகிறது - என்கிறார்கள் - அவர்களுக்கு நாம் சொல்வது - நீ இப்படிச் சொல்வதிலும் தவறாகும், ஏனெனின் சைதன்ய ஸ்வரூபமாகவிருக்கும் பிருஹ்மத்திற்கு தவறான அத்யாஸங்கள் யேற்படாது - இங்கே ஒரு வித்யாஸம் இருக்கிறது. சாங்கியன ஒத்துக்கொள்கிறான் புருஷர்கள் பஹுத்வம் (பல பேர்கள்) என்பதை விரும்புகிறார்கள் - ஜனன மரணம் பிரதி நியமாதி வ்யவஸ்தை யேற்பட வேண்டியதால் புருஷர்கள் பஹுத்வம் என்கிறார்கள். ஆனால் அத்வைதிகளுக்கோ புருஷ பஹுத்வத்தை ஒப்புக்கொள்கிறதில்லை - அதனால் அஸமஞ்ஜஸம்.)

என்ன சொல்லப்பட்டதென்றால், சாங்கிய அத்வைத பக்ஷங்களுக்கு இடையே வித்யாஸம் யேற்படுவதற்குக் காரணம், பிரகிருதி (சாங்கியனின்படி) பரமார்த்தம் (உண்மை) - அபரமார்த்தம் (அத்வைதியின்படி) - இவ்விதம் சொல்வது சரியில்லை என்போம் நாம். (அயுக்தம்) - ஏனெனில் பாரமார்த்திகமோ . அல்லது தோற்றமோ, அந்த புருஷன் (ஜீவாத்மா) அல்லது பிருஹ்மம் சாங்கிய அத்வைதியின்படி) நித்யமாகவுள்ளவன், நிர்விகாரன், ஸ்வயம் பிரகாசமே ஏகரஸமாக சின்மாத்திர ஸ்வரூபன் - அத்தகைய புருஷனுக்கு சாக்ஷித்வம் யேற்படாது. (ஏனெனின் அவன் அறிவே ஸ்வரூபம் ; அறிகிறவனாகவில்லை என்பதால்) பிரகிருதி அபரமார்த்தமே (தோற்றமே) என்று சொல்லும் போது, இதனால் ஒப்புக்கொள்ளப்படுகிறது-அந்த பிரகிருதி திருஸ்யப்பொருளாக ஆகிறது, அதனால் பார்க்கப்படுதலுக்குப்பாதிதம் யேற்படக்கூடும். ஆகையால் இந்த அபிப்ராயமும் தவறாகும், (அஸமஞ்ஜஸம்).

(இங்கு ராமானுஜர் சாங்கிய காரிகையின் வார்த்தை களைக்கூறி-அதனுல் அதன் தவறைக்காண்பிக்கிருர். ஜீவர் கள் பஹுத்வம் என்பதுஜனன மரணங்களால் யேற்படு வதும், அப்போது ஒவ்வொரு ஜீவனுக்கும் கால், மற்ற இந் திரியங்களும் இருப்பதும், ஒரேசமயத்தில் ஒரேவிதச் செய்கை இல்லாமலும், முக்குணங்களின் சேர்க்கை ஒவ்வொரு ஜீவனுக் கும் மாறுவதாலும் இவைகளிலிருந்து காணலாம் என்கிருர்.)

இன்ஞெரு விஷயமும் சொல்லப்படுகிறது-விகாரத்தை அடையாத ஜீவாத்மா (புருஷன்) பார்க்கமுடியாது-அதனுல் யேற்படும் விகாரத்தை யேற்காது. எதுபார்க்கப்படுகிறதோ அது உண்மையானுல், அப்போது ஒரே ஒரு மாறுதல்தான் இருக்கும். பொய்யானுல், அந்த ஆத்மா இரண்டுதடவை கள் பார்க்க நேரிடும் - முதலில் தவருகவும் இரண்டாவதில் சரியாகவும் பார்க்க நேரிடும். இதனுல் அஸமஞ்ஜஸம் என்கிருர்). (அதாவது அபரமார்த்திகமென்ருல், திருஸ் யத்வம் யேற்படாது) (உத்தமூர்ஸ்வாமி -

स्वप्रकाशस्यापरमार्थविरोधिनः कथमपरमार्थग्रहित्वमित्यादि द्रष्टव्यम् । न हि प्रकृतिख्यक्ता दृश्या भवति ।)

இப்போது பாஸ்கரபக்ஷம் கண்டிக்கப்படுகிறது - இவர் கள் ஔபாதிகம் என்கிருர்கள்-பேதமும் அபேதமும் உபாதி யின் விளைவு; பிருஹ்மம் உபாதியின் சம்பந்தத்தால் அதே ஸ்வபாவத்துடன் விருக்கிறது, - அதனுல் உபாதியுடன் கூடின சம்பந்தம் பிருஹ்மத்திற்கு யேற்படாது - அதனுல் யேற்படும் முறண்பாடு முன்பே கூறப்பட்டது - அதை மீண்டும் சொல்லவேண்டியதில்லை.

இங்கே பிருஹ்மத்தின் ஸ்வரூபம் நித்யமாகவும், விகாரங்கள் இல்லாதபடி ஒரேமாதிரியிருப்பதாகவும், தோஷங்கள் அற்றதாகவும் சொல்லப்படுகிறபடியால் - பிருஹ்மத்தின் ஸ்வரூபம் மாருதது என்பதாகும்). இதனுல் காட்டப்பட்டது ஸாங்கியமதம் பொருந்தாது.

தார்க்கிக தூஷணம் - மஹத்தீர்க்காதிகரணம் (2-2-2)

ஸி. சூ. महद्दीर्घवद्वा ह्रस्वपरिमण्डलाभ्याम् (2-2-10)

மஹத்தீர்க்கவத்வாஹ்ரஸ்வ பரிமண்டலாப்யாம் (2-2-10)

ஹ்ரஸ்வ பரிமண்டலாப்யாம் - த்வ்யணுக பரமாணுக் களிலிருந்து மஹத்தீர்க்கவத்வா - முறையே திரியணுகமும் த்வயணுகமும் உண்டாவது பொருந்தாததாயிருப்பதுபோல, அஸமஞ்ஜஸம்-நையாயிக-வைசேஷகர்களின் பக்ஷம் பொருந் தாது.

**சங்கதி:—**

முன் அதிகரணத்தில் ஸ்வதந்திர பிரதானகாரணவாதம் செய்பவர்களான ஸாங்கிய மதம் பொருந்தாது என்று காட்டப்பட்டது. இதில் அதிஷ்டாதாவாக ஈஸ்வரனை ஒப்புக் கொண்டாலும், அணுகாரணவாதம் செய்யும் நையாயிக வைசேஷிக மதங்கள் பொருந்தா எனக்காட்டப்பகிறது).

**ஸ்ரீபாஷ்யம்:—**

பிரதான காரணவாதியின் பக்ஷம் முறண்பாடுகள் உள்ளபடியால் - ஏனெனில் யுக்திகளில் விரோதமாக விருப் பதாலே, முரண்பாடுள்ளதாக காட்டப்பட்டு-அஸமஞ்ஜஸம் எனச் சொல்லப்பட்டது. இப்போது பரமாணு காரணவாதி களின் அபிப்ராயமும் அஸமஞ்ஜஸம் எனக்காட்டப்படு கிறது. பரமாணுக்கள்தான் ஜகத்காரணம் என்று இவர்கள் சொல்வார்கள். இந்தக்கருத்துடன் சூத்ரம் இருக்கிறது - மஹத்தீர்க்கவத்வா ஹ்ரஸ்வ பரிமண்டலாப்யாம்-த்வியணுக் பரமாணுக்களிலிருந்து மஹத்தீர்க்க வத்வா - முறையே திரியணுகமும் த்வியணுகமும் உண்டாவது பொருந்தாது - என்பதாம், असमञ्जसमिति என்று சொல்லப்படுகிறது — वा சப்தம் கூட (also) என்கிற அர்த்தத்தில் பிரயோகம். ஹ்ர ஸ்வ பரிமண்டலாப்யாம் - திவியணுக परमाणुभ्यां (த்வியணுக பரமாணுக்களிலிருந்து மஹத்தீர்க்கவத் (முறையே திரியணு கமும் த்வயணுகமும் உண்டாவது) - வா (கூட - சேர்ந்து

என்கிற அர்த்தத்தில்). திரியணுகோத்பத்தி, மற்றவை களைப் போல (அவர்களின் வாதங்களில்) - எல்லாம் அஸ மஞ்ஜஸம். (மஹத் பெரியது; தீர்க்க - நீளமானது - இதற்கு அர்த்தம் - திரியணுகம் த்வயணுகங்களின் உற்பத்தியைச் சொல்லும் பக்ஷங்கள். இவை நையாயிகனுலும் வைசேஷி கனுலும் சொல்லப்பட்டவை. இவர்கள் கூறுவது ஜகத் பர மாணுக்களிலிருந்து உண்டாகிறது, த்வயணுகம் திரியணு கம் என்பதிலிருந்து உண்டாவது பொருந்தாது என்பதாம்.

**விளக்கம்: —**

(இவர்கள் சொல்வது - பரமாணு என்பது மிக மிகச் சிறியது, பிரகிருதியின் மிகச் சிறியபாகம் - பரிமண்டலம் என்றும் பரமாணு என்றும் ஆகிறது. இந்த பரமாணுவுக்கு அளவு இல்லை-நீட்டல் குறுக்கல் இல்லை, புள்ளியைப்போல; ஆனுல் அது நித்யம். த்வியணுகம் இரண்டு பரமாணுக்கள் சேர்ந்தது. மூன்று பரமாணுக்கள் சேர்ந்தால் திரஸரேநு - திரியணுகம் என்று சொல்லப்படுகிறது. இதுதான் கண் ணுக்குப் புலப்படும்படி மிகச் சிறிய வஸ்து-சூரியகிரண ஒளி யின் ஒரு துளி - ஒவ்வொரு பாகமாகச் சேர்ந்து (பல பர மாணுக்கள் சேர்ந்து வஸ்துவாகிறது. திவியணுகமும் பர மாணுவும் காட்டப்படுகிறது).

ஆகவே நூல்கள் - அது போல மற்ற அவயவ அம்சங் கள் பல சேர்ந்து ஒரு அவயவியான - வஸ்துவாகிற துணியை உற்பத்தி செய்கிறது. அப்படி பரமாணுக்கள் ஒன்று சேரும் போது ஆறுபக்கங்களிலும் கோர்க்கப்பட் டிருக்கின்றன. பரமாணுக்கள் த்வயணுகம், திரியணுகம் - அதைப்போல மற்ற துளிகளை ஆறுபக்கங்களிலும் சேர்ப்ப தால் யேற்படுகின்றன. பரமாணுக்களே த்வயணுகங்களா கவும் திரியணுகங்களாகவும் ஆகின்றன. இல்லாவிடில் பரமாணுக்களுக்கு தனிப்பட்ட இடம், ஸ்திதி என்பதில்லை - பல ஆயிரக்கணக்கான பரமாணுக்கள் ஒன்று சேர்ந்தாலும் ஸ்திதி யேற்படுவதில்லை; அவை திவியணுகம், திரியணுகம் என்று மாறினுல் ஸ்திதி உண்டு. இதனுல் யேற்படுவது

அளவு (ஸ்திதி) (நீட்டல் குறுக்கல் இத்யாதி) ஒரு பரமாணு வின் அளவைத் தாண்டாது. அதனாலே அணுத்வமும், மிகமிக சூக்ஷ்மத்வமும், நீளமாக விருப்பதும் (திரியணுகத் திற்கு யேற்படுவது) இவை எல்லாம் தர்மங்களாகும். அது பரமாணுவுக்கு யேற்படாது. (ராமானுஜரின் கருத்து - புள்ளியான பரமாணு (இதற்கு நீளம் அகலம் இல்லாதது) அது எப்படி சேர்ந்து உலகத்தை உண்டாக்கும்) க்யூப் (நீளம் அகலம் உயரம் இதற்கு முன் பின் பக்கங்கள் ஆக ஆறுபக்கங்கள் - இவை பல சேர்ந்து ஒரு பொருளாகலாம்).

வெவ்வேறு இடங்களில் இருப்பது இவை என்பது ஒப்புக் கொள்ளப்பட்டால், பரமாணுக்கள் மீண்டும் உடைக் கப்பட்டு சிறு பாகங்களாக ஆகலாம், அதனாலே அவை களாலே (பல அம்சங்களாகவே) ஒன்று சேர்க்கப்பட்டு வஸ்துவாக ஆகலாம் - இப்படி அநவஸ்தை தோஷம் யேற் படக்கூடும்.

(இங்கு சொல்லப்படுவது - பல அவயவங்கள் ஒன்று சேர்ந்து அவயவியான வஸ்து ஒன்று உண்டாகிறது. அவய வங்கள் குறைவாக விருந்தால், அவயவி சிறியதாயும், அவய வங்கள் அதிகமாக விருந்தால் அவயவி பெரியதாயும் இருக் கும். அவயவியைப் பிரித்து உடைத்துக் கொண்டே சென் றால், இனிபிரிக்க முடியாது என்கிற நிலைவரும்போது, அந்த அவயவங்கள் பரமாணுக்கள் எனப்படுகின்றன - இந்த பரமாணுக்களே அவையே உலகத்திற்கு உபாதான காரணம் என்கிறார்கள் - பரமாணுவாதிகள். நாம் சொல்வது - பர மாணுவையும் பரமாணுவையும் ஒன்று சேர்த்தால் பர மாணுவே யாகும் - வஸ்து உண்டாகாது. என்பதாம்) பரமாணுக்களை ஆறுபக்கங்களிலும் ஒன்று சேர்ப்பதால் த்வயணுகம் யேற்படுகிறது - இப்படி த்வியணுக, திரியணு கம் பல சேர்ந்து ஜகத் உண்டாகிறது என்பதாகும்.

மேலும் பரமாணுக்களுக்கு ப்ரதேசம் (space) இல்லாத படியால், ஆயிரம் பரமாணுக்களை ஒன்று சேர்த்தாலும் பர மாணுக்களே (அவைகளின் கும்பல்களாகவே) ஆகும் "

இதனுல் திரியணுகம் த்வயணுகம் உண்டாவது சரியாகாது, இடைவெளி பிரதேசமில்லாதபடியால் பரிணமம் யேற்படாது. (உதாரணமாக வஸ்திரம் பலநூல்கள் ஆறுபக்கங்களில் அல்லது அதற்குக் குறைந்த தம் பக்கங்களில் ஒன்று சேர்கின்றன - ஒன்று சேராத பக்கங்களுமிருக்கின்றன. இரண்டு அணுக்கள் (அவயவங்கள்) ஒன்று சேர்ந்தால் த்வயணுகம் (அவயவி) உண்டாகிறது. இதுபோல ஒன்று சேராத பக்கங்களும் சில இருப்பதாலே பரமாணுவைக் காட்டிலும் பெரியதான த்வயணுகம் உண்டாகிறது என்று கூற வேண்டும்.

ஆனுல் பரமாணுக்கள் புள்ளியைப் போல - அவயவமற்றவை. அவை ஒன்று சேரும் போது, சில பக்கங்களில் சேராத சில அணுக்கள் இருக்கும். ஆயினும் பரமாணுக்கள் ஒன்று சேர்ந்தால் ஒரு பரமாணுவைக் காட்டிலும் பெரிதான பரிமாணமுள்ள பொருளை உண்டாக்கமாட்டா. இந்த தோஷத்தைத் தவிர்க்க, பரமாணுக்கள் அவயவமுடையவை என்று ஒப்புக் கொண்டால், அவை மேலும் பல அவயவங்களாகப் பிரிக்கத்தக்கவை என்று சொல்லும்படி அநவஸ்தை யேற்படும் - ஒரு முடிவான நிலை இல்லாமல் ஒப்புக்கொள்ள வேண்டிவரும். ஆகையால் இனிப் பிரிக்க முடியாத பரமாணு என்னும் மூலகாரணம் ஒன்று இல்லை என ஆகிவிடும். ஆகையால் பரிமண்டலம் என்னும் பரமாணுவிலிருந்து ஹ்ரஸ்வம் எனப்படும் த்வியணுகம் உண்டாவதும், அந்த த்வயணுகத்திலிருந்து அதைக்காட்டிலும் பெரியதான, மஹத்தீர்க்கம் எனப்படும் திரியணுகம் உண்டாவதும் என்று சொல்லும் அணுகாரணவாதிகளின் அடிப்படைகொள்கை ஒட்டாது. இதுபோல அவர்களுடைய மற்ற கொள்கைகளும் பொருந்தாது. சூத்திரத்தில் "ஹ்ரஸ்வ மண்டலாப்யாம்" என்று த்வயணுக பரமாணுக்களாகிய இரு காரணங்களை எடுத்து, காரியத்தை எடுக்கும்போது மஹத்தீர்க்கம் என்று த்வயணுக காரியமாக திரியணுகத்தை மாத்திரம் எடுத்திருப்பது பரமாணு காரியமான

த்வயணுகத்திற்கும் உபலக்ஷணம். சூத்திரத்திலுள்ள 'வா' சப்தம் ச காரப்பொருளதாய், மற்ற கொள்கைகளேயும் குறிக்கிறது).

இதனுல் நீ சொல்லக்கூடாது (சித்தாந்தி சொல்வது) அவயவ அல்பத்வமாகவும் பெரியதாகவும் இருப்பதாலே பெரிய சிறிய வஸ்து ஆகிறது என்று சொல்லக்கூடாது. உதாரணமாக ஒரு கடுகு; ஒரு மலே; இவை சிறிய அவ வயங்களிலிருந்தோ - பெரிய அவயவங்களிலிருந்தோ முறையே உற்பத்தியாகின்றன-பல அல்பமோ-பெரியதான அணுக்கள் சேர்வதாலே சிறிய வஸ்து, பெரிய வஸ்து யேற் படுகிறது என்று. ஒரு பரமாணுவுக்கு எண்ணிக்கையற்ற பல அவயவங்கள் இருக்கின்றன-இதில் ஒவ்வொன்றுக்கும் சமத்வம் இருக்கிறது என்று (மேல் சொன்ன கடுகு - மலே உதாரணங்களிலே) சொல்ல நேரிடும். இதனுல் கடைசியான பரமாணுவுக்கு இனியும் பிரிக்க முடியாத நிலே யேற்படும். ஏனெனில் பரமாணுக்களுக்கு பிரதேசம் இல்லேயானுல், எந்த அளவும் ஒரு சிறிய பரமாணுவை அதிகரித்து உற்பத்தி யாகாது அதனுல் கடுகு-மலே இவை ஏற்படாது-(உண்டா காது). பரமாணுவுக்கு பிரதேச பேதமில்லாதபடியால், ஒரு பரமாணு பரிணுமிக்கிறது அதன் இயற்கையான அளவை விட்டு மேலாக பரிணுமிக்கிறது என்பது யேற்படாது - இதற்கு நீ சொல்லலாம் - நாம் என்ன செய்வது? என்ருல் அதற்கு நாம் பதில் கூறுவது - "நீ வைதிகபக்ஷத்தை ஒப்புக்கொள் - உன்கொள்கையை விட்டு விடு"-என்பதாகும்.

இந்த சூத்ரம் அத்வைதிகளால் வேறு விதமாக அர்த்தம் செய்யப்படுகிறது - பிருஹ்மம்தான் ஜகத்காரணம் என்று சொல்லும் வாதிக்கும் பக்ஷத்திற்கு ஆக்ஷேபத்தைப் போக்க யேற்பட்டது என்கிருர்கள் - இதுவும் தவருகும். புநருக்தம் கூட; பிருஹ்ம காரணவாதத்திலே யேற்பட்ட ஆக்ஷேபம் முதல் அத்யாயம் முதல் பாதத்திலே பரிஹரிக்கப்பட்டது. இங்கு உம் அத்யாயம் உம்பாதத்தில்; வேதாந்த மார்க்கத் திற்கு புறம்பாகவரும் மற்ற பக்ஷங்களேக் கண்டிப்பதாகும்.

परपक्षप्रतिक्षेपोह्यस्मिन् पादे: । சேதன பிருஹ்மத்தினிடமிருந்து ஜகத் உற்பத்தி யேற்பட்டது என்பது சா. மீ. 2-1-4 - न विलक्षणत्वात् - என்பதில் விளக்கப்பட்டதாகும்.

ஆகையால் இந்த சூத்ரத்தின் அர்த்தம் எப்படித் வியணுகம் திரியணுகம் பரமாணு போன்ற இவைகளிலிருந்து உண்டாவது பொருந்தாதோ, அதுபோல அவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட (நையாயிகன்) வைசேஷிகனுல் சம்மதிக்கப்பட்டது) எல்லாம் அஸமஞ்ஜஸம், என்பதாகும். சரி, இன்னும் என்ன பொருந்தாமை யிருக்கிறது என்கிற கேள்விக்கு, சூத்ரக்காரரே பதிலளிக்கிருர் - கீழே அடுத்த சூத்திரத்தில்.

ஸ்ரீ. சூத்ரம் - उभयथाऽपिन कर्म तस्तदभाव: (2-2-11)

உபயதா அபி - (அணுவின் முதற்கிரியைக்குக் காரணமான அதிருஷ்டம் அணுவிலோ ஜீவனிடமோ) இரண்டில் எப்படியிருந்தாலும், ந கர்ம - அக்கிரியை யேற்பட முடியாது; அத: - ஆகையால் ததபாவ: - அணுக்கள் இரண்டு சேருவது ஒட்டாது, அதனுல் ஜகத் காரணமாகாது.

**அவதாரிகை:—**

(வா சப்தத்தால் பல பொருந்தாமைகள் இருப்பதாகச் சொல்லப்பட்டன - முந்தின சூத்ரத்தில். இதில் முதலாக அந்த பொருந்தாமைகள் விவரிக்கப்படுகின்றன - பரமாணுவில் ஆதியில் (முதல் முதலாக) ஒரு கிரியை உண்டாவதாகவும் அதனுல் இரு பரமாணுக்கள் சேர்ந்து த்வியணுகம் உண்டாவதாகவும், மூன்று திவியணுகங்கள் சேர்ந்து ஒரு திரஸரேணு உண்டாவதாகவும் இப்படி படிப்படியாக உலகம் உண்டாயிற்று என்றனர் அணு காரணவாதிகள். அதில் எல்லா உலகமும் உண்டாவதற்கு மூலகாரணமாகப் பரமாணுவில் யேற்படும் முதற்கிரியை புண்யபாபங்களால் உண்டாகும் அதிருஷ்டத்தால் யேற்படுவது என்றும் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

(வைசேஷிகர் சொல்வது-முதன் முதலில் அக்னி உயர எரியத் தொடங்குவதும் முதன் முதலில் வாயு பக்கங்களில் வீசுவதும் அணுமனம் ஆகியவற்றின் முதல் கிரியைகளும் அதிருஷ்டத்தினுல் ஏற்படுபவை-என்னும் வைசேஷிகதர்ஸன சூத்ரம் காணத்தக்கது. பரமாணுவில் யேற்படும் இந்த முதற் க்ரியைக்குக் காரணமான அதிருஷ்டம் பரமாணுவில் உள் ளதா அல்லது ஜீவனிடம் உள்ளதா என்னும் கேள்வி எழும். இரண்டு வகையாலும் சரியாகாது. ஜீவன் செய்த புண்ய பாபக்கிரியைகளால் யேற்படும் அதிருஷ்டம் ப்ரமாணுவில் இருப்பது பொருந்தாதாகையால் முதல் பக்ஷம் சரியாகாது. இருப்பதாகவே கொண்டாலும் எப்போதுமே கிரியை யிருக்க வேண்டும். அதாவது எப்போதுமே கிரியை யேற்பட்டு ஸ்ருஷ்டி யேற்படவேண்டி வரும். ஜீவனிடமுள்ள அதிருஷ்டம் பரமாணுவில் கிரியையை யேற்படுத்துவது பொருந்தா தாகையால் இரண்டாம் பக்ஷமும் ஒட்டாது. அதிருஷ்ட முள்ள ஜீவனுடைய ஸம்யோகத்தால் பரமாணுவில் கிரியை யேற்படலாமோயெனில், ஜீவனிடமுள்ள அதிருஷ்ட பிரவா ஹம் நித்யமாகையால் எப்போதும் ஸ்ருஷ்டி யேற்படவேண்டி வரும். அதிருஷ்டம் உடனே சிலசமயங்களில் பலனைக் கொடுக்கும்; இன்னும் சிலசமயங்களில் வெவ்வேறு சமயங் களிலும், வெவ்வேறு கல்பங்களிலும் கொடுக்கும்.

(ஸ்ருஷ்டிகாலத்தில் அதிருஷ்டம் விபாகம் அடைவதைப். பொறுத்திருக்கிறது. ஜீவர்கள் கணக்கற்றபடி இருக்கிறார் கள், ஒவ்வொருத்தரின் கர்மாவும் வேறுபட்டதாக விருக் கிறது. ஒரே காலத்தில் ஸ்ருஷ்டி எல்லாப் பொருள்களுக்கும் யேற்படமுடியாது. அதேமாதிரி ஸம்ஹாரமும் ஸ்ருஷ்டிக் கப்பட்ட பொருள்கள் இரண்டு பரார்த்தகாலங்களில் ஸம்சார மண்டலத்தில் இருக்கின்றன என்பதும் ஒட்டாது. ஈஸ்வர னுடைய சங்கல்பத்தால் அணுக்களில் கிரியை யேற்பட லாமே என்றால், அனுமானத்தால் ஸாதிக்கப்படும் ஈஸ்வரனை நாம் ஒத்துக் கொள்ளுகிறதில்லை - இந்த விஷயம் சாஸ்திர யோநித்வாதி கரணத்தால் சொல்லப்பட்டது.)

(ஆகவே பரமாணுவில் முதற்கிரியை யேற்பட்டுப் பரமாணுக்கள் சேருவது ஒட்டாதாகையால் யுக்தியினுல் அதன் உதவி கொண்டு பரமாணுக்கள் ஜகத் காரணம் எனக் கூறுவது பொருந்தாது. சாஸ்திரத்தில் கூறியபடி உலகை உடலாக உடைய ஸர்வேஸ்வரனே உலகிற்கு உபாதான காரணமாகிறுன் என்று ஒப்புக் கொள்ளவேண் டும் (கோழியாலம் ஸ்வாமி - சாரீரக காரிகாவளி).

**ஸ்ரீபாஷ்யம்:—**

பரமாணு காரணவாதத்திலும் பரமாணுதான் ஜகத் காரணம் என்கிற பக்ஷத்திலே, ஜகத்தின் உற்பத்தி முதற் கிரியையாகிற த்வியணுகத்திலிருந்து - பரமாணுவைச் சேர்ந்ததும் - கர்மத்தின் விளைவாகவும், அதன் ஸம்யோகத் திறுல் யேற்படும். முதன் முதலான கிரியையாகிற த்வயணு கம் முதலிய ரூபத்தில் கிரமமாக யேற்படுகிறது - என்று சொல்லப்படுகிறது - (முதல் கிரியையின் சலனம்). அப்படி யாறுல், நிகில ஜகத் உற்பத்திக்குக் காரணமாக முதல் கிரியை (த்வயணுகம்) பரமாணுவில் காணப்படுகிறது. அதற்குக் காரணமாக அதிருஷ்டம் என்று சொல்லப்படு கிறது. (அதிருஷ்டத்தின் காரணமாக முதற்கிரியை யேற் படுகிறது - என்றுல் அதிருஷ்டம் எங்கு இருக்கிறது 1) அது ஜடமான பரமாணுவில் இருக்க முடியாது. 2) சேதன னிடம் இருக்குமாறுல், அது ஜடமான பரமாணுவை செயல் படுத்துமா? 3) சேதனன் பரமாணுவுடன் சம்பந்தப்பட்டிருப் பதாறுல் ஸ்ருஷ்டியும் நித்யமாக விருக்க நேரிடும். 4) சேத னன் பரமாணுவுடன் சம்பந்தப்பட்டிருப்பது ஒரு காலத் திலே யென்றுல், அதிருஷ்டம் எப்போது முதிர்ந்து பலனை அளிக்க ஆரம்பிக்கிறது? - இப்படி அத்ருஷ்ட உதவியிறுல் ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களை எப்படி நிர்வஹிக்க முடியும்? இம் மாதிரியான கேள்விகள் எழுகின்றன - இதற்கு பதிலும் உரைக்கப்படுகிறது). வைசேஷிக தர்சனம் . 5-2-13

**अग्नेरूर्ध्वज्वलनं वायोस्तिर्यक पवनमणुमनसोश्चाऽऽद्यं कर्मेत्य दृष्टकारितानि—**

அர்த்தம்:—முதன் முதலில் அகனி உயர எரியத் தொடங்கு வதும் முதன் முதலில் வாயு குறுக்கே வீசத்தொடங்குவதும், அணுமனம் ஆகியவற்றின் முதற்கிரியைகளும் அதிருஷ்டத் தினுல் யேற்படுபவை) - என்னும் வைசேஷிக சூத்ர தர்சனம்.

இப்பேற்பட்ட முதன் முதலாக பரமாணுவில் யேற்படும் சலனம் (முதற்கிரியை) அந்த பரமாணுவின் சொந்த அதிருஷ்டத்தால் விளைந்ததா அல்லது அதிருஷ்டம் பர மாணுவின் சேதனனுடன் சம்பந்தப்பட்டதால் யேற்பட்டதா இரண்டு வகைகளிலும் அது யேற்படாது. க்ஷேத்ரக்ஞ கிற ஜீவனுடைய புண்யபாபங்களின் விளைவாக அதிருஷ் டம் யேற்படுகிறது என்கிறபடியால், அது பரமாணுவில் வசிக்காது. அப்படி காணப்படுமாகில், அதிலிருந்து எப் போதும் உற்பத்தி யேற்பட்டு கொண்டிருக்கும். மேலும் ஜீவனை அதிருஷ்டம் அடைந்திருக்கும் அந்த ஜீவனுடன் பர மாணு ஸம்பந்திப்பதால், கர்மோத்பத்திக்கு ஹேதுவாக விருப்பது என்பதும் சம்பவிக்கமாட்டாது. ஆகையால் ஜீவனிடம் அதிருஷ்டம் ஒப்புக் கொண்டிருப்பதால் முதற் கிரியை யேற்படுகிறது - பரமாணுக்களில் கிரியை ஏற்படு கிறது என்றால் - அப்போது அந்த ஜீவனின் அதிருஷ்ட பிரவாஹம் நித்யமாகவும், அதனுல் ஸ்ருஷ்டியும் நித்யமாகவு மிருக்கும். (இங்கு சொல்லப்படுவது - பாபபுண்யங்கள் அசேதனமாகிறபடியால் - கர்மாவினுல் ஜகத் உற்பத்தி உண்டாகாது. ஏற்றதாழ்வுள்ள பிறப்புக்களுக்குக் காரண மாகலாம். சேதனன் அதிஷ்டித்திருந்தாலும் பரமாத்மாவைப் போல ஒருவன் பாபபுண்யங்களில் சம்பந்தப்படாதவன் பலன் கொடுக்கும்படி செய்கிறான என்பதுதான் பொருந்தும். அபூர்வத்தைப் போல இங்கும் அதே ஆட்சேபங்களும் பரி ஹாரமும் யேற்படுவதாகும்.)

மேலும் சொல்லப்படலாம்-அதிருஷ்டமே பாபபுண்யங் களின் பலன்களை அளிக்கிறது - எப்போது அது முதிர்ந்து பலனையளிக்கும்படி நிலையிலிருந்தால், சில அதிருஷ்டம் உட

னேயே பலனையளிக்கும். சில சிலகாலம் கழிந்தும், இன்னும் சில கல்பாந்தரங்களில் பலனை அளிக்கும். ஆகையால் அதிருஷ்டம் முதிர்ந்து பக்குவமாக விருக்கவேண்டியதால், அதிருஷ்டம் உற்பத்திக்குக் (முதற்கிரியைக்கு) எப்போதும் காரணமாகாது. ஆனுல் அவ்விதமில்லையே - ஏனெனில், பிரமாண பூர்வமாக நிச்சயிக்கப்படவில்லை (எது)-பலவகைப் பட்ட கர்மாக்களால் உண்டாகும் இந்த அதிருஷ்டம்-கர்மாக் களும் ஒரே சமயத்தில் இல்லாமல் பல்வேறு காலங்களில் செய்யப்படுவதாலும், ஜீவர்கள் கணக்கற்றபடியிருப்ப தாலும், பரஸ்பரம் ஞானம் அவர்களுக்குள்ளே இல்லாதபடி யாலும், அதிருஷ்டம் முதிர்ந்து - ஒரே சமயத்தில் பலனை அளிக்கிறது என்று சொல்லமுடியாது.

இந்தக் காரணத்தாலே, யுக முடிவுகளில் யேற்படும் நிலையிலே ஸர்வ ஸம்ஹாரமும் (நாசமும்) - அவைகளின் ஒரு இருப்பு பலனளிப்பது - த்வ பரார்த்த காலம் - பக்குவ மாகாமல் இருந்து கொண்டு அது யேற்படுவதாகிறது. (பிரும்மாவின் பாதி ஆயுட் காலம் இரண்டு பரார்த்தம் எனப்படுகிறது. பிரும்மாவின் ஆயுள் முடிவும், ஸம்பூர்ண பிரளயமும் மாறி மாறி வரும். ஒவ்வொன்றும் "பர" என்கிற காலம் வரை நீடிக்கும். இதற்கு 311,040,000,000,000 வருஷங்கள். இதில் பரார்த்தம். "பரா"வில் பாதி அளவாகும்). மேலும் முதல் கிரியை பர மாணுக்களில் ஜீவர்களுடன் சம்பந்தப்பட்டதால் ஏற்படுவதில்லை-எப்படிப் பட்ட ஜீவர்கள் யென்ருல் - எந்த ஜீவர்களில் குறிப்பிட்ட அதிருஷ்டம் பகவத் சங்கல்பத்திறல் யேற்படுகிறதோ, அந்த ஜீவர்களுடன் சம்பந்தம் கொண்ட பர மாணுக்களில் யேற்படுகிறதில்லை. ஏனெனில் சாஸ்திர யோநித்வாத் அதிகரணத்தில், பிருஹ்மம் சாஸ்திரம் ஒன்றையே தன்னை அறிவதற்குக் காரணமாவதால் - அது அனுமான ஸித்த மில்லை - ஈஸ்வரனை (தார்க்கிகன்) அனுமாந ஸித்தம் என்கிருன். ஆகையால் என்ன தேறுகிறது - ஜகத் உற்பத்தி பர மாணுவின் முதற் கிரியையினுல் பரமாணுக் கள் சேருவது சரியில்லை - அதாவது பரமாணுவைச் சார்ந்த

கர்ம பூர்வத்தால் - யேற்படுவதில்லை. ஆகவே பரமாணு ஜகத் காரணமாகாது என்பது ஸித்தம். பகவானே உபா தான காரணமாகிறான்.

ஸி. சூத்ரம். समवायाभ्युपगमाच्च साम्यादनवास्थितेः (2-2-12)

ஸமவாயாப்யுபகமாச்ச ஸாம்யாதந வஸ்திதே: (2-2-12)

ஸமவாயாப் யுகமாத் ச - (பர மாணு காரணவாதிகள் ஜாதி முதலானவை பொருளோடு ஒன்றி நிற்பதைப் பொருந்த வைக்க) ஸமவாயம் என்கிற சம்பந்தத்தை ஒப்புக் கொள்வதால்; ஸாம்யாத் - இந்த ஸமவாயம் பொருளோடு ஒன்று சேர்ந்து நிற்பதைப் பொருந்த வைக்க வேறு ஒன்றை ஒப்புக் கொள்ள வேண்டிய நிர்பந்தத்தாலே) – ஸாம்யத்தால அநவஸ்திதே: - ஒரு நிலை நில்லாமற் போக வேண்டிவருகிற தாகையால் (அஸமஞ்ஸம்-அணு காரணவாதம் பொருந்ாது வைதிக மதமே யேற்கப்பட வேண்டியது.

**சங்கதி:—**

ஸமவாயம் என்னும் சம்பந்தத்தை ஒப்புக் கொள்வ தாலும் அணு காரணவாதம் சரியாகாது. கடத்வம் முதலிய ஜாதி இத்யாதி, கடம் முதலிய திரவியத்தோடு பிரிக்க முடியாதபடி ஒன்றி நிற்பதற்குக் காரணமாக ஸம வாயம் என்னும் சம்பந்தத்தை நையாயிக வைசேஷிகர்கள் ஒப்புக் கொள்கிறார்கள். இப்படி அவர்கள் ஒப்புக்கொள்ள, இந்த ஸமவாய ஸம்பந்தம் அந்த திரவியத்தோடு பிரிக்க முடியாதபடி ஒன்றி நிற்பதற்குக் காரணமாக வேறு ஒரு சம்பந்தத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் - என்று இவ் வண்ணமாக ஸாம்யத்தினாலே, ஒரு நிலையில் அவர்கள் நில்லாமற் போக - இப்படி அநவஸ்தா தோஷம் யேற்படு கிறது என்பதாம்.

**ஸ்ரீபாஷ்யம்:—**

இதை ஸ்ரீபாஷ்யத்தில் - समवायाभ्युपगमाच्चासमञ्जसम् कुतः? ஸமவாய ஸம்பந்தத்தை ஒப்புக்கொள்வதால் (இந்த சம்பந்தம் ஜாதி முதலானவை பொருளோடு ஒன்றி நிற்பதைப் பொருந்த

வைக்க - அவர்கள் (பரமாணுகாரணவாதிகள்) ஸம்வாய ஸம்பந்தத்தை ஒப்புக்கொள்ள)-மேன்மேலும் ஸாம்யத்தை எதிர்பார்க்க-அதனுல் மேன்மேலும் வேறு ஒரு ஸம்பந்தத்தை எதிர்பார்க்கும் நிலெ - அநாவஸதா தோஷம் யேற்படுவதற்குக் காரணமாகிறது - இந்த ஸம்பந்த நிலெ முடிவில்லாதபடியால், साम्यादनवस्थितेः- ஸாம்யத்தை (ஸமவாய சம்பந்தம் திரவியத்தோடு ஒன்றி நிற்பதற்கான காரணமான ஸாம்யத்தை) எதிர்பார்ப்பதால், ஸாம்யத்திலுலே முடிவில்லாதபடியிருக்கவேண்டி வருகையால்-அநவஸ்தா தோஷம் ஸம்பவிக்கிறது. ஸமவாயமும் (சம்பந்தமும்) ஸாம்யத்திலுலே இன்னெரு வஸ்துவின் ஸம்பந்தத்தை அந்த ஸம்பந்தம் ஜாதியின் குணத்தைப் போல விட்டுப்பிரிக்க முடியாதபடி அப்ரதிக் ஸித்தமான உபபாதகாந்தர:- கடம் முதலான ஒரு திரவியத்தோடு விட்டுப்பிரிக்க முடியாதபடி விளங்கும் ஸாம்யத்தின் காரணமாக - ஜாதி அதன் குணம் (தர்மம்) (அதாவது அம்சங்கள் - ஜாதியின் பிரிவு (வகை) திரவியம் அதன் அடிப்படையாக விருக்கும் குணம் (தர்மம்) இவை களைக்காட்ட) அபேக்ஷிக்கப்படும். இப்படி யேற்படும் ஸமவாய ஸம்பந்தம் அந்த திரவியத்தோடு சேர்க்து ஒன்ருக நிற்க, இன்னெரு இதேமாதிரி விட்டுப்பிரிக்க முடியாதபடியிருக்கும் ஸம்பந்தத்தை - இப்படி முடிவில்லாதபடி வேருெரு ஸம்பந்தத்தை அபேக்ஷிப்பதால், ஸாம்யத்திலுலே ஒரே நிலெயில நில்லாமல்போக நேரிடும் - அநவஸ்தாகாரணமாக. இதனுல் பரமாணு காரணவாதிகளின் நிலெ அஸமஞ்ஜஸம். (ஒட்டாது) இது வரை என்ன சொல்லப்பட்டதென்ருல், अयुतसिद्धानामाधाराधेयभूतानामिहप्रत्ययहेतुर्यः संबन्धः स समवायः- (நாம்பார்க்கும் வஸ்துக்களில் எது பிரிக்க முடியாதபடி (அப்ரதிக் ஸித்தமான) தர்மம் அந்தக் காட்சிக்குக் காரணமாக விருக்கிறதோ, அந்தகாட்சியும் தர்மத்துடன் கூடிய பொருளும் ஆதார ஆதேய ஸம்பந்தத்தால் விளங்குவதும் அந்தக் காரணமான ஸம்பந்தம்தான் ஸமவாயம் எனப்படும்.

(இங்கு சொல்லப்படுவது - வைசேஷிக சூத்ரம் - (ப்ரசஸ்தபாத பாஷ்யம்) - 7-2-26-ஸமவாய ஸம்பந்தம் இந்த

திரவியத்தில் இருக்கிறது என்கிற எண்ணமாகும். இரண்டு வஸ்துக்கள் - ஒன்று காரணம் - மற்றொன்று காரியம். இது அதனால் யேற்பட்டது - இந்த ஸம்பந்தத்தை ஸமவாயம் என்றும் வஸ்து அதன் அம்சம், வஸ்து அதில் அடங்கியிருக்கும் ஜாதி தர்மங்கள், சலனம், சலனத்துடன் சம்பந்தப்பட்ட மற்ற திரவியங்கள் - ஜாதி - வகுப்பு (பிரிவு-கடம்) இத்யாதி-கடத்வத்திலிருந்து பிரிக்கப்பட்டது)-இவை நித்யமா என்கிற எண்ணங்களாகும். பிரஸஸ்தபாதர் நூல்-துணி என்கிற உதாரணத்தைச் சொல்லி நூலின் ஸமவாயத்தினால் துணி உண்டாகிறது. அது மாதிரி பாய்-பாயின்இதழ்கள் (Reeds) நரம்புகள்; இங்கே என்ன தர்மங்கள் நூலுக்கு இருக்கிறதோ அவை துணிக்குமிருக்கும்-இதனால் ஸமவாயம் (சம்பந்தம்) யேற்படுகிறதே ஒழிய, அவை ஒன்று காரணம் மற்றொன்று காரியம் தான் என நிர்பந்தமில்லை). (ஒரு சேர்க்கை பெற்ற திரவியம் தான் என்பதாகும்) - இதுதான் ஸமவாயம் என்று அறியப்படுகிறது சரி, ஜாதி அதன் அடங்கியுள்ள பிரிவு (கடத்வம் - கடம் என்பதைப் போல) அப்ரதிக் ஸித்தமான பிரத்யக்ஷக்காட்சிகளின் விஷயத்திலே ஸமவாய (சம்பந்தத்தாலே) யேற்படுவதாக ஒப்புக் கொள்ள படுகிறது.

அந்த அப்ரதிக் ஸித்தமயன நிலையின் அறிவு (இது இதனால் சம்பந்தம் கொண்டது என்கிற அறிவு) உண்டாவதற்கு ஒரு நிலை - ஏனெனில் ஜாதிக்கும் அதில் அடங்கியுள்ள வஸ்துவுக்குமுள்ள விட்டுப் பிரியாதபடி ஸாம்யமான நிலை - அம்ச அம்சீபாவம்) - அதனாலே யேற்படும் ஸாம்யத்தினாலே ஒன்றி நிற்பதற்கு இன்னொரு ஸம்பந்தத்தை ஒப்புக் கொள்ளவேண்டும். இங்கே காரணமான நூல் - ஸமவாய சம்பந்தத்தால் துணியாகமாற, அதேமாதிரி இன்னொரு வஸ்து - அதன் ஸம்பந்தம் இவற்றைத் தேடவேண்டிய நிலையால் - அநவஸ்தை. இந்த ஸமவாயத்திற்கு யாது காரணம் எனத்தேட வேண்டிவரும் (அதாவது ஜாதி - அதில் அடங்கியுள்ள பிரிவு (கடத்வம் - கடம்) இரண்டும்

விட்டுப் பிரிக்க முடியாதபடியிருப்பவை. ஸமவாய சம்பந்தம் இதற்கு சொன்ஞல் - அங்கே கூட ஜாதியைவிட்டு அதன் அம்சம் தனித்திருக்க முடியாது - அப்ரதிக்ஸித்தம்) இதற்கு அதன் "இயல்பு" என்று ஒப்புக்கொண்டு — ஸமவாய சம்பந்தம் திரவியத்தோடு ஸாம்யம் பெற்ருல், அதற்காக இன்ஞெரு சம்பந்தத்தை தேடவேண்டாம். அதஞல் ஸமவாய சம்பந்தம் ஏற்படவேண்டிய அவசியமில்லை. ஆஞல் பரமாணு காரணவாதிகள் ஸமவாயத்தைக் கற்பிக்கிருர்கள் - அவசியமில்லாதவிடத்தில் அது யேற்படும் என்று சொல்வது சரியாகாது - அதஞல் அவர்களின் கொள்கையேற்கத்தகாது.)

சரி - ஸமவாயமே அப்ரதிக் ஸித்த தர்மத்தைக் காட்டுகிறது என்று கற்பித்தால் - அந்த வஸ்துவின் இயல்பு திரவியத்திற்கும் ஜாதிக்கும் ஒப்புக் கொள்ளவேண்டிவரும். ஆஞல் நாம் பார்க்காத (கண்ணுக்குப் புலப்படாத) ஸமவாயத்தை ஒப்புக் கொள்வதில் சரியாகாது - அவ்விதம் பார்க்கப்படர்ததில், இப்படிப்பட்ட அப்ரதிக்ஸித்தமான தர்மம் இருக்கிறதாக கற்பிப்பதும் சரியாகாது. (அதாவது ஸமவாயத்திஞல் அந்த வஸ்துவின் அப்ரதிக்ஸித்தமானது அதன் ஸ்வபாவம் (இயல்பு) என்று கற்பிக்கப்படுமாஞல் - ஜாதி குணங்களும் ஸ்வபாவம் (இயல்பு) தான் என்று கற்பிக்கப்படவேண்டும் பார்க்கப்படாத வஸ்துவின் சம்பந்தத்திலே- ஸமவாயத்தை காண்பது - அதன் ஸ்வபாவம் (இயல்பு) என்று கல்பிப்பது யுக்தம் - என்று.) (இங்கு வைசேஷிகன் சொல்வது - ஸமவாயம் வஸ்துவில் இருக்காது. சேர்க்கை சம்பந்தத்தாலோ அல்லது தனிப்பட்டதாலோ இருக்காது; - அது அந்த வஸ்துவின் ஸ்வபாவம் என்கிருன் - இதற்கு இங்கு பதிலளிக்கப்படுகிறது).

ஸமவாயம் நித்யமா (காஞதன் சொல்கிருன் - நித்யமென்று) - அல்லது அநித்யமா? (பிராபாகரன் அநித்யமென்று சொல்கிருன்) - இந்த அநவஸ்தாதோஷம் இரண்டிலும் ஒரேமாதிரியிருக்கும். மேலும் சூத்ரக்காரர் இன்ஞெரு காரணத்தையும் சொல்கிருர் - அது காஞதன் சொல்வது போல நித்யமென்ருல்—

## ஸி. ஸூத்ரம் नित्यमेव च भावात् (2-2-13)

## நித்யமேவ ச பாவாத் (2-2-13)

நித்யம் ஏவ பாவாத்ச - ஸமவாயத்தை நித்யமாக ஒப்புக் கொண்டால் - அதை உடைய பொருள்களும் எப்போதுமே யிருக்கவேண்டி வருகையாலே - அணுகாரணவாதம் பொருந் தாது. (நையாயிக - வைசேஷிகவாதம் பொருந்தாது.)

**விளக்கம்:** —(ஸமவாயத்தினுல் உலகம் நித்யமாகிவிடும் கடத்வத்தைப் போல - கடம் முதலிய வஸ்துக்களும் நித்ய மாகி விடும். இது பிரத்யக்ஷ விருத்தம் - அதனுல் இந்த மதம் பொருந்தாது.)

**ஸ்ரீபாஷ்யம்**:—ஸமவாயத்தினுல் யேற்படும் சம்பந்தம் நித்யமாகவே ஒப்புக்கொள்கிருர்கள் நையாயிக வைசேஷி கர்கள். முன் ஸூத்ரத்தில் சொன்ன தோஷம் ஸமவாயஸம் பந்தம் அநித்யமாயிருந்தாலும் பொருந்தும். ஸம்பந்தம் என்பது இரண்டு ஸம்பந்திகளால் யேற்படுவது. இது நித்ய மானுல், இந்த ஸம்பந்தத்தை உடைய கடத்வம் முதலான ஜாதி நித்யம். ஜாதி நித்யமானுல் கடம் முதலான பொருள் களும் நித்யமாக வேண்டிவரும். இது பிரத்யக்ஷவிருத்தம் ஏனெனில் காரியம் அழியும் தன்மையுள்ளது. ஜகத்தும் நித்யம் என்பதால், ஏனெனில் ஜகத் ஸமவாய ஸம்பந்தத் தால் யேற்பட்டது. அதனுல் அஸமஞ்ஜஸம் – முரண் பாடாகவிருக்கிறபடியால்.

(இங்கு சொல்லப்படுவது - ஸமவாயத்தை அநுமானத் திணுல் நித்யம் என்கிருர்கள் - அவர்கள் (வைசேஷிகர்கள்). ஏனெனில் அதன் உற்பத்திக்குக் காரணம் பிரத்யக்ஷத்திருல் அறியப்படுவதில்லை-அனுமானம் அல்லது வேறு பிரமாணத் தாலும் அறியப்படாதது. ஆகவே இந்த ஸூத்ரத்தின் விளை வாக, ஸமவாயம் நித்யம் என்ருல், வைசேஷிகனின் தீர்மானம் பரமாணு நித்யம், கடவுள் என்பவர் தேவைப்படமாட்டார் என்ருகிவிடும் என்கிருர் ஸ்ரீராமாநுஜர். இன்னும் ஸமவாயம்

நித்யம் என்றால் பல தவறுகள் சுருத பிரகாசிகையில் காட்டப் பட்டிருக்கின்றன. பிராபகரனின் அபிப்ராயம்-கங்கா நாத்ஜா என்பவரால் சொல்லாப்படுகிறது. உள்ளிருத்தல் என்பது நித்யமில்லை. ஸமவாயத்தைப் போல (தார்க்கிகளின் அபிப்ராயமாக) - ஏனெனில் அது அழியும் வஸ்துக்களில் இருக்கிறது. அது வஸ்துவுடன் சம்பந்தமானதாலே வஸ்து அநித்யம் - அதுவும் அநித்யம் - ஆகவே உற்பத்தியும் உற்பத்தியில்லாமையும் யேற்படுகிறது - கண்களுக்குப் புலப்படுவதாகவும் புலப்படாமலுமிருக்கிறது - வஸ்துவின் ஸ்வபாவத்திற்கு யேற்ப. தார்க்கிகன் சொல்வது போல ஒன்றில்லை - பலவாக விருப்பதால் (பிராபாகரன்-பக்ஷம்பூர்வ மீமாம்ஸம்). அதாவது பிராபாகரன் ஸமவாயம் அநித்யம் என்றும் தார்க்கிகன் நித்யமென்றும் சொல்கிறான். இரண்டு வகையிலும் - தோஷமுள்ளதாகும்.)

ஸி. சூத்ரம रूपादिमत्त्वाच्च विपर्ययो दर्शनात् (2-2-14)

ரூபாதிமத்த்வாச்ச விபர்யயோ தர்சநாத் (2-2-14)

ரூபாதி மத்த்வாத் - பரமாணுக்கள் ரூபம் முதலிய வற்றை உடையதாயிருக்கையால், (நிறம் போன்றவைகளை யும் உடைத்ததாயிருக்கையால்) விபர்யய: ச - அணு காரண வாதிகள் பரமாணுக்களுக்கு ஒப்பும் நித்யத்வம் நிரவயவத் வம் முதலான தன்மைகளின் எதிர்தட்டானவையே ஸித்திக் கும். தர்ஸநாத் - கடம் முதலியவற்றில் அப்படிக் காண்கை யால் - இதனாலும் பொருந்தாது.

(காரியங்களான பூதங்களில் ஸ்பர்ஸம், ரூபம் ரஸம், கந்தம் என்கிற குணங்கள் பிரத்யக்ஷமாகக் காணப்படுவ தாலே, வாயு தேஜஸ ஜலம் பூமி - ஆகிய நான்கு பூத பர மாணுக்களான காரணப் பொருள்களிலும் அந்த குணங்கள் இருக்கின்றன, என அணு காரணவாதிகள் ஒப்புக் கொள் கிறார்கள். காரணப்பொருள்களில இருந்தால் - காரியப் பொருள்களில் காணப்படும் என்பது அவர்கள் கொள்கை -

இதே முறையில் கடம் என்கிற காரியம். என்பதால் அநித்யத்வம் காணப்படும். அவயவமுடைத்ததாயிருக்கை-இப்படி காரிய தர்மங்கள் இருக்க - ஸ்தூலமாயிருக்கை முதலான தன்மைகளை காரணப் பொருளான பரமாணுக்களில் ஒப்புக் கொள்ள வேண்டும். ஆனால் அவர்கள் பரமாணுக்கள் நித்யம் என்றும் நிரவயவம் - சூக்ஷ்மம் என்கிறார்கள். இது காரணப் பொருள்களின் எதிர் தட்டான தர்மங்கள் - அநித்யத்வம், அவயவமுடைமை - ஸ்தூலமாகவிருத்தல் காரணப் பொருளுக்கு ஸித்திக்கும் - பிரத்யக்ஷத்தினால் அறியப்பட்ட காரிய தர்மங்கள் - அதை ஒட்டி அவைகளை காரணத்தில் கற்பிக்கும்போது - அவர்கள் சொல்வது நாம் சிலவற்றை மாத்திரம் கற்பிப்போம். மற்றவைகளை கற்பிக்க மாட்டோம் என்று சொல்ல முடியாதே - அதனால் அணுகாரணவாதம் பொருந்தாது). (சாரீரக காரிகாவளி.)

**ஸ்ரீபாஷ்யம்:—**

பரமாணுக்கள் நான்கு வகைகளான - பிருத்வி அப்பு தேஜஸ் - வாயு - இந்த நான்கு விதங்களுக்கு யேற்ப ரூபரஸ கந்த ஸ்பர்சம் ஏற்படுவதால் - (அதை நீ ஒப்புக் கொள்கிற படியால் - இங்கே பூமியின் பரமாணுக்களுக்கு நான்கு குணங்கள் உண்டு - அப்புக்கு கந்தமில்லை - கோரமான ஜலங்களுக்கு நிறமும் ஸ்பர்சமும் உண்டு. வாயுவின் அணுக்களுக்கு ஸ்பர்சம் மாத்திரம் உள்ளவை). அதனால் அவைகளுக்கு விரோதமாக சூக்ஷ்மத்வம், நிரவயவத்வம், முதலியவை (இதுவும் உன்னால் ஒப்புக் கொள்ளப்பட்டவை - பரமாணுக்களின் விஷயத்தில்) - இவைகளுக்கு எதிர்தட்டாக அநித்யத்வம், ஸ்தூலத் தன்மை ஸாவயவம் எல்லாம் காரணமாகிற பரமாணுக்களில் யேற்படும். ஏனெனில் கடங்களுக்கு ரூபம் உண்டு அவை அநித்யம், அவை வேறு காரணங்களால் உற்பத்தியாகின்றன - இந்தக் காரணங்கள் மாறுபாடாக வர்ணம் முதலியவைகளை உடைத்ததாக விருக்கிறது. பார்க்கப்பட்ட வஸ்துவுக்கு அனுகுணமாக பார்க்கப்படாத வஸது கற்பிக்கப்படுமாகில், தனக்குப் பிடித்தமான (அபிமதமான) விசேஷ வ்யவஸ்தையை

ஸ்தாபிதம் செய்ய முடியாது. நீயோ பார்க்கப்பட்ட பிர காரம் அனுகுணமாக - பரமாணுக்களுக்கு (காரணப் பொரு ளுக்கு) ரூபாதி தர்மங்கள் உண்டு என உன்றால் கல்பிதம். ஆகவே பரமாணுவாதம் அஸமஞ்ஜஸமாகும். (அதாவது காரிய தர்மங்கள் காரண அணுக்களில் ஒப்புக் கொள்ள வேண்டியதாகும்).

மேலும் இந்த தோஷபரிஹாரார்த்தமாக - பரமாணுக் களுக்கு ரூபாதி தர்மங்கள் இல்லை என்று சொல்லக் கூடும் - இதற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிறார் -

(இங்கு சொல்லப்படுவது - காரணமான பரமாணுக் களில் ரூபம் முதலிய தர்மங்களை ஒப்புக் கொண்டால். அநித்யத்வம் ஸவயவத்வம் முதலானவையும் ஏற்படுகிறதே என்கிற பயத்தால், காரணப் பொருளான பரமாணுக்களில் ரூபம் முதலியவையில்லை என்று கொண்டால் - காரணங் களில் உள்ள குணங்களே காரியங்களில் ஒப்புக் கொள்ள வேண்டும் என்கிற நியமப்படி - காரணத்தில் இல்லாத ரூபம் முதலானவை காரியங்களான கடம் முதலானவற்றில் இல்லாமற்போக வேண்டிவரும். பிரத்யக்ஷ விருத்தமான இதைத் தவிர்ப்பதற்கு காரணமான பரமாணுக்களில் காரி யத்தை ஒட்டி ரூபம் முதலானவற்றை ஒப்புக் கொண்டால், முன் சூத்ரத்தில் கூறப்பட்ட அநித்யவம் பரமாணுக்களில் யேற்படும் ஆகவே இரண்டு பக்ஷங்களிலும் தோஷம் யேற் படுவதால் - அணு காரணவாதம் பொருந்ாது).

ஸித். சூ. उभयथा च दोषात् (2-2-15)

உபயதா ச தோஷாத் (2-2-15)

உபயதா தோஷாத் ச - பரமாணுக்களில் ரூபம் முதலானவை இல்லை என்றாலும், உண்டு என்றாலும் இரண்டு பக்ஷத்திலும் தோஷம் யேற்படும் - ஆகவே அணு காரணவாதம் பொருந்தாது.

பரமாணுக்களில் ரூபாதி தர்மங்கள் இருப்பதாக ஒப்புக் கொள்ளுதலாலே - தோஷமுள்ளது என்பது மாத்திரமல்ல - அவைகளுக்கு ரூபம் முதலியவை இல்லாத போதிலும் - ஏற் படும், ஏனெனில் காரணப்பொருள்களின் தர்மங்களே அதன் காரியங்களிலும் அணுகுணமாக யேற்படும் என்பதாகும். இதனால் பிருத்வி முதலிய காரியங்களுக்கு ரூபம் - ரஸம் இல்லாமற் போகிவிடும். இந்த கஷ்டத்தை பரிஹரிப்பதற்கு, பரமாணுக்களுக்கு ரூபம் ரஸாதி தர்மங்கள் உண்டு என ஒப்புக்கொண்டால், அப்போது கூட மேற்சொன்ன தோஷம் (அநித்யவம் ஸவயவத்வம் பரமாணுக்களுக்கு) யேற்படக் கூடும் ஆகவே இருவிதத்திலும் தோஷம் இருப்பதால், அணுவாதம் அஞ்ஸமஜஸம்.

ஸ். ஸூ. अपरिग्रहाच्चात्यन्तमनपेक्षा (2-2-16)

அபரிக்ரஹாச்சாத்யந்த மநபேக்ஷா (2-2-16)

அபரிகிருஹாத் ச - வைதிகர்களால் ஏற்றுக் கொள்ளப் படாமையாலும் பொருந்தாமையாலும் - அத்யந்தம் அந பேக்ஷா-மிகவும் அநாதரிக்கத்தக்கது (அணுகாரணவாதம்). (காணாத பக்ஷம் வைதிகர்களால் ஒப்புக் கொள்ளப்படமாட் டாது. ஏனெனில் ஈஸ்வரனை இவர்கள் ஒப்புக் கொள்ளாத படியாலே) - உபாதான காரணமாக. வேதத்தை ஒப்புக் கொள்ளாமல். அனுமானத்தையே பிரமாணமாகக் கொண்டு சித்தாந்தம் செய்ய வந்தார்கள்). (இங்கு சங்கரபக்ஷத்தில் நமது பிரும்மவித்யா 1-ம் பாகம் - பக்கங்கள் 6-8 வரை பார்க்கவும்) - 2nd portion - சங்கரபாஷ்யத்திலே).

**ஸ்ரீபாஷ்யம்:—**

முன்பு கபிலரின் சாங்கியமதத்தில் ஸ்வதந்திர பிரதா னம் ஜகத்காரணம் என்பது சுருதிகளுக்கு விரோதமாக விருப்பதாலே - தர்க்கத்திற்கும் விரோதிப்பதாலே, அது தள்ளப்படவேண்டியதே - ஆயினும் ஸத்காரியவாதிகளா கிற நாம் (வேதாந்திகள்) - இல்லாத பொருள் உண்டாக முடியாது என்கிற கொள்கையுள்ளவர்கள் அந்த சாங்கிய

மதத்தின் சில அம்சங்களை ஒப்புக் கொண்டிருக்கிறோம். அதாவது பிரகிருதி மஹாந் முதலிய இருபத்து நான்கு அசேதன தத்வங்கள் - ஸத் காரியவாதத்தை ஒப்புக்கொள் ளாத காணாத - வைசேஷிக மதத்தில் எந்த அம்சத்தையும் வைதிகர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. ஆகவே அவர்களின் மதம் முழுவதும் பொருந்தமாட்டாது. மோக்ஷத்தையடைய விருப்பமுள்ளவர்களால் அம்மதம் அத்யந்தம் அநபேக்ஷா - தள்ளப்படவேண்டியது. निश्रेयसार्थिभि: कार्य.

(இந்த சூத்ரத்தில் வைதிக மதத்தின் அடிப்படை சொல்லப்படுகிறது. சாங்கியமதத்தில் சில அம்சங்கள் ஒப்புக் கொள்ளப்பட்டு - வைசேஷிக மதத்தில் முழுவதுமே தள்ளப்படவேண்டியதாகும். உத்தமூர் ஸ்வாமி—

अपरिग्रहेकारणं प्रकृत्यादिवैदिक तत्वत्याग: । सामान्यविशेष-समवायाभावाख्यातिरिक्तपदार्थ अप्रामाणिक बहुगुण–अवयवा तिरिक्तावयविस्वीकारादितोऽनुपपन्नत्वं चार्थः

வைபாஷிக் ஸௌத்திராந்திக தூஷணம்—

(பௌத்தமதம் கண்டனம்) ஸமுதாயாதி கரணம் (2-2-3)

ஸ்ரீ. சூத். समुदाय उभयहेतुकेऽपि तदप्राप्ति: (2-2-17)

ஸமுதாய உபயஹேது கேऽபி ததப்ராப்தி: - (2-2-17)

உபயஹேதுகே ஸமுதாயே அபி - பரமாணுவைக் காரணமாகக் கொண்டதான பூமி முதலானவற்றின் ஸமுதாயத்திலும் பூமி முதலான பூதங்களைக் காரணமாகக் கொண்ட சரீரேந்திரிய ஸமுதாயத்திலும், ததப்பிராப்தி: - ஸமுதாயமாகும் தன்மை சேராது-அப்ராப்தி:-(யேற்படாது)-

பரமாணுக்களே உபாதான காரணம் என வாதித்த பரமாணுவாதிகளின் (நையாயிக - வைசேஷிகமதம்) தள்ளப் பட்டது. இதில் இந்த அணுகாரணவாதம் செய்யும் விஷ யத்திலே இவர்களை ஒத்திருக்கையாலே . அடுத்தபடி

பௌத்தபக்ஷம் தள்ளப்படுகிறது-பௌத்த மதத்தில் நான்கு பிரிவுகள் உளர் - வைபாஷிகன் ஸௌத்ராந்திகன் - யோகா சாரன - மாத்யாமிகன் நாலு பேருமே புத்த சிஷ்யர்கள் ஆயினும் முன்ன வரைக் காட்டிலும் பின்னவரது மதம் அதிகமான தோஷமுள்ளது.

இங்கு - பட்டர் அருளின ரங்கராஜஸ்தவத்திலுள்ள சுலோகம் *"யோகாசாரோ...க்ஷிபாம: என்பது நினைக்கத் தக்கது. அதன் அர்த்தம் - அரங்கநகர் அப்பனே, இந்த பௌத்தர்களுள் யோகாசார வகுப்பினன் வெளி உலகை இல்லை செய்கிறான்; ஸௌத்ராந்திகன் பலவகைப்பட்ட அறிவுகள் உண்டாவதாகிற ஹேதுவைக் கொண்டு அநு மானத்தால் உலகம் அறியப்படுவது க்ஷணிகமாகவுமிருப் பது என்கிறான். வைபாஷிகன் சொல்வது - உலகம் பிரத் யக்ஷமாகவும், க்ஷணிகமாகவும் இருப்பது. இம்மூன்று வகுப்பினரும் ஞானமே ஆத்மா என்றும் அது கணத்தில் அழிவதே என்கிறார்கள். அவர்களைத் தள்ளுகிறோம் நாம் - என்று கூறப்பட்டவர்களில் க்ஷணிகமான வெளி உலகை ஒப்புக் கொள்ளும் வைபாஷிகனும் ஸௌத்ராந்திகனும் முந்தின அதிகரணத்திலும், இந்த அதிகரணத்திலும் தள்ளப்படுகின்றனர். உலகமில்லை, க்ஷணிகமான ஞானமே உள்ளது என்னும் யோகாசாரன் அடுத்த அதிகரணத் திலும், ஒன்றுமே இல்லை என்று சொல்லும் சூன்யவாதி யாகிற மாத்யாமிகன் அதற்கடுத்த அதிகரணத்தில் தள்ளப் படுகிறார்கள்.

**ஸ்ரீபாஷ்யம்:—**

பரமாணு காரணவாதிகளில் வைசேஷிகர்கள் முந்தின அதிகரணத்தில் தள்ளப்பட்டனர். இங்கே ஸௌகதர்கள் (பௌத்தர்களில் ஒரு வகுப்பு) சொல்லும் பக்ஷம் நிராகரிக்கப்

---

*யோகா சாரோஜகத பலபத்யத்ர ஸௌத்ராந்திகஸ்தத்
தீவைசித்ர்யாத் அநுமிதிபதம் வக்தி வைபாஷி கஸ்து
ப்ரத்யக்ஷம்தத் க்ஷணிகயதி தே ரங்கநாத த்ரேயோऽபி
ஜ்ஞாநாத்மத்வ க்ஷணபிதுரதே சக்ஷதே தாந்க்ஷிபாம;

படுகிறது. இவர்கள் சொல்வது - பரமாணுக்களை ஜகத் காரணம் என்று ஒப்புக் கொண்டு, (அதனாலே) பிறகு அவர்கள் சொல்வது ஜகத் உற்பத்தி அதனால் யேற்படும் வ்யவஹாரிகமாக அதனை அறிவது இவை சரியான விளக்கமாக விராது - என்பதாம்.

இப்படிப்பட்ட பௌத்தர்களில் நான்கு வகைகள் மேற் காட்டப்பட்டன (ரங்க ராஜஸ்தவம் சுலோகத்தினால்). இவர்களை நாம் பாஹ்யர்கள் - வேதத்திற்கு புறம்பானவர்கள் எனக் கூறுகிறோம். இவர்களில் சிலர் பௌதிகமான வஸ்துக்களை - பிருத்வி - அப்புதே ஜஸ் - வாயு வாதிகளால் உண்டாக்கப்பட்ட பொருள்களை ஒப்புக் கொள்கிறார்கள். இந்த வஸ்துக்கள் பரமாணுக்களின் ஸங்காதமான (சேர்க்கை பெற்ற) வஸ்துக்களாகும்; பூத பௌதிக வஸ்துக்கள்; அதற்கு வெளிப்புறமான சித்த சைத்த ரூபங்களையும் அவைகளை உள்ளடக்கிக் கொண்டுள்ள விஷயங்கள் பிரத்யக்ஷ, அனுமான ஸித்தமாகவும் சொல்கிறார்கள். (இவர்கள் வைபாஷிகர்கள்) இன்னும் சிலர் (ஸௌத்ராந்திகர்கள்) வெளிப்பதார்த்தங்களான எல்லாப் பதார்த்தங்கள்-ப்ருதிவி முதலியவற்றை விக்ஞானத்தினாலும் அநுமானத்தினாலும் அறியப்படும் எனச் சொல்கிறார்கள். இன்னும் சிலர் (யோகாசாரன்).

**अर्थशून्यं विज्ञानमेव परमार्थसत्, बाह्यार्थस्तु स्वप्नार्थकल्पा:**

என்கிறார்கள் - வெளி வஸ்துக்கள் இல்லாமல் விக்ஞான மாத்திரம் பரமார்த்தமான வஸ்து - வெளி வஸ்துக்களோ ஸ்வப்னபதார்த்தங்களைப் போல மித்யையாகும் (இங்கு அத்வைத மதம் ஜகத்தை மித்யையென்று சொல்கிறார்களே-அதற்கு ஆதாரம் இங்கு இருக்கலாம்). இந்த மூன்று பக்ஷங்களும் ஒருமிடறாக சொல்வது - ஸத்யம் என்று எங்களால் ஒப்புக்கொள்ளப்படுவது எல்லாம் க்ஷணிகம் ஸ்வபாவத்திலே, அவர்கள் ஒப்புக் கொள்வதில்லை - பூத பௌதிக சித்த (மனம்) மனத்தின் மாறுதல்களான வஸ்துக்களுக்கு வேறான ஆத்மா, ஆகாசாதி பூதங்கள் முதலியவை தங்கள்

ஸ்வரூபத்திலே அனுமானிக்கப்படமாட்டா. இன்னொரு வகையினர் மாத்யாமிகன் - ஸர்வ சூன்யத்வமே எல்லா வஸ்துக்களுக்கும் என்கிறான்.

**விளக்கம்:—**

(இங்கு நான்கு வகைப்பிரிவுகள் பௌத்தர்களில் சொல்லப்படுகின்றனர். வைபாஷிகர்கள் - விபாஷா என்கிற கிரந்தத்தைப் பின் பற்றுபவர்கள். (அபிதம்மா - என்கிற புத்த நூலைப் பின் பற்றுபவர்கள்). உண்மைவாதிகள். ஸௌத்ராந்திகர்கள் சூத்ரங்களைச் சொல்பவர்கள் - அவர்கள் காண்பவைகளுள் ஒரு சிலவற்றை ஸத்யம் என ஒப்புக் கொள்கிறார்கள் - மற்றது எல்லாம் அனுமானிகம். யோகா சாரன் - யோக பழக்கங்களை உடையவர்கள். மாத்யாமிகள் நடு நிலையை ஆதரிப்பவர்கள். ஆனால் சூன்யவாதிகள் எல்லோரும் உலகத்தை ஐந்து ஸ்கந்தங்களாக (பிரிவுகளாக) நினைப்பவர்கள் ரூபஸ்கந்தம் பஞ்ச பூதங்களில் ஆகாசத்தைத் தவிர மற்ற பூதங்களை ஒப்புக்கொண்டு - இந்திரியங்களையும் ஒப்புக் கொள்கிறார்கள். விக்ஞானம் ஞானத்தின் பிரவாஹம் அது அறிவை உணர்ந்து, அதன் மேல் அத்யாஸமான அஹங்காரத்தையும் ஒப்புக்கொள்கிறது. சுகம் துக்கம் உதாஸீனம் - வெறுப்பு விருப்பு இன்னும் சில மன உணர்ச்சிகள் - வேதன ஸ்கந்தம் எனப்படுபவை - ஸமிக்ஞை (அடையாளத்தின் பெயர்) தொகுதி பல நியாய உச்சரிப்புக்களைச் சொல்வதாகும். இன்னும் பழைய வாசனைகள், ஸம்ஸ்காரங்கள் இருக்கின்றன - அவை பிரியம் அப்ரியம் ஏமாற்றம் முதலியவைகளைச் சொல்லும். ஐந்து ஸ்கந்தங்களில் ரூபம் வெளி விஷயமாகும். மற்றவை - அதாவது விக்ஞானம் மனத்தைக் குறிக்கும். மற்றவை மனத்தின் விளைவுகளாகும் (பாஸ்கரப்படி); வாசஸ்பதிமிஸ்ரா இன்னொரு அபிப்ராயத்தைச் சொல்கிறார் - ரூப ஸ்கந்தமும் மனத்தின் விளைவு என்கிறார். ராமானுஜர் சித்த சைத்த ரூபம் - ஞானத்தின் பிரவாஹமும் அதனைச் சேர்ந்தவஸ்துக்

களும் என்கிறார். வெளி வஸ்துக்களுக்கும் உள் வஸ்துக் களுக்கும் நடுவாக இரண்டையும் குறிப்பதாகும் - அல்லது பிற்பாடுவருவதைக் குறிக்கும் என்கிறார்).

இவர்களுள் வெளி வஸ்துக்களின் ஸ்திதியைப் வாதிப் பவர்கள் (அதாவது வைபாஷிகர்களும் சௌத்ராந்திகர் களும்) - இவர்கள் பக்ஷம் முதலில் கண்டிக்கப்படுகிறது. (நிரஸிக்கப்படுகிறது) அவர்களின் அபிப்ராயம் - ரூபரஸ ஸ்பர்ஸ கந்த ஸ்வபாவங்கள்-பார்த்திவா:-பிருத்வி சம்பந்தம் கொண்ட பரமாணுக்களுக்கு இருக்கும்; ரூபரஸ ஸ்பர்ஸ ஸ்வபாவங்கள் அப்புக்களுக்கு இருக்கும். ரூப ஸ்பர்ஸ ஸ்வபாவங்கள் தேஜஸ்ஸுக்கு இருக்கும்; ஸ்பர்ஸஸ்வபாவம் வாயுக்களுக்கு இருக்கும். இவை எல்லாம் ஒன்றாகச் சேர்க்கப்பட்டு பிருத்வி அப்பு தேஜஸ் வாயு இவைகளின் ரூபங்களில் இருப்பதாக எல்லாம் இருக்கும். இந்த பிருத்வி முதலிய பூதங்களிலிருந்து உண்டாக்கப்படுபவை - சரீரம் இந்திரியங்கள், விஷயரூபங்களாகின்றன. அவ்விதமிருக்க சரீரத்தினுள் அந்தர்வ்ருத்தியாக விருப்பது விக்ஞான ஸந் தானம் - பிரவாக ரூபமாக விருப்பது - அது அபிமானத் தினால் ஏற்பட்டு-அறிபவனாக (ஆத்மத்வேந) விளங்குகிறான்- அதிஷ்டாதாவாக விருக்கிறான். அதிலிருந்துதான் எல்லா லோகவ்யவஹாரிக நடவடிக்கைகள் யேற்படுகின்றன.

(இதற்கு நாம் பதில் சொல்வதற்கு முன்பு-அவர்களின் பக்ஷம் யாதென்றால் - பூமி முதலான நாலு பூதங்கள் (ஆகாசத்தைத் தவிர) ஒன்றோடொன்று சேருவதால் தேஹம் இந்திரியங்கள் முதலிய பௌதிகப் பொருள்கள் உண்டா கின்றன. நாம் வெளியுலகில் காணும் பொருள்கள் இப்படி உண்டானவையே. தேகத்தின் உள்ளிருக்கும் பொருளை ஆராய்ந்தால், ஞானங்களின் தொடர்ந்த ஸமூஹமாயிருப் பதாய் "அஹம்" என்னும் அறிவுக்கு விஷயமாக விருக்கும் அந்தர்வ்ருத்தி (உட்பொருள்) ஆத்மா எனப்படுகிறது). வெளிப் பொருள்களோடு, உட்பொருளான அறிவோடு வாசியற எல்லாம் க்ஷணமாத்திரம் இருப்பவை. இவை

நித்யம் என பிரமிப்பதே அக்ஞானம். ஆக இப்படி க்ஷணிக மான நான்கு வகைப் பரமாணுக்களிலிருந்து க்ஷணிகங் களான நான்கு பூதங்களும் அவற்றிலிருந்து க்ஷணிகங் களான தேக இந்திரியங்களும் உண்டாவது உலகின் உற் பத்தியாகும். உள்ளிருக்கும் க்ஷணிக ஞானத்தொடரான ஆத்மா இவற்றை ஸ்திரமென்று அறிவதால் உலக வ்யவ ஹாரம் யேற்படுகிறது. ஆகையால் ஜகத் உற்பத்திக்கும் லோக வ்யவஹாரத்துக்கும் வேறு எதையும் ஒப்புக் கொள்ள தேவையில்லை.) (சாரீரக காரிகாவளி).

**ஸ்ரீபாஷ்யம்:—**இதற்குப் நாம் பதில் அளிப்போம் समुदाय उभयहेतुकेऽपि तदप्राप्तिः - பூமி முதலானவற்றின் ஸமுதாயத் திலும் பூமி முதலான பூதங்களைக் காரணமாகக் கொண்ட சரீர இந்திரிய ஸமுதாயத்திலும் ஸமுதாயமாகும் தன்மை சேராது. ஸமுதாயமாகிற பூமி முதலானவைகளுக்கு இந்த அணுக்கள் காரணமாவதாக எவையோ - எவை பிருதிவ் யாதிகளுக்கு ஹேதுவோ, சரீர இந்திரிய விஷய ரூபஸமு தாயமோ - அதில் இரண்டு காரணங்கள் உளவாயினும், அதன் உற்பத்தி (तदप्राप्तिः - ஸமுதாயமாகும் தன்மை) யேற் படுவதில்லை. இதன் அர்த்தம் யாதெனில் - பரமாணுக் களின் ஸமுதாய உற்பத்தி - அதாவது உலகம் (ஜகத்) உற்பத்தி எனப்படுவது யேற்படுவதில்லை என்பதாகும். ஜகத் ஆத்மக ஸமுதாய உற்பத்தி - ஏற்படுவதில்லை என்ப தாகும். பரமாணுக்களாகிற பிருத்வியாதி பூதங்களும் க்ஷணிகமாகிறபடியாலே - அவை வஸ்துவை உண்டாக்க - ஒன்றுகச் சேரும்போது, அவை பிரத்யக்ஷ ஞானத்திற்கு விஷயங்களாக ஆகும் போது, அவை வ்யவஹாரிக நிலை யில் கல்பிக்கப்படும் போது - ஒத்துக் கொள்ளவோ அல்லது மறுக்கவோ இயலாது (அவ்விதமிருக்க, ஸமுதயாச் சேர்க்கை யேற்படாது என்பதாம்); எல்லாம் க்ஷணிகமான படியால்; க்ஷணம் அழிந்ததும் எல்லாம் போகின்றனவே. அப்போது அறிகிற ஆத்மா யார்? அவன் தன் இந்திரியங் களால் எந்த வஸ்துவைப் பார்க்கிறுன்? எந்த அறிகிற ஆத்மா எந்த அறிவின் விஷயத்தை, எப்போது அறிகிறது?

எந்த அறிகிற ஆத்மா ஒத்துக் கொள்கிறது ஏற்கனவே அறிவுக்கு விஷயமான வஸ்துவை - எப்போது? (ஏனெனில் பார்க்கிறவனே அழிந்து போகிறான் - பார்க்கப்பட்ட வஸ்துவும் அழிந்துபோகிறது அறிகிறவனும் அறியப்பட்ட வஸ்துவும் தொலைந்து போகின்றன - அவ்விதமிருக்க, எப்படி ஒருவன் தனக்கு ஒரு விஷயத்தை - மற்றவனால் அறியப்பட்ட விஷயத்தை ஏற்றுக் கொள்வான்?

(இங்கு சொல்லப்படுவது - இவர்களின் மதம் பொருந்தாது. அணுக்களிலிருந்து பூமி முதலிய பூத ஸமுதாயம் உண்டாவதாகக் கூறப்படுகிறது. பூமி முதலானவற்றிலிருந்து தேகம் இந்திரியம் முதலான பௌதிக ஸமுதாயம் உண்டவதாகக் கூறுமிடத்திலும் அவ்விரு ஸமுதாயங்கள் உண்டாவது சரியாகாது. ஏனெனில் அணு, பூமி முதலியவை எல்லாம் க்ஷணிகம். ஒரு பொருள் மற்றொரு பொருளோடு சேரும் போது, முதல் க்ஷணத்தில் அதில் க்ரியை யேற்படவேண்டும். இரண்டாவது க்ஷணத்தில் மற்ற பொருளோடு சேர வேண்டும். மூன்றாவது க்ஷணத்தில் ஸமுதாய நிலையை அடைய வேண்டும். அணுக்கள் க்ஷணிகமாதலால், உடனே அழியும் ஸ்வபாவமுள்ளதால், முதல் சேர்க்கை எப்போது யேற்படும் - சேர்க்கைக்காக எப்போது தொழில் புரிய முடியும்? அழியும் ஸ்வபாவமுள்ள பரமாணு எக்கணத்தில் க்ஷணிகமான ஞானத்திற்கு விஷயமாகி லோக வ்யவஹாரத்தை விளைவிக்க முடியும்? எல்லாம் க்ஷணிகமாதலால் - உலக உற்பத்தி யேற்படாது. லோக வியவஹாரமும் உண்டாகாது. இதற்கு - ஜகத் உற்பத்திக்கும் லோக வ்யவஹாரத்திற்கும் - பிருஹ்ம காரண வாதமே சரியாகும் என்பதாகும்).

ஸ்ரீபாஷ்யம்:—

பிரத்யக்ஷ காட்சி பிரவாஹம் - ஸம்தானனும் ஏகத்வம்-பரம் பரையும் வஸ்து (ஸ்வபாவ) ஐக்யத்தைச் சொல்லிடினும், அந்த பரம்பரை விஷயத்திலே பல வஸ்துக்கள் தோன்றுவதால் அந்த பிரவாஹத்திலிருந்து வெவ்வேறாகத்

தோன்றும் தத்வங்கள் யேற்படுவதால் - அதன் ஆதாரத்தில் - அந்த பிரவாஹ தத்வங்களுக்கு வ்யவஹார யோக்யதை யேற்படாது. அதனால் தான் "அஹம்" அர்த்தமேவ ஆத்மா - ஞானமாயும் அறிகிறவனுகவுமிருக்கிறுன் என்பதாகும் - अहमर्थ एवाऽऽत्मा, स च ज्ञातेति चोपपादितं पुरस्तात् - இந்த விஷயம் முன்பே சொல்லப்பட்டதாகும். ஞானம் வேறு அறிகிற ஆத்மாவேறு (பிரச்சன்ன பௌத்தனின் விஷயம் இதுவாகும். உத்தமூர்ஸ்வாமி - சொல்கிறுர்—

संतानानाम्नः स्थिरस्य कस्यचिदभावादित्यर्थः । ननुज्ञानानां क्षणिकत्वात् ज्ञानानतिरिक्तस्यात्मनः क्षणिकत्वं वेदान्तिनाऽप्येष्टव्यमित्यवाह अहमर्थ इति । संज्ञानस्वरूपो भवतु - मा वा । क्षणिकज्ञानातिरिक्तः तदाधारभूत इत्येव वास्तववेदान्तिमतमिति भावः ।

ஸி. சூத். इतरेतरप्रत्ययत्वादुपपन्नमिति चेन्न संघातभावानिमित्तत्वात् (2-2-18)

இதரேதரப்ரத்யயத்வாதுபபந்நமிதி சேந்ந ஸங்காதபாவாநிமித்தத்வாத் (2-2-18)

இதரேதர ப்ரத்யயத்வாத்-(அவித்யை முதலானவையும் பூமி முதலானவையும் சக்கரம் போல சுழன்று ஒன்றுெக்கொன்று (ப்ரத்யய - காரணம்) காரணமாயிருக்கையால் உபபந்நம் - ஸமுதாயமாகும் தன்மை பொருந்தும். இத்சேத்-என்றுல் - ந - பொருந்தாது. ஸங்காத பாவா நிமித்தத்வாத் - அவித்யை முதலானவை (பூமி முதலானவற்றின்) ஸமுதாயமாகும் தன்மைக்குக் காரணமாக மாட்டாதபடியால்.

(பூர்வபக்ஷம்) அநாதியாக வரும் காரிய காரண பரம்பரையை ஆராய்ந்தால் - முன் சூத்ரத்தில் சொன்ன (க்ஷணிகம்) தோஷம் யேற்படாது. க்ஷணிகப் பொருள்களை நிலையாக நினைக்கும் (விபரீத ஞானம்) அவித்யையாகும். அநி

லிருந்து ஸம்ஸ்காரங்களாகிற ராகம் த்வேஷம் யேற்பட்டு சரீரம் முதலியவை நிலையானவை என்னும் எண்ணத்தால் அவற்றில் ராகமும் அவற்றிற்கு தீங்கு செய்வாரிடம் த்வேஷமும் யேற்படுவதைக் காண்கிறோம். அந்த ராகம் தொடர்வதால் சித்ரூபமான ஆத்மா தாயின் கர்ப்பத்தில் நுழைந்து - அங்கு "நான்" என்னும் அஹங்காரத்தைப் பெற்று, புதிதாக உண்டாகும் சரீரத்திற்கு வேண்டிய சிரத்தை - வீர்யம் - ஸ்மிருதி - ப்ரீதி முதலிய சைத்தங்களைப் பெற்று, அதனாலே பூமி முதலான தாதுக்கள் சேரப்பெற்று ஆறு இந்திரியங்களைப் பெற்று - பிராணன் தேஹம் இந்திரியம் முதலான ஸமுதாயமாய் ஸ்பர்சம் எனப்படும் உடம் பாகி மறுபடி அவித்யையை அடைந்து - இப்படி சக்கரம் போல சுழன்று வருகிற பூத ஸமுதாயமும் பௌதிக சரீர இந்திரிய ஸமுதாயமும் யேற்படாமல் இந்த சக்கரம் ஒட்டாது. ஆகவே பூத பௌதிக ஸமுதாயம் யேற்டுபவதும், லோக வ்யவஹாவமும் பொருந்தி விடுகிறது ஆகையால் சென்ற சூத்திரத்தில் சொன்ன தோஷம் பௌத்த மதத்தில் யேராது. (மொத்தத்தில் அவித்யை ராகத் வேஷங்களை உண்டு பண்ணும் - பதார்த்தங்களை உண்டு பண்ணாது).

சூத்ரத்திலுள்ள பிரத்யய சப்தம் ஹேதுவாகும் - அவித்யாதிநாம பூமி முதலானவையும் சக்கரம் போல சுழன்று ஒன்றுக்கொன்று காரணமாவதாலே; ஸமுதாயச் சேர்க்கை உபபந்நம் (பொருந்தும்) என்றால் ந - இல்லை - பொருந்தாது. காரணம் - ஸங்காத பாவா நிமித்தத்வாத் - ஸமுதாயமாகும் தன்மைக்குக் காரணமாகமாட்டாது. நாம் சொல்லியபடி அவித்யை கிளிஞ்சலை வெள்ளியென்று அறியும் மயக்கம் - ஆனால் அது கிளிஞ்சல் முதலான பொருள்களின் சேர்க்கைக்குக் காரணமாகாது - வஸ்துவை உண்டாக்காது. எல்லாம் க்ஷணிகம் என்று சொல்பவர்களின் பக்ஷத்தில், பொருளும் அவனும் நிலையாக நிற்கிறானே - அவனும் அழிந்து போகிறான் - அவனுக்கு ராகம் த்வேஷம் எப்படி உண்டாகும்? இது தோஷமாகும்).

அவித்யா முதலானவை ஹேதுவாக அமைவது-பொருந்தாது - ஏனெனில் அவித்யை முதலானவை பூமி முதலானவற்றின் ஸமுதாயமாகும் தன்மைக்கும் காரணமாக ஆக மாட்டாதபடியால் -

அதாவது என்ன சொல்லப்பட்டதென்றால் எல்லா வஸ்துக்களும் க்ஷணிகம் - அழியக் கூடிய தன்மை பெற்றவை. ஆயினும் அவை வஸ்துவாக அறியப்படுத்தல் அவித்யையினாலே - அவித்யை என்கிற பெயருடையது - விபரீத புத்தியாகும். க்ஷணிக வஸ்துக்களை நிரந்தரமாக விருக்கக் கூடியவை என்று அறிய நேரிடுகிறது ; கண்களுக்குத் தெரியும்படி நினைக்கிறது. அவித்யையிலிருந்து ராக த்வேஷங்கள் உண்டாகின்றன. அவைகளிலிருந்து - ஜ்வாலை போன்று எரியும் தன்மையுள்ள விக்ஞானம் (அறிவு) யேற்படுகிறது. அதிலிருந்து மனதும் - நாமங்கள் எனப் பெயர் பெற்ற மனத்தின் விளைபொருள்களும் (காரியங்கள்) யேற்படுகின்றன. அவைகளிலிருந்து பிருத்வி முதலான ரூபம் கொண்ட வஸ்துக்கள் உண்டாகின்றன. அவைகளிலிருந்து ஆறு இந்திரியங்கள் षडायतनाख्यम् - ஆறு பீடங்கள் என்று சொல்லப்படுபவை உண்டாகின்றன. பிறகு அதிலிருந்து ஸ்பர்சம் எனப்படும் சரீரம் உண்டாகிறது. பிறகு உணர்ச்சிகள் உண்டாகின்றன. இந்தவிதமாக சம்சார சக்கரம் - சக்கரம் சுழன்று வருவது போல - அவித்யையிலிருந்து ஆரம்பமாகி - ஒன்றுக் கொன்று சம்பந்தம், ஆதரவு கொண்டதாய், அன்யோன்ய மூலத்வம் யேற்படுகிறது. இது அநாதியாகும். இந்தவிதமாக உற்பத்தியாவதால், இவையெல்லாம் உண்டாகாது எப்போது பூமி முதலானவற்றின் ஸங்காதம் (சேர்க்கை - அதனால் யேற்படும் விக்ஞான விஷயத்வம் - வ்யவஹார நடவடிக்கைக்கு உபயோகப்படும் சேர்க்கை) - உண்டாகாத போனால். ஆகையால் ஸங்காத பாவாதிகம் (சமுதாயத் தன்மை) யேற்படுவது) சரியாகும். உபபந்நம் (பூர்வபக்ஷம்).

(இங்கே சொல்லப்படுவது - பௌத்த மத கொள்கை - ப்ரதித்ய ஸமுத்பாதம் - சக்கரம் சுழல்வது போல துக்கம் — ஸம்சாரம் இத்யாதி - இதற்குக் காரணங்கள் கூறப்படு கின்றன. 1. அவித்யை 2. ஸம்ஸ்கார்ரங்கள் 3. விக்ஞானம் 4. நாம ரூபம் 5. ஷடாயதநம் (ஆறு இந்திரியங்கள் மனத் துடன்) 6. ஸ்பர்சம் (வெளி வஸ்துக்களிேனாடு சம்பந்தம்) 7 வேதனம் (உணர்ச்சிகள்) 8. திருஷ்ணை (ஆசை) 9 உபாதா நம் (முயற்சி) 10. பாவம் - ஸ்திதி (இருப்பு) 11. ஜாதி 12. ஜராமரணம் ஸோக பரிதேவந துக்க தௌர் மனஸ்யோப பயா - கிழத்தனம் பிறரை நம்பி வாழ்தல் - துக்கம் மரணம்- தீனத் தன்மை இத்யாதி. (இங்கு சங்கரரின் பாஷ்யத்தில் 12 காரணங்கள் சொல்லப்படுகின்றன-அதைப் பார்க்கவும்).

ஸ்ரீபாஷ்யம்:—

இதற்கு நாம் பதில் அளிப்போம். न सङ्घात भावानिमित्त-त्वात् इति - அவித்யை முதலானவை பூமி முதலானவற்றின் ஸமுதாய்மாகும் தன்மைக்கு காரணமாகமாட்டா. இந்த அவித்யா முதலியவை பிருத்வியாதி பூத பௌதிக ஸங்காத (ஸமுதாய) தன்மைக்கு காரணமாக ஆவதற்கு - உபயோகப் படமாட்டா. வாஸ்தவத்திலே அவித்யையோ - எதனால் விபரீதமாக நாம் அநித்யமான பொருள்களை நித்யம் என எண்ணுகிறோமோ - அந்த அவித்யையோ-அல்லது அதனால் யேற்படும் ராகம் த்வேஷம் முதலியவை-எவை விஷயங்களுக் குக் காரணமாகுபவை அவை காரணமாகமாட்டா - அவை களிலிருந்து வேறுபட்டதும் க்ஷணிகமானதுமான ஒரு வஸ்துவின் ஸமுதாயச் சேர்க்கைக்குக் காரணமாகமாட்டா. உதாரணமாக, கிளிஞ்சலை வெள்ளியென்று அறிவு மயக்கம் யேற்படுகிறதே - அது கிளிஞ்சல் முதலான பொருள்களின் சேர்க்கைக்குக் காரணமாக முடியுமோ—முடியாது - (அதாவது அவித்யை மயக்கத்தை உண்டு பண்ணலாம் - வஸ்துவை வ்யவஹாரயோக்யத்தைக்கு உண்டு பண்ணுது - கிளிஞ்சல் தவறாக வெள்ளியாகக் கருதப்படலாம். இதனால் புதிதான் வெள்ளி உற்பத்தியாக வில்லையே. உதாரணமாக தவறாகக்

காணப்பட்ட அந்த வெள்ளியை ஆபரணம் செய்வதற்கு உபயோகப்படுத்தக் கூடுமா?) शुक्तिकारजतादिबुद्धिर्हि न शुक्त्याद्यर्थ-संहृतिहेतुर्भवति ।

மேலும் எந்த வஸ்து க்ஷணிகமாக விருக்கிறதோ அதற்கு எவன் ஸ்திரத்வ புத்தி உள்ளதாக நினைக்கிறுனே (நித்யம் என நினைக்கிறுனே)-அவன் அப்போது அங்கேயே அழிந்து போகிறுன் (நஷ்டமாகிறுன்) அவனிடமோ-அல்லது வேறுயாரிடமோ எப்படி ராகம் த்வேஷம் ஏற்படும்? (க்ஷணிகமாதலால்) (ஒருவருமில்லை என்பதாகும்). எவர்கள் ஸம்ஸ்கார ஆஸ்ரயமானதும், ஸ்திரமாகவுள்ளதுமான ஒரே ஒரு வஸ்து உண்டு என்று ஒப்புக் கொள்கிறதில்லையோ - அவர்களுக்கு கல்பிக்க சக்தியும் இல்லை-(எதை) ஸம்ஸ்கார அனுவிருத்தி-ஒரு வஸ்துவுக்கு யேற்படவேண்டிய ஸ்திதி-அதை பூர்வ வாஸனைகளால் அறியும் தன்மை - உண்டு என்பதைச் சொல்ல முடியாது - द्रव्यमनभ्युपगच्छतां संस्कारानुवृत्तिरपि न शक्या कल्पयितुम् । என்பதாகும். (ஆகையால் பௌத்தமதம் பொருந்தாது)

ஸி. ஸூ. उत्तरोत्पादे च पूर्वनिरोधात् (2-2-19)

உத்தரோத்பாதே ச பூர்வநிரோதாத் (2-2-19)

உத்த ரோத்பாதே - பின் க்ஷணம் உண்டாகும் வேளையில், பூர்வ நிரோதாத் ச - முன்க்ஷணம் அழிந்து போவதால் பௌத்தமதம் பொருந்தாது).

(இங்கு சொல்லப்படுவது - பின் க்ஷணம் யேற்படும் போது முன் க்ஷணம் அழிந்து போவதால், முன்க்ஷணம் பின் க்ஷணத்திற்குக் காரணமாக ஆகமுடியாது. ஆகையால் எல்லாம் க்ஷணிகம் என்னும் பௌத்த மதத்தின்படி உலகத்தின் உற்பத்தி உண்டாகாது (ஒட்டாது) முன் க்ஷணத்தின் அபாவம் அந்த க்ஷணம் அந்த இடம் தவிர்த்து எல்லாக் காலங்களிலும் எல்லாவிடங்களிலும் எல்லாப் பொருள்களிலும் இருக்க நேரிடும். மேலும் எல்லாப் பொருள்

களும் எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் உண்டாக வேண்டிவரும். இன்னும் சில ஆக்ஷேபங்களு மிருக்கின்றன.)

**ஸ்ரீபாஷ்யம்:—**

இங்கே க்ஷணிகத்வபக்ஷம் என்பதால் ஜகத்தின் உற்பத்தி யேற்படாது என்று சொல்லப்படுகிறது. உத்திர க்ஷண உற்பத்தியாகிற வேளையில் பூர்வக்ஷணம் அழிவதாலே அதற்கு உத்தர (பிற்பாடுள்ள)க்ஷணம் காரணமாக மாட்டாது. (அதாவது உத்தரக்ஷணத்தில் உண்டான காரியத்திற்குக் காரணமாகாது. இன்னொரு ஆட்சேபம் - முன் க்ஷணத்தின் அபாவத்தின் ஹேதுவினுல் எல்லாம் எல்லாக்காலங்களிலும் எல்லாப்பொருள்களிலும் உண்டாகக் கூடும்.

(இங்கே வஸ்துக்களின் க்ஷணிகத்வம் பேசப்படுகிறது. இதனுல் காலப்போக்கில் தனித்தனியான பரம்பரையான தத்வங்கள் பேசப்படுகின்றன. ஒவ்வொன்றும் க்ஷணபரியந்தமிருக்கிறது. இரண்டு க்ஷணிகமுள்ள வஸ்துக்களின் நடுவே, ஒரு அவகாசமிருக்கவேண்டும், இதனுல் பின் க்ஷணத்தில் இருக்கும் வஸ்து முன்க்ஷணத்திலேயே உண்டாக்கப்பட்டதாகும். அதற்கு முன்பிருந்த க்ஷணிகத்தனத்திறுல் என்பதாகும்).

ஆகையால் பூர்வக்ஷண வஸ்து பின்க்ஷணத்தின் வஸ்து உற்பத்தியாவதற்கு காரணமாகும். அவ்விதமானுல் ஒரு பானை இருக்கும் க்ஷணத்திலே - அதுவே எல்லாப் பொருள்களின் இருப்புக்கும் - பசு - எருமை - அஸ்வம் - சுவர்கள், கல்கள் - என்று மூன்று லோகங்களிலும் இருக்கும் எல்லா வஸ்துக்களுக்கும் காரணமாகும். அவை ஒவ்வொன்றின் உற்பத்திக்குப் பரம்பரையாக காரணமாகும் என்பதால். (இங்கு முன்க்ஷணத்தில் வஸ்து இருப்பது - அது என்ன வஸ்து - என்ன ஸ்வரூபமாக உள்ளது என்பதைத் தெரியாமல் - பின்க்ஷணத்தில் இருக்கும் வஸ்துவுக்கும் காரணமாகும் என்பதால் இது யேற்படுகிறது).

ஆகையால் நீ சொல்லலாம் பூர்வக்ஷண வஸ்து ஒரே ஜாதியின் வஸ்துவுக்குக் காரணமாகலாம் - என்றால் அப் போதுகூட ஸர்வதேசங்களிலும் இருக்கும் உத்தரக்ஷண பாவத்தினால் ஒரே பானையையே - பூர்வக்ஷணத்திலுள்ள கடத்திற்கு (பானைக்கு) காரணமாகலாம். ஆகையால் ஏகஸ்யைவ (ஸ ஜாதியாக) ஹேது ஒன்றுதான் இருக்க வேண்டும் என்றால் அப்போதுகூட, எந்த ஒரு வஸ்துவுக்கு எதுஹேது ஆகும் என்பது அறியப்படமாட்டாது, ஆகவே எந்த தேசத்திலே எந்த கடம் (பானை) ஒரு க்ஷணத்தில் இருந்ததோ அது - அந்த தேச சம்பந்தத்தாலே தான் உத்தர க்ஷண காரியத்திற்குக் காரணமாகிறது என்றால் எந்த தேசத்தின் அது சம்பந்தத்தை உடையது. (காலம் - தேசம் - பொருள் எல்லாம் மாறுவதால் இந்த ஆட்சேபம் மேலும் கண்களாலும் மற்ற இந்திரியங்களாலும் சம்பந்தப் பட்ட வஸ்து ஞானம் யேற்பட்ட உத்தர க்ஷணத்திலும் இருக்காது - இதனால் ஒரு வஸ்துவும் ஞானத்திற்கு விஷய மாகாது. (ஒருக்ஷணிகமான பானை பரம்பரை பரம்பரை யாக க்ஷணிகத்வமுள்ள பானைகளை உற்பத்தி செய்யுமானால் அது ஏன் உலகத்திலுள்ள எல்லாப் பானைகளையும் உற்பத்தி செய்யாது?)

புத்தர்கள் சொல்வது தேச விஷயத்திலே ஒட்டாது (காலத்தில் க்ஷணிகம் என்பதால்) ஒரு க்ஷணிகத்வ பானை க்ஷணிகத்வமுள்ள தேசத்தின் சம்பந்தத்தால் – பல பரம்பரையான க்ஷணிகமுள்ள பானைகளை (க்ஷணிகமான தேசங்களுடன் சம்பந்தம் கொண்டதாக) விருக்குமானால் - ஒரு இடத்திலிருந்து இன்னொரு விடத்திற்கு கொண்டு போகப்படும் பானை விஷயம் என்னவாகும் - இம்மாதிரி பல ஆட்சேபங்கள் உள).

(பௌத்தன் சொல்வது முன் க்ஷணத்திலிருப்பதாய் காரியத்தோடு ஒரே ஜாதியை உடையதே அதற்குக் காரண மாக முடியும் எனில், ஒரு கணத்திலுள்ள கடம் அடுத்த க்ஷணத்திலுள்ள எல்லாக் கடங்களுக்கும் காரணமாக

வேண்டிவரும் - இதை தவிர்ப்பதற்கு ஒரு உத்தர க்ஷணத் திற்கு ஒரு பூர்வ கடக்ஷணமே காரணமெனில்-அப்போதும் எந்த ஒரு கடத்திற்கு எந்த ஒரு கடம் காரணம் என்பது நிர்ணயிக்க முடியாது - இதைத் தவிர்ப்பதற்கு எந்த தேசத் திலே ஒரு கடக்ஷணம் உள்ளதோ - அது அதே தேசத்தில் உள்ள அடுத்த கடக்ஷணத்திற்குக் காரணம் என்றால் - இப்படிக் கொண்டால் தேசம் நிலையானது என்று ஒப்புக் கொள்ள வேண்டிவரும். அப்போது எலலாம் க்ஷணிகம் என்கிற வாதம் சரிப்படாது - ஆகவே பௌத்த மதம் பொருந்தாது.) மேலும் கண் போன்ற இந்திரியங்களின் சம்பந்தம் கொண்ட வஸ்து ஞாஞேத் பத்தி காலத்திலே இருக்க முடியாது. அதனுல் ஞானத்தின் விஷயத்திற்கு ஒரு வஸ்துவும் இருக்கமுடியாது. (இங்கு சொல்லப்படுவது இந்திரியங்கள் வஸ்துவின் சம்பந்தத்தை அடைவதற்கும், ஞாஞேத்பத்திக்கும் கால இடைவெளியிருக்கும்.

ஸி. ஸூ. असति प्रतिज्ञोपरोधो यौगपद्यमन्यथा (2-2-20)

அஸதி ப்ரதிஜ்ஞோபரோதோ யௌகபத்யமந்யதா (2-2-20)

அஸதி (காரணம்) இல்லாமலிருக்கும் போது, (காரியம் உண்டாகுமாளுல்) பிரதிக்ஞோபரோத: - அதிபதி முத லானவை ஞானமுண்டாகக் காரணமாகின்றன என்று பௌத்த மதபிரதிக்ஞையோடு விரோதிக்கும். அந்யதா - இந்த பிரதிக்ஞை விரோதிக்காமலிருப்பதற்கு, காரணம் இருக்கும் போதே காரியம் உண்டாகிறது என்றால், யௌக பத்யம் - காரிய காரணங்கள் ஒரே (ஆனுல் அப்படியில்லை சமயத்தில் தோற்றம் அளிக்க (உண்டாக) வேண்டும்.

முன் சூத்ரங்களில் சொல்லப்பட்ட தோஷங்களைத் தவிர்ப்பதற்காக, காரணமில்லாமல் காரியம் உண்டா கிறது என்று ஒப்புக் கொண்டால், அதிபதி ஸஹகாரி முதலானவற்றை ஞானம் உண்டாகக் காரணமாக பௌத்த மதத்தில் பிரதிக்ஞை செய்திருப்பது ஒட்டாமற் போய் விடும். அப்போது இந்த பிரதிக்ஞை முரண்படாமைக்கு

காரணம் இருந்தே காரியம் உண்டாகிறது எனில், இருந்தது அழிய இடமில்லாமையாலே, காரியமும் காரணமுமான இரண்டு கடங்கள் ஒரே சமயத்தில் காணப்படவேண்டிவரும் ஆனல் இப்படிக் காணப்படவில்லை - ஆகவே பௌத்த மதம் பொருந்தாது (அஸங்கதம்).

(இதில் பௌத்த மதத்தின் சித்தாந்தம் சொல்லப் பட்டு, நிராகரிக்கப்படுகிறது). காரணம் இல்லாமலிருக்கும் போதே - காரியம் உண்டாகுமானல் - அப்போது எல்லா வஸ்துக்களும் எல்லாவிடங்களிலும் எப்போதும் உண்டாக வேண்டிவரும். இதனல் கேவலம் காரிய உற்பத்தி மாத்திரத்தில் தான் விரோதம் இருக்கிறது என எண்ணக் கூடாது. அவன் சொல்கிற பிரதிக்ஞைக்குக் கூட விரோதம் யேற்படும், அவனுடைய பிரதிக்ஞையாவது - அதிபதி முதலானவை ஞான முண்டாகக் காரணமாகின்றன•

प्रतिज्ञा-चत्वारः प्रत्ययाः हेतरालम्बनमनन्तरम् । तयैवाधिप-तेयश्च - இதற்கு விரோதம்யேற்படும். सहकारी - आलो-कादिः; आलम्बनं, விஷயம்; समनन्तरप्रत्ययः अव्यवहितपूर्व-क्षणस्थितं यत् किमपि ज्ञानम् । कथं प्रतिज्ञोपरोधः - पूर्व-क्षणे सर्वसद्भावस्य पर्याप्तत्वादिति चेन्न-प्रत्यक्षज्ञानस्य वर्त-मानग्राहिताया इष्टत्वात् विषयस्य प्रत्यक्षकाले आवश्यकत्वे तेन संप्रयुज्य सहभूय कारणीभवतामपि तत्कालस्थितिरपेक्षिते-त्याशयात् -

அதிபதி - ஸஹகாரி (முக்யமானவன் - உதவி செய்பவன்) - கூடவிருந்து உதவி செய்வதும் - இன்னும் உடனேயே காரணமாகுபவையும் - ஆக நான்கு காரணங்களும் - இவை ஞனேத்பத்திக்குக் காரணமாகின்றன. இதில் பிரதான மான (முக்யமான) காரணம் - அதிபதி - இந்திரியம். अधिपतिः इन्द्रियम्; இதுதான் அவர்களின் சித்தாந்தம்,

(அதாவது பௌத்தன் ஆகாசம் (space) என்பதை ஒப்புக் கொள்ளுகிறதில்லை. ஒரு க்ஷணமுள்ள பானை அது க்ஷண தேசம் (ஆகாசம் - இடைவெளி - space) என்பதுடன் சம்பந்தப்பட்டால், அதேமாதிரி க்ஷண பரியந்தமுள்ள பல பானைகளை உண்டாக்கக் காரணமாகலாம் - அவ்விதமானால் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எடுத்துப் போகப் பட்ட பானை என்ன ஆகும்?). (அதாவது ஒவ்வொரு காரியத்திற்கும் காலத்தின் இடைவெளி உண்டு - எவ்வளவு சிறியதாயினும் சரி. இந்திரியம் ஞானத்திற்குக் வஸ்துவைக் காண்பதற்கும் - அதனால் பிரத்யக்ஷ ஞானம் யேற்படுவதற்கும் - சமயநேர இடைவெளி இருக்கும்.) பொதுவாக (ஆனால் எப்போதுமில்லை — நான்கு காரணங்கள் அவர்களால் சொல்லப்படுகின்றன - நீலத்தின் நிறத்தை அறிவதில், பாமதி என்னும் அத்வைதி ஆசிரியர் இவ்விதம் சொல்கிறார் - அதிபதி - ஸஹகாரி - ஆலம்பந (உதவி செய்வது அதாவது விஷயம், - முன்க்ஷணத்தில் யேற்பட்ட எந்த ஞானமோ அது - (உடனேயே ஏற்படும் காரணம்) இவை எல்லாம் - இந்திரியங்களாகும் - கண், கண்ணின் வெள்ளைபிரதேசம், நீல நிறமுள்ள விஷயவஸ்து, முந்தின க்ஷணத்தில் யேற்பட்ட ஞானத்தின் நிலை). இதேமாதிரி இன்னொரு வகையான நான்கு காரணங்கள் - ஸஹகாரியை விட்டு விட்டு-அதற்குப் பதிலாக ஹேதுவைச் சொல்கிறது- இதுதான் உண்மையானதும் முக்யமான காரணமுமாகும்).

மேலும் சொல்லப்படலாம் - பிரதிக்ஞைக்கு விரோதம் யேற்படாவண்ணம் - க்ஷணத்திலே - முந்தின க்ஷணத்தின் பானை உருவமாகவிருக்கும் போதே - இன்னொரு பானை (க்ஷணபரியந்தமுள்ளது) - உண்டாகிறது எனச் சொல்லலாம். அப்படியானால், (அதே க்ஷணத்தில் உற்பத்தியாகிறது என்றால்), இரண்டு பானைகளின் காட்சியை-காரணம் காரியமாக-நாம் பார்க்கலாமே. அவ்விதம் பார்க்க முடியாதபடியால் (காணப்படவில்லை யாதலால்) பௌத்த சித்தாந்தமாகிற க்ஷணிகத்வமாகிற பிரதிக்ஞை அதற்கு நிருபணத்தை விட்டுவிட வேண்டியது - சரி, க்ஷணிகத்வம்

ஸ்தாபிதம் என்பது நிச்சயமாக ஏற்பட்டால், அப்போது அதே சமயத்தில் இந்திரியங்களின் ஸம்யோகத்திற்கும் (சேர்க்கைக்கும்) ஞானத்திற்கும் ஒரே சமயத்தில் உண்டாவது எனப்படும் यौगपद्यम् ஏற்படும். (अव्यवहितपूर्ववर्तित्वरूपं कारणत्वं मज्येतेति भाव: – இதுகூட अन्यथायौगपद्यमिति ஸௌத்ர பதயோரா விருத்த யார்த்த: (இங்கே கூறப்படுவது-ஒரு க்ஷணிக வஸ்து இன்னொரு உடனே ஸம்பவிக்கும் வஸ்துவுக்குக் காரணமாகுமானால், காரண காரியபாவங்கள் க்ஷணிகமில்லாமற் போய் விடும் - ஏனெனில் தொடர்ந்து வருவதால்; இல்லாதபோனால் இரண்டையும் ஒரே சமயம் பார்க்கப்பட வேண்டும். அப்போது சொல்லக்கூடும்-பின்னால் ஸம்பவிக்கும் க்ஷணிகத்வம் முந்தின க்ஷணிகத்வத்தில் அடங்கிவிடும், அப்படியானால் ஒரே சமயம் ஏற்படக்கூடும் இந்திரிய ஸம்யோகமும் பார்த்தலும் - இரண்டுக்கும்; அதேமாதிரி காரண க்ஷணிக வஸ்து காரிய க்ஷணிக வஸ்து இரண்டுக்கும் ஒரே சமயம் காட்சி (ஞானம்) ஏற்படவேண்டும்). यौगपद्यं प्रसज्यते

ஸி. ஸூ. प्रतिसंख्याऽप्रतिसंख्यानिरोधाप्राप्तिरविच्छेदात् (2-2-21)

ப்ரதிஸங்க்யாऽப்ரதிஸங்க்யாநிரோதாப்ராப்திரவிச்சேதாத் (2-2-21)

ப்ரதிஸங்க்யாऽப்ரதிஸங்க்யா நிரோதா ப்ராப்தி:-காணப்படும் (ஸ்தூல) விநாசமும் (அழிவும்), காணமுடியாத (சூக்ஷ்ம) விநாசமும் உலகிற்கு யேற்படமாட்டா. அவிச்சேதாத் (உள்ள பொருள் அடியோடு) இல்லாமற் போவது பொருந்தாதபடியால் .

முன் சூத்ரம் வரையில் இல்லாதபொருளிலிருந்து உள்ள பொருள் உண்டாகிறது என்னும் அஸத்காரிய வாதம் தள்ளப்பட்டது. இப்போது இந்த சூத்ரத்தில் உள்ள பொருள் அடியோடு இல்லாமற் போவது ஒட்டாது (சரியாகாது) என்று நிரூபணம். ஸங்க்யா சப்தம் அறிவைக் குறிக்கும்; இங்கு பிரத்யக்ஷத்தைச் சொல்லும். நிரோத சப்தம் விநாசத்தைச் சொல்லும், ஆகவே பிரதி ஸங்க்யா

நிரோத சப்தம் உள்ளபொருள் பிரத்யக்ஷமாகக் காணும்படி அடியோடு நாசமாவது - அதாவது இல்லாமற் போவதாகிற நிரந்வயவிநாசத்தை பௌத்தமதம் சொல்கிறது. பிரத்யக்ஷ மாகக் காணத்தகாததாயிருக்கும் நிரவிந்யவிநாஸம் அப்ரதி ஸங்க்யா நிரோத சப்தத்தால் கூறப்படுகிறது. இந்த இரண் டுக்கும் உதாரணம் - கடம் (பானை) முதலானவற்றை தடி யால் உடைக்கும் போது யேற்படும் விநாசம் ஸ்தூலமா யிருக்கையால், பிரத்யக்ஷமாகக் காணப்படுகிறது. இது ப்ரதிஸங்க்யா நிரோதத்திற்கு உதாரணம். இரண்டாவதற்கு உதாரணமாவது - அந்த கடம் (பானை) இப்படிதடியால் உடைக்கப்படுவதற்கு முந்தியே, ஒவ்வொரு கணமும் நசித் துக் கொண்டும் - அதைப்போன்ற மற்றொரு கடம் அடுத்த கணத்தில் உண்டாவதாகவும், இந்த விநாஸம் சூஷ்மமான தாகையால், பிரத்யக்ஷமாகக் காணத் தகாதது என்றும் க்ஷணிகத்வாதிகளால் ஒப்புக் கொள்ளப்படும். இவ்விரண்டு விதமான நிரன்வயவிநாசமும் ஏற்படமாட்டா. கடம் முதலான பொருள்கள் அழியும்போது, எப்போதும் அவை கபாலம் முதலிய வேறு நிலைகளை அடைகின்றனவே ஒழிய (அவஸ்தா பேதமே தவிர) அடியோடு அழிவதில்லை. ஆகை யால் அழியும் எந்த விடத்திலும் ஒரு பொருள் மற்றொரு நிலையை அடைவதாகிற ஸாந்வய விநாசத்தை ஒப்புக் கொள்ளலாமே ஒழிய, அந்தப் பொருள் அடியோடு அழி கிறது எனப்படும் நிரந்வய விநாசத்தை நாம் ஏற்க முடி யாது. இது ஆரம்பணுதி கரணத்தில் சொல்லப்பட்ட தாகும்.)

(ஸ்தூலமான விநாசம் ஸத் காரிய வாதத்திற்கு விரோதம். அஸ்தித்வத்திற்கு பிரதி ஸங்கியா. சூக்ஷ்ம விநாசம் அபுத்தி பூர்வ விநாஸம்; இயற்கையான நாச மாகும்).

(பௌத்தன் ஸம்ஸக்ருதம் அஸம்ஸ்கிருதம் என்று பிரிவைச் சொல்கிறான் - ஸம்ஸ்கிருதம் - ரூப சித்த சைத சித்த விப்ர யுக்த பேதாத் - என நான்கு விதம். ரூபம் •

பிருதிவ்யாதி ; சித்த மஹம் க்ரஹா ரூடம் ; சைத்தம் - ராகாதி சித்த விப்ர யுக்தம் — ஜன்ம ஜராமரணம்.

அஸம்ஸ்கிருதம் - பிரதி ஸங்க்யா நிரோதஸ்யா ப்ரதி ஸங்க்யா நிரோத ஸ்யா காசஸ்யச க்ரஹணம் க்ருதம். அதில் ஸம்ஸ்கிருதம் க்ஷணிகம் எல்லாம் கண்டிக்கப்பட்டது பிறகு அஸம் ஸ்கிருதம் - இரண்டு சூத்ரங்களால் கண்டிக் கப்படுகிறது. प्रतिसंख्येति । )

மேல் சூத்ரத்தின் வரை, அஸத்காரிய வாதம்-இல்லாத திலிருந்து காரியம் உற்பத்தி யாவது கண்டிக்கப்பட்டது. இப்போது சொல்லப்படுகிறது - காணப்படாத விநாசம் (நிரன்வய விநாசம்) இருக்கிற வஸ்துவுக்கு (ஸத்திற்கு) யேற்படாது. இதன் அர்த்தம் என்ன வென்றால் - கடம் (பானை) ஸ்தூலமாக அழிதல் என்கிற உதாரணம் - அது காணப்படும் யோக்யதை யுள்ளது - உடைக்கும்போதே தெரியவரும் ; இம்மாதிரி கடம் (பானை) பரம்பரையின் முடிவு என்பது சரியாகும். ஸுக்ஷ்மமாயும், காணத்தகாத படி விநாசம்-மீத மில்லாமல் அடியோடு நாசமாகுதல் நிரந் வயவிநாசம் என்று சொல்லப்படுவது-அம்மாதிரி அறிவுக் குப் புலப்படும்படி பரம்பரை தொடர்ந்து வருவதும் - ஒவ் வொரு க்ஷணத்திலும் யேற்படுவது - அதனால் கண்களால் பார்க்கப் படமுடியாது.

(உதாரணம் வெள்ள ஜலபிரவாஹம் - தீபம் எரிதல் - விளக்கு பரம்பரையாக எண்ணை திரியுடன் எரிகிறது. அணையும்போது உள்ளதான விளக்கு அடியோடு அழி கிறது. பழுக்கக் காய்ச்சிய இரும்பில் நீர்த் துளி விழுதல் - அதுவும் அடியோடு மறைந்து போகிறது - என்று பிரதி க்ஷணமும் அனுமானிக்கிறோம்). இம்மாதிரி ப்ரதி ஸங்க்யா நிரோதா ப்ரதி ஸங்க்யா நிரோத சப்தங்களால் - இந்த இரண்டு விதமான ஸ்தூல விநாசம் ஸுக்ஷ்ம விநாசமும் **(Artificial and Natural annihilation)** என்பதால் காட்டப் படுகின்றன - (அஸ்தித்வ ப்ரதீபம் அல்லது நாஸ்தித்வம்)

இந்த விஷயங்களின் உபலப்திகளின் நிரோதம் என்பதாகும்- இது பௌத்தருல்; "க்ஷணிகவாதி" என்று சொல்லப்படு பவரால் சொல்லப்படுவது. இந்த இரண்டும் யேற்படாது. எப்படி ? अविच्छेदात् - இரண்டுக்கும் இடை வெளி இல்லாதபடி யால். ஏனெனில் இருக்கிற ஸத்வஸ்துவுக்கு அடியோடு விநாசம் (நிரன்வய விநாஸம்) யேற்படாது. இம்மாதிரி அஸம்பவம் (யேற்படாதது) ஏற்கனவே சூத். 2-1-15 तदनन्यत्वम् (காரணமான பிருஹ்மத்தைக் காட்டிலும் காரிய மான உலகம்) வேறுபடாமலே உள்ளது - ஆரம்பணுதி கரணத்தில் சொல்லப்பட்டது. நாம் வாதிப்பது-ஸத்காரிய வாதம் - காரண காரிய ஐக்யம்-அதனுல் உற்பத்தி விநாசம் ஒரு ஸத்தான வஸ்துவுக்கு யேற்படுவது - அவஸ்தா பேதமே ஒழிய வேறில்லை இதில் திரவியம் ஏகமேவ (ஒன்று தான்) என்பது ஸ்திரம் - அழியாதது. (இங்கே க்ஷணிகத்வ பக்ஷம் கண்டிக்கப்படுகிறது. அவர்களின்படி ஒருவஸ்து காலத்தில் இருப்பது மித்யை என அறியப்படவேண்டும். இதனுல் யேற்படுவது அழிதல், உலகத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துவுக்கும் யேற்பட்டுக்கொண்டிருக்கும் - ஆனுல் அது சூக்ஷமம்-காணப் படாதது. ஒரு பானை ஸத்தாக (இருப்ப தாகக்) காணப்படும் போது - பலக்ஷணங்களில் தொடர்ந்து காணப்பட்டால் - அதேமாதிரி பரம்பரையாக க்ஷணிகத்வ முள்ள பல பானைகள் கண்களால் ஸ்தூலமாக- மெய்யாகப் பார்க்கப்படும் - ஒரே பானைமாத்திரமில்லை. பல விருப்ப தால். ஒரு பானையை உடைப்பதால் - அழிதல் யேற்படுவது வேறு விஷயம். அது ஸ்தூலம், காணத் தகுந்தது. இம் மாதிரி ஸ்தூல சூக்ஷ்ம விநாசம் - பௌத்தருல் - உலகிற் குச் சொல்லப்படுகிறது - காணப்படாமலும் அழிவு யேற் படுவதும் என்பதில் சேர்த்துக்கொள்ள வேண்டியது. உதாரணமாக நமது மனத்தின்கவனத்திற்கு வேறு விஷயம் இருக்கும்போது-அப்போது நாம் அந்த வஸ்துவை கண்களால் காண்பதில்லை, உணருவதில்லை. அதுபோல தீர்மானிக்கப்பட்ட அழிதல் - என்பது பந்தத்தின் கடைசி விநாசத்தைக் குறிக்கும்).

மேலும் சொல்லப்படலாம்-விளக்கு முழுவதும் அணையும் போது - அடியோடு அழிதல் நிரன்வய விநாசம் காணப்படு கிறதே (கண்களால்) என்றால், அதனால் அனுமானிக்கப்படு கிறது - வேறிடத்திலும் நிரன்வய விநாசம் (அடியோடு அழிதல்) யேற்படுகிறதே என்று சொல்லக்கூடுமானால் - அவ்விதம் சொல்வது சரியில்லை என்போம் - ஏனெனில் நாம் தீர்மானமாக நிச்சயிக்கக்கூடும் - பானைகள், தட்டுக்கள் இம்மாதிரி வஸ்துக்களின் காட்சிகளில் உபாதான காரண மாகிற களிமண்-மற்றையவஸ்துக்களும் காணப்படுகின்றன ஆகவே ம்ருத்போன்ற திரவிய அநு விருத்தி (தொடர்ந் திருப்பதால்) - வஸ்து ''ஸத்'' துதான் திரவியநாசமில்லை - அவஸ்தாபேதமே ஒழிய-அவஸ்தா நாசமே தவிர வேறில்லை.

ஆகவே விளக்குப் போன்ற உதாரணங்களிலும் நாம் க்ஷணபர்யந்தமுள்ள, விநாசத்தை காண் பதில்லை - ஏனெனில் அந்த அழியும் காட்சி சூக்ஷ்மமாக விருக்கிறது - அம்மாதிரி விஷயங்களில் அவஸ்தா பேதத் தைக் கல்பிப்பது யுக்தமாகும். (ஸ்ரீராமானுஜருக்குவிரோத மாக அழிதல் என்பது திரவியத்தின் அவஸ்தாபேதம் என்றால் - பௌத்தன் விளக்கு முழுவதும் அணைவதை தன் பக்ஷமாகச் சொல்கிறான். இங்கே விளக்கு அணைதல் முழுவதும் யேற்படுகிறது - இம்மாதிரி காணப்படாத விநாசமும் பானை முதலிய திரவியங்களுக்கு ஏற்படுகிறது என்று அனுமானிக்க வேண்டும். இதற்குப் பதில் - காணப் படாமல் ம்ருத்தின் (களிமண்ணின்) அனுவிருத்தி (தொடர்ந் திருந்தால்) யேற்படுவதற்கு காரணம் சொல்ல முடியாது. நாம் அனுமானிக்கலாம் - எப்படி திரவியம் தொடர்ந்திருக் கிறதோ, அதுபோல தீப ஒளியுடன் மறைதலும் சூக்ஷ்மமாக விருக்கிறது. இதனால் காணப்படும் வஸ்துவிலிருந்து காணப்படாத வஸ்துவை நாம் நினைத்துப் பார்க்கலாம். ஆனால் பிரத்யக்ஷ காட்சிக்கு விரோதமாக - விருப்பல்லாத மறுப்பதோ தவறாகும்.

ஆகவே கடம் குண்டலம் இத்யாதிகளிலும் - மற்ற விளக்குபோன்ற வஸ்துக்களிலும் நிரன்வய விநாசத்தை நாம் ஒத்துக் கொள்ளவில்லை - இதனால் நாம் கூறுவது காண்பதை ஒட்டி காணுததை கற்பிப்பது தக்கது; காணுததை ஒட்டிக் காண்பதைத் தள்ளுவது தகாதது. கடம் குண்டலம் - அழியும் போது அவஸ்தாபேதமே ஒழிய திரவிய நாசமில்லை. ஆகவே, பௌத்தர்களால் கற்பிக்கப் படும் பிரதி ஸங்க்யா நிரோதம் அப்ரதி ஸங்க்யா நிரோதம் எனப்படும் இருவிதமான நிரன்வய விநாஸங்களும் ஒட்டாது. ஸத்தான (உள்ள) பொருள் அடியோடு அழிய முடியாது என்பது நிரூபிக்கப்பட்டதாயிற்று).

ஸூ. ஸூ. उभयथा च दोषात् (2-2-22)

உபயதா ச தோஷாத் - (2-2-22)

உபயதா - இல்லாத பொருளிலிருந்து உள்ள பொருள் உண்டாகிறதென்றும் - உள்ள பொருள் இல்லாததாகிவிடு கிறது என்றும் கூறும் இரண்டு வாதங்களிலும் தோஷாத் ச - தோஷம் ஏற்படுவதால் பௌத்த மதம் சரியாகாது -

(அதாவது அவர்களின் அபிப்ராயப்படி - உண்டான பொருள் இல்லாததாகி விடுகிறது; இல்லாததிலிருந்து (அஸத்திலிருந்து) பொருள் உண்டாகிறது - என்கிற இரு பக்ஷ வாதங்களும் சரியாக மாட்டா. எங்கனமெனில் சூந் யத்திலிருந்து ஒரு பொருள் உண்டானுல் அந்தப் பொருளும் சூன்யமே. ஏனெனில் உலகில் காரணப் பொருளை அனு ஸரித்தே காரியப் பொருள் இருப்பதைக் காண்கிறோம். உள்ள பொருள் நிரன்வய நாசமாகுதல் (அடியோடு அழிதல் என்கிற வாதத்தில, ஒரு க்ஷணத்திற்கு மேல் உலகம் முழு வதும் அடியோடு நாசமாக வேண்டும். சூன்யமாகவே ஒப்புக் கொள்ள வேண்டும் - ஆக இருவகையிலும் உலகம் சூன்யமாக ஒப்புக் கொள்ள நேரிடும் - அதனுல் பௌத்த மதம் அஸங்கதம்).

**ஸ்ரீபாஷ்யம்:—**

க்ஷணிகத்வ வாதிகளால் ஒப்புக் கொள்ளப்பட்டது. உலக ஸ்ருஷ்டி இல்லாததிலிருந்து (துச்சத்திலிருந்து - சூன்யத்திலிருந்து யேற்படுகிறது - உண்டாக்கப்பட்ட காரியங்களும் துச்சத் வத்தை (அழியும் தன்மையை) அடைகின்றன - இம்மாதிரிவாதங்கள் சரியாகாது - அயுக்தம். உபய விதமாகச் சொல்லப்படும் வாதங்களில் தோஷங்கள் இருக்கின்றன. சூன்யத்திலிருந்து வஸ்து உண்டாகுமானால்- காரியங்களும் துச்சத்தன்மையை அடையும். இல்லை - எந்த காரண வஸ்துக்களிலிருந்து காரிய வஸ்துக்கள்- तदात्मक - உபாதான காரணமாக மூலப் பொருள் இருக்கிற படி - காரியத்திலும் அதேபடி காணப்படுவதால் - (ம்ருத் - சுவர்ணம் - இத்யாதி உதாரணங்களில் காணப்படுகிறதே- ஜாடி - க்ரீடம் - ம்ருத் - தங்கம் தொடர்ந்து காரியத்திலும் காணப்படுவதால் - இது சரியாகும். (தொடர்ந்து அனுவர்த்திப்பதால் பிரத்யக்ஷத்தினுல் அறியப்படுவதால்) சரியாகும் என்பதாம். இதனுல் திரவியத்தின் அவஸ்தாபேதமே ஒழிய - வஸ்துவிக்கு அடியோடு நாசமில்லை. அதை நாசம் என்றுல் - இந்த ஸம்பூர்ண உலகமாகிற (காரியமும்) சூன்யத்வத்தை அடைந்து விடும். ஒரு க்ஷணம் முடிந்ததும் சரி- மீண்டும் அந்த உலகம் உண்டாயிற்று என்றுல் - அதற்கு- துச்சாத்மகமேவ — சூன்யத்வ நிலையே யேற்படும் - அங்கே கூட நாம் சொல்வது - அவஸ்தாந்தர நிலை யேற்படுவது தான் பொருத்தமாகும். இரண்டு விதத்திலும் - உன் பக்ஷப் படி தோஷம் - அதனுல் உலகிற்கு உற்பத்தியும் விநாசமும் நீ சொல்கிறபடி யேற்படுவதில்லை. ஒரு கணத்திற்கு மேல், உலகம் முழுவதும் அழியவேண்டிய படியால் சூன்ய த்வமே நிற்கும், அதனுல் பௌத்தமதம் அஸங்கதம்.

(இங்கே வைபாஷிகனுக்கு பதில் உரைக்கப்படுகிறது. அவன் உலகம் தத்வமில்லை என்பதை ஒப்புக்கொள்வதில்லை - ஆனுல் அவன் சொல்வது - உலகம் காணப்படு

மலே அழிவை க்ஷணந்தோறும் அடைகிறது. இது தவரு கும் எனக் காட்டப்பட்டது. பூர்ண அழிவு என்பது நமது சித்தாந்தத்தில் இல்லை.)

ஸூ. சூ. आकाशे चाविशेषात् (2-2-23)

ஆகாஸே சாவிசேஷாத் (2-2-23)

ஆகாஸே ச - ஆகாச விஷயத்திலும் (கூட) சூன்ய மெனும் வாதம் பொருந்ாது-அவிசேஷாத் - பூமி முதலான வற்றைப்போல ப்ரத்யக்ஷமாகக் காணப்படுவதால், வாசி யில்லை (ஒற்றுமையில்லை).

(அதாவது சூன்யமாக பூமி ஆகமாட்டாது - சூன்யத்தி லிருந்தும் பூமி மீண்டும் உண்டாகாது என்று முன் சூத்ரத் தில் நிருபிக்கப்பட்டது. வேறு பிரமாணத்தால் தள்ளப் படாமல் பிரத்யக்ஷத்தால் நாம் காண்பதாலே ஆகாசமும் சூன்யமாக மாட்டாது-என்பது இதில் நிருபணம்-உதாரண மாக - கழுகு இவ்விடத்தில் பறக்கிறது - இதில் பறக்குமிட மாக ஆகாசம் ப்ரத்யக்ஷமாகக் காணப்படுகிறது.)

**ஸ்ரீபாஷ்யம்:—**

வெளி வஸ்துக்களின் ஸ்திரத்வத்தையும் (எப்போது இருக்கும் நிலையையும்) அதேமாதிரி உள்வஸ்துக்களின் ஸ்திரத்வத்தையும் பிரதிபாதனம் செய்வதற்கு - நாம் ஏற்க னவே ப்ரதிஸங்கியா ப்ரதிஸங்க்யா நிரோதம் (உலகிற்கு ஸ்தூல சூக்ஷ்மவிநாசங்கள் யேற்படாது) என்று சொல்லி— அதே பிரகாரம் துச்சத்வமாக அடியோடு அழிதல் என்கிற நிலையும் உலகின் வஸ்துக்களுக்கு யேற்படாது - அவஸ்தா பேதமே என்பதால் நிராகரிக்கப்பட்டது - அந்த வாதங்களில் எழுவதுமான ஆகாசத்தின் சூன்யத்வமும்-இது ஸௌகதன் (புத்த மதத்தில் ஒரு வகுப்பு) சொல்வது - அவனுடைய அபிப்ராயமும் (ஆகாசத்தை ஒப்புக் கொள்கிறதில்லை) - இதனுல் நிரஸிக்கப்படுகிறது.

(இங்கு பௌத்தர்களின் தர்மங்களின்படி - மூன்றை அஸம் ஸ்கிருதம் (ஒன்ருக சேர்க்கப்பட்டதில்லை. உண்டாக்கப்படவில்லை - வேறு பொருளேயும் உண்டாக்குவதில்லை). இந்த மூன்றும் இருவகையான நிரோதம் (நாசத்தை) சொல்கின்றன. அதன் பிரகாரம் ஆகாசம். (பிரதேசம்). நிரோத விஷயமாகிற நாசத்தை முன்பு அவஸ்தாபேதம் என்று சொன்னேம் – இங்கே புத்தனின் அபிப்ராயம் ஆகாசம் இல்லை - என்பது நிரஸிக்கப்படுகிறது).

புத்தன் சொல்கிருன் - ஆகாசத்தை நிருபணம் செய்ய முடியாது - பாவருபத்திஞல் பூமி முதலான வற்றின் அபாவமே (இல்லாமையே) ஆகாசம் எனக்கூறமுடியாது. பூமி முதலானவற்றில் - தத்வமாக ஒப்புக்கொள்ளப்பட்டதாகையால் - ஆகாசத்திற்கு வித்யாஸமின்றியும் பிரத்யக்ஷத்திஞல் பாதிதமாகாதபடி பூமிமாதிரி, அதேப்ரதீதி ஸித்திக்கிறது என்று கூற முடியாது. நாம் கண்களால் பார்க்கிறேம். ஆகாசத்தை - கழுகு பறக்கும் போது - இந்த விடத்தில் பறக்கிறது என்கிறேம். "இங்கே கழுகு விழுகிறது - இங்கே பருந்து" என்கிறேம். பூமி முதலானவற்றின் அபாவமே (இன்மையே) ஆகாசம் என்று இதஞல் கூறமுடியாது- விகல்பத்தை ஒத்துக் கொள்ள முடியாதபடியால் (அதாவது அபாவம் எனப்படுவது பிராகபாவம், ப்ரத்வம் ஸாபாவம் அந்யோ ந்யாபாவம் - அத்யந்தா பாவம் - என நான்கு வகைப்படும். ப்ராகபாவம் - ஒரு பொருள் உண்டாவதற்கு அப்பொருள் முற்காலத்தில் இருப்பது; அந்த வஸ்து அழிந்ததற்குப் பின்பு இருப்பது - பிரத்வம்ஸாபாவம்; அந்த பொருள் ஸத்தாக இருக்கும் போது இந்த இரண்டு அபாவங்களும் யேற்படாது. ஆகாசத்தை பூமி முதலான வற்றின் பிராகபாவமாகவோ - பிரத்வம் ஸாபாவமாகவோ கொண்டால் - பூமி முதலானவை இருக்கும்போது ஆகாசம் இல்லாமற் போய்விடும். ஆஞல் நாம் பருந்து உதாரணத்திஞல் ஆகாசத்தைக் காண்பதால் - அவ்விதம் சொல்வது பிரத்யக்ஷ விருத்தம். ஆகவே பூமியின் ப்ராக பாவ ப்ரத்வம்ஸா பாவமாக ஆகாசம் இருக்க முடியாது). அதே

மாதிரி ஆகாசத்தை அந்யோ ந்யா பாவமாக ஒப்புக் கொண்டால் அவ்விரு பொருள்களிடையே ஆகாசம் இருக்க முடியாது. இதுவும் பிரத்யக்ஷ விருத்தம். கடைசியாக அத்யந்தா பாவம் என்பது அடியோடு நாசமடைதல். பூமி முதலானவை இருக்கும் போது அவை இருக்குமிடத்திலேயே நாம் ஆகாசத்தைக் காண்பதாலே, ஆகாசமானது அவற்றின் அத்யந்தாபாவமாகவும் ஆக முடியாது - இந்தவிதமாக நையாயிக மதப் பிரகாரம் அபாவத்தை ஒப்புக் கொண்டாலும், ஆகாசம், பூமி முதலானவற்றின் அபாவமாக ஆக முடியாது - सर्वथाऽप्याकाश प्रतीत्यनुपपत्तिः स्यात् - உண்மையில் ஒரு பொருளின் அபாவம் என்பது ஸத்தாக (உள்ளதாக) விருக்கும் பொருளின் நிலையாகவே சொல்லப்படுகிறது - நிரூபிதம்.

உதாரணமாக கடம் - இதற்கு பிராக பாவம் அதன் முன் நிலை களிமண், ப்ரத்வம்சா பாவம் - ஒடு; (உடைந்த பின்பு மாறுதலின் விளைவு) கடத்தின் அந்யோந்யா பாவம் - படம் (துணி); படத்தின் (துணியின்) அந்யோந்ய பாவம் கடம்; அத்யந்தாபாவம் என்பது பூமியில் கடம் அடியோடு (வஸ்துவாகவே) இல்லை - என்றவிடத்தில் அத்யந்தா பாவம் பூமி என அறியப்படுகிறது. ஆகையால் பூமி முதலான வற்றின் அபாவமே ஆகாஸமே யானாலும், அது பிரத்யக்ஷமாகக் காணப்படுவதால் ஒரு பொருளாகவே ஆக முடியும். ஆக விப்படி பூமி முதலான வற்றைப் போல பிரத்யக்ஷமாகக் காணப்படுகையில் வாசியில்லாமையால் - ஆகாசம் சூன்யமாக மாட்டாது.

ஆகவே ப்ருதிவி முதலியவைகளுக்கு பிராக பாவம், ப்ரத்வம் ஸாபாவம், ஆகிற அபாவங்கள்-அதே மாதிரி அத்யந்தாபாவம் ஆகாசத்திற்கும் - எல்லா விதங்களிலும் யேற்படுவதாயினும்-சரி, ஆகாசத்திற்கு பிரத்யக்ஷமாகக் காணப்படுதல் யேற்படுவதில்லை என்றால்; பிராக பாவம் ப்ரத்வம் ஸாபாவம் இவை ஆகாசத்திற்கு இல்லையென்றால், ப்ருத்வி முதலானவைகளில் உண்டாகும் ஆகாசம் எனப்படும் தத்வம்

இல்லை யென்றால்-உலகத்திற்கே ஆகாசமே இல்லை யென்று ஆகிவிடும். சரி, மற்ற அபாவங்கள் ஆகாசத்திற்கு இல்லை யென்றாலும் கூட, அந்த அந்த அபாவங்கள் அந்த அந்த வஸ்துக்களின் இடைவெளிகளிலே விருப்பதாலே, ஆகா சத்தை நாம் காணமுடியாது. அத்யந்தாபாவமும் பூமி விஷயத்தில் ஏற்படுகிறதில்லை. அபாவம் என்பது வஸ்து இல்லாமையைக் குறிக்கும். அதை நாம் சொல்வது அவஸ்தா பேதம். அவஸ்தா விசேஷம் - என்று சொல்லப்படுவதாலே, ஆகாசத்திற்கு-அது ஒரு ரூபமில்லாத தத்வமாயினும், தத்வ மில்லை என்கிற விஷயம் நிரூபிதம் செய்யப்பட மாட்டாது. (இங்கே ராமானுஜர் அன்யோன்யா பாவத்திற்கு விசிஷ்டாத் வைதகருத்தைச் சொல்கிறார்-அவஸ்தாபேதம் என்று)-வஸ்து என்றால் அபாவம் இல்லை என்று அர்த்தம். ஸத் காரியவாதி யாதலால் - அவஸ்தாபேதம் தான் சொல்லப்படுவது.)

அண்டமாக (முட்டை வடிவமாக) விருக்கும் உலகிற்கு ஆகாசம் கண்களால் பார்க்கப்படுமானால் - பஞ்சீ கரணத்தினால் இந்த உலகம் உண்டாகிறபடியாலே திருவிருத் கரணம் சொல்லப்பட்டு பின்பு பஞ்சீ கரணம் சொல்லப்பட்டதாலே - ஆகாசமும் பார்க்கப்படக் கூடும் என்று சொல்வதால் யாதொரு தவறுமில்லை - அவிரோதமே.

(இங்கே நையாயிகனும் பௌத்தர்களும் சொல்வது - ஆகாசத்தை கண்களால் பார்க்க முடியாது - அதற்கு ரூபமில்லை - அது அபாவமே என்றால் - அதற்கு ராமானுஜரின் பதில் - திரிவிருத் கரணம் - பஞ்சீ கரணத்தைச் சொல்கிறார். பஞ்சீ கரணத்தில் ஒவ்வொரு பூதமும் இன்னொரு பூதத்தின் தத்வங்களை அந்த அந்த அளவில் அடைகிறது என்று சொல்லலாம். பஞ்சீ கரணத்தில் - பூமி அதிகமாகவும் வும் - மற்ற பூதங்கள் அதை விடகுறைவாகவும் இருக்கின்றன என அர்த்தம்). (ஆகவே ஆகாசம் ஒரு தத்வம் - கண்களாலும் பார்க்கக் கூடும் - என்பதாகும்.)

ஸ். ஸூ. अनुस्मृतेश्च (2-2-24)

அனுஸ்மிருதே:ச (2-2-24)

அனுஸ்மிருதே: ச (முன் அனுபவிக்கப்பட்ட பொருள்கள்) மறுபடியும் அனுபவிக்கப்படுவதால் - பொருள்கள் க்ஷணிகமல்ல - ஆகமாட்டா.

முன்பு சொல்லப்பட்டதையே - வஸ்துக்களின் விஷயத்திலே - மறுபடியும் ஞாபகப்படுத்தப்பட்டு - அந்த வஸ்துக்கள் ஸ்திரமானவையே - க்ஷணிகமல்ல - என்று மீண்டும் சொல்லப்படுகிறது. முந்திய வஸ்துக்களின் அனுபவ ஞானத்தை நினைவுபடுத்திக் கொள்வதை - अनुस्मरणम् என்பதாம் पूर्वानुभूत वस्तु विषयं ज्ञानम् । பிரத்யபி ஞானம் என்று அர்த்தம் (நினைவுபடுத்திக் கொள்ளுதல்) இதற்குப் பொருள் முந்தினதை நினைவுபடுத்திக் கொள்கிற ஞானம். இந்த விதமாக, ஸர்வ வஸ்துக்களின் முந்தியேற்பட்ட அனுபவங்களை மீண்டும் ஞாபகப்படுத்திக் கொள்வதால் - இப்போது பார்க்கப்படும் வஸ்து - அது முந்தி இப்படி பார்க்கப்பட்டது அதுவே தான் இது - என்று ஞாபகம் யேற்படுகிறது. இதனால் நீ சொல்லக் கூடாது - வஸ்து ஐக்யத்திலே - ஸாத்ருஸ்யமாக விருக்கிறது என்கிற காரணத்தினால் ஐக்யம் சொல்லப்பட்டால் - இது ஒரு தோஷம் என்று சொல்லக்கூடாது. விளக்கு உதாரணத்திலே - அது போன்ற (வெள்ளப் பிரவாஹம், மற்ற உதாரணங்களிலும் உன்னால் ஒப்புக் கொள்ளப்படவில்லை - ஒரே ஒருத்தன் அறிகிறவனாக விருக்கிறான் - அந்த அறிகிறவனும் தோஷமுள்ளவனாக விருக்கிறான் (அவித்யாதியினால்).

(இங்கு சொல்லப்படுவது - ஒருவன் சொல்கிறான் - உதாரணமாக - அன்று கண்டதை இன்று காண்கிறேன். ஒரு காலத்திலிருந்ததை பிரத்யபிஞை செய்கிறான். (இதற்கு பிரத்யபிஞை ஞானம் எனப் பெயர்.) இரண்டு காலங்களிலும் பொருள் ஒன்றுதான். க்ஷணிகமானால் - வஸ்துவே இருக்காது - பிரத்யபிஞையும் ஏற்படாது. வெவ்வேறு

காலமாயினும் பொருள் ஒன்றே என்கிற ஞானம் ஒட்டாமற் போய்விடும். இதனுல் வைபாஷிகன் - ஸௌத் ராந்திகன் இவர்களின் பக்ஷங்கள் தூஷிக்கப்பட்டன. அடுத்த சூத்ரத் தில் வெளிப்பொருள்கள் அனுமானத்தினுலேயே அறியப் படுபவை என்று கூறும் ஸௌத்ரா ந்திகனுக்கே உரிய தூஷணம் நிரூபிக்கப்படுகிறது).

வாஸ்தவத்திலே ஒருவன் தான் அனுபவித்ததை வஸ்து வின் ஐக்யம் காலத்தினுல் யேற்பட்டதை - மற்ருெருவனின் அனுபவத்தோடு ஒத்துப்பார்ப்பதில்லே. ஆகவே வெவ்வேறு காலங்களில் வஸ்துக்களே ஆஸ்ரயம் செய்யும் ஸாத் ருஸ்ய அனுபவத்தினுல் யேற்படும் ஒரே வஸ்துவினுடைய வ்யாமோஹம் - அது ஒரே அறிபவனுல் அறியப்படுகிறது. ஆகையால் அறிகிறவன் ஒன்ருகவும், அறியப்படும் வஸ்து ஒன்ருகவும் பின்ன காலங்களில் அனுபவிக்கப்பட்டது என்பதும் சரியாகும். தோஷமில்லே. மேலும் நாம் பாஜே கள் - அது மாதிரி ஞானவிஷயமான வஸ்துக்களிலும் - பேத ஸாதனங்களே (க்ஷணத்துக்கு க்ஷணம் அழிவதால் யேற்படும் விகாரங்கள் - இவைகளால் உண்டாகும் பேதங் களே) நிரூபிக்க ஸாதனமில்லாதபடியால் - விளக்கு எரிந்து அழிந்து போகிறதே - அதில் அழியும் தன்மை சூக்ஷ்மமாக விருக்கிறபடியால்-பிரமாணமாகச் சொல்ல முடியாவிடினும்)- ஆனுல் நாம் அதை அனுமானிக்கிருேம் - இப்படித் தான் இருக்கவேண்டும்-ஸாத்ருஸ்ய நிபந்தனத்தினுல் பிரத்யபிஞை ஞானம் கற்பிக்கப்பட வேண்டியதாக விருக்கிறது.

சரி - இவ்விதம் சொல்லப்படுகிறது. பிரத்யக்ஷம் அநுமாநம் இத்யாதிகளால் பாஜேகளுக்கு க்ஷணிகத்வம் ஸித்திக்கிறது. நிச்சயமாக பிரத்யக்ஷம் வர்த்தமான காலத் திலுள்ள வெளிவஸ்துக்களேப் காட்டுகிறது - ஞானத்தை உண்டாக்குகிறது. அந்த ஞானம் அந்த வர்த்தமான காலத்தில் இல்லாத வஸ்துக்களின் ஞானத்திலிருந்து வேறு பட்டிருக்கிறது - எதுபோலவென்ருல் நீலநிறம் மஞ்சள் நிறத்தை விட்டு வேருக விருப்பது போல (வ்யாவர்த்தமாக

என்று காட்டுவதாலே) (नीलमिवपीतात्); ஆகவே வர்த்த மான காலத்தில் எது இருக்கிறதோ - அதுவே வேறுன வஸ்துவாக முந்தின காலத்தில் இருந்த வஸ்துவே - எதிர் காலத்தில் இருக்கப் போகும் வஸ்துவே - இதற்கு வ்யா வர்த்தமாக இப்போதிருக்கும் வஸ்து இது என்று அறியப் படுகிறது.

அனுமானமும்கூட இவ்விதமிருக்கலாம் - பானை முத லியவை க்ஷணிகம் - ஏனெனில் அவைகளின் இருப்புக்கு அர்த்தக்கிரியை (உபயோகம் - நோக்கம்) தத்வமாக பொரு ளாக விருப்பதற்கு உதவுகிறது. ஆகவே எது க்ஷணிக மல்லவோ - உதாரணமாக முயற்கொம்பு போன்ற அஸத் வஸ்துக்கள் - அவைகளும் மித்யையான வஸ்துக்களாகும். (அதைப்போல க்ஷணிக வஸ்துவும் ஆகும் என்கிற கருத்து). அநர்த்தக்ரியா அஸத் ச. அதுபோல எல்லா க்ஷணிக நிலையி லுள்ள பானைகளும் - வஸ்து க்ஷணிகத்வமாதலால் - ஒரு பானை அதன் கடைசி க்ஷணத்தில் எப்படியிருந்ததோ - அது போல விருப்பதால் - எல்லாமுமே நாசமாகிவிடும்.

இவ்விதமாக காரிய காரணபாவ அனுபபத்தி (சம்பந் தம்) தவறுனது - அம்மாதிரி சந்தர்ப்பங்களிலே - எல்லாம் முந்தியே நிரஸிக்கப்பட்டது - தவறு என்று காட்டப் பட்டது. (அத்ாவது பின்ன காலங்களில் அனுபவிக்கப் பட்டவஸ்து ஒன்று. அது இரண்டு என இருக்கவேண்டிய அவசியமில்லை - எப்படி நீலோத்பலம் - நீலமாகவும் உத்பல மாகவும் नीलस्य तत् उत्पलस्य - கர்மதாரய (ஸமாநாதிகாரணம் - வேற்றுமை ஒன்ருகப் படிப்பதாலே) நீலத்வமும் உத்பலத்வ மும் - ஒரே வஸ்துதான் இரண்டல்ல. (அதுபோல ஒரே வஸ்து பின்ன காலங்களில் ஒன்று தான் என்று காட்டப் படும்-சுருத பிரகாசிகை). மேலும் பிரத்யக்ஷத்தினுல் அடை யப்படுவதும் - முந்தின காலத்தில் இருந்த வஸ்துவிலிருந்து வ்யாவர்த்தமாக வர்த்தமான காலத்தில் இருப்பது பின்பு இருககப்போவது - பிரத்யக்ஷ விஷயமாவதாலே, அதனுல் ஞானம் வேருக விருக்கவேண்டியதில்லை - இப்போதிருக்கும்

வஸ்துவின் ஞானம் வேறொருஸ்வருபத்தை இன்னொரு காலத்தில் அடைகிறது என்பதில்லை. அதற்கு மாருக, இப்போதிருக்கும் வஸ்துக்களின் சாமர்த்தியம் இப்போதுள்ள காலத்துடன் சம்பந்தப்பட்டது இதனுல் வஸ்துவின் இருப்பு நிரூபிதம் ஆகப்படவில்லை. எது இப்போது இருக்கிறதோ-அது வேறு ஒரு தத்வத்தின் லக்ஷணத்தை (தன்மையை) அடைகிறது - அதற்கு மற்ற லக்ஷணங்களில் என்ன இருப்போ-அதைவிட வேருகவிருக்கிறது ஏனெனில் - அது இன்னொரு க்ஷணத்துடன் சம்பந்தப்பட்டிருக்கலாம்-என்பது நிரூபிக்க முடியாது. न च तावत: वस्त्वन्तरत्वं सिद्धयति, तस्यैव कालान्त रयोगसंभवात्

இரண்டு ஹேதுக்கள் (காரணங்கள்) மேலே கொடுக்கப்பட்டன - வஸ்துவின் க்ஷணிகத்வத்திற்கு - ஒன்று அந்த வஸ்து ஸத்தாக விருப்பது; அதற்கு அர்த்த கிரியை உண்டு (உபயோகம் — நோக்கம் உள்ளது) இதனுல் யேற்படுவது அபிமத விபரீத ஸாதனத்திற்கு விரோதம் (விருத்தம்) - இந்த இரண்டு ஹேதுக்களால் எதை நிரூபிக்க நினைக்கிறோமோ - அதற்கு எதிராக உள்ளதை நிரூபிக்க ஸாதனமாக விருக்கிறது. இவ்விதம் வாதாடக்கூடும் - ஒரு பானை அதுபோல ஒரு வஸ்து நித்யம்; ஏனெனில் அது ஸத்தாக விருக்கிறது - அல்லது அது ஒரு உபயோகத்திற்க்காக விருக்கிறது. எது அநித்யமோ - அது அஸத் (வஸ்துவாக இல்லை) - அதற்கு உபயோகமுள்ளதான பிரயோசனமும் இல்லை - உதாரணம் முயற்கொம்பு ஆகும்.

(இங்கு தோஷம் - பிரகரணஸாம - அல்லது ஸத் பிரதிபக்ஷம் - சொல்லப்படுகிறது - ஒரு காரியமாதலால் அநித்யம் - என்பதாகும்.)

மேலும் அர்த்தக்ரியா காரியத்வம்-அக்ஷணிகத்வமேவ-ஸாதயேத் - க்ஷணிகத்வமில்லாத எந்த வஸ்துவை நிரூபிப்பற்கு முடியுமோ - அந்த வஸ்துவின் உபயோகமுள்ளதான தன்மை உபயோகப்படலாம். நாம் ஏற்கனவே சொல்லிவிட்டோம் - எந்த வஸ்துக்கள் க்ஷணிகத்வமோ - அவைகளுக்கு

அதே அழியும் தன்மையின் காரணத்தினுல், வ்யவஹாரத்திற்கு யோக்யதையில்லை. வ்யாபாரம் யேற்படாது; அதனுல் அர்த்தகிரியாகாரத்வமும் யேற்படாது.

(இங்கே விருத்த-என்கிற தோஷம் சொல்லப்படுகிறது). அதேமாதிரி, ஒரு பானைக்கு கடைசி க்ஷணத்தில் அழியும் தன்மை கண்களுக்குத் தெரியும்படி இருக்கிறதாக விருக்கும். உதாரணமாக பானை ஒரு தடியினுல் அடிக்கப்பட்டால்-அது உடைந்துபோகும் சமயம் பிரத்யக்ஷமாகக் காணப்படலாம். ஆகையால் க்ஷணிகத்வ இருப்பு - ஒரு பானைக்கு - வேறு பல காரணங்களாலும் ஏற்படலாம் - அது யேற்படும்வரை அது அழியாமலிருப்பதால் - பானைக்கு ஸ்திரத்வம் (பல காலமிருத்தல்) இருக்கத்தான் இருக்கிறது.

(இங்கே சொல்லப்படுவது - பானை கடைசி க்ஷணத்தில் ஏதாவது ஒரு காரணத்தினுல் அழியும் போது, பௌத்தன் சொல்கிருன் - அந்த பானை ஒவ்வொரு நிமிஷமும் அழிந்து கொண்டுதான் இருக்கிறது. அதற்குப் பதில் இங்கே சொல்லப்படுகிறது - அதாவது அந்தப் பானை கடைசி க்ஷணத்தில் அழிவதற்கு அதன் ஸ்வரூபம் காரணமாகாது - வேறு பஹிர் காரணமாக விருக்கலாம். அம்மாதிரி வெளிக் காரணங்கள் தெரியப்படாமல் இருக்கும் போது-அந்தப் பானைக்கு க்ஷணிகத்வம் மற்ற க்ஷணங்களில் யேற்படும் அழியும் தன்மை - இவைகளை நிருபிக்க ஒரு ஆதாரமுமில்லை - என்பதாம்).

மேலும் நீ இவ்விதம் சொல்லக்கூடாது - உலக்கை போன்ற வெளி வஸ்துக்கள் பானையின் அழிவுக்குக் காரணமாகாது - ஆனுல் அந்த பானை இரண்டு பாதியாக உடைவதற்குக் காரணமாகலாம் - அது போன்ற இன்னும் சில தொடர்ச்சியான வஸ்துக்கள் - பானையிலிருந்து வேறு பட்டனவாக விருப்பவை - காரணமாகலாம். இதுவும் தவருகும் ஏனெனில் நாம் ஏற்கனவே சொல்லிவிட்டோம். பானையின் அழிவு என்பது என்ன வென்ருல் - அது

உடைந்து இரு பாதிகளாக ஆகிவிட்டன என்கிற நிலையாகும். (அவஸ்தா பேதம் தான் முற்றிலும் அழிவில்லை - வேறு வஸ்துவாக ஆகவுமில்லை). நீ பானையின் நாசம் பானையின் உற்பத்தியின் நிலையிலிருந்து வேருனது என்று ஒப்புக் கொண்டால், நாம் சரி என்று சொல்வோம். அந்த நிலை முன்பு யேற்படுவதால் - அதற்குப் பிந்தி (பிறகு) உலக்கையினுல் - (அல்லது வேறு ஆயுதத்தால்) அடித்து தூள்களாக ஆக்கப்பட்டனவாகும் - அதனுல் நாசம் பானைக்கு யேற்பட்டதாகும்.

ஆகையால் பிரத்யபிஜ்ஞையினுல் (நினைவு படுத்திக் கொள்வதால்) வஸ்துக்களின் ஸ்திரத்வம் இல்லையென்று எந்த விதத்திலும் ஆகாது. (அவஸ்தா பேதம்தான் எந் நிலையிலும்) எவன் ஒருவன் பிரத்யபிஜ்ஞையினுல் அன்ய விஷயத்வம் வேறு ஒரு பானையின் விஷயம் (அழிந்து கொண்டே போகும் இன்னெரு பானையின் விஷயம்) தான் என்று சொல்லி - அதனுல் அந்த பிரத்யபிஜ்ஞைக்கு ஒரே பானையின் விஷயத்தை - பூர்வ அபர காலங்களில் இருப்பதைச் சொல்கிருனே அவன் நீலோத்பலம் - என்கிற உதாரணத்தில் நீலம் என்கிற ஞானம் கூட இன்னெரு நீலத்வத்தைக் கொண்டதாகும் எனலாம். (இதனுல் வஸ்து வேறு என்று ஆகிவிடுவதால் - சரியாகாது - ஒரே வஸ்து பல காலங்களுக்கு விஷயமாகலாம். இதனுல் பௌத்த மதம் அஸங்கதம்).

மேலும் எவன் அறிகிறவன் அறியப்படும் வஸ்து இவை இரண்டுமே க்ஷணிகத்வம் (அழியும் தன்மையுள்ளது) என்கிருனே, அவனுல் அனுமானத்தை ஒப்புக் கொள்ளப்படுவதாலே, பிரதிக்ஞா பூர்வகமான ஹேதுவை ஒப்புக் கொண்டு அதனுல் அதை நினைவு படுத்தும் அனுமானத்தையும் ஒப்புக் கொள்வதால் - இவ்விதம் சொல்வது சரியாகாது. அப்படியே, ப்ரமாத்ரு ப்ரமேய விஷயங்களிலும் எது நிரூபிக்கப்படவேண்டிய விஷயமோ "இது க்ஷணிகத்வம் உள்ளது"-என்கிற வாக்யம் அவனுக்குச் சரிப்பட்டு வராது, ஏனெனில் எந்த க்ஷணத்தில் இந்த பிரதிக்ஞை நிரூபிக்கப்

படுகிறதோ, அதே க்ஷணத்தில் அந்த வார்த்தையைச் சொல் பவனும் - க்ஷணிகமாதலால்-அழிந்து போகிறுன் - அவனுல் சொல்லக்கூட முடியாது. வாஸ்தவத்திலே, அவனுக்கும் (எவனுக்கு) இன்னெருவர் சொன்னதைத் திருப்பிச் சொல் வதற்குக்கூட - அதை (ஸமாபியிதும்) முடிக்கக் கூட - முடியாது - எல்லாம் க்ஷணிகமாதலால். ஆகவே பௌத்த மதம் அஸங்கதம்.

(இங்கு சொல்லப்படுவது - அனுமானம் எப்போது ஸித்திக்கும்? - தனக்குமில்லை - பிறர்களுக்காகவுமில்லை என்பதாகும். க்ஷணிகத்வம் வஸ்துவுக்கு பேசப்படுமாஞல்- ஒரு உபயோகமும் - உலக வ்யாபாரமும் யேற்படாது - அதனுல் சரியாகாது).

இதுவரை வெளிப்பொருள்கள் க்ஷணிகமாக உள்ளன என்று ஒப்புக் கொள்ளும் வைபாஷிக ஸௌத்ராந்திகர் களுக்கே பொதுவான தூஷணங்கள் நிருபிக்கப்பட்டன. அடுத்த சூத்ரத்திலே வெளிப் பொருள்கள் அனுமானத்தி ஞலே அறியப்படுபவை என்று கூறும் ஸௌத்ராந்திக னுக்கே உரிய தூஷணம் நிருபிக்கப்படுகிறது.

ஸித். சூ. नासतोऽदृष्टत्वात् (2-2-25)

நாஸதோऽத்ருஷ்டத்வாத் (2-2-26)

அஸத: ந - அறிவில் உள்ள நீலம் முதலான தன்மை கள் அழிந்த பொருளுடையதாக முடியாது. அதிருஷ்டத் வாத் - பொருள் அழிந்தபிறகு அதன் தன்மை மற்ருெரு பொருளில் ஸங்கிரமிப்பது - எங்கும் காணப்படுவதில்லை என்கிறபடியால்,

இங்கே சொல்லப்போவது - பொருள்கள் க்ஷணிகம் என்ருல் அடுத்த கணத்தில் இருக்க முடியாததாகையால் - எப்பொருளும் ஞானத்திற்கு விஷயமாக முடியாது. இதற்கு ஸௌத்ராந்திகன் பதில் உரைக்கிருன் - அறிவு உண்டாகும்

சமயத்திலே ஒரு பொருள் இல்லாமலிருப்பதால், அந்தப் பொருள் அறிவுக்கு விஷயமாக மாட்டாது—மேலும் பொருள் உள்ளதாகயிருப்பதால்தான், அது அறிவுக்கு விஷயமாகி விடாது. அறிவை உண்டாக்கக் காரணமாகுதலே காரண மாகும்; அறிவை உண்டாக்கி, அது தான் அழிந்து போக லாமே - தடையில்லையே. அறிவு உண்டாவதற்குத் காரண மானால் அதுவே போதும். ஆகவே க்ஷணி கத்வ பொருள் களும் அறிவுக்கு விஷயமாகலாம் - உதாரணமாக நீலம் முத லான ஆகாரங்களற்ற அறிவில் காணப்படும் நீலம் முதலான விசித்திரமான ஆகாரங்கள் அந்த ஆகாரங்களையுடைய பொருள்களால் ஸமர்ப்பிக்கப்படுவதாகக் கொண்டால்தான் பொருந்தும் - ஆதலால் எங்கள் மதம் சரி என்று ஸௌத் ராந்திகன் பதில் உரைக்கிறான் - இது பூர்வபக்ஷமாகும்).

மேலே வைபாஷிக ஸௌத்ராந்திகர்களின் வெளி வஸ் துக்களின ஸ்திரத்வம் (நித்யத்வம்) என்கிற அபிப்ராயங் களின் தோஷங்கள் சொல்லப்பட்டன. அவ்விதமானபடி யால் - மேல் சொல்லப்பட்டது - எல்லா வஸ்துக்களும் க்ஷணிகத்வம் என்கிற பக்ஷத்திலே - இந்திரிய ஸம்யோகத் தினால் வஸ்துவுடன் அவை சம்பந்தப்பட்டபோது, ஞானம் உற்பத்தியாகிறது என்கிற பக்ஷத்தில், அந்த வஸ்து இருக் கிறதில்லை, அதனால் எந்த வஸ்துவும் ஞானத்திற்கு விஷய மாகாது என்று நாம் பதில் கூறினோம். இந்த ஆக்ஷேபத் திற்கு ஸௌத்ராந்திகன் மேலும் சில ஆக்ஷேபங்களைக் கூறு கிறான் - (ஞானோத் பத்தி சமயத்திலே பொருள் இல்லாமல் போகிறது ஆகவே எப்பொருளும் அறிவுக்கு விஷயமாக முடியாது - என்பதற்கு திருப்பி பதில் ஸௌத்ராந்திகன் சொல்கிறான் - வஸ்து இல்லாமலிருப்பது ஞானோத்பத்தி சமயத்திலே - ஞான விஷயத்திற்கு அது இருக்க முடியாது என்பது யேற்படாது - ஞானத்தை உண்டாக்கி அது அழிந்து விடலாமே - பொருள் இருக்க வேண்டிய நிர்ப்பந்த மில்லை - ஞானோத் பத்தி ஹேதுத்வமேவ - அதுவே ஞான விஷயத்வமாகிறது. (அறிவு உண்டாவதற்குக் காரண மான இந்திரியங்களும் அறிவுக்கு விஷயமாக வேண்டிவரும்

என்றால், தன் ஆகாரத்தை அறிவுக்குக் காரணமாக்கி, அதுவே அறிவுக்கு விஷயமாவது என்று நாம் ஒப்புக் கொள்கிறோம் என்பதால், அறிவில் தம் ஆகாரத்தை ஸமர்ப் பிக்காத கண் முதலானவை பார்ப்பதால் அறிவுக்கு விஷய மாகலாம் - அதற்கு தடையோ குறையோ இல்லை.)

(இங்கே புத்தன் ஒரு உதாரணம் காட்டுகிறான் - மரத் தில் கிளைகளின் அசைவினால் தூரத்திலிருந்து பார்க்கும் போது, ஒருவன் வாயு சஞ்சரிக்கிறான் என்று அனுமானித்து அதை அனுபவிக்க அங்கு செல்கிறான் - இங்கேகிளைகளின் அசைதல் அனுமானத்தினால்-அறியப்படுகிறது பிரத்யக்ஷத் தினால் இல்லை. அதேபோல நேரடியாகப் பார்ப்பது (வெளி உலக வஸ்துக்களை) அதனால் ஒரு கிரியை யேற்படுவது - இதுகூட அனுமானத்தினால் உண்டாகிறது. ஸௌத் ராந்திகன் சொல்கிறான் - என் க்ஷணிகத்வ கொள்கை மெய்யான வெளி உலக வஸ்துக்களுக்கு பொருத்தமாக விருக்கிறது - என்பது.)

இதனால் நாம் தீர்மானிக்கக் கூடாது - கண் முதலான ஞான ஹேதுக்கள் ஞானத்தின் விஷயமாகின்றன. ஞான விஷயங்களை உற்பத்தி செய்வதிலே - கண் முதலான இந்திரியங்கள் தங்கள் ஆகாரத்தை அறிவில் ஸமர்ப்பிப்ப தன் மூலம் எது அறிவு உண்டாவதற்குக் காரணமாகிறதோ, அதுவே அறிவுக்கு விஷயமாகிறது-ஞான ஹேதுவாகிறது. ஞானத்தில் கண் முதலிய இந்திரியங்கள் தங்கள் ஆகா ரத்தை (அறிவில்) ஸமர்ப்பிபதன் மூலம் - அந்த வஸ்து நஷ்டமாயினும் ஞானத்தை உண்டாக்குவதாலே நீலம் முதலிய ஆகாரங்களை அனுமானித்து அறியப்படத்தக்க தாக ஆகிறபடியால், க்ஷணிகமான பொருள்களும் அறிவுக்கு விஷயமாவதில் குறையில்லை. ஆகாரங்களும் பொருள் களால் ஸமர்பிக்கப்படுவதாகக் கொண்டால் தான் பொருந் தும் - ஆகவே எங்கள் மதம் சரியானது. மேலும் பூர்வ பூர்வ காலங்களில்- யேற்பட்ட ஞானம் உத்தர உத்தர காலங்களில் ஏற்படும் ஞானாகாரத்திற்கு காரணமாகாது -

அவ்விதம் காரணமாகுமானுல், அப்போது நேரிடும் - பல க்ஷணிக ஞானபரம் பரையில் நீலத்வம் என்பதைப் பற்றிய அறிவில் மஞ்சள் முதலான ஆகாரங்களை ஸமர்பித்து அழிந்து போன நீலகடம் அறிவினுல் அனுமானிக்கப்படும் ஆனுல் மஞ்சள்நிறம் உற்பத்தியின் அறிவை உண்டாக்காது. ஆகவே அர்த்தக்ருதமேவ (வஸ்துவின் பிரயோசனம்தான்) ஞான ஔசித்யத்தினுல் யேற்படுகிறது. அறிவின் பலதரப் பட்டது (நீலம் - மஞ்சள் இத்யாதி) வெளிவஸ்துக்களால் தரன் யேற்படும் (இங்கே ஸௌத்ராந்திகள் - பௌத்தமதத் தின் இன்னெரு பிரிவான யோகாசாரனை தூஷிக்கிருன்). (அவர்களுக்குள்ளே தூஷணம்—).

சித்தாந்தி சொல்வது - இப்பூர்வபக்ஷம் தவறு, नासतोऽदृष्टत्वात् - அறிவில் உள்ள நீலம் முதலான தன்மை அழிந்த பொருளுடையதாக முடியாது. அத்ருஷ்டத்வாத் - பொருள் அழிந்ததும் அதன் தன்மை (குணம்) மற்றெரு பொருளில் ஸங்கிரமிப்பது எங்கும் காணப்படுவதில்லை யாகையால். எந்த நீலம் எனப்படும் அறிவு - (அதேமாதிரி மற்ற ஆகாரங்கள்) ஞானத்துடன் சம்பந்தப்பட்டு, அழிந்துபோன வெளிவஸ்துக்களுடைய ஆகாரமாக ஆக மாட்டா ஏன்? अदृष्टत्वात् - (இன்னெரு பொருளில் ஸங்கிர மிப்பது காணப்படவில்லை என்பதால்). எந்த வஸ்துவுக்கு ஒரு தர்மம் இருக்கிறதோ - அந்த தர்மம் அந்த வஸ்து அழிந் ததும் இன்னெரு வஸ்துவைச் சேராது இது லோகத்தில் காணப்படுவது. அபிரதிக்ஸித்த தர்மங்களானபடியாலே. அதன் பிரதிபிம்பங்களும் எது சாஸ்வதமாக விருக்கிறதோ- அதன் பிரதிபிம்பங்களாகும் (சுருத பிரகாசிகையில் - கண்ணுடியில் காணப்படும் பிரதிபிம்பங்கள் - அதேமாதிர் ஸ்படிககல்லின் அருகே கொணரப்பட்ட செம்பருத்திப்பூவின் ஆகாரம் நிறம் - இங்கு சொல்லப்படுகிறது). அந்த பிரதி பிம்பங்களும் வஸ்து ஸ்திரமோ அதேபடி ஸ்திரத்வமே - என ஆகிறது. இங்கே கேவலம் தர்மம்மாத்திரம் பிரதிபிம்பத் தில் காணப்படுகிறதில்லை, அந்த தர்மங்களையுடைய வஸ்துக்களும் காணப்படுகின்றன. ஆகவே பலவகைப்

பட்ட வெளிவஸ்துக்களால் யேற்படும் பலவகைப்பட்ட ஞானபரம்பரை (பிரவாகம்) ஞானகாலத்திலே வெளிவஸ்துக் கள் இருக்கும்போதே ஏற்படுவதாகிறது - (நீ சொல்கிறபடி வஸ்து அழிவதால் பரவாயில்லை - ஞானத்தை உண்டாக்கி அழிவடைகிறது என்பது சரியில்லை).

மீண்டும் சூத்ரக்காரரே வைபாஷிகன் ஸௌத்ராந்திகன்- இவர்களுக்குப் பொதுவான தவறுகளைச் (தோஷங்களை) சொல்கிறார்.

(ஜபாகுஸுமும், (செம்பருத்திபூவும்) - அதன் நிறமும் முகம் பிரதி பலிப்பதையும் இந்த உதாரணங்களில் - கண்ணு டியோ ஸ்படிகமாக இருக்கும் போதுதான் அறிவை (ஆகா ரத்தை) உண்டாக்குகிறது. ஆகவே பொருள்கள் அழிந்த பின்பு அவற்றின் ஆகாரங்கள் மாத்திரம் அறிவில் ஸமர்ப் பிக்கப்பட்டு பிரகாசிக்கின்றன - என்று கூறுவது ஒட்டாது, ஆகவே பௌத்தன் கூறும் பொருள்கள் க்ஷணிகமென்னும் விசித்திரமான அறிவுகள் ஏற்படுவது சரியாகாது).

ஸி. சூத். उदासीनानामपि चैवं सिद्धिः (2-2-26)

உதாஸீநாநாமபி சைவம் ஸித்தி: (2-2-26)

ஏவம் - இவ்விதமாக பொருள்கள் க்ஷணிகம் எனக் கொண்டால் உதாஸீநாநாம் அபி - முயற்சி செய்யாதவர் களுக்கும் (உதாஸினர்களுக்கும்) ஸித்தி: - எல்லாப் பொருள் களும் ஸித்திக்க வேண்டிவரும் - என்கிற தோஷம் யேற்படும்.

இந்த விதமாக க்ஷணிகத்வத்தை ஒப்புக் கொண்டால், (அதாவது சூன்யத்திலிருந்து ஸ்ருஷ்டியும், காரணமின்றி அழிவும் - असदुत्पत्ति अहेतुकविनाशादि - என்று ஒப்புக் கொண் டால், उदासीनानाम् - முயற்ச்சி செய்யாதவர்கள் - காரியம் செய்யாதவர்களுக்கும் எல்லாப் பொருள்களும் ஸித்திக்கும். இஷ்டபிராப்தி அநிஷ்ட நிவிருத்தி - இவை பிரயத்னத்திஞல் சம்பாதிக்கப்பட வேண்டியது. ஒவ்வொரு வஸ்துவும்

க்ஷணிகம் - கணத்தில் அழிந்து போகிறது - என்று சொல்லப்படுமானுல், பூர்வ காலங்களில் இருக்கும் வஸ்து - அதன் தர்மம் (அதனுல் பிற்பாடு ஸம்ஸ்காரங்களால் விளையப் போகும் ஸ்வர்க்கம் அபவர்க்கம் முதலிய புருஷார்த்தங்கள்) - அல்லது இவைகளைப் பற்றிய அறிவு (ஞானம்) உத்தர உத்தர க்ஷணங்களில் இல்லாமற் போவதால் (முந்தியே அழிந்து போவதால்) - பிரயத்னத்திஞல் ஸாதிக்கவேண்டியது உலகில் ஒன்றுமில்லை எனலாம். இந்த மாதிரி சந்தர்ப்பத்திலே, எல்லாப் புருஷார்த்தங்களும் ஸித்தப்பதாலே (முயற்சியின்றி யேற்படக் கூடுமாகையாலே) (सर्वसिद्धिनाम्) உதாஸீனர்களுக்கும் கூட ஐஹிக ஆமுஷ்மிக பலன்கள் (இக பரலோக புருஷார்த்தங்கள்) - மோக்ஷம் கூட ஸித்திக்கும் - ஆகவே பௌத்த மதம் அஸங்கதம்.

(இங்கு சொல்லப்படுவது - பிரயத்னம் செய்யாதவனுக்கு எல்லாப் பலன்களும் வரும். பிரயத்னம் செய்த மனிதர்கள் அழிந்த பின்பும் - அவர்களுடைய ஸம்ஸ்காரம் ஏதாவது ஒன்று நிலையிருந்து - பலனை அளிக்கிறது என்று ஒப்புக் கொண்டாலாவது இந்த தோஷம் தவிர்க்கப்படும். அந்த நிலையிலுள்ள எப்பொருளும் க்ஷணிகமாதலால், எப்பொருளையுமே பௌத்தன் ஒப்புக்கொள்ளாததால், முயற்சியில்லாதவனுக்கு எல்லாம் ஸித்திக்கும் என்கிற தோஷத்தால் - பௌத்தமதம் அஸங்கதம், பொருந்தாது).

## (யோகா சார தூஷணம் உபலப்த்யதி கரணம் (2-2-4)

ஸி. சூ. नाभाव उपलब्धेः (2-2-27)

நாபாவ உபலப்தே: (2-2-27)

அபாவ:—அறிவு தவிர்ந்த வெளிப் பொருள்கள் இல்லை என்பது, ந-தவறு (தோஷமாகும்). ஏனெனில் உபலப்தே:- அந்த அறிவுக்கு விஷயமாக அந்த பொருள்கள் காணப்படுவதாலே.

நாலுவிதமான பௌத்தர்களில் - வைபாஷிகன் ஸௌத் ராந்திகள் இவர்களின் வாதங்கள் பூர்வ அதிகரணத்தில் தள்ளப்பட்டன. க்ஷணிகமான ஞானத்தோடுகூட க்ஷணிக மாக வெளிப் பொருள்கள் உள்ளன - என்கிற பக்ஷம் தவறு எனக்காட்டப்பட்டது இன்னொரு வகை புத்தன் - யோக சாரன்-இவன் கூறுவது, க்ஷணிகமான ஞானமே உள்ளதே ஒழிய வெளிப் பொருள்கள் க்ஷணிகமாகக்கூட இல்லை - (கிடையாது) என்னும் மதம் - இதில் தள்ளப்படுகிறது.

இவனுடைய வாதம் பூர்வபக்ஷம் - ஸௌத்ராந்திகள் வைபாஷிகன் கூறுவது தவறு - வெளிப் பொருள்களின் ஆகாரம் அறிவில் பிரதிபலிக்கிறது என்பது தவறு. விசித் திரமான ஆகாரங்களை உடைய அறிவை (ஞானத்தை) மாத்திரம் ஒப்புக் கொண்டால் போதும், வெளிப் பொருள் களை ஒப்புக் கொள்ளத் தேவையில்லை.)

யோகாசாரனுடைய கொள்கை - விக்ஞானம் (ஞானம் - அறிவு) மாத்திரமே தத்வம் (உண்மை) - அவன் ஆட்சே பிப்பது (ஸௌத்ராந்திகன் - வைபாஷிகனைக் குறித்து) - (க்ஷணிகமான) ஞானமே உள்ளது, வெளிப் பொருள்கள் க்ஷணிகமாகக்கூட கிடையாது என்று கூறுபவன் யோகா சாரன்) - மேலே சொல்லப்பட்டது யாதென்றால், வெளி வஸ்துக்கள் பலவகைப்பட்டதாக இருப்பதாலே, பலவகைப் பட்ட ஞானம் (அறிவு) உண்டாகிறது என்று கூறும் அவர் கள் (ஸௌத்ராந்திக வைபாஷிகபக்ஷம்) சரியாகாது. (வைசித்ரியக்ருதம் ஞான வைசித்ரியமிதி); ஏனெனில் அந்த வெளிவஸ்துக்களின் விஷயங்களின் அறிவுகளே (பல ஆகாரங்களே) வஸ்துக்களைப் போல பலவகைப்பட்டவை யாக இருக்கின்றன. (ஸ்வயமே விசித்திரத்வாத்). அவை களின் ஸ்வரூப வைசித்ரியம் (பலவகைப்பட்ட தன்மை) பூர்வ வாஸனைகளாலே உண்டாகின்றன. உள்வாஸனைகள் என்பது விலக்ஷணப்ரத்யய பிரவாஹம் என்பதாம் அதாவது வெவ்வேறான எண்ணங்களின் பிரவாகமாகும். (யோகாசாரன் சொல்கிறான்) கடாகார ஞானம் - அதுவே

பாவேயின் இருபாதிகள் கொண்ட ஆகாரத்தை (ரூபத்தை) உண்டாக்குகிறது. இப்பேற்பட்ட ஞானத்தை உண்டாக்கு கிறது எதுவோ அதுவே பூர்வ காலத்தில் இருந்த கடஞான மாகும். எது பூர்வ கடஞானத்தை உண்டாக்குமோ அதுவே கடைசியில் சொல்லப்பட்டதின் பூர்வமான கடத் தின் ஞானமாகும்-இப்படி ஞான பாம்பரையையே வாஸனே என்று சொல்லப்படும். तत् पूर्व கடஞானம் இத்யேவம் ரூப: பிரவாஹ ஏவ வாஸனேத்யுச்யதே.)

(நாம் கேட்பது) ஞானம் அந்தரமாக (உள்ளாக) விருப் பது, அதற்கு கடுகு - மலைகள் - முதலிய வெளிவஸ்துக் களின் ஆகாரம் எப்படி உண்டாகும்? அவை இந்த வெளி வஸ்துக்களின் ஆகாரத்தை எப்படி அடையக் கூடும்? இதற்குப் பதில் கூறுவோம். ஒரு வஸ்து வ்யவஹார யோக்யதையை அடையவேண்டுமானுல், அதற்கு ஞான பிரகாசத்வம் யேற்படவேண்டும். (சித்தத்தில் வ்யவஹரிக் கும்படி பிரகாசிக்க வேண்டும்) இல்லாவிடின், எது ஒரு வனுக்கு அறிவுக்கு விஷயமாகிறதோ. எது இன்னெரு வனுக்கு விஷயமாகிறதோ - இவர்களின் அறிவுக்கு யேற் படும் வித்யாஸம் ஏற்படாமல் போகிவிடும். ஆகவே நாம் ஒப்புக் கொள்ள வேண்டியது-ஞானம் ஸ்வபிரகாசமுள்ளது. தன்னைத் தனக்குத்தானே காட்டித் தந்து, ஆகாரங்களே உடையதாக, அறியப்படுகிறது, ஏனெனில் அந்த ஆகார மில்லாத ஞானம் பிரகாசத்துடன் சம்பந்தப்பட்டதாகவில்லை. எந்த ஆகாரம்பிரத்யக்ஷ ஞானத்திஞல் அடையப்பட்டதோ- அது ஒன்றே ஒன்றுதான் - அந்த ஆகாரத்தின் தோற்றம் - அது வெளி வஸ்துவாகினும், தோஷத்தின் விளேவாகும். அறிவும் அந்த அறிவின் விஷயமாகிற வெளி வஸ்துவும்- இரண்டுமேஒரே சமயத்தில் பார்க்கப்படுகின்றன - ஆகவே வெளிவஸ்து ஞானத்தைவிட வேருனதாகவில்லை.

(இங்கே சுருதபிரகாசிகையில், இரட்டை சந்திரர்கள் உதாரணம் யோகாசாரனுடைய பக்ஷஸாதகமாகச் சொல்லப் படுகிறது. இரட்டை சந்திரர்களின் ஞானத்தில் இரண்டும்

ஒரே சமயம் அறியப்படுகின்றன. அதனுல் இரண்டாவது சந்திரன் வேறல்ல. யோகாசாரன் கூறுவது - நீலோத்பலம் உதாரணத்தில் நீலத்வம் அறிவிலிருந்து வேறல்ல - இரண்டும் (கலரும் வஸ்துவும்) ஒரே சமயத்திலே காணப்படுவதால் - இரண்டு சந்திரர்களைப் போல - என்பதாம்).

எவர்கள் வெளிவஸ்துக்களை ஒப்புக் கொள்கிருர்களோ (வைபாஷிகன் - ஸௌத்ராந்திகன்) - அவர்கள் ஒத்துக் கொள்ளவேண்டியது - ஞானத்தின் ஆகாரம் அதில் சம்பந்தப்பட்ட வெளி வஸ்துவின் ஆகாரத்தை ஒத்ததாக விருக்க வேண்டியது - ஏனெனில் பானை - துணி - இம்மாதிரி பல வஸ்துக்களில் பலவகைப்பட்ட ஞானங்கள் யேற்படுகின்றன-ஒவ்வொரு வெளிவஸ்துவின் ஞானத்தின் தன்மைகள் அந்த அந்த வஸ்துக்களை விட்டு தனியாக இரா. இதமுல் தான் அந்த ஞானத்தின் (தன்மை - தர்மங்களுக்கு) ஆகாரத்திஞல் தான் வ்யவஹாரயோக்யதை யேற்படுகிறது, ஆகவே வெளிவஸ்துக்களை அந்த ஞானத்திற்கு மேலாக (அதிகப்படியாக) சித்தாந்திப்பது சரியானதாகாது - எந்த பிரமாண ஸாதனத்திஞலும் அறியப்படமாட்டாது. ஆகையால் விக்ஞான மாத்ர மேவ தத்வம் (உண்மையாகும்). இதற்கு வெளிப்பொருள்கள் இருக்க வேண்டிய அவசியமில்லை.

(सर्वव्यवहारोपपत्तेः तद्व्यतिरिक्तार्थकल्पना निष्प्रमाणिका - अतो विज्ञानमात्रमेव तत्वं - न बाह्यार्थोऽस्ति என்பதாகும்.)

(இங்கே கூறப்படுவது - ஞானம் ஆகாரத்துடன் பிரகாசிக்கிறது. இரண்டு ஆகாரங்கள் - ஒன்று அறிவு இன்ஞென்று வஸ்து - ஆக இரண்டு அறியப்படுவதில்லை. மேலும் வஸ்துவும் எண்ணமும் ஒரே சமயத்தில் அறியப்படுகிறது - மேலும், மனத்தின் எண்ணம் வஸ்துவுடன் ஒவ்வொரு விஷயத்திலும் ஒன்ருகிவிடுகிறது - இவை எல்லாம் வெளி உலகம் இருக்க வேண்டியதை கல்பிக்காமல் சொல்லக்கூடும். அதே மாதிரி ஞானத்தின் ஏகத் வதத்தின் ஆதாரத்திஞல் இவை விளக்கப்படக்கூடும்).

(இங்கு சொல்லப்படுவது - அறிவு ஆகாரமற்றதாகப் பிரகாசிப்பதில்லை. அறியப்படும் ஆகாரத்தை அறிவினுடையதாகவே கொண்டுவிட்டால், அந்த ஆகாரமுடைய வெளிப் பொருள் ஒன்றைக்கற்பிக்கவேண்டிய அவசியமில்லை. உள்ளிருக்கும் அறிவினுடைய அந்த ஆகாரம் வெளியிலிருப்பது போலத் தோன்றுவது மயக்கத்தால் (பிரமத்தால்) யேற்படுவது - இதனுல் தெளிவாகும் - அறிவும் அறியப்படும் பொருளும் எப்போதும் சேர்ந்து இருக்கும் - இரண்டும் வெவ்வேறு அல்ல. வெளிப் பொருள் உண்டு எனக் கூறுபவர்கள் அறிவிலும் அவ்வெளிப் பொருளுடையது போன்ற ஆகாரத்தை ஒப்புக் கொள்ள வேண்டும். இல்லாவிடில், கடத்தைப்பற்றின அறிவு - படத்தைப் பற்றிய அறிவு எனவித்யாஸப்படுத்த முடியாது. அறிவிலுள்ள ஆகாரங்களைக் கொண்டே வ்யவஹாரம் வஸ்துவுக்கு யேற்படுகிறது- அறிவுதவிர்ந்த வெளிப் பொருள்களை ஒப்புக்கொள்வது - யுக்திக்குப் பொருந்தாது. ஆகையால் க்ஷணிகமான அறிவு ஒன்றே தான் உள்ளது-என்று யோகாசாரன் கூறுகிறுன் - (பூர்வபக்ஷம்). विज्ञानमात्रमेव तत्त्वम्; न बाह्यार्थोऽस्मि इति—;

**சித்தாந்தம்:**—இந்த அபிப்ராயம் தவறு. नाभाव उपलब्धेः: அபாவ: ந - அறிவு தவிர்ந்த வெளிப் பொருள்கள் இல்லை என்பது ந - தவறு. உபலப்தே: - அந்த அறிவுக்கு விஷயமாக அந்த பொருள்கள் காணப்படுவதால் அறிவைவிட வெளிவஸ்துக்கள் இல்லையென்று கூற இயலாது. ஏன் ? அறிவு ஏற்படுகிறது - அறிகிறவனிடத்தில் ஒரு சாமர்த்தியத்தை உண்டாக்குவதற்கும் - அந்த சாமர்த்தியத்திஞல் குறிப்பிட்ட வெளி வஸ்துக்கள் வ்யவஹாரம் செய்வதற்கு யோக்யதையை அடைவதால் - இதுதான் ஞானத்தின் உபலப்தி:—இவ்விதமாகவே எல்லா மனிதர்களும் அவர்களுடைய அறிதலை அடைகிறுர்கள் - நான் அந்த பானையை அறிகிறேன் - (घटमहं जानामि) எவர்கள் இவ்விதமாக सकर्मकेण; सकर्तृकेण -; जान् (அறிய - அறிவதற்கு) என்கிற தாதுவினுல் ஒரு வ்யக்தியையும் (subject) ஒரு பொருளையும் (object) சம்பந்தப்படுத்தி-அதை உலகத்தாரை (பரோக்ஷமாக) சாக்ஷி

யாகக் கொண்டு, அறிவுடன் பிரகாசிக்கிறார்களோ-அவர்கள் (அதே உதவியுடன்) நிரூபிக்கக் கூடும் - ज्ञानमात्रमेव परमार्थः - ஞானம் தான் பரமார்த்தமான (உண்மையான) பொருள் - என்று ஸாதிக்கிறார்கள் - அத்தகையவர்கள் ஸர்வ லோகத்தினர்களாலும் பரிகாசம் செய்யும்படி ஆகிறார்கள்.

(இங்கே சொல்லப்படுவது - இரண்டு விஷயங்கள் முதலாக - வாதம் யாதெனில் ஞானத்திற்கு ஆகாரம் உண்டு - ஏனெனில் அது இல்லாத போனால பிரகாசிக்காது. இதற்குப் பதிலாக - சொல்லப்பட்டது - சுருதபிரகாசிகையில் நீலத்வம் (வர்ணத்தை) அறியும்போது — அது ஞானத்தின் ஆகார (வடிவ) மில்லை - அது ஒரு ரூபம் - அந்த ரூபத்தின் உதவியினால் பொருள் வ்யவஹார யோகயதையை அடைகிறது.)

இன்னொன்று - ஞானம் ஒரு வ்யக்தியுடனும் ஒரு பொருளுடனும் சம்பந்தப்பட்டு பிரகாசிக்கிறது. இரண்டும் மித்யையானால், ஞானத்தை மாத்திரம் பரமார்த்தம் என்று எப்படி நிரூபிக்கக் கூடும்? வேறு ஒரு ஞானத்தின் உதவியினால் முடியாது - ஏனெனில் அந்த வேறு ஞானமும் அறியப்படுகிறதில்லை, அதே ஞானத்தின் உதவியினால் அறியப்படுகிறது என்றால் - ஏனெனில் அதில் சில அம்சங்கள் அபரமார்த்தமாக விருக்கின்றன என்று இருப்பதால். (நாம் சொல்வது (சுருத பிரகாசிகை)-எது மீதமிருக்கிறதோ- அதுவும் அபரமார்த்தமே.)

**ஸ்ரீ பாஷ்யம்:**—இந்த விஷயம் நம்மால் ஏற்கனவே சொல்லப்பட்டது - அத்வைதிகளுக்கு நாம்பதில் கூறின போது - (ஜீக்ஞாஸாதி கரணம்) - அத்வைதிகள் மறைமுகமாக பௌத்த கொள்கைகளை ஆதரிப்பதால் பிரச்சன்ன பௌத்திகள் ஆவர். அவர்களுடை கொள்கைகளை நிராகரித்துவிட்டோம் - ஏனெனில் அவர்கள் பௌத்த மதத்தை எதிர்ப்பதுபோல - வேதத்தை ஒப்புக் கொண்டு அதை ஆதரிப்பது போலவும் சொலலி - ஞானத்தை மாத்திரம் சொல்லியபடியால் பிரச்சன்ன பௌத்தர்கள் (கபடமாக

பௌத்த கொள்கைகளை ஆதரிப்பவர்களைப் போன்றவர்கள் ஆகும்.) - இது முதல் அத்யாயம் - முதல் அதிகரணத்தில் சொல்லப்பட்டது. அவர்களின் மதம் நிரஸனம் செய்யப் பட்டது.

மேலே சொல்லப்பட்ட விஷயம் सहोपलम्भनियमादभेदो नील-तद्धियो: - इति - நீலோத்பல உதாரணம் - நீலத்வமும் உத்பல அறிவும் பார்க்கும் சமயம் ஒரே சமயத்தில் அறிவுக்கு விஷயமாகிறபடியால், இரண்டும் பரஸ்பரம் ஒரே விஷயம் தான் (ஒன்று தான்) என்கிற நியமம் எதிரிகளுடைய சொந்த வாக்யங்களுக்கு விரோதமாகவிருக்கிறது-ஏனெனில் இரண்டும் சேர்ந்து இருப்பது - அதுவே காரணமாகிறது - (எதற்கு) எதனால் ஒன்றாகவிருக்கும் வஸ்துக்களின் பேதம் (கண்களால் பார்க்கும்போது) நிரூபிக்கப்பட்டதாகிறது (நீலத்வம் வேறு - வஸ்துவின் அறிவு வேறு என்று) साहित्यस्यार्थं (சேர்க்கையின்) भेदहेतुकत्वात्; ஆயினும் ஒரே சமயத்தில் தோன்றும் வஸ்துவும் - அதைப்பற்றிய அறிவும் அந்தக் காட்சியே, வெளி வஸ்துவுக்கு வ்யவஹார யோக்யதையை அளிக்கிறது - என்கிற விஷயம் பரிகாசத்துக் குரியது அது அந்த ஸ்வரூபம் அறிவுக்கும் வஸ்துவிலிருந்து காட்டப்படும் வித்யாஸத்தைக் காட்டுகிறது எனப் பகர்வது பரிஹாஸத்துக்கு உரியதாகும். (இங்கு சொல்லப்படுவது - ஒன்றாக சேர்ந்து (வஸ்து - நீலத்வம்) காணப்படும்போது - இரண்டு வெவ்வேறான விஷயங்களைப் பற்றியவை - ஒன்றாக வில்லை. வித்யாஸப்படுத்தப்படும் காரணத்தின் இருப்பே அந்த வித்யாஸத்தைக் காட்டும்).

மேலும் பலவகைப்பட்ட அறிவு கண்ணுக்குப் புலப் படாமலே அழிவை அடைகின்றபடியால் - அவைகளுக்கு அனுவர்த்திக்கிற (தொடர்கிற) ஆகாரம் இல்லாதபடியா கின்றன. அதனால் உள்வாசனைகளை இருப்பதாகச் சொல் வது முடியாத காரியம். க்ஷணத்தில் அழிந்தபோன வஸ்து வின் முந்தின ஞானம் பிற்பாடுள்ள ஞானத்தினால் உண்டாக் கப்படக்கூடுமா? - அந்த பிற்பாடுள்ள ஞானம் வாசனைகளை எப்படி பெறும் (முந்தின ஞானத்திலிருந்து ? ஆகையால்

ஞான வைசித்ரியம் (விதவிதமானது - பல வஸ்துக்களால் யேற்படுவது) - பலவஸ்துக்களால் ஏற்பட்டதாகும். अर्थ-वैचित्र्यकृतमेव) ।

(அந்த அந்த வெளிவஸ்துக்களைப் பற்றிய வ்யவஹார யோக்யதை பார்க்கப்படுகிறதே - அதனால் யேற்படும் குறிப்பிட்ட ஞானம் - அதன் ரூபம் ஸாக்ஷாத் நேரில் அடையப்படும் ஞானமாகவிருக்கிறது அந்தந்த வெளிவஸ்து க்களின் சம்பந்தத்தால் யேற்படுகிறதே - அது சிறப்பு வாய்ந்தது ஆகும். (அஸாதாரண்யம்); அந்த சம்பந்தம் ஸம்யோக (கூட்டுச்) சேர்க்கையின் லக்ஷணமாகவுமிருக்கிறது. ஞானமும் ஒரு திரவியமே. நாம் ஏற்கனவே சொல்லியிருக்கிறோம் - ஜிக் ஞாஸாதிகரணத்தில் - அது நியாயத்திற்கு சற்றேனும் விரோதமில்லை - அதைப்போல வெளிச்சத்தின் ஒரு கிரணத்தின் திரவியம் ப்ரதீப குணம் உள்ளதாகவிருக்கிறது. அதேமாதிரி ஞானத்திற்கும் ஜீவனின் ஆத்மகுண பூதமான த்ரவியத்வம் உண்டு என்று சொல்வது விருத்தமல்ல. ஆகையால் வெளிவஸ்துக்களை இல்லை என்று சொல்வது என்பது இல்லை. अतो न बाह्यार्थाभाव: –)

மேலும் சில பக்ஷவாதிகள் (வேதாந்திகளாக இல்லாதவர்கள்) - அவர்களால் சொல்லப்பட்டது. ஸ்வப்னஞான திருஷ்டாந்தத்தின் உதவியினால், முழிப்பு அவஸ்தையில் யேற்படும் பலவகைப்பட்ட ஞானங்களுக்குக் கூட நிராலம்பனத்வம் - (நிர்விஷயத்வம்) வெளிவிஷயங்களின் சம்பந்தம் (உதவி) இல்லை என்பது - அதற்கு சூத்ரக்காரரே பதில் அளிக்கிறார் அடுத்த சூத்ரத்தில்.

(மேலே காட்டப்பட்டது - யோகா சாரனின் மதம் தவறு என்று. அறிவு விலகி - இல்லாத வெளி விஷயங்கள் இலலாப் பொருள்களே என்பது ஒட்டாது. "நான் பானையை அறிகிறேன்" - என்பதில், அறிவு, அறிபவன், அறியபபடும பொருள மூன்றும் தனித்தனியாக உண்டு. அறிவுமாத்திரமே உள்ளது - மற்ற இரண்டும் இல்லை எனச்

சொல்லும் யோகாசாரனின் பக்ஷம் யுக்திக்கு ஒட்டாது. பரிகாசத்திற்கு உறிய விஷயம். இதனால் அறியப்படும் பொருள் அறிவைக்காட்டிலும் வேறுபட்டதல்ல எனத் தெளிவு - என்பது சரியில்லை. இரு பொருள்கள் சேர்ந்தே அறியப்படுகின்றன என்று கூறினால் அவை யிரண்டும் வெவ்வேறானவை எனச்சித்திக்குமே யொழிய, இரண்டில் ஒன்று தான் உள்ளது என்பது சரியாகாது. அறிவுமாத் திரம் தான் - அறிவும் அறியப்படும் பொருளும் இரண்டும் சேர்ந்திருக்கும் போது-ஸித்திப்பதில்லை, கடம் முதலானவை அறிவின் ஆகாரங்கள் எனச்சொல்வதும் தவறாகும். அறிவின் ஆகாரம் வஸ்துவின் வ்யவஹாரயோக்யதையை அளிக்கிறது எந்த அறிவானது எந்த கடம் முதலான பொருள்களோடு ஸம்யோக ஸம்பந்தத்தை அடைகிறதோ- அந்த அறிவு கடம் முதலான அப்பொருள்களைப்பற்றிய தாகையால் கடஜ்ஞானம் எனப்படுகிறது - இவ்விதமாக, கடபடாதிகளான பொருள்களை அறிவிப்பதாலே, அறிவுகள் யேற்படுகின்றன - ஆகவே அறிவே இல்லாத வெளிப் பொருள்கள் இல்லை எனச்சொல்லும் யோகசாரனின் மதம் அஸங்கதம் - தவறாகும்.)

ஸ்ரீ. ஸூ. वैधर्म्याच्च न स्वप्नादिवत् (2-2-2-28)

வைதர்ம்யாச்ச ந ஸ்வப்நாதிவத் (2-28)

வைதர்ம்யாத் ச (ஸ்வப்ன ஞானம் முதலானவற்றைக் காட்டிலும் வெளிப் பொருள்களைப்பற்றிய அறிவு) வேறு வகைப்பட்டிருக்கையால், ஸ்வப்நாதிவத்- ஸ்வப்ந ஞானம் முதலானவற்றைப்போல, ந - பொய்யான பொருள்களைப் பற்றியதல்ல.

(இதுவரை யோகாசாரனுக்குதூஷணம் - வெளிவஸ்துக் களை இசையாமல் ஞானத்தைமட்டும் இசைந்து - அதுவும் க்ஷணிகம் - பரம்பரையாகச் சொல்கிறான் - ஞானம் அனுபவ ஸித்தம் - அதனால் வெளிவஸ்துக்களை இல்லை எனச் சொல்லலாகாது. மேலும் ஞானத்திற்கு ஆகாரமில்லை,

குடத்தை விஷயமாகக்கொண்ட ஞானம் என்றே பொருள் என்று அவன் சொல்கிறான். விஷயம் ஒன்றுமில்லாமலே சொப்ன வஸ்து பொய், அதுபோல விழித்திருக்கும் காலை அனுபவித்தது எல்லாம் பாதிக்கப்படவில்லையே - ஆதலால் அனுபவஸ்வப்ன ஞானம் மெய்யாகும். சூத்ரக்காரர் சொல்கிறார் - ஸ்வப்னத்தில் விஷயங்கள் ஸத்யமல்ல-என்று யுக்தியினால் ஸாதிக்கலாகாது. வேதபிரமாணத்தைக் கொண்டு சூத்ரக்காரர் (வியாஸர்) அவைமெய் என்கிறார். அதனால் உலகு ஸத்யமன்று என்று நீங்கள் சொல்வது வைதர்ம்யமே (வேறுப்பட்டது). ஸ்வப்னஞான ம்மெய் - அனுபவம் மெய் வஸ்துக்கள் பொய்யாக விருப்பினும்; ஆகையால் வேதபிரமாணத்தால் விஷயமின்றி ஞானம் எங்குமே அனுபவித்தல் இல்லை; நிர்விஷய ஞானவாதம் தவறாகும். அந்யதாக்யாதி பக்ஷத்திலே தர்மமும் ஸத்யமே. விஷயம் ஸம்பந்தமிராததற்கு ஸம்பந்தத் தோற்றத்தால் பிராந்தி யேற்படுகிறது. அகியாதி பக்ஷத்தில் தர்மிஞானம் வேறு, தர்ம ஞானம் வேறு இரண்டும் யதார்த்தமே. ஆகவே ஞானத்திற்கு-நிர்விஷயக் க்யாதியில்லை என்பதாம்). நிராலம்பனம்-நிர்விஷயம்).

**ஸ்ரீபாஷ்யம்:**—ஸ்வப்ன ஞானம் வேறுபட்டிருப்பதால் (வைதர்மயாத்) ஜாக்ரதி ஞானம் அர்த்த சூன்யத்வம், விஷயங்களைக் கொண்டதல்ல-என்று சொல்வது சரியில்லை, ஏனெனில் இந்த ஸ்வப்ன ஞானத்திற்கு நித்ரையினால் யேற்படும் தோஷங்கள், இவைகளிலிருந்து வேறுபட்டவை ஜாக்ரதையில் காணப்படும் வெளி விஷயங்கள் (வஸ்துக்கள்). ஆகவே துஷ்ட காரணத்தினால் உண்டாகும் ஸ்வப்ன வஸ்துக்கள் கண் முழித்ததும் பாதிதம் ஆகின்றன. ஆனால் ஜாக்ரதையில் யேற்படும் ஞானம் அதற்கு விரோதம் - ஏனெனில் வஸ்துக்கள் பிரத்யக்ஷ ஸித்தம். ஆகவே இரண்டுக்கும் ஸாம்யமில்லை. (யோகாசாரன் சொல்கிறபடி) வஸ்துக்கள் இல்லாதபடி ஞானம் ஒன்றே (அர்த்த சூன்யத்வே) என்று சொல்வதால் எந்த வஸ்துவை நீ ஸ்தாபிக்க விரும்புகிறாயோ அந்த வஸ்து ஸித்திக்காது. ஏனெனில்

அனுமானத்திற்கும் கூட (யுக்திக்கும் நிர்விஷயத்வம் (நிரா லம்பநம்) யேற்படாது - அர்த்த சூன்யத்வாத். அந்த அனுமானம் வஸ்துவுடன் சம்பந்தப்பட்டால் அப்போது உண்டாகும் ஞானத்தின் ஸ்வரூபம் வ்யபிசாரமாகும் (தீர்மானமாக ஒன்றுக்கேயிருக்காது). ஆகையால் நிர்விஷய த்வம் (ஞானத்திற்கு) - அர்த்த சூன்யத்வம் யேற்படுவது சரியில்லை என்று காட்டப்பட்டது.

(இங்கு சொல்லப்படுவது - ஜாக்ரதை ஞானம் நிர்விஷய த்வம் - ஸ்வப்ன ஞானத்தைப் போல என்றால் - அதற்குப் பதில், அறிவுக்கு வஸ்துக்களில்லை என்பது சில சந்தர்ப்பங்க ளில்-ஸ்வப்னம் மாதிரியாகும்; இதனால்ஸ்வப்ன வஸ்துக்கள் பாதிதமானலும், ஸ்வப்ன ஞானம், அனுபவம் ஸத்யமே. 2) அறிவு ஞான மாத்திரமே விஷயங்களைக் கொண்டதல்ல. இதுவும் தவறு. இந்த அனுமானம் யேற்படுவதற்கு ஒரு வஸ்து வேண்டும். ஆகவே அறிவின் ஸ்வரூபம் வஸ்து வில்லாமல் தீர்மானிக்கப்படாதது).

ஸ்ரீ. சூத். न भावोऽनुपलब्धेः (2-2-29)

ந பாவோ அநுபலப்தே: (2-2-29)

அநுபலப்தே: - அறிபவனும் அறியப்படும் பொருளும் இல்லாத (வெறும்) அறிவு எதுவுமே உலகில் காணப் படாதது. பாவ: - உள்ள (இருக்கிற) பொருள்களைப் பற்றி யிராத அறிவின், பாவம் - இருப்பு ந - ஸித்திக்காது.

(அதாவது அறிவு மாத்திரம் இல்லை-அறிபவனும் அறி யப்படும் பொருளும் வேண்டும். ஆகவே எவ்விடத்திலும் உள்ள பொருளைப் பற்றியிராத அறிவு என்று ஒன்று ஸித் திக்கமாட்டாது. ஆகவே யோகாசாரனின் மதம் சரியில்லை) கேவலம் அர்த்த (விஷயம்-வஸ்து) சூன்யத்தினால ஞானம் (ஞானத்தின் இருப்பு) யேற்படுவதில்லை. ஏன்? ஏனெனில் அம்மாதிரி பார்க்கப்படுவதில்லை. வாஸ்தவமாக, அறிவு கர்த்தாவுடனே, வஸ்துவுடனே சம்பந்தப்படாமல் இருப்பது

எங்கும் காணப்படவில்லை. ஸ்வப்ந ஞான விஷயத்திலேயும் அம்மாதிரி மற்றவிடங்களிலும், விஷயங்கள் (வஸ்துக்கள்) இல்லாதது - என்பது இருக்க முடியாது (அர்த்ஶூன்யத்வம்) என்கிற விஷயம் முந்திச் சொல்லப்பட்டதாகும். இதுபற்றி பல அபிப்ராயங்கள் பிரத்யக்ஷம் - பாதிதம் இத்யாதிகளால் அறிவுக்கு விஷயமாகுதல் ஜிக்ஞாஸாதி கரணத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டதாகும்.

### ஸர்வதாநுப பத்தியதிகரணம் (2-2-5)

ஸி. சூத். सर्वथाऽनुपपत्तेश्च (2-2-30)

ஸர்வதாநுபபத்தேஸ்ச (2-2-30)

ஸர்வதா-எவ்வகையிலும் அநுபபத்தே: ச பொருந்தாது (ஸர்வ சூன்யவாதம் - மாத்யாமிகனின் பக்ஷம் - இதில் தள்ளப்படுகிறது. இவன் சொல்வது - க்ஷணிகமாகக்கூட ஒருபொருளும் கிடையாது. ஸர்வ சூன்யவாதி - 4ம் வகுப்பு பௌத்தன்).

இங்கே ஸர்வ சூன்யவாதி - மாத்யாமிகனுக்கு பதில் உரைக்கப்படுகிறது. அவன் சொல்வதாவது - சூன்யவாதமே - அதுவே தான் மேலான பௌத்த கொள்கை. க்ஷணிகத்வவாதிகள் சொல்லியது எல்லாம் விளக்கப் பட்டன - வெளிவஸ்துக்கள் உண்டு, அவை சிஷ்யனின் புத்தி யோக்யதைக்கு அனுகுணமாக - அறிவு யேற்படுகிறது என்று சொன்னார்கள். அறிவும் (விக்ஞானம்) வெளிவஸ்துக்கள் இவை எல்லாம் இல்லவே யில்லை, சூன்யமேவ தத்வம். अभावापत्तिरेव च मोक्षः - அபாவம் (இல்லாமை என்கிற நிலையே) - அதுவே மோக்ஷம் - இந்தவிதமாக புத்தரின் அபிப்ராயமிருக்கிறது - என்கிறான் இவன்.

அதுவே சரியாகும் - ஏனெனில் சூன்யத்வமே ஹேதுவினால் நிரூபிக்கப்படமாட்டாது - அதுவே ஸ்வத: ஸித்தம் (அபாவம் நித்யம் அதனால் ஸ்வத: ஸித்தம்). எது இருக்

கிறதோ - அதற்கு ஒரு ஹேது தேடப்படவேண்டும். ஸத்தாக விருக்கும் அது பிரத்யக்ஷத்தால் காணப்படுவது - அது உண்டாக்கப்படாதது - பாவாத் (ஸத்தாக விருப்பதினுலோ) அல்லது அபாவாத் (அஸத்தாக விருப்பதினுலோ) உண்டாக்கப்படாதது. எந்த வஸ்துவின் உற்பத்தியும் பாவத்திலிருந்து (ஸத்திலிருந்து) யேற்படுவதாகக் காணப் படுவதில்லே. வாஸ்தவமாக, பானைகள் களிமண் மொந்தையினுல் உண்டாக்கப்படுவதில்லே. அவைகள் அழுத்திப் பிசைவதினுலே - அழிப்பதாலே யேற்படுகின்றன. அதேமாதிரி அபாவத்திலிருந்தும் எதுவும் உண்டாவதில்லே ஏனெனில் களிமண் மொந்தைகள் அழியப்படும்போது - அந்த களிமண் அபாவத்திலிருந்து யேற்படுவதால்—அந்த களிமண்ணுக்கும் அபாவகத்வமே (இல்லாமை) லக்ஷணமாக இருக்கும்.

அதேபோல, ஒரு வஸ்து உண்டாக வேண்டுமென்ருல் அது அதிலிருந்து உண்டாகாது (சட்டி சட்டியிலிருந்து உண்டாகாது) அல்லது வேறு வஸ்துவிலிருந்து (சட்டி துணியிலிருந்து) உண்டாகாது. ஒரு வஸ்து அதவிலிருந்து உண்டாக நேரிடுமாஞல், அப்போது ஆத்மாஸ்ரய தோஷம் பிரஸங்கம் ஆகும். Fallacy of petitio principi); வஸ்து ஏற்கனவே யிருப்பதால் - உண்டாக அவசியமில்லே - அதனுல் பிரயோசனமில்லே. ஒரு வஸ்து இன்னொன்றிலிருந்து உண்டாக வேணுமாஞல் எல்லா வஸ்துக்களும் வேறு எல்லாவற்றிலும் உற்பத்தியாகக்கூடும் - ஏனெனில் வேறு வஸ்துக்களில் விசேஷத்வம் ஒன்றுமில்லாதபடியாலே. மேலும் ஜன்ம அபாவத்திலிருந்து அழிவும் ஏற்படாது. ஆகவே ஸூன்யத்வமே தத்வம் உண்மைபாகும். அதனுல் பிறப்பு அழிவு இருப்பு இல்லாமை எல்லாமே பிராந்திபாவமாகும்.

**விளக்கம்:**—(இதை சூன்யவாதம் எனச்சொல்வார்கள் இதனுல் இருக்கிறதைத் தான் நிரூபிக்கவேண்டியது - ஒரு வஸ்து இருப்பதற்கு காரணங்கள் இல்லாதபோது, இல்லாமையும் ஸ்வத:ஸித்தம். ராமானுஜரின் பதில் இதை முழுவதும் கண்டிக்கிறது.)

அறிவோடு வெளிப் பொருள்களோடு வாசியற எல்லாம் இல்லாப் பொருள்களே. சூன்யமேதத்வம்; காண்பதாகத் தோற்றுவது எல்லாம் பொய்; தோற்றம் அழிவதே. மோக்ஷம் இல்லாமற்போவது; புத்தர் அவரவர் பகுத்தறிவின் பக்குவத்திற்கு யேற்ப உபதேசித்தார். எப்படியெனில் பொருள்களை உண்டென்று ஸாதிக்க விரும்புகிறவர்கள் தான் பிரமாணத்தைத்தேடவேண்டும். பொருள்களே இல்லை என்பதற்கு பிரமாணம் அவசியமில்லை. பொருள்கள் உண்டு என்று சொல்பவர்கள் - அவர்களுக்கு பொருள்கள் எப்படி உண்டாகின்றன? என நிரூபிக்கவேண்டும். இதற்கு *ஆறு பக்ஷங்கள் இருக்கின்றன. முதலில் உள்ள பொருளிருந்தோ இல்லாப் பொருளிலிருந்தோ எப்பொருளும் உண்டாவதாக அவர்களால் நிரூபிக்க முடியாது. முதல் பக்ஷம்-உள்ள பொருளிலிருந்து அவை உண்டாகிறது - இவ்விதம் சொல்லப்பார்த்தால், மண்கட்டி முதலான காரணப் பொருள்கள் அழிந்த பின்பே கடம் முதலான காரியப் பொருள்கள் உண்டாவதைக் காண்கிறோம். மண்கட்டியில் ஆகாரம் இல்லாமற்போவதே அதன் அழிவாகும். இது மண்கட்டியின் அபாவமேயாகும் ஆகையால் அபாவத்திலிருந்து (இல்லாப் பொருளிலிருந்து) குடம் உண்டாகிறதென்று தேறுமே ஒழிய, உள்ள பொருளான பாவத்திலிருந்து உண்டாகிறது எனத்தேருது.

சரி அபாவமாகிற - இல்லாப் பொருளிலிருந்து, பாவமாகிற உள்ள பொருள் உண்டாகக் கூடுமா என ஆராய்ந்தால், உள்ள பொருள் மற்ருேர் உள்ள பொருளிலிருந்து உண்டாகலாமே யொழிய, இல்லாப் பொருள்களிலிருந்து உண்டாகமாட்டாது. அப்படி உண்டாகுமாளுல், அதுவும் இல்லாத பொருளே யாகவேண்டும். ஆக உள்ள பொருளிலிருந்தோ - இல்லாப் பொருளிலிருந்தோ, எப்பொருளும் உண்டாவதாக நிரூபிக்க முடியாதபடியால், பொருள்

---

*இங்கு நமது பிரு. வித்யா-பாகம் 2-ல் அவதாரிகையில் பக்கம் III பார்க்கவும்.

களின் உற்பத்தியை எவ்வகையாலும் நிரூபிக்க முடியாது. பொருள்களின் உற்பற்தியையே நிரூபிக்க அசக்தமானால், அதற்குப்பின் அவற்றிற்கு யேற்படும் வளருவது, தேய்வது முதலான மற்ற விகாரங்களை நிரூபிக்க முடியாததால் தானுகவே ஸித்திக்கும். ஆகையால் சூந்யமே தத்வமாகும். (பூர்வபக்ஷம்). (சாரீரக காரிகாவளி)

**ஸ்ரீபாஷ்யம்:**—மேலும் அதிஷ்டானமின்றி பிரமம் ஏற்படாதாகையால் (அத்வைதி பக்ஷம்) இவ்விதம் (அத்வைதி சொல்வது போல) நாம் ஒத்துக்கொள்ள வேண்டிய அவசியமில்லை; ஏதாவது பாரமார்த்திகமான தத்வத்தையோ, அல்லது ஆஸ்ரயம் செய்வதால் தோஷம் யேற்படுவதான வேறு ஒன்றை - ஒப்ப அவசியமில்லை. ஏனெனில் தோஷம் ஆஸ்ரயத்திலும் யேற்படலாம்; அறிகிறவனுகிற தர்மம் அதுபோன்ற மற்ற விஷயங்களும் எல்லம் அபரமார்த்தம், அதனுல் ஆஸ்ரயம் அபரமார்த்தமாக விருப்பினும் தோஷம் ஸம்பவிக்கலாம் இந்தக் காரணங்களால் சூன்யமேவதத்வமாகும்—(அதாவது அதிஷ்டானமில்லாமல் பிரமம்வரலாம் - ஸாக்தன் (பௌத்தன்). அத்வைதி சொல்வது - அதிஷ்டானம் ஸத்யம் - ஆஸ்ரயம் மித்யை. நாம் சொல்வது அதிஷ்டானம் ஸத்யமானுல் ஆஸ்ரயமும் ஸத்யமாகும். ஜகத்தும் பிருஹ்மமும் ஸத்யம்)

(அத்வைதி - கடாதி வஸ்துக்களில் பிராந்தியேற்படுவது - சுக்தியில் வெள்ளி தோன்றுவதுபோல. கடாதி பிரமம் என்று சொல்லப்படும் வாதத்தில் - அதிஷ்டானம் அவர் ஜனீயம் (தள்ளப்பட வேண்டியது) என்று கொண்டால் பிருஹ்மம் தான் ஸத்யம் - அடையப்படுகிறது. அவ்விதமாயினும் न च निरधिष्ठानेति ।. மாத்யாமிகனுக்கும் சம்மதமில்லை -

**—कथं निरधिष्ठानतेतिशंक्यम्-? तथा सति तस्याद्वैताविशेष-प्रसङ्गात् । अतः शून्यमिलोकशशविषाणपर्यायस्य निर्देशात् न तत् अधिष्टानम्,** ஸ்வப்னவிஷயங்களில் பிரமம் பக்ஷி:; **कस्य**

चिद्ग्रहणेऽपि इदमिति दर्शनात्, अतो घटादिबुद्धिरेकैकाऽपि पूर्वपूर्वभ्रान्तिमूलस्मृतिरेव भ्रान்तिरूपेति (உத்தமூர்ஸ்வாமி).

ஸ்ரீபாஷ்யம் (சித்தாந்தம்) :—அவ்விதம் சொல்லப்படு மாகில் நாம் பதில் சொல்வோம் - सर्वथानुपपत्तेश्च - எல்லாவிதத் திலும் பொருந்தாமையால் சூன்ய வாதம் சரியில்லை. (சூத். 2. 2. 30). எல்லாப் பொருள்களும் உள்ளவை என்றோ, எல்லாப் பொருள்களும் இல்லையென்றோ பிரதிக்ஞை செய்து மாத்யாமிகன் தன் இஷ்டத்தை ஸாதிக்க வேண்டும். (உதாரணமாக உலகில் குடம் இல்லை என்றால், குடத்தின் அமைப்புடன் இல்லை - ஓட்டின் அமைப்புடன் இருக்கிறது என்று தேறும். அப்படியே அறியவும்படுகிறது. குடம் இருக்கிறது என்றால், குடத்தின் அமைப்புடன் இருக் கிறது என்று தேறி - அப்படியே அறியப்படுவதுபோல, குடம் இல்லை என்றாலும் வேறமைப்புடன் இருக்கிறதென்று தேறி, அப்படியே அறியப்படுகிறதென்பதை எங்கும் பார்க் கிறோம். ஆகையால் "இருக்கிறது" என்னுமிடத்தோடு வாசியற "இல்லை" என்னுமிடத்தோடுவாசியற ஒவ்வோரா காரத்துடன் பொருள் இருப்பதாகவே கூறியதாகத் தேறு கிறபடியால், மாத்யமிகனின் சூன்ய நிலை எப்படி பிரதிக்ஞை செய்தாலும் சரியாகாது-தேறுது).

உன் (மாத்யாமிகனைப் பார்த்துச் சொல்வது) பக்ஷம் - ஸர்வதா அனுபபத்தே: (எல்லாவஸ்துக்களுமில்லை) - ஸர்வ சூன்யத்வம் - யேற்படாது, ஏனெனில் பொருந்தாது, நாம் உம்மைக்கேட்பது - உன்பிரகாரம் - எல்லாம் ஸத்தா? (இருக்கின்றனவா) - அல்லது அஸத்தா (இல்லையா)-இல்லை அன்யதா (வேறாகவிருக்கின்றனவா)? எந்தவிதமாயினும் ஸர்வதா ஸர்வ சூன்யத்வம்-அதேபடி துச்சத்வம் ஏற்படுவ தில்லை - ஏனெனில் ஏற்கனவே நம்மால் ஸ்தாபிதம் செய்யப் பட்டது - भाव (பாவம் இருப்பு) अभाव (இல்லாமை) இந்த சப்தங்களுக்கு - அறிவு யேற்படுகிறதே - அது அந்த அந்த வஸ்துவின் அவஸ்தா விசேஷத்தை - கண்ணுக்குப்புலப் புலப்படுவதைச் சொல்கிறது. ஆகையால் ஸர்வம் சூன்யம்

என்று நீ சொல்வதற்கும்; ஸர்வம் ஸத் (உண்மை) என்று சொல்லும் (விசிஷ்டாத் வைதியாகிற எமக்கும்) - எல்லா வற்றிற்கும் அறியப்படுவதான அவஸ்தா விசேஷம்தான் - குறிப்பிட்ட நிலையில் விருக்கிறது என்பதால் ; உன்னுடைய அபிமதமாகிற துச்சதா (சூன்யத்வம்) எங்கும் இருப்பதாக நிரூபிக்கப்படவில்லை.

மேலும் சூன்யத்தை அடைந்தபிறகு - ஏதாவது ஒரு பிரமாண உதவியினுல் இப்படி சூன்யத்வத்தை நிரூபிக்கப்பட்டால் - அச்சமயம் நீ கூட ஒப்புக்கொள்ளவேண்டியது அந்த பிரமாண ஸாதனத்தின் ஸத்யத்தையும் ஒப்புக் கொள்ள நேரிடுமே (அதாவது ஸர்வம் சூன்யம் என்ருல் அந்த பிரமாணமும் ஸத்யமில்லை அல்லவா ? அம்மாதிரி பிரமாணம் அஸத்யம் என்ருல் (இல்லையேன்ருல்) அப்போது எல்லா வஸ்துக்களும் உண்மையாகும். ஆகவே ஸர்வதா ஸர்வ சூன்யத்வமே அநுபபந்நம் (ஒப்புக்கொள்ளப்படாதது).

(அதாவது வஸ்து இல்லை யென்ருல் - முற்கூறியபடி எல்லாப் பொருள்களும் வேறு ஒரு அவஸ்தையில் (நிலையில) இருக்கிறது என்று அர்த்தம் - மற்ெருரு நிலையையடைவதே "இல்லை" என்பதற்குப் பொருள். மண்கட்டியின் நாசமே கடத்தின் உற்பத்திக்குக் காரணம். கட்டி மண் என்கிற திரவியம் காரணம், சட்டி காரியமாகவுமிருக்கின்றது ஆகவே சூன்யப் பொருளிலிருந்து ஒன்றும் உண்டாகாது.

(இங்கே திருவாய்மொழி - 1-1-9 - உளன் எனில் உளன் அவன் உருவம் இவ்வுருவுகள்...பரந்தே - ஸ்மரிக்கவும்). உளன் என்பதற்கு உளன் என்று பிரதிக்ஞை செய்தால் - உளன் - அஸ்தித்வ விசிஷ்டனுய்க் கொண்டு உளனும். ஈஸ்வரன் உளன் ஆனுல், ஐஸ்வர்யத்தை ஒழிய உளனுகக்கூடாமையாலே விபூதியான ஜகத்தும் உண்டாம் (அதாவது இவ்வுருவுகள் பகவானுக்கு சரீரமாய்க் கொண்டு உளவாம். உளனலன் என்ருல் நாஸ்தி சப்தத்தாலே அவனுடைய இல்லாமையை பிரதிக்ஞை பண்ணில், லோகத்தில் நாஸ்தி சப்தார்த்தமே உனக்கும் அர்த்தமாகும். கடோ நாஸ்தி என்ருல்

இங்கில்லை யென்னுதல், இப்போதில்லை, ம்ருத்பிண்டமாய் உற்பத்தியபாவத்தாலே இல்லையென்றும், கபாலா வஸ்த்தமாய் இல்லையென்றும் இவற்றிலே ஒன்று நாஸ்தி சப்தார்த்தமாகக் கண்டோம். ஒருபடியாலே இல்லையானது பிரகாராந்தரத்தாலே உண்டாயிருக்கையில், ஈஸ்வரனும் நாஸ்தித்வ விசிஷ்டனாய் கொண்டு உளனும். (அவனுருவம் இவ்வுருவுகள்) - அதாவது அவனுடைய விபூதியும் ஒரு பிரகாரத்தில் இல்லை - அபாவ விசிஷ்டமாய்க் கொண்டு உளவாம் (ப்ரகாரந்தரத்தாலே உண்டாகையாலே). ஆகவே என்னதேறும் - அஸ்தித்வ நாஸ்தித்வங்கள் உள்ள வஸ்துவுக்கு இரண்டும் குணமாய் முடிகிறபடியால் உளனிரு தகைமையொடு ஈஸ்வரன் உளன் என்றுதல் இலன் என்றுதல் இரண்டுபடியாலும் உளன் என்பதே தேறும். இவ்வழியாலே, ஒழிவிலன் பரந்தே - விபூதியையும் வ்யாபித்துக் கொண்டேயொழிவிலன்.

(கோழியாலம் ஸ்வாமி) (சாரீரக காரிகாவளி) ஸர்வதா அனுபபத்தேஸ்ச என்னும் சூத்ரத்திற்கு வேறு ஒரு வகையால் பொருள் கூறலாம். அதாவது, எல்லாம் சூன்யம் என்று ஸாதிக்கப் பார்க்கும் மாத்யாமிகன் ஏதேனுமொரு பிரமாணத்தால் அதை ஸாதித்தல் வேண்டும். அவ்விதமானால் ஸாதிக்கும் பிரமாணமும் உண்மையானது என்று ஒப்புக் கொண்டே தீரவேண்டும். அப்பிரமாணம் உண்மையாகி விடுகிறபடியால், "எல்லாம் சூன்யம்" என்பது போய்விடும், அவ்விதமானால் எல்லாம் உண்மையென்றே ஸித்திக்கும். ஆகவே ஸர்வ சூன்யவாதம் பொருந்தாது என்பதாகும்).

இந்த சூத்ரத்தினால் மாத்யாமிகனின் பக்ஷம் கண்டிக்கப் பட்டது - ராமானுஜர் முதலில் நாகார்ஜீனரின் அபிப்ராயமாகிற-கடைசியான சூன்யத்வம் இல்லை-இல்லாமலுமில்லை இரண்டும் சேர்ந்தோ - தனித்தனியாகவேவிருக்கின்றன - இவை நான்குக்குள் மேல் இருக்கலாம் - என்கிறார். சுருத பிரகாசிகையில் இவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறது - ஒரு பானை பானையாகவிருக்கிறது - ஓடாகவில்லை. ஓடாகவும் இல்லை - பானை இல்லாமையாகவுமில்லை. ராமானுஜர்

கடைசியாக சொல்வது - மாத்யாமிகனுக்கு நிரூபணம் செய்வது மிகக் கடினம்.

ஜைன தூஷணம் - ஏகஸ்மிந் ந ஸம்பவாதி கரணம் (2-2-6)

ஸ்ரீ. சூ. नैकस्मिन् असंभवात् (2-2-31)

நைகஸ்மிந் ந ஸம்பவாத் (2-2-31)

ஏகஸ்மிந் - ஒரு பொருளில் அஸம்பவாத் - (ஒன்றுக்கொன்று முரண்பட்ட அஸ்தித்வம், நாஸ்தித்வம் முதலான தன்மைகள் ஒரே காலத்தில்) பொருநதமாட்டாதாகையால் - ந - ஒரே பொருளில் ஒரே காலத்தில் விருத்த தர்மங்களை ஒப்புக் கொள்ளும் ஜைநமதம் பொருந்தாது.

அணுகாரணவாதம் செய்யும் ஜைனர்கள் - என்னும் அம்சத்தில் பௌத்தர்களை ஒத்திருப்பதால் - இதில் அவர்களின் பக்ஷம் நிரஸிக்கப்படுகிறது.

(ஜைனமதத்தின் கொள்கைகள் - உலகை நியமிக்கும் ஈஸ்வரன் என்று ஒருவன் இல்லை. உலகு மாத்திரமே உளது. அவ்வுலகம். ஆறுதிரவியங்களாயிருப்பது - 1) ஜீவன் 2) தர்மம் 3) அதர்மம் 4) புத்கலம் 5) காலம் 6) ஆகாஸம் ஆகியவை.

1. ஜீவன் - பத்தன் யோகஸித்தன், முக்தன் என்று 3 வகை இவ்வுலகு இருக்கும் வரை ஜீவனின் தேகம் தானிருக்கும் தேகத்தை ஒத்தபரிமாணத்தை (அளவை) உடையவனாக விருக்கிறான்.

2. தர்மம்-இது ஒரு திரவியம் (ஜங்கம) ஜீவன் சஞ்சரிப்பதற்கு காரணமாயிருப்பது-உலகு எங்கும் பரவியிருப்பது.

3. அதர்மம் - ஸ்தாவர ஜீவர்களுடைய ஸஞ்சாரமின்மைக்குக் காரணமாயிருப்பது. உலகமெல்லாம் பரவியிருப்பதான வேறு ஒரு த்ரவியமாகும்.

4. புத்கலம் - நிறம் - மணம் - சுவை-ஸ்பரிசம் ஆகியவற்றை உடைய ஒருத்ரவியம். அது பரமாணுவென்றும்

அதன் கூட்டவரான காற்று தீ நீர் பூமி சரீரம், லோகங்கள் முதலியவை - ஆக இருவகைப்படும்.

5. காலம் மூன்று காலங்கள்-உலகங்களுக்குக் காரண மான தாய், அணுவானதொரு திரவியம்.

6. ஆகாசம் - ஒன்ருய் - அளவற்ற பிரதேசமாக விருப்பது இவற்றில் அணுவான காலமும் புத்கலத்தில் அணுப் பகுதியும் தவிர்த்து மற்றவை ஐந்தும் அஸ்திகாயங் கள் எனக் கூறப்படுகின்றன. இந்த தத்வங்கள் எல்லாமே ஸப்தபங்கீ நியாயத்தினுல் உள்ளது என்றே - அல்லது இல்லாததென்றே சொல்லமுடியாதபடி ஒரு படிப்பட்டிராத வையாயுள்ளன - என நிருபிக்கப்பட்டிருக்கிறது.

உலகில் உள்ள பொருள்கள் ஒருபடிப்பட்டிருக்கையாக யுள்ளன - என்பதை பங்கப்படுத்தும் ஸப்த பங்கீ நியா யத்தை அனுசரித்து - உலகில் பலபடிப்பட்டவையாகயிருப் பவை எனக்காட்டும் ஏழு உலக வழக்குகள். அவையாவன - 1) (பொருள்) உள்ளதாகவுமிருக்கலாம். 2) இல்லாததாகவு மிருக்கலாம். 3) உள்ளதாகவும் இல்லாததாகவும் இருக்க லாம். 4) உள்ளதென்றே - இல்லாததன்றே எனச் சொல்ல முடியாததாகவுமிருக்கலாம். 5) உள்ளதாயிருக்கலாம், உள்ளதென்றே இல்லாததென்றே சொல்ல முடியாததாகவு மிருக்கலாம். 6) இல்லாததாயிருக்கலாம்; உள்ளதென்றே, இல்லாததென்றே, சொல்லமுடியாததாகவுமிருக்கலாம். 7) உள்ளதாகவும் இல்லாததாகவும் இருக்கலாம்; உள்ள தென்றே - இல்லாததன்றே சொல்ல முடியாததாகவுமிருக் கலாம். இந்த ஸப்தபங்கியினுலே எல்லா வஸ்துக்களும் உள்ளதாகவும், இல்லாததாகவும் இருப்பவை எனத் தேறு கிறது. இதேபடி பொருள் நித்யமாகவும் அநித்யமாகவு மிருக்கலாம் என்று தொடங்கும் ஸப்தபங்கியாலே, எல்லாப் பொருள்களும் நித்யமாகவும் இருக்கலாம் - அநித்யமாகவும் இருக்கலாம் என்கிருர்கள்; இதுபோல பொருள் பிந்நமாகவும் அபின்னமாகவும் இருக்கலாம். ஆகவே எல்லாப் பொருள்

களும் உள்ளதாயும் இல்லாததாகவும் - நித்யம் அநித்யமாக வும் பிந்ந அபிந்நமாக இருக்கையால் ஒருபடிப்பட்டி ராதவை யாய் உள்ளன. அதாவது பலபடியாக வெவ்வேருக உளவை என்பதாம் (பூர்வபக்ஷம்).

**ஸ்ரீபாஷ்யம்**:—முந்தின அதிகரணங்களில் ஸௌகதர் களான பௌத்தர்கள் நிரஸிக்கப்பட்டனர். ஜைனர்கள் கூட பரமாணுகாரண வாதிகளான படியால்-ஜகத் உற்பத்தி விஷயத்திலே, அதனுல் அவர்களுடைய பக்ஷமும் உடனேயே கண்டிக்கப்படுகிறது.

ஜைனர்களின் அபிப்ராயம் (கொள்கை) - இவ்விதமாக விருக்கிறது. ஜீவர்கள் - அஜீவர்களைக் கொண்ட இந்த ஜகத் அதற்கு ஈஸ்வரன் இல்லை. அந்த ஜகத் ஆறு திரவி யங்களால் ஆக்கப்பட்டிருக்கிறது. அந்த ஆறு யாதென் ருல், ஜீவ, தர்மா தர்ம புத்கல கால ஆகாஸம் முதலியவை. இவைகளில் ஜீவர்கள் மூவகை - பத்தர்கள், யோக ஸித்தி பெற்றவர்கள் முக்தர்கள். தர்மம் எனப்படுவது - ஒரு திரவியம் - அது ஜங்கம வஸ்துக்களின் சலனத்திற்கு (ஸஞ்சாரத்திற்கு) ஹேது - ஜகத் வ்யாபி; அதர்மம் - ஸ்திதிக்கு ஹேதுவாகவும் அஜங்க வஸ்துக்களின் சஞ்சாரத் திற்குக் காரணம் - ஜகத்வியாபி. புத்கலம் - வர்ணகந்தரஸ (சுவை) ஸ்பர்சம் கொண்ட ஒரு திரவியம்; அது பரமாணு ருபமாகவும்—அதன் சேர்க்கைபெற்ற ருபமாகவும் வாயு - தீ- நீர் - பூமி; சரீரம் - லோகங்கள் முதலியவை, என இருவகைப் படும்.

காலம் - முக்காலங்களை வ்யவஹாரம் செய்வதற்கு ஹேதுவாக - அணுரூபமாகவுமுள்ள திரவிய விசேஷம் ஆகாசம் - ஒன்றுதான் - அளவற்ற பிரதேசமுள்ளதாகவும் இவற்றில் அணுவான காலமும் புத்கலத்தில் அணுப்படுத்தி யும் விட்டு, மற்றவை ஐந்தும் அஸ்திகாயங்கள் எனக் கூறப் படுகின்றன.

அணுவை விட வேறுன திரவியங்கள் ஐந்து அஸ்தி காயங்கள் என்று சொல்லப்பட்டவை - அவை ஜீவாஸ்தி காயம் - தர்மாஸ்திகாயம் - அதர்மாஸ்திகாயம், புத்கலாஸ்தி காயம், ஆகாசாஸ்திகாயம் - என்பதாம். அநேக தேசங் களில் இருக்கிறதாக - திரவிய அஸ்திகாயம் என்கிற சப்தத் தால் சொல்லப்படுகிறது. (அஸ்திகாயம் - இருப்பும் அள வும் கொண்டது. அதற்கு பல பிரதேசங்கள் உண்டு (அணுக்களால் ஆக்ரமிக்கப்பட்ட பல பிரதேசங்களாகும்) காலத்தின் அணுக்கள் சேர்க்கையடைவதில்லே. அதனுல் காலாஸ்திகாயம் இல்லே. புத்கல அணுக்களுக்கு ஒரே ஒரு பிரதேசம் ஒவ்வொன்றுக்கும் உண்டு, அவை ஒன்று சேர்ந் தால் - அவை "காயம்" என ஆகிறது. (நைமி சந்திரனின் ஜைனபுத்தகம் - திரவிய ஸங்கிரஹம்.)

ஜைனர்கள் மோக்ஷத்தை ஜீவர்கள் அடைவதற்கு இன் ஞெருவகைப் பொருள்களேக் கூறுகின்றனர்-அதில் ஜீவர் கள்-அஜீவர்கள் - ஆஸ்ரவ, பந்த:, நிர்ஜர, ஸம்வரமோக்ஷா - ஆகியவையாகும். (ஜீவர்கள், ஆத்மாவில்லாத அஜீவர்கள், ஆஸ்ரவ (இந்த்ரிய வாசனேகள்) பந்த (கட்டுப்பாடு); நிர்ஜராதபஸ்) ஸம்வர (தியானம்) மோக்ஷம் (விடுதலே). மோக்ஷத்தை ஸங்க்ரஹமாகச் சொல்லப் படுவதாலே, உபா யம் சொல்லப்படுகிறது; அதாவது ஸம்யக்ஞானம், தர்ஸனம் (பார்த்தல்) சுகவீர்ய குணங்கள். அஜீவ - ஜீவர்களுக்கு போகயமாகவிருக்கும் வஸ்துக்கள் ஆகும். ஆஸ்ரயங்கள் - இந்திரியங்கள் - போகோபகரணங்கள் பூதஇந்திரியங்களால் யேறபடுபவை. பந்தம் - எட்டுவிதம் அவையாவன - காதி கர்மங்களாகிற நானகு - மறறெரு நான்கு ஆகாதிகர்மங்கள் இவைகளுா முதலில சொன்னது ஜீவர்களின் இயற்கை யான குணங்களாகிற ஞானதர்சனம் (பார்வை) வீர்ய சுகம் ஆகியவைகளே பாதிககின்றவையாகும். மற்றொரு நான்கு சரீரத்தின் அமைப்பு (கூட்டுச் சேர்க்கை, ஸம்ஸ்தானம்) அதற்கு அபிமானியாக விருக்கிற தேகத்தின் ரூபம், ஸ்திதி, அதனுல் யேற்படும் சுகதுக்க உபேக்ஷை (உதாஸீனத்வம்) இவைகளுக்குக் காரணம். நிர்ஜரம் என்பது மோக்ஷஸாதன

மாகிறதும் அர்ஹத் என்கிற உபதேசங்களிலிருந்து அடையப்பெறும் தபஸ்ஆகும். ஸம்வரம் - இந்திரிய கட்டுபபாடு (நிரோதம்) - ஸமாதிரூபம், மோக்ஷம் என்பது ஸ்வாபாவிக ஆத்மஸ்வரூபத்தின் ஆவிர்பாவம் - ராகாதிக்லேசங்கள் நாசமடைதலால் யேற்படுவதாகும்.

(கர்ம புத்கலம் என்பதின் உள்பிரவாஹம் இந்திரிய த்வார ஜீவர்களுக்குள் புகுவது. அதை அடக்குவது ஸம்வரம். ஜீவர்களின் கர்மாக்கள் நிர்ஜரத்திஞல் நாசமடைகின்றன. நான்கு கதிகர்மாக்கள் - ஆத்ம ஞானத்தை மறைத்து, மதபோதனைகளில் நம்பிக்கையில்லாதபடி ஆக்கி, மோக்ஷத்தையடையும் விருப்பத்தில் உதாஸினத்வத்தை உண்டாக்குகிறது. அகதிகர்மாக்கள் ஆத்மாவுக்கு ஒரு தேகத்திலுள்ள அளவை உண்டாக்கி-அதற்கு நாமரூபத்தை உண்டாக்கி, எந்த குடும்பத்தில் பிறக்கவேண்டியது - எது சுகதுக்கத்தை கொடுக்கிறதோ அதை எல்லாவற்றையும் உண்டாக்குவது.) (Prof. M. Rangacharya & Sri M. B. Varadaraja Iyengar)

பிருத்வி முதலியவைகளுக்குக் காரணமாகவிருக்கும் அணுக்கள் நான்குவிதமாக இல்லை-அதாவது வைபாஷிகன் ஸௌத்ராந்திகன் (புத்தர்கள்) சொல்கிறபடியில்லை. அவை எல்லாம் ஒரே (ஏகத்வ) ஸ்வபாவமாகவிருக்கின்றன-பிருத்வி முதலியவைகளுள் யேற்படும் பேதங்கள் அவைகளின் பரிணாமங்களின் விளைவாகும்.

எல்லா வஸ்துக்களுக்கும் பலவகைப்பட்ட லக்ஷணங்கள் இருக்கின்றன - ஸத்வ - அஸத்வம் என்றும் நித்யம் அநித்யம் என்றும், பின்ன அபின்னத்வம் என்றும் வித்யாஸப்படுத்திச் சொல்லும்படியிருக்கின்றன. இது யேற்படுகிறது எதனுலென்றல் - ஸப்தபங்கி நியாயம் ஏழுவிதமாக செயல்படுகிறது. அதாவது - ஒரு வஸ்து இருக்கிறது-வஸ்து இல்லை-வஸ்து இருக்கிறதும் இல்லாமலும் இல்லை (ஸ்யாதஸ்தி ச நாஸ்திச), வஸ்து இருக்கிறது என்று சொல்லக்கூடாதபடி,

स्यादवक्तव्यम्; स्यदस्ति चावक्तव्यं च - சொல்லமுடியாதபடி இருக்கிறதாயும் இல்லாததாயும் இருப்பது; வஸ்து இல்லை - சொல்லமுடியாதபடி இருக்கிறது (स्यान्नास्ति चावक्तव्यं च; வஸ்து இருக்கிறது - இல்லை - சொல்லமுடியாதபடியிருக்கிறது - स्यादस्ति च नास्ति चावक्तव्यं चेति सर्वत्र எல்லாம் ஸப்த பங்கீயில சொல்லப்பட்டதாகும் - அதாவது ஒரு படிபட்டிராதவையாய் உள்ளது. (பூர்வபக்ஷம்) எல்லா வஸ்துக்களும் திரவ்யங்களின் மாறுபட்ட (பர்யாயத்வம்) நிலையாகும்; அதனால் திரவியத்தை ஸத்தாகக் (ஆத்மாவாகக்) கொள்ளுகிறபடியால, அவர்கள் சொலகிறார்கள் - ஸத்யமாகவும், நித்யமாகவும் - ஒன்றாகவும் இருக்கின்றன. மாறுதலை உடைய நிலைகளை உடையதால், அந்த திரவியங்கள் அவைகளுக்கு விபரீதம் - (எதிராகவுள்ளவை). पर्यायाश्च - திரவியங்களின் அவஸ்தா விசேஷங்களை (மாறுபட்ட நிலைகளைக்) குறிக்கும். அவைகளுக்கு பாவமும் (இருப்பும்) அபாவமும் (இல்லாமையும்) ரூபமாகும், அதனால் ஸத்தாகவோ அஸத்தாகவோ - மற்றது எல்லாமும் உபபந்நமாகும் - சரியாகும்.

இங்கு நாம் சொல்வது - नैकस्मिन् असंभवात् ஏகஸ்மிந் - ஒரே பொருளில் அஸம்பவாத் - ஒன்றுக்கொன்று முரணாக அஸ்தித்வம் நாஸ்தித்வம் முதலிய தன்மைகள் முரண்பட்ட அஸ்தித்வம் நாஸ்தித்வம் - ஒரேகாலத்தில் பொருந்தமாட்டாது. ந - ஒரேபொருளில் ஒரேகாலத்தில் விருத்த தர்மங்களை ஒப்புக் கொள்ளும் - ஜைநமதமும் பொருந்தாது. இது சரியாகாது எப்படி? ஒரேபொருளில் அஸம்பவாத். ஒரே வஸ்துவில அஸ்தித்வமும் நாஸதித்வமும் விருத்த தர்மங்களானபடியால் ஏற்படாது - முரண்பாடுள்ள தன்மை சேர்நது இருப்பதாக ஏறபடாது - நிழலும் வெளிச்சத்தைப் போல விருத்த தர்மங்கள்.

என்ன சொல்லப்பட்டதென்றால் - திரவியத்தின் அதன் விசேஷணம் (தர்மம்)மாகிற பர்யாய சப்த (மாறுதலைக் குறிக்கிற) அவஸதா விசேஷத்தைக் குறிக்கும். அதேவஸ்துவில் விருத்த தர்மங்களின் ஸமாவேசம் (கூட்டுச் சேர்க்கை)

ஏற்படுவதில்லை என்கிற காரணத்தினுல். இவ்விதமாக, ஒரு வஸ்துவிற்கு ஒன்றே ஒன்றின் மாறுதலைக் குறிக்கிற அவஸ்தா விசேஷத்தைச் சேர்த்து அதேசமயத்தில் அதே வஸ்துவில் அதற்கு எதிரான (விபரீதமான) அவஸ்தா விசேஷத்துடன் கூடியதாகக் காணப்படுகிறதில்லை - உற்பத்தி விநாஸமாகிற பரிணும விசேஷங்கள் ஒரேசமயத்தில் சேர்ந்துவிருப்பது என்பதும் திரவியத்தின் அநித்யமாகும். அதற்கு விபரீதமாகவுள்ளதும் அதேபடி திரவியத்திற்கு நித்த்யவமும் அதேவஸ்துவில் எப்படி ஏற்படக்கூடும்? விரோதி தர்மங்களின் ஆஸ்ரயத்வம் - பிந்நத்வம் எப்படி அந்த வஸ்துவில் ஒரேசமயத்தில் ஏற்படும்? எப்படி அஸ்வத்வம் (குதிரையின் தர்மங்கள்) மஹிஷத்வம் (எருமையின் தர்மங்கள்) சேர்ந்திருப்பது ஒரேவஸ்துவில் ஒரேசமயத்தில் ஏற்படாது. அதற்கு பொருள் - முன்னுடியே பேத அபேதவாதிகளின் பக்ஷம் நிரஸனம் செய்யப்பட்ட போது तत्तुसमन्वयात् (1-1-4) என்பதில் (பிருஹ்மம் சாஸ்திரம் ஒன்றினுல்தான் அறியப்படும் - பிருஹ்மவிஷயத்தில் (तत्तु) சாஸ்திரம் ஏகயேவ பிரமாணம்.

(இங்கே சொல்லப்படும் ஸப்த பங்கியின் "ஸ்யாத் வாதம்" சொல்லப்பட்டுக் கண்டிக்கபபடுகிறது. இங்கே ஜைனர்கள் ஒருவஸ்து விருப்பதை ஏழுபக்ஷங்களாகச் சொல்கிருர்கள்; அதில் வஸ்து இருக்கிறதா இல்லையா - அதற்கும் மற்றப் பொருள்களுக்குமுள்ள சம்பந்தம் யாது? எல்லாம் ஆகும் ஸ்யாத் - अस्ति - இருக்கிறது - இருக்கலாம். ஜைனர்கள் இருக்கிறதாகக் கூறுகிருர்கள். "பங்கம்" என்பது வித்யாஸத்தைக் குறிக்கலாம். ஒருவஸ்துவின் இருப்பு — அஸ்தித்வம் - அதன் ஸ்வரூபம், பொருளாகிற தன்மை (திரவியதன்மை) திரவியத்தன்மை - ஒரே இடம் - ஒரே காலம், இவற்றைக் குறிக்கும்; அதேமாதிரி இல்லாமை - அதன் ஸ்வரூபத்தையும், திரவியத் தன்மையையும் - இன்னெரு வஸ்துவின் தேசம் காலம் ஆகியவற்றின் விஷயத்திலே சொல்லப்படும். இந்த இருவித சொற்களும் - அஸ்தித்வம் நாஸ்தித்வம் - ஒரேசமயத்தில் இல்லாதப்படி -

பரம்பரையாக (படிப்படியாகச்) சொல்லப்படும். ஒருவஸ்துவின் அநிர் வசனீயத்வம் அதேபடி அதன் அஸ்தித்வம் நாஸ்தித்வம் அல்லது இரண்டுமே சேர்ந்துவிருப்பது - இவைகளை எடுத்துக் கொண்டால், மூன்று நான்குவிதமாக வஸ்துக்களின் இருப்பைச் சொல்லும்படி ஆகும். அதற்கு ராமானுஜரின் பதில் இது பைத்தியகாரனின் பாஷையாகும் - ஒரே சமயம் பல முறண்பாடுள்ள தர்மங்கள் சொல்வதாகும். ஆனால் ஒரே வஸ்துவின் பல அவஸ்தைகளை (நிலைகளைக்) குறிக்கிறபோது - அந்த வஸ்து ஒன்று தான் அதற்குப் பல நிலைகள் உள எனச் சொல்லலாம். இங்கே பாஸ்கர பக்ஷத்திற்கு எதிராகச் சொல்லப்பட்ட விஷயங்கள்-பிரு. சூத் 1-1-4 பேதா அபேதவாதிகளுக்கு உபயோகப்படுத்தப்பட்டது, இங்கே மீண்டும் நினைவு படுத்துவதற்கு உரியதக்கது).

காலம் வஸ்துக்களின் விசேஷணமே (தர்மமே). ஆகவே அதற்கு ஒரேசமயத்தில் அஸ்தித்வம், நாஸ்தித்வம் ஆகியவைகளைக் குறிக்காது; அவைகளை இங்கே நிருபிக்கப்படாமலிருப்பதையும் பரிஹரிக்கப்படவேண்டியதில்லை. காலத்தின் அஸ்தி (இருப்பு) நாஸ்தி (இல்லாமை) என்கிற வ்யவஹாரம் எதுபோல வ்யவஹாரமாக விருக்கிறதென்றால் ஜாத்யாதிகளுக்கு அஸ்தித்வமோ நாஸ்தித்வமோ - இவைகளை வ்யவஹரிப்பது போலவாகும். ஜாத்யாதிகள் திரவிய விசேஷணங்களே எனப்பார்க்கப்படுகின்றன - என்று நாம் ஏற்கனவே சொல்லியிருக்கிறோம் (ஜிக்ஞாஸாதி கரணம்).

மீண்டும் (பூர்வ பக்ஷிகளால்) கேள்வி கேட்கப்படும் - எவ்விதம் வேதங்களை அறிந்தவர்களால் ஒரே பிருஹ்மம் (ஏகமேவ பிருஹ்மம்) பலவஸ்துக்களாக ஆகும் सर्वात्मकत्वं — எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக ஆகும்? அதற்கு நாம் பதில் கூறுவது. ஸர்வ வஸ்துக்களும் சேதந அசேதந வஸ்துக்களும் பிருஹ்மத்திற்குச் சரீரமாவதால், அந்த பிருஹ்மமோ ஸர்வக்ஞ ஸர்வசக்தியை உடையதாயும், ஸத்யஸங்கல்பமுள்ளதாயும் புருஷோத்தமனுகவுமிருக்கிறது என்று சொல்வது யுக்தம் (சரியாகும்). சரீர சரீரியோர்களின் சம்பந்தம்.

அவைகளின் தர்மங்களின் வித்யாஸம் - அவைகளின் அத்யந்த வெவ்வேருன தன்மைகள் - வைலக்ஷண்யம் எல்லாம் இருப்பது - எல்லாம் சொல்லப்பட்டதாகும் - அது சரியாகும் (இதனுல் காலத்தின் அணுபரிமாணத்வம் மறுக்கப்படுகிறது, ராமானுஜ சித்தாந்தப்படி காலம் அசேதன வஸ்து. சரீரத்தின் லக்ஷணங்கள் ஆதாரத்வம் விதேயத்வம் சேஷத்வம் ஆகியவை யேற்கனவே சொல்லப்பட்டதாகும்).

மேலும் ஜீவர்களை ஆரம்பமாகக் கொண்ட ஆறு திரவியங்கள் ஒரே திரவியத்தின் மாறுதல்களைக் (பரியாயத்வ) கொண்ட லக்ஷணத்தை உடையதில்லை; ஆகவே அவைகளின் விஷயத்திலே, நாம் சொல்லுவதற்க்கில்லை-அவைகள் ஒன்ரு அல்லது பலவாகவிருக்கின்றதா? ஏனெனில் அவை ஒரே திரவியத்தைக் கொண்டதா அல்லது பலவற்றைக் கொண்டதா என்று. அதற்குப் பதில் சொல்லப்படும் - இந்த ஆறு திரவியங்களும் அவ்விதமாகவே (ஒன்ருகவோ அல்லது பலவாகவோ) இருக்கின்றன - தங்களுக்கு யேற்பட்ட மாறுதல்களினுலே அல்லது அவைகளின் தங்கள் தங்கள் ஆத்மாவினுலே யேற்பட்டவையாக விருக்கலாம் இந்த விஷயத்திலும் கூட, எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட அனநகாந்திகம் அந்த வஸ்துக்கள் ஒவ்வொன்றும் இன்னொன்றைவிட வேருக விருக்கின்றன என்பதற்கு விரோதமாக இருக்கின்றன. ஏனெனில் அவைகளுக்குள்ளே பரஸ்பரம் தாதாத்மியம் (ஒற்றுமை) இல்லாதபடியாலே. ஆகையால் ஜைனமதம் இங்கு கூட யுக்தமில்லை (சரியில்லை).

நாம் ஏற்கனவே ஆட்சேபித்த பிரகாரம் - பரமாணுக்கள் ஈஸ்வரனுல் அதிஷ்டிக்கப்படவில்லை. அத்தகைய பரமாணுக்களே ஜகத்காரணம் என்று சொல்பவர்கள் விஷயத்தில், நாம் ஆட்சேபித்தது - அதன் தோஷங்கள் எல்லாம் ஜைனமதத்திற்கு சொல்லப்படலாம்; அவைகளை மாற்ற முடியாது. (இதனுல் நையாயிக - வைசேஷிகனுல் பரமாணு

வாதத்தை எதிர்த்துச் சொன்ன மஹத்தீர்க்காதி கரணம் – சா. மீ (2-2-2). இங்கு காட்டப்படுகிறது. இதில் ஸ்வதந்த்ர பிரதானமும் காரணமாகாது என்பது கண்டிக்கப்பட்டது போல, அதிஷ்டாதாவாக ஈஸ்வரனை ஒப்புக் கொண்டாலும் அணுகாரணவாதம் செய்யும் நையாயிக வைசேஷிக மதங்கள் பொருந்தாது எனக்காட்டப்பட்டது. அதில் கூறின ஆட்சேப விஷயங்களும் இதற்குப் பொருந்தும்).

ஸி. ஸூ. एवं चाऽऽत्माकार्त्स्न्यम् (2-2-32)

ஏவம் சாத்மாகார்த்ஸ்ந்யம் (2-2-32)

ஏவம் - இந்தவிதமாக (தேஹத்தோடு ஒத்த பரிமாண முடையவனான ஜீவனை) ஒப்புக்கொண்டால், ஆத்மா கார்த்ஸ்ந்யம் - ஆத்மாவுக்கு நிறைவின்மையாகிற தோஷம் யேற்படும்.

(இங்கு சொல்லப்படுவது - தேகத்தை நியமனம் செய்வதற்கு ஜீவனுக்கு அந்த தேகத்தை ஒத்த பரிமாணம் (அளவு) ஜைனர்களால் ஒப்புக் கொள்ளப்படுகிறது. உதாரணமாக் யானையின் உடலில் பெரிய அளவுடன் இருக்கும் ஜீவன் - மறுபிறப்பில் கொசுவாக ஆகி-அதில் நுழையும் போது-ஆத்மஸ்வரூபத்திற்கு கொசுவின் தேகத்தில் முழுமையின்மை யேற்படும். இதேபோல் சிறிதான கொசுவின் தேகத்திலுள்ள ஆத்மா - மறுபிறப்பில் பெரியதான யானையின் உடலில் நுழையும்போது - முழுதேகத்தையும் வியாபித்திருக்கமாட்டாமையாகிற தோஷம் உண்டாகும். இவை ஜைனபக்ஷப்படி தோஷங்களே)

இந்தவிதமாக (ஏவம்) - ஜைனர்களின் அபிப்ராயம் (சித்தாந்தம்) ஒப்புக் கொள்ளப்பட்டால், ஆத்மாவிற்கு முழுமையின்மை (ஆகாரத்திலே) யேற்படும். உன் பக்ஷப்படி ஜீவனுக்கு தேக பரிமாணம் என்று ஒன்றும் இல்லை-அது தேகத்திற்கு தேகத்திற்கு வித்யாஸப்படும். எந்த தேகத்தில் உள்நுழைகிறதோ அதற்கு யேற்ப அளவு ஆத்மாவுக்கு

யேற்படும். அந்த தேகம் யானை முதலிய பெரிய பிராணிகளுக்குப் பெரியதான படியால் ஆத்மாவும் பெரியதாயும், எறும்பு முதலிய சிறிய பிராணிகளானுல் அதற்கு யேற்ப சிறிய சரீரமுள்ளதாயும் - அல்ப தேகத்தை வ்யாபிப்பதாலே. अकात्स्न्यं – ஆத்மாவிற்கு முழுவாக வியாப்தியில்லாதபடியால் முழுமையின்மை-யேற்படும். பரிபூர்ணமாகவில்லாமை (सन्तोऽवयवा इयन्त इति न गणयितुं शक्यन्ते - என்று அர்த்தம், अल्पदेहपरिमाणस्यासंख्यातप्रदेशत्वं विरुद्धश्च - ). யேற்படும்.

ஆகையால் ஆத்மாவிற்கு, தேகத்திற்குத் தகுந்தாற்ப் போல ஸங்கோச விகாஸம் யேற்படுவதாலே, அவஸ்தா வித்யாஸம் உண்டாவதாலே-இவைகளைக் குறிக்கிற பர்யாயத்வம் (மாறுதல்கள்) இருப்பதாலே, அதனுலே யேற்படும் விரோதம் இல்லை யென்று ஆகிவிடுகிறது என்று சொல்லப் படுமானுல் இந்த பதிலுக்கு சூத்ரக்காரரே அடுத்த சூத்ரத்தில் பதில் கூறுகிருர்.

ஸி. சூ. न च पर्यायादप्यविरोधो विकारादिभ्यः । (2 - 2 - 33)

ந ச பர்யாயாதப்யவிரோதா விகாராதிப்ய: (2-2-33)

பர்யாயாத் அபி - ஸங்கோச விகாஸங்களாகிற வெவ்வேறு நிலைகளை அடைகையைக் கொண்டும், நச அவிரோத விரோத மின்மையை ஸாதிக்கமுடியாது. விகாராதிப்ய :- விகாரம் அதனுல் வரும் அநித்யத்வம் முதலான தோஷங்கள் ஏற்படுவதால்.

(இங்கு ஜைனர்களின் பதில் கண்டிக்கப்படுகிறது. ஜீவனுடைய ஆத்மா ஸங்கோச விகாஸமடையுமானுல் அதன், ஸ்வரூபம் விகாரமுடையதாயிருப்பதும் அதனுல் யேற்படும் அநித்யப் அநித்யத்வமும் ஏற்படும்; ஜீவ ஸ்வரூபம், கடம் முதலான பொருள்களை ஒத்ததாகிவிடும். ஆகையால் மேலே சொல்லப்பட்ட தோஷங்கள் தவிர்க்க வொண்ணுததாகும்).

ஆத்மா ஸங்கோச விகாஸரூப அவஸ்தாந்தர மாறுதல்களை அடைவதானுல் ஏற்படும் விரோதத்தை பரிஹரிக்க

முடியாது—ஏனெனில் அதனால் ஸ்வரூபத்துக்கு உண்டாகும் தோஷங்கள் - மாறுதல்கள் — அதனால் அநித்யவம் இவை யேற்படுவதால், ஆத்மாவுக்கு கடம் முதலான உண்டாக்கப் பட்ட வஸ்துக்களின் தோஷங்களை அடைவதால் - அதற்குச் சமமான தோஷங்களை உடையதாகும்: இதனாலும் ஜைன மதம் தோஷமுள்ளது - (இங்கு சொல்லப்படுவது - ஜைனர் கள் ஜீவனை ஒரு திரவியமாகக் கருதி - அதனால் அதற்கு விகாரங்கள் - அளவின் பரிமாணத்திலும் (ஸ்வரூப ஸ்வ பாவங்களில்) யேற்படுவதாகச் சொல்லி-பிரதேசங்களுக்குத் தகுந்தாற்போல - தேகத்திற்குத் தேகம் - அவயவங்கள் (பரியாயங்கள்) உண்டாகின்றன என்கிறார்கள். இந்த அபிப்ராயம் கண்டிக்கப்படுகிறது. இங்கு இரண்டு தோஷங் கள் கூறப்படுகின்றன - மாறுதல்கள் ஆத்மாவிற்கும்; அநித்யத்வம் (இறப்பு முதலியவற்றால் உண்டாவது) இவைகளைத்தவிர, மற்ற தோஷங்களும் ஏற்படும்.

ஸி. சூத்ரம் अन्त्यावस्थितेश्चोभयनित्यत्वादविशेषः (2-2-34)

அந்த்யாவஸ்திதேஸ்சோபயநித்யத்வாத விசேஷ: (2-2-34)

அந்த்யாவஸ்தி தே:- (கடைசியில்) மோக்ஷநிலையில் ஆத்மாவுக்கு யேற்படும் பரிமாணம் இயல்வானதாகையால், உபய நித்யத்வாத் - (அந்த நிலையில்) ஆத்மாவும், அதன் பரிமாணமும் நித்யமாகையால், அவிசேஷ: - முன்னாலும் அப்பரிணாமத்தைக்காட்டிலும் வேறுபட்ட தேஹஸமான பரிமாணம் கூடாது.

ஜீவனுக்கு அந்தியம் (கடைசி நிலையில் - மோக்ஷ தசையில்) எந்த பரிமாணம் யேற்படுகிறதோ, அதற்குப் பிறகு வேறு ஒரு தேகத்தைப் பரிகிரஹிப்பது இல்லையாத லால் அந்த கடைசி நிலையில் ஆத்மாவும் மோக்ஷ அவஸ்தை யில் அதற்கு யேற்படும் பரிமாணம் இவை இரண்டும் இயற் கையானதாகவும் நித்யமானவை. ஆகையால் சம்சார தசை யிலும் ஆத்மாவுக்கு இயல்வான பரிமாணம் என்று ஒப்புக்

கொள்ளவேண்டுமே யொழிய, தேகத்தை ஒத்த பரி மாணத்தை ஒப்புக்கொள்வது பொருந்தாது. இப்படி முன்னுக்குப் பின்னுக முரணுகப்பேசும் ஜைனமதம் பொருந் தாது. अतो देह परिमाणत्वमात्मनो न स्यादि ति असङ्गतमेवेदमार्हतमतम्- அருகன் மதம் (ஜைன மதம்) பொருந்தாது.

இந்த தோஷங்களைத் தவிர - நமது சித்தாந்தப்படி - ஜைன மதம் வேதவிருத்தமானது. பூர்வ மீமாம்ஸையில் வேத விருத்தமான ஆகமங்களின் அப்ராமாண்யம் நிரு பிக்கப்பட்டிருப்பதாலே - அதன் கொள்கைகளும் நிரஸிக் கப்பட்டன. இவை இந்த அதிகரணத்தில் சொல்லப்படாத போனுலும், நிரஸிக்கப்பட்டுவிட்டன என எடுத்துக்கொள்ள வேண்டியது. தனித்து நிரஸிக்கப் படவில்லை என்று கண்டு கொள்வது.

அதிகரணம் பாசுபததூஷணம் பசுபத்யதி சரணம் (2-2-7)

ஸி. சூத். पत्युरसामञ्जस्यात् (2-2-35)

பத்யுரஸாமஞ்ஜஸ்யாத் (2-2-35)

பத்யு:- பசுபதியின் மதம் (ஆதரிக்கத்தக்கதல்ல); அஸாமஞ்ஜஸ்யாத் - பொருத்தமற்றதாலே - சரியில்லை.

வேதத்திற்குப் புறம்பானவர்களை பாஹ்யர்கள் எனக் கூறப்படுகின்றனர். சாங்கியனையும் - கணுதனையும் பௌத்த ஜைனர்களையும் ஒதுக்கித் தள்ளியது சரியே - ஸர்வக்ஞன் எனப்புகழ்பெறற் உருத்திரனுல் கூறப்பட்ட பாசுபதமதமும் இத்தகையதே — ஒதுக்கித் தள்ளப்பட வேண்டியதே.

கபில, காணுத, பௌத்த ஜைனர்களையும் ஒதுக்கித்தள்ள வேண்டியதே-வேதபாஹ்யர்கள் எனச்சொல்லப்படுவதாலே ஸ்ரேயஸை (மோக்ஷத்தை) விரும்புகிறவர்களாலும், வேத விருத்தமானதாலும் அநாதரணீயம் என்று சொல்வது

யுக்தம், இங்கே பசுபதிமதத்திலே வேத விரோதத்தினுலும், முரண்பாடுகளாலும் யேற்பட்டுள்ள அஸமஞ்ஜஸ்யத்வம் (பொருந்தாமை) என்பதால் அது ஆதரிக்கப்படத்தக்கதல்ல.

அந்த மதத்தைச்சேர்ந்தவர்கள் நான்குவிதம் - காபாலிகர்கள், காளமுகர்கள், பாசுபதர்கள், (சுத்த) சைவர்கள். இந்த எல்லோருமே வேதவிருத்தர்கள் - அவர்களுடைய தத்வபிரகிரியை கல்பிதமான ஐஹிக, ஆமுஷ்மிக (இகபர லோகங்களின் அனுபவங்கள்)-மோக்ஷம்-இவைகளுக்குள்ள ஸாதனங்களாகும். அவர்கள் சொல்வது-நிமித்த உபாதான காரணங்களுக்குள்ளே பேதம்; பசுபதியே நிமித்த காரணம் என்கிருர்கள். அவ்விதமே மோக்ஷஸாதனமும் கூட பசுபதியினுல் சொல்லப்பட்ட ஆறு முத்ரிகா (அடையாளங்கள்) தாரணம் (அணிந்து கொள்வதாகும்). (கல்பயந்தி - அஸத் பிரமாண மூலம் என்று சொல கிருர்கள். தத்வ - (நிமித்தம்) அனுஷ்டானத்திலும் வேறுபட்டவர்கள். (கண்டாபரணம் தரித்தவர்கள்; சிகையில் மணி அலங்காரம்; இத்யாதி)

ஆகவே காபாலுகர்கள் சொல்வது "முதிரிகா ஆறையும் எவர்கள் தத்வங்களாக அறிகிருர்களோ - எவர்கள் பரமுத்ரா (பகம் முதலியவை) மேலான அடையாளங்களை அறிகிருர்களோ, அவர்கள் பகாஸநஸ்தமாத்மாநம் - பகத்தை (பெண் குறியை) ஆஸனமாகக் கொண்ட ஆத்மாவைத் தியானிப்பவர்கள் நிர்வாணத்தை (மோக்ஷத்தை) அடைகிருர்கள். கண்டிகை-கழுத்தில் ருத்ராக்ஷ ஆபரணம், தங்கருசகம் (ஸ்வஸ்திக் ஆபரணம்-சிகையில்), காது குண்டலங்கள் சிகாமணி - பஸ்மம் (உடம்பிலே), யஞோப வீதம் ஆகிற ஆறு அடையாளங்களைச் சொல்கிருர்கள். எவர்கள் இந்த ஷட் (ஆறு) முத்ரிகைகளை தினமும் அணிகிருர்களோ-அவர்கள் மீண்டும் பிறப்பதில்லை - आभिः मुद्रितदेहस्तु न भूय इह जायते).

அவ்விதமே காளா முகர்கள் சொல்வது - மனிதனின் மண்டை ஓட்டில் (கபால பாத்ரத்தில்) சாப்பிடுவது (போஜனம்); சவ (பிணத்தின்) சாம்பல்களை உடம்பில்

தடவியும், சாப்பிட்டும்; தடியை வைத்திருப்பதும்; ஒரு பானையில் சாராயத்தை வைத்திருப்பதும், அந்த ஆதார தேவதையைப் பூஜிப்பது - ஐஹிக (இக) ஆமுஷ்மிக (பர லோகங்களில்) ஸகல பலன்களை அளிப்பதற்கு ஸாதனமாகும் என்று சொல்கிறார்கள். ருத்ராக்ஷ மாலையினால் கைமணிக் கட்டுக்களை அலங்கரிப்பது, ஜடா மகுடம், கபாலத்தை கைகளில் தரிப்பது, பஸ்மத்தினால் ஸ்நானம் இவைகள் சைவாகமங்களில் பிரஸித்தமானவை. அவ்விதமே சில பேர்களால் சில மதச்சடங்குகளின் (கிரியைகளின்) உதவியினால் விஜாதியர்களாக விருப்பினும் பிராம் மண்யத்தை அடையக்கூடும், உத்தம (சந்யாஸ) ஆஸ்ரம தர்மங்களையும் அடையக் கூடும் என்கிறார்கள்.

(दीक्षाप्रवेशमात्रेण ब्राह्मणो भवति क्षणात् । कापालं व्रत (मत)मास्थाय यतिः भवति मानवः என்கிறார்கள்.

அவர்களுக்கு நாம் பதில் சொல்கிறோம்:—पत्युरसामञ्जस्यात् பசுபதியின் மதம் ஆதரிக்கத் தக்கதல்ல; பொருத்தமற்றதாகையாலே. (பாஹ்யர்கள் எனப்படுபவர்கள் - வேதத்திற்குப் புறமானவர்கள்.)

नैकस्मिन्नसंभवात् - ஒரு பொருளில் முரண்பாடுள்ள அஸ்தித்வம் நாஸ்தித்வம் முதலான தன்மைகள் ஒரே காலத்தில் விருத்த தர்மங்களை ஒப்புக்கொள்ளும் ஜைனமதம் பொருந்தது. (இங்கு ராமானுஜர் அபிப்ராயப்படுவது - 1. வைதிக சடங்குகள் - சைவர்களால் ஒப்புக்கொள்ளப்படுபவை - ஒன்றுக் கொன்று முரண்பாடுள்ளவையாக விருக்கின்றன - அதனால் அந்த மதமும் தள்ளப்படவேண்டியது. 2. சில கருத்துக்கள் சாராயம் முதலியவை அசுசியாக விருக்கின்றன. 3. வேதங்களுக்குப் புறம்பானபடியாலும், பரமாத்மா நிமித்த காரணம் - உபாதான காரணமில்லை என்பதும் சரியில்லை 4. எல்லாவற்றிற்கும் மேலாக ஸ்ரீமந்நாராயணரே பர தெய்வம் - சிவன் பிரும்மா - யாருமில்லை.)

पत्यु: பசுபதியினுடைய மதம் ஆதரிக்கத் தகுந்தது அல்ல. எப்படி ? असामञ्जस्यात् - பொருத்தமில்லாத படியாலே - ஒரே வஸ்துவில் முரண்பாடுள்ள தர்மங்கள் இருப்பதாகச் சொல்லப்படுவதாலே. மேலும் வேதத்திற்கு விரோதமாகவுமிருக்கிறபடியால். முத்ரிகா ஷட்க தாரணம் ஆறு முத்ரைகளின் உண்மையை அறிந்தவனும் - பர முத்ரையில் தேர்ந்தவனும், भगासनस्थात्मध्यात् - பெண் குறியின் மேலிருப்பவனாக (ஆஸனம் மீது அமர்பவனாக) தன்னைத் தியானிப்பதால் மோக்ஷம் அடைகிறான். இதுவும்; सुराकुम्भस्थापन கள்ளை ஒரு பாத்ரத்தில் வைத்துக் கொள்வது ; तत्स्यदेवतार्चन - அதிலுள்ள தேவதையை ஆராதிப்பது , गूढाचार - மறைவான அனுஷ்டானங்கள்; ஸ்மசான (பிணச்சாம்பலில்) भस्मस्नान (குளிப்பது); प्रणवपूर्वाभिध्यानानि - பிரணவத்தை சதா ஜபிப்பது இம்மாதிரி தர்மங்கள் அன்யோன்யமாக விருத்தமாகவிருக்கின்றபடியால்-தள்ளப்படவேண்டியது. (கையில் ருத்ராக்ஷ கங்கணமும், தலையில் ஒற்றை முடிச்சுள்ள சடையும், மண்டை ஓடும், சாம்பலில் குளிப்பதும் (மோக்ஷ ஸாதனங்கள்) என்று சைவாகமங்கள் கூறுவது பிரஸித்தம். மேலும் அவர்கள் 'சொல்வது ஈசன் அனுமானத்தினால் ஸாதிக்கப்படுபவனே ஒழிய - உபநிஷத்துக்களால் அறியப்படுகிறவனல்ல. நிமித்த காரணம் மாத்திரம் என்று அவர்கள் சொல்வதால் - உபாதான காரணம் வேறுபட்டது - அதாவது பசுபதி நிமித்த காரணம் பிரகிருதியே உபாதான காரணம் என்பதால் - குயவனைப் போல பசுபதி மூலபிரகிருதியை வைத்து உலகைப் படைக்கிறான் - என்கிறார்கள். இதுவும் சரியில்லை). வேத விருத்தம் - வேதங்கள் கோஷிப்பது ஸ்ரீமந்நாராயணனைப் பரதெய்வமாக. அவர்கள் சொல்லும் தத்வங்கள் ஆசாரம் உபாஸனை இவை எல்லாம் வேத விருத்தம். வேதங்கள் கோஷிப்பது யாதெனில் ஸ்ரீமந்நாராயணனே பரப்பிரும்மம் - மேலான பரம்பொருள். அவரே ஜகத்தின் உபாதான நிமித்த காரணங்களாவர் என்று வேதம் கோஷிக்கிறது. தை. நா. 13 - नारायण परं ब्रह्म तत्वं नारायणः परः । नारायणो परो ज्योतिरात्मा नारायणः परः ॥ சா. உ. 6. 2. 3 तदैक्षत बहुस्यां प्रजायेयेति - அவர் சங்கல்பித்தார் -

நான் பலவாக ஆவேன்-பிறப்பேன். தை. ஆன. 6-सोऽकामयत बहुस्यां प्रजायेयेति - அவர் நினைத்தார் - நான் பலவாக ஆகக் கடவன் - ஸ்ருஷ்டிப்பேன்). தை. ஆ. तदात्मानं स्वयमकुरुत அவரே தன்னையே பலவாக ஆக்கிக் கொண்டார். (ஸ்ருஷ்டிக்கப்பட்ட பொருள்களாக); परब्रह्मभूतपुरुषोवेदनमेव (பகவானை உபாஸிப்பது தான் - च मोक्षसाधनमुपासनं वदन्ति அவரே உபாயம் (அடையப்படும் உபேயமும் அவரே ஆகும்) पुरुषं (புருஷனை-புருஷோத்தமனை (தை. ஆ. ந.)

## वेदान्तमेतं पुरुषं महान्तमादित्यवर्णं तमसस्तु पारे... तमेवं विद्वानमृत इह भवति नान्य: फन्था अयनाय विद्यते ।

நான் அந்த மஹா புருஷனை நன்கு அறிவேன்—ஆதித்ய வர்ணமுள்ளவரும் - தமஸ்ஸிற்கு அப்பால் இருப்பவரும்; அவரையே இவ்விதமாக வித்வான்கள் அறிந்து (இந்த உலகில்) பிறபாடு மோக்ஷ மடைகிறார்கள்; இது தவிர வேறு மோக்ஷ உபாயமில்லை - என்கிற சுருதி வசனங்களால் एकतां गता: सव वेदान्ता: (விசிஷ்டாத்வைத கொள்கையாம் இது) - அதாவது எலலா வேதாந்தங்கள் ஸ்ரீமந் நாராயணனைக் கோஷிப்பதால் - ஒரே நோக்க முடையவையாக அடைகின்றன - ஒரே பரம் பொருளை விமர்சிப்பதாக ஆகின்றன. இதுமாதிரி இன்னும் சில சுருதி வசனங்கள் கர்மங்களை கர்த்த வ்யங்களாகச் சொல்லும்; அதே மாதிரி சில வேதத்திறல் விதிக்கப்பட்ட வர்ணாஸ்ரம தர்மங்களுடன் சம்பந்தப்பட்ட யக்ஞாதிகளே - செய்யப்பட வேண்டியவை - பிருஹ்ம ஞானத்திற்கும் மோக்ஷத்திற்கும் இம்மாதிரியான் சுருதி வாக்யங்கள் - பிரு. உ. 6. 4. 12—

## तमेतं वेदानुवचनेन ब्राह्मणा विविदिषन्ति यज्ञेन दानेन तपसाऽनाशकेन... एतमेव प्रव्राजिनो लोकमिच्छन्त: प्रव्रजन्ति -

என்பதாகும். (பிராம்மணர்கள் அறிய இச்சிக்கிறார்கள் - அந்த மேலான பிருஹ்மத்தை (எவ்விதம்) வேதங்களை ஓதியும், யாக யக்ஞங்களாலும், தான தர்மங்களைச் செய்வதா

லும், தபஸ்ஸாகிற ஆலோசனை தியானம் உபவாஸம் இத்யாதிகளாலும், பகவானை அறிய ஆசைப்படுகிறார்கள். இந்த உலகத்தையே விரும்பும் ஸாதுக்கள் கால் நடையாக பூமி முழுதும் சஞ்சரிக்கிறார்கள்.

கேவலம் பரதத்வமாகிற ஸ்ரீமந் நாராயணனைப் ப்ரதிபாதிக்கும் வகையாக - ஸ்ரீமந் நாராயண பரதேவதையைப் பற்றிச் சொல்லும் ஸ்ரீமந் நாராயண அநுவாகம் (மஹோபநிஷத்), இன்னும் சில ஸித்த பரமான விதிகளையும் - சில உபாஸனைகளையும் சொல்வதாக, விதியுள்ள உபாஸனைகளுக்காக சுருதி வாக்யங்களால் காட்டப்படும் தெய்வங்களாக பிரஜாபதி - சிவன் - இந்திரன் - ஆகாச பிராணன் முதலான சப்தங்களும் ஸ்ரீமந் நாராயணனையே குறிக்கின்றன - அதாவது அவர்கள் நாராயணனுக்கு சரீரமாகவும் - அவரே ஆத்மாவாகவும் சொல்லப்படுகிறார். அவரே எல்லோருக்கும் அந்த ராத்மாவாகவும் - இருக்கிறார் என்று அர்த்தம் கொள்ள வேண்டியது. இந்த விஷயங்கள் முன்னமே சொல்லப்பட்டதாகும். (எங்கனமெனில்) சாரீ. 1-1-31 சாஸ்திர திருஷ்ட்யா தூபதேசோ வாமதேவவத் வாமதேவ ரிஷியைப் போல இங்கு இந்திரனின் உபதேசமும் சாஸ்திர திருஷ்டியாலே ஆகும்.

பரமாத்மாவின் லிங்கங்கள் அதிகமானதையாலே-இந்திரன் (பிராணன் - ஆகாச) என்று சொல்லப்படுபவன யாவும் பரமாத்மாவே என்றும் கூறப்பட்டது. ய: ஆத்மனி திஷ்டந் ஆத்ம நோऽந்தர: யமாத்மா நவேத யஸ்யாத்மா நவேத யஸ்யாத்மா சரீரம் யஆத்மா நமந்தரோயமயதி (பிரு. உ. 5-7-22) எவன் ஜீவாத்மாவில் நிற்கிறானோ...எவனை ஜீவாத்மா அறிய மாட்டானோ. எவனுக்கு ஜீவாத்மா சரீரமோ, எவன் ஜீவாத்மாவினுள் நுழைந்து நியமிக்கிறானோ - இத்யாதி வசனங்களாகும்). (இதேபடி ருத்ரனும் ஏகஏவ : ப்ரதம மாஸம் (அதர்வசிரஸ்) - நான் ஒருவனே முதலிலிருந்தேன் என்றான் - இம்மாதிரி வசனங்களாகும்) இதனால் பிரதிபாதிதம் நாராயணனே ஆகும். மஹோ. 1-1 एको ह वै नारायण आसीत्

न ब्रह्मा नेशान: என்று ஆரம்பித்து स एकाकी न रमेत நாராயணன் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஒருவரேயிருந்தார். பிரும்மாவுமில்லை - ஈசானனுமில்லை. (மேலும் சுருதி சொல்கிறது) - அவர் ஒருவரே இருந்ததால் விளையாட்டில் விருப்பமில்லை. லீலை செய்யவில்லை. (அதாவது யோகநித்ரையை அடைந்தார்) இந்தமாதிரி ஸ்ருடிஷ்பர வாக்யங்களிலே - ஜகத் ஸ்ருஷ்டியைச் செய்தவர் नारायणमेव - (நாராயணரே). இது ஸ்ருஷ்டி பரவாக்யங்களிலே ஸமான பிரகரணங்களிலே, அதாவது सदेव सोम्येदमग्रे आसीत् (ஸ்ருஷ்டிக்குமுன்பு ஸத் ஒன்று தான் இருந்தது-ஸோம்ய-என்று சொல்வதால்-ஸ்ரீமந் நாராயணனே ஸாதாரணமான சப்தங்களாகிற "ஸத்" என்றும், 'ஆத்மந்' என்றும் பிருஹ்மம் என்றும் (தேவதா) என்றும் சொல்லப் படுகிறார். ஆகையால் ஸ்ரீமந்நாராயணரே ஸத் பிருஹ்மாத் மாதி சப்தங்களால் பிரதிபாதிக்கப்படுகிறார்.

இந்த விஷயம் சாரி. 1-1-2 - जन्माद्यस्य यत: - எவரிடமிருந்து ஜகத்தின் ஸ்ருஷ்டி உண்டாயிற்றோ (காரிய ரூபமான இந்த உலகிற்கு ஜன்மாதி (ஆக்கல், அளித்தல் - அழித்தல் என்னும் காரியங்கள்; யத: எதனிடமிருந்து உண்டாகின்றனவோ — அதுவே பிருஹ்மம் என்று வேத வாக்யம் பிருஹ்ம லக்ஷணம் உரைத்தது. - என்பதில் ஸ்ரீமந்நாராயணரே பிரதி பாதிதம். ஆகையால் வேத விருத்த மான தத்வ - உபாஸந - அநுஷ்டானம் கொண்ட பாசுபத மதம் அங்கீகரிக்கப்படமாட்டாது. अनादरणीयमेव पशुपतिमतं - என்பதாகும்.

(இங்கு சொல்லப்படுவது - ஸத் - பிருஹமந் - ஆத்மந் இம்மாதிரி ஸாதாரண சப்தங்கள் - ஜகத் காரணமாக ஓதப் படுகின்றன; ஆயினும் அவை ஸ்ரீமந் நாராயணரையே குறிக்கின்றவையாகும். இதை ஜன்மாத்ய ஸ்ய யத: என்கிற அதிகரணம் (1-1-2) காட்டுகிறது. ராமானுஜர் தைத்ரிய உபநிஷத்தில் (3-1-1) கூறப்பட்ட பிருஹ்ம சப்தம் நாராயணரையே ஆத்மந் என்றும் கூறுகிறது. யத: எவரிடமிருந்து என்பது முக்ய பதமாகும். மேலான பிரபு

வான நாராயணர் - அகில ஹேய ப்ரத்யனீகன் - ஸமஸ்த கல்யாண குணாத்மகன்-ஸத்ய காமர் ஸத்ய ஸங்கல்ப-ஞான ஆனந்தாதி குணங்களை உடையவர் - ஸர்வக்ஞன் - ஸர் வாந்தராத்மா. காருணிகர் - அவரிடமிருந்து உலக ஸ்ருஷ்டி உண்டாயிற்று. அவரே காத்தல், அழித்தல் செய்பவர். ஆகையால் மேலான பரம் பிருஹ்மம் ஸ்ரீமந் நாராயணனே ஆகும் என்பதாம்).

ஸி. ஸூ. अधिष्ठानानुपपत्तेश्च (2-2-36)

அதிஷ்டாநாநுபபத்தேச்ச (2-2-36)

அதிஷ்ட்டாநாநுபபத்தே: ச - உபாதான காரணம் முதலானவற்றை அதிஷ்டித்து நிற்பது (சரீரமற்ற) சிவ னுக்குப் பொருந்தாத படியால் - பசுபதிமதம் பொருந்தாது.

(சைவ மதத்தில் அனுமானத்தைக் கொண்டு-உலகிற்கு சிவனை நிமித்த காரணமாக - குடம் முதலியவற்றை உண் டாக்கும் குயவனைப் போல - ஸாதிக்கிறார்கள். இப்படி ஸாதிக்கும்போது, திருஷ்டாந்தமான குயவன் உபாதான காரணமான மண்ணையும், ஸஹகாரி காரணமான தண்டம் சக்ரம் முதலியவற்றையும் அதிஷ்டிப்பது போல - சிவனும் உபாதானமான பிரகிருதி முதலானவற்றை அதிஷ்டித்து உலகைப் படைப்பதாகக் கொள்ள வேண்டும். அவர்கள் சொல்வது சிவனை தேகமில்லாதவனாகவும் கொள்வதாலே - தேகமுடைய குயவன் மண் முதலானவற்றை அதிஷ்டித்து நின்று, குடம் செய்வது போல, சிவன் பிரதானத்தை அதிஷ் டித்து நின்று உலகைப் படைப்பது எவ்வகையிலும் முடி யாது. சிவனுக்கு சரீரமுண்டு என்றால் அவயவமுடைய தான அவனுடைய சரீரத்தை நித்யம் என்று கொண்டு; அதனால் அவயவமுடைய உலகைப் படைப்பவனாக - ஒருவனை அநுமாநத்தினால் சாதிக்க அவசியமில்லை. இன்னும் பல தோஷங்கள் இருக்கின்றன - என்பதாகும்). நமக்கு சாஸ்திரமேவ பிரமாணம் - அநுமானத்தால்

ஈஸ்வரனை ஸாதிக்க விரும்பும் சைவ மதம் நமக்கு சரியாகாது.)

வேத பாஹ்யர்கள் அனுமானத்தின் உதவியைக் கொண்டு கேவலம் நிமித்த காரணம் ஈஸ்வரன் என்று கல்பிக்கிறார்கள். அவர்கள் குயவனை உதாரணமாகக் கொண்டு - எது பிரத்யக்ஷத்தினாலும் பார்க்கப்படுகிறதோ - அதற்குத் தகுந்தாற்போல நிர்வஹிக்கிறார்கள் ஜகத் உற்பத்தி விஷயத்திலே பசுபதிக்கு அதிஷ்டானம் (மேற் பார்த்து செய்வது) கர்த்தவ்யம் (செய்ய வேண்டியது) என்கிறார்கள். எவ்விதம் குயவர்கள் பானையை உண்டாக்கு வதில் நிமித்த காரணமாகி, களிமண்ணின் உதவிகொண்டு பானையைச் செய்கிறார்களோ - அதுபோல பசுபதி பிரதா னத்தை அதிஷ்டானம் செய்து உலகத்தை உண்டாக்குகிறார் என்று சொல்வது சரியாகாது - ஏனெனில் अशरीरत्वात् பசுபதிக்கு சரீரமில்லாதபடியால்; குலாலன் (குயவன்) பானையை உண்டாக்குவதற்கு சரீரமிருப்பதால் (அவயவங் களின் உதவி கொண்டு) - அதிஷ்டான சக்தியை பெற்று பானையை உண்டாக்கிறான். என்பது பிரத்யக்ஷ ஸித்தம். ஆனால் பசுபதி விஷயத்தில் - அவருக்கு (ஈஸ்வரருக்கு) சரீரத்வம் (சரீரத்தைக் கொண்டது) உண்டு என்பது அவர் களால் ஒப்புக் கொள்ளப்படவில்லை - மேலும் சரீரம் இருப் பினும் அது அவயவங்களுடன் கூடியதா இல்லையா - நித்யமா? - அநித்யமா - என்பது அவர்களால் ஒப்புக்கொள் ளப் படவில்லை. நாம் ஏற்கனவே "சாஸ்திரயோ நித்வாத்-" (1-1-3) என்கிற அதிகரணத்தில் - பிருஹ்மம் தான் ஜகத் யேக காரணம் - இது சாஸ்திர ஸித்தம் (அனுமானாதி பிரமாணங்கள் ஈஸ்வரனை நிரூபிக்க ஸாதனமாகாது. அவ்விதமாயின் பல தோஷங்கள் பிருஹ்மத்திற்கு ஏற்படும் என்று சொல்லியிருக்கிறோம். அந்த தோஷங்கள் பசுபதி மதத்திற்கு பிரஸங்கமாகும். (சங்கரர் இன்னொரு சூத்ரத் தைச் சொல்லி, சம்பந்தானுபபத்தேஸ்ச - என்கிறார். பசுபதி மதத்தை வேதமார்க்கத்திற்குப் புறம்பானவர்கள் என்று சொல்லிவிட்டு — தர்க்கரீதியாக ஆட்சேபிக்கிறார்:

அவர் சொல்வது - ஜீவன் அதிஷ்டாத்ரி; முதலில் ஏற்படும் தேகத்தை அதிஷ்டிக்கிறார் (மேற்பார்வை செய்கிறார்). தேகம் அவருடைய அதிஷ்டேயம். சரீரத்தின் உதவி கொண்டு காரியம் நடை பெறுகிறது. (குயவனைப்போல) சிவ ஆகமங்களிலும் சிவனுக்கு சரீரமில்லை என்று சொல்லப் பட்டிருப்பதால் - பிரதானத்தை அதிஷ்டிப்பது சரீரமின்றி இயலாது. அனுமான ஸித்த ஈஸ்வரன் ஜகத்காரணம் என்று சொல்வது பல தோஷங்களுக்கு இடமாகும் - சாஸ்திர யோநித்வாதி அதிகரணத்தில் விளக்கப்பட்டது) (பிருஹ்ம வித்யா 2-ம் பாகம் - பக்கம் 16-17 - அதிகரணம் III பார்க் கவும்)

உதாரணமாக, ஒருவனை படைப்பவனாக அனுமானத் தினால் ஸாதிக்க வேண்டிய அவசியமில்லை; முதலில் சரீரத் தோடு இருந்து கொண்டு படைத்தான் - அந்த சரீரம் அநித் யம் என்று கொண்டால் - அந்த சரீரத்தைப் படைப்பவன் வேறுயாருமில்லாமையால், இவன் அதைப் படைக்கும் போது வேறு ஒரு சரீரத்தைக் கொண்டவனாகவும்-இப்படியே முடிவில்லாமல் பல சரீரங்களைக் கொள்ளவேண்டியதாகை யால் அநவஸ்தா தோஷம் பிரஸங்கமாகும். இக்குறை வராமல் நாம் சாஸ்திர ஏக பிரமாணம் என்கிறோம் மற்றவர் களால் இக்குறை தவிர்க்கப்பட முடியாது என்பதாகும்).

ஸித். ஸூ. करणवच्चेन्न भोगादिभ्यः (2-2-37)

கரணவத்சேந் ந போகாதிப்ய: (2-2-37)

கரணவத்சேத் (சரீரமற்ற ஜீவன்) இந்திரியங்கள், சரீரம் முதலானவற்றை அதிஷ்டிப்பது போல (சரீரமற்ற பசுபதி யும் பிரகிருதியை அதிஷ்டிக்கலாமே) என்றால்; போகாதிப்ய:- (அப்போது ஜீவனுக்குப் போலே) புண்ய பாபகர்ம பல போகம் முதலியவையும் ஏற்படுமாகையால் - ; ந - (இந்த திருஷ்டாந்தம்) பொருந்தாது.

எப்படி போக்தாவான ஜீவன் - கரணகளேபரங்கள் கொண்ட சரீரம் இத்யாதி இல்லாமலே-இவைகளை அதிஷ்டிக்

கிறுன், மேற்பார்வைசெய்கிறுன்என்பதுகாணப்படுகிறதோ, அதே மாதிரி மஹேஸ்வரனுக்கும் சரீரமில்லாமலே பிரதானத்தை அதிஷ்டானம் செய்யக்கூடுமே என்று சொல்லலாமே-என்று நீ சொல்வாயாகில்; நாம்பதில் கூறுவது-அவ்விதமில்லை-ந; போகாதிப்ய:-(அப்போது ஜீவனுக்குப்போலே) புண்ய பாபகர்ம பலபோகம் முதலியவை பசுபதிக்கு ஏற்படும் - ஆகவே இந்த திருஷ்டாந்தம் சரியில்லை. புண்ய பாபரூப கர்மபலத்தை போகார்த்தம் - அனுபவிப்பதற்கு அதே பிரகாரம் புண்யபாபரூப அதிருஷ்டத்திஞல் ஏற்படுத்தப்பட்டதாகும்-அதுவே மேற்பார்வை செய்கிறது (அதிருஷ்டம்); அதைப்போல பசுபதி விஷயத்திலும் புண்ய பாபரூப அதிருஷ்டத்திஞல் - அந்த பலன்களை போகாதிகளை அனுபவிப்பதற்கு எல்லா வஸ்துக்களும் - பசுபதிக்கு ஏற்படுகிறது - அந்த வஸ்துக்கள் பலபோகமாக அனுபவமாக அவருக்கு ஸித்திக்கின்றன. ஆகையால் அதிஷ்டானத்திஞல் ஏற்படுவதில்லை. (नाधिष्ठानसंभव:) (பிரதானத்தை பசுபதி அத்யக்ஷிப்பது இல்லை என்பதாகும்) (இங்கு சொல்லப்படுவது - சரீரமில்லாத ஜீவன் சரீரத்தை அத்யக்ஷிக்கிறுன் - அதுபோல சரீரமில்லாத சிவன் பிரதானத்தை அதிஷ்டித்து ஜகத்காரணமாகிறுன் என்று ஒப்புக்கொண்டால், அது சரியாகாது. சுருத பிரகாசிகையில் சூக்ஷ்ம தேகமுள்ள ஜீவனே ஸ்தூல தேகத்தை அத்யக்ஷிக்கிறுன். சூக்ஷ்ம சரீரம் ஆத்மாவுடன் எப்போதும் சம்பந்தப்பட்டிருக்கிறது. அதஞல் அதற்கு ஸ்தூல சரீரத்தை அத்யக்ஷிப்பது சரியாகும். யாமுனுச்சாரியாரின் ஆகம பிரமாணம் இங்கு உதாஹரிக்கப்படுகிறது. வெளிச்சம் தன்னையும் பிற வஸ்துக்களையும் காட்டுகிறது; அதுபோல ஸ்தூல சரீரம் சூக்ஷ்ம சரீரத்துடனிருக்கும் ஜீவஞல் அத்யக்ஷிக்கப்பட்டு - செயல்படுகிறது - அது நிமித்த காரணமாகவும் அத்யக்ஷிப்பதற்கு பொருளாகவும் இருக்கிறது).

(மேலும் சொல்லப்படுவது - ஈசனுன பசுபதிக்கு புண்ய பாபகர்மானுபவத்திற்க்காகவே சரீராதிஷ்ட்டாநம் என்று கொள்ளவேண்டிவரும். ஈஸ்வரனுக்குப் புண்யபாப கர்மங்

களையும் அதனுல் உண்டாகும் சுகதுக்கங்கள் முதலான வற்றையும் ஒப்புக்கொள்ள முடியாததாகையால் பசுபதி மதத்தில் ஈஸ்வரன் பிரகிருதியை அதிஷ்டித்து நிற்பது எவ் வகையிலும் பொருந்தாது.)

ஸி. ஸூ. अन्तवत्त्वमसर्वज्ञता वा (2-2-38)

அந்தவத்தவமஸர்வஜ்ஞதா வா (2-2 38)

அந்த வத்த்வம் - (புண்ய பாபங்களை ஒப்புக் கொண் டால் ஜீவனைப் போல சிவனுக்கும்) ஸ்ருஷ்டிக்கப்பட்டு ஸம் ஹரிக்கப்படுகையால் உண்டாகும் அநித்யவமாகிற தாழ்வு (தோஷம்) அஸர் வஜ்ஞதா வா - எல்லாம் அறியாதவன் என்கிற தோஷம் யேற்படும். (ஆகையால் பசுபதி மதம் பொருந்தாது).

(ஜீவன் சரீரத்தை அதிஷ்டிக்கிருன் - சரீரத்தின் அதிஷ் டானத்தை சிவனுக்கு ஒப்புக் கொள்வதானுல், ஜீவனைப் போல புண்யபாபாநுகுணமாக சிவனுக்கு படைப்பு யேற் பட்டு, அழிக்கப்படும் அநித்யப் பொருளாகவும் புண்ய பாபங்களுக்கு யேற்ப அறிவின் யேற்றம் தாழ்வு ஏற்படும். பிறவாயாக்கை (சரீரத்தபை) பெரியோனுய் அனைவரையும் ஸம்ஹரிப்பவனுயிருந்து கொண்டு, தான் எவராலும் ஸம் ஹரிக்கப்படாதவனுகவும், ஸர்வக்ஞன் என்று பெயர் பெற்ற வனுன ஈஸ்வரனுக அபிமானிக்கப்படுகிற சிவனுக்கு இவை பொருந்தமாட்டா. ஆகவே மோக்ஷத்தை விரும்புகிறவர் களால் - சைவ மதம் அநாதரணீயம்).

"வா" சப்தார்த்தம் - சேர்க்கை பெற்றது (கூடிற்று) என்பதாகும். பசுபதிக்கு புண்ய பாபரூப அதிருஷ்டத்தி னுல் யேற்படும் கர்ம பல போகங்கள் - ஜீவனைப் போல ஆகும். (அதுவே அதிருஷ்டரூபமாக புண்ய பாப பலன் களை ஜீவனுக்கு அளிக்கிறது போகரூபமாக). அவ்விதமா னுல் ஜீவனைப் போல பசுபதிக்கும் அந்தவத்வம் (ஒரு முடிவு அழியக் கூடியது) உண்டாகும். ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்கள்

அவருக்கும் யேற்படும். ஆகவே ஸர்வக்ஞத்வம் அவருக்கு இருக்காது. ஆகையால் இந்த மதம் அநாதரணீயம் ஒப்புக் கொள்ளப்படமாட்டாது.

பூர். மீ. 1-1-3-ல் विरोधे त्वनपेक्षं स्यात् - வேதத்திற்கும் மற்றவைகளுக்கும் (ப்ரமாணங்களுக்கும்) விரோதம் ஏற்படு மாகில், வேத விருத்தமானது தள்ளப்படவேண்டியதாகும். - என்று சொல்லப்பட்டது. ஆகவே பசுபதி மதம் தள்ளப்பட வேண்டியதே. पत्युरसामञ्जस्यात् - (சா. மீ. 2-2-35) பசுபதியின் மதம் அநாதரணீயம் - பொருத்தமற்றதகையால் - என்கிற சூத்ரம் இந்த விஷயத்தை மீண்டும் வலியுறுத்துகிறது - பசு பதி மதம் வேத விருத்தமானபடியால் தள்ளப்படவேண்டி யதே. பாசுபத-சைவ ஆகமங்களில் சில விஷயங்கள் (தர்மங் கள்) வேதங்களுக்கு விருத்தமாக இல்லாதது போலத்தோன் றும்ஆயினும் பாசுபத மதம் வேதவிருத்தமே - ஏனெனின் ஜகத்காரண விஷயத்தில் நிமித்த உபாதான காரணபேதம் கல்பிக்கப்படுகிறபடியால்; பர (மேலான) அவர (கீழான) தத்வங்கள் மாறுபட்டு போகிறதாக கல்பிக்கப்படுகிறபடி யால்-அவர்களுடைய கல்பனைகள் எல்லாமே அஸம்ஞ்ஜஸம் (பொருத்தமற்றது). ஆகவே சூத்ரத்தில் (2-2-35) असामञ्जस्यात्- பொருத்த மற்றதே - என்று சொல்லவும் பட்டது - என்பது சரியாகும் (முன்னுக்குப்பின் முரண்பாடுகள் உள்ளபடி யாலேபொருத்த மற்றதே என்று சொல்வது சரியாகும்).

ஸ்ரீபாஞ்சராத்திர பிராமாண்யம்—

உத்பத்தியஸம்பாவாதிகரணம் (2-2-8)

பூ. சூத். उत्पत्त्यसंभवात् (2-2-39)

உத்பத்த்ய ஸம்பவாத் - (ஜீவனுக்குப் பாஞ்சராத்திர ஆகமத்தில் கூறப்படும்) உற்பத்தி ஒட்டாதாகையால் (இந்த ஆகமம் அபிரமாணமாகும்). (பூர்வபக்ஷம்)

(வேதவிருத்தபக்ஷங்களை - பாஹ்யர்களின் பக்ஷங்களை நிரஸிக்கும் இப்பாதத்தின் கடைசி அதிகரணம் - பாஞ்சராத்

ராதிகரணம். இதில் பகவான் நாராயணரால் நேரே அருளிச் செய்யப்பட்டதாய் - மோக்ஷ ஸாதனங்களை கூறுவதான பாஞ்சராத்ர ஆகமத்திலும் - சாங்கியம் முதலான அவைதிக சாஸ்திரங்களிற்போல அபிராமாண்யமுண்டு - என்று கூறும் அவைதிகபக்ஷம் யுக்திகளாலே நிரஸிக்கப்படுகிறது).

முதலில் கபிலர் மற்றவர்களால் போதிக்கப்படும் சில தத்வங்களை ஆராய்ந்த பிறகு சந்தேகம் பாஞ்சராத்திர ஆகமத்திற்கும் யேற்படுகிறது - என்கிற பூர்வபக்ஷம் சொல்லப்படுகிறது முதலில்; சிந்தாந்தத்தில் அது தள்ளப்பட்டு — பாஞ்சராத்திரம் வேத துல்ய பிரமாணமே என்று முடிவு காட்டப்படுகிறது. பாஞ்சராத்ரம் என்கிற சாஸ்திரம் பகவானல் மோக்ஷமடைவதற்க்காக உபதேசிக்கப்பட்டது. பரம நிஸ்ரேயஸ ஸாதனம் - என்று கூறப்பட்டு-அதன் பிரமாண சங்க்யை (சந்தேகம்) முதலில் எழுப்பப்பட்டு - அதன் பிறகு "அபிராமாண்யம்" என்கிற கருத்து தள்ளப்பட்டு பாஞ்சராத்ர சாஸ்திரம் வேத துல்ய பிரமாணமே என்று சித்தாந்தம் கூறபபடுகிறது. அதனுல் பூர்வபக்ஷம் (சங்கை எழுவதற்குக் காரணம்) கூறப்படுகிறது முதலில்.

**परमसंहिता** என்பதில் **परमकारणात् परब्रह्मभूतात् वासुदेवात् संकर्षणो नाम जीवो जायते; संकर्षणात् प्रद्युम्नसंज्ञं मनो जायते; तस्माद निरुद्धसंज्ञाऽहङ्कारो जायते—**

என்று கூறுகிறது பாகவதப்ரகிரியை. வாசுதேவரே பரம காரணம் - அவரே பரபிருஹ்மம். வாசுதேவனிடமிருந்து ஸங்கர்ஷணன் எனப்படும் ஜீவன் உண்டாகிறுன்; ஸங்கர்ஷனிடமிருந்து பிரத்யும்னன் - என்றும் பெயருடைய மனம் உண்டாகிறது. அந்த பிரத்யும்நனிடமிருந்து அநிருத்தன் என்னும் பெயருடைய அஹங்காரம் உண்டாகிறது. ஸங்கர்ஷணோ நாம ஜீவ: பிரத்யும்ந ஸம்ஜ்ஞம் மந:; அநிருத்தோ ஸம்ஜ்ஞோ அஹங்கார: என்று ஜீவ: மந: அஹங்கார: என்கிற விசேஷ்ய பதங்களால் ஜீவாதிகளை எடுத்து; ஸங்கர்

ஷ்ணோநாம - பிரத்யும்ந ஸம்ஜ்ஞம் - அநிருத்த ஸம்ஜ்ஞ:- என்று விசேஷண பதங்களால் அந்த ஜீவன் முதலானோர்க்கு உற்பத்தி சொல்லப்படுகிறது - இது மறுக்கவொண்ணாது. இவற்றில் ஜீவனுக்கு உற்பத்தியைக் கூறுவது - வேத விருத்தம்.

ஏனெனில் கடவல்லியில் 2-18ல் न जायते म्रियते वा विपश्चित् என்பதால் அறிவுடைய ஜீவன் பிறப்பதுமில்லை - இறப்பதுமில்லை - இதனாலும் பல சுருதிகளிலும், ஜீவன் அநாதி - உற்பத்தியற்றவன் என்று கூறப்பட்டதற்கு முரணாகும். இது மாதிரி சுருதி விருத்தம் - யுக்திக்கும் பொருந்தாதான ஜீவனுடைய உற்பத்தியைக் கூறுவதால் இப்பாஞ்சராத்ர ஆகமம் அபிராமாண்யம் - பிரமாணமாக மாட்டாது என்பது பூர்வபக்ஷம். (இங்கே கூறப்படும் பிரத்யும்ந ஸம்ஞம் - அநிருத்த ஸம்ஞம் - இந்த பதங்கள் விசேஷணத்வம்; ஜீவமநோ அஹங்கார பதங்களுக்கு விசேஷ்ய வாசித்வம். ஆகையால் ஜீவாதி உற்பத்தி சுருதி விரோதம் என்று பூர்வபக்ஷி கருதுகிறான். இங்கே சங்கர்ஷண பிரத்யும்ன - அபிமானி தேவதைகளைக் கூறியதாகும் - மநோ அஹங்காராதிகளுக்கு)

பூ. ஸூ. न च कर्तुः करणम् (2-2 40)

ந ச கர்த்து: கரணம் (2-2-40)

கர்த்து: - கர்த்தாவான ஜீவனிடமிருந்து கரணம் ச - கரணமான மனம் (உண்டாகிறது என்று கூறுவதும்) ந - பொருந்தாது. (இதுவும் பூர்வபக்ஷம் - "ஸங்கர்ஷணாத் பிரத்யும்ந ஸம்ஜ்ஞம் மந: ஜாயதே - ஸங்கர்ஷணன் எனப்படும் ஜீவனிடமிருந்து பிரத்யும்நன் எனப்படும் மனம் உண்டாகிறது" என்று கர்த்தாவான ஜீவனிடமிருந்து, கரணமான மனம் உண்டாகிறது என்று கூறுவதும்; ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மந: ஸர்வேந்திரியாணி ச - (மு. உ. 2-1-3) இப்பரமாத்மாவிடமிருந்தே பிராணனும் - மனமும் எல்லா இந்திரியங்களும் உண்டாகின்றன - என்று மனம்

பரமாத்மாவிடமிருந்து உண்டாவது-சுருதி ஸித்தமாதலால் இந்த வசனமும் முரண்பட்டதாகும். ஆக இப்படிபாஞ்ச ராத்ரம் ஸ்ருதி விருத்தமே யாகும் - பூர்வபக்ஷம்).

ஸங்கர்ஷணுத் பிரத்யும்ன ஸம்ஞம் மநோ ஜாயதே - என்று கர்த்தாவான ஜீவனிடமிருந்து - மனம் முதலிய கரணம் உற்பத்தியாகமாட்டாது (பரமத்மாவிடமிருந்தே ஆக முடியும் - சுருதிப்படி) மு. உ. 2-1-3ல் एतस्माज्जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च - பரமாத்மாவிடமிருந்தே பிராணன் மனம் எல்லா இந்திரியங்களும் உண்டாகின்றன - என்று பரமாத்மாவிடமிருந்து (பிருஹ்மணே) மனம் முதலியவை உண்டாகிறது என்று சுருதியில் சொல்லபட்டதற்கு முரண்பாடாகும்.

ஆகையால் சுருதி விருத்தார்த்த பிரதிபாதனத்திருல் பாஞ்சராத்ரதந்திரம் பிரமாண்யம் ஆகாது - என்று சொல்லப்படுமாகில் - நாம் அதற்குப் பதில் கூறுகிறேம்.

(இங்கே ஆட்சேபம் - அஹங்காரம் மனசிலிருந்தும் உற்பத்தி - என்பது சொல்லப்படுவது - பாஞ்சராத்ரப்படியாகும். இது வேத விருத்தம் - இதில் மனது சாத்விக அஹங்காரத்தில் உற்பத்தி எனக் கூறப்படுகிறது) (வேதப்படி).

பூர்வ பக்ஷியின் அபிப்ராயம் :—பாஞ்சராத்திர ஆகம விரோதமாகச் சொல்கிருன். 1) பாஞ்சராத்திர ஆகமம் இதில் நிரஸனம் செய்யப்படுகிறது - ஏனெனில் இந்த பாதம் (2-ம் பாதம் - 2ம் அத்யாயம்) முழுவதுமே வேத விருத்தமான சாங்கிய - பௌத்த - ஜைன - பக்ஷங்களைத் தூஷிப்பதால் - இந்த அதிகரணம் இந்த பாதத்தில் வருவதால் - பாஞ்ச ராத்திர ஆகமும் தூஷணமாகும். 2) எல்லா சூத்ரங்களும் பாஞ்ச ராத்திரத்தின் குறைகளைக் கூறுகின்றன, முதல் இரண்டு தான் என்பதில்லை - நான்கு சூத்ரங்களும் பாஞ்ச ராத்ர ஆகமத்தின் கண்டனமாகும். 3) சூத்ரம் 42 சொல்வதின் நோக்கம் - பஞ்சராத்திரம் வேதத்திற்கு விரோத

மானது - அதில் சில முரண்பாடுகள் உள்ளே உள. உதாரணமாக "விப்ரதிஷேதத்" - என்கிற பதத்தின் பிரயோகம் சூத்ரம் 2-2-9-ல் உள்ளதுடன் ஒப்பிட்டு பார்க்கவும். 4) சாண்டில்யர் சொல்வது - வேதத்தினுல் பலன் கிடைக்காதபடியால் பாஞ்சராத்ர ஆ்கமத்தைப் புகழ்ந்து பேசியதால். இது வேத தூஷணமாகும்.

இதற்கு ராமானுஜர் பதில் கூறுகிருர். 1) இந்த அதிகரணம் கண்டன அதிகரணம் தான் - யாரை? எவர்கள் இதை அபிராமண்யம் என்று சொல்கிருர்களோ - அவர்களே. 2) சூத்ரம் 41-ல் உள்ள வா சப்தம் புது மாதிரியான எண்ணத்தைச் சொல்கிறது. முந்தியிருக்கும் இரண்டு சூத்ரங்களின் ஆட்சேபங்களுக்கு பதில் ஆரம்பமாகிறது. 3) விப்ரதிஷே தத் என்கிற பதம் பிரகரணத்தை ஒட்டி அர்த்தம் செய்து கொள்ள வேண்டியது. 4) சாண்டில்யர் இந்த ஆகமத்தை வேதத்தைவிட எளிதில் புரியும்படி கண்டார் - இதனுல் அவர் வேதத்தை தூஷணம் செய்யவில்லை என்பதாம். (இங்கு நாம் கொடுத்த விளக்கம் - 2-ம் பாகத் பிருஹ்ம வித்யா என்பதில் முன்னுரையில் பார்க்கவும் - கோஷ்டீபுரம் ஸ்வாமி ராமானுஜாச்சாரியாரின் விஷயதானம் தைப் பார்க்கவும்).

இந்த பாஞ்சராத்திர அதிகரணம் பிரபல மதாசார்யர்களான சங்கரர் - வல்லபர் - ராமானுஜர் இவர்களின் கவனத்தைக் கவர்ந்து வெவ்வேருன அபிப்ராயத்தையும் சொல்லும்படி நேர்ந்திருக்கிறது. சங்கரரும் வல்லபரும் பாஞ்சராத்ர ஆகமம் தங்களுக்கு சம்மதம் என்றும்; அதில் சில அம்சங்கள் - உதாரணமாக ஜீவனின் உற்பத்தி அம்சத்தைத்தவிர) சரியில்லை என்பதாம். ராமானுஜரின் அபிப்ராயம் - இந்த உற்பத்தியை அவதாரம் என்றும் அதனுல் தோஷமில்லை என்கிருர். நிம்பர்கர் - மாத்வரும் இந்த அதிகரணம் சக்தியை ஜகத் ஏககாரணம் என்று சொல்பவர்களின் அபிப்ராயத்தைக் கண்டிக்கிறது என்கிருர்கள். "சங்கர்ஷணர்" என்கிறபதம் ஜீவனுக்கு விசேஷணமாகக் கூறப்படுகிறது என்று சொல்கிருர்கள் பாஞ்சராத்ர

ஆகமத்தை ஒப்புக் கொள்ளாதவர்கள். ராமானுஜரின் பதில் சங்கர்ஷணபதம் ஜீவனைக் குறிக்கிறது (அபிமானிதேவதை) ஏனெனில் அது பிருஹ்மத்தையே ஜீவனுக்கு அதிஷ்டாதாவாகக் கூறும்.) (ஜீவசரீர பிருஹ்மம்) ஸங்கர்ஷணன் பிரத்யும்னன் அநிருத்தன் என்னும் மூன்று வ்யூஹமூர்த்திகளும் முறையே ஜீவன் மனம் அஹங்காரம் என்னும் தத்வங்களை அதிஷ்டித்து நிற்கும் அபிமான தேவதைகளாகையால், ஸங்கர்ஷணாதி பதங்களை ஜீவன் முதலான பதங்களோடு ஒரே வேற்றுமையில் ஸமாநாதி கரணத்தினால் இந்த சாஸ்திரத்தைச் சேர்ந்த பரம ஸம்ஹிதா வசனங்கள் படிக்கின்றன. ஆகையால் அந்த வசனங்களைக் கொண்டு ஜீவன் முதலானோர்க்கு உற்பத்தி கூறப்படுவதாகச் சொன்னது பொருந்தாது. பிராணன் ஆகாசம் இவைகளை அதிஷ்டித்து நிற்கும் பரம்பொருளை பிராணாகாசாதி (பிராண சரீர - ஆகாச சரீர) சப்தங்களால் சுருதி குறிப்பதுபோல, இந்த பாஞ்சராத்ர சாஸ்திரமும் அதிஷ்டிக்கப்படுபவர்களைச் சொல்லும் ஜீவன் முதலான சப்தங்களால் அதிஷ்டாதாக்களான (அபிமானி தேவதைகளான) சங்கர்ஷணன் முதலானோரைப் பேசுகிறது என்று அர்த்தம் கொள்ளவேண்டியது. ஜீவ: ஜாயதே என்றவுடன் ஜீவாத் பிரத்யும்ந ஸமஜ்ஞும் மந: என்று கூறாமல், ஸங்கர்ஷணாத் பிரத்யும்ந: ஸமஜ்ஞும் மந: என்று கூறியிருப்பதாலே - சங்கர்ஷணபதமே விசேஷ்யபதம் எனத்தெளிவு. ஆகவே பாஞ்சராத்ரம் வேததுல்ய பிரமாணமே - என்பது சித்தாந்தம்.

இன்னொரு முக்யமான கருத்து - சாங்கிய மதத்தில் கூறப்பட்ட இருபத்தைந்து தத்வங்களையும், யோகமதத்தில் சொல்லப்பட்ட அஷ்டாங்க (யமம், நியமம் இத்யாதி யோகத்தையும் வேதபூர்வபாகத்தில் சொல்லப்பட்ட கர்மாக்களையும் ஒப்புக்கொண்டு, அந்த தத்வங்கள் பிருஹ்மாத்மகம் என்றும் அஷ்டாங்கயோகம் பிருஹ்மோபாஸந வழியென்றும் - அக்கர்மாக்கள் பிருஹ்மத்தை ஆராதனை செய்வதற்கு யேற்பட்டது - பிருஹ்மஸ்வரூபத்தை சொல்லும் வேதாந்த பாகங்களான ஆரண்யங்கள் கூறுகின்றன. இதனாலே இந்த

அம்சங்களைக் கொண்ட பாஞ்ராத்ரம் ஒவ்வொரு அம்சத்தில் மாத்திரம் பிரமாணம் என்று அவைகளைப் போல இராமல், வேதவேதாந்தங்களும் பாஞ்சராத்ரமும் முழுவதுமே பிரமாணம் ஆகும். அதனாலேயே ஸாங்க்ய யோக, பாசுபத பாஞ்சராத்ரங்களை பௌருஷேயத்வம் இருப்பினும்-இதனால் அடியோடு அழித்து விடக்கூடாது. வ்யாஸரின் கருத்து இது தான் என்பது - ஸாங்க்யம் யோகம் ... ந ஹந்த வ்யாநி ஹேதுபி என்கிற வசனம் இதையே சொல்லும். அப்பிரஹ்மாத்மக தத்வங்களே மறுக்கப்படுகின்றன. ஆனால் தத்வங்களே மறுக்கப்படவில்லை. வேதத்தை ஒட்டியே பாஞ்சராத்ரம் இருக்கிறபடியால், அது முழுவதுமே பிரமாணம் என்பதாம் சித்தாந்தமாகும்).

சூத். विज्ञानादिभावे वा तदप्रतिषेधः (2-2-41)
விக்ஞாநாதிபாவே வா ததப்ரதிஷேத: (2-2-41)

விஜ்ஞாநாதிபாவே வா - (ஸங்கர்ஷணன் முதலானோர்) சிறந்த ஞான ஸ்வரூபமாய், ஆதியான பரம் பொருளே என்று கொண்டிருக்கையில் ததப்ரதிஷேத: - பாஞ்சராத்ராகமத்தின் பிரமாண்யம் தள்ளப்படாததாகும்.

"வா" என்கிற சப்தத்தினால் பூர்வபக்ஷியின் கருத்து சரியில்லை என்று ஆட்சேபிக்கப்படுகிறது. (ஆகமபிராமாண்யத்தில் சொல்லிய பிரகாரம், சித்தாந்த சூத்ரம் ஆரம்பமாகிறது). ஆதிபதம் - கர்மதாரயத்தைக் குறிக்கும். அதுபோல விக்ஞானபதம் விசிஷ்டஞான குணகபரம், ஆதி பதத்தால் சக்தியாதி குணாந்தர விசிஷ்ட தயாதத் வஸ்து ஞாப்யதே। தேந ஷாட்குண்ய விசிஷ்டம் பகவச் சப்த வாச்யம் வாஸுதேவாக்யம் பரம் விக்ஞானாதி। ததாஹபரம் ப்ருஹ்மேதி; அத்ரபரசப்தோ வாசுதேவ விவக்ஷயா ததா ச சங்கர்ஷணாதீநாம் பரவாஸுதேவ பாவ:; ந து ஜீவமனோஹங்காராபேதோऽர்த்த இதி ஸதி ந வாக்யஸ்யாப்ராமாண்யமிதி சூத்ரார்த்தம் (உத்தமூர்ஸ்வாமி).

விக்ஞான குணகத்வாத் - விக்ஞானாதி ஸங்கர்ஷண: ஸங்கர்ஷண சப்தார்த்தம் - விக்ஞான குணக ஸம்ஹர்த்ரு

பரபிருஹ்மபாவே ஸதி - இதிவிவக்ஷிதார்த்தம். விக்ஞானத்வம் என்கிற காரணத்திஞலே உபநிஷத் பிரஸித்தமான பிருஹ்மம் - சித் அசித் வஸ்துக்களைவிட வேருனதும், விசிஷ்ட ஞானகமேவ காரணம்யத் - தத் பிருஹ்மேதி அர்த்தாந்தரம். ஆகவே ஸங்கர்ஷணுதி மூர்த்திகளும் காரண பூதம் அப்ராகிருததயா விக்ஞான ஸ்வரூபம் ச யத் வாஸுதேவ ரூபம் - தத்கார்யதயா ததபேதே இதி அந்யார்த்த: - ஆகவே ஸங்கர்ஷணுதிருபேண பிருஹ்மணே பாவே என்பதாகும். ஜீவாதிபதம்—

न विशेषणानि किंतु जीवादिपदान्येव संकर्षणादि विशेषणानि संकर्षणादिति उपरिप्रयोगात् अत:

ஜிவாதிபதம் ஜீவாத்யபிமாநிபரமிதீதமப்ய த்ரோச்யதே। பூர்வபக்ஷியின் அபிப்ராயத்தை கண்டிப்பதாக - நித்ய நிர் விஹார பிருஹ்மபரத்வே - என்று சொல்லி சங்கையை பரிஹரிப்பதற்காக வா சப்த பிரயோகம்.)

இன்னெரு கருத்து உள்ளது - (பாஞ்சராத்ரம்) மந்திர ஸித்தாந்தம், ஆகமஸித்தாந்தம், தந்திர ஸித்தாந்தம் தந்திராந்தர ஸித்தாந்தம் - என நான்கு விஷயங்களை உபாஸன விஷயங்களாகக் கொண்டது இந்த ஆகமம் எனப்படுவதாம்).

விக்ஞானம் எதுவோ - எந்த விக்ஞானம் பரபிருஹ்மமோ அதாவது வாசுதேவரோ - எவர் எல்லாவற்றிற்கும் ஆதிகாரணமோ - (பாவபிரகாசிகைப்படி - பக்ஷிப்பவர் - ஸம்ஹாரம் முதலியவைகளைச் செய்பவர் - ஆதிகர்த்தா - விக்ஞாமுதி ஸங்கர்ஷணர்); அதாவது பரபிருஹ்மமாகும். ஸங்கர்ஷண பிரத்யும்ந அநிருத்த முதலயவர்களுக்கும் கூட பரபிருஹ்மபாவமே - (பரசப்தத்திஞல் வாசுதேவரே என்பதாகும்). ஆகையால் இந்த தத்வத்தை பிரதிபாதிக்கும் சாஸ்திரமாகிற பாஞ்சராத்திரம் பிராமாண்யமே ஆகும். அதற்கு பிரமாண்யத்வத்தை மறுப்பது சரியாகாது - ஆதி

பதம் ஸம்ஹாரம் செய்யும் ஸங்கர்ஷணரைக் குறித்தாலும் அவரே ஆதிகாரணமாகும் என்பதாகும்).

ஸ்ரீபாஷ்யம்

இதுவரை என்ன சொல்லப்பட்டது என்றால் - பாகவத பிரகிரியை எனப்படும் பாஞ்சராத்ர ஆகமத்தை முற்றிலும் அறியாதவர்கள் - அவர்கள் ஆட்சேபிப்பது - எது ஜீவோத் பத்தியைச் சொல்கிறதோ - அது வேத விருத்தமானது - என்கிற பக்ஷத்தை ஆதரிப்பவர்கள். (சங்கரர் அவ்விதம் அபிப்ராயப்படுகிறார்.) அவர்கள் சொல்வது - வாசுதேவர் என்று எவர் சொல்லப்படுகிறாரோ - அவரே பரபிருஹ்மம்; அவர் தன்னை வந்து அடிபணியும் பக்தர்களை காக்கும் பக்தவத்ஸலர்; அவரே தனது இச்சையால் நான்கு வடிவங் களாக - பக்தர்களின் அபிலாஷைகளைப் பூர்த்தி செய்வதற்க் காக ஆக்கிக் கொள்கிறார்.

இம்மாதிரி பௌஷ்கர ஸம்ஹிதையில் சொல்லப்பட் டிருக்கிறது—

कर्तव्यत्वेन वै यत्र चातुरात्म्यमुपास्यते । क्रमागतैः स्वसंज्ञाभिः ब्राह्मणैरागमं तु तत्—

எங்கே வாசுதேவ ஸங்கர்ஷண பிரத்யும்ந அநிருத்த - ஆகிற நான்கு ரூபமுள்ள ஆத்மா (பரபிருஹ்மம்) கர்த்தவ்யமாக பிராம்மணர்களால் உபாஸிக்கப்படுகிறதோ, அவர்களுடைய ரூபங்களை வரிசைப்படி உபாஸிக்கிறார்களோ - அந்த சாஸ்த்ரம் தான் ஆகமம் எனப்படும். (ஆகமம் என்பதற்கு ஸ்வரூபம் கொடுக்கப்படுகிறது). இப்பேற்பட்ட நான்கு வித (ரூப) பரமாத்மாவை உபாஸனம் செய்வது வாசு தேவ ராகிய பரபிருஹ்மோபாஸனமாகும் - என்று ஸாத்வத ஸம்ஹிதையில் சொல்லப்பட்டதாகும்.

ब्राह्मणानां हि सद्ब्रह्म वासुदेवाख्ययाजिनाम् ।
विवेकदं परं शास्त्रं ब्रह्मोपनिषदं महत् ॥

எவர்களுக்கு - எந்த பிராம்மணர்களுக்கு - எவர்கள் ஸத் என்றும் பிருஹ்மம் என்றும், வாசுதேவர் என்றும் உபாஸிக் கிறுர்களோ அவர்களுக்கு இந்த பாஞ்சராத்ரமே மேலான சாஸ்திரம், விவேகத்தை உண்டுபண்ணுவது, மஹத்தான பிரும்மோப நிஷத்தாகும் (இங்கே சுருத பிரகாசிகையில் சொல்லப்படுகிறது - பௌஷ்கர ஸம்ஹிதை பிரகரணத்திலே குறிக்கப்பட்ட சங்கர்ஷண - பிரத்யும்ந அநிருத்த - ஆகிய அபிமானி தேவதைகளாகும்).

அந்த மேலான பரபிருஹ்மமாகிற வாசுதேவரே அவ ருடைய மேலான ஷாட் (ஆறு) குண்ய (குணங்களோடு கூடிய) ஸம்பூர்ண வபு. (முழுதும் நிரம்பின சரீரம்) - அதுவே சூக்ஷ்ம (பிரிவாகிற) வ்யூஹங்களாகவும், விபவங்க ளாகவும் (அவதாரங்களாகவும்) - பேதமாகவும் பின்னமாக வும் காட்டப்பட்டும் - எந்த எந்த உபாஸகர்கள் எப்படி விரும்புகிறுர்களோ - அந்த அதிகாரிகளின் யோக்யதைக்கு ஏற்ப, ஞானம் முதிர்ந்த ஆராதனையாகிற உபாஸனு கர்மங்க ளால் ஆராதிக்கப்பட்டு நன்ருக அடையப்படுகிறுர். விபவ அவதாரங்களாகிற ராம, கிருஷ்ண அவதாரங்களைக் குறிக் கும்; இந்த தேவதைகளை அர்ச்சித்தும்; வ்யூஹம் எனப்படும் வாசுதேவ - ஸங்கர்ஷண-பிரத்யும்ந-அநிருத்த என்கிற அவ தாரங்களையும் (பிரிவுகளையும்) (இரட்டை கூறுகிற குணங் கள் கொண்டுள்ள நான்கு மூர்த்தி ரூபங்கள்); இவர்களை அர்ச் சித்தும் (ஆராதனை செய்தும்); எல்லாவற்றிற்கும் மேலான சூக்ஷ்ம ரூபமுள்ள வாஸுதேவ மூர்த்தியை ஷாட்குண்ய பரி பூர்ணன்-ஞான பலர் ஐஸ்வர்ய கிரியா சக்திதேஜஸ் ஆகிற ஆறு குணங்கள் நிரம்பியவர்) அடைகிறுர்கள் - என்று இதில் சொல்லப்படுகிறது - (அவர்கள் சொல்கிறுர்கள்).

**विभवार्चनाद्व्यूहं प्राप्यव्यूहार्चनात् परंब्रह्मवासुदेवाख्यं सूक्ष्मं प्राप्यते इति वदन्ति**

விபவம் என்கிற பெயருடன் கூடியது - ராம-கிருஷ்ணுதி அவதாரங்கள். வ்யூஹம் - வாசுதேவ ஸங்கர்ஷண -

பிரத்யும்ந - அநிருத்த ஆகிற நான்கு ரூபமுள்ள சதுர் வ்யூஹம் (பிரிவுகள்). ஸூக்ஷ்மம் என்பதோ கேவலம் ஷாட் குண்ய விக்ரஹமான வாஸுதேவர் - பர ப்ருஹ்மமே யாகும்.

பௌஷ்கர ஸம்ஹிதையில் - எப்படி சொல்லப்பட்டதோ-

**यस्मात् सम्यक्परं ब्रह्म वासुदेवाख्यमव्ययम् । अस्मादवाप्यते शास्त्रात् ज्ञानपूर्वेण कर्मणा—**

எந்தக் காரணத்தினுல் எல்லாவற்றிற்கும் மேலான பர பிருஹ்மமாகிற வாசுதேவர் - அழிவில்லாதவர் - அடையப் படுகிருரோ-அதே காரணத்திஞல் இந்த சாஸ்திரத்திலிருந்து அடையப்படுகிறது - ஞானம் முதிர்ந்த கர்மத்திஞல் - யேற்படும் உபாஸனை என்கிற பக்தியிஞல். ஆகையால் ஸங்கர்ஷணுதிகளாகிற நான்கு வ்யூஹங்களும் பர பிருஹ் மத்தின் ஸ்வரூபங்களாகும் - ஸ்வ இச்சையிஞல் (அவதாரங் களைப் போல) ஏற்பட்ட விக்ரஹ (மூர்த்தி) ரூபங்களாகும். (ஜீவனைப் போல கர்ம வச்ய பிறப்பல்ல - உற்பத்தி அல்ல) பக்தர்களை அநுக்ரஹிக்க அவர்கள் இச்சைப்படி எடுத்துக் கொள்ளப்பட்ட மூர்த்திகளாகும். உதா. நா. **अजायमानो बहुदा विजायते** - பிறப்பிலி (பிறப்பில்லாத ஸ்ரீமந் நாராயணரே - பல பிறவிகளாக (அவதாரங்களாக)-ஸ்வ இச்சையால் பிறப்பை அடைகிருர் என்பது சுருதிஸித்தம்; ஆஸ்ரித வாத்ஸல்யரான பகவான் பக்தர்களின் நிமித்தம் ஸ்வய இச்சையிஞல் மூர்த்தி (விக்ரஹ) ரூபத்தை-ஜன்மத்தை (பிறப்பை) ஸ்வய இச்சை யால் எடுக்கிருர் - என்று காட்டப்படுவதால் - அந்த விபவ வியூஹ அவதாரங்களை விளக்கும் சாஸ்திரமாகிற பாஞ்சராத் திரம் அபிரமாண்யமாகாது - அதன் பிராமண்யத்தைக் குறைப்பதற்கு விரோதமான விஷயம் ஒன்றுமில்லை என்பது தேறும். உத்தமூர் ஸ்வாமி—

**न केवलश्रुतिविरोधाभावः तदानुगुण्यमेवास्तीति दर्शयितुम् अजायमान इत्यादि ।**

அந்த சாஸ்திரத்தில் ஸங்கர்ஷண - பிரத்யும் ந - அநிருத்த மூர்த்த ருபங்கள் - என்கிற ஸ்வய இச்சையினுல் எடுத்துக் கொள்ளப்பட்ட (அதாவது அவதாரம்) மூர்த்தி ரூபங்கள் - ஜீவன்-மனஸ் அஹங்கார தத்வங்ககளை அதிஷ் டிக்கும் அபிமானி தேவதைகளாகச் சொல்லப்படுவதில்-அவர் களுக்கு ஜீவாதி சப்தங்களின் பிரயோகம் வேத விருத்தமல்ல- சரியாகும் (எது போல) - எவ்விதம் ஆகாாம் பிராணன் முதலிய சப்தங்கள் பரபிருஹ்மத்தைக் குறிக்குமோ அது போல (ஆகாசசரீர பரமாத்மா - பிராண சரீர பரமாத்மா-என் பதைப் போல) எல்லாமே வாசுதேவனையே குறிக்கும் என்ப தாகும்.

(இங்கு கூறப்படுவது சங்கர்ஷணுதி நான்கு வ்யூஹ ரூபங்களையும் - ராமகிருஷ்ண விபவ அவதாரங்களையும் அந்தர்யாமி ரூபங்களையும் - அர்ச்சா ரூபங்களையும் - தன் இச்சையால் ஏடுப்பதாக இந்த சாஸ்திரத்தில் கூறப்படுவ தால் - அந்த ஸங்கர்ஷணுதிகளுக்கு பிறப்பைக் கூறும் இநத சாஸ்திரத்திறகு பிரமாண்யத்தைத் தள்ளுவது பொருந் தாது. ஸங்கர்ஷணன் பிரத்யும்நன் அநிருததன் ஜீவன் மனம், அஹங்காரம் என்னும் தத்வங்களை அதிஷ்டித்து - அபிமானி தேவதைகளாகச் சொல்லப்படும் ஸங்கர்ஷணுதி பதங்களை ஜீவன் முதலான பதங்களோடு ஒரே வேற்றுமை யில (காம தா௱ய - ஸமானுதிகரணம்) இந்த சாஸ்திரத்தைச் சேர்ந்த பரம ஸம்ஹிதைகள படிககினறன. जीवादि समानादि- करण्यनिर्वाहमाह அதனுல ஓரிடத்தில் ஸங்கர்ஷணே நாம ஜீவோ: ஜாயமதே எனறு சொலலபபட்ட அந்த வசனங்களைக் கொண்டு ஜீவன் முதலானோர்க்கு உற்பத்தி கூறப்படுவது சரியில்லை. விசேஷண விசேஷயங்களை மாற்றி - ஜீவனுக்கு அபிமானியான ஸ்ங்கர்ஷணன் பரபிருஹ்மத்தின் வ்யூஹ மூர்த்திகளாகவே குறித்திருப்பதை அனுஸரித்து, ஜீவனுக்கு அபிமானியாகிற ஸங்கர்ஷணன் பிறக்கிருன் என்றே தாத் பர்யம் கொள்ளவேண்டும. மேலும் ஸங்கர்ஷணுத்ப்ரத்யும் ந ஸமஜ்ஞும் மந: என்று கூறப்பட்டது. (ஜீவாத்ப்ரத்யும் நஸமஜ்ஞும் மந: என்று கூறப்படவிலலை. சங்கர்ஷணபதமே

விசேஷ்யபதமாகும். ஆகவே பாஞ்சராத்ரம் பிரமாண்யமே ஆகும்.

ஸி. ஸூ. विप्रतिषेधाच्च (2-2-42)

விப்ரதிஷேதாத்ச (2-2-42)

விப்ரதிஷேதாத்ச (இந்த பாஞ்சராத்ர சாஸ்திரத்திலே) ஜீவோத்பத்திவாதம்) மறுக்கப்பட்டிருக்கையாலும் (இதன் பிராமாண்யம் தள்ளப்படாததேயாகும்.) அதாவது ஒப்புக் கொள்ள வேண்டியதாகும். (ஸித்தாந்தம்)

விப்ரதிஷித்தா - என்றால் ஜீவோத்பத்தி. அந்த பாஞ்சராத்ர தந்திரத்திலே (சொல்லப்பட்டும்) மறுக்கப்பட்டிருக்கிறது. பரம ஸம்ஹிதையில் (முற்கூறியபடி ஸங்கர்ஷணோ நாம ஜாயதே என்றுபடிக்கப்பட்டதோ - அதே பரம ஸம்ஹிதையில் சொல்லப்பட்டது.

अचेतनापरार्था च नित्या संततविक्रिया, त्रिगुणाकर्मिणां क्षेत्रं प्रकृतेः रूपमुच्यते । व्याप्तिरूपेण संबन्धस्तस्याश्च पुरुषस्य च । सह्यनादिरनन्तश्च परमार्थेन निश्चितः ।

அசேதனத்தின் ஸ்வரூபம் (பிரகிருதியின் ஸ்வரூபம்) பிறர்களுக்காக விருப்பது - அதாவது ஜீவனின் உபயோகத்திற்க்காக விருப்பது, அநித்யம் ஸதா மாறிக்கொண்டிருப்பது முக்குணங்களால் உண்டாக்கப்பட்டது; கர்ம பந்தத்தினால் கட்டப்பட்ட ஜீவர்களுக்கு க்ஷேத்ரம் (விளை நிலமாக) விருப்பது. அதற்கும் புருஷனுகிற ஜீவனுக்கும் - சம்பந்தம் வ்யாப்தியாகும் (பரவியிருப்பதாகும்) புருஷனே அநாதி - அநந்தன் (முடிவில்லாதவன்); அவன் பரமார்த்தன் (உண்மையான ஸ்வரூபம்) இவ்விதம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.'' இவ்விதமாக எல்லா பாஞ்சராத்திர ஸம்ஹிதைகளில் ஜீவனுடைய நித்யத்வம் என்கிற வசனத்தினால், ஜீவஸ்வரூபம் உற்பத்தி பாஞ்சராத்திரத்திலே நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. ஜன்ம மரணம் முதலிய வ்யவஹாரங்கள் -

லோக வ்யவஹாரத்திலும் வேதத்திலும் எப்படி விவரிக்கப் பட்டிருக்கின்றதோ - அவ்விதமே சாரீக மீ. சூத்ரம் (2-3-18) नात्मा श्रुतेः-(ஜீவன் உண்டாக்கப்படவில்லை) என்கிற விஷயம் சொல்லப்படும்-அந்தவிடத்தில். ஆகையால் (இப்போதைக்கு பாஞ்சராத்ர தந்திரமே ஜீவ உற்பத்தியை மறுத்திருப்பதால்) பாஞ்சராத்ர ஆகமத்திற்கு பிராமாண்யம் குறைப்பட்டதாக விருக்கிறது என்கிற வாத நிமித்தம்—அப்ராமாண்ய சங்கா - தூரத்தள்ளப்படவேண்டியதாகும்.

(பரம ஸம்ஹிதையிலே நிஷேதிக்கப்பட்டிருக்கிறது - ஸஹ்யநாதிர நந்தஸ்ச பரமார்த்தே ந நிஸ்சித: - அந்த ஜீவன் ஆதியும் அந்தமும் அற்ற பரமார்த்தமான பொருளாக நிச்சயிக்கப்பட்டிருக்கிறன் - இதனுல் ஜீவனுக்கு உற்பத்தியும் முடிவும் இல்லை - என்பதாம். ஆகையால் ஜீவோ ஜாயதே என்னும் வாக்யத்தில முரண்பாடுள்ள ஜீவோத்பத்தி கூறப் படுவதாகச் சொலவது சரியாகாது. ஸங்கர்ஷணன் என்றும் வ்யூஹ மூர்த்தியின் உற்பத்தி (அவதாரம்) கூறப் படுவதாகக் கொள்ள வேண்டும - இதனுல் சுருதிக்கு விரோத மில்லை என்பதாம்).

இன்னும் - சிலர் பெரும் கோஷமிடுகிருர்கள் - இந்த சாஸ்திரம் வேதத்திறகு விரோதம் - என்று இந்த வாக்கியத் திலை காட்டபபடுகிறது—

**साङ्ख्येषु वेदेषु निष्टामलभमानः शाण्डिल्यः पाञ्चरात्रशास्त्र-मधीतवान् ।**

சாண்டில்ய மஹரிஷி வேதம் வேதாங்களிலிருந்து திருப்தி பெருமல பாஞ்சராதரத்தைப் படித்தார். இதனுல அவர் கூட அநாகராத (பழங்காலத்திலிருந்து வந்து கொண்டிருக்கிற தான) வேத வசனங்களை முகாநது கூடப்பாராமல - அவைகளை தூஷித்துப பேசியும, அநத வேதங்களோடு கூடின உபப்ருஹ்மணம நியாயம் கலாபாநாம் (விவரித்துச் சொல்லப்பட்டவைகளும்) - அர்த்தம் எவ்விதம் செய்து கொள்ள

வேண்டியது என்கிறது பற்றி அறிந்து கொள்ள முயற்சி எடுக்காமலும், சிரத்தை இல்லாமலும் - திமிர் (பிரமம்) பிடித்தவர்களுக்குச் சம்மதமான வார்த்தைகளைச் சொல்பவர்களாவார்கள் - எங்கனமெனில் - ஐத். பி. 4-5 प्रातः प्रातरनृतं ते वदन्ति पुरोदयात् जुहृति योऽग्निहोत्रं - என்று; எவர்கள் அக்னிஹோத்ரம் செய்கிறார்களோ - அவர்கள் சூரிய உதயத்திற்கு முன்பு செய்கிறார்கள் - அவர்கள் தினே தினே பொய் பேசுகிறார்கள்; - இந்த வாக்யத்தின் நோக்கம் - சூரிய உதயமான பின்பு அக்னி ஹோத்ரம் செய்யப்படவேண்டும்' அதை புகழ்வதாக அமைகிறது இந்த வசனம். (பிரசம்ஸை) எப்படி பூம வித்யா பிரகரணத்திலே, நாரதரால் சொல்லப்பட்டது - சா. உ. 7 - ऋग्वेदं भगवोऽध्येमि यजुर्वेदम् सामवेदं चतुर्थमितिहासपुराणं पञ्चमं நான்-ருக் யஜுர் ஸாம அதர்வ வேதங்களையும் (4) இதிஹாஸ புராணம் ஆகிய மொத்தம் ஐந்தையும் அறிவேன். இதில் அவர் ஞானத்தின் (வித்யாஸ்தானத்தின்) மூலத்தை அறிவுறுத்தி-பிறகு சொன்னார்-सोऽहं भगवो मन्त्रविदेवास्मि-நான் சப்தங்களைத் தான் அறிவேன் - சப்தார்த்தம் தெரியாது; (அதனால்) नात्मवित् - ஆத்மாவை அறிபவனாக ஆக மாட்டேன் - இந்த வாக்யத்தினால் பூமவித்யைக் காட்டிலும் வேறான மற்றைய எல்லா வித்யைகளிலும் ஆத்மவேதநம் (ஆத்மாவை அறிதல்) அலாப வசனம் (கிடைக்கப்படாமலிருப்பது) என்று சொல்லியிருப்பதாலே - இதன் நோக்கம் பூமவித்யையைப் பற்றிப் புகழ்ந்தது என்பதாகும் - அதனை நாரதரால் புகழ்ந்து அதை ஸநக்குமாரரிடமிருந்து பெறுவதற்க்காக சொல்லப்பட்டது என்பதாகும். (இதனால் அவர் வேதத்தை தூஷித்தவராக ஆகமாட்டார் என்கிற கருத்தைப் போல-சாண்டில்யரின் வசனமும் வேத நிந்தை இல்லை என்று கொள்ளவேண்டியது) இல்லாத போனால் அந்த நாரதருக்கு, இப்படிக் கற்றும் பரமாத்மாவை தெரிந்து கொள்ள முடியவில்லை வேதங்களில் பிரதிபாதிதமான பரதத்வத்தைப்பற்றி அடையவில்லை (அலாப:) - அதனால் ஆத்மஞானத்தை உண்மையாக அடைய விரும்பி இவ்விதம் சொன்னார் என்கிற கருத்தாகும் - ஆகவே வேத தூஷணமாகாது. இவ்விதமே சாண்டில்ய மஹரிஷியினால் சொல்லப்பட்ட

தாகும் - பிற்பாடு சொல்லப்படும் பரமதத்வமானதும் வேதாந்த வேத்யமுமான - வாசுதேவ் பரபிருஹ்மத்தைப் பற்றியதும் - அந்த பரதத்வத்தை விளக்க வந்ததாகவும் தெளியவேண்டியதாகும்.

பாஞ்சராத்திரத்தின் பரமஸம்ஹிதையில் சொல்லப் பட்டது – வேதாந்தங்களை சுலபமாகப் புரிந்துகொள்வதற்கு (சுக போதினியாக) சாஸ்திரம் ஆரம்பம் செய்யப்படுகிறது- ஏனெனில் வேதங்களின் அர்த்தம் மிகக்கடினமானவை. நாரதர் இம்மாதிரி நோக்கத்துடன் ஸநத்குமாரரிடம் சொன்னார் - பரமஸம்ஹிதை 1-3-4

**अधीता भगवन् वेदाः साङ्गोपाङ्गाः सविस्तराः । श्रुतानि च मयाऽङ्गानि वाकोवाक्ययुतानि च । न चैतेषु समस्तेषु संशयेन बिना क्वचित् । श्रेयोमार्गं प्रपश्यामि येन सिद्धिर्भविष्यति ।**

பகவானே, அங்கங்களோடும் உபாங்கங்களோடும் விவரணங்களோடும் கூடிய வேதங்களை அனைத்தும் என்னால் அப்யஸிக்கப்பட்டன. ஏகாயந ஸாகையிலுள்ள வாகோ வாக்யங்களும் அதன் அங்கங்களும் என்னால் ஓதப் பட்டன. இவை யனைத்திலும் – மோக்ஷ ஸித்தியை அளிக்கக் கூடிய சிறந்த வழியை எதிலுமே நான் ஐயமறக் காணவில்லை; என்றும்

**वेदान्तेषु यथा सारं संगृह्य भगवान् हरिः ।**
**भक्तानुकम्पया विद्वान् सञ्चिक्षेप यथासुखम् ॥**

வேதாந்தங்களிலிருந்து ஸாரத்தை எடுத்து, ஸர்வக்ஞனாய் பகவான் ஹரிபக்தர்களிடம் இரக்கம் காட்டுபவராக - பாஞ்ச ராத்திர சாஸ்திரத்தை அருளிச்செய்தார் - என்று பரமஸம் ஹிதையில் கூறப்பட்டதை நினைக்கவும்.

ஆகையால் அந்த ஸ்ரீமந்நாராயணன்வேதங்கள் ஒன்றி னால் (वेदैक) அறியப்படுபவன் - பரபிருஹ்மம் எனப்படுப

விஷ்ணு - வாசுதேவர் என்று சொல்லப்படுபவர் - நிகிலஹேய ப்ரத்யனீக கல்யாணைகதான, (நற்குணங்களுக்கு யிருப் பிடம் - ஹேயகுணங்களுக்கு எதிர் தட்டு) அனந்த ஞான ஆனந்தாதி அபரிமித உதாரகுணஸாகரம் ஸத்யஸங்கல்பம் கொண்டவர் - நாலுவர்ணங்களைப் பற்றியும் நாலு ஆஸ்ர மங்களைப்பற்றியும் நிற்கும் அறம் பொருள் இன்பம் வீடு களாகிற சதுர்வித புருஷார்த்தங்களை விரும்பும் பக்தர்களை கடாக்ஷித்து, அபாரகாருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்ய ஔதார்ய மஹோததி: (சமுத்திரம்போல விருப்பவனுகை யாலே) ஸ்வ-(தன்) ஸ்வரூபம் தன் விபூதி - தன்னைப்பற்றிய ஆராதனம் அதன் பலம் ஆகியவற்றை உள்ளபடி அறிவிக் கும் ருக்யஜுஸ்ஸாம அதர்வண வேதங்கள் கணக்கற்ற சாகைகளை உடையவையாகவும், (பேதபின்னங்களை - அபரி மிதசாகைகள் இத்யாதி) விதி, அர்த்தவாதம் மந்திரம் ஆகிய முப்பிரிவுகளையுடையவையாகவும்-(அதனாலேயே) தன்னைத் தவிர, மற்ற தேவமனுஷ்ய முதலியவர்களால் பொருள் உணர அரியவையாகவு மிருப்பதைக் கணிசித்து, அவை களின் பொருள்களை (யாதாத்மியம்) உள்ளபடி உரைப் பதற்கு-பயன்படும்படி-பாஞ்சராத்ரம் என்கிற சாஸ்திரத்தை பகவான ஸ்ரீமந் நாராயணன் ஸ்வயமாகவே அருளிச் செய்தார் என்று சொல்வது நிரவத்யம் (தோஷமாகாது).

இப்படியிருக்கும்போது - சங்கரர்போன்ற மற்றவர் களால் சூத்ர சதுஷ்டயம் (நான்கு சூத்திரங்கள்) அவைகளில் சில அம்சங்கள் வேத விருத்தமானபடியாலே. அந்த பாஞ்ச ராத்ர சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட விஷயங்கள் அபிரா மாண்யமாகவும், அதில் சொல்லப்பட்ட விளக்கம் சூத்ர அக்ஷர அனுகுணமாக வில்லாதபடியாலும், சூத்ரக்காரரான (வ்யாஸருடைய) அபிப்ராயத்திற்கும் விருத்தமாக விருக் கின்றன - என்றும் அவர்களால் கூறப்பட்டது. ஆயினும், சூத்ரக்காரரான வ்யாஸராலே வேதாந்த நியாயங்களைச் சொல்லும் சூத்ரங்களை எழுதினபிறகு வேதத்திற்கு - உப பிருஹ்மணமாக அருளப்பட்ட மஹாபாரதஸம் ஹிதையில் - மோக்ஷதர்மத்தில் - (சாந்திபர்வம்) - சதஸஹஸ்ரம் (லக்ஷக்

கணக்கான) ஸ்லோகங்களை இயற்றி - மோக்ஷதர்மமாகிற ஞான காண்டத்தில் வேதங்களின் அர்த்தங்களை விளக்கு வதற்க்காக இயற்றியதில் - இவ்விதம் அருளிச்செய்தார் -

गृहस्थो ब्रह्मचारी च वानप्रस्थोऽथ भिक्षुकः ।
यइच्छेत् सिद्धिमास्थातुं देवतां कां यजेत सः ।।

(மஹாபா. 12-342)

என்று ஆரம்பித்து கிருஹஸ்தன் - பிருஹ்மசாரி-வாநபிரஸ் தன்-ஸந்யாஸி ஆகிய நான்கு ஆஸ்ரமதர்மங்களும் மோக்ஷ ஸித்தியையடைய எந்த தேவதையை உபாஸிப்பது-என்று தொடங்கி மிக்க விரிவாக பாஞ்சராத்திர சாஸ்திர பிரகிரி யையைக் கூறினார். நாராயணரே ஸ்வயமாகவே கூறினார்.

**விளக்கம்:—**

இங்கு சொல்லப்படுபது - சங்கரர் போன்றவர்கள் நான்கு சூத்திரங்களாலே பாஞ்சராத்ரம் அபிரமாணம் என்று வ்யாக்யானம் செய்திருப்பது சரியாகாது. மூன்றாவது சூத்ரத்தில் பூர்வபக்ஷ வ்யாவிருத்தியைக் காட்ட "वा" சப்தம் அப்ரதிஷேதபதம் முதலானவற்றுக்குப் பொருந்தாது-சூத்ரக் காரரின் கருத்துக்கு முரண்பட்டதாகும். ஏனெனில் ஓதப் படும் வேதாந்த வாக்யங்களின் அர்த்த நிர்ணயத்திற்க்காக-பிருஹ்ம சூத்ரம் இயற்றிய வ்யாஸ பகவான் அத்யயந வழக் கொழிந்த வேதபாகங்களின் பொருளையும் நிஷ்கர்ஷிக்க - உபபிருஹ்மணமாக மஹாபாரதத்தை இயற்றினார். (இங்கு மஹாபாரதத்தில் சொல்லப்பட்டதைக் கவனிக்கவும். யுதிஷ் டிரர் பிரஸ்னம் (கேள்வி) கேட்க - வ்யாஸர் பதிலே பீஷ்மர் வாயிலாகவும் - நாரதர் வாயினாலும் பல சாஸ்திர கருத்துக் களைச் சொன்னார். அப்பேற்பட்ட மஹிமை பெற்றது மஹா பாரதம் - பஞ்சம வேதம் எனப் போற்றத்தகுந்தது. அந்த மஹாபாரதத்தில் சாந்தி பர்வத்தில் சொல்லப்பட்டது -

यो वासुदेवो भगवान् क्षेत्रज्ञो निर्गुणात्मकः ।
ज्ञेयः स एव राजेन्द्रः जीवः संकर्षणः प्रभुः ।।

संकर्षणाच्च प्रद्युम्नो मनोभूतः स उच्यते ।
प्रद्युम्नात् योऽनिरुद्धस्तु सोऽहङ्कारः स ईश्वरः ।।

என்கிற வசனங்களால் परब्रह्मणो वासुदेवात् क्रमादाविर्भवन्तो व्यूहाः जीवमनोऽहङ्कार तत्वाभिमानितया जीवादिशब्दव्यपदेश्या इति विस्पष्टं बोधयन्ति सन्तीत्यतोऽपि परमते सूत्रकाराभिप्रायविरोधः परमार्थभूषणेऽस्माभिरुपपादितोऽप्यनुसंधेयः । (உத்தமூர் ஸ்வாமி).

ஸ்ரீபாஷ்யம்:—

इदं शतसहस्राद्धि भारताख्यान विस्तरात् ।
आविध्य मतिमन्थानं दध्नो घृतमिवोद्धृतम् ।।
नवनीतं यथा दध्नो द्विपदां ब्राह्मणो यथा ।
आरण्यकं च वेदेभ्यः ओषधीभ्यो यथामृतम् ।।

(பாரதம் சாந். 358 - 11 - 12)

லக்ஷம் கிரந்தமுள்ள மஹாபாரதக் கடலை புத்தியாகிற மத்தினுல் கடைந்து தயிரிலிருந்து வெண்ணெயை எடுத்து நெய்யாக காய்ச்சுவது போல - இப்பாஞ்சராத்ர ஸாஸ்திரம் எடுக்கப்பட்டது. இது பாரதத்தின் ஸாரமாக எடுக்கப் பட்டது - எங்கனமெனில் - மனிதர்களுள் அந்தணனைப் போலவும், வேதங்களில் ஆரண்யகம் போலும், ஓஷதிகளில் அம்ருதம் போலவும் பாரதத்தின் ஸாரமாக பாஞ்சராத்திரம் எடுக்கப்பட்டது.

इदं महोपनिषदं चतुर्वेदसमन्वितम् ।
सांख्ययोगकृतान्तेन पाञ्चरात्रानुशब्दितम् ।।

(பாரதம். 338)

இப் பாஞ்சராத்ர மெனப்படும் சாஸ்திரம் நாலு வேதங்களோடு கூடிய பெரிய உபநிஷத்தாகும்; கர்ம ஞான யோகங்களோடு கூடியது. (இதை நாரதர் பத்ரிகா ஸ்ரமத்தில் நாராயணரின் திருமுகத்திலிருந்து கேட்டார்).

इदं श्रेय इदं ब्रह्म इदं हितमनुत्तमम् ।
ऋक् यजुस्सामभिर्जुष्टमथर्वाङ्गिरसैस्तथा ॥
भविष्यति प्रमाणं वै एतदेवानुशासनम् ।

(மஹா பாரதம்) இதுவே சிறப்பு (ஸ்ரேயஸ்); இதுவே பெரிது. இதுவே மேலான ஹிதம். ருக் யஜுர் ஸாம அதர்வ வேதங்களோடு கூடிய இதுவே பிரமாணமாகும். இதுவே பகவத் ஆக்ஞையாகும்.

(மஹாபார. மோக்ஷ தர்மம் 343-45)

साङ्ख्ययोगशब्दाभ्यां - சாங்கிய - யோக பதங்களால் ஞான யோககர்ம யோகங்கள் சொல்லப்படுகின்றன. (சாங்கியனின் யோகத்தில் சொல்லப்பட்டதும், யோகிகளால் சொல்லப்பட்ட கர்மயோகமும் இங்கு சொல்லப்பட்டது.) கீதையில் - 3-3ல் ज्ञानयोगेन साङ्ख्यानां कर्मयोगेण योगिनाम्.

பீஷ்ம பர்வத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது

ब्राह्मणैः क्षत्रियैर्वैश्यैः शूद्रैश्च कृतलक्षणैः ।
अर्चनीयश्च सेव्यश्च पूजनीयश्च माधवः ॥
सात्वतं विधिमास्थाय गीतः सङ्कर्षणेन यः ॥

(பார. 6-66-39-40)

பஞ்ச ஸம்ஸ்காரம் பெற்ற பிராம்மணக்ஷத்ரிய வைஸ்யர்களாலும், சூத்ரர்களாலும், ஸ்ரீமந் நாராயணரால் அருளப்பட்ட பாஞ்சராத்திர முறைப்படி மாதவனையே அர்ச்சிக்கவும் ஸேவிக்கவும் பூஜிக்கவும் தக்கவன் - என்று வ்யாஸர் அருளினார், எப்படி பாதராயணர் (வியாஸர்) இவ்விதம் பேசியபிறகு-

வேதங்களை அறிந்தவர்களுள் மிக மிக ஸ்ரேஷ்டர்-ஸாத்வத (பாஞ்சராத்ர) சாஸ்திரத்தை அப்ராமாண்யமாக குறை கூறுவார்? வேத வித்துக்களுள் அக்ரேஸரான வியாஸர் பாஞ்சராத்ரத்தை தாமே இயற்றிய பிருஹ்ம சூத்ரத்திலே - வேதாந்த வேத்ய பரபிருஹ்ம பூதரான வாஸுதேவருடைய உபாஸனை - அர்ச்சனை இவைகளைச் சொல்லிய பின்பு - ஸாத்வத ஸாஸ்திரத்தை அப்ராமாண்யமாகக் கூறியிருக்க முடியும்?

மேலும் - இந்த சுலோகத்தில்

सांख्यं योग: पञ्चरात्रं वेदा: पाशुपतं यथा ।
किमेतान्येकनिष्टानि पृथङ्निष्ठानि वा मुने ।।

(மஹா பார. சாந்தி - **359-1**)

பிருஹ்மரிஷியே - ஸாங்கியம், யோகம், பாஞ்சராத்ரம், பாசுபதம் ஆகிய இம்மதங்கள் உலகில் எப்படி நடையாடுகின்றனவோ இவை எல்லாம் ஒரே விஷயத்தைச் சொல்கின்றனவா? வெவ்வேறைச் சொல்கின்றனவா - என்று கேட்டு - இதனுல் சாங்கியம் முதலானவைகளுக்கும் கூட ஆதரிக்கப்படத்தக்கவை என்று கூறப்படுகிறது - என்று கூறுவது சாரீரக (பிருஹ்ம மீமாம்ஸத்தின்) சூத்ரங்களில் ஸாங்க்யாதிகளைத் தள்ளுவதோடு எப்படி பொருந்தும்? ஏன் பாஞ்சராத்ரத்தையும் தள்ளவேண்டியது என்று கூற வேண்டும்? (சாங்கியாதிகளைப் போல) -

இந்தக் கேள்விக்குப் பதில் கூறப்படுகிறது-சாரீரகத்திற்கும் பாஞ்சராத்திற்கும் எவ்வித விரோதமும் இல்லை - (ஏனெனில்) - சாரீரகத்தில் பாஞ்சராத்ரமும் மற்ற சாங்கிய யோகாதிகளைப் போலத் துல்யம் தானே - என்று சொல்லப் படுமாகில் - அதற்குப் பதிலாக नेत्युच्यते - இல்லை என்று நாம் பதில் கூறுவோம். அந்த மதங்களில் கூட சாரீரக (ஜீவன்-பரமாத்மாவைப் பற்றிய) நியாயம் கூறப்படுகிறது. இங்கே இந்த கேள்வியின் பொருள் யாதென்றால் - किमेतान्येकनिष्टानि

पृथक्त्वानि वा இந்த சாஸ்திரங்கள் ஒரே வகையாக ஒரே வகையாக ஒரே விஷயத்தைப் போதிக்கிறதா - இல்லை வெவ் வேறான விஷயங்களைச் சொல்கிறதா ? என்கிற கேள்விக்கு அர்த்தம் இதுதான் -

किं साङ्ख्ययोगपाशुपतवेदपञ्चरात्राण्येकतत्वप्रतिपादनपराणि, पृथक्तत्वप्रतिपादनपराणि वा यदा एकतत्वप्रतिपादनपराणि. किं तदेकम् तत्व? यदा तु पृथक्तप्रतिपादनपराणि तदा एषां परस्परविरुद्धार्थप्रति पादनपरत्वात् वस्तुनि विकल्पासंभवा-च्चैनमेव प्रमाणमङ्गीकरणीयम्; किं तदेकं इति ।

சாங்கியம் - யோகம் - பாசுபதம் வேதங்கள்-பஞ்சராத் ரம் இவை ஒரே ஒரு தத்வத்தைப் பராமர்சிக்கிறதா - இல்லை வெவ்வேறு பரதத்வங்களை விளக்குகின்றனவா ? ஒரே ஒரு தத்வத்தைச் சொல்லவந்தது எனில், அந்த ஒரே ஒரு பரமார்த்ததத்வம் யாது? இல்லை வெவ்வேறான தத்வங்களைச் சொல்லப்போமாகில், அவைகளுக்குள்ளே விரோதம் - தார தம்யம் இருக்கின்றதா ? இல்லை - சொல்லப்பட்ட ஒரே விஷயத்தில் பரமார்த்தமான பொருளைப்பற்றி மனக்கலக்கம் யேற்படுகிறதா - அதனால் ஒரே ஒரு தத்வத்தை அங்கீகரிக் கும்படி எதாவது தடை உண்டா ? அப்படியானால் அந்த ஒரே தத்வம் யாது ? किं तदेकम् ?

அதற்குப் பதில் நாம் கூறுவோம். (இங்கே கேள்வி பரமார்த்தம் ஒரே ஒன்று ஆயினும்-அதற்கு பல அபிப்ராய பேதங்களால் பல வகைப்பட்ட தத்வங்கள் சொல்லப்பட லாமா ? வெவ்வேறான அபிபராய பேதங்கள்-உபாஸனையின் கர்ம வழிகளில் யேற்படலாம் - ஆனால் ஒரே தத்வத்திற்கு ஏற்படுவதாகாது. சப்தயேக (வேதமே) பிரமாணம் பிருஹ் மத்திற்கு ஆதலால் - எது வேதத்திற்கும் எதிராக புறம்பாக வருகின்றனவோ - அது நிராகரிக்கப்படவேண்யது-அப்படி இல்லாவிடில் - அதை ஒப்புக்கொள்ளவேண்டியது- பாஞ்ச ராத்ரத்தில் சொல்லப்பட்ட ஒவ்வொரு விஷயமும் வேத சம்மதமே — அதனால் முழுமையும் ஏற்கத்தக்கதே-எனலாம்)

ஆகவே பதில் கூறப்படுகிறது - சூத்ரக்காரர் ஆரம் பிக்கிறார் - ज्ञानान्येतानि राजर्षे विद्धि नानामतानि वै। साङ्ख्यस्य वक्ता कपिल: (சாங்கிய மதத்திற்கு கபிலரே வக்தா (போதிப்பவர்) ஆவர். ராஜரிஷியே - ஸாங்க்யயோக - பாஞ்சராத்ரம் - பாசுபதம் என பல மதங்கள் இருக்கின்றன. அதில் கபிலர் ஸாங்கிய மதத்திற்கு வக்தா; என ஆரம்பித்து)-யோகத்தை அறிந்து சொன்னவர் (ஜீவர்களில்) மிகப் பெரியவரான பிரம்மதேவர். (ஹிரண்யகர்ப்பர்) பாசுபதம் - பசுபதி (உமையின் கணவர்) என்பவரால் கூறப்பட்டது. இவர் களால் கூறப்பட்டதால் இவை அனைத்தும் பௌருஷேயம்- ஒரு புருஷனால் இயற்றப்பட்டவை - என்று சொல்லி; अवा(पा)न्तरतपा नाम वेदाचार्य: स: उच्यते-(அபாந்தரதபஸ் (வ்யாஸர்) வேதங்களுக்கு ஆசார்யர் - (மஹாபா. 12-359) இதில் நாராயணரின் சப்தமே அபாந்தர தபஸ்ஸாக அவதரித்தது- இவரே வேதங்களை ஒழுங்குபடுத்தினார்-பிறகு அவரே வ்யாஸராக அவதரித்தார்).

இவ்விதம் வேதங்களுக்கு அபௌருஷேயத்வத்தைச் சொல்லி (அதாவது ஒரு புருஷனால் இயற்றப்படாததாகவும்- இருள் பிரமம் - விப்ரலம்பம் - மறப்புக்கள்) இல்லாத வேத மாகும்) पञ्चरात्रस्य कृत्स्नस्य वक्ता। नारायण: स्वयम् பஞ்சராத்ர சாஸ் திரத்தைப் போதித்தவர் நாராயணர் - ஸ்வயமேவ ஆவார் - என்று கூறப்பட்டதால் பஞ்சராத்திரத்திற்கு வக்தா நாரா யணனே ஆகும். (அதனால் நாம் எடுத்துக் கொள்ள வேண்டியது - ஸாங்கிய யோக மதங்களில் பிரதானத் திறகும் - புருஷர்களுக்கும்; பாசுபதத்தில் சொல்லப்பட்ட பசுபதி முதலானோருக்கும் வேதந்தத்தில் கூறப்பட்ட நாராயணனை அந்தர்யாமியாகக் கொண்டு - ஒரே பொருளை- ஒரே தத்வத்தைப் பற்றியது என்பதாகும். இதற்கு முன் கூறிய வாக்யப்படி "ஸர்வேஷு ச நிருபஸ்ரேஷ்ட ஞானேஷ் வேதேஷு திருஸ்யதே। யதாகமம் யதாந்யாயம் நிஷ்டா நாராயண பிரபு:॥ அரசர் தலைவனே - வேதத்தையும் நியாயங்களையும் ஒட்டிப் பார்க்கும்போது இம்மதங்கள் அனைத்திலுமே ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே - முடிவான

பொருளாகக் கூறப்படுகிறுன்.. அப்ருஹ்மாத்மகமாக ஒரு பொருளும் இல்லை. எல்லா தத்வங்களும் நாராயணுத்மக மாக உள்ளன. वस्तुत्वमभ्युपगमनीयम् எல்லா மதங்களிலும் நாராயணரே பேசப்படுகிருர் - முடிவான பொருளாக விருக் கிருர் - என்பதாம்)

**ஸ்ரீபாஷ்யம் :—** இந்த விதமாக சூத்ரக்காரர் அபிப்ராயப் பட்டு அவர் அருள்கிருர் - (இது பாஷ்யக் காரரின் கருத் தாகும்) ஒரு புருஷனுல் இயற்றப்பட்ட தந்திரங்கள் - ஒன்ருேக்கொன்று பரஸ்பரவிருத்தமாக - வெவ்வேருன வஸ்துக்களை வாதிப்பதாலும்; வேதங்கள் அபௌருஷேய மாதலாலும் அவைகளுக்கு இருள் - துயக்கு மறப்பு மயக்கு ஆகிற தோஷங்கள் ஸம்பவிக்கமாட்டாதபடியாலும்-வேதங் களே பிரமாணம் - மற்றவை பரதத்வத்தை அறிவிப்பதில் பிரமாணமாக மாட்டா. வேதத்தில் அறியப்படும் பரம் பொருள் - ஸ்ரீமந்நாராயணரே. வேதம் நிரஸ்த பிரமதாதி நிகில தோஷங்கள் இல்லாதபடியாலும் - அந்த வேதங்களே கோஷிப்பது வேத்யமான (அறியப்பட வேண்டிய) வஸ்து ஸ்ரீமந்நாராயணர் என்றும்; அதற்குவிரோதமாக எவை (எந்த) சித்தாந்தமாகிலும் எப்படி உண்மையான ஸ்வரூபம் எந்த பர வஸ்துவுக்கு இருக்கிறதோ - அவைகளால் அதை ஸ்தாபிப்பதற்கு துர்லபம் (முடியாது எனலாம்). ஆனுல் நாராயணரே வேதவேத்யன் - பரபிருஹ்மபூதரானபடியாலே (அவரே பாஞ்சராத்ரத்தில் ஆராதனை தெய்வமாகக் கூறப் படுவதாலும் - அவருடைய ஸ்வரூபத்தையும் அவரை உபாஸிப்பதையும் அந்த சாஸ்திரம் கூறுவதாலும் - அது மற்ற தந்திரங்களோடு ஸமமானது எனக் கூறமுடியாது எனப்பொருள்.) பாஞ்சராத்ரம் வேத துல்யமேயாகும்.

ஆகையால் அந்த அந்த வெவ்வேருன தத்வங்களில் கூறப்பட்ட பிரதானம் (சாங்கியம்) புருஷ (ஹிரண்ய கர்ப்ப ரின் யோகம்) பசுபதி (பசுபதம்) ஆகிய தத்வங்களுக்கும் வேதாந்த வேத்ய பரபிருஹ்ம பூதரான ஸ்ரீமந் நாராயணரே எல்லா வஸ்துக்களுக்கும் - எல்லா வ்யக்திகளுக்கும் (ஸர்வ

சேதுநாசேதன வஸ்துக்களுக்கும்) ஆத்மாவாக விருப்பதாலும் - அவை அவருக்கு சரீரமாக விருப்பதாலும் ஆகவே எல்லாப் பொருள்களும் நாராயணுத் மகத்திருல் - இந்த விஷயம் வேதங்களில் சொல்லப்பட்டதாலும் - இதையே பாஞ்சராத்ரம் போதிப்பதாலும் - வஸ்து ஒன்ருகவிருக்கிறது वस्तुत्वमभ्युपगनीयम् என்று அறிய வேண்டியதாகும். ஸ்ரீமந் நாராயணனை பிரதான புருஷர்களும் பசுபதாதிகளும் அந்தர்யாமியாகக் கொண்டே ஒரே பொருளாகிருர்கள் என்பதே கொள்ளவேண்டும்.

இதையே அபிப்ராயம் கொண்ட வியாஸர் கூறுகிருர் - (மஹா. பா. சா. 3-14-1) - सर्वेषु च नृपश्रेष्ट ज्ञानेष्वेतेषु दृश्यते । यथागमं यथान्यायं निष्टा नारायणः प्रभुः । அரசர் தலைவனே - வேதத்தையும் நியாயங்களையும் பார்க்கும் போது, இந்த மதங்கள் அனைத்திலும் ஸ்ரீமந் நாராயணரே - ஒருவரே முடிவான பொருளாகக் கூறப்படுகிருர். இங்கே - यथागमं - यथान्यायं - என்று கூறப்பட்டதால்-வேதத்திலும் நியாயத்திலும் அனுக்ரஹிக்கப்பட்டதும்-அந்த அந்த தந்திரங்களில் கூறப்பட்ட பிரகாரம் - அவைகளின் படியே - ஒரே வஸ்து பராமர்சனம் செய்யப்படுகிறது யார் எது என்ருல் - அது ஸ்ரீமந் நாராயணரே-नारायण एव-सर्वस्य वस्तुनः-निष्टेति दृश्यते - எல்லா வஸ்துக்களுக்கும் ஆதார பூதராகவிருக்கிருர். (எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக-नारायणात्मकत्व த்திருல் விளங்குகிருர்). அதனுல் ஒரு வஸ்துவும் அபிருஹ்மாத்மகமாக இல்லை. அந்த அந்த தந்திரங்களில சொல்லப்பட்டயாவையும் தத்வங்களும் நாராயண ஆத்மகமே - ஸ்ரீமந் நாராயணரே அந்தர்யாமியாகவும் - ஆத்மாவாகவும் இருக்கிருர் எனக்கருத்து).

சா. உ. 3-14-1.ல் सर्वं खल्विदं ब्रह्म - இவை எல்லாம் (இந்த ஜகத்பூராவும்) பிருஹ்மமே (பிருஹ்மத்தை அந்தராத்மாவாக வுடையது என அர்த்தம்); அதேபடி தை. நா,3- विश्वं नारायणः - நாராயணரே இந்த விஸ்வம் (जगच्च सः என்பதாகும்); இவைகளால் எல்லா வஸ்துக்களும் பிரும்மாத்மகமாக விருக்கிற படியால் அனுஸந்திப்பதாலே - नारायण एव

**निष्टेति** – இவை எல்லாம் ஸ்ரீமந் நாராயணரே - அவரே ஏக ஆதாரம்; (இந்த தத்வங்கள் பிருஹ்மத்தை ஆத்மாவாகக் குறிக்காத போஞலும்) அவரே எல்லாத் தத்வங்களுக்கும் **निष्टेति प्रतीयत्** - என்று அர்த்தம்.

ஆகையால் வேதாந்த வேத்யரானவரும் - பரபிருஹ்ம பூதருமான ஸ்ரீமந் நாராயணரே தாமே பஞ்சராத்திரம் முழுவதையும் சொல்லி அருளியதால்-அந்த ஸ்ரீமந் நாராயண ரின் ஸ்வரூபம்யாது - அவரை உபாஸிப்பது எவ்விதம் - இந்த உபாஸனைகளைச் சொல்லி - அது தந்திரம் என்றும் கூறப்பட்டும்; அதஞலே அது இதர தந்திரங்களோடு ஸம மானது என்று எவராலும் கூற இயதாது. இக்காரணத்தி ஞலேயே பாஞ்சராத்ரமும் வேததுல்யமாகும் - வேததுல்ய பிரமாணமாகும். இக்காரணத்திஞலேயே - இங்கு கூறப் படுகிறது -

एवमेकं सांख्ययोगं वेदारण्यकमेव च ।
परस्पराङ्गान्येतानि पञ्चरात्रं तु कथ्यते ॥

(பாரதம் - சாங்-34-81)

**இவ்வண்ணமாக சாங்கியம் யோகம் வேதம் ஆரண்யகம் ஆகியவை ஒன்றுக்கொன்று அங்கமாக விருந்துகொண்டு- (பரஸ்பர அங்காந்யேதாநி) ஒரே தத்வத்தைக் கூறுவதால் ஏகமேவ-ஒன்றுயிருக்கின்றன. ஆஞல் பஞ்சராத்ரம் ஒன்றே இவையெல்லாமாகக் கூறப்படுகிறது. (எல்லாவிஷயங் களும் இதில் காணப்படுகின்றன - நாராயணரை பரத்தவ மாகக்கொண்டு) ஸாங்கியமும் யோகமும் சேர்ந்து ஸாங்கிய யோகம் ; வேதமும் அரண்யகமும் சேர்ந்து வேதாரண்யகம் இவை பரஸ்பரம் அங்கமாக (ஒன்றையொன்று ஆஸ்ர யித்து) இருக்கின்றன. ஒரேதத்வத்தைப் பிரதிபாதனம் செய்வதால் - இதஞலே ஒன்றுகவும்-பாஞ்சராத்ரம் என்றும் சொல்லும்படியாக விருக்கிறது (அதாவது சாங்கியமதத்தில்**

கூறப்பட்ட 25 தத்வங்கள்; யோகத்தில் சொல்லப்பட்ட யமம் நியமம் முதலிய அஷ்டாங்க யோகம்; வேத பூர்வ பாசத்தில் கூறப்பட்ட கர்மங்களை ஒப்புக்கொள்வதால் (கர்ம மீமாம்ஸகத்தை பகவத் ஆராதனையாக ஒப்புக்கொள்வ தால்) - அந்த அந்த மததத்வங்கள் பிருஹ்மாத்மகமென்றும் அஷ்டாங்க யோகம் பிருஹ்மோ பாஸன வழியாக விருப்பது என்றும் - பூர்வ மீமாம்ஸகர்மாக்கள் பிருஹ்ம ஆராதனை என்றும் - சொல்லி - எல்லாமே பிருஹ்ம ஸ்வரூபத்தைச் சொல்லும் வேதாந்த பாகங்களான ஆரண்யகங்களை கூறு கின்றன - இந்த விஷயங்கள் அனைத்தும் பாஞ்சராத்தி ரத்திலே தெளிவுபடுத்தப்பட்டது-ஸ்வயம் வக்தா நாராயணு ராலே - என்பதாகும். ஒவ்வொரு மதத்தில் ஒவ்வொரு அம்சம் பிரமாணம் என்று ஒப்புக்கொண்டும்; வேதமும் வேதாந்தங்களும் பாஞ்சராத்ரம் முழுவதுமே பிரமாணம் என்றும் தேறுகிறது).

**விளக்கம்:—**

என்ன சொல்லப்பட்டதென்றால் - சாங்கிய மதத்தில் கூறப்பட்ட 25 தத்வங்கள், யோகத்தில் கூறப்பட்ட அஷ்டாங்கயோக நியமங்கள் - யம நியமாதி - பூர்வமீமாம் ஸத்தில் கூறப்பட்ட விதிகள் - அவைகளின் கர்ம ஸ்வரூ பங்கள் - எல்லாவற்றையும் பகவத் ஆராதனையாக அங்கீ கரித்து - எல்லா தத்வங்களும் பிருஹ்மத்தை ஆத்மாவாகக் கொண்டவை - (நாராயணுத்மகம்); யோகமும் பிருஹ்மோ பாஸன வழிகளும் - வைதிக கர்மாக்களும் எல்லாமே பகவத் ஆராதனை எனக் கொண்டும்; பிருஹ்ம ஸ்பரூபத்தை விளக்குவதாகும். (இங்கே இரண்டு விஷயங்கள் பகவத் ராமானுஜரால் பேசப்படுகின்றன - வ்யாஸரின் கருத்துப் படி - மற்ற தந்திரங்களும் ஒவ்வொரு அம்சத்தில் ஆதரிக்க

தக்கது; பாஞ்சராத்ரம் வேதத்தைப் போல முழுவதும் ஆதரிக்கப்பட வேண்டியது ஏனெனில் எல்லா அம்சங்களும் இதில் காணப்படுவதால்). ஆரண்யகத்தைப் போல அங்கீகாரம் செய்யப்பட வேண்டியது. இம்மாதிரியாக மேலான பரபிருஹ்மமாகிற ஸ்ரீமந்நாராயணராலேயே ஸ்வயமேவ (தாமே) பஞ்சராத்திரம ஒன்றிலேயே தெளிவுபடுத்தப் பட்டது - विशदीकृतम् இதி சாரீரக சாஸ்திரத்திலே சாங்கிய மதத்தினரால் சொல்லப்பட்ட அப்ருஹ்மாத்மகமான தத்வங்கள் தான் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன - ஆனால் அதில் கூறப்பட்ட தத்வங்கள் - அவைகளின் ஸ்வரூபம் நிராகரிக்கப்படவில்லை. அதேமாதிரி - யோகம் - பாசுபதம் இவைகளிலும் ஈஸ்வரன் ஜகத் காரணத்திற்கு நிமித்தமாத்திரமே - உபாதான காரணமல்ல என்பதும். பர - அவர (மேலான - கீழான) தத்வங்கள் வேதங்களில் சொல்லப்பட்டதற்கு விபரீதமாகவும் அவைகளுக்கு எதிராகவும் உள்ளன என்று எவை கற்பிக்கப்பட்டதோ - அவைகள் மட்டுமே (எம்மால்) நிரஸனம் செய்யப்பட்டது; இதனால் யோகஸ்வரூபமும் நிராகரிக்கப்படவில்லை.

ஆகையால்-

सांख्यं योगः पञ्चरात्रं वेदाः पाशुपतं तथा ।
आत्मप्रमाणान्येतानि न हन्तव्यानि हेतुभिः ॥

(சாங். 360.)

சாங்கியம் - யோகம் பஞ்சராத்ரம் வேதம் பாசுபதம் என்னும் ஐந்துமே பரமாத்மா விஷயத்தில் பிரமாண்ங்கள்; காரணங்களைக் கொண்டு இவற்றை அழித்து விடக்கூடாது. (இதனால் தத்வங்கள் மறுக்கப்படவில்லை - வேதத்திற்கு

முரண்பாடாகவுள்ள ஆசாரங்களைச் சொல்வதையே சாரீரகம் மறுத்துவிட்டிருக்கிறது. யோகஸ்வரூபத்தையோ - பசுபதி ஸ்வரூபத்தையோ மறுக்கவில்லை. அவை ஒவ்வொரு அம்சத்தில் பிரமாணமானவை என்று கூறி - பௌத்த ஜைன மத வாதிகளை பாஹ்யர்கள் (வேத விருத்தர்கள்) என்று கூறி முழுவதையும் நிராகரித்தது மாதிரியன்று - அடியோடு அப்ர மானமாவதில்லை. அந்த அந்த மதங்களில் சொல்லப்பட்ட தத்வ ஸ்வரூபங்கள் மாத்திரமே அங்கீகரிக்கப்பட்டவை யாகும். ஜைன பௌத்தமதங்களில் கூறப்பட்ட அத்தனை யும்-ஸர்வமும் பஹிஷ்கரிக்கப்பட வேண்டியதே - முழுவதும் தள்ளப்பட வேண்டியதாகும். பாஞ்சராத்ரமோ வெனில் முழு வதும் வேதத்தைத்தழுவியதும் முழுவதும் பிரமாண மாகிறது. ஆதலால் பாஞ்சராத்ரம் பிராமாண்யமே - ஏனெ னில் இதில் ஒரே விஷயத்தைப் பற்றிக் கூறியதால் - यथागमं यथान्यायं निष्टो नारायणः प्रभुः-பரமாத்மாவான ஸ்ரீமந் நாராயணரே ஆகமத்திற்கும்-நியாயத்திற்கும் ஒரே ஆதாரமாகவிருக்கிறுர். (சுருதியில் சொல்லியபடியும் - நியாயத்தை ஒட்டியும் - ஸ்ரீமந் நாராயணரே வேதத்திலும் பஞ்சராத்ரத்திலும் பேசப்படு வதால் - பஞ்சராத்ரம் வேத துல்ய பிரமாணமாகும் - என்பது சூத்ரக்காரரின் அபிப்ராயம் (யதாகமம் - அப்ருஹ்மாத்மக அம்சத்தினுல் கூட பிரமாணத்தினுலும் - முன் சொல்லப் பட்ட விரோதம் இல்லாதபடியாலும், முழுவதும் பிராமாண் யம் என்பதாகும்).

(சங்கரர் சில அம்சங்கள் தமக்குப் பிடித்தமாகவும் - ஜீவோத்பத்தி - வேத தூஷணம் என்பவை சில அம்சங்களில்

பிடித்தமில்லை என்றார். இதுவும் சரியாகாது எனக் காட்டப் பட்டது. ஆகவே கல்பதரு ஆசிரியரும் பிராமாண்யமேவ என்றும் சொல்லியிருக்கிறார். வேண்டுமென்று பிடிவாத மாகச் ஸாதிப்பவர்களுக்கு பகவான் வாசுதேவரின் கடாக்ஷமில்லை - அபாக்யவான்கள் - என்று நாம் சொல்லு வோம்.

சாரீரக சாஸ்திரம் - த்விதீய அத்யாய -
த்விதீய பாதம் முற்றும்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

சுபமஸ்து.



ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமானுஜாய நம: ஸ்ரீமதே வேதாந்ததேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப ஸ்ரீவேதாந்ததேசிகயதீந்திர மஹாதேசிகாய நம:

# பிருஹ்ம வித்யா

## (நான்காம் பாகம்)

ஸ்ரீபகவத்ராமானுஜ விரசிதே ஸ்ரீபாஷ்யே

இரண்டாம் அத்யாயம்—மூன்றும் பாதம் (வியத்பாதம்)

### वियदधिकरणम् — (2-3-1) (சா-உ-6-2)

**பூ. சூத்ரம் : न वियदश्रुतेः (2-3-1)**
**ந வியதச்ருதே : (2-3-1)**

வியத் - ஆகாயம், ந - உற்பத்தியாவதில்லை, அஸருதே :- (உற்பத்தியைச் சொல்லும்) சுருதியில்லாமையால்.

முந்தின பாதத்தில் சாங்கிய-யோக-நியாய பௌத்த ஜைந மதங்களும், பாசுபதமதமும்; பாஞ்சராத்திர சாஸ்திரத்தின் பிராமாண்யமும்-எல்லாம் சொல்லப்பட்டன. சில வேதங்களுக்கு புறம்பானவை; சிலயுக்திக்கு பொருந்தா; முரண்பாடு உடையவை என்று சொல்லி விட்டு-நமது வேதாந்த மதத்தில் இம்மாதிரியான தோஷங்கள் இல்லையென்று காட்டுவதற்காக-இந்த இரண்டாம் அத்யாயத்தில், மூன்று, நான்காம் பாதங்களில், ஸர்வ சேதனு சேதன வஸ்துக்களும் ஸர்வ ஜகத்காரணமான ப்ருஹ்மத்தின் காரியப்பொருளாகவும் என்று சொல்லி; அதில் முதல் அதிகரணத் தில், ஆகாசத்தை எடுத்துக்கொண்டு-அது ஒரு காரியந்தான்

என்று சொல்லி, பூர்வபக்ஷியின் கருத்தாகிற ஆகாசம் ஒரு காரியப் பொருளாக ஆகமாட்டாது என்று சொல்லிய கருத்தை மறுத்து யுக்திகளைக்காட்டி-ஆகாசம் ஒரு காரியம்தான் என்று ஸ்தாபிக்கப் படுகின்றது. ஆகாசம் நித்யமா-அநித்யமா-என்கிற கேள்வி; அநித்யம் எனக்கூறப்படுகிறது.

ஸாங்கியாதி வேதபாஹ்ய (புறம்பான) தந்திரங்களும் நியாயத்தினுல் ஆபாஸக்கருத்துக்களைச் சொல்லும் தந்திரங்களும்-ஒன்றுக்கொன்று முரண்பாடுள்ள (முன்னும் பின்னும் வேறுன) கருத்துக்களைச் சொல்வதால் எல்லாம் அஸமஞ்ஜஸம் (பொருந்தமாட்டா) என்று சொல்லி தள்ளப்படவேண்டியவையாகும் எனத் தலைக்கட்டப்பட்டது. இங்கே சூத்ரக்காரர் (வியாஸர்) தமது பக்ஷத்திற்கு இம்மாதிரியான விப்ரதிஷேதாதி (முன்னுக்குப்பின் விரோதமாகச் சொல்லப்படும் கருத்துக்கள்) தோஷங்கள் லவலேசமும் இல்லை என்று சொல்லும் பொருட்டு, சேதன அசேதனவஸ்துக்களடங்கிய இந்த உலகம் பிருஹ்மத்திற்கு காரிய மாதலால் பிருஹ்மமே உபாதான நிமித்த ஸஹகாரி காரணமாவதால், சித் அசித்வஸ்துக்களடங்கிய ஜகத் பிருஹ்மத்தை ஆத்மாவாக வுடையதாகவும், அதனுல் பிரபஞ்சம் பிருஹ்மத்தின் காரியமாக விருக்கும் விஷயம் குறிப்பாக ஆராயப் படுகின்றது.

(அதாவது இரண்டாம் அத்யாயம் - முதல் மூன்று பாதங்கள் பிருஹ்மம் ஜகத்காரணமாக விருக்கிறது என்கிற பக்ஷத்திற்கு சில ஆட்சேபங்கள் எழ - அவைகளுக்குப் பதில் உரைக்கப் படுகிறது. இரண்டாவதாக - பிருஹ்மம் தவிர்த்து வேறு எதாவது ஜகத்காரணமாக விருக்குமா ? மேலும் பிருஹ்மம் ஜகத்காரணமாகமாட்டாது - ஜகத் ஒரு காரியமாகமாட்டாது என்கிற ஆட்சேபத்திற்கு பதில் கூறப்படுகிறது. முதல் அதிகரணத்தில் நையாயிகன் ஆட்சேபிக்கிறுன், பிரும்மத்திற்கு ஜகத்காரணத்வத்தை ஆட்சேபித்து, ஆகாசம் ஒரு காரியமல்ல - ஆகாயத்திற்கு சில சுருதிகளில் உற்பத்தியைக் கூறியிருப்பது - சுருதி, யுக்திகளுக்கு பொருந்தாத படியால் வேறு விதமாக நிர்வஹிக்கவேண்டியது என்கிறுன் - அதாவது பிருஹ்மத்திற்கு ஸர்வகாரணத்வம் இல்லை - சில - பதார்த்தங்களை

சிருஷ்டி செய்திருக்கக்கூடும். ஸர்வத்ர கார்யத்வ ஸ்தாபனம் பாதார்த்தம் என்பது துர்வசம் (சரியாகாது) என்பதாம், ககனகு ஸுமத்தைப் (ஆகாயத்தாமரையைப்) போல, வியத்தின் (ஆகாசத்தின்) உற்பத்தியும் அவ்விதமே - என்கிற பாவம். பூர்வ பாதம் - சூத்ரம் உற்பத்தி அஸம்பவாத் என்று ஜீவனுக்கு உற்பத்தி சொல்லியது தவறு என்று சொல்லப்பட்டது எவ்விதமோ - அதைப்போல ஆகாசத்தைப் பற்றிய சுருதி வாக்யமும் ஆகும் என்பதாம். அடுத்த சூத்திரத்திலும் இதே விஷயம் பேசப்படும்.)

இங்கே சங்கை யாதென்றால் - ஆகாசம் ஒரு காரியமா (உற்பத்தி செய்யப்பட்டதா) அல்லது இல்லையா, இல்லையென்றால் ஏது காரணம்? எது யுக்தம்? ஆகாசம் உற்பத்தியாக வில்லை - உண்டாக்கப்படவில்லை (காரியமில்லை) எப்படி? अश्रुतेः - வேதவாக்யங்களில் அப்படி சொல்லவில்லை. சுருதி வாக்யம் ஓதுவது இருக்கப்பட்ட வஸ்துக்களுக்கு உற்பத்தி யேற்படும், ஆகாசத் தாமரை-அதுபோல ஆகாசம் - அதற்கு உருவமில்லை - வஸ்துவாக உண்மையில் இல்லை ஆகையால் உற்பத்தி அஸம்பாவிதம். வேத சப்தத்தினுல் மாத்திரம் அதை காட்டமுடியாது - ஆகாசம் நிரவயவம்; நிரவயவமாக விருப்பதும் எங்கும் பரவியிருப்பதும் ஆகாசத்திற்கு உற்பத்தி யேற்படாது. ஆத்மாவைப்போல அதற்கு உற்பத்தியிராது - நிரூபிக்கமுடியாது. ஆகையால் ஆகாயத்திற்கும் உற்பத்தி அஸம்பாவத் (யேற்படாதாகையால்)- சாந்தோக்யத்தில் ஸ்ருஷ்டி பிரகரணத்திலே தேஜ: முதலியவை களுக்கே உற்பத்தி ஓதப்பட்டிருக்கிறது - சா. 2-6-2-3 - तदैक्षत बहु स्याम् प्रजायेयेति; (அது சங்கல்பித்தது - நான் பல வாகப் பிறப்பேன் அதற்காக உண்டாக்கக்கடவேன்); - பல வஸ்துக்களாக ஆகக்கடவேன் तत् (பிருஹ்மம்) முதலில் तेजोऽसृजत् (தேஜஸ்ஸை முதலில் ஸ்ருஷ்டித்தது - த்ரிவிருத் கரணம் என்றும் பஞ்சீ கரணம் என்றும் சொல்லப்படுவது) - தைத்திரியத்திலும் அதர்வணத்திலும் - தை - ஆ.1 - तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः - (அதே ஆத்மாவிலிருந்து ஆகாசம் உண்டாயிற்று. மு. 2. 2-1-3ல் एतस्माज्जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च, खम् वायुर्ज्योतिरापः; அந்த பரமாத்மாவிடமிருந்து

முக்யபிராணனும் மனமும் ஸர்வேந்திரியங்களும். ஆகாசம் வாயு, ஜ்யோதிஸ் ஜலம் பூமி எல்லாம் உண்டாயின - இதில் ஆகாசத்தின் உற்பத்தி பேசப்பட்டாலும் - அர்த்தவிரோதத்தால் பாதிதமாகிறது - முற்கூறிய சுருதியுக்திகளுக்கு பொருந்தாது. ஆகவே வேறுவிதமாக நிர்வஹிக்கவேண்டியது - இது பூர்வபக்ஷம். அதற்கு நாம் பதில் கூறுகிறோம்.

ஸி, சூத். अस्ति तु (2-3-2)

அஸ்தி து (2-3-2)

அஸ்திது – ஆகாயத்திற்கு உற்பத்தி உண்டு. (அதாவது வேதமே ஆகாசத்திற்கு உற்பத்தி உண்டு என்று சொல்கிறது என்கிறார் ஸ்ரீராமனுஜர்.) ஆத்மந ஆகாஸ: ஸம்பூத: தை அநு-1 பரமாத்மாவிடமிருந்து ஆகாசம் உண்டாயிற்று - என்று சுருதி கூறுகிறது

ஆகாசத்திற்கு உற்பத்தி உண்டு. சுருதி எதைச் சொல்லும்-அதீந்திரிய அர்த்த விஷயங்களைச் சொல்லும். அப்படிப்பட்ட அதீந்திரிய விஷயங்களில் பிரத்யக்ஷம் அநுமானம் ஆகிற பிரமாண ஸாதனங்கள் பயன்படமாட்டா. சுருதி ஆகாச விஷயத்திலே ஸ்ருஷ்டி ஆரம்பத்திலே, உற்பத்தியைச்சொல்வதாலே, அதுமாதிரி மற்ற பிரமாணங்களால் அறியப்படாத படியாலே-ஆகாச உத்பத்தியை எல்லாப் படியாலும் சுருதிவலியுறுத்த வல்லமை பெற்றது, அவயவமற்ற ஆத்மாவுக்குப் போல அவயவமற்ற ஆகாசத்திற்கும் உற்பத்தி ஒட்டாது என்று கூறுவது சரியில்லை. நிரவய வத்வம் என்பது உற்பத்தியற்றிருக்கைக்கு காரணமன்று. ஆத்மாவுடன் ஒப்பிடக்கூடாது. ஆத்மா நிரவயவமானாலும் அது நித்யம் என்று வேதம் கூறுகின்றது. அதே வேதம் ஆகாசத்தை அநித்யம் என்று கூறுகிறது. ஆகவே ஆத்மா அவயவமற்றது-ஆகாசமும் நிரவயவம், இதனால் நாம் அனுமானம் செய்யக்கூடாது – சுருதியை அனுஸரித்து ஆகாயத்திற்கு உற்பத்தி உண்டு எனக்கொள்ள வேண்டும்.

(இங்கே நையாயிகன் அனுமானிக்கிருன் (1) சப்தம் ஒரு தர்மம்(ரூபத்தைப் போல) அதற்கு ஆஸ்ரயமான வஸ்து வேண்டும்-ஏற்கனவே எட்டு வஸ்துக்களை விடவேறு ஒன்று அது ஆகாசம் என்கிருன். 2) ஆகாசம் நித்யம் ஏனெனின் அவயவமற்றது எங்கும் பரவியுள்ளது. (ஸர்வகதம். இதனுல் உற்பத்தியற்றது எனஸ்தாபிக்க முடியாது ஆத்மாவுக்கும் ஆகாசத்திற்கும் ஒப்பிடுதல் சரியில்லை). ஹேது சுருதி; ஆத்மாவுடன் ஒப்பிடுதல் கூடாது. என்று அர்த்தம்.

பூ. சூத்ரம்: गौण्यसंभवाच्छब्दाच्च (2-3-3)

கௌண்ய ஸம்பவாத் ஸப்தாச்ச 2-3-3

அஸம்பவாத்-(அக்னியை முதலில் படைத்ததாக்கூறியிருப்பது) ஒட்டாதாகையாலும்-ஸப்தாத்ச (விநாசமற்றது ஆகாசம் என்னும்) சுருதியினுலும் கௌணீ-ஆகாயத்திற்கு உற்பத்தியைக் கூறும் சுருதி அமுக்ய அர்த்தம் கொண்டது.

தை.அ, (-ல் तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः — அதே ஆத்மாவிலிருந்து பூதாகசம் ஸம்பூத:- உண்டாக்கப்பட்டது; இதற்கு (வியத்உற்பத்திசுருதி) கௌணமாக அர்த்தம் கொள்ள வேண்டியது யென்பது யுக்தமாகும் ஏனெனில் சா உ. 3-2-3-तत् तेजोऽसृजत பிருஹ்மம் தேஜஸ்ஸை உண்டாக்கியது, பிருஹ்மத்தினிடமிருந்து பிரதமம் தேஜஸ்தான் உண்டாயிற்று; அது ஆகாசத்தை முதலில் ஸ்ருஷ்டித்திருந்தால், அதை முந்தியே (தேஜஸ் உற்பத்திக்கு முன்பு) கூறியிருக்கவேண்டும். வியத்தின் உற்பத்யை பிரதிபாதிக்கிறது ஏற்படாதாகையால், இதற்கு அர்த்தம் ஆகாயத்திற்கு உற்பத்தியைக் கூறும் சுருதி அக்னியை முதலில் படைத்ததாகக் கூறும் சுருதியோடு முறண்பாடாகிறது. மேலும் பிரு, 2.4-3-3 - वायुश्चान्तरिक्षमृचैतदमृतम् - வாயுவும் ஆகாயமுமாகிற இரண்டும் விநாசமற்றவை- அம்ருதம் - இதனுல் ஆகாசத்திற்கு அழிவின்மை சொல்லப்படுகிறது இதனுல் வாயுவும் அம்ருதம் என்பது மற்ருென்ருகிற படியால் அனுமான ஸித்தம்.

இதனால்-உற்பத்தி-விநாசமில்லை என்று (संभूताच्च) சுருதி சொல்வது இரண்டுக்குமே ஆகும் - சுருதி வாக்யத்தைக் கௌண மாக (அமுக்யமாகக்) கொள்ளவேண்டும். அக்னியை முதன்மை யாக கூறியதை அமுக்யமாகவா அல்ல ஆகாசத்தைக் கூறியது அமுக்யமாகவோ -எது எப்படி எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்பதற்கு - மேலும் அடுத்த சூத்ரத்திலும் காரணம் கூறப் படுகிறது.

பூ. சூத்ரம் : स्याच्चैकस्य ब्रह्मशब्दवत् (2-3-4)

ஸ்யாச்சைகஸ்ய பிருஹ்மசப்தவத் (2-3-4)

ஏகஸ்ய - ஆகாச விஷயத்தில் அமுக்யமாகப் பிரயோகம் செய்யப்பட்ட "संभूतः" — என்கிற சப்தம் (உண்டாயிற்று.) ஒன்றுக்கே, ஸ்யாத் - (அக்னி முதலான விஷயங்களில் அநுஷங்கம் (முன் சொன்னதை எடுத்துக்கொள்ளுதல்) செய்து கொள்ளும் போது - முக்கியப் பிரயோகமும் ஆகலாம். (ஏன் கௌணி அர்த்த மாகக் கொள்ளவேண்டியது அதற்கு சமாதானம்.) பிருஹ்ம சப்தவத் - (ஒரே ப்ரகரணத்தில் அமுக்யமககவும் முக்யமாகவும் பிரயோகிக்கப்படும்.) பிருஹ்ம சப்தத்தைப் போல.

(தஸ்மா தேதத் பிருஹ்ம இதில் பிருஹ்ம சப்தம் பரமாத்மா வைக் குறிக்காது. அதனால் ஆகாசத்தின்-உற்பத்திக்கு பரமாத்மா என்பது பாதிதமாகின்றது. அதனால் யேற்படுவது - கௌணமாக ஸம்பூதசப்தத்திற்குச் சொல்ல வேண்டியது. அவ்விதமாகில்; மேலே वायोरग्निः வாயுவிடமிருந்து அக்னி உண்டாயிற்று) என்கிற வாக்யங்களிலும் அந்த சப்தத்தையே அனுஷங்கம் செய்து பொருள் கொள்ள வேண்டியிருக்கை யாலும் அக்னிக்கு உற்பத்தி ஒப்புக் கொள்ளப் படுகை யாலும்-அங்கு ஸம்பூத சப்தத்தை எப்படி முக்கியமாகக் கொள்ளலாம்? என்றால்; ब्रह्मशब्दवत् பிருஹ்ம சப்தத்தைப் போல (ஒரே பிரகரணத்தில் அமுக்யமாகவும் முக்கியமாகவும் பிரயோகிப் படும் பிருஹ்ம சப்தத்தைப் போல; यथा பிருஹ்மசப்தம்; அது மாதிரி ஆகாச விஷயத்தில் அமுக்யமாகக் கொள்ள வேண்டிய ஸம்பூத சப்தத்தை அக்னி விஷயத்தில் முக்கியமாகக்கொள்ளலாம் அப்படிப் பிரயோகம் எங்கு? எனில் முண். உ. 1-1-9ல் तस्मादेतद्

ब्रह्म नाम रूपमन्नम् च जायते அந்த பரமாத்விடமிருந்து பிருஹ்மம் எனப்படும் பிரதானம் நாம ரூபங்களையுடைய காரியப் பொருள்களாகப் பிறக்கிறது-என்று மூலபிரகிருத்யை அமுக்யமாகக்குறிக்கும் பிருஹ்ம சப்தம் அதே பிரகரணத்திலேயே तपसा चीयते ब्रह्म ततोऽन्न-मभिजायते-மு.உ. 1-1-9 பிருஹ்மம் ஸங்கல் பத்தோடு கூடியதாக ஆகிறது-என்று முக்யார்த்தத்திவ் பிருஹ்மத்தைகுறிக்கிறதன்றே? அது போல இங்கேயும் அநுஷங்கம் (முன் சொன்னதை எடுத்துக் கொள்ளுதல் வேண்டும்)-அதாவது பிருஹ்ம சப்தத்தைப் போல-இங்கும் ஸம்பூத சப்தத்தை ஆகாசவிஷயத்தில் அமுக்யமாகவும் அக்னிவிஷயத்தில் முக்யமாகவும் கொள்ளலாமன்றே?- (இது சூத்ரக்காரரின் அபிப்ராயம் என பூர்வபக்ஷ சொல்கிறன்-பூர்வ அர்த்தத்தை எடுத்துக் கொள்ளலாம்-என்றால் உத்தர வாக்யத்தில் அபாவ்ராத் என்பது ஸ்பஷ்டம். அதாவது இங்கே ஸம்பூத சப்தம் பூர்வ வாக்யம் கௌணம்; உத்தரவாக்யத்தில் முக்யார்த்தம் எனப் பூர்வபக்ஷம். (அடுத்த சூத்ரம் இதற்குப் பதிலாகும்.)

ஸி. சூத். प्रतिज्ञाऽहानिरव्यतिरेकात् (2-3-5)

பிராதிக்ஞா அஹாநிரவ்யதி ரேகாத் (-do)

பிரதிக்ஞாऽஹாநி:-(பிருஹ்மத்தை அறிந்தால் எல்லாம் அறியப் பட்டதாகும் என்னும் காரிய காரண ஐக்யம் எனப்படும் ஏக விக்ஞாநேந ஸர்வ விக்ஞானம் சொல்லப்படுகிறது) இந்த பிரதிக்ஞைக்குக்குறையின்மை அவ்யதிரேகாத்-ஆகாயமும் பிருஹ்மகாரியமாவதற்கு உறுப்பாக பிருஹ்மத்தைக்காட்டிலும் வேறுபடாமலிருத்தலே ஆகும். வ்யதி ரேகாத்-பிரதிக்ஞைக்கு ஹானி-அதனால் அகார்யத்வம். ஆகவே ஆகாசம் பிருஹ்மத்தின் காரியம் என்பதற்கு அவசியம் காட்டவேண்டியது).

(சித்தாந்தம்) சாந்தோக்ய சுருதிக்கு அனுசரணை செய்து ஆகாயத்திற்கு உற்பத்தியைக் கூறும் தைத்திரீயவாக்யம் (ஆத்மந ஆகாஸ; ஸம்பூத: - பரமாத்மாவிடமிருந்து ஆகாசம் உண்டாயிற்று) என்பது அதை கௌணமாகக் கொள்ள வேண்டியது எனப்பூர்வ பக்ஷி கூறியது பொருந்தாது; எப்படி சாந்தோக்ய சுருதியிலே ஆகாசத்திற்கு உற்பத்தி ஒப்புக்கொள்ளப் பட்டது (எங்கேயெனில் ?) சா.உ. 6-1-3ல் येना श्रुत श्रुतं भवति

மண் கட்டியை அறிந்தால் மண்ணால் ஆனது அனைத்தும் அறியப் பட்டதாவதுபோல பிருஹ்ம விக்ஞானத்தினுல் ஸர்வவிக்ஞானம் (காரணத்தை அறிந்நால் அதன் காரியப் பொருள்களான ஆகாசம் முதலான அனைத்தும் அறியப் பட்டதாகும் என பிரதிக்ஞை செய்யப்பட்டது. இந்த பிரதிக்ஞை நிறைவேறுவதற்கு, ஆகாயமும் பிருஹ்மகாரியமாவதற்கு உறுப்பாக - அதாவது பிருஹ்மத்தை விட வேறுபடாத பொருளாக (அவ்யதிரேகாத்) இருக்கவேண்டும் ஆகஇவ்வண்ணம் ஆகாயம் பிருஹ்மகாரியமாதலால் சாந்தோக்ய சுருதியிலிருந்தே ஸித்திப்பதால் ஆகாயத்திற்கு உற்பத்தியைக் கூறும் தைத்திரீயாதி வாக்யம் முக்யார்த்தமே கொள்ளவேணும்- கௌணமாகாது.

(எங்கனமெனில் ஜகத் பிருஹ்மத்தின் காரியம் - பிருஹ்மம் உபாதான நிமித்தகாரணம் - அதனால் காரியகாரணம் ஐக்யம்— ஸ்வரூப ஐக்யமில்லை என்பதாகும். ஆகாசம் பிரும்மத்தின் காரிய மாதலால் - அவ்ய திரேகாத் भवति-வேறுபடாமலிருத்தலாலேயே ஆகும். ஆகவே ஆகாச காரியத்வம் அவசியமே ஆகும்.)

ஸூ. சூத்:- शब्देभ्यः (2-3-6)
சப்தேப்ய: (2-3-6)

ஸப்தேப்ய:-(ஸ்ருஷ்டிக்கு முன் பிருஹ்மம் ஒன்றே இருந்தது) என்று கூறும் வேத சப்தங்களாலும் (ஆகாசத்திற்கு உற்பத்தி உண்டு என விளங்குகிறது.)

இங்கே வியத்தின் உற்பத்தி சாந்தோக்யத்தில் காட்டப் பட்டது. சா. உ. सदेव सोम्येदमग्र आसीदेकमेवाद्वितीयम् என்று ஸோம்ய-ஸ்ருஷ்டிக்கு முன்பு ஸத் ஒன்றுதான் இருந்தது. ஏகமேவ அதைப்போல் இன்னொன்று இல்லாதபடி அத்விதீயமாகவிருந்தது. என்பதில்-ஸ்ருஷ்டிக்கு முன்பு பிரளய காலத்தில் பிருஹ்மம் ஒன்றே இருந்தது எனப்படுவதால், ஆகாசமும் பிறகு ஸ்ருஷ்டிக் கப்பட்டது எனத் தேறும். அவதாரண சப்தாத் - சப்தம் ஸ்பஷ்டம். முண்டக தைத்திரீயங்களில் ஆகாசாத் உற்பத்தி ஸ்பஷ்டம். ஆனால் சாந்தோக்யத்தில் அர்த்த ஸ்வாரஸ்யம்—

பிரளயத்திலே நாமரூபவிபாகமின்றி பிருஹ்மம் ஒன்ருகவே விசிஷ்ட பிருஹ்மமாகவே இருந்தது). இங்கே சாந் சுருதி வாக்யம் 6-8-7ல் - ऐतदात्म्यमिदं सर्वम् - இவ்வுலகம் முழுவதும் பிருஹ்மாத்மகமாக உள்ளது - ஆதி சப்தத்தால் கார்யத் வேந பிருஹ்மம் வேருக (காரணப் பொருளாகக்) காட்டப்படவில்லை (அவ்யதிரேகாத்). காரிய காரண ஐக்யம் பேசப்படுகிறது. இதனுல் ஆகாசத்திற்கு உற்பத்தி உண்டு. சா. 2-6-3ல் तत् तेजोऽसृजत- அப்பரம்பொருள் தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்தது-என்கிற வாக்யம் தேஜஸ்ஸை பரமாத்மா ஸ்ருஷ்டித்தது என்று கூறவில்லை என்றே கொள்ளவேண்டும். மற்றவிடங்களில் கூறப்பட்ட ஆகாசத்தின் உற்பத்தியைத் தடுக்க மாட்டாது. ஆகவே வியத் (ஆகாயம்) உற்பத்தி இல்லாத போனுலும் - கூறப்படாத போனுலும் - (அவசனமாத்ரேண) தேஜஸ்ஸை பிரதான்யமாக (முக்யமாக)ச் சாந். சுருதியில் கூறியுள்ளபோதிலும், வியத்தின் உற்பத்தி மற்ற சுருதிகளில் கூறப்பட்டதை பாதிக்காது-தடுக்காது. ஆகவே ஆகாசத்தின் உற்பத்தி அசைக்க முடியாதது

(இங்கு ஸர்வசாகா நியாயத்தினுல் பல சுருதிகளுக்கு ஒரே விஷயமானுல் ஒரே அர்த்தம் நிர்வஹிக்கப்பட வேண்டும். சாந்தோக்யத்தில் பிருஹ்மம் ஒன்றே யிருந்தது - அவ்யாகிருதமாக நாமரூப பிரிவின்றி விருந்தது. (6-3-1)ல் அதே சாந்தோக்யத்தில் "இதம் ஸர்வம்"-என்று சொல்லப்பட்டு-எல்லாம் பிருஹ்மாத்மகமாக எல்லாம் பிரும்மத்தின் காரியம் என்றும்; तत् - பிருஹ்மமே முந்திச் சொல்லப்பட்டதே-அதுவே காரணம் - அதாவது இந்த சுருதி பிருஹ்மம் சூக்ஷ்ம சித் அசித் வஸ்துக்களைக் கொண்டது-(பிரளயத்தில்)-ஸ்ருஷ்டியில் ஸ்தூலசித் அசித் வஸ்துக்களை-சரீரமாக இரு அவஸ்தைகளில் கொண்டு-தான் ஆத்மாவாக விருந்தது என்று கொள்ளவேண்டியது.

முதலில் தேஜஸ்ஸை ஸ்ருஷ்டித்தது-என்பதால் வரிசைக் கிரமம் திரிவிருத் கரணத்தில் சொல்லப்பட்டது. பஞ்சீகரணத்தில் ஆகாயம் கூட சேர்த்துச் சொல்லப்படுவதாகும்.)

**வி. ஸூத். यावद्विकारं तु विभागो लोकवत् (2-3-7)**
**யாவத் விகாரம் து விபாகோலோகவத் (do)**

யாவத் விகாரம் து (ஆகாயம் முதலான) எல்லாக் காரியப் பொருள்களுக்கும் விபாகம் (உற்பத்தி) சுருதியில் சொல்லப்பட்டு உள்ளது. லோகவத்-(தேஜஸ் முதலியவற்றைக் குறிப்பிட்டுச் சொன்னது) உலகிற் போலவேயாகும்.

து சப்தார்த்தத்திற்குகூட என்று அர்த்தம். எல்லாக் காரியப் பொருள்களுக்கும் ऐतदात्म्यमिदं सर्वम् - இது எல்லாம் பிருஹ்மத்தை ஆத்மாவாக உடையது-சா.உ. 6-8-7). இதனுல் ஆகாசத்தை பிருஹ்மத்தின் காரியமாக ஓதப்பட்டது-அவற்றுக்கு விபாகம் எனப்படும் உற்பத்தி கூறப்பட்டதாகவே ஆகிறது. விகாரத்வ-வசனத்திஞல் பிருஹ்மத்தின் காரியம் - உற்பத்தி கூறப்பட்டதாகவே ஆகிறது. लोकवत् - லோகத்திலே எப்படியோ = एते सर्वे देवदत्तपुत्राः- இவர்கள் அனைவரும் தேவதத்தனின் பிள்ளைகள்-என்று கூறிவிட்டு பிரதரன்யத்தை விட்டு சிலருடைய உற்பத்தியை மாத்திரம் விவரித்ததால்-அதனுல் மற்றவர்களுக்கு உற்பத்தி இல்லையென்று எப்படி ஏற்படாதோ - எல்லோருக்குமே உற்பத்தி உண்டு என்றுகுமோ-அதைப்போல இங்கு ஆகாயம் முதலான எல்லாவற்றையும் பிருஹ்ம காரியமாகக் காட்டிவிட்டு - கண்ணுக்குப் புலப்படும்படி யிருக்கை முதலிய சில பிரதான்யங்களையிட்டு தேஜஸ்ஸு முதலான சிலவற்றின் உற்பத்தியை விவரிக்கப்பட்டது-என்று கொள்ளவேண்டும். இதனுல் ஆகாயத்திற்கு உற்பத்தி இல்லையென்று யேற்படாது. இதே மாதிரி - वायुश्चान्तरिक्षश्चैतदमृतम् - பிரு. 2-4-3-3ல் வாயுவும் ஆகாசமுமாகிற இரண்டும் விநாசமற்றவை என்னும் சுருதியில்- அம்ருதம் என்பதற்கு-தேவர்களைப் போல ஆகாசமும் (மற்ற பூதங்களுக்கு முன்-தோன்றி பின் அழிவது போல) நீண்ட நாள் (சிரகாலம்) இருப்பது என்று உணர்த்த வந்ததே ஒழிய-இதற்கு அழிவில்லை என்று சொல்ல வந்ததில்லை-இதுதான் ஸூத்ரக்காரரின் அபிப்ராயமாகும்.

**ஸி. சூத். एतेन मातरिश्वा व्याख्यातः (2-3-8)**
**ஏதேந மாதரிஸ்வா வ்யாக்யாத: (2-3-8)**

ஏ தே ந - இதனுல், மாதரிஸ்வா (காற்றும் உற்பத்தி உடையதென்று) வ்யாக்யாத:-விவரிக்கப்பட்டதாகும்.

இதே நியாயத்தாலே - ஆகாசத்திற்குக் கூறப்பட்ட நியாயத் தாலே,வாயுவுக்கும் உற்பத்தி உண்டு எனச் சொல்லப்படதாகும். (மாதரிஸ்வா - தாயிடம் வளர்கிறது என அர்த்தம் - வாயுவைச் சொல்லியது) வாயு விஷயத்தில் அதிகமான ஆஸங்கை இல்லாம-லிருக்கஅர்த்த ஸித்தமான இந்த விஷயத்தைத் தெரிவிக்க, ஓர் அதிதேஸ சூத்ரம் தேவையா? (வாயுவிலிருந்து தேஜஸ்உண்டா யிற்று எனில் तेजोऽतस्तथा தேஜஸ்ஸை பிறகு ஸ்ருஷ்டித்தது என்னும் முதல் சூத்ரத்தில் அதசப்தத்தாலே வாயுவை எடுக்க வேண்டியிருக்கையால் இங்கு தனி சூத்ரமிட்டு அதை பிரஸ்தா-வித்துக் கொண்டாரே ஒழிய, இது அதி சூத்ரமன்று. தேஜோதி-கரணம்-2-3-2) என்பதின் விஷயமும் நோக்கவும்).

**ஸித். சூத். असंभवस्तु सतोऽनुपपत्तेः (2-3-9)**
**அஸம்பவஸ்து ஸதோऽநுபபத்தே; (2-3-9)**

அஸம்பவ:- உற்பத்தியின்மை (உற்பத்தியை நிஷேதிப்பதனுல் ஏற்படுவதில்லை)- ஸத:து-பிருஹ்மத்திற்கே பொருந்தும்: பிருஹ் மத்தின் காரியப் பொருளான எதற்கும் பொருந்தாது). அநு பபத்தே:- அப்படிக்கொண்டால், பிருஹ்மத்தை அறிந்தால் எல்லாம் அறிந்ததாக ஆகும் என்கிற பிரதித்ஞை பொருந்தாது என்பதினுல் துசப்தம் அவதரண அர்த்தத்தைக் காட்டி - அதில் ஹேதுவுடன் அந்வயம் - அதனுல் மாத்திரம் என அர்த்தம் வலி யுறுத்துகிறது-அஸம்பவ:-உற்பத்தியின்னமை. ஸத் என்பது பிருஹ் மம். அஸம்பவ:-அநுபபத்தி: (பொருந்தாமை) ஸத் பிருஹ்மத் தையே ஸர்வகாரணனுய், ஸச் சப்தவாச்யனுன பரமாத்மாவுக்கே எல்லாப்படியாலும் (ஸ்வருபத்லே) உற்பத்தியின்மை பொருந்தும் அவருக்கு வ்யதிரிக்தமான மற்ற எல்லாப்பொருள்களுக்கும் எவ்-வகையாலும் உற்பத்தியின்மை ஏற்படுவதில்லை, அதனும் உற்புத்

தியின்மை அவைகளுக்குப் பொருந்தாது अनुपपत्तेः என்னசொல்ல பட்டதென்றால், ஆகாசம் வாயுமுதலியவற்றின் உற்பத்தியைப்-பிரதிபாதனம் செய்வது உதாரணத்திற்க்காகவே ஆகும். பரமாத் மாவாகிற ஸத்திற்கு உற்பத்தி அஸம்பவம் ஏற்படாது; காரணம் அவரே பரம காரணமாவதால் பரஸ்யைவ பிருஹ்மண!: என்ப தாலே பரபிரும்மத்திற்கு எதிராக வ்யதிரிக்தமான ஸம்பூர்ண பொருள்களுக்கும் அதாவது அவ்யக்தம் (பிரதானம்) மஹத் அஹங் கார தன்மாத்திரைகள் இந்திரியங்கள் வியத் (ஆகாசம்) காற்று ஆகிற பஞ்ச பூதங்கள் இவைகளடங்கிய ஸம்பூர்ண பிரபஞ்சம் பிருஹ்மத்தின் காரியமாகும். இவைகளை அறிகிறது (காரியகாரஸ ஐக்யம் சரீர ஆத்ம ஐக்யத்தினல்) ஏகவிக்ஞானத்தினல் (பிருஹம மாகிற காரணத்தை அறிவதாலே) அதன் காரியங்களாகிற ஸர்வ வஸ்துக்களும் அறியப்பட்டதாகும். ஏகவிக்ஞானேந ஸர்வவிக்-ஞானம் என்கிற பிரதிக்ஞையினல் யேற்பட்ட ஞானம்-அதனல் காரியகாரண (சரீர ஆத்ம பாவம்) ஸ்தாபிதம் (அறியப்படுகிறது) அதனல் பிருஹ்மம் ஆகாயம் முதலிய அசேதனப் பொருள்களுக்கு காரணப் பொருளாக நிர்ணயம்; ஆகவே ஆகாசம் வாயு இவைகளுக்கு உற்பத்தியின்மை பொருந்தாது சரியாகாது. அவைகளுக்கு உற்பத்தியின்மை ஒட்டாது. தேஜஸ் ஆகாசாதி பதங்களுக்கு பிருஹ்மபர்யந்தம் பரம்பரை காரணம் ஏற்கனவே சொல்லப்பட்டதாகும். பிரகிருத்யதிகரணத்தில் உபாதான காரணம் பிருஹ்மத்திற்கு சொல்லப்பட்டது; ஆரம்பணுதி கரணத்தில் அநந்யத்வம் (அபேதம்-ஒற்றுமை) சொல்லப்பட்டது. (காரணமான) பிருஹ்மத்தைக் காட்டிலும் காரியமான உலகம் வேறுபடாமலே உள்ளது-வாசாரம்பணம் முதலிய வாக்யங்களி லிருந்து இது விளங்குகிறது. (கார்யகாரணம் ஒன்றே), மேலும் ஸர்வசப்தங்களுக்கும் பரமாத்மா பரியந்தம் முக்யார்த்தம் ஸ்தாபனம்-சொல்லப்படவேண்டியது - அதேபோல- இங்கேயும். சரீர ஆத்மபாவம்-அபிருதிக்ஸித்த வாசிசப்தங்கள் தர்மி பரியந்தம் அர்த்தம் கொள்ளவேண்டியது-என்கிற நியாயம் யேற்படுகிறது. காரணத்வாதி கரணத்திலும் ஆகாசம் முதலான காரியப் பொருள்களுக்குக் காரணமாக ஸர்வக்ஞத்வம் முதலான குணங்களோடு கூடிய பரமாத்மாவையே எல்லா வேத வாக்யங்

களும் கூறுகின்றன. பரமாத்மாவின் லிங்கம் அநுப்ரவேசத்திஞல் காட்டப்பட்டது என்பதாகும்.

தேஜோதி சரணம்-2 (சா. உப. 6-2) தை. அனு.

பூ. சூத் तेजोऽतस्तथा ह्याह (2-3-10)

தே ஜோऽதஸ்ததா ஹ்யாஹ (2-3-10)

தேஜ:-அக்னி தத்வமானது. அத: - முந்திய வாயுவிலிருந்தே (உண்டாகிறது) ததா ஆஹ ஹி-சுருதி அவ்விதம் கூறுகிறபடியால்,

மேலே நிர்வஹிக்கப்பட்டது-பிருஹ்ம வ்யதிரிக்த (வேருன) ஸம்பூர்ண வஸ்துக்களும் பிருஹ்மத்தின் காரியமாகும்-அதாவது பிருஹ்மம் காரணமாகவும்·காரணகாரிய ஐக்யபாவம் சரீர ஆத்மபாவத்தில் நிர்வஹிக்கப்பட்டது. (அதஞல் யேற்பட்டது ஸர்வ சப்தங்களும் பரமாத்மா பர்யந்தம் பரியவஸானம் செய்யப்பட வேண்டியதாகையால் - இந்த சூத்ரத்திஞல் தேறுவது-சரீர ஆத்ம பாவத்திஞல். அப்ருதிக்ஸித்த வாச்ய சப்தங்கள் தர்மி பரியந்தம் அர்த்தம் கூற வேண்டிய தாகும்). இந்த அதிகரணத்தில், நடுவில் உண்டாக்கப்பட்ட காரியங்கள்-அவைகளின் உற்பத்தி அதற்கு முந்தினதான வஸ்துவிலிருந்து உண்டாயிற்ரு (தத்தத் அநந்தர காரணபூதாத் வஸ்து ந உற்பத்தி); (அதாவது பரம்பரையாகவா? முந்திய காரண பொருள்களிலிருந்து) அல்லது அந்த காரணரூபங்களை பிருஹ்மமே எடுத்துக்கொண்டு-அந்த அந்த காரியங்களுக்கு (சரீர ஆத்ம பாவத்திஞல்) காரணமாயிற்ரு? (ரூபாதி என்பதற்கு சரீரத்வார பிரும்மம் காரணமாகிறது என்று அர்த்தம், எதுசரி? பூர்வபக்ஷம்-பிருஹ்மம் வ்யவஹரிக்கத்தக்க பொருள்களுக்கு முந்திய காரணப் பொருளின்மூலம் பரம்பரை யாக-கேவலாத் தத்தத்வஸ்து ந- என்று ஆகிறது. (எப்படி முப்பாட்டன் பாட்டனுக்கும் பாட்டன் மூலமாகவும் தகப்பன் மூலமாவவும் பரம்பரை காரணமாவதுபோல-பிருஹ்மம் அந்த அந்த வஸ்துக்களுக்கு நேரே காரணமாகாமல்-பரம்பரையாக ஆகிறது· எப்படி-முதலில் தேஜஸ் என்னும் அக்னிதத்வத்தை எடுத்துக்கொண்டால்-அது தனக்கு முந்திய "வாயு" எனப்படும்

காற்றிலிருந்து உண்டாயிற்று वायोरग्निः (வாயுவிடமிருந்து அக்னி உண்டாயிற்று-தை. அ. 1-2) பிருஹ்மத்தினிடமிருந்து நேரே உண்டாவதில்லை. பிருஹ்மத்திடனிடமிருந்து பரம்பரையாகப் பிறந்தவாயு விடமிருந்து அக்னி உண்டாயிற்று. அதனால் நேரே ஸாக்ஷாத்தாக பிருஹ்மத்திடமிருந்து அக்னி பிறக்கிறது என்று கொள்ள முடியாது.

பூ. சூத் आपः (2-3-11)

ஆப: (2-3-11)

ஆப :-ஜலதத்வமும் (அத!-அதற்கு முந்திய அக்னி தத்வத்திலிருந்தே உண்டாகிறது-ததா ஆஹ-ஹி-(சுருதி) அவ்விதம் கூறுவதால்.

பூர்வபக்ஷம்-அடுத்தபடியாக அப்புக்களாகிற ஜலதத்வத்தை எடுத்துக்கொண்டால்-அதுவும் தனக்கு முந்தினதான அக்னியிடமிருந்து உண்டாயிற்று-பிருஹ்மத்திடமிருந்து நேராக உண்டாவதில்லை, அதனால் ஜலமும் தேஜஸ்ஸிலிருந்து உணடாயிற்று. ஏனெனில் தை. அ. 1-2- अग्नेरापः (அக்னியிலிருந்து ஜலதத்தவம் உண்டாயிற்று) तदापोऽसृजत - சா. உ. 6-2-3; அக்னி ஜலத்தை ஸ்ருஷ்டித்தது. அக்நேராபர் அக்னியிடமிருந்து ஜலம் உண்டாயிற்று. என்கிற சுருதியும் இருக்கிறது. (அக்னி என்கிற பதத்திற்கு நாம் சொல்வது-அக்னி சரீர பரமாத்மா என்று அர்த்தம்) அதனால் பரமாத்மாதான் ஆப: (ஜலத்தை) ஸ்ருஷ்டித்தான் என அர்த்தமாகும்).

விளக்கம்:- (எல்லாவஸ்துக்களும் பிருஹ்மத்தின் காரியமாதலால்-சரீர ஆத்மபாவத்தினாலே-சரியாகும்-(சூத்ரம் (1-4-23) பரம்பரை காரணமாகமாட்டாது ஒரு தத்வம் இன்னொன்றுக்கு. நையாயிகள் ஆட்சேபித்துச் சொல்வது-பரமாணுக்கள்-பிரஸித்த ஆகாசம் மனஸ் ஆகியவை நித்யம்-அநாதி உண்டாக்கப்பட்டவையல்ல. ஆனால் பரமாணுவாதிகளின் வாதங்கள் ஏற்கனவே 2-10-16ல் நிராகரிக்கப் பட்டன. சரி—முந்தின அதிகரணத்தில்

ஆகாசம் பிருஹ்மத்தின் காரியமானதால் மனதும் ஆகாசத்தைவிட வேறானதாகக் கருதக்கூடாது. சரி-எல்லா வஸ்துக்களும் (ஒன்றும் மீதமின்றி பிரும்மக காரியங்களாகிறபடியால் அந்த பிருஹ்மம் நேரான காரணமாகுமா ஒவ்வொரு காரியத்துக்கும்? அல்லது பிரஸித்த ஆகாசம் ஒன்றுக்கு மாத்திரம் காரணமாகிறதா-மற்றவை அதனதன் முந்தின காரணப் பொருள்களின் காரியமாகிறதா-பரம்பரையான காரணமாகிறதா? பரம்பரையான காரணமாகுமானல் ஸ்ருஷ்டி கிரமத்திலுள்ள மற்றப் பொருள்கள் இவ்விதம் அதனதன் முந்தின வஸ்துவின் காரியமாகும். சாந். உப. அது ஜலத்தை ஸ்ருஷ்டித்தது-இதற்கு அர்த்தம் தேஜஸ் ஜலத்தை ஸ்ருஷ்டித்தது. இன்னொரு அபிப்ராயம்-ஒவ்வொரு காரியமும் பிரும்மத்தினிடமிருந்து-அதன் காரண வஸ்துவைத் தனது சரீரமாகக் கொண்ட பிருஹ்மத்தினிடமிருந்து உண்டாக்கப்பட்டது. உதாரணமாக பிரும்மம் தேஜஸ்ஸை சரிரமாகக் கொண்டு ஜலத்தை உண்டு பண்ணியது-இதுதான் வேதாந்தியினல் ஒப்புக் கொள்ளப்படுகிறது-(சூத் 10-17; சங்கரர் 7 சூத்ரங்களை-ஏழு அதிகரணங்களாக-ஒவ்வொரு சூத்ரம் கொண்டதாகப் பிரிக்கிறார்)

## பூ. சூ. पृथिवी (2-3-12)

## பிருத்வி (-do-)

**பிருத்வி**—பிருத்வி தத்வமும் (அதஃ-சேர்த்துக்கொண்டு- முந்திய ஜலதத்வத்திடமிருந்தே உண்டாகிறது. (ததா ஆஹஹி) (சுருதி) அவ்விதம் கூறுகிறது.

**பூர்வபக்ஷம்**—அடுத்தபடியாக பிருத்வி எனப்படும்-அதற்கு முந்திய ஜலத்தினிடமிருந்து உண்டாகிறதே ஒழிய-பிருஹ்மத்தினிடமிருந்து நேரே உண்டாவதில்லை-ஏனெனில் தை-சு-1-2 अद्भ्यः पृथिवी (ஜலத்திலிருந்து பூமிதத்வம் உண்டாக்கப்பட்டது. சா. உ. 6-2-4லும் ता अन्नमसृजन्त- அது (ஜலதத்வம்) அன்னம் (எனப்படும் பூமிதத்வத்தை) உண்டாக்கியது-என்று சொல்லப்படுகிறது. (சித்தாந்தி சொல்வது அது என்பதற்கு பிருஹ்மம்). (சங்கரர் 12-13 சூத்ரங்களை ஒன்றாக்கி ஒரே அதிகரணமாக்குகிறார்).

நீ கேட்கலாம் பிருத்வியை "அன்னம்" என்று எப்படி காட்டுகிறது (அன்னத்திற்கு-உணவு என்று தானே அர்த்தம்) இதற்கு சூத்ரக்காரரே பதிலளிக்கிறார்.

**சூ. சூத்ரம் अधिकाररूपशब्दान्तरेभ्यः (2-3-13)**
**அதிகார ரூபஸப்தாந்தரேப்ய: (2-3-13)**

அதிகார ரூபஸப்தாந்த ரேப்ய:- (பஞ்சபூத ஸ்ருஷ்டியைப் பிரஸ்தாபிக்கிற ஸ்ருஷ்டி பிரகரணத்திலே அந்நத்திற்கு கருப்பு ரூபத்தைச் சொல்லியிருக்கையாலே. மற்றொரு சுருதி வாக்கியத்திலும் (பிருதிவியே அந்நம் எனப்படும்)

**பூர்வபக்ஷம்:**—மஹாபூத ஸ்ருஷ்டி அதிகரணத்திலே-பிருத்வி என்கிற தத்வம் அன்ன சப்தத்தில் சொல்லப்படுகிறது என்று காட்டப்படுகிறது. அன்னம் என்று சொல்லப்படும் உணவு எல்லாம் பிருத்வியின் மாறுதலால் யேற்பட்ட காரிய சப்தமாகும். அப்படியே வாக்ய சேஷத்திலே-அன்னம் என்று சொல்லப்படும் காரியம் காரண வஸ்துவாகிற பிருதிவியைக் குறிக்கும். அதேபோல, மஹாபூதங்களின் வர்ணத்தை (ரூபத்தை) வாக்ய சேஷத்திலே கூறுமிடத்தில் சா. உ. 6–4-1-यद्ग्नेः रोहित रूपम्; तेजसस्तद्रूपम्; यच्छुक्लम्, तदपाम् यत् कृष्णम्, तदन्नस्य इति अप्तेजसोः सजातीयमेवान्नशब्दवाच्यं प्रतीयते । शब्दान्तरं च समानप्रकरणे, (தை ஆ. 1-2ல்) अग्नेरापः अद्भ्यः पृथिवी इति श्रूयते— (சா. உ. தாஅந்ந மஸ்ருஜந்த (6-2-4) சுருதிபிரகரணத்தில் கண்ணால் காணத்தக்க மூன்று பூதங்களின் ஸ்ருஷ்டியைக் கூறத் தொடங்கி - தத்தேஜோऽஸ்ருஜத - ததபோऽஸ்ருஜத - என்று அக்னி ஜலம் மஹாபூதங்களின் ஸருஷ்டியைபபற்றி அதிகாரம் (பிரஸ்தாபம்) யேற்பட்டிருப்பதால் - ஜலங்கள் அந்நத்தை ஸ்ருஷ்டித்தன என்றவிடத்தில் "அந்ந" சப்தத்தில் ஜலத்திற்கு அடுத்த தத்வமான பிருத்வியே கூறப்பட்டதாகும். அத்யத இத்யந்நம்-(உண்ணப்படுகிறதாகையால் அந்நம் எனப்படுகிறது என்கிற வ்யுத்புத்தியாலே உண்ணப்படும் பொருளைக் குறிக்கும் அந்த சப்தம் பிருதிவியை எப்படி குறிக்கும்? அதற்குப் பதிலாக அன்னம் முழுவதும் காரணமான பிருத்வியின் விகாரமே

(காரியமாகும்) மேலும் மேல் சொல்லப்பட்ட यदग्नेः रोहितं... யத் கிருஷ்ணம் ததந் நஸ்ய—சா2-6-4-1ல் எரியும் தீயில் காணப் படும் சிவப்பு நிறம் தேஜஸ்ஸினுடையது, வெளுப்பு நிறம் நீரினுடையது கருப்பு நிறம் அந்தம் எனப்படும் பிருத்வி னுடையது-இங்கே பஞ்சீகரணப்ரகிரியையிலே தீயிலுள்ள அந்தந்த பூதங்களின் நிறத்தைக் காட்டும் வாக்ய சேஷத்தில் கறுப்பு நிறத்தைக் காட்டும் வாக்ய சேஷத்தில் கறுப்பு நிறத்தை அந்நத்தின் நிறமாகக் காட்டுகையாலும்-அந்நம் எனப்படுகிறது ப்ருதிவியே என விளங்குகிறது, ஏனெனில் உண்ணப்படும் அந்நத்தின் நிறம் எப்போதும் கருப்பாகக் காணப்படுவதில்லை யாகையாலும்-அந்த அந்நத்தின் காரணமான ஸமஷ்டி பிருத்வீ தத்வத்தின் நிறம் கருப்பு என்று சாஸ்திரம் கூறுவதாலும், காரணமான அதுவே காரியத்தைச் சொல்லும் அந்த சப்தத்தினால் கூறப்படுகிறதென விளங்குகிறது. இங்கும் முதலில் அக்னியின் நிறத்தையும், பிறகு அப்பின் நிறத்தையும் கூறியபின்பு கூறப்படும் நிறம் பிருத்வியினுடையதாகவே யிருக்க வேண்டுமாகையால், அந்நம் பிருத்வியே என விளங்கும். தைத்-ஆனந்தவல்லியிலும் (1-2) ஸமான பிரகரணத்திலே-அக்நேராபः அத்ப்யः பிருத்வி- அக்னியிலிருந்து ஜலமும் ஜலத்திலிருந்து பிருத்வியும் உண்டா கின்றன-என்கிற சப்தாந்தரயானது ஜலத்திலிருந்து தோன்றி யது பிருத்வியே எனச் சொல்வதிலிருந்து தோன்றியது. இங்கு ஜலத்திலிருந்து உண்டானதாகக் காட்டப்படும் அந்நம் பிருத்வியே எனத்தெளிவாகிறது ஆக அதிகாரம் (பிரஸ்தாபம்) ரூபம் (நிறம்) சப்தாந்தரம் (ஸமான சுருதி பிரகரணம்-வேறு (சுருதிவாக்யம்) என்னும் மூன்றிலிருந்தும் பிருத்வியே அந்த சப்தத்தினால் கூறப்படுகிறது என்பது உறுதியாகும்; ஆகையால் பிருதிவியே அந்த சப்தத்தால் காட்டப்படுகிறது-என்று; अद्भ्यः पृथिवी जायते-ஆகையால் பிருத்விதத்வம் ஜலதத்வத்தி லிருந்து உண்டாயிற்று, தேஜஸ்-மற்ற உதாரணங்களும் இதைக் காட்டவே எண்ணப்படுகின்றன.

மேலே சொல்லப்பட்ட தேஜஸ் முதலான பூதங்களைக் காட்டுவதின் நோக்கம்-மஹத் முதலிய தத்வங்கள் ஸ்ருஷ்டி கிரமத்திலே அதனதன் முந்திய காரண வஸ்துக்களிடமிருந்தே

(தத்வங்களிடமிருந்தே) உண்டாக்கப்பட்டன-எப்படி சுருதி சொல்லிற்றோ-அதற்கு விரோதமாக ஒன்றும் சொல்லப்படவில்லை.

முண்டா. 2, 2-1-3ல் एतस्माज्जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च । खं वायुर्ज्योतिरापः पृथिवी विश्वस्य धारिणी - இந்த பரம் பொருளிடமிருந்தே பிராணனும் மனமும் எல்லா இந்திரியங் களும் ஆகாயம் வாயு, தீ நீர்-அனைத்தையும் தரிக்கும் பிருத்வி என்னும் பஞ்சபூதங்களும் உண்டாகின்றன-இதனால் பரம் பொருளிடமிருந்து இந்த பூதங்கள் உண்டானதாக-மற்றொரு சுருதி வாக்யமும் கூறுகிறது-மேலும் முன் 1-1-9ல் तस्मादेतद् ब्रह्मनाम रूपमन्नं च जायते-பரம் பொருளிடமிருந்து இந்த பிருஹ்மம் (பஞ்சீகரணம் யேற்படுகிறது) அன்னமும் இந்த ஜகத்தும் (ஜீவனும்) நாமரூபங்களால் பாகுபடுத்தப்படுகிறது-तस्माद्वा एतस्मादात्मन आकाशःसंभूतः அதிலிருந்தேதான் (பிருஹ்மத்தி லிருந்துதான்) ஆகாசம் உண்டாயிற்று (மு 1-1-9) तत् तेजोऽसृजत- அது தேஜஸ்ஸை உண்டாக்கியது (சா. 2. 6-2-3ல்). இத்யாதி சுருதிகள் பிருஹ்மத்தை பரம்பரையான காரணத்தைச் சொல் கிறதே ஒழிய நேரான காரணத்தைச் சொல்லவில்லை (பூர்வ பக்ஷம்).

(இங்கு கூறப்படுவது முப்பாட்டனிடமிருந்து நாம் உண்டா வதுபோல-அந்த அந்த பூதங்கள் பிருஹ்மத்தினிடமிருந்து பரம்பரையாக உண்டானதாகக் கூறியபடியே என்று நிர்வஹித்து விடலாமல்லவா? இப்படி சொல்வதால் விரோதமில்லை-ஆகவே தீ நீர் பூமி என்னும் பூதங்களுக்கும் இவற்றால் உபலக்ஷிக்கப் பட்ட மஹத் முதலிய காரியப் பொருள்களுக்கும் பிருஹ்ம் பரம்பரை காரணமாகிறதே ஒழிய, நேரே காரணமாவதில்லை- எனச் சொல்கிறான் பூர்வபக்ஷி). (பூர்வபக்ஷி சொல்வது பூர்வ தத்வங்களிலிருந்து பிறக்கிறது-இது தவறு. சித்தாந்தி சொல்வது-பரமாத்மாவிடமிருந்துதான் பிறக்கிறது-சங்கல்பம் (ஈக்ஷணம்) செய்து பிருஹ்மம் ஸ்ருஷ்டித்தது-அந்த அந்த வஸ்துக்கள் அதற்கு சரீரமான படியால-அவன் ஆத்மாவாத லால்—நேரான காரணமாகும்.) இதற்கு நாம் பதில் அளிக்கிறோம்

**ஸூ. தத்அபித்யானாதேவதுதல்லிங்காத் ஸ:** (2-3-14)
**ததபித்யாநாத் ஏவதல்லிங்காத்து ஸ:** -(do)

*தத பித்யாநாத் ஏவதல்லிங்காத்து-தானே பலவாக ஆவதாக ஸங்கல்பிக்கையாகிற பரமாத்மாவின் ஈக்ஷணகுணப்-அடையாளத்தாலேயே (லிங்காத்) ஸ:- பின்னுலுண்டாகும் மஹான் முதலிய காரியப்பொருள்களுக்கும் பரமாத்மாவே நேரான காரணமாவான்.*

**சித்தாந்தம்:-** *து சப்தத்தினல் பூர்வபக்ஷியின் கருத்து தள்ளப்படுகிறது-மஹத் முதலான பின்னுல் உண்டாகும் காரியப் பொருள்களுக்கும் பரமாத்மா நேரான காரணமாகிருனே ஒழிய (முப்பாட்டன் நமக்குக் காரணமாவதுபோல் பரம்பரா காரணமாவதில்லை-ஏனெனில் அந்த அந்த காரணப்பொருள் களும் பரமாத்மாவுக்கு சரீரமாகிறபடிலால்-அந்த அந்த மூந்தின வஸ்துக்களுக்கு பரமாத்மா ஆத்மாவாகிறபடியாலே-அந்த புருஷோத்தமனே (அவைகளுக்கும்) காரணமாகும். எப்படி?* **तदभि ध्यानरूपात्** - **तल्लिङ्गात्** *''நான் பலவாக ஆவேன்'' என்று பகவானே ஸங்கல்பம் செய்கிறுன் என்கிற அடையாளம் சொல் லப்படுகிறது ஸ:-பின்னுலுண்டாகும் மஹான் முதலிய காரணப் பொருள்களுக்கும் நேரான காரணமாகிறவன்-பரமாத்மாவே.*

**अभिध्यानम्**-*அ-சங்கல்பம்,* **बहुस्यामिति**-*என்கிற சங்கல்பம் (நானே பலவாக ஆவேன்)* **तत् तेज ऐक्षत, बहुस्यां प्रजायेयेति...ता आप ऐक्षन्त बहुव्य स्याम, प्रजायेमहि** - *சா. 2-6-3ல் (நான் பலவாக ஆகக் கடவேன். அதற்காகப் பிறக்கக்கடவேன் என்று அந்த தேஜஸ் சங்கல்பித்து, நாங்கள் பலவாக ஆகக்கடவோம்-அதற்க்காகப் பிறக்கக்கடவோம்-என்று அந்த அப்புக்கள் சங்கல்பித்தன-என்று தேஜஸ் முதலான தத்வங்கள் சங்கல்பிக்கிறதாக சுருதி கூறுகிறது. இந்த சங்கல்பம் மஹான் முதலியவற்றுக்கும் உள்ளதாகக் கொள்ளவேண்டும். அசேதனப் பொருள்களாகிற இவைகளுக்கு ஈக்ஷணம் (சங்கல்பம் செய்தல்) ஒட்டாது. அதனுல் முந்திய காரணப்பொருள்களைச் சரீரமாகக் கொண்ட பரமாத்மாவே இப்படி சங்கல்பித்து ஒவ்வொரு கார்யப் பொருளையும் நேரே*

படைக்கிருன் என்றே இவ்வாக்யத்திற்கும் பொருள்கூற வேண்டும். --அதாவது பரமாத்மாவுக்கு எல்லாப்பொருள்களும் சரீரம்-அவன் சரீரமாகக் கொண்டு-தான் ஆத்மாவாக விருக்கிருன். என அர்த்தம. பஹூபவன் (ஸ்ருஷ்டிப்பேன்) ஸங்கல்ப ரூபே-ஈக்ஷணம் சொல்லப்படுகிறது. அதனுல் பரமாத்மாவே மஹத் அஹங்கார ஆகாசம் முதலியவைகளுக்கும் காரணமாகிருன். ஈக்ஷணம் அசேதனங்களுக்கு ஒட்டாது. எல்லாப் பொருள்களையும் தனது சரீரமாகக் கொண்ட பரமாத்மாவுக்குப் பொருந்தும். (சரீர ஆத்மபாவம்) என்பதினுல் எல்லாவற்றிற்கும் பரமாத்மாவின் ஆதார ஆதேயத்வம் (தாரகத்வம்) சொல்லப் படுகிறது-(அநேந ஜீவேநாத்மநா அனுப்ரவிஸ்ய நாமரூபம் வ்யாகரவாண்-என்கிற சுருதியும் – विद्यत् रूपमेति என்பதும் காட்டப்படுகிறது. அதனுல் மஹத் முதலிய தத்வங்களுக்கும் பரமாத்மாவே இந்த லிங்கத்திஞல் - துல்ய யுக்தியினுல் - நேரான காரணமாகிருன் என்று கொள்ள வேண்டும். இதே கருத்தை அந்தர்யாமி பிராஹ்மணம் ஓதுகிறது. ஸ்வகாரிய ஸ்ருஷ்டி எனக் கொள்ள வேண்டியது.

**ஸ்ரீபாஷ்யம்:-** ஈக்ஷணம்-அந்த அந்த தத்வங்களைச் சரீரமாக உடைய பரமாத்மா-மேலான பரபிருஹ்மம் எனத்தெளிவு. சுருதியிலும் அவ்விதமே சொல்லப்படுகிறது - ஸர்வசரீரமாக விருப்பதாலே-பரமாத்மா எல்லாவற்றிற்கும் ஸர்வாத்மகத்வத்தினுல் - மேலானவன். அந்தர்யாமி பிராஹ்மணத்தில் यः पृथिव्यां तिष्ठन्... योऽप्सु तिष्ठन्...यस्तेजसि तिष्ठन्...यो वायौ तिष्ठन्....य आकाशे तिष्ठन्...இத்யாதிகளில் ஸர்வேஸ்வரன் பஞ்ச பூதங்களைச் சரீரமாகக்கொண்டு - ஒவ்வொன்றிலும் அந்தர்யாமியாக நிற்பதாகக் கூறப்படுகிறது பரமாத்மா-ப்ருத்வியில் வசித்துக்கொண்டு...அதேமாதிரி ஜலத்தில் இருந்துகொண்டு... தேஜஸ்ஸில் இருந்துகொண்டு-வாயுவிலும் ஆகாசத்திலும் இருந்து கொண்டு-பஞ்சபூதங்களைத் தன் சரீரமாகக்கொண்டுதான் ஒவ்வொன்றிலும் அந்தர்யாமியாக நிற்பதாகக் கூறப்படுகிறது. சுபலோபநிஷத்தில் - 2-7ல் यस्य पृथिवी शरीरम् - என்று ஆரம்பித்து. (எவனுக்கு பிருத்வி சரீரமோ)...यस्याऽपः शरीरम्

यस्या व्यक्तं शरीरम् இத்யாதி-எல்லாக்காரியப்பொருள்களும் அவனுக்கு சரீரம். (எவனுக்கு ப்ருத்வி சரீரமோ எவனுக்கு அஹங்காரம் சரீரமோ-எவனுக்கு புத்தி சரீரமோ-எவனுக்கு அவ்யக்தம் சரீரமோ—என்பதால் முந்திய காரணப் பொருள் களைச் சரீரமாகக் கொண்ட பரமாத்மாவிடமிருந்தே ஒவ்வொரு காரியப்பொருளும் நேரேயே உண்டாகிறது என்று தேறுகிறது.

பூர்வபக்ஷியினல் யேற்கனவே சொல்லப்பட்டது-एतस्माज्जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च மு. 2. 2-1-3 - பரமாத்மாவிடமிருந்து முக்ய பிராணனும் மனமும் ஸர்வ இந்திரியங்களும் உண்டாயின- இதனுலும் மேலான பிருஹ்மமே பிராணன் முதலியவைகளை உண்டு பண்ணிஞர்-என்று சொல்வதால் பரம்பரையாகச் சொல்வதும் பொருந்துமே-சரியாகத்தானே இருக்கிறது அவன் விஷயத்தில்-இதற்கு நாம் பதில் கூறுகிறோம்.

ஸி. ஸூத். विपर्ययेण तु क्रमोऽत उपपद्यते च (2-3-15)
விபர்யயேண து க்ரமோஅத உபபத்யதேச (2-3-15)

விபர்யயேண - பரமாத்மாவை சாக்ஷாத் காரணமாகக் கூறுவது-(அதாவது एतस्माज्जायते प्राणः-मनः ஸர்வேந்திரியாணி- என்று தொடங்கும் வாக்யத்திலே-வாக்யந்தரங்களில் அவ்யக்தம், மஹாந், அஹங்காரம் ஆகாசம்-என்று பரம்பரையாக உண்டாவ தாகச் சொன்ன கிரமத்திற்கு வேறுபாடாக-க்ரமः ச-பிருஹ்மத்தி னிடமிருந்து எல்லாம் நேரடியாக உண்டாவதாகப் படிக்கப்படும்) க்ரமும், அத: து-முந்திய தத்வத்தைச் சரீரமாகவுடைய பிருஹ் மத்தினிடமிருந்து நேரே ஒவ்வொரு தத்வமும் உண்டாவதாகக் கொள்வதாலேயே - உபபத்யதே - சரியாகும் - ஒட்டும் (ஸித் தாந்தம்).

து சப்தம் ''வாஸ்தவ அர்த்தத்திலே'' (ஆகும்). பூர்வ பக்ஷியின் கருத்தைத் தள்ளுகிறது - (अत இத்யாதிரான்வயம். அவ தராணர்த்தம். अत - சாக்ஷாத் பிருஹ்மத்திடமிருந்தே இவை உண்டாயிற்று. சகாரம் க்ரமத்துடன் அந்வயம் - (நிலம்) ஆனந் தர்யரூபக்ரமம் இவை சொல்லப்படுகின்றன-ஆகாசசாத் வாயு:

வாயோரக்நி-என்பது கிரமம். சாக்ஷாத் ஜன்யத்வமே சொல்லப் படுகிறது-பரம்பரையாகவில்லை.

அவ்யக்தம் மஹத் அஹங்கார ஆகாஸம் ஆகிற ஸ்ருஷ்டி க்ரமத்தை மாற்றுவதால் கிரமமும் (கிரம:ச) பிருஹ்மத்தினிட மிருந்தே எல்லாம் நேரடியாக உண்டாவதாகப் படிக்கப்படும் கிரமமும் ஒட்டும். (எப்படி) எந்த பரமாத்மா எல்லாக் காரியங்க ளுக்கும் சாக்ஷாத்தாககாரணமாகிறுன் என்பதாலே - (அதாவது மற்ற வேதவாக்யங்களில் (एतस्माज्जायते प्राणो मनः)—காட்டப் படும் அவ்யக்தம் மஹான் அஹங்காரம் ஆகாசம் என்னும் பரம் பராக்ரமத்துக்கு மாறுபட்டு - பிராணன் மனம் எல்லா இந்திரி யங்களும் பஞ்சபூதங்களும்-ஆக்ய ஒவ்வொன்றும் பிருஹ்மத்தி னிடமிருந்து நேரே உண்டாவதாக இந்த एतस्माज्जायते பிராணுே- கூறும். இந்த க்ரமம் முற்கூறியபடி முந்திய தத்வத்தைச் சரீர மாகக் கொண்ட பிருஹ்மத்திடமிருந்து நேரே ஒவ்வொரு தத் வமும் உண்டாகிறது எனக் கொண்டாலேயே ஒட்டும்-சரியாகும். பரம்பரையாகக் காரணம் சொல்வது - பரமாத்மாவை முந்தின தத்வத்திற்குக் காரணமாகச் சொல்வதும் - பிற்பாடுக்குமுள்ள விஷயத்திற்கும் விரோதமாகும். ஆகையால் एतस्माज्जायते प्राणो। இதில் அவனிடமிருந்து முக்ய பிராணனும் - மீண்டும்... உண்டா யின (மு-2-2-1-3) இந்த வாக்யம் எல்லாவற்றிருக்கும் பிருஹ்மம் சாக்ஷாத் காரணமாகிறது என்பதை நினைவுபடுத்து-சரியென்று காட்டுறது.

ஸூ. ஸூத். अन्तरा विज्ञानमनसी क्रमेण तल्लिङ्गादिति चेन्नाविशेषात् (2-3-16)

அந்தரா விக்ஞானமனஸி க்ரமேண தல்லிங்காதிதி சேந்நாவிசேஷாத் (do)

அந்தரா (பூத பிராணன்களுக்கு) நடுவில் விக்ஞான மனஸி- இந்திரியங்களும் மனசும், க்ரமேண-வரிசையாக உண்டாகின்றன- தல்லிங்காத்-பஞ்ச பூதங்களின் வரிசையாக உண்டாவதைக் காட்டியிருக்கும் அடையாளங்கள் உள்ளபடியால், இதிசேத் - எனில், ந - இது ஒட்டாது (ஏனெனில்) அவிசேஷாத்- (ஏதஸ்மாத்

ஜாயதே) என்னும் பதங்கள் பிராண: முதலான ஒவ்வொரு பதத்தோடும் அந்வயித்தல்) வாசியில்லாததால் சரியர்காது.

(இங்கு கூறப்படுவது-ஸர்வமும் பரமாத்மா ஜன்யத்வமில்லை-ஆனல் பாடக்ரமத்தில் யேற்படுவதான-அந்த அந்த காரியங்கள்-முன்பின் கிரமத்தைக் காட்டுவதற்காக இந்த வாக்யம் ஏற்பட்டதென்று விளங்குகிறது - இதனுல் ஏதஸ்மாத் ஜாயதே - என்று சொல்லப்பட்ட பிருஹ்மத்தை சாக்ஷாத்காரணமாக ஒவ்வொரு தத்வத்திற்கும் காட்ட எழுந்ததன்று-ஆகையால் பிருஹ்மத்தினிடம் இவை எல்லாம் தோன்றியன-என்று கூறியது மற்ற வாக்யங்களிற் கூறியபடி பரம்பரையாக உண்டாவதைக் காட்டும் - அப்படியே நிர்வஹித்து விடலாம் என்கிறுன் பூர்வபக்ஷி. அவன் அபிப்ராயம்-ஏதஸ்மாத் ஜாயதே என்பது நேரே பிறக்கின்றன என்பதைக் காட்ட நோக்கமல்ல;பிராணமந: ஸர்வேந்திரியாணி கம்வாயு:-என்று பிராணனுக்கும் பஞ்சபூதங்களுக்கு நடுவிலே மனம் விக்ஞானம் எனத்தக்க எல்லா இந்திரியங்களும் உண்டாகின்றன-என்கிற கிரமத்தைக் காட்டுவதற்கே எழுந்தது-கம்வாயு: ஜ்யோதி: ஆப: ப்ருத்வீ என்கிற பகுதியில் வேறு சுருதிகளில் காட்டப்பட்ட பஞ்சபூதோத்பத்தி க்ரமம் இங்கும் காட்டப்படுகிறதைக் காண்கிறோம். இந்த அடையாளத்திஞல்-முன் ஓதப்பட்ட பிராணன் மனம் இந்திரியங்கள் ஆகியவை பஞ்சபூதங்களுக்கு முன் வரிசையாக உண்டாகின்றன என விளங்குகிறது - இதைக் காட்டுவதற்கே இந்த சுருதி எழுந்தது. ஆகவிப்படிதத்வங்களின் முன் பின் கிரமத்தைக் காட்ட இந்த வாக்யம் ஏற்பட்டது என்பது விளங்குவதால், ஏதஸ் மாத் என்பதில் பிருஹ்மத்தினிடமிருந்து சாக்ஷாத்காரணத்தைக் காட்ட எழுந்ததன்று. ஆகையால் மற்ற வாக்யங்களில் கூறப்பட்டபடி-பரம்பரையாக உண்டாவதைக் காட்டி இவை பிருஹ்மத்தினிடமிருந்து உண்டாகின்றன எனச் சொல்லலாமே (பூர்வபக்ஷம்).

ஸ்ரீபாஷ்யம்:-விக்ஞான ஸாதனமாகிற இந்திரியங்களை-விக்ஞானம் என்று சொல்லப்படுகின்றன. என்ன சொல்லப்பட்டது என்றுல் - एतस्माज्जायते - என்பதில் - (பரமாத்மாவிடமிருந்து முக்யபிராணன்-மனம்-இந்திரியங்கள் உண்டாயின)

இந்த சுருதியில் பிருஹ்மத்திற்கு அநந்தரகாரியத்வம் சொல்லப் படுகிறது-அதாவது எல்லாத் தத்வங்களும் பரமாத்மாவிட மிருந்து நேரே பிறக்கின்றன என்று கூறுவதற்காக எழுந்த தன்று. பிராணன்-மனம்-இந்திரியங்கள்-என்கிற கிரமத்தைக் காட்டுவதற்கே-எழுந்தது. அதனால் இந்த வாக்கியத்தைக் கொண்டு ஸர்வ பொருள்களுக்கும் ஸாக்ஷாத்தாகவே பிருஹ்மம் காரணமாகிறது-என்கிற லிங்கத்தைக்கொண்டு இந்த அடை யாளத்திலிருந்தே முன்படிக்கப்பட்ட பிராணன் மனம் இந்திரியங்கள் ஆகியவை பஞ்சபூதங்களுக்கு முன் வரிசையாக உண்டாகின்றன என விளங்குகிறது. (இதேபடி கம் வாயு ஜ்யோதி ஆப: ப்ருதவி என்று வேறு சுருதிகளில் காட்டப்பபட்ட பஞ்சபூதோத்பத்தி க்ரமம் இங்கும் காட்டப்படுகிறது. இந்த அடையாளத்தால் பிராணன் மனம் இந்திரியங்கள் பஞ்சபூதங் களுக்கு முன் வரிசையாக உண்டாகின்றன என விளங்கும். ஆக கிரமத்தைக் காட்டுவதற்கு ஏதஸ்மாத் வாக்யம் உதவுகிறது-அது சாக்ஷாத் காரணமாக பிரும்மத்தைக் காட்டவரவில்லை). அதனால் அந்த அடையாளத்தினால்-வரிசை சொல்லப்படுவதலேே -சாக்ஷாத்காரணத்வும் ஸித்திக்காது-என்று சொல்வாயாகில்-இது சரியில்லை-பூர்வபக்ஷம் தவறு. கிரமவிசேஷ பரமாக விருக்கும் வாக்யமும் கூட இங்கேயும் எல்லாப்பொருளுக்கும் நேரே காரணம் என்றே கொள்ளவேண்டும். நிச்சயமாக பஞ்சபூத விஷயங்களில் ஆகாசம் முதற்கொண்டு உற்பத்தி சொல்வதாலே-அதேகிரமம் இங்கேயும் சொல்லப்படுகிறது. இரண்டையும் ஒன்றாகப்படித்து-அந்த அடையாளத்திலிருந்தே (பிராணன் மனம் இந்திரியங்கள் ஆகியவை பஞ்சபூதங்களுக்கு முன் வரிசையாக உண்டாயின-முன் பின் க்ரமத்தின் அடையா ளத்திலிருந்தே) அதன் நோக்கம் பிருஹ்மத்தினிடமிருந்து சாக்ஷாத்தாக எல்லாம் உண்டாயின என்பதல்ல. ஆகையால் சாக்ஷாத் காரணத்தைவிட்டு-பிருஹ்மத்திலிருந்து இவை எல்லாம் உண்டாகின்றன என்று கூறியது மற்ற வாக்யங்களில் கூறியபடி பரம்பரையாக உண்டாவதைக் காட்டியபடியே என்று சொல்லி விடலாம். பாடலிங்கத்தினால் பூத பிராணன்களுக்கு நடுவே விக்ஞானம் மனஸ்கூட கிரமத்தினால் யேற்பட்ட வரிசையாகும். ஆகையால் ஸர்வத்துக்கும் ஸாக்ஷாத்காரணம் பிருஹ்மம்தான்

என்று ஏற்படவில்லை-பரம்பரையாகவே நிர்வஹிக்கலாம் (மற்ற வாக்யங்களில் கூறியபடி சொல்லவாமே) என்று சொல்வாயாகில் -இந்த பூர்வபக்ஷக்கருத்து-न சரியில்லை-ஏனெனில் अविशेषात् - (ஏதஸ்மாத்ஜாயதே-என்னும் பதங்கள் பிராணன்-முதலான ஒவ்வொருபதத்தொடும் அந்வயிப்பதால்) - ஒற்றுமையில்லை - வாசியில்லை. (அதாவது சாக்ஷாத் காரணம்தான் பிருஹ்மம் என்றே கொள்ளவேண்டும்). एतस्माज्जायते - இதனிடமிருந்து பிராணன் முதலியவை உண்டாயின - என்கிற சுருதியில் விசேஷமில்லாதபடி-தனித்தனியே - (அதாவது பரம்பொருளிட மிருந்து உண்டாகிறது-என்னும் பதங்கள் பிராணன்மநம் ஸர்வேந்திரியங்கள்-கம்-வாயு - ஜ்யோதி ஆப :-ப்ருத்வீ - என்னும் ஒவ்வொரு பதத்தோடும் வாசியறத் தனித்தனியே அந்வயிக்கிற படியால் பரம்பொருள் தேஜஸ் முதலானவற்றிற்கு-ஒவ்வொன் றுக்கும் நேரே காரணம் என்றே இந்த சுருதியில் கூறப்படுகிறது எனக் கொள்ளவேண்டும். साक्षात्संबन्धस्याभिधेयस्य सर्वेषां प्राणादि-पृथिव्यन्तानामविशिष्टत्वात् स एव विधेयः; न क्रमः। (விக்ஞானம் மனம் என்பதற்கும், பூத ஆகாசாதிகளுக்கும் உற்பத்தியில் யாதொரு வித்யாஸமில்லை-ஆகவே ஏதஸ்மாஜ்ஜாயதே-என்கிற சுருதியில் முக்யபிராணன்-மனம் முதலியன பரமாத்மாவிட மிருந்து உண்டாயின-இதனால் பிருஹ்மத்தினிடமிருந்து இவை நேராகவே தோன்றின. இது மற்ற சுருதிகளின் விஷயங்களில் வேறுபடவில்லை-முக்ய பிராணனிலிருந்து ஆரம்பித்து-பஞ்சபூதங் களில் (பிருத்வியில்) முடித்திருப்பது; ஆகவே அந்த சம்பந்தம் தான் சொல்லப்படுகிறது. இதனால் கிரமம் சொல்லப்படவில்லை. மேலும் ஸ்ருஷ்டி கிரமத்திலே சுருதிகளில் வித்யாஸமிருக்கிறது-மற்றவைகளுடன்கூடப் பார்க்கும் போது. ஆகவே இந்த ஏதஸ் மாத் என்கிற வாக்யம் கிரமத்தைப் போதிக்க வந்ததல்ல. ஏனெனில் இந்த சுருதி வாக்யத்திலிருந்து சுபோல 2-II पृथिव्यप्सु प्रलीयते என்று ஆரம்பித்து तमः...एकीभवति - என்று முடிக்கிறபோது வேறு ஒரு கிரமத்தைச் சொல்கிறது (பிருத்வி அப்பில் ஒடுங்குகிறது என்று ஆரம்பித்து-முடிக்கிறபோது-தமஸ் பரமாத்மாவுடன் ஒன்றேயாகி விடுகிறது. ஆகவே ஏதஸ்மாத் வாக்யத்தின் நோக்கம்-ஸாக்ஷாத் ஸம்பவம் (உற்பத்தியாவது)

ரூபஸம்பந்தத்தைச் சொல்லி - எல்லாவற்றிற்கும் பிராணுதி பிருத்வி முதலியவைகளுக்கு-பரமாத்மாவே சாக்ஷாத்காரணம் என்பதாகும். கேவலம் கிரமத்தைச் சொல்ல வரவில்லை. பாடக்ரம அதீன க்ரமத்திலும் விரோதம் விருப்பதால் இங்கே கிரம பரமாக சுருதி சொல்ல வரவில்லை. மேற்சொல்லிய சுபோல உபநிஷத் வாக்கியத்திலும் க்ரமத்திலும் வித்யாஸமிருக்கிறது. ஆகையால் அவ்யக்தாதி தத்வங்களை சரீரமாகக் கொண்ட பர மாத்மாவிடமிருந்தே எல்லா தத்வங்களாகிற காரியங்களனைத்தும் உற்பத்தியாகின்றன. தேஜஸ் முதலிய சப்தங்களும் அவைக ளுக்கு ஆத்மாவாக விருக்கும் (तदात्म भूतं ब्रह्मैव) பிருஹ்மத்தையே குறிக்கின்றன.

மேலும் சொல்லப்படலாம் - இம்மாதிரி ஸர்வ சப்தங்களும் பிருஹ்ம வாசித்வம் (பிரும்மத்தையே குறிக்கின்றன) என்றால் - ஒவ்வொரு வஸ்துவைக் காட்டும் ஒவ்வொரு சப்தமும் - அந்த அந்த வஸ்துவின் வ்யபதேச வ்யூத்பத்தியினால் யேற்படும் அர்த் தங்களுடன் விரோதம் ஏற்படும் - என்கிற ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரரே பதில் கூறுகிறார். (அடுத்த சூத்ரத்தில்)

(இங்கே கூறப்படுவது - முண்டக உபநிஷத் வாக்யம் (2-1-3) (ஏதஸ்மாத் ஜாயதே) சாக்ஷாத் காரணத்தை பிருஹ்மத்திற்கு கூறுகிறது-என்று வாதிக்கப்படுகிறது - அது ஸ்ருஷ்டி கிரமத்தை கூறுகிறது - முக்யபிராணன் மனஸ், இந்திரியங்கள், பஞ்ச பூதங்கள் - இவை பிரும்மத்தினிடமிருந்து உண்டாயின. ஸ்ருஷ்டி பிருஹ்மத்தினிடமிருந்து முக்ய பிராணனலிருந்து உண்டாகிறது; மற்றவை அந்த அந்த தத்வங்களுக்கு முந்தினதான தத்வத்தி லிருந்து வரிசையாக உண்டாயிற்று. மற்ற சுருதி வாக்யங்கள் இந்த உற்பத்தி கிரமத்தை மனஸ்ஸிலிருந்து ஒப்புக்கொள் கின்றன - மனஸ் முக்ய பிராணனிடமிருந்து உற்பத்தியாகிறது என்பது இங்கே போதிக்கப்படுகிறது. இதற்குப் பதிலாக அந்த வரிசை முக்ய பிராணன்-மனஸ்ஸுடன் மாறுகிறது. முக்ய பிராணன் வாயு தத்வத்தின் காரியம் அது மனத்திற்கு முன்பாக வராது. மேலும் எல்லா வஸ்துக்களும் பிருஹ்மத்தினிடமிருந்து நேராகவே உற்பத்தியாகின்றன-அதற்கு முந்தின தத்வத்தி

லிருந்து உற்பத்தியாகவில்லை. எல்லாத் தத்வங்களுக்கும் பிருஹ்மத்தையே காரணமாகக் கொள்வதால்-அவை பிரும்மத்திற்கு காரியமாகின்றன. ராமானுஜர் வேதார்த்த ஸங்கிரஹம் - தீபத்திலே - இதே ஸமான ஸம்பந்தம் ஸமாநர்தி கரணத்தினால்-அவைகளை குறிக்கும் பதங்களுக்கும் - பிருஹ்மத்தைக் காட்டும் பதங்களுக்கும் ஒரே வேற்றுமையில் படிக்கப்படுகிறபடியால் - ஒரே ஸமான சம்பந்தம் உள்ளது என்கிறார். இதனால் இரண்டு வழிகளாலும் பூர்வபக்ஷியின் அபிப்ராயம் தள்ளப் படுகிறது.

சுபோல உபநிஷத் வாக்யத்தில் பிராணனுக்கும் பஞ்ச பூதங்களுக்கும் நடுவில் மனமும் இந்திரியங்களும் காணப் படாமையால் - அதற்கு முரணாக இந்த (ஏதஸ்மாத்) சுருதியில் கிரமம் விதிக்கப்பட்டிருக்கிறது என்று கூறுவது பொருந்தாது. ஆகவே அவ்யக்தம் முதலியவற்றைச் சரீரமாகக் கொண்ட பிருஹ்மம்தான் எல்லாக் காரியங்களுக்கும் சாக்ஷாத் காரணம். அக்நேராப: முதலான வாக்யங்கள் தேஜஸ்ஸாகிற அக்னி முதலானவற்றிலிருந்தே ஜலம் முதலானவை உண்டானதாகக் கூறுகின்றனவே என்றால் - அங்கும் அக்னி சப்தம் முதலானவை அக்னி முதலானவற்றைச் சரீரமாகக் கொண்ட பிருஹ்மத்தையே குறிக்கின்றன வாகையாலே - யாதொரு விரோதமில்லை. तेजः முதலியவைகளும் शब्दाः சப்தங்களும் அவைகளுக்கு ஆத்ம பூதமாகவிருக்கும் பிருஹ்மத்தையே குறிக்கின்றன. என்பதாகும்). नन्वेवं सर्वशब्दानां ब्रह्मवाचित्वे सति तैस्तै शब्दैः तत्तद्वस्तुव्यपदेशो व्युत्पत्ति सिद्ध उपरुद्ध्येत - तत्राऽऽह (அடுத்த சூத்ரத்தினால் சூத்ரக்காரர் பதில் அளிக்கிறார்.) உலகில் அக்னி முதலான சப்தங்கள் அக்னி முதலான அந்தந்தப் பொருள்களையே குறிப்பதாக பிரஸித்தியிருக்க, அந்த சப்தங்களால் பிருஹ்மத்தைக் குறிப்பது அமுக்யமாகுமே-என்கிற ஆக்ஷேபத்திற்கு இந்த சூத்ரம் (17) பதிலாகும்.

**ஸி. சூத்ரம்.** चराचरव्यापाश्रयस्तु स्यात् तद्व्यपदेशो भाक्तस्तद्भाव भावित्वात् (2-3-17)

**சராசர வ்யாபாஸ்ரயஸ்து ஸ்யாத் தத்வ்யபதேஸா பாக்தஸ் தத்பாவபாவித்பாத் (2-3-17)**

- இரண்டு விதமாக அர்த்தம் சொல்லலாம்—

(1) தத்பாவ பாவித்வாத்-பிருஹ்மம் (அந்தர்யாமியாக) இருப்ப தற்குப் பிறகு யேற்படுவதால் - சராசர வ்யாபாஸ்ரய -: தத் வ்யபதேஸ:து சராசரங்களைப் பற்றிய சொற்களை பரமாத்மா பரியந்தமாக (வேதாந்த ஞானிகள்) வழங்குவது (கொள்வது) அபாக்தஃ ஸ்யாத்-முக்கியமாகவே ஆகிறது.

(2) தத்பாவ பாவித்வாத்-பிரகாரியை அறிந்த பிறகே, பிரகாரத்தைச் சொல்லும் சொல். பிரகாரியையும் வழங்கக் கூடுமாகையால், சராசரவ்யா பாஸ்ரய: தத்வ்யபதேஸ; து-சராசரங்களைப்பற்றிய (லௌகிகர்களின்) அந்தந்த வழக்கு பாக்த: ஸ்யாத்-அமுக்யமாகவே ஆகிறது.

(அதாவது தேவதத்தன் என்கிற பெயர்-அந்த வ்யக்தியைக் குறிக்கும்-அது பரமாத்மாவையும் குறித்தாலும் ஸர்வ சப்தங்களும் முக்கியார்த்தத்தில் பரமாத்மாவைக் குறிக்கின்றன என்பதால் பரமாத்மா அந்தர்யாமியாக யிருப்பதற்கு பிறகே, நாமரூப வ்யாகரணம் யேற்படுகிறது என்கிறபடியால்).

'து' சப்தம் பூர்வபக்ஷியின் ஆக்ஷேபத்தைத் தள்ளி;யேற்பட்ட சங்கையை நிவிருத்தி செய்கிறது என்கிற அர்த்தம், நிகில ஜகத் அதாவது ஜங்கம-ஸ்தாவர பொருள்களைக் குறிக்கும் சொற்கள் பரமாத்மாவினிடத்தில் முக்கியமானவையே - ஆயினும் அவை வெட்டப்பட்டு (நிஷ்கர்ஷ சப்தங்களாக भाक:) அந்த அந்த குறிப்பிட்ட (கௌணார்த்தமாக) பொருள்களையோ-வ்யக்தியையோ குறிக்கின்றன. (கேள்வி எழும்-அது எப்படி பரமாத்மா விஷயத்தின் முக்யமாகும்-எனில் எல்லாப் பொருள்களும் பிருஹ்மத்திற்கு தேகமாயிருந்து கொண்டு அதற்கு சரீரமாக (பிரகாரமாகயிருப்பதால்) அந்தப் பொருள்களைச் சொல்லும். இப்படி பிருஹ்ம பரமான வாச்ய சப்தங்கள் வெட்டப்பட்டு ஒரு பகுதியினால் அந்த அந்த வஸ்துக்களைக் குறிக்கின்றன. நிஷ்கர்ஷ பிரயோகம் யேற்படுகிறது-என அர்த்தம். ஸமஸ்த வஸ்துக்களுக்கும் பிரகாரி (ஆத்மா) பிருஹ்மம்-அவை பிருஹ்மத்திற்கு சரீரமாகிறபடியால்-பிரகா-கார பூத (சரீரபூத) வஸ்து பிரத்யக்ஷம் போன்ற பிரமாணங்களால் விஷயங்களாகின்றன. ஆனால்

பிருஹ்மமோ வேதாந்த சிரவணத்தினுல் அறியப்படுகிறபடியால் - இந்த பிரகாரி வேதாந்த அறிவு யேற்படுவதற்கு முந்தி அறியப் படமாட்டாது. ப்ரகாரியான (சரீரியான) பிருஹ்மம் வரை அந்த சப்தங்களின் பொருள் பர்யவஸானம் செய்யப்படுவதால்- ஒவ்வொரு குறிப்பிட்ட பதம் இந்த உலகிலே, வெட்டப்பட்டு- அந்த அந்த வஸ்துவையோ (வ்யக்தியையோ) குறிப்பதாகப் பிர யோகமாகிறது- அது அதன் உண்மையான பொருளில் ஏகதேச மாகும் (ஒரு பகுதியாகும்). எல்லாப் பொருள்களும் பிருஹ்மத் திற்கு தேகமாக விருக்கிறபடியால்- அந்தப் பொருள்களைச் சொல் லும் "தேஜஸ்" முதலான சப்தங்கள் அந்த அந்த வஸ்துக்களை மாத்திரமே சொல்வதாக - ஒரு பகுதியின் அர்த்தமாக - ஆகின் றன. அந்த சப்தங்களின் நிஜ அர்த்தம் பிரகாரியான பிருஹ்மத் தையே குறிப்பதில் முடிகின்றன்வாகும். இப்படி வ்யத்புத்தி பண்ணி பிருஹ்ம விஷயத்தில் வ்யபதேசம் இல்லையென்றே அல்லது அமுக்யமாகவோ ஆகும்படி நேரிடும். இத்தகைய சங்கை யைப் போக்கவே சூத்ரத்தில் - चराचरव्यपाश्रयस्तु என்று கூறப் பட்டு-இந்த ஆட்சேபத்தை பரிகரிக்கிறது. (சராசரங்களைப் பற்றிய சொற்களை பரமாத்மா பர்யந்தமாக வேதாந்த ஞானிகள் வழங்குவது அபாக்த: ஸ்யாத்-முக்கியமாகவே ஆகிறது. (இப்படி யும் கொள்ளலாம் சராசரங்களைப்பற்றிய (லௌகிகர்களின்) அந்தந்த வழக்கு பாக்த: ஸ்யாத்-அமுக்யமாகவே ஆகிறது). चराचरव्यपाश्रयः तद्व्यपदेशः - தத்வாசி சப்தங்கள் - அதாவது சராசரவாசிசப்தங்கள் பிருஹ்ம விஷயத்தில் அபாக்த:-முக்ய ஏவ (முக்கியமாகவே ஆகிறது). எப்படி-பிருஹ்ம பாவ பாவித்வாத்- பிருஹ்மம் அந்தர்யாமியாக விருப்பதற்குப் பிறகு யேற்படுவதால்- ஸர்வ சப்தங்களும் பரமாத்மா பரியந்தமே வாசக பாவத்தை அடைகின்றன-ஏனெனில் பிருஹ்மம் அந்தர்யாமியாக விருப்ப தற்குப் பிறகே நாமரூப வ்யாகரணம் சுருதியினுல் செய்ததாக ஏறபடுவதால்-அதனுல் முக்யமாகவே பரமாத்மாவினிடத்தில் ஆகிறது, (யேற்படுகிறது). "கோ" சப்தம்-கோத்வமாகிற சரீ ரத்தை (பிரகாரத்தைச்) சொல்லி, அதோடு, கூடியதாய்-பிரகாரி யான கோவ்யக்தியைக் குறிப்பதுபோல முக்யமாகக் லோகத்தில் காணப்படுகிறது.

**விளக்கம்:**—பிருஹ்மபாவம்-சகலசராசரங்களிலும் பிருஹ்மத்தின் ஸத்பாவம்-அநுப்ரவேசம்-அதற்குப் பிறகு நாமரூப வ்யாகரணம்-என்பநு சுருதி பிரமாண பிரதர்சனம். அப்ரதிக்ஸித்த தர்மங்களாக அந்த வஸ்துக்கள் பிருஹ்மத்திற்கு ஆகிறபடியால்-அவைகளின் அர்த்த பர்ய வஸானம்-பிரகாரி (ஆத்மா) பரியந்தம் யேற்படுகிறது-என்பது சொல்லப்படும், மொத்தத்தில் சுருதியின் காரண வாக்யங்களில் எல்லா சப்தங்களும் விசிஷ்ட பரத்வாத்-ஸாக்ஷாத் பிருஹ்மகாரியத்வமேவ அவை பிருஹ்மத்தின் காரியங்களாக ஆகின்றன-एवंचेति (மேற்கூறிய திருஷ்டாந்தத்திற் போல-இங்கு பிரகாரியான பிருஹ்மம் கண்ணுக்கு புலப்படாதது (பிரத்யக்ஷ ஸித்தமல்ல); வேதாந்த சிரவணத்தால் அறியப்படுகிறது. அவர்களே பிருஹ்ம பரியந்தம் பரிய வஸானம் என்பார்கள். அத்தகைய வேதாந்த ஞானமில்லாதவர்கள் அறிய மாட்டார்களாகையாலே-தேஜஸ் முதலான பிரகாரப் பொருள்களை மட்டுமே (நிஷ்கர்ஷமாக) குறித்து தேஜஸ் முதலான அந்தந்த சப்தங்களை வழங்குவது-இது அமுக்யமாகும். ஆகையால் சூக்ஷ்ம சேதநாசேதந விசிஷ்டமான பிருஹ்மமே ஸர்வ ஜகத் காரணம் எனத் தேறுகிறது.

*ஆத்மாதி கரணம் - (2-3-3)*

ஸி. சூ. नात्माश्रुतेर्नित्यत्वाच्च ताभ्यः (2-3-18)

**நாத்மா ஸ்ருதேர் நித்யத் வாச்ச தாப்யः ( do )**

ஆத்மா-ஆத்மாவானது ந-உண்டாவதில்லை ஸ்ருதே:-சுருதி அப்படி கூறுவதாலே; தாப்ய:-அந்த சுருதிகளிலிருந்தே. நித்யத்வாத்-ஆத்மா நித்யமானது என்று ஏற்படுகிறபடியாலும்.

**சங்கதி** ஆகாசம் தேஜஸ் முதலிய அசேதனப் பொருள்கள் ஸ்வரூப பரிணாமமாகிற விகாரத்தை உடையவையாகையால், மேல் இரண்டு அதிகரணங்களில் அவை பிருஹ்மத்திற்குக் காரியமாகின்றன-என ஸ்தாபிதம். ஆகாசம் முதலான அவைபோல ஜீவனும் பிருஹ்மத்திற்குக் காரியமாகிறபடியால் அவைகளைப்

போல, ஜீவனுக்கும் உற்பத்தியை ஒப்புக்கொள்ள வேண்டும். என்கிற சங்கையைத் தள்ளி-ஜீவனின் நித்யத்வத்தை ஸ்தாபித்து, ஸ்வரூப பரிணமமில்லை-ஸ்வபாவ பரிணமத்தை ஒப்புக்கொண்டு-வேறு வகையில் ஜீவர்களும் பிருஹ்ம காரியமாகின்றனர் என்று இந்த அதிகரணத்தில் கூறப்படுகிறது. (சாரீரக காரிகாவளி).

ஆகாயம் முதலான அசேதனப் பொருள்கள் எல்லாம் பிருஹ்மத்தினிடம் உற்பத்தியாகின்றன-எனச் சொல்லப்பட்டது. இங்கே ஜீவனுக்கும் அவை போல உற்பத்தி யேற்படுகின்றதா-என்கிற விஷயம் ஆராயப்படுகிறது-உண்டா அல்லது இல்லையா? எது சரியாகும்? अस्तीति - உற்பத்தி ஆகிறது (பூர்வபக்ஷம்) எப்படி? ஏக விக்ஞானத்தினல் ஸர்வ விக்ஞானம் என்கிற பிரதிக்ஞை பூர்த்தியாகக் காட்டப்படுகிறது-மேலும் ஸ்ருஷ்டிக்கு முன்பு ஒரே ஒரு தத்வம் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. (ஆத்மா - ஜாத்யேக வசனம்). ஆகாசம் முதலிய தத்வங்களைப் போலவே-ஜீவர்களுக்கும் உற்பத்தியைச் சொல்லும் வாதிகள்-தங்கள் பக்ஷத்திற்கு சுருதியின் ஆதாரத்தைக் காட்டுகின்றனர்-தை. அம் 1-1-यतः प्रसूता जगतः प्रसूति तोयेन जीवान् व्यससर्ज भूम्याम् । பரமாத்மா - (அவனிடமிருந்து-)பிரகிருதியாகிற ஜனனி பிறந்தது, பரமாத்மா ப்ருதிவியில் எல்லா ஜீவர்களையும் உண்டாக்கினர்-ஜலம் முதலிய பூதங்களுடன் யஜு-1-அஷ் प्रजापतिः प्रजा असृजत - பிரஜாபதி எல்லா பிரஜைகளையும் படைத்தார். (உண்டாக்கினர்). சா. 2-6-8-4 - सन्मूलाः सोम्येमाः सर्वाः प्रजाः सदायतनाः सत्प्रतिष्ठाः-இந்த உண்டாக்கப்பட்ட எல்லாப் பொருள்களும்-ஸோம்ய-ஸத்தில் தங்களது உற்பத்தியைக் கொண்டது-ஸத்திலேயே இருப்பிடமாகக் கொண்டவை-ஸத்திலேயே பிரதிஷ்டிக்கப்பட் டிருக்கின்றன (ஸ்தாபிதம்) தை. பி. यतो वा इमानि भूतानि जायन्ते (எந்த பரமாத்மாவிடமிருந்து இந்த பூதங்கள் உண்டாகின்றனவோ) முதலான சுருதிகளில் ஜீவனுக்கு நேரே உற்பத்தி சொல்லப்பட்டிருக்கையால் ஜீவன் உள்பட ஜகத்தின் உற்பத்தி) சொல்லப்பட்டிருக்கும் வசனங்களிலிருந்து - ஜீவனின் உற்பத்தி காட்டப்படுகிறது.

न च वाच्यम् - இம்மாதிரி சொல்லக்கூடாது-பிருஹ்மம் நித்ய மானதாலே - तत्त्वमसि - போன்ற மஹாவாக்யங்களில் ஜீவனுக்கு பிருஹ்மத்தின் ஸாம்யத்வம் (பிருஹ்மத்வம்) யேற்படுவதாலே - ஜீவனும் பிருஹ்மத்தைப்போல நித்யம்தான் (என்று சொல்லக் கூடாது). சா. 2-ऐतदात्म्य मिदं सर्वं-இந்த காணப்பட்ட பொருள் கள் எல்லாம் (ஜகத்) பிருஹ்மத்தை ஆத்யாவாகவுடையவை; சா. 2-3-14-1ல் सर्वं खल्विदं ब्रह्म - இவை எல்லாம் பிருஹ்மமே- என்பதைப் போலவே, இங்கேயும் யேற்படும் - ஆகாசம் முதலான வஸ்துக்களை பிருஹ்மத்வம் கொண்டவை என்று எப்படி அறி கிறோமோ, அதேபோல நித்யத்வமும் அவைகளுக்கு ஏற்படும். ஆகவே ஆகாசத்தைப் போலவே-ஜீவனுக்கும் உற்பத்தி உண் டென்று தெரிகிறது. (பூர்வபக்ஷம்).

இவ்விதம் சொல்லப்படுமாகில் - நாம் பதில் கூறுவோம். नात्माश्रुतेः-इति. ஜீவன் உண்டாவதில் சுருதி அப்படி கூறு கிறது. (பூர்வபக்ஷம் தவறு)-ஏனெனில் நித்யத்வாத் ச-ஆத்மா நித்யமானது என்று *ஏற்படுகிறபடியால்( கட். 2-18ல் न जायते म्रियते वा विपश्चित् । அறிவுள்ள ஜீவன் (எல்லாம் அறிபவன்) பிறப்பதுமில்லை - இறப்பதுமில்லை. ஸ்வே. 2-1-9 ज्ञाज्ञौ द्वावजौ- ஸர்வக்ஞனை ஸர்வேஸ்வரனும் அக்ஞனை ஜீவனும் பிறப்பற்ற வர்கள் முதலான சுருதிகள் ஜீவனுக்கு உற்பத்தியை நிஷேதிக் கின்றன-இல்லை எனக் கூறுகின்றன. ஆத்மா நித்யம் என்றும் இதில் தெளிவாகிறது. ஸ்வே. 2-6-13ல் नित्यो नित्यानां चेतनश्चेतनानामेको बहूनां यो विदधाति कामान् நித்யர்களான பல சேத னர்களுக்கு, நித்யனை ஒரு சேதனன் விருப்பங்களை அளிக்கிறான். கட் 2-18ல் अजो नित्यः शाश्वतोऽयं पुराणो न हन्यते हन्यमाने शरीरे - பிறப்பற்றவனாய், நித்யனாய், ஸாஸ்வதனாய் பழையோனாயினும், புதியவனாயிருக்கும் இந்த ஜீவன் சரீரம் அழியும்போது அழிவ தில்லை - முதலிய சுருதிகளிலிருந்து ஆத்மா நித்யமானவன் என்று சுருதியிலிருந்தே தெரிய வருகிறது. ஆகவே ஆத்மா உற்பத்தி யாகவில்லை.

அவ்விதமானால் - எப்படி ஏக விக்ஞானத்தினால் ஸர்வ விக்ஞானம் - ஒன்றை அறிந்தால் எல்லாம் அறியப்பட்ட

தாகும் - என்கிற பிரதிக்ஞை பூர்த்தியாகும் -? என்று கேள்வி எழுமானல்-ஜீவன் பிருஹ்மகாரியமல்லவாகில் பிருஹ்மம் ஒன்றை அறிந்தால் ஜீவன் முதலான அனைத்தும் அறிந்ததாகும் என்று கூறுவது எப்படி ஒட்டும்? எனில் - (பதில்) ஜீவனும் பிருஹ்மத்தின் காரியமாகிருன் (உற்பத்தியாகிருன்) - மேலும் காரிய காரணங்களில் ஒற்றுமை (அபேதம்) அநன்யத்வம் இருக்கிறது. ஜீவன் பிருஹ்மகாரியமாகுமானல்- பிருஹ்மத்தை அறிந்தால் ஜீவனையும் (உலகனைத்தையும் அறிந்ததாகக் கூறத்தட்டில்லை)

அவ்விதமானல் (நாம் சொல்லக்கூடும்) - பூர்வபக்ஷி) ஆகாசம் போன்றவைகளில்போல, உற்பத்தியை (ஜீவனுக்கும்) ஒப்புக்கொள்ளவேண்டியது- அங்கீகரிக்கப்பட வேண்டும் என்ருல்- நாம் இருப்பிபதில்கூறுவது-ந - அவ்விதமில்லை. அதாவது உற்பத்தியில்லாத ஜீவன் எப்படி பிருஹ்மகாரியமாகும் என்பதற்கு காரியத்வம் என்பதற்கு அர்த்தம் ஒரு திரவியம் மற்ருெரு நிலையை அடைவதேயாகும் - அவஸ்தையில் மாறுதலைக் குறிக்கும் அவஸ்தாந்தராபத்தி: - ஸ்ருஷ்டியில் அது ஜீவனுக்கும் உண்டு. ஆனல் இங்கு ஒரு விசேஷம் உண்டு - வியத் (ஆகாசம்) போன்றவை அசேதனம் - அவை (வேறு ஒரு) காரியமாகும் போது, அதன் ஸ்வரூபமே (ஸ்வரூபநிரூபகதர்மமே) வேருகி விடுகிறது - (அன்யதாபாவமாகும்போது. அம்மாதிரி ஸ்வரூப மாறுதல் ஜீவனின் அந்யதாபாவத்தில் (காரியமாகும்போது) யேற்படுவதில்லை - ஜீவனுக்கு ஞானஆனந்த சக்தி ஸ்வரூபத்தில் எவ்விதம் மாறுபாடில்லாமல்-ஞான ஸங்கோச விகாஸ லக்ஷணத்திற்கு எம்மாற்றமும் இல்லாதபடியாலே - தர்மபூதக் ஞானத்தில் ஸங்கோச விகாசம் ஏற்றம் தாழ்வு - சுருக்கம் பெருக்கம்) ஆகிற மாறுபாடே ஜீவனுக்கு யேற்படுகிறது - ஆனல் ஆகாசம் போன்றவைகளில் ஸ்வரூபமும் ஸ்வபாவமும் அடியோடு மாறுகின்றன - இதுதான் அன்யதாபாவலக்ஷணத்தின் அர்த்தம். இவ்விதமான ஸ்வரூபமாறுதல் - (அடியோடு மாருமல்) இல்லாதபடி - ஸ்வபாவத்திலே மாறுதல் யேற்படுகிறதாலும் - ஆகாசாதிகளைப்போல ஸ்வரூபமாறுபாடு ஜீவனுக்கு இல்லாமையால் - ஜீவனுக்கு உற்பத்தி இல்லை - என்று ஜீவனுக்குக் கூறப்படுகிறது.

என்ன சொல்லப்பட்டதென்றால் - போக்ய - போக்திரு - அனுபவிக்கப்படும் வஸ்து - அனுபவிப்பவன் (அசேதன - சேதன) நியந்திருந் - (அவைகளை நியமிப்பவன் - ஈஸ்வரன்) இவர்களுக்கு தனிப்பட்ட ஸ்வபாவங்கள் உண்டு எனக்கூறப்பட்டிருக்கிறது. போக்ய வஸ்துவின் உற்பத்தி போக்தாவிஷயத்தில் மறுக்கப் பட்டிருக்கிறது (கர்ம காரணமாக போக்யம் அனுபவிக்கப்படுகிற படியால் - ஜீவன் அதற்குக் காரணமாகமாட்டான்). மேலும் (சுருதியில்) சொல்லப்படுகிறது - ஜீவன் (போக்தா) நித்யம் என்றும்; அனுபவிக்கப்படும் பொருளுக்கு (அசேதனத்திற்கு) உற்பத்தி முதலியவை (உண்டாகிறது - அழிகிறது குறைகிறது இத்யாதி); அதேமாதிரி சேதனனான ஜீவனுக்கு அபுருஷார்த்தங் களுக்கு இருப்பிடமாக விருப்பதும் - இம்மாதிரி தர்மங்கள் அவைகளை நியமிக்கும் (நியந்த்ருந்) - ஈஸ்வரனுக்கு மறுக்கப் பட்டிருக்கின்றன. மேலும் சொல்லப்படுகிறது. பரமாத்மா நித்யமென்றும் - யாதொரு தோஷமில்லாதபடி (மாறுதல் இல்லாத, விகார்ரஹித) நிரவத்யன் என்றும் ஸர்வதா ஸர்வக் ஞத்வம் ஸத்ய ஸங்கல்பத்வம், கரணாதிபதித்வம் (ஜீவனுக்குப் பதியென்றும்) விஸ்வத்திற்குப் பதியென்றும் சுருதிகள் சொல்லிவிட்டு - அத்தகைய பரமாத்மா எல்லா அவஸ்தைகளிலும் அந்த சித் அசித் வஸ்துக்களைத் தனது சரீர மாகவும், அவரே ஆத்மாவாகவும் பிரதிபாதிக்கின்றன प्रति शरीरत्वं तस्य चात्मत्वं प्रतिपादितम्। ஆகையால் பரமாத்மா எக்காலத்திலும் சித் அசித் வஸ்துக்களைத் தனது சரீரமாகக் கொள்வதால் - தான் அவைகளுக்கு ஆத்மாவாகிறபடியால் = பிரகாரியாகிறான் - பிருஹ்மம் பிரகாரி (சரீரியாகிறான்). எப்போ தாவது அந்த பிருஹ்மம் பிரளயதசையில் சேதன அசேதன வஸ்துக்களை சூக்ஷ்மமாக தரித்துக் கொண்டிருப்பதால் - நாமரூப விபாகமில்லாத அவிபக்த வ்யபதேசமிருப்பதால் - அவனைவிட்டு வஸ்துக்களாகத் தனியாக விருப்பதற்கு அருகதை இன்றி - பிருஹ்மம் சரீரத்துடன் ஒட்டிக்கொண்டிருப்பதால் - அந்த பிருஹ்மம் காரணதசையில் இவ்விதம் இருப்பதால் அந்த பிருஹ்மம் காரணாவஸ்த - பிருஹ்மம் என்று சொல்லப்படுகிறது. எப்போ

தாவது அதே பிரஹ்மம் தன் சரீரமாகக் கொண்ட சேதன அசேதன் வஸ்துக்களை - ஸ்ருஷ்டியில் - நாமரூப வியாகரணம் (விபக்த நாமரூப) ஸ்தூல சித் அசித் வஸ்துக்களுக்கு ஏற்படுத்தும் போது - அந்த பிருஹ்மம் காரியபிருஹ்மமாகிறது - காரியா வஸ்தையை அடைகிறது.

அவ்விதமிருக்கும்போது, காரணாவஸ்தையில் இருக்கும் பிருஹ்மம் காரியாவஸ்தையை அடையும்போது, அதனுடைய உடம்பிலே அசித் அம்சம் இருக்கிறதே அதற்கு (அந்த அசேதன அம்சத்திற்கு) காரணாவஸ்தையில் சப்தம் போன்றவை கள் இல்லாமல் (இவை பிரகிருதியின் தர்மங்களாகும்) - அந்த அசித் அம்சம் தன்னை அனுபவபோக்யதையடையும் பொருட்டு மாறுதலையடைகிறது - (எப்படியெனில் தன் ஸ்வரூபத்தில் வேறு ஒன்ருகமாறி - சப்தம் போன்ற தர்மங்களை அடையத் தகுந்த அந்யதாபாவரூப விகாரத்தை (மாறுதலை) அடைகிறது (அதாவது ஸ்வரூபஸ்வபாவ மாறுதலை அடைகிறது). ஆனால் பிருஹ்மத்தின் சரீரத்தின் இன்னொரு அம்சம்-ஜீவ (சேதன) அம்சம் அதனுடைய கர்மபலவிசேஷத்தினுல் போக்திருத்வாய - சுகதுக்கங்களை - அனு பவிப்பதற்கு) அவைகளுக்கு யேற்ப (அனுரூப) ஞானவிகாஸ ரூப விகாரத்தை (மாறுதலை) அடைகிறது - தனது தர்மபூத ஞானத் வாராயடைகிறது). (அதாவது ஸ்ருஷ்டி (காரிய) தசையில் ஸ்வரூப மாறுதல் (ஞானம் இத்யாதிகளில் இல்லை - ஸ்வபாவ மாறுதல்தான் சுகதுக்காதிகளில் தர்மபூத ஞானம் ஸங்கோச விகாஸத்தினுல் யேற்படுகிறது என்று அர்த்தம்). ஆக இப்படி இருவிதமான (உபய) பிரகார விசிஷ்டமான (கூடிய) பிருஹ்மம் தான் எல்லா சேதனசேதன வஸ்துக்களை ஆள்பவனுக நியந் த்ராம் சத்தினுல், அந்த அந்த அவஸ்தைகள் இரண்டிலும்-தான் ஆத்மாவாக விருப்பதால் - தான் ஒரு மாறுதலையடையாமல் - தனது சரீரத்தின் அம்சங்கள் மாத்திரமே மாறுதல்களை அடைவ தாக விருககிறது. காரணாவஸ்தையிலும்-காரியாவஸ்தையிலும்- யேற்படும் விகாரம் சரீரத்திற்கே யேற்படுகிறது - விகாரம் அதன் இருபிரகாரமாகிற சித் அசித் அம்சங்களுக்குத்தான் ஏற்படுவதால்

காரணாவஸ்தையின் மாறுதலும் காரியாவஸ்தையின் மாறுதலும்-ஸமானமாகும் - இரண்டு பிரகாரங்களிலும் - மாறும் வஸ்துக்கள் ஒன்றாக விருப்பதால்.

ஆகையால் - இதே காரணத்தினால், மாறுதல் (விகாரம்) ஒரே வஸ்துவுக்கு அவஸ்தாபேதமாக விருப்பதால் பிருஹ்மம் மாத்திரம் நிர்விகாரமாக விருப்பதால்-(அதன் சரீரம்தான் மாறுதலடைகிறபடியால் - சூக்ஷ்ம தசையிலிருந்து ஸ்தூல தசையை அடைவதால்) சுருதி சொல்கிறது ஏக விக்ஞானத்தைப் பற்றிய பிரதிக்ஞையை येन श्रुतम् சா. 2-6-1-3ல் ஸோம்ய-நீ அறிவாயா? எந்த ஒன்றை கேட்டால் எல்லாம் கேட்கப்பட்டதாக ஆகுமோ-என்று போதிக்கும் ஏக விக்ஞானத்தினால் ஸர்வ விக்ஞானம் பிரதிக்ஞை செய்யப்பட்டு-மண் உருண்டையை உதாரணமாக வைத்து - यथा सोम्यैकेन ஒரு மண் உருண்டையை அறிவதால் (காரணப்பொருளை அறிவதால்) அதன் காரியங்களாகிற பானை சட்டி-அறியப்பட்டதாகும்) என்பதால் காட்டப்பட்டது. பிருஹ்மத்தின் சரீரத்தில் இருக்கும் சேதன (ஜீவ) அம்சம் உளதே-அந்த அம்சம் தனது ஸ்வபாவத்தில் தர்மபூத ஞானத்தில் ஸங்கோச விகாசம் (சுருக்கம் விரிவு)யேற்பட்டு-அந்த அந்த ஜீவனின் கர்ம பலன்களுக்குத் தகுந்தாற்போல-அந்த அந்ததேகங்களை (மனுஷ்ய-தேவ-இத்யாதி) அடைந்து - அந்த தேக சம்பந்தத்தால் யேற்படும் சுகதுக்காதிகளை அடைவதற்கு (அனுபவிப்பதற்கு) பல சரீரங்களை அடைவதால் அந்த தேகத்திற்கு உற்பத்தி-மரணம் அழிவு யேற்படுவதால்-அதனால் அவை ஜீவ விஷயத்தில் ஆரோபித்துச் சொல்லப்படுகின்றதே யொழிய-ஆத்மாவுக்கு உற்பத்தி மரணம் இல்லை யென்பதாகும். யஜு. அஷ். 1ல் प्रजापतिः प्रजा असृजत् பிரஜாபதி (பிரும்மா) பிரஜைகளை உண்டு பண்ணினார்-இதில் தேக சம்பந்தத்தைக் கூறியதாகும்-இதனால் ஜீவனுக்கு யேற்படும் தேக லாபம், தேக நஷ்டம் - பலவிதமான சரீரங்கள்-அவைகளில் தர்மபூத ஞானத்தின் ஸங்கோச விகாஸம் எல்லாம் யேற்படுவதாகும்-அவரவர்களின் கர்மானுகுணமாக, என்று சுருதிக்கு அர்த்தம் கொள்ள வேண்டியது, அதாவது, ஜீவனுக்கு உற்பத்தியையும் விநாசத்தையும் கூறும் சுருதிகள் அவனுக்குத் தர்ம பூத ஞானத்

தின் யேற்றம் தாழ்வுகளின் விளைவை-அந்த அந்த தேகத்தோடு சேர்க்கையாகிற பிறப்பையும்-அந்த தேகம் அழியும்போது யேற்படும் தேக வியோகமாகிற மரணத்தையுமே கூறுகின்றபடியால்-இவற்றிலிருந்து ஜீவனுக்கு உற்பத்தி கிடையாது-ஸித்திக்காது.

ஆனால் பகவத் சரீரத்தில் இருக்கிறதோ, இன்னொரு அம்சம்-அதாவது அசித் அம்சம் விகாரத்தை அடையும்போது - அதன் ஸ்வரூபமும் ஸ்வபாவமும் அடியோடு மாறுதலால் (அந்யதா பாவத்தை யடைவதால்)-அவைகளுக்கு உற்பத்தியை நிஷேதிப்பதால்-அவை நித்யம் என்று சொல்லப்படுவதாலும் (சேதன சம்பந்தத்துடன்) அதற்கு அர்த்தம் ஸ்வரூப ஸ்வபாவ மாறுதல் அசேதனத்திற்கு இருப்பதுபோல வல்லாமல்-ஸ்வபாவ மாறுதலே ஜீவனுக்கு ஏற்படுகிறது-ஸ்வரூபத்தில் மாறுதல் ஒன்றுமில்லை என்பதாகும். அதனால் ஜீவனைப் பற்றிய சுருதிகள் சொல்கின்றன - न जायते म्रियते -ஜீவன் உண்டாவதில்லை- இறப்பதில்லை (தேகம்தான் உண்டாகிறது - நசிக்கிறது - ஆத்மாவுக்கு இல்லை) - என்பவைகளாலும்; नित्यो नित्यानाम् - நித்யர்களான பல ஜீவர்களுக்குள்ளே - நித்யனான ஒரு சேதனனின் விருப்பங்களை அளிக்கிறான்-இதனால் ஜீவன் நித்யமென்றும்-சொல்லப்படுகின்றது.

ஜீவன் - அசித் வஸ்துக்களைவிட வேறான மூன்றுவதான ஈஸ்வரன் இவர்களிலிருந்து ஸ்வரூபத்திலேயும் ஞானஸங்கோச விகாஸங்கள் கொண்ட ரூபம்-இரு அவஸ்தைகளிலும் வேறுபட்டவன் எவ்வித விகாரத்தை தன் ஆத்மாவில் அடையாதவன்-அந்த பரமாத்மாவைப் பற்றிச் சொல்கிறது சுருதி- स वा एष महानज आत्माऽजरोऽमृतो ब्रह्म - பிரு-2-4-4-25ல் அந்த மேல் சொல்லப்பட்ட புருஷன்-மஹான்-பிறப்பில்லாதவன் - கிழத்தனமில்லாதவன் - அம்ருதன் இறப்பில்லாதவன் அவன் தான் பிருஹ்மம் என்றும்; नित्यो नित्यानाम् (ஸ்வே. 6-13) நித்யர்களான பல சேதனர்களுள் நித்யனான ஒரு சேதனன் விருப்பங்களை அளிக்கிறான் - இவை பரமாத்மாவைக் குறிக்கும்-இதனால் ஸ்வரூப ஸ்வபாவ விகாரங்கள்-பரமாத்மாவுக்கு இல்லை என்பதை போதிப்பதாகும்-அதனால் அவர் சேதன அசேதன வஸ்துக்களைவிட விலக்ஷணன் - வேறு

பட்டவனுகும். இந்த விதமாக பரமாத்மாவைப் பற்றிச் சொல்லிய தால்-ஸர்வதா சித் அசித் வஸ்து விசிஷ்டமான பரமாத்மா (பிரும்மம்) ஸ்ருஷ்டிக்கு முன்பு ஒன்றாகவே யிருந்தது என்பதும் சரி-அந்த சமயத்தில் (சூக்ஷ்ம காரண தசையில்) நாமரூப விபாகம் இல்லாமலிருந்தது. அது பிரு. 2-3-4-6ல் तद्धेदं तर्ह्यव्याकृत-मासीत्। तन्नामरूपाभ्यां व्याक्रियत॥ என்று அந்த ப்ருஹ்மம் நாமரூபவிபாகமின்றி (பிரளய தசையில்) இருந்தது. அதே பிருஹ்மம் (ஸ்ருஷ்டியில்) நாமரூப விபாகத்துடன் ஆகியது-இதனல் நாமரூப விபாகம் அபாவமும்; ஸ்ருஷ்டிக்குப் பின்பு नाना த்வமும் (பஹுபவனமும்)-பல பொருள்களாக பிருஹ்மமே ஆத தல் ஒரே பிருஹ்மத்திற்குச் சொல்லப்படுகிறது ஏகத்வமும் பஹுத் வமும். (இங்கு சொல்லப்படுவது பிருஹ்மத்திற்கு சரீரத்வார மாறுதல்கள் ஸ்ருஷ்டியில் ஏற்படுதல்-மாறுதலற்ற ஸ்திதி பிரள யத்திலும் சொல்லப்படுகிறது, பிருஹ்மம் ஆத்மாவாதலால் தான் ஒரு மாறுதல் அடையாதது என்பது ஸ்ரீமத் ராமானுஜரின் முக்ய கருத்தாகும். விசிஷ்டாத்வைத சித்தாந்தத்திற்கு. இதனல் மாறு தல்களை அடையும் உலகத்திற்கும் மாறுதல் இல்லாத பிருஹ் மத்தை ஆத்மாவாக் கொண்டு-சரீர ஆத்மபாவம் பிருஹ்மம் ஜகத் திற்கு – காரியகாரணமாக ஐக்ய வ்யபதேசம் சொல்லப்படுகிறது. சரீர தர்மங்கள் ஆத்மாவை ஸ்பர்சிப்பதில்லை. ஆகவே பிருஹ்மம் நிரவத்யம்.) विभागरूपनानात्वा भावः एकत्वम् ।

எவர்கள் (அத்வைதிகள்-சங்கரர் போன்றவர்கள்) சொல் கிறார்களோ-ஜீவன் உபாதியாகிற அவித்யையினல் பாதிக்கப்படு கிறன்-அவித்யாதி ஔபாதிகம் ஜீவத்வம் என்று சொல்பவர் களும்; எவர்கள் (பாஸ்கரபக்ஷத்தைச் சேர்ந்தவர்கள்) பரமார்த்த மான வஸ்து ஔபாதியினல் உண்டாக்கப்பட்டது; இன்னும் சிலர் (யாதவ பிரகாசபக்ஷம்) சொல்கிறார்களோ பிருஹ்மத்தின் நிஜஸ்வரூபம் ஸந்மாத்திரம்தான், அந்த பிருஹ்மமே ஸ்வயமேவ போக்த்ரு (சேதன) போக்ய (அசேதன) நியந்த்ரு ரூபத்தினல் (ஈஸ்வரன்) மூன்று அவஸ்தைகளை அடைகிறது-இந்த எல்லோரும் சொல்வது (பிரளய தசையில் யார்யார் இருக்கிறார்கள் என்றல்) அவித்யாசக்தி ரூபத்தினலும் 'இன்னும் உபாதிகளின் சக்தி

யினாலும் போக்த்ரு போக்ய நியந்த்ரு சக்திகளும் பிரளய காலத்திலும் அழியாமல் இருப்பதாலும், அந்த சமயத்தில் பிருஹ்மம் ஒன்றுதான் இருந்தது என்று சொல்லும்படி ஏகத்வம் அவதாரணம் என்பதற்கு-நாமரூப விபாகம் இல்லாததைச் சொல்வதாகும். பிருஹ்மத்திற்கு வைஷம்ய, நைர்கிருண்யம் (கருணையின்மை) இல்லை - वैषम्यनैर्घृण्ये न सापेक्षत्वात् - (சா. சூ 2-1-34) (தேவர் முதலான ஏற்றத்தாழ்வுள்ள ஸ்ருஷ்டியினால் பக்ஷபாதமும் கருணையின்மை பிருஹ்மத்திற்கு இல்லை-யேற்படமாட்டா-ஏனெனில் ஸாபேக்ஷத்வாத்-ஏற்றத் தாழ்வுள்ள சிருஷ்டி கர்மத்தை எதிர்பார்ப்பதால் இதே மாதிரி சுருதியும் நிர்வஹிப்பதால்-என்பதாலும்; न कर्माविभागादिति चेन्नानादित्वादुपपद्यते चाप्युपलभ्यते च - (சா.மீ. 2-1-35) ஸ்ருஷ்டி காலத்தில் கர்மமில்லை, அக்காலத்தில் பிருஹ்மம் தவிர வேறு ஒன்றுமில்லை என்று சுருதி கூறுகிறது. இதனால் ஜீவனில்லை எனத் தேறுகிறது என்று கூறினால் அது சரியானதாகாது. ஜீவன் அநாதி. ஆயினும் பிருஹ்மம் ஒன்றே யிருந்தது என்பதும் சரியாகும்-அவிபாகம்-நாமரூபமற்ற பிருஹ்மமாகவே இருந்தது; ஸ்ருஷ்டி காலத்தில் அது நாம ரூபங்களைப் பெற்றது. அநாதியான ஜீவகர்மங்களை ஒட்டியே விஷமமான ஸ்ருஷ்டி (ஏற்றத்தாழ்வுடன்) செய்யப்படுவதால் பரமாத்மாவுக்கு பக்ஷபாதமின்மை - கருணையின்மை என்கிற குணங்கள் ஓதப்படுகின்றன-ஆகவே மேல் சொல்லப்பட்ட இரண்டு சூத்ரங்களிலும் ஜீவர்களுக்குள்ளே யிருக்கும் பரஸ்பர பேதமும், அவர்களுடைய கர்ம பிரவாஹமும் தொடர்ந்து அநாதியாக விருப்பதாக - ஆகின்றன-இவை தான் ஜீவனுக்கும் கர்மத்துக்கும் அநாதியாக விருப்பதற்குக் காரணமாகின்றன-என சுருதிகள் சொல்வதால். ஆகவே கர்மம் இல்லை என்றோ - ஜீவன் உற்பத்தியாகிறான் என்றோ சொல்ல முடியாது. அதே பிரகாரம் அபேதம் (பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும்) சரியாகும்-ஏனெனில் ஜீவன் அநாதி என்று சுருதியில் ஓதப்பட்டிருக்கிறது.

இப்படி நான்கு பக்ஷத்தினர்கள் கூறுவதிலும் ஒரு விசேஷமிருக்கிறது-(வித்யாஸம்) சங்கர பக்ஷத்திலே, அநாதி அவித்யையின் வசமடைந்த பிருஹ்மம் ஸ்வயமேவ தன் ஸ்வரூபத்தை இழக்கிறது-

(அவித்யையில் மூழ்கிப் போகிறது.) பாஸ்கர பக்ஷத்திலே, உண்மையானதும் அநாதியுமாகிற உபாதியினால் பிருஹ்ம ஸ்வரூபம் அழிந்து போய் கட்டுப்படுத்தப்படுகிறது (ஸம்சாரத்தில்)-ஏனெனில் பிருஹ்மத்தையும் உபாதியையும் தவிர்த்து வேறு ஒரு தத்வமில்லை என்பதாகும். இன்னொரு பக்ஷமிருக்கிறதே-யாதவ பிரகாச பக்ஷத்தினர்கள் - அவர்கள் விஷயத்தில் பிருஹ்மமே விசித்திர ஆகாரங்களாக (ரூபங்களாக) பரிணமிக்கிறது. அதனாலே அதுவே வேண்டப்படாத கர்மங்களின் பலன்களை அனுபவிக்கிறது. (கர்மபலன்களையும் அநிஷ்டங்களையும் புசிக்கிறது). பிருஹ்மத்திலே நியந்திருத்வ அம்சம் அம்சமிருக்கிறதே-அதற்கு போக்த்ருத்வம் (கர்மபலனை அனுபவிப்பது) இல்லை. ஆனால் அந்த பிருஹ்மம் ஸர்வக்ஞத்வத்தைப் பெற்றபடியால் அந்த ப்ருஹ்மம் தன்னிடமிருந்து அபின்னமாகவிருக்கும் (ஸ்வஸ்மாத பிந்நம்) போக்தாரம் (அனுபவிப்பவனை-அதாவது ஜீவனை) வேறாகக் கருதாதபடியால்-தானே ஜீவனின் சுகதுக்கங்களை அனுபவிக்கிறது (ஸ்வயமேவ புங்க்தே), இவ்விதமாக அவர்கள் சொல்ல, நாம் விசிஷ்டாத்வைதிகள் நிர்வஹிப்பது - பிருஹ்மம் ஸ்தூல சூக்ஷ்ம அவஸ்தசித் அசித் வஸ்துக்களைத் தனது சரீரமாகக் கொண்டபடியால், பிருஹ்மமே கார்ய காரண உபய (இரண்டு) அவஸ்தைகளிலும் இருக்கிறது' ஆயினும் அதற்கு ஒருவித தோஷமும் ஏற்படவில்லை (அத்வைதிகள்-பாஸ்கர—யாதவ பிரகாசர் பக்ஷத்தினர்கள் சொல்வது போல-இரண்டு அவஸ்தைகளிலும்)-எப்போதும் நிரஸ்த நிகில தோஷகந்தம் - ஸத்ய சங்கல்பத்வாதி அபரிமித உதாரகுண ஸாகரம்-என்று பிருஹ்மம் பிரகாசிக்கிறது. (இதனால் விசிஷ்டாத்வைதிகளின் ஏற்றம் மற்றவர்களைவிடச் சொல்லப்படுகிறது.) (சரீரமாகவுடைய) ப்ரகாரபூத சித் அசித் வஸ்துக்களுக்கு யேற்படும் அவித்யா-கர்மா பிறப்பு இறப்பாகிற அபுரு... புருஷார்த்தங்கள் - அதனாலே விளையும் ஸ்வரூப ஸ்வபாவ மாறுதல்கள் பிருஹ்மத்துக்கு இல்லை-அவை அதனுடைய சரீரத்திற்கு யேற்படுகிறபடியால். (स्वरूपान्यथा भावश्चेति) ஆகையால் நாம் நிர்வஹிப்பது - ஆத்மாநித்யம் - உற்பத்தியாவதில்லை - ஸர்வம் ஸமஞ்ஜஸம் (பொருத்தமாகும்). ஸ்வரூப ஸ்வபாவ விகாரம் அசேதனத்திற்கும்; ஸ்வபாவ விகாரம் ஜீவனுக்கும் - இரண்டும்

(ஸ்வரூப ஸ்வபாவ மாறுதல்கள்) பிரும்மத்திற்கு இல்லை என்பது சரியாகும். சுகதுக்காதிகள் ஜீவனுக்குக் கர்மாபிரகாரம் உண்டு என்பதாம். இவை பரமாத்மாவுக்கு இல்லை. அவர்கள் பக்ஷம் அஸமஞ்ஜஸம் என்பதாகும். अविद्यादिविशिष्टाकारेणाप्यनुत्पन्नत्वं स्यादिति चेत् - अशक्यमेतत् - अन्तः करणादि रूपोपाधेः जीवात्मना परिणामस्य च कदाचित्कतया विशिष्टेऽनुत्पन्नत्वायोगात्। अतस्तन्मते सर्वमसमञ्ज समित्याशयेन स्वपक्षे सर्वसामञ्जस्यं वदन् उपसंहरति - इति सर्वमिति-जीवस्य तु कार्यत्वंव्यष्टि सृष्टिरिति। (உத்தமூர் ஸ்வாமி).

## ஜ்ஞாதி கரணம் (2-3-4)

## ज्ञोऽत एव (2-3-19)

## ஜ்ஞோऽத ஏவ (2-3-19)

அத:- ஸ்ருதிகளிலிருந்தே ஜ்ஞ: ஏவ - (ஆத்மா) ஞானத்தை உடையவனாக விருக்கிறான் - தெரியவருகிறது.

(அவதாரிகை) தர்மபூத ஞானத்தின் மாறுதல்களாலே - ஜீவன் பிருஹ்மத்திற்குக் காரியப் பொருளாகிறான் எனமுன் அதிக கரணத்தில் காட்டப்பட்டது. அந்த தர்மபூத ஞானமே ஜீவனுக்கு இல்லை - கிடையாது என்கிறவாதமே இந்த அதிகரணத்தில் தள்ளப்படுகிறது.)

ஆகாசத்தைப்போல, ஜீவனுக்கு உற்பத்தி இல்லை - அநாதி என்பது பொருந்தும். இதற்கு ஏற்றப்போல அந்த பிரஸங்கத்திலே-ஜீவனுடைய ஸ்வரூபம் யாது - என்பது நிரூபிக்கப்படுகிறது.

கபிலஸித்தாந்தம்-பௌத்தசித்தாந்தம் இவைகளில் கூறிய படி ஆத்மாவின் (ஜீவனின்) ஸ்வரூபம் சிந்மாத்ரமேவ (ஞானமே தானா?) (ஞானம் மாத்திரமா ஸ்வரூபத்திலே - ஞாதாவாக (அறிகிறவனாக) இல்லை - என்பது பூர்வபக்ஷம்). காணாதன் ஒப்புக் கொள்ளுகிறபடி ஜீவன் ஜடஸ்பரூபத்தைப்போல (பாஷாணம் கல்லைப்போல உணர்ச்சியற்றதாகவும்) அதற்கு ஞானம் யதேச்சையாக யேற்பட்ட தர்மமாகும்; (வந்துபோம்

கொண்டிருக்கும் தர்மமாக - ஆகந்துகசைதன்யகுணகம்) அல்லது விசிஷ்டாத்வைதி நிர்வஹிப்பதுபோல - ஞான ஸ்வரூபத்தோடு- அறிபவனுகவுமிருக்கிறுன் ज्ञातृत्वमेवास्य स्वरूपमिति-ஜீவஸ்வரூபம் எது சரியாகும்?

(இங்கு சொல்லப்படுவது - இன்னும் இந்த பாதத்திலே ஐந்து அதிகரணங்கள் இருக்கின்றன - இவை முக்கிய மாகச் சொல்லப்பட்ட விஷயங்களுக்குப் புறம்பாக வருபவை; அதாவது ஜகத்தில் எல்லாவஸ்துக்களும் பிருஹ்மத்தின் காரியங் களாகும் - இதற்கு புறம்பாக விருப்பவை. இந்த முக்ய விஷய ஆலோசனையில் சில சந்தேகங்கள் எழுகின்றன- அவைகளுக்குப் பதிலாக வந்தவையாகும் உதாரணமாக ஜீவனின் ஸ்வரூபம் யாது-அதற்கும் பிருஹ்மத்திற்குமுள்ள சம்பந்தம் யாது? என்பது பற்றியாகும். இங்கே இந்த ஜ்ஞாதி கரணத்திலே, ஜீவன் பிருஹ்மத்தின் காரியமாகும் என்பதற்கு சூசகமான ஆக்ஷேபத் திற்கு பதில் கூறப்படுகிறது. ஏனெனில் ஜீவனுக்கு தர்மபூத ஞானத்தில் ஏற்றதாழ்வு (மாறுதல்) உண்டாகிறது. இது ஆட்சேபிக்கப்படுகிறது. ஏனெனில் ஞானம் ஸ்வரூபமே - குண மல்ல. இதற்கு பதிலாக - புத்தபக்ஷத்தினர்களின் அபிப்ராயங்கள், அத்வைதபக்ஷம், சாங்கியபக்ஷம் - ஜீவஸ்வரூபம் யாது என்பதில்- ராமானுஜரால் ஆராயப்படுகிறது.

**ஸ்ரீபாஷ்யம் :-** எது தர்க்கத்திஞல் ஸ்தாபிதமாகும்? சிந்மாத்திரமிதி (ஞானமே — ஞானஸ்வரூபமே) - சாங்கியன் சொல்வது. ஏன்? சுருதி அவ்விதம் கூறுகிறது. அந்தர்யாமி பிராஹ்மணத்திலே - பிரு. 2. 6. 9ல் य आत्मनि तिष्ठन् । (எவன் ஆத்மாவில் வசிக்கிறுனே); என்றும் (மாத். 3-7-22); இதே ஸ்மான பிரகரணத்திலே காண்வசாகையில் यो विज्ञाने तिष्ठन् எந்த பரமாத்மா ஜீவனுடன்கூட (அதாவது ஜீவனிடம்) நிற்க் கிறுனே (விக்ஞானே-ஜீவன்; என்று ஓதப்படுகிறது. அவ்விதமே தை.அ. 2-5-1 ஓதப்படுகிறது-विज्ञानं यज्ञं तनुते कर्माणि तनुतेऽपि च- ஞானஸ்வரூபனுன ஜீவன் (விக்ஞானம்) யாகத்தைச் செய்கிறது, அது வைதிக கர்மாக்களையும் செய்கிறது - இவ்விதமாக

ஜீவனுக்கு ஸ்வரூபம் கர்த்தாவாகச் (कर्तात्मनो विज्ञानमेव स्वरूपं श्रूयते) சொல்லப்படுகிறது; ஞானத்தைக் குணமாக உடையவனில்லை; ஸ்மிருதிகளிலும்கூட, ज्ञानस्वरूपमत्यन्तनिर्मलं परमार्थतः— அந்த பரமாத்மாவுக்கு - (எவனுடைய தேகமாக ஜீவன் இருக்கிறானோ - அந்த ஜீவனுக்கு) ஞானம் - நிர்மலம்-உண்மையானதுமான ஸ்வரூபம் ஆகும். ஆகவே ஜீவாத்மாவுக்கு ஞானஸ்வரூபத்வம்தான் ஓதப்படுகிறது.

(இந்த சுலோகம் விஷ்ணுபுராணத்தில் வருகிறது. சங்கரருடைய அபிப்ராயமும் விசிஷ்டாத்வைத அபிப்ராயமும் ஜிக்ஞாஸாதிகரணத்தில் சொல்லப்பட்டது (ஸ்மிருதிகட்டத்தில்) ராமானுஜரின் அபிப்ராயப்படி - பரமாத்மாவை - ஜீவனைச் சரீரமாக வுடைய பரமாத்மாவை வணங்குகிறேன் - இந்த ஜீவனுக்கோ ஞானமே ஸ்வரூபம்; அந்த ஞானம் நிர்மலம் - துக்கம் அவித்யா ரஹிதம் அதன் ஸ்வரூபத்திலே. அந்த ஞானம் பிருஹ்மத்தினிடமே தேகத்தை ஆத்மாவாகக் கொண்ட பிரமையினால் பல வஸ்துக்களாக அறியப்படுகிறது (காணப்படுகிறது) இன்னும் சிலர் (காணாதன்) (நையாயிகள்) அபிப்ராயப்படுகிறார்கள்-ஜீவனுக்கு ஞானமோ அவனுக்கு நிஜஸ்வரூபமல்ல; அதே மாதிரி அறிகிற தன்மையும் அவன் ஸ்வரூபமல்ல. அவனுடைய ஞானம் எப்போதாவது யேற்படக்கூடியது. அது ஞானஸ்வரூபமாக விருப்பதாகவும் அறிகிற தன்மையுள்ளதாகவும் ஒப்புக்கொள்ளப்படுமானால், அதன் விளைவு என்னவாகுமென்றால் - ஆத்மா ஸர்வகதன் (எங்கும் வ்யாப்தியுள்ளதாகவும்), ஸத்வதா ஸர்வத்ர (எப்போதும் - எல்லாவிடங்களிலும்) கண்களுக்கு விஷயமாகும்படி விருக்கும் (பிரத்யக்ஷமாக அறியக் கூடியதாக விருக்கும்). மேலும் அதன் இந்திரியங்கள் வீணாக ஆகிவிடும்; சுஷிப்திமூர்ச்சை ஆகிற நிலைகளிலும் ஆத்மா விருப்பினும், அதன் சைதன்யம் (அறியும் தன்மை) காணப்படமாட்டாது. அது ஜாக்ரதா தசையில் (முழிப்பில்) அதனுடைய ஸாமக்ரியைகள் (இந்திரியங்கள் முதலியவை) ஸத்யமாக விருப்பதாகிறபடியால், ஏனோத்பத்தி உண்டாவதாகக் காணப்படுகிறது. அதனால் ஜீவனுக்கு ஞானம் ஸ்வரூபமல்ல. (எப்போதுமிருப்பதல்ல); அதேமாதிரி ஞாத்ருத்வம் (அறிகிறவனாக விருப்பதும்)

இல்லை. ஆகந்துகமேவ (வந்து போய்க் கொண்டிருக்கும்) சைதன்யம். ஜீவாத்மாவுக்கு ஸர்வகதத்வம் (எங்கும் பரவி யிருப்பது) அவசியம் ஒப்புக்கொள்ள வேண்டியது - ஏனெனில் எங்குபார்ப்பினும் காரியங்கள் அறியப்படுகின்றன - (அதாவது எங்கும் பரவியிருப்பது, சுகத்துக்காதிகள்). ஏனெனில் எல்லா விடங்களிலும் ஆத்மா விருப்பதை ஒப்புக் கொள்ளுகிறபடியால் - அதன் காரியங்கள் (சுகதுக்கங்கள்) சரீரகமனம் (செல்லுதல் - உட்காருதல் இத்யாதிகளால்) உண்டாக்கப்படுகிறது என்று சொல்லப்படுமாகில், ஆத்மாவிற்கு கதி (சலனம்) யேற்படுகிறது என்று கல்பிப்பதற்கு பிரமாணம் ஒன்றுமில்லை.

(இங்கு சொல்லப்படுவது - ஜிவனுக்கு ஸர்வகதத்வம் (வ்யாப்தி) பேசப்படுகிறதற்குக் காரணம் - அது சுக துக்கங்களை அனுபவிககிறது - தூரத்திலிலுள்ள உண்டாக்கப்பட்ட வஸ்துக் களை அனுபவிக்கிறது. ஆத்மாவின் அதிருஷ்டம் அதனை உண்டாக்குகிறது. இப்படிச்சொல்வது பொருந்தும் - எப்போ தெனில் அதிருஷ்டம் உள்ளிருக்கும் ஆத்மா ஸர்வக்ஞனாக விருந்தால் - முடியும். மேலும் இவ்விதம் கற்பிப்பதால் - இன்னும் நாம் ஒத்துக்கொள்ள வேண்டியதாகவிருக்கும் - ஆத்மாவிற்கு சலனம் (கமனம்) யேற்படுதலும் (ஓரிடத்திலிருந்து மற்றொரு விடத்திற்குச் செல்லுதல்) என்பதும்; இன்னொன்றும் - அதாவது ஆத்மா அணுபரிமாணமுள்ளது - அது நடமாடுகிறது என்பதையும் ஒப்புக் கொள்ளவேண்டியதாகவிருக்கும்)

சுருதி கூட ஸுஷுப்திவேளையில் ஞானமில்லாமை (ஞான அபாவம்) ஜீவனுக்குச் சொல்லுகிறது. சா. 2. 8-11-1 नाह खल्वयमेवं संप्रत्यात्मानं जानाति, अयम हमास्मीति, नो एवेमानि भूतानि - "ஹா! அவன் (ஸுஷுப்தியில் தூங்கும் ஜீவன்) இந்தவித மாக தன்னையே அறிகிறானில்லை"-" நான் இப்போதிருக்கிறேன்" அவன் இந்த பொருள்களை அறிகிறதில்லை. இதே விதமாக, சுருதி சொல்கிறது तथा मोक्षदशायां ज्ञानाभावं दर्शयति, - மோக்ஷ தசையில் ஞானமில்லாமை காணப்படுகிறது. (பிரு. 2-2-4. 12 ச 6-5-13). न प्रेत्य संज्ञाऽस्ति - முக்திதிசையில் கடைசி சரீரம் விழுந்தபிறகு (இறத்தல்) - (அறிவு) ஞான உணர்ச்சி இல்லை.

(அழிந்து போகிறது) இம்மாதிரி வாக்யங்களிலே இப்படி சொல்லப்படுகிறது - ज्ञानस्वरूपम् ஜீவன்-அவனுக்கு ஞானமேஸ்வரூபமாக விருக்கிறது - இந்த வாக்யத்தில் ஞானம் ஜீவனுக்கு அசாதாரணமான குணமாக விருப்பதாலே, பிரயோகம் லாக்ஷணிகமாகச் சொல்லப்படவேண்டும். (விஷ். புரா. 1-2-6)

இவ்விதம் சொல்லப்படுமாகில் நாம் பதிலளிப்போம். ज्ञोऽत एव (ஜீவன்) ஆத்மா அறிகிறவனாக விருக்கிறான்-ஞானத்தை உடையவனாக விருக்கிறான். ஏனெனில் சுருதி அவ்விதம் சொல்லுகிறபடியால். (சா, மீ. சூ. 2-3-19) ஆத்மா ஞானத்தை உடையவனாக விருக்கிறான். ज्ञ एव ஜீவன் அறிகிறவனாக விருக்கிறான், இந்த ஆத்மா ஞாத்ரு ஸ்வரூபமேவ-அறிகிறவனாக விருப்பது அவனது ஸ்வரூபமாகும். (அதாவது ஞானமும் ஞானத்தைக் குணமாக உடையவனாக தர்மியாக விருக்கிறான்). न ज्ञानमात्र ஞானம்மாத்திரமல்ல. नापि ஜடஸ்வரூப; (ஜடமாக - ஸ்வரூபத்திலே அசேதனமாகவுமில்லை), எப்படிச் சொல்லமுடியும்? (இதற்குப்பதிலாக) अतएव - இந்த விஷயம் சுருதிகளிலிருந்தே தெரியவருகிறது. இதற்கு அர்த்தம் சுருதி சொல்வதால் என்பதாகும். नाऽऽत्मा श्रुतेः - (சாமி. சூத் 2-3-18 ஆத்மா உண்டாவதில்லை - ஏனெனில் சுருதி அவ்விதம் கூறுகிறபடியால் - அதனால் அது நித்யமாகும் இந்த சூத்ரத்திலும் अत एव என்கிற சப்தத்தினால் (சுருதிகள் சொல்வதாலே என்கிற அர்த்தம்) பராமர்ஸிக்கப் படுகிறது. அதேமாதிரி இங்கேயும் ஆத்மா அறிகிறவனாகவுமிருக்கிறான் - ஏனெனில் சுருதிகள் அவ்விதம் கூறுவதாலே. (அதாவது முந்தின சூத்திரத்தில் अत एव என்பதற்கு சுருதிகள் ஓதுவதால் என்று பொருள். ஆனால் முந்தின சூத்திரத்திலும் இந்த சூத்ரத்திலும் வெவ்வேறு சுருதிகள் காட்டப்படுகின்றன - சுருதி சொல்வதைக் காரணமாக வைத்து).

அவ்விதமே சா. உ. 8-12-4ல் பிரஜாபதி வாக்யத்திலே - முக்தாத்மாவிற்கும் - முக்தியடையாத பத்தனுக்கும் ஸ்வரூபம் சொல்லபடும்போது - சுருதி கூறுகிறது - अथ यो वेद इदं जिघ्राणीति स आत्मा - இப்போது - அவன் (எவன் அறிகிறேனோ - அவன்) நான்

இதை முகருகிறேன், அவன் பத்த (கட்டுண்டப்பட்ட) ஜீவனும். (சா. 8-8-12-4) मनसैवैतान् कामान् पश्यन् रमते, य एते ब्रह्मलोके - அவன் (முக்தாத்மா) தன் விருப்பங்களை அனுபவிக்கிறான் - மனதினால் திவ்யமான ஞானஸ்வரூபத்தினால் அவைகளை "பார்க்கிறான்" (அனுபவிக்கிறான்) - இவைகளை பிருஹ்மலோகத்திலே பார்க்கிறான் - அனுபவிக்கிறான் - எனக் கூறப்பட்டிருக்கிறது. சா-2-8-7-1ல் सत्यकामः सत्यसंकल्पः-முக்தாத்மா சத்ய காமனாகவும் ஸத்ய சங்கல்பத்தை உடையவனாக விருக்கிறான். சா. 2-8-12-3- नोपजनं स्मरन्निदं शरीरम् - அவன் (முக்தாத்மா) தன் தேகத்தை நினைப்பதில்லை—இந்த தேகம்தான் அவனுக்குப் பல பிறப்புக்களை உண்டாக்கியது.

வேறிடத்திலும் இம்மாதிரி சுருதி சொல்கிறது. சா. 8-7-26-2ல்-பார்க்கிறவன் (பிருஹ்மத்தைப் பார்க்கிறவன்) न पश्यो मृत्युं पश्यति - மிருத்யுவைப் பார்ப்பதில்லை. இதே மாதிரி வாஜஸநேயக பாடங்களிலும் காணப்படுகிறது (பிரு. உப) 4-3-7 - कतम आत्मा इति पृष्ट - ஜனகராஜன் கேள்வி கேட்டார் - "இந்த ஆத்மா யார்?"-இதற்கு யாக்ஞவல்கியர் பதில் அளிக்கிறார் - योऽयं विज्ञानमयः प्राणेषु हृद्यन्तर्ज्योतिः पुरुष -इति - அவன் தான் விக்ஞானமயன் (ஜீவன்) (விக்ஞானத்தை ஸ்வரூபமாகவும் குணமாகவுடையவன்) அவன் பிராணனில் இருக்கிறான் (அதாவது இந்திரியங்கள்—முக்ய பிராணனில்); அவன் ஹ்ருதயத்திலுள்ள ஜ்யோதிசாகவுமிருக்கிறான்-இந்த புருஷன் (ஆத்மா). அவ்விதமே இந்த சுருதி கூறுகிறது. (பிரு. 2-2-4-14 & 4-5-5) विज्ञातारमरे केन विजानीयात्-பிரியே-எதனால் (ஒருவன்) அறிகிறவனை அறிய முடியும்? जानात्येवायं पुरुषः-இந்த புருஷன் (இதை) வாஸ்தவத்திலே அறிகிறான். அவ்விதமே இன்னும் சில சுருதிகள் சொல்கின்றன-பிரஸ். 2-4-9ல். एष हि द्रष्टा श्रोता घ्राता रसयिता मन्ता बोद्धा कर्ता विज्ञानात्मा पुरुषः- வாஸ்தவத்திலே, ஜ்ஞானஸ்வரூபனான இந்த ஜீவன் காண்பவனும்-கேட்பவனும்-முகர்பவனும் - சுவைப்பவனும் நினைப்பவனும் - அறிபவனும் - செய்பவனாக விருக்கிறானன்றோ? பிரஸ். 2-6-5ல் एवमेवास्य परिद्रष्टुरिमाः षोडश कलाः - இந்த விதமாக இந்த பதினாறு கலைகள் ஜீவனுக்கு இருக்கின்றன -

(அறிகிறவனுகவிருக்கும் ஜீவனுக்கு இருக்கின்றன). षोडश கலைகள்-स प्राणमसृजतेति वाक्योक्ता प्राणादय:-ஞானாஸ்ரயத்தை உடையவனுக விருககிறுன் ஆத்மா) என்பதாகும்.

ஆகவே மேலே காட்டப்பட்டது - ஜீவனுக்கு ஞாத்ருத்வம் ஸ்வபாவிகமான குணமாகுமாஞல்-அந்த ஜீவனுக்கு ஸர்வகதத்வம் (எங்கும் பரவியிருப்பது)-எல்லாவிடத்திலும் எக்காலத்திலும் காணப்படும் தன்மையும் सर्वदा सर्वगतस्य तस्य सर्वत्र पलब्धिः இருக்குமே-(அணு ஸ்வரூபமல்லவே) என்பதற்கு (ஆட்சேபத்திற்கு) அடுத்த சூத்ரம் பதிலாகும்.

(இங்கு சொல்லப்படுவதை நன்கு கவனிக்க வேண்டும் - பூர்வ பக்ஷம்-சுருதிகளான விக்ஞானம் யக்ஞம் தநுதே- ஞான ஸ்வரூபனை ஜீவன் யக்ஞம் செய்கிறுன்; (தை.2)யோ விக்ஞாநே திஷ்டந்-(காண்வ) எவன் ஞானஸ்வரூபனை ஜீவனிடம் நிற்கிறுனே)-கூறுவது ஜீவன் ஞானஸ்வரூபமே - ஞானத்தைக் குணமாக உடையவனல்ல; இரண்டாவது' ஆத்மா ஜடஸ்வரூபனுகவும் (சைதன்ய மாத்ரமே)-உண்டாகி அழியும் அறிவை குணமாக உடையவனுக விருக்கிறுன்-ஏனெனில் தூக்கம் மூர்ச்சை முதலிய காலங்களில் அவனுக்கு அறிவு காணப்படுவதில்லை. ஆனல் விழித்திருக்கும் போது - இந்திரிய அதீனமாகவே (ஔபாதிகமாகவே) ஞானம் யேற்படுகிறது-ஆகவே இயற்கையாகவே ஜீவனுக்கு அறிவில்லை. (ஸ்வரூபம்) - முக்தி நிலையிலும் அறிவு அழிந்து போகிறது-ஜீவனுக்குச் சம்பந்தப்பட்ட காரியங்கள் உலகில் எங்கும் காணப்படுவதால் - ஜீவனும் ஸர்வகதன் (எங்குமுள்ளவன்) என யேற்படுகிறது. சரி-இயல்வான ஞானத்தை உடையவனுக ஒப்புக்கொண்டாலும், எல்லாக் காலத்திலும் எங்கும் அவன் தோன்ற வேண்டி வரும். இந்திரியங்களும் அநாவசியம்; இந்தக் குறைகளை நீக்க-ஜீவனை பாஷாணக் கல்லைப்போல ஜடஸ்வரூபனுகவும் - (ஆகாந்திகமாக) தோன்றி மறையும் அறிவை உடையவனுக ஒப்புக்கொள்ள வேண்டும்.

இம்மாதிரி இருவித பூர்வபக்ஷங்களும் தவறு. ஆத்மா ஞானத்தை ஸ்வரூபமாகவும் - குணமாகவும் உடையவன்-ஜடனுமல்ல - தோன்றிமறையும் அறிவை உடையவனல்ல. சுருதி

அவ்விதம் சொல்கிறது. சா.2; பிரஸ் ந; 2. பல சுருதிகளில் ஞான ஸ்வரூபமும்-குணமும் இயல்வானது என்று ஓதப்படுகிறது. ஆகவே ஞானமாத்ரமாகக் (ஸ்வரூபமாகக்) கூறும் பூர்வபக்ஷமும், கல்லைப்போல உணர்ச்சியற்ற ஜடஸ்வரூபனாகக் கூறும் பூர்வபக்ஷமும் தள்ளப்படவேண்டியது; முக்தி நிலையோடு-பத்த நிலையோடு-எப்போதுமே வாசியற ஜீவன் அறிபவனாக விருக்கிறான்-தர்மியாகவே விருக்கிறான்.

இவ்விதம் அறிபவனாக விருப்பது ஸ்வரூபமாகுமானால்-அவன் எங்கும் வ்யாபித்தும் எங்கும் தோன்றவேண்டி வருமே என்னும் முற்கூறிய ஆக்ஷேபத்திற்கு பதில் அடுத்த சூத்ரத்தில் கூறப்படுகிறது.)

ஸி. சூத் उत्क्रान्तिगत्यागतीनाम् (2-3-20)

உத்க்ராந்தி கத் யாகதீ நாம் ( do )

உத்கிராந்திகத்யாகதீநாம் - சரீரத்திலிருந்து வெளிக் கிளம்புவதும் (லோகாந்தரத்திற்குச்) செல்லுதலும் (கமனம்) அதே மாதிரி (லோகாந்தரத்திலிருந்து) திரும்பி வருதலும் ஜீவனுக்கு சுருதியில் ஓதப்படுவதால்-ஜீவாத்மா அணுவே (ஸ்வரூபத்தில்)-விபுவல்ல.

இந்த ஆத்மா எங்கும் பரவியிருப்பதில்ல; அதன் ஸ்வரூபம் அணுவாகும். எப்படி! உத்கிராந்தி சமயத்திலே (தேகத்தை விட்டு கிளம்பும்போது)-அது வெளிக் கிளம்புவது அதே மாதிரி பிறப்பு எடுக்கும்போது அது சரீரத்திற்குள் நுழைவது - இவை சுருதியிலிருந்து அறியப்படுகின்றன. உத்கிராந்தியைப் பற்றிச் சொல்லும் சுருதி - तेन प्रद्योतेनैष आत्मा निष्क्रामति, चक्षुषो । वा मूर्ध्नोवाऽन्येभ्यो वा शरीरदेशेभ्यः— இந்த ஜீவாத்மா மரிர்கும் சமயம் தேகத்திலிருந்து வெளிக்கிளம்பி ஹ்ருதயத்தின் நுனியிலிருக்கும் நாடி வெளிச்சத்தின் உதவியினால் - கண்வழியாகவோ - அல்லது தலை வழியாகவோ அல்லது வேறு பாகத்தின் வழியாகவோ புறப்படுகிறான். (பிரு. உ. 4-4-7)

அதன் கதியும் கௌ. உ. 1-2ல் ये वै केचास्माल्लोकात्, प्रयन्ति, चन्द्रमसमेव ते सर्वे गच्छन्ति - "சிலர் உலகத்திலிருந்து புறப்பட்டு சந்திரலோகத்தை அடைகிறார்கள்." அதேமாதிரி ஆத்மா தேகத்துக்குத் திரும்புதல் இந்த சுருதியில் - பிரு. உ. 6-4-6- तस्माल्लोकात् पुनरेत्यस्मै लोकाय कर्मणि - பூலோகத்திலிருந்து அவன் மீண்டும் பிறப்பை அடைகிறான் - (எதற்காகவெனில்) தன் கர்மாக்களைச் செய்வதற்கு. ஆத்மா ஆதலால், அணுஸ்வரூபமே யாகும். அது விபுவாகவிருப்பின், (எங்கும் பரவியுள்ளதாக விருப்பின்) - தேகத்திலிருந்து புறப்படுவது சரியாகாது.

(இந்த சூத்ரத்தைவைத்து - சங்கரர் ஒரு புதிய அதிகரணத்தை உண்டாக்குகிறார். அதில் பின்னால் வரும் சூத்ரங்கள் அனைத்தும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. (கர்த்தராதி கரணம் வரை). கௌஷிதாகி சுருதி விரிவாக சூத்ரம் 3-1-12ல் சொல்லப்படுகிறது).

ஸி: சூ. स्वात्मना चोत्तरयोः (2-3-21)
ஸ்வாத்மநா சோத்தரயோ:- (do)

च சப்தம் அவதாரணம். (வலியுறுத்துகிறது) - எதை உத்தரயோ: - கதி, ஆகதி (திரும்பி வருதல்) ஆகிய பின்னிரண்டும் ஸ்வாத்ம நாச - தன் ஆத்ம ஸ்வரூபத்திலேயே (நடக்கவேண்டியவை யாகையால் ஆத்மா அணுவாகும் - என்பது உறுதி.)

ஜீவன் விபுவாக விருப்பின் அசையாமலிருக்கும். அவனுக்கு சரீர வியோகம் யேற்படுவதையே உத்கிராந்தி என அழைப்பார்கள். அவ்விதம் ஏற்படுவதால் - பரலோகத்திற்குச் செல்லுதலாகிற கதியும்; பிறகு லோகாந்திரத்திலிருந்து பூமிக்குத் திரும்பிவந்து ஒரு தேகத்தில் நுழைவதும் - ஆகிய இரண்டுகதியும் அசைவதின் மூலமே நடக்கக்கூடியது. ஆகவே கதியாகதி இவ்விதமின்றி சரியாகாது (அணுவாகவிருந்தால்தான் சரியாகும்- விபுவாகவிருப்பின் சரியாகாது - கஷ்டப்படணும்) ஆகவே கதியும் திரும்பிவருதலும் தன் ஆத்மாவினால்தான் யேற்படவேண்டுவதால் - ஜீவஸமூஹம் அத்தனையும் அணுஸ்வரூபமேயாகும்.

ஸித்· ஸூ. नाणुरतच्छ्रुतेरिति चेन्न इतराधिकारात् (2-3-22)

நாணுரதச்ச்ருதேரிதி சேந்ந-இதராதிகாராத் (do)

*அதச்சுருதே:- அணுத்வத்திலும் வேறுபட்ட விபுத்வம் சுருதியிலே (ஜீவனுக்கு) கூறப்படுகையால் - அணு: ந ஜீவன் அணுவல்லன், இதிசேத் - என்றால் இதராதிகாராத் - ஜீவனைக் காட்டிலும் வேறுபட்ட பரமாத்மாவைப்பற்றிய பிரஸ்தாவ முள்ளதால் ந - அந்த விபுத்வம் ஜீவனுடையதல்ல.*

*பிரு. உ. 4-3-7ல் (6-4-25)* योऽयं विज्ञानमयः प्राणेषु - *என்று ஜீவனை பிரஸ்தாபித்து (அவன் - ஜீவன் விக்ஞானமயனாக இருப்பவன் - அவன் பிராணனில் இருக்கிறான் - (இங்கே பிரஸ் தாபம் யாதெனில்* स वा एष महानज आत्मा *- என்றும்; இதில் 12 -* योयं विज्ञानमयः इति *வாக்ய வ்யவஹித பூர்வமபி ஸ்ரூயதே.) மீண்டும் அந்த சுருதி தொடர்ந்து சொல்கிறது* स वा एष महानज आत्मा *- இது வாஸ்தவமாகவே பிறப்பில்லாததும் பெரியதுமான ஆத்மாவாகவிருக்கிறது - இதில் ''மஹான்'' (பெரியது) என்று சொல்லப்பட்டிருப்பதால் ஜீவன் அணுவல்ல - மிகப் பெரியதே (உருவத்தில்) (மஹத்வம் என்பதால்) -* नाणुजीवं *(ஜீவன் அணு வில்லை) என்று நீ சொல்வாயாகில் - சித்தாந்தி பதில் கூறுவது - ந - அப்படியில்லை.* इतराधिकारात् *- இந்த பிரகரணம் பரமாத்மா வைப் பற்றியதாகும். - அதாவது ஜீவனைவிட வேறான பிராக்ஞன்- பரமாத்மாவைப் பற்றியதாகும். சரி - ஆரம்பத்தில் ஜீவனைப் பற்றிய பிரஸ்தாபமிருப்பினும், அந்த பிரகரண நடுவிலே பரமாத்மாவும் பிரதிபாதிக்கப்படுகிறான் -* यस्यानुवित्तः प्रतिबुद्ध आत्मा *(அவனுக்கு அதாவது ஜீவாத்மாவுக்கு) - பரமாத்மா - பிரதிபுத்தன்-எல்லாம் அறிந்தவனாகிற பரமாத்மாவே உபாஸ்யப் பொருளாக ஆகிறான். (பிரு. உ 4-4-13) இங்கு ரங்கராமானு ஜரின் வ்யாக்யானப்படி சிறிது மாறுதல் சுருதபிரகாசிகையி லிருந்து காட்டப்படுகிறது. சுருத பிரகாசிகையில்* विद ज्ञाने - उपास्य इत्यर्थ:; *பிரதி புத்த ஆத்மா – பிராக்ஞ ஆத்மா.) ஆகவே மஹத் (எங்கு பரவியிருப்பது - விபுத்வம்) பரமாத்மாவைப் பற்றியது - ஜீவனைப்பற்றியதல்ல. ஜீவன் அணுவேயாவான்.*

(பிரு. உ. ப. ஸர்வக்ஞனும். அதிஸங்கடமான இந்த தேகத்தில் நுழைந்திருப்பவனுன பரமாத்மா அந்த ஜீவாத்மாவுக்கு ஆத்மா வாய் உபாஸ்யனுகவிருக்கிருன் - யஸ்யாநுவித்த: ப்ரதிபுத்த: ஆத்மா அஸ்மிந்தேஹகஹநே ப்ரவிஷ்ட: | ஸ விஸ்வக்ருத்ஸஹி ஸர்வஸ்யகர்த்தா - என்று பிரகரண மத்தியிலே பரமாத்மாவைப் பற்றி பிரஸ்தாபம் - என்பதாகும்.)

ஸித். ஸூ. स्वशब्दोन्मानाभ्याम् च (2-3-23)

ஸ்வசப்தோந்மாநாப்யாம்ச (do)

ஸ்வசப்தோந்மாநாப்யாம்ச - (ஜீவனைக் குறித்து) அணு சப்தமும் (அணுவஸ்துவை) எடுத்து, அதன் அளவும் சுருதியில் கூறப்படுவதால் ஜீவன் அணுவே.

சாக்ஷாத் அணுசப்தமே ஜீவனுக்கு சுருதியில் கூறப்படுகிறது - மு. 3-1-9ல் एषोऽणुरात्मा चेतसा वेदितव्यो यस्मिन् प्राणः पञ्चधा संविवेश — ஐந்துப்படிப்பட்டிருக்கும் (விதமாகசஞ்சரிக்கும்) பிராணன் எவனிடத்தில் (உபகரணமாக) உள்ளதோ, அந்த ஜீவாத்மா அணுஸ்வரூபனுவான்) - என்று சுருதி ஜீவனை அணு வென்று நேராகவே கூறியது. இன்னென்றுடன் அளவுடன் ஒப்பிட்டுப்பார்த்தால் - அதனுல் யேற்படும் ஒப்பிடப்பட்ட பரி மாணம் (அளவு) ஆகும். அணுபரிமாண முள்ளதைப் போல் இருக்கும் ஒரு வஸ்துவை பொருக்கி எடுத்துக் கொண்டு - அதன் (ஜீவாத்மாவின்) அளவு இவ்விதம் சுருதியில் கூறப்படு கிறது - ஸ்வே. 5-9ல் वालाग्रशत भागस्य शतधा कल्पितस्य च । भागो जीवः स विज्ञेयः - इति - நெல்நுனியின் நூறில் ஒரு பங்கை நூறு கூருக ஆக்கப்பட்ட பகுதியின் ஒரு பாகமாயிருப்பவன் ஜீவன் என அறிய வேண்டும் - என்று அணுவை ஒத்த பொருள் ஒன்றை எடுத்து அதே அளவுடையவன் ஜீவன் என்று மற்ருெரு சுருதியில் கூறப்பட்டிருக்கிறது. ஸ.வே. 5-9ல் आराग्रमात्रोह्यवरोऽपि दृष्टः—சாட்டை முள்ளின் நுனியினைப் போல மிகச் சிறிய உருவமுள்ளவன் ஜீவன் - என்பதால் - ஜீவன் அணுவேயாகும்.

மேலும் ஆட்சேபம் இவ்விதம் சொல்லக்கூடும் - ஜீவன் அணுவாக விருக்குமானால் - ஸகல சரீரத்திலே வ்யாபிக்கும் வேதனைகள் (சுக துக்காதிகள்) யேற்படுவது சரியாகாதே-அதாவது (குறிப்பிட்ட இடத்திலேதான் இருக்கும்). இம்மாதிரி அபிப்ராயம் சொல்வது (அதாவது சந்தனம் போன்ற குளிர்ந்த வஸ்துவைத் தட்டினால் உடம்பு பூராவும் குளிர்ச்சி யேற்படுகிறதல்லவா - தேகம் முழுவதிலுமுள்ள உணர்ச்சிகள் அவனுக்குத் தெரியக் கூடாதே-என்கிற ஆட்சேபத்திற்கு மதாந்திரத்தை அனுஸரித்துப் பரிஹாரம் கூறப்படுகிறது.

ஸி. ஸூ. अविरोधश्चन्दनवत् (2-3-24)

அவிரோதஸ் சந்தனவத் (do)

*சந்தனவத் (தேகத்தின் ஒரு பகுதியிலுள்ள) சந்தனம் தேகம் முழுவதும் உணர்ச்சியை விளைவிப்பது போலே, அவி ரோத:—விரோதமில்லை என்பதாம்.*

*எப்படி ஹரிசந்தனத் துளியானது தேகத்திலே ஏகதே சமாக (ஒரு பகுதியில்) இருப்பதால் ஸகல தேஹவ்யாபகமாக-இன்பத்தை விளைவிக்கிறது. அதைப்போல, ஜீவன் தேகம் முழுவதிலுமுள்ள உணர்ச்சிகளை அறிகிறான். இந்த ஆத்மா ஒருவிடத்தில் இருப் பினும்-எல்லா அவயவங்களிலும் உணர்ச்சிகளை அனுபவிக்கிறான்- ஆகவே ஜீவன் அணுவேயாகும்.*

ஸி. ஸூ. अवस्थितिवैशेष्यादिति चेन्नाभ्युपगमाद्धृदि हि (2-3-25)

ஸி. ஸூ. அவஸ்திதி வைசேஷ்யாதிதி சேந்ந அப்யுபகமாத் ஹ்ருதி ஹி (2-3-25)

*அவஸ்திதி வைசேஷ்யாத்—(சந்தனத்துளி) தேகத்தின் ஒரு பகுதியில் இருப்பதால், (தேகம் முழுவதிலும்) இன்பம் யேற்படு கிறது. ஜீவன் அப்படியில்லை) இதிசேத்-என்று கூறப்படுமாகில், ந-இந்த ஆட்சேபம் சரியாகாது. அப்யுபகமாத்-(ஜீவனுக்கும் தேகத்தின் ஒரு பகுதியில் இருப்பை) ஒப்புக்கொள்வதால்;- ஹ்ருதிஹி - ஹ்ருதயத்தில் ஜீவன் இருப்பதாக ஓதப்படுகிறது.*

ஹரிசந்தன பிந்து உதாரணத்தினுல் ஏகதேசமாகவிருப்பினும் விசேஷ அனுபவம் சரீரம் முழுவதிலும் அனுபவிக்கப்படுகிறது; ஆனுல் ஜீவனுக்கு தேகத்தின் ஒரு பகுதியில் இருப்பை ஒப்புக்கொள்கிறோமாகில், இது எல்லாத் தேகத்திற்கும் யேற்படுவது சரியாகாது. அந்த ஒரு இடமும் ஹ்ருதயத்தில் இருப்பதாக-சுருதி சொல்கிறது - பிரஸ்-2-3-6ல் हृदि ह्येष आत्मा: तत्रैकशतं नाडीनाम् - இந்த ஆத்மா ஹ்ருதயத்தில் இருக்கிறுன் - அங்கு நூற்றொரு நாடிகள் உள்ளன—என்கிற வாக்யப்படி ஒரு பகுதியான ஹ்ருதயத்தில் ஜீவனுக்கு இருப்பு ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆகவே பூர்வபக்ஷம் சரிதான் - அதாவது ஜீவன் ஒரு பகுதியில் இருப்பதாக ஹ்ருதயத்தில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது - (சந்தன திருஷ்டாந்தத்தைக் கொண்டு ஜீவன் தேகம் முழுவதும் உணர்ச்சிகளை அனுபவிக்கிறுன் - என்று சொல்வது ஒட்டாது) பிரு. 2-6-3ல்-அவ்விதமே - कतम आत्मा - இந்த ஜீவன் யார் என்கிற பிரஸ்னத்திலிருந்து - மீண்டும் சுருதி சொல்கிறது - योऽयं विज्ञानमयः प्राणेषु हृद्यन्तर्ज्योतिः - என்று - விக்ஞானமயனை ஜீவன் பிராணனில் இருக்கிறுன் - அவனே ஹ்ருதய நடுவேயுள்ள வெளிச்சமாகும். ஜீவாத்மா ஒரு குறிப்பிட்ட இடத்தில் யிருக்கிறதாகச் சொல்லப்படுவது - சந்தன திருஷ்டாந்தத்தைக் காட்டி - அதனுல் தேகத்தின் முழுவதிலும் உணர்ச்சிகளை அறிகிறுன் என்று சொல்வதற்காகவே न तु चन्दनस्य देशविशेषापेक्षा। - சந்தனத்திற்கு அதன் அனுபவங்களை அடைவதற்கு ஏதாவது குறிப்பிட்ட இடத்தை அபேக்ஷியாதோ - அதைப்போல ஜீவனுக்கு குறிப்பிட்ட இடமிருப்பினும் - அதற்கு உணர்ச்சிகளை தேகம் முழுவதிலும் அனுபவிப்பதற்கு சக்தி உண்டு என்பதற்காகவே சந்தனம் உதாரணம் காட்டப்பட்டதாகும். ஏக தேசத்தில் இருப்பினும் ஜீவன் சகல தேக வியாபாரகாரியகரத்வம் - காரியங்களை நிர்வஹிப்பது இருந்தவிடத்திலேயிருந்து கொண்டு- அதற்கு சக்தி உண்டு - என்பது சூத்ரக்காரரின் அபிப்ராயமாகும்.

**ஸ். சூ. गुणाद्वाऽऽलोकवत् (2-3-26)**

**குணுத்வாऽऽலோகவத் (2-3-26)**

**ஆலோகவத் - (சூரியன் முதலானவற்றின்) கிரணங்களைப் போல, குணுத்வா - குணமான அறிவின் மூலம் (தேகம் முழுவதும் பரவுகிறுன் ஜீவன்) என்பதுபோல.**

(சங்கதி) இங்கு ராமானுஜர் தமது மத ரீதிப்படி சொல்கிறார்.

वा சப்தம் மற்ற மதத்தினர்களின் பக்ஷத்தைத் தள்ளுவதாக அர்த்தத்தில் பிரயோகம். ஜீவாத்மா தன் சொந்த குணமாகிற ஞானத்தினாலே சகல தேகம் முழுவதும் வியாபித்துக் கிடக்கிறது. आलोकवत् - சூரியனின் கிரணங்கள் பரவுவது போல; குணமான அறிவின் மூலம் ஜீவாத்மா தேகம் முழுவதும் பரவுகிறான், அணுவாக ஸ்வரூபமிருப்பினும் - எப்படி நவரத்ன மணிகளின் வெளிச்சம் - சூரியனின் பிரகாசம் - இதுமாதிரி மற்ற பிரகாசமுள்ள வஸ்துக்கள் - ஒரேவிடத்தில் இருப்பினும் பல விடங்களில் அதன் கிரணங்களால் யேற்படும் வெளிச்சம் யேற்படுவதுபோல - அநேக தேசங்களில் வ்யாப்தி காணப்படுகிறதே அதைப்போல - ஜீவன் ஹ்ருதய அவஸ்தையில் இருப்பினும் - அதன் குணமாகிற ஞானத்தினால் ஸகல தேகம் முழுவதும் வ்யாபிக்கிறான். ஜீவன் அறிவைக் குணமாகவும் - அறிகிறவனாகவுமிருக்கிறான். அவன் தர்மபூத ஞானத்தில் கர்மாக்களுக்கு ஏற்ப விகாஸம் - ஸங்கோசத்தை அடைகிறான். ஆகவே அறிபவனாகவிருக்கும் ஜீவாத்மா ஞானத்தைக் குணமாக - தன்னிடம் ஆஸ்ரயிக்கும்படிவிருக்கிறான் - அதனால் அவனுக்கு அறிகிற தன்மை யேற்படுகிறது - அறிகிறவனாகவுமிருக்கிறான் ஞானத்தின் பரவுதலால்: அதனால் நவரத்ன மணி - சூர்ய கிரணம் - ஆகிற உதாரணங்கள் காட்டப்பட்டு-முதல் சூத்ரமாகிற ஜிக்ஞாஸாதிகரணத்தில் ஸ்தாபிக்கப்பட்டது. ஆகவே ஒரே ஜீவன் தேகம் முழுவதிலும் - இன்னும் அவனுடைய மகிமையினால் எடுத்துக் கொள்ளப்பட்ட பல தேகங்களிலும் (சௌபரிரிஷியைப்போல) எல்லாக் காரியங்களைச் செய்கிறான். ஹ்ருதயத்திலிருக்கும் ஜீவனின் குணமாயிருக்கும் அறிவு (தர்ம பூத ஞானம்) தேகம் முழுவதிலும் வியாபித்து எல்லாக் காரியங்களையும் செய்கிறான்.

அத்வைதிகளும் சாங்கியர்களும் சூத்ரம் 19ல் ஜீவாத்மா ஞானமாத்திரமே (ஸ்வரூபமே) என்கிறார்கள். (ஞானத்தைக் குணமாக ஒப்புக்கொள்ளவில்லை). ஆகவே அவர்கள் ஆக்ஷேபிக்கிறார்கள் - எப்படி ஞானம் ஸ்வரூபமாகயுள்ளது, அதற்கு எப்படி ஞானத்தைக் குணமாகவும் உடையவனாகச் சொல்வது பொருந்தும்? என்கிற ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரரே அடுத்த சூத்திரத்தில் பதில் உரைக்கிறார்.

ஸி. ஸூ  व्यतिरेकोगन्धवत्तथा च दर्शयति  (2-3-27)

வ்யதிரேகோ கந்தவத் ததாச தர்ஸயதி (-do-)

கந்தவத் - மணத்திற்கு (அதை உடைய பிருத்வியைக் காட்டிலும் பேதம் ஸித்திப்பது) போலே - வ்யதிரேக; - (தர்ம பூத ஞானத்திற்கு அதையுடைய ஆத்மாவைக் காட்டிலும்) வேறுபாடு (ஸித்திக்கிறது); ததாச தர்ஸயதி (சுருதியும்) அவ் வண்ணமே காட்டுகிறது.

எப்படி பிருத்விதத்வம் மணமுடையது என்னும் அறிவில் குணமான மணத்திற்கு - குணத்வேந உபலப்ய மானஸ்ய - குணத் தினல் அறிவுயேற்படுவதற்கு - அதையுடைய பூமியைக் காட்டிலும் வேறுபாடு ஸித்திக்கிறதோ - அதைப்போல ஆத்மா வுக்கும் ஞானம் என்கிற குணத்தினல் தர்மியைப் பிரித்துக்காட்டு கிறது – "நான் அறிகிறேன்" என்னும் அறிவில் ஜீவஸ்வருபத்தை காட்டிலும் அதில் குணமாக விருக்கும் அறிவுக்கு வேறுபாடுஸித் திக்கவே செய்கிறது. (ஞாத்ருகுணத்வேன ஜாஞமீதி ப்ரதீய மானஸ்ய ஞானஸ்ய ஆத்ம நோ வ்யதிரேக: ஸித்த: - என்பதாம்) சுருதியும் இந்த குணமான அறிவை ஆத்மஸ்வருபத்தைக் காட்டிலும் வேருகவே காட்டுகிறது. - பிரு உ. 6 - 3 - 30– जानात्येवायं पुरुषः - இப்புருஷன் அறியவே செய்கிருன்- என்பதால் ஆத்மஸ்வருபம் (ஆத்மா) வேறு - அதன் குணம் (ஞானம்) வேறு. ஞானம் என்கிற குணத்திற்கு ஆத்மா ஆஸ்ரயம் அளிக்கிறது. (ஜீவன் அறிகிருன் - அறிவைக் குணமாக (தர்மபூத ஞானமாக) உடையவனுக விருக்கிருன் )

ஸி. ஸூ. पृथगुपदेशात्  (2-3-28)

பிருதகு பதே சாத் (do)

ப்ருதகுபதேஸாத் - ஆத்மாவைக்காட்டிலும் ஞானத்தை வேருகவே உபதேசிப்பதால் (ஞானத்திற்கு ஆத்மாவைக்காட்டி லும் வேறுபாடு ஸித்தம்)

தன்னேயேக்காட்டுவதாகிற சப்தத்தாலே (स्वशब्देन) விக் ஞானம் (அறிவு) விக்ஞாத: (அறிகிறவன் - அறிவை குணமாக உடையவன்) என்பதை விட வேருக உபதேசம் இருக்கிறது;

சுருதியிலே பி. உ. 6-3-30 ல் न हि विज्ञातुर्विज्ञाते र्विपरिलोपो विद्यते - அறிபவனுகிற ஆத்மாவினுடைய அறிவுக்கு அழிவில்லை - என்று அறிபவனை ஆத்மாவை விட அவனுடைய அறிவு வேறு பட்டதாகவே சுருதி கூறுவதால் - அறிவும் அறிபவனும் வேருகும்.

மேலேயுள்ள 19 வது சூத்ரத்தில் அறிவையே ஜீவாத்மாவாக இந்த சுருதிகளில் சொல்லப்படுகிறது - (ப்ருகாண் 5 - 7 ) यो विज्ञाने तिष्ठन् - विज्ञानं यज्ञं तनुते (தை ஆந5) (1) எவன் ஞான ஸ்வரூபனை ஜீவனிடம் நிற்கிருனே; (2) விக்ஞானம் ஸ்வரூபனை ஜீவன் யாகம் செய்கிருன். என்பதால் ஜீவன் ஞானஸ்வரூபமாக விருக்கிருன் யொழியஞானத்தைக்குணமாக உடையவனல்லன் - ஞானமேவ ஆத்மா (தான்) உபதேசிக்கப்படுகிறதென்ருல் - சூத்ரக்காரர் அடுத்த சூத்ரத்தில் பதில் கூறுகிருர்.

ஸி. சூ. तद्गुणसारत्वात्तु तद्व्यपदेशः प्राज्ञवत् (2-3-29)
தத்குண ஸாரத்வாத்து தத்வ்யபதேஸ; பிராக்ஞவத் ( do )

தக்குணஸாரத்வாத்து - ஞானகுணத்தை ஸாரமாக் கொண்டிருப்பதாலேயே, தத்வ்யபதேஸ! - (ஆத்மா) ஞானமென்று கூறப்படுகிறது. பிராக்ஞவத் - ஸர்வக் ஞனை பரமாத்மா (ஆனந்த குணத்தை ஸாரமாக உடையவனுதலால் ஆனந்தம் என்று கூறப் படுவது போல) (ஜீவனும் ஞானகுணத்தைஸாரமாகக் கொண்டிருப்பதால் ஞானம் என்று வழங்கப்படுகிருன்).

து சப்தம் ஆக்ஷேபத்தைத் தள்ளுகிறது. ஜீவாத்மா ஞானத்தை ஸாரமாகக் கொண்டிருப்பதாலே - அதாவது ஞானத்தை (விக்ஞானம் என்கிற அறிவை) குணமாக உடையதாலே-ஜீவாத்மாவிற்கு விக்ஞானம் என்று வ்யபதேசம் (கூறப்படுகிறது. तद्गुणसारत्वात् - विज्ञानगुणसारत्वात् - आत्मने विज्ञान-सितिव्यपदेशः- விக்ஞானமேதான் ஜீவனுடைய ஸாரபூதமான குணம் - எப்படி பிராக்ஞனை (ஸர்வக்ஞனை) பரமாத்மாவுக்கு ஆனந்தம் என்கிற குணம் ஸாரபூதகுணம் என்றும், பிராக்ஞ (பரமாத்மாவை) ஆனந்தசப்தத்தால் வ்யபதிஸ்யதே (காட்டுகிறதோ) அதுபோல ஜீவனையும் ஞானம் என்று காட்டுகிறது - ஞான குணத்தை ஸாரமாக உடையவனுக யிருப்பதாலே.

தை. ஆ. 7. 1. यदेष आकाश आनन्दो न स्यात् - இந்த ஆகாசம் (அதாவது ஆகாசசரீர பிரும்மம்) ஆனந்தமாக வில்லாத போனால்...; தை. பி. 6 - 1 - आनन्दो ब्रह्मेति व्यजानात् - அவன் அறியட்டும் - ஆனந்தத்தை பிருஹ்மம் என்று; பிராக்ஞனுடைய (பரமாத்மாவினுடைய) ஆனந்தம் அவனுக்கு ஸாரபூதமான குணமாகும் - (எங்ஙனமெனில்) தை. ஆ. 9-4ல் स एको ब्रह्मण आनन्दः- பிருஹ்ம ஆனந்தத்தில் அது ஒரு அளவாகும். आनन्दं ब्रह्मणो विद्वान् न बिभेति कुतश्चन - எவன் பிரும்மத்தின் ஆனந்தத்தை அறிகிறனோ - அவன் எதற்கும் பயப்படுவதில்லை. மேலும், தை. ஆ, 9-1ல் सत्यं ज्ञानमनन्तं ब्रह्म- ஸத்யம் ஞானம் அனந்தம் என்று விபஸ்சித: (ஸர்வக்ஞன) பரமாத்மாவை (ஸர்வக்ஞக) ஞானசப்தத்தால் வ்யபதேசம் (காட்டுவதாக) இருக்கிறது தை. ஆ. 1-1-2ல் सह ब्रह्मणा विपश्चिता - எல்லாம் அறிந்த (ஸர்வக்ஞ) பிருஹ்மத்தோடுகூட, அவன் ஆனந்தத்தை அனுபவிக்கிறன் - மு- 1-1-9ல் यः सर्वज्ञः எவன் ஸர்வக்ஞனோ - எல்லாவற்றையும் அறிகிறனோ - இவைகளால் பரமாத்மாவுக்கு ஞானம் ஸாரபூதமான குணமாக ஓதப்படுகிறது. (எப்படி பரமாத்மாவை ஆனந்தம் என்று சொல்வதுபோல, ஜீவனும் ஞானகுணத்தை ஸாரமாக உடையதாலே - ஞானம் என்று வழங்கப்படுகிறன்.)

ஸி. ஸூ. यावदात्मभावित्वाच्च न दोषस्तद्दर्शनात् (2-3-30)

யாவதாத்ம பாவித்வாச்ச ந தோஷஸ் தத்தர்ஸநாத் (2-3-30)

யாவதாத்மபாவித்வாத்ச (ஆத்மா இருக்கும்வரையிலும்) நித்யமாக அறிவும் இருப்பதாலும், நதோஷ:- ஆத்மாவை ஞானம் என்பதில் குற்றமில்லை. தத்தர்ஸநாத் - (நித்யதர்ம மான கோத்வாதிகளையிட்டு பசு முதலானவை கோ முதலிய சப்தத்தால்) வழங்கப்படுவதைக் காண்பதால் - குற்றமில்லை என்பதாம்.

விக்ஞானம் (அறிவு) என்கிற தர்மம் (குணம்) ஆத்மா உயிருடன் இருக்கும்வரை விருக்கிறது-அதனல் ஜீவனை விக்ஞானம் என்று குறிப்பதில். தவறில்லை. ஞானம் மாறு படாதகுணமாக ஜீவனுடன் இருக்கிறதால் ஜீவனை ஞானம் என்று அழைப்பதில்

தோஷமில்லை. எப்படி உடைந்த கொம்புள்ளமாடுகளை ''கோ'' (பசு) என்கிற சப்தத்தினுல் அதன் தர்மமாக உடைய கோத்வம் - எப்படி அப்ரதிக்ஸித்தமாக ஸ்வரூபத்திலே பசுமாடு இருக்கிற வரை இருக்குமோ - ஜாத்யாதி தர்மங்கள் கோவ்யக்தி இருக்கிற வரை இருக்குமோ - அதுபோல. (கோத்வாதிதர்ம சப்தத்தாலே கௌ: என வ்யபதேசம் காணப்படுவதுபோல என அர்த்தம் - அதாவது ஸ்வரூப நிரூபணதர்மங்கள் ஆகிறதைக் குறிக்கும். அதுபோல ஞானமும் ஜீவனுக்கு ஸ்வரூப நிரூபணதர்மமாக விருக்கும். (ஸாரசப்தத்தால் அப்ருதிக் ஸித்த - ஸ்வரூப நிரூபண தர்மத்தைக்காட்டும். அது பிரகாரிபரியந்தம் அர்த்தம் சொல்லும். ஆத்மாவைக் குறிக்காதபோது நிஷ்கர்ஷ சப்தமாகும். அந்த வ்யக்தியை மாத்திரமே குறிப்பதாகும்.) இம்மாதிரி தோஷங்களைப் பரிஹரிப்பது 'ச' என்கிற அக்ஷரத்தினுல் காட்டப் படுகிறது - ''ச'' என்பதால் ஞானத்தைக் குணமாகவுடைய ஆத்மாவும் ஸ்வபிரகாசத்வேந (தன்னைத்தானே காட்டிக் கொண்டு) விக்ஞானம் என்று வ்யபதேசமிருப்பது தோஷமில்லை என்று இதனுல் தேறுகிறது. (பிராம்மாதிகரணத்தில் ஜைமினி பக்ஷத்தைத்தள்ளி, பிரகாசத்வம்கூட ஆத்மாவிற்கு உண்டு - என்பதை வியாஸர் ஸ்தாபித்துள்ளார். அதுபோல இங்கேயும் அவருடைய சித்தாந்தத்தைச் சொல்லி 'ச' காரத்தினுல் வற்புறுத்துகிருர் எனக் கொள்ளவேண்டும்-)

(அதாவது அறிவாகிறகுணம் - கோத்வாதி குணங்களைப் போல-ஆத்மஸ்வரூபத்தோடு-அப்ரதிக் ஸித்ததர்மமாக (ஸ்வரூப நிரூபணதர்மமாக) என்றும் கூடியிருப்பது. இக்காரணத்தாலும் ஜீவனை ஞானம் என்பதில் குற்றமில்லை. எப்படியெனில் பசு முதலான வற்றுக்கு அவையுள்ள வரை கோத்வம் முதலான அமைப்புக்கள் தர்மமாக விருக்கும் - என்கிற காரணத் தினுல், அவற்றையிட்டு பலவகைப்பசு (உடைந்த கொம்பு - பூர்ண ஸ்ருங்கம் இத்யாதிகளுக்கும்) ''கோ'' முதலிய சப்தம் பிரயோகம் ஏற்பட்டிருப்பதுபோல், நித்யமான ஆத்மாவுக்கு ஞானம் நித்யதர்மமாக விருப்பதால், அது ஞானம் எனப்படு கிறது எனக்கண்டுகொள்வது. சூத்ரத்தில் ச காரம் அநுக்தஸ முச்சயமாய், மற்ெரு ஹேதுவையும் காட்டுகிறது. அதாவது

தர்மபூத ஞானத்தைப்போல, ஆத்மாவும் ஸ்வயம் பிரகாசமா யிருப்பதாலும் ஞானம் என்றே வழங்கப்படத்தடையில்லை என்னும் ஹேதுவையும் கூட்டுகிறது. ஆகையால் ஆத்மாவானது ஞான ஸ்வரூபமாயிருப்பதோடன்றியில், ஞானத்தைக் குணமாக உடையதாகவுமிருக்கிறது.) (ச என்பதால் ஸமுச்சய அர்த்தத்தில் - ஞானம் என்கிற தர்மத்தைப்போல ஜீவாத்மா ஸ்வயம் பிரகாச மாகவிருக்கிறது ஸ்வரூபத்திலே; அதனால் ஜீவாத்மாவை விக் ஞானம் என்று சொல்வதில் தோஷமில்லை. அதாவது ஸ்வரூப நிரூபகதர்மத்தைக்கொண்டு அந்த வஸ்துவைக் குறிப்பதால் தோஷமில்லை. என்பதாகும்).

தூக்கம் மூர்ச்சை முதலான காலங்களில் காணப்படாமை யால், ஞானத்தை ஆத்மாவின் ஸ்வரூபத்திலே சேர்ந்த நித்ய தர்மமாகக் கூறுவது எப்படி பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு அடுத்த ஸூத்ரம் பதில் அளிக்கிறது.

ஸி. ஸூ. पुंस्त्वादिवत्त्वस्य सतोऽभिव्यक्तियोगात् (2-3-31)

பும் ஸத்வாதிவத் த்வஸ்ய ஸதோ஽பிவ்யக்தி யோகாத் do

ஸத: அஸ்ய-(எப்போதும் ஆத்மாவில்) உள்ள இந்த தர்மபூத ஞானத்திற்கு, பும்ஸத்வாதிவத் - ஆண்மை முதலானவை (மனி தனுக்கு ஒரு காலத்தில் வெளிப்படுவதுபோலவே), அபிவ்யக்தி யோகாத் - (விழிப்பு முதலான சில காலங்களில்) வெளிச்செறிப்பு (பிரகடனம்) ஏற்படுவதாகக் கொள்ளலாமாகையால் (ஆத்மா வுக்கு அறிவு நித்யதர்மமாகலாம்).

'து' சப்தம் - ''ஆயினும் என்கிற அர்த்தத்தில் பூர்வபக்ஷியின் ஆக்ஷேபத்தைத் தள்ளுவதாகப் பிரயோகம். இந்த ஞானத்தின் (அதின்) ஸத்பாவம் (இருப்பு) ஸுஷுப்தி காலத்திலும்கூட இருக்கிற தாகச் சொல்லப்படுகிறதே - அது ஜாக்ரத தசையிலும் வெளிப் படுகிறது. ஆகையால் அது ஆத்மாவின் ஸ்வரூப தர்மமாகிறது என்று சொல்வது சரியாகலாம். पुंस्त्वादिवत् ஆண்மை பதினாறு வயதுள்ள பையனுக்கு - சரியான காலத்திலே பிரகடனமாவது போல எப்படி ஆண்மைத்தனத்திற்கு (பும்ஸத்வம்) வேண்டிய

அசாதாரணமான தாதுக்கள் பால்யாவஸ்தையில் அடங்கி வெளிப் படுவதில்லை - யுவாபருவம் அடைந்ததும் அது வெளிப் பட்டு நீடித்து நிற்கிறது. காலவரம்பில்லாமல்) ஸப்ததாது மயத்வம் சரீரத்திற்கு ஸ்வரூபமாகிறது - அதனுடன் ஸம்பந்ப் பட்டிருப்ப தால். கர்ப்ப உபநிஷத் சொல்கிறது. तत् सप्तधातु त्रिमलं द्वियोनि चतुर्विधाहारमयं शरीरः - (அந்த சரீரத்திற்கு ஏழுதாதுக்கள் இருக் கின்றன, மூன்று மலங்கள் உண்டு; இரண்டு மாதாபிதா என்கிற யோனி உண்டு; நான்குவித ஆகாரம் (நக்கிச்சாப்பிடுதல் - உறிஞ்சி சாப்பிடுதல் - குடித்தல் - சா ப் பி டு த ல் (காத்ய - லேஹ்ய - சோஷ்ய - பேய - எனச்சொல்லப்படும்) ஏழுதாதுக்களாவன - சளி - ரத்தம் - மாம்ஸம் மஜ்ஜை எலும்பு - பசை-சுக்லம்: மூன்று மலங்களானவை - ஈரல் - காற்று - கோழை). இந்த உபநிஷத் தில் சரீரத்தின் ஸ்வரூபம் வ்யபதேசம்.

சுஷுப்தி தசையிலும் "நான்" என்கிற வஸ்து பிரகாசித்துக் கொண்டிருக்கிறது - என்கிற விஷயம் முன்பு சொல்லப்பட்ட தாகும். அந்த ஆத்மாவின் இருப்பாகிற ஞானம் விஷயத்தில், ஜாக்ரதா தசையில் (முழிப்பில்) விஷய கோசரத்வம் (அனுபவம்) யேற்படுகிறது (அனுபவ ஞானம்) - இதே மாதிரி மற்ற நிலை களிலும் ஸ்வப்னம், அப்போதும் ஏற்படுகிறது. ஆகையால் ஜீவாத்மாவிற்கு ஞாத்ருத்வமேவ (அறிபவனாக விருக்கிறான்) என்பது ஸ்வரூபமாகும்-இதுவும் முன்பே சொல்லப்பட்டதாகும். ஆகையால் ஞாத்ருத்வாதிதர்மங்கள் ஜீவாத்மாவுக்கு உண்டு என் பதால் - ஞாத்ருத்வமேவ ஜீவாத்மந; ஸ்வரூபம்.

இந்த ஜீவாத்மா அணுபரிமாணமுள்ளவன். இந்த சுருதியில் பிரு. 2-2-4-12 - & 14-5-13ல் - न प्रेत्य संज्ञाऽस्ति - (ஒருவன்) இறந்த பின்பு (அவனுக்கு) உணர்ச்சி யேற்படுவதில்லை (இல்லை) என்பதால் முக்தனுக்கு ஞானம் இல்லை (அபாவம்) என்றும் சொல்லப்படுகிறது. ஆயினும் பிரு. 2-4-4-12ல் एतेभ्यो भूतेभ्यः समुत्थाय तान्येवानुविनश्यति - இந்த பூதங்களிலிருந்து வெளிக் கிளம்பி அது (ஜீவாத்மா) அவைகளுடன் விநாசத்தை அடை கிறது-என்று சுருதி சொல்வதால்-பிறப்பு இறப்பு ஆகிற சம்ப வங்கள் ஸம்சார தசையில் இருப்பதாகச் சொல்லப்படுபவை -

இவை மஹாபூதங்களின் அதீனத்தில் இருப்பதால் பிறப்பு இறத்தல் ஏற்படுகிறது-இத்தகைய பிறப்பு இறப்பு முக்தன் விஷயத்தில் ஓதப்படவில்லை. சா. 2 7-26-2-न पश्यो मृत्युं पश्यति न रोगं नोत दुःखताम्। सर्वं हि पश्यः पश्यति सर्वमाप्नोति सर्वशः, எவன் (முக்தியடைகிறுனே) - (அதாவது) எவன் பரமாத்மாவைப் பார்க்கிருனே-அவன் ம்ருத்யுவைப் பார்ப்பதில்லை, ரோகத்தையும் துக்கத்தையும் அனுபவிப்பதில்லை, அத்தகைய (முக்தன்) எல்லா வற்றையும் பார்க்கிருன்-எல்லா விருப்பங்களையும் எல்லா விடங் களிலும் அடைகிருன் - இந்த சுருதிக்கு மேல் சொல்லப்பட்டது. ஒரே அர்த்தத்துடன் விருக்கிறது. அதே மாதிரி இந்த சுருதிகளும் சொல்கின்றன - சா-2-8-12-3ல் नोपजनं स्मरन्निदं शरीरम् (முக்தன்) அவன் தன் பிறப்புள்ள சரீரத்தை நினைப்பதில்லை. சா. 2-8-12-5 मनसैतान् कामान् पश्यन् रमते - அவன் (முக்தன்) தன் இச்சைகளை மனதினுல் அனுபவிக்கிருன்-அவனுடைய திவ்யமான ஞானத் தினுல் பார்த்து ரமிக்கிருன் - (இது முக்த ஸ்வரூபம் - இதில் ஞான மில்லை) - அறிவில்லை என்று கூறப்படுவதாகக் கூறுவதும் தவறு. அந்த சுருதி ஸம்சார தசையில் அவன் அனுபவித்தது போன்று பிராகிருதமான பிறப்பு இறப்பு முதலானவற்றின் அறிவு அவ னுக்கு முக்த நிலையில் இல்லை என்று கூறுகிறது.

ஆத்மாவானது ஞானஸ்வரூபமாகவும், (விபுத்வம்) எங்கும் நிறைந்ததாகவும் உள்ளது என்று கூறும் கபில (ஸாங்கிய) பௌத்த பக்ஷங்களிலுள்ள தோஷத்தை இதில் (32ல்) காட்டு கிருர். சாங்கியனின் பிரதானத்தை ஸம்ப்ரதி என்று சொல்லப் படுகிறது.

**ஸி.ஸு. नित्योपलब्ध्यनुपलब्धि प्रसङ्गोऽन्यतर नियमो वाऽन्यथा (2-3-32)**

**நித்யோபலப்த்ய நுபலப்தி பிரஸங்கோऽந்யதர நியமோ வாऽந்யதா** do-

அந்யதா - ஆத்மாவை (விபு) எங்கும் நிறைந்ததாகவும் ஞானமாத்ரமாகவும் ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் / நித்யோ பலப்த்யநுபலப்தி பிரஸங்க:—ஆத்மாவைப் பற்றிய தோற்றமும் தோற்றமின்மையும் எப்போதும் ஏற்படவேண்டி வரும், அந்யதர

நியம: வா - அல்லது அந்த தோற்றம் தோற்றமின்மை எனும் இவ்விரண்டிற்குள் ஏதாவதொன்று எப்போதும் ஏற்படவேண்டி வரும்.

"அந்யதா" - பூர்பக்ஷியின் கருத்தை - ஆக்ஷேபத்தை தள்ளுகிறது; அதாவது ஆத்மா ஸர்வகதன் (எங்கும் பரவியிருப்பது) என்கிற பக்ஷத்தை - அதற்கு ஞானமாத்திரம் தான் ஸ்வரூபமாக உள்ளது என்கிற பக்ஷத்தினர்களை (சாங்கியன் - பௌத்தன் சொல்வதை) | மேலும் அதன் உபலப்தி (காண்பது); அநுபலப்தி (காணுமை) இரண்டுமே நித்யம் (அழிவில்லாதது); (தோற்றம் தோற்றமின்மை இரண்டும் எப்போதும் யேற்படவேண்டி வரும்). अन्यतरनियमो वा - அல்லது அந்த தோற்றம் தோற்றமின்மை எனும் இவ்விரண்டிற்குள் ஏதாவது ஒன்று - (உபலப்தி வா - அனுபலப்திரேவவா) எப் போதும் யேற்படவேண்டி வரும் - நித்யமாக யிருக்கவேண்டியதாக ஆகும்.

என்ன சொல்லப்பட்டதென்றால் - (ஆத்மாவை நாங்கள் ஒப்புக் ,கொள்வதுபோல அணுவாயும், ஞாதாவாகவும் ஒப்புக் கொள்ளாமல், அது விபு-எங்கும் நிறைந்ததாகவும் (ஸர்வகதம்)- ஞானமாத்திரமே, ஸ்வரூபமாக மட்டும் உடையதாகவும் ஒப்புக் கொள்ளும் பௌத்த சாங்கிய பக்ஷங்களில், உபலப்தியும் (தோற்றமும்) அநுபலப்தியும் (தோற்றமில்லாமையும்) நித்யம், எப்போதும் ஏற்படவேண்டி வரும்; அல்லது அத்தோற்றம் தோற்றமின்மை இரண்டுக்குள் ஏதாவது ஒன்று நித்யம் (எப் போதும் யேற்படவேண்டி வரும்)-எப்படியெனில், உலகில் ஆத்மாவானது தோன்றுவதையும், தோன்றாமலிருப்பதையும் காண்கிறோம் - இந்த ஆத்மா ஞானத்மா - ஸர்வகதோ (எங்கும் பரவியுள்ளது) என்கிற ஹேதுவினால் ஆத்மாவை ஞான ஸ்வரூபனாகவும், எங்குமிருப்பவனாகவும் ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் அத்தகைய ஆத்மாவே முற்கூறிய தோற்றம் தோற்றமின்மைக்குக் காரணம் என்று கூறவேண்டும். அந்த ஆத்மாவானது ஞான ஸ்வரூபமாகவே எங்கும் எப்போதும் இருக்கிறபடியால், முற்கூறிய தோத்றம் தோற்றமின்மை நித்யம் எப்போதும் யேற்படவேண்டி வரும். இதனால் ஒன்றுக்கொன்று முரண்பட்ட தோற்றமும் தோற்றமின்மையும் ஒரே காலத்தில் ஒரே இடத்தில் உண்டாக

வேண்டி வரும். இந்த தோஷத்தைத் தவிர்ப்பதற்காக, ஆத்மா வானது எங்கும் எப்போதும் தனது தோற்றத்திற்குக் காரணமா கிறது என ஒப்புக்கொண்டால், உலகிற் காணும் (ஆத்மாவின்) தோற்றம் பொருந்தாமலே போகும்(உபலப்தேரேவ ஸர்வஸ்ய ஸர் வதாஸர்வத்ரானுபலம்பே நஸ்யாத்) (அத்ர அநபலப்திரேவ, ஸர் வதா ஸர்வத்ர உபலப்தி ந ஸ்யாத் இதி). ஆகையால் எங்கள்மதத் தில் (அஸ்மாகம்) ஆத்மாவை சரீரத்தினுள்ளே ஓரிடத்தில்தான் இருப்பதாக ஒப்புக் கொள்வதால் (அதாவது எல்லாவிடத்திலும் இருப்பது என்றும் ஞானஸ்வரூபம் மாத்திரமே என்று ஒப்புக் கொள்ளாமலும் - அங்கு மாத்திரமே ஆத்மா தோன்றுவதும் மற்ற விடங்களில் தோன்றாதிருப்பதும்) நன்கு பொருத்தமாகும். அஸ்மாகம் சரீர ஸ்யாந்தரே வாவஸ்தித்வா தாத்மந: தத்ரைவோ பலப்தி: நான்யத்ரேதி வ்யவஸ்தாஸித்தி:-(அங்கு சரீரத்தின் மாத்திரத்திலேயே ஆத்மா தோன்றுவதும் மற்றவிடங்களில் தோன்றாமையும்) பொருத்தமாகும். (அதாவது ஆத்மாதான் தோற்றத்திற்கும் - தோற்றமின்மைக்கும் - இரண்டும் யேற்படு வதற்குக் காரணமாகும்-ஏனெனில் வேறு ஒன்றுமில்லை-இதனால் சாங்கிய பக்ஷத்தில் தோஷமாகும்).

எங்குமிருக்கும் ஆத்மாவானது ஜடஸ்வரூபமாக யிருக்கச் செய்தே இந்திரியங்கள் முதலான கரண ஸம்யோகத்தினாலே அவ்வப்போது உண்டாகும் அறிவை உடையது என்று நையா யிகன் ஒப்புக்கொள்ளும் பக்ஷத்திலும், (கரணயாத்தோபலப்தேரபி) எல்லா ஆத்மாக்களும் (ஸர்வேஷாம் ஆத்மாநாம் ஸர்வகதத் வேந ஸர்வை: கரணை: ஸர்வதா ஸம்யுக்தத் வாத்) - எப்போதும் எங்கு மிருப்பதாலும், எல்லாக் கரணங்களோடும் கூடிய எல்லா ஆத்மாக் களோடும் அத்ருஷ்டம் முதலான ஹேதுக்கள் சேர்ந்திருக்கிற படியாலும், முன் பக்ஷத்தில் சொல்லப்பட்ட உபலப்தி அனுபலப்தி பிரஸங்கமும் (யேற்படுவதும்) அந்யதரநியமுமாகிற தோஷங்கள் ஏற்பட்டே தீரும். தோஷ: ஸமான; இதி-உங்கள் பக்ஷத்தில் தோஷம், இருக்கிறது. இதனால் ஆத்மாவானது அணுவாய் ஞான ஸ்வரூபமாய் ஞானத்தை எப்போதும் குணமாகவும் உடையதா யிருப்பது-என்னும் விசிஷ்டாத்வைத பக்ஷமே இந்த அதிகரணத் தில் பிரமாண யுக்திகளால் ஸ்தாபிதமாகும்.

அதாவது முன்பு கூறப்பட்ட மூன்றுவித சங்கைகள்-உபலப்தி மாத்ரம் - அநுபலப்தி மாத்ரம் - இரண்டும் ஒரே சமயம் தோன்றுவது.

(உத்தமூர் ஸ்வாமி-अणुत्वे तु नायं दोषः-इत्याह अस्माकम् इति । तार्किकप क्षेपि दोषं कथञ्चिदानयति करणेति । आत्मानां विभुत्वात् सर्वात्मकरणानामपि सर्वसंबन्धित्वात् ततत्करणनिष्पाद्य-कर्मणामपि सर्वीयत्वात् तत्तज्जन्यादृष्टानामपि साधरणत्वात् तद धीनः आत्मानुभवः सर्वकरणावच्छेदेनाप्येकैकस्यात्मनो भवितु मर्हतीति एक देहावच्छेदेनौवात्मोपलब्धिरिति कयमिति भावः । अंशाधिकरणान्तगतसूत्राण्यत्रानु संधेयानि । तत् सिद्धमात्मनो ज्ञत्वं ज्ञानत्वमणुवञ्च ।—)

அதிகரணம்-5-கர்த்ரதிகரணம் (2-3-5)

ஸி. ஸூ. कर्ता शास्त्रार्थवत्वात् । (2-3-33)

கர்த்தா ஸாஸ்திரார்த்த வத்த்வாத் (do)

ஸாஸ்திரார்த்த வத்த்வாத்-சாஸ்திரம் பயனுள்ளதாக வேண்டுமாகையால், கர்த்தா-ஆத்மா கர்த்தாவாகிறுன்.

முன் அதிகரணத்தில் ஜீவன் ஸ்வரூபத்துக்கு ஞாத்ருத்வமும் (அறிகிறவனுக விருப்பதும்), அணுத்வமும் நிரூபிக்கப்பட்டது. இங்கே அந்த ஜீவனுக்கு கர்த்ருத்வமும் உண்டு என நிலே நிறுத்தப் படுகிறது.

இந்த ஆத்மா ஞாதா - அறிகிறவனுக விருக்கிறுன் - அவன் அணுபரிமாணமுள்ளவன் என்றும் சொல்லப்பட்டது. இங்கே (இந்த் அதிகரணத்தில்) தானே கர்த்தாவாய் காரியங்களைச் செய்பவனுய் இருக்கிறுனு-அல்லது அவன் தான் அகர்த்தாவாய் (காரியங்களைச் செய்யாதவனுய்) இருந்து கொண்டே, அசேதனங் களான பிரகிருதி குணங்களின் கர்த்ருத்வத்தை (செயல்படும்

தன்மையை) தன்னிடமே யேற்றிட்டுக் கொள்கிருஞ என்று ஆராயப் படுகிறது. எது சரியாகும்? ஆத்மா அகர்த்தாவாகவே யிருக்கிருன்- என்னும் இரண்டாம் பக்ஷமே சரியாகும். எப்படி? आत्मनोऽकर्तृत्वम् ஆத்மா அகர்த்தாவாகவே யிருக்கிருன். என்றும், பிரகிருதியின் குணங்களுக்கே கர்த்ருத்வம் உள்ளதென்றும் - அத்யாத்ம சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறது. உதாரணமாக - கடவல்லியிலே 2-18ல் न जायते म्रियते - என்று தொடங்கி பிரகிருதி விகாரமான தேகத்தின் தன்மைகளான பிறப்பு இறப்பு முதலானவை அனைத்தும்-ஜீவனுக்கு இல்லை-இவை ஜன்ம ஜராமரணுதிகம் ஸர்வம் பிரகிருதி தர்மம் என்று கூறி, கட 2-19ல் हन्ता चेन्मन्यते हन्तुं हतश्चेन्मन्यते हतम् । उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते—ஹிம்ஸிக்கிறவன் எதிரியைத் தான் ஹிம்சிப்பதாக நினைத்தாலும், ஹிம்சிக்கப்படுகிறவன் தன்னை ஹிம்சிக்கப்படுபவனுக நினைத்தாலும்-அந்த இருவரும் உண்மையை அறியவில்லை. முன்னவன் ஹிம்சையைச் செய்யவில்லை-பின்னவன் ஹிம்சிக்கப் படவுமில்லை-என்கிற மந்திரத்தில் ஹநநம் (ஹிம்சித்தல்) முதலான கிரியைகளில் ஜீவனுக்கு உண்மையில் கர்த்ருத்வம் இல்லை என்று தள்ளப்படுகிறது (கர்த்ருத்வ மபி பிரதி ஷித்யதே). இதன் அர்த்தம்-எவன் ஆத்மாவைக் கொல்பவனுக அறிகிருனே-அவன் ஆத்மாவை அறிந்து கொள்ளவில்லை. இதே படி பகவான் கீதையில் அருளியிருக்கிருர். கீ-3-27ல் जीवस्याकर्तृत्वं स्वरूपम्; कर्तृत्वाभिमानस्तु व्यामोहः எங்கேயும் கர்மாக்கள் பிரகிருதியின் குணங்களால் செய்யப்படுகின்றன-எவன்தான் தான் செய்தேன் என்று அபிமானிக்கிருனே-அவன் வ்யாமோஹத்தின் வசமடைந்தவனுகும். மேலும் கீ 3-27ல் प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः । अहङ्कारविमूढात्मा कर्ताऽहमिति - அஹம்கார விமூடாத்மா-தேகாத்மாபிமானத்திஞல் தன் ஸ்வரூபம் அறியப்படாமல் இருப்பவன் மூலபிரகிருதியின் முக்குணங்கள் எல்லாம் எல்லாவிதமாகவும் செய்கின்ற செயல்களை-அஹம் (நான்) கர்த்தா (செய்கிறேன்) என்று நினைக்கிருன். (உண்மையை உணர்ந்தவனே குணங்களே அக்குணங்களின் காரியங்களில் முனைந்திருக்கும் - என்று நினைத்து-தான் கர்த்தா என்கிற சம்பந்தத்தை விடுகிருன். கீதை 14-19ல் नान्यं गुणेभ्यः कर्तारं यदा द्रष्टानुपश्यति - ஸத்வபுத்தியை உடைய

ஜீவாத்மா (பகவத் ஆராதனம் என்று கர்மாக்களைச் செய்பவன் - குணங்களுக்கு அதீதன் - குணங்களைவிட வேறுபட்ட தன்னை - கர்த்தா அல்லாதவனுக எண்ணுகிறானோ - அப்போது அவன் என் ஸ்வரூபமாகிறான்-என்னைபோல குணவசப்படாத தன்மையை அடைந்து-குணங்களே கர்த்தா-ஆத்மா கர்த்தா அல்ல - நான் ஞானஸ்வரூபமுடையவன்-முன்பு செய்த கர்மாக்களினால் உண்டான முக்குணங்களை உடைய பிரகிருதி சரீர சம்பநதத்தினால் உண்டானது - நான் கர்த்தா அல்ல என ஞானத்தையே ஸ்வரூப மாக உடையவனோ-அவன் என் மாதிரி குணாதீதனாகிறான். கர்திருத்வம் குணங்களுக்குத்தான் உண்டு- ஆத்மாவிற்கு இல்லை (இதனால் பலன் பெறுவது அடுத்த சுலோகத்தில் பிறப்பு இறப்பி லிருந்து விடுபட்டு - முக்தனாகி - அழிவில்லாத ஆத்மாவை அனுப விக்கிறான்-இது தான் பகவானுடைய ஸ்வரூபம் என்பதாகும்) மீண்டும் கீதையில் 13-20ல் कार्यकारण कर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते। पुरुष सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते। சரீரம், மனதோடு சேர்ந்த பத்து இந்திரியங்கள் - (ஆக 11) ஆகும். பகவானுக்கு சரீரமோ இந்திரியங்களோ இல்லை எனச் சொல்லும் உபநிஷத் வாக்யம் - சரீரத்தைக் காரியம் என்றும், இந்திரியங்களைக் கரணம் என்றும், கூறியுள்ளது. ஆக சரீர இந்திரியங்கள் காரியத்தைச் செய்வதற்கு ஜீவாதிஷ்டிதமான பிரகிருதியே ஆதாரமாக விருப்பதனால் காரணம் எனப்படுகிறது (பிரதானம் அசேதமானபடியால் சேதன அதிஷ்டாதரவாக விருப்பதால் செயல்படுகிறது). சுக துக்கங்களை அனுபவிப்பதற்கு பிரகிருதியோடு சேர்ந்திருக்கிற ஜீவாத்மா காரணம். பிரகிருதியோடு சேர்ந்திருக்கிற ஜீவாத்மா சுக துக்கங் களின் அனுபவத்திற்கு இருப்பிடம் என்று அர்த்தம்). (அதாவது சரீர இந்திரியங்கள் காரியங்களைச் செய்வதனால் அதனால் யேற் படும் சுக துக்கங்கள் சேதனனுக்கே உண்டாகின்றன. ஆக பிரகிருதி செய்கிறது-புருஷன் அனுபவிக்கிறான் என்பதாகும்) (சாங்கியனின் அபிப்ராயம் இங்கு சொல்லப்படுகிறது. (ஈஸ்வரனை ஒத்துக்கொண்டால்); ஆகையால் புருஷனுக்கு भोक्तृत्वमेव; प्रकृतेरेव तु कर्तृत्वम् - इति—

(இங்கு சாங்கியன் ஆட்சேபிக்கிறுன்-கடவல்லி வாக்யத்தை ஆதாரமாக வைத்து கர்த்ருத்வம் பிரகிருதியின் குணமே - போக்த்ருத்வமே பொருந்தும் என்கிறுன்-உதாரணமாக ஹிம்சித்தல் முதலான கிரியைகளில் ஜீவனுக்கு உண்மையில் கர்த்ருத்வம் இல்லை என்பது பேசப்படுகிறது. ராமானுஜரின் அபிப்ராயம்-உபநிஷத்தின் நோக்கம் அதுவல்ல; ஆத்மா நித்யம்-அது கர்த்தாவாக வில்லை (அகர்த்தா என்பதை) மறுப்பதேயாகும். கீதை 18-30ல் சாங்கியன் இப்படி அபிப்ராயப்படுகிறுன்-காரியம் என்பது பஞ்ச பூதங்கள்; பஞ்ச தன்மாத்ரைகள்; கரணம்-(காரணம்) மஹத்-அஹங்காரம்-மனஸ்-ஐந்து கர்ம ஐந்து ஞான-கர்ம ஞானேந்திரியங்கள். மூலபிரகிருதி அவைகளை உண்டாக்கியது. அதன் க்ஷண பரியந்தம் தோன்றும் விகாரங்களுக்கும் அதுவே காரணமாகும். ஆகவே மூலபிரகிருதியே இதன் காரணம் (வேதாந்த தேசிகன்-தாத்பர்ய சந்திரிகை விளக்கம்). ராமானுஜர் காரியத்தை சரீரம் என்றும்; கரணம் - பதினொன்று இந்திரியங்கள் மனம் உள்பட; பிருகிருதி புருஷனால் அதிஷ்டிக்கப்பட்டு - அது காரியங்களுக்குக் காரணமாகிறது என்கிறுர்).

இப்படிச் சொல்லப்படுமாகில் - நாம் பதில் கூறுவோம் - कर्ता शास्त्रार्थवत्वात् - சாஸ்திரம் பயன் உள்ளதாக ஆகவேண்டுமாகையால் - சர்த்தா - ஆத்மாகர்த்தாவாகவும் ஆகிறுன். அதாவது ஆத்மாதான் கர்த்தாவாகும், குணங்கள் ஆகாது. எதனுல்? சாஸ்திரத்தில் ஓதப்பட்டது இவை - यजेत स्वर्गकामः - ஸ்வர்க்கத்தில் ஆசையுள்ளவன் யாகம் செய்கிறுன்; मुमुक्षु र्ब्रह्मोपासीत - முமுக்ஷு (மோக்ஷத்தில் ஆசையுள்ளவன்) பிருஹ்மத்தை உபாஸிக்கிறுன் - என்கிற வாக்கியங்களினுல் சம்சார த்சையில் ஜீவன் பல முயற்சிகளில் ஈடுபடுவது - பிரக்ருதிகார்யமான தனது சரீரத்திலுள்ள ஸத்வாதி குணங்களின் சேர்க்கையாலே - என்கிற கருத்தாகும். (ஸ்வர்க்க மோக்ஷாதிபலங்களில் போக்தாரமாகிற ஜீவனுக்குக் கர்த்தாவாகிற தன்மை யேற்படுகிறது). அவனுக்கு ஓதப்பட்ட சர்த்திருத்வம் - போக்த்ருத்வம் சரீரம், சரீரியான ஜீவன், மனத்துடன்கூடிய தச இந்திரியங்கள், பஞ்சவிருத்தி பிராணன்கள் - பரமாத்மா ஆக ஐந்தும் காரணமாகின்றன.

ஜீவனே கர்மாக்களுக்கு கர்த்தாவாயு - கர்மபலன்களை அனுப விக்கும்போது போக்தாவாகிறவன் அவனே என்பதாகும்) இதனால் பிரகிருதி கர்த்தாவாக ஆகமாட்டாது - அது அசேதன மானபடியால் शासनाच्च शास्त्रम् - शासनं च प्रवर्तनम्; சாஸ்திரம் கட்டளையிடுவதால் அது சாஸ்திரப் பிரமாணத்தையடை கிறது. சாஸனம் - செய்யவேண்டிய விதியைக் கட்டளையிடு கிறது. வேண்டாதவற்றை நிஷேதிக்கிறது. (விதாயக வாகயாநா மர்த்த வத்த்வாத் நியோகரூபார்த்த பிரதிபாதகத்வம் - ஸ்யாதித் யர்த்த:) அதனால் சேதனனே கர்த்தாவாகிறான் (நியோஜ்ய:) அது எங்கனமெனில் பிரவர்த்தியைப் போதிப்பதாலே யேற்படு கிற பெருமையாகும். அசேதனமாகிற பிரகிருதிக்கு கர்த்ருத்-த்வம் போதிக்கப்படமாட்டாதபடியால், ஏற்படாது. अचेतनं च प्रधानं न बोधयितुं शक्यम् । ஆகையால் சாஸ்திரம பிரயோசனத்தை அடையவேண்டியிருப்பதால், போக்தாவாகிற ஜீவாத்மாவே கர்த்தாவாகிறான் - இதனால் இம்மாதிரியான பூர்வமீமாம்ஸ வசனமிருககிறது-(மீ. 3-7-18) शास्त्रफल प्रयोक्तरि - சாஸ்திரத்தின் பலன் எவன் சாஸ்திரம் சொல்லியபடி அனுஷ்டிக்கிறானே - அவனுக்கு யேற்படுகிறது.

மேல் சொல்லப்பட்டது என்னவென்றால் - हन्ता चेन्मन्यते (ஹிம்ஸிக்கிறவன் எதிரியைத்தான் ஹிம்சிப்பதாக நினைத்தாலும் ......என்கிற கடவல்லி வாக்கியத்தினால் - ஹநநம் (ஹிம்சித்தல்) முதலான கிரியைகளில் ஜீவனுக்கு உண்மையில் கர்த்ருத்வம் இல்லை - என்கிறது (தள்ளப்படுகிறது) என்று சுருதி கூறியதற்கு அர்த்தம் யாதெனில் - ஆத்மா நித்யமாகையால் - அதற்கு கொல்லப்படாமை - சொல்லப்படுகிறது. (ஹந்தவ்யத்வம் அபா வாத் உச்யதே). கீதையிலும் 3-27ல் प्रकृतेः क्रियमाणानि - அஹங்காரவி மூடாத்மா பிரகிருதியின் குணங்களே எல்லாம் எவ்விதமாகவும் செய்கின்ற செயல்களை - "நான் கர்த்தா" (செய்கிறேன்) - என்று நினைக்கிறான் - என்கிற சுலோகத்தின் அர்த்தம் - குணங்களே கர்த்தாவாகிறது என்று ஓதப்படுகிறது, (அறிவுள்ளவன் குணங்களின் காரியங்களுக்கு நான் கர்த்தா அல்ல என நினைக்கறுன்) - இதில் குணங்களுக்கே கர்மங்களைச்

செய்தல் ஓதப்படுகிறது - என்றால் - அதற்கு அர்த்தம் - ஸம்சார தசையில் பிரகிருதி சம்பந்தத்தினால் ஆத்மாதானே கர்த்தா என்று அத்யாஸத்தை அடைகிறான் ஸத்வரஜஸ்தமஸ்ஸாதிகளால் தூண்டப்பட்டு நாம் செய்கிறோம். ஆத்மாவுக்கு ஸாம்சாரிக வியாபாரங்களிலுள்ள கர்த்ருத்வம (ஔபாதிசம்) செயற்கை என்பதாகும் - அதனால் கர்த்ருத்வம் ஆத்மாவின் ஸ்வரூபபிரயுக்தமில்லை. இதேபிரகாரம் அதே கீதையில் 13-21ல் कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु - இந்த ஜீவனுக்கு ஸத்வாதி குணங்களிலும் அவற்றின் காரியமான சுகதுக்காதிகளிலும் உள்ள பற்றுதல் புண்ய பாப கர்மங்களைச் செய்வித்து நற்பிறப்புக்களுக்கும் தீயப் பிறப்புக்களுக்கும் காரணமாகிறது என்பதாகும். அவ்விதமே கீதையிலே ஜீவாத்வாத்மாவுக்கு கர்த்ருத்வமும் ஒப்புக்கொள்ளப்படுகிறது - கீதை 18-16ல் तत्रैवं सति कर्तारमात्मानं केवलं तु यः । पश्यत्यकृतबुद्धित्वान्न स पश्यति दुर्मतिः · ஜீவாதமாவினுடைய கர்த்ருத்வம் பரமாத்மாவின் அனுமதியினால் உண்டானதாகவிருக்க, அந்தக் காரியத்தில் ஜீவாத்மாவை ஸ்வதந்திர கர்த்தாவாக எவன் எண்ணுகிறானோ விபரீத புத்தியையுடைய அவனுக்கு உள்ளபடியே அறியும் தன்மை இல்லாமையினால், உள்ளபடியே அறியும் தன்மை இல்லாமையினால், உள்ளபடியே கர்த்தாவை அவன் அறியவில்லை. (இங்கு நல்ல புத்தி படைத்தவன் - தன்னை அகர்த்தாவாக நினைக்கிறான் - அவன் அடையும் பலன்களைச் சொல்லியதாம்), மேலும் கீதையில் 18-14ல் अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् । विविधाश्च पृथक्चेष्टा दैवं चैवात्र पञ्चमम् - சாஸ்திரங்களில் கூறப்பட்டவிதி நிஷேதமும், மனோ வாக்கு காயங்களால் செய்யப்படுவதான சர்மாக்கள் விஷயத்தில் ஆத்மா தங்குமிடமான உடலும் (அதிஷ்டானம்) அவ்வாறே அங்குள்ள கர்த்தாவான ஆத்மாவும் (ததாகர்த்தா) வெவ்வேறு வகையான கர்மேந்திரியங்களும், மனமும் பிருதக்விதம் கரணம் ச - பல உட்பிரிவைகளையுடைய தனித்தனியான பிராண வாயுவின் ஸஞ்சாரமும் (விவிதாச பிருத்க்சேஷ்டா) இவற்றிலே ஐந்தாவதாய் - முக்கியமான பரமாத்மாவும்; தைவம் ச; கீழ் கூறப்பட்ட இவ்வைந்தும் காரணங்கள். இதில் ஐந்தாவது காரணமாகச் சொல்லப்பட்ட தெய்வம் அந்தர்யாமியானவன், கர்மாக்

களைச் செய்வதில் பிரதானகர்த்தாவாகிறான். இந்த விஷயம் கீதையில் 15ம் - 15ல் சொல்லப்பட்டதாகும் - ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட: மத்தஸ்ம்ருதி ஞானமபோஹநம் (கீதை 15-15)ல் முன்பே சொல்லப்பட்டதாகும் (அதாவது சரீரம், கர்த்தாவான ஜீவன், மனத்துடன்கூடிய பலவகைப்பட்ட கர்மேந்திரியங்கள், பஞ்ச விருத்திப் பிராணன்கள்-ஐந்தாவதான பரமாத்மா - ஆக ஐந்தும் கர்மங்களுக்குக் காரணமாகின்றன. இதனால் ஜீவனை கர்த்தா என்றே எடுத்திருப்பதும் இங்கு நோக்கத்தக்கது. ஆகையால் ஜீவனே கர்மாக்களுக்குக் கர்த்தாவாகவும் அவற்றின் பலனை அனுபவிக்கும் போக்தாவாகவும் ஆகிறான் எனக் கருத்து.) அதிஷ்டானாதி ஐந்தாவதான தெய்வபரியந்தம் அபேக்ஷிக்கப்படுகிறதாலே, எவன் ஜீவனைக் கர்த்தாவாகப் பார்க்கிறானோ, அவன் பார்ப்பதில்லை. न स पश्यतीत्यर्थः (அதாவது சாஸ்திரதிருஷ்டியினால் कर्तारमिति; வ்யவஹாரத்திலே தத்விவேசந பிரகரணேऽபி க்ரியமாணத்வாத் கர்த்ருத்வம் ஆத்ம நிஷ்டமிதி ஞாயதே. केवलमिति-अधिष्ठानादिसहि तस्यैवात्मनः कर्तृत्वे सति, तद्राहितमेवं कर्तृत्वेन मन्यते चेत्, स न विवेकीत्यर्थः உத்தமூர் ஸ்வாமி (இங்கே ராமானுஜர் சொல்கிறார்-சாங்கியனுக்கு ஆதரவாகச் சொல்லப் படவில்லை-குணமில்லை ஜீவனே கர்த்தாவாகிறான்) என்பதாகும்.

### ஸூ. उपादानाद्विहारोपदेशाच्च (2-3-34)

### உபாதாநாத் விஹாரோபதேஸாச்ச (do)

உபாதாநாத் - (சரீர இந்திரியங்களைப்) பற்றிக்கொண்டு, விஹாரோபதேஸாத் ச - (ஜீவன்) ஸஞ்சரிப்பதாக உபதேசிக்கப் படுவதாலும் (ஜீவனே கர்த்தா ஆகும்).

பிரு. உ. 4-1-18ல் स यथा महाराजः ...एवमेवैष एतान् गृहीत्वा शरीरं यथाकामं परिवर्तते - மஹாராஜன் தன் நாட்டிலுள்ள குடிமக்களைக் கட்டிக்கொண்டு தன் நாட்டில் தன் இஷ்டப்படி சஞ்சரிக்கிறானோ - அவ்விதமே ஜீவனும் (ஸ்வப்னத்தில்) தன் இந்திரியங்களைப் பற்றிக்கொண்டு தனது சரீரத்தில் இஷ்டப்படி

சஞ்சரிக்கிறான் என்று ப்ராணன்களை எடுத்துக்கொண்டு ஜீவன் சஞ்சரிப்பதால் அவனுக்குக் கர்த்ருவம் (கர்த்ராவாக) உபதேசம் செய்யப்பட்டிருக்கிறது.

ஸி. ஸூ. व्यपदेशाच्च क्रियायाम्, न चेन्निर्देश विपर्यय (2-3-35)
வ்யபதேஸாச்ச க்ரியாயாம் ந சேந்நிர்தேஸ விபர்யய! (do)

க்ரியாயாம் வ்யபதேஸாத் ச - (லௌகிக வைதிக) கிரியைகளில் (கர்த்தாவாகக் கூறுகையாலும்) (ஜீவனே) கர்த்ரு - ந சேத் - (விக்ஞான சப்தத்தால் ஆத்மாவைக் கூறவில்லையாகில், நிர்த்தேஸ விபர்யய: - விக்ஞானேந என்று வேற்றுமை மாறுபாடு யேற்பட்டிருக்கவேண்டும்.

தை அ. 5-1ல் विज्ञानं यज्ञं तनुते कर्माणितनुतेमि च (ஞான ஸ்வரூபனான ஜீவன் யாகம் முதலான வைதிக காரியங்களைச் செய்கிறான், பணம் சம்பாதித்தல் முதலான லௌகிக காரியங்களையும் செய்கிறான் - என்று லௌகிகங்களாகவும் வைதீகங்களாகவுமுள்ள கிரியைகளைச் செய்யும் கர்த்தாவாக சுருதியில் ஜீவாத்மாவே சொல்லப்படுகிறனுகையாலும் அவனே கர்த்தாவாகிறான். இந்த வேதவாக்கியத்தில் விக்ஞான சப்தத்தால் ஜீவாத்மா சொல்லப்படவில்லை (नाऽऽत्मनो व्यपदेशः) - அந்தக்கரணமாகிய புத்தியையே விக்ஞானம் எனப்படுகிறது என்று பூர்வபக்ஷிகள் கூறுவது பொருந்தாது - ஏனெனில் அந்தக்கரணமாவது கிரியைக்கு ஸாதனமாயிருப்பது; விஜாநாத்யயேந இதி விக்ஞானம் - என்னும் வ்யுத்புத்தியாலே விக்ஞான சப்தத்தாலே ஞானகிரியா ஸாதனமான அந்தக்கரணத்தைக் கொள்ளப் பார்த்தால் - ''கரணேத்ருதியா'' என்னும் வியாகரண வழக்கப்படி மூன்றுவது வேற்றுமை வரவேண்டுமாகையால், விக்ஞாநேந யக்ஞம் தநுதே - (விக்ஞானமாகிறபுத்தியால் யக்ஞத்தைச் செய்கிறான்) என்றே பிரயோகம் யேற்பட்டிருக்கும். இனி, ''விஜாநாத்யநேந'' என்ற ஞானவிஷயத்தில் புத்தியானது காரணமாயிருந்தாலும் கிரியா விஷயத்தில் அது கர்த்தாவாகவேயிருக்கையால் மூன்றுவது வேற்றுமை வரவேண்டிய அவசியமில்லை என்று பூர்வபக்ஷிகள் கூறுவார்களாகில், அதுவும் சரியாகாது-ஏனெனில் க்ஞாதிருத்வம், போக்திருத்வம் கர்த்ருத்வம் ஆகிய மூன்றும் ஒரே ஆஸ்ரயத்தைப்பற்றி நிற்பவையேயாகையால், புத்தியானது

ஞானத்திற்கும் போகத்திற்கும் கர்த்தாவல்லாது கரணமாகவும், கிரியைகளுக்கு மாத்திரம் கர்த்தாவாகவும் ஆகமுடியாது - ஆகையால் ஞானத்துக்கும் போகத்துக்கும் கர்த்தாவான ஜீவனே கிரியைக்கும் கர்த்தாவாக முடியும் என்பதே சுருதியின் கருத்தாகும். அந்தக்கரணமாகிற புத்தியானது கரணமாகவே ஆகுமேயொழியக் கர்த்தாவாக ஆகமுடியாது என்று சாஸ்திரத்துக்குக் கருத்து இருப்பதாலே - "மனஸைவ அநுத்ரஷ்டவ்யம்" - விக்ஞாநேந விக்ஞானம் ஆதாய புத்த்யா யயா தாரயதே மந: பிராணேந்திரியக்ரியா:-என்று எல்லாவிதமான கிரியைகளுக்கும் புத்தியை காரணமாகவே சுருதி சாஸ்திரமானது மூன்றுவது வேற்றுமையை பிரயோகித்தது निर्देशविपर्ययः स्यात् - விக்ஞாநேந என்று மூன்றுவது வேற்றுமை மாறுபாடு இருக்கவேண்டும்.)- அதுபோல விக்ஞாநேந என்று மூன்றுவது வேற்றுமையைப் பிரயோகியாமையால்-(புத்தே:கரணத்வாத் விக்ஞாநாநே-இதி கரணவிபக்தி நிர்தேஸ்ஸ்யாத்) இங்கு "விக்ஞாபனம்" என்று ஜீவனே கூறப்படுகிறான் என்றும் அவனே கர்த்தாவென்றும் தேறிற்று.

### ஸி. சூ. उपलब्धिवदनियमः (2-3-36)

### உபலப்தி வதநியம: (do

உபலப்திவத்-முன் அதிகரணத்தில் கடைசி (2-3-32) சூத்ரத்தில் சொல்லப்பட்ட) உபலப்தியைப் போல அநியம:- (கர்மபல போகத்தில் நியமமில்லாமற் போகும்).

முன் அதிகரணத்தில் - 32ம் சூத்ரத்தில் ஆத்மாவுக்கு விபுத்வத்தை ஒப்புக்கொண்டால், ஆத்மா நித்யமாயும எங்கும் தோன்றவேண்டி யிருக்கும் (ஸர்வகத:): அல்லது தோன்றாமல் போகவேண்டி யிருக்கும் என்று உபலப்தியின் (தோற்றத்தின்) அநியமம் கூறப்பட்டது போல - இங்கேயும் ஆத்மாவைக் கர்த்தாவாக ஒப்புக்கொண்டால், பிரகிருதியானது எல்லா ஆத்மாக்களும் பொதுவாயிருக்கையால் பிரகிருதி செய்யும் எல்லாக் கிரியைகளின் பலனையும் எல்லா ஆத்மாக்களுமே அனுபவிக்க வேண்டிவரும். அல்லது ஒரே ஆத்மாவும் அனுபவிக்காமல் போகவேண்டி வரும். ஆதலால்

ஆத்மாவுக்கு அகர்த்ருத்வத்தினுல் தோஷம் சொல்லப்படும். ஒவ்வொரு ஆத்மாவுக்கும் அந்தக்கரணம் (மனம்) வெவ்வேறாக யிருக்கிறபடியால் இந்த அநியமம் (முறையின்மை) ஏற்படாது. எவன் எந்த அதிகரணத்தை உடையவனாக எந்தக் கர்மத்தைச் செய்கிறானே, அவன் அந்தக் கரணத்தோடு கூடி அந்தக் கர்மத்தின் பலனை அனுபவிக்கிறான்-என்று நியமம் கூறிவிடலாம்-என்று பூர்வபக்ஷி கூறுவானாகில், இதுவும் சரியில்லை-பொருந்ாதென்போம்-ஏனெனில் ஆத்மாக்கள் விபுவாயிருக்கையால் எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லா அந்தக் கரணங்களோடு சம்பந்தம் இருக்கும். அந்தக் கரணங்களைக் கொண்டு கர்மபல போக நியமம் கூறுவது ஒட்டாது. ஆகையால் ஜீவனுக்கே கர்த்ருத்வம் பொருந்தும் - ப்ரகிருதிக்கு எவ்வகையிலும் ஒட்டாது.

ஆத்மா அகர்த்ருத்வமானுல் தோஷம் ஸம்பவிக்கும் எப்படி ஜீவாத்மா விபுத்வத்தினுல் நித்யோபலப்த்யனுபலப்திப்ரஸங்க - ஸூத்ரம் 32ல் கூறப்பட்ட தோற்றமும் தோற்றமின்மையும் நித்யம் - எப்போதும் யேற்படவேண்டி வரும். அதேபோல அநுபலப்தியில் அநியமம் (அத்தோற்றம் தோற்றமின்மை என்னும் இவ்விரண்டிற்குள் ஏதாவது ஒன்று எப்போதும் யேற்பட வேண்டி வரும் - அநியம யுக்த:.) அதைப்போல ஆத்மாவுக்கு அகர்த்ருத்வமும், பிரகிருதிக்குக் கர்த்ருத்வமும் ஒப்புக்கொண்டால், பிரகிருதி எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவாகையால், ஸர்வபுருஷாதாரணத்வாத்-எல்லாப் பிரகிருதியின் கிரியைகளும் எல்லா ஆத்மாக்களின் போகத்திற்காக யேற்படும்-அல்லது அவை ஒரே ஆத்மாவும் அனுபவிக்காமல் போகவேண்டி வரும். (ஒரே ஆத்மாவின் போகத்திற்கு இல்லாமற் போய்விடும்).

ஜீவாத்மாக்களுக்கு விபுத்வம் ஒப்புக்கொண்டால்-அவைகளின் ஸந்நிதானத்தையும் ஒப்புக்கொள்வதால் எல்லாம் வித்யாஸப்படாமலிருக்கின்றன என்று ஆகும். (ஏனெனில் ஆத்மா விபுவாயிருக்கையால் எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லா அந்தக் கரணங்களோடும் சம்பந்தமுள்ளதாகையால் - அந்தக் கரணங்களைக் கொண்டு கர்மபல போக நியமம் கூறுவது சரியாகாது - (அந்தக் கரணம் ஒவ்வொரு ஆத்மாவுக்கும் வேறாக விருக்கிறபடியால்

இந்த அநியமம் பேற்படாது-எதனால் ஒரு நியமம் கூறப்படுமோ - எவன் அந்த அந்தக் கரணத்தை உடையவனாக எந்தக் கர்மத்தைச் செய்கிறானோ - அவன் அந்தக் கரணத்தோடு கூடி அந்த கர்மத்தின் பலத்தை அனுபவிக்கிறான் என்று நியமம் கூறிவிடலாம்- (இப்படி பூர்வபக்ஷி கூறுவாளாகில்) அது சரியாகாது ஏனெனில் ஆத்மா விபுவானால் - எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லா அந்தக் கரணங்களோடு சம்பந்தம் இருக்க வேண்டியதால் - அந்தக் கரணத்தைக் கொண்டு கர்ம பல நியமம் கூறுவது சரியாகாது. ஆகவே ஜீவனுக்கே கர்மகர்த்ருத்வம் சரியாகும்-பிரகிருதிக்கு கர்த்ருத்வம் ஒட்டாது.

(இங்கே கூறப்படுவது - 32வது சூத்ரத்தில் உள்ள நியமம் போல-பிரகிருதிதான் ஜீவாத்மாவின் போகத்திற்கும் போகமில்லாமைக்கும் காரணமாகிறது-ஏனெனில் வேறு ஒரு காரணமும் இல்லை என்பதால்; சரி-பிரகிருதி காரணமில்லை - அதற்கு எல்லா ஆத்மாக்களுடன் சம்பந்தம் உண்டு-ஆனால் அதன் ஒரு பரிமாணமாகிற அந்தக் கரணம்-இது பிரதி ஆத்மாமாவுக்கு வேறுபட்டிருப்பதானகயால் - பிரகிருதி காரணமாகமாட்டாது என்று சொல்லப்படுமாகில் - அதற்குப் பதிலாக இங்கு கூறப்படுகிறது எல்லா ஜீவர்களும் அவரவர்களின் அந்தக் கரணத்தோடு ஸம்பந்தம் கொண்டிருக்க வேண்டும் என்பதாகும்.

## ஸி. ஸூ. शक्तिविपर्ययात् (2-3-37)

## சக்தி விபர்யயாத் (do)

சக்தி விபர்யயாத் - பிரகிருதிக்குக் கர்த்ருத்வத்தை ஒப்புக்கொண்டால், அதற்கே போக்த்ருத்வ சக்தியையும் ஒப்புக்கொள்ள வேண்டி வரும். அதனால் ஆத்மாவிற்கு போக்திருத்வ ஸக்தி இல்லாமற் ஆகிவிடும்.

அந்தக் கரணமாகிற (புத்தி)-அது கர்த்தா என்று ஒப்புக்கொள்ளப்பட்டால், அவனே போக்தாவாக வேண்டி வருமாகையால்-இன்னொரு போக்தாவை அபேக்ஷிக்காது. போக்த்ருத்வம் புத்திக்கே பேற்படுவதாகும், அதனால் ஜீவனுக்கு போக்த்ருத்வ

சக்தி இல்லாமற் போகும். போக்த்ருத்வமும் புத்திக்கே யேற்படு மாகில் (சாங்-தத்வகௌமுதி-27 (पुरुषोऽस्ति भोक्तृभावात्-புருஷன் (ஜீவாத்மா) இருக்கிறார் ஏனெனில் போக்த்ரு பாவம் (அனுப விக்கிற வியக்தி எனப்படுபவன்) இருக்க வேண்டியதாலே. (அதா வது ஸாங்கியர்கள் போக்தாவாகவே ஆத்ம தத்வத்தை ஒப்புக் கொள்கிறார்கள்-இப்படிச் சொல்வதால் (புத்தியே)-பிரகிருதியே போக்தா என்று தேறிவிட்ட பின்பு, ஆத்மா என்னும் தத்வத்தை ஒப்புக்கொள்வதை (ஆத்ம ஸத்பாவம்) பிரமாணம் அபாவாத் இல்லாதபடியால்; அதனால் கர்த்தாவாகவும் போக்தாவாகவும் ஜீவனை ஒப்புக்கொள்வதே சரியாகும். சாங்கிய ஸித்தாந்தம் சரியாகாது.

## ஸி. ஸு. समाध्यभावाच्च (2-3-38)
## ஸமாத்ய பாவாத்ச -do-

ஸமாத்ய பாவாத்ச - (மோக்ஷ ஸாதன பூதமான) ஸமாதி பொருந்தாதபடியால்-ஆத்மாவே கர்த்தா.

புத்தியாகிற அந்தக் கரணத்திற்கு கர்த்ருத்வம் ஒப்புக் கொள்ளப்படுமாகில், மோக்ஷ ஸாதனமாகிற ஸமாதி முதலியவை களுக்கு அதுவே கர்த்தாவாகும். அத்தகைய ஸமாதி (புத்தி பூர்வகமான ஸமாதி)-நான் (ஸமாதி செய்கிறவன்) பிரகிருதியை விட அந்யன் (வேறொருவன் अन्योऽस्मि - ஏவம் ரூப: (இம்மாதிரி யான ரூபமாக விருப்பதால்) அந்த பிரகிருதி அசேதனமான படியால் அதற்கு ஸமாதி செய்யும் நிலை (அதாவது நான் பிரகிருதியிலிருந்து வேறானவன்) ஏற்படக் கூடியதல்ல. (அதாவது பிரகிருதியையே கர்த்தாவாக ஒப்புக்கொண்டால் மோக்ஷஸாதன மான ஸமாதிகளை அதுவே செய்கிறது எனக் கொள்ள வேண்டும். அந்த ஸமாதியை பிரகிருதியைக் காட்டிலும் வேறாக யிருக் கிறேன்-என்னும் அனுஸந்தானமாகவே ஸாங்கியர்கள் ஒப்புக் கொள்கிறார்கள். அதனால் பிரகிருதியைவிட வேறாக விருக்கிறேன்-(நானே ஆத்மா பிரகிருதியில்லை-நான் கர்த்தாவில்லை என்று சாங்கியன் அனுஸந்திக்கிறான் மோக்ஷத்திற்கு ) என்னும் அனுஸந் தானம் அசேதனமாகிற பிரகிருதிக்கு எப்படி ஒட்டும்? ஆகையால் ஜீவாத்மாவே கர்த்தாவாகும் என ஒப்புக்கொள்ள வேண்டியது.

## ஸூ. யதா ச தக்ஷோபயதா (2-3-39)

யதா ச தக்ஷோப யதா (do)

யதா ச தக்ஷா உபயதா-(ஆத்மா கர்த்தாவாக யிருந்தால் தான்) தச்சனைப்போல (இஷ்டமிருந்தால் வேலை செய்கிறான்; இஷ்டமில்லையானால்-வேலை செய்வதில்லை) என்னும் இருவிதமான நிலைமையும் சரியாகும். (ஒட்டும்).

வாக்கு முதலான கரணங்களுடன் ஆத்மா கூடியிருந்த போதிலும் ஜீவன் விருப்பமிருக்கும் போது செயல்படுகிறான்-இஷ்டமில்லாத வேலையில் போனால் ஈடுபடுவதில்லை,ஒரு காரியமும் செய்வதில்லை. எப்படி தச்சன் வாசி (உளி) முதலான கருவிகளோடு கூடியவனாக விருந்தபோதிலும் தச்சன் விரும்பியபோதே அத் தொழிலைச் செய்கிறான்; இல்லையாகில் செய்வதில்லை என்பதை உலகில் காண்கிறோம். (அவனுடைய இச்சா அனுகுணமாக செயல்படுகிறான்-வேலை செய்வதில்லை - ஆகிற இரண்டு விதமான நிலைகளில் அவன் இருப்பதால்) அதேமாதிரி கர்த்ருத்வம் அசேதனமான புத்திக்கு ஒப்புக்கொண்டால் - அதற்கு ஜீவனுக்கு உள்ளது போல விருப்பம் விருப்பமின்மை ஆகிய காரணங்கள் இல்லாமையால், முன் கூறப்பட்ட உபய (இருவிதமான) நிலைமை ஏற்படாமல் - எப்போதுமே செயல்படவேண்டி வரும்-கர்த்தாவாக வேண்டி வரும். (போக வாஞ்சாதி நியம காரண அபாவாத் ஸர்வதா கர்த்ருத்வமேவஸ்யாத்); ஆகையால் நாம் கொள்ளவேண்டியது-ஜீவனுக்கே கர்த்ருத்வ போக்திருத்வங்களாகிற இரண்டும் உள்ளவை என்பது உறுதியாயிற்று. (சங்கரர் இந்த சூத்ரத்திற்கு தனி அதிகரணம் இடுகிறார்).

## பராயத்தாதி கரணம் (2-3-6)

## ஸூ. பராத்து தச்ச்ருதே: (2-3-40)

தத்து - ஜீவனுடைய, அந்த கர்த்ருத்வமோ வெனில் (தது)-பராத்-பரமாத்மாவினாலேயே ஏற்படுகிறது. ஸ்ருதே: - சுருதி அப்படிக் கூறியிருப்பதால்.

முன் அதிகரணத்தில் யுக்திகளையும் சுருதியையும் ஆதார மாகக் கொண்டு-ஜீவனுக்கு யேற்படும் கர்த்ருத்வம் என்று சொல்லி-இங்கே அந்த கர்த்ருத்வம் பரமாத்மா அதீனமானது-என்று ஸ்தாபிக்கப்படுகிறது.

இங்கே ஜீவனுடைய கர்த்ருத்வம் ஸ்வதந்திரமானதா? அல்லது பரமாத்மாவையே நம்பியதா-(ஞானகார்யக்ருதிரூபதர்மி நிருபணம் ஆகிவிட்டபடியால் அந்த கர்த்ருத்வதர்மம் பரமாத்மா தீனம் என்று சொல்லப்படுகிறது. பரஸங்கல்பத்தினுல் - கரரியம் செய்யப்படுகிறதா-எது சரியாகும் - என்பது விஷயம்).

பூர்வபக்ஷி சொல்கிறுன்-ஸ்வாதந்திரத்தினுல் கர்த்ருத்வம் ஆத்மாவுக்கு யேற்படுகிறது. நாம் பரமாத்மா யதீனம் என்று சொல்லப்போமாகில், அதனுல் சாஸ்திரத்தின் விதி நிஷேத வாக்யங்கள் வீணுகிவிடும். அதன் பிரயோஜனம் இல்லாமற்போகும். (அதாவது இதைச் செய்-இதைச் செய்யாதே என்று சொல்லும் சாஸ்திரம் பயனில்லாமல் போவதைத் தடுக்க-ஜீவன் தன் சொந்த அறிவைக் கொண்டு ஸ்வதந்திரமாகவே காரியங்களைச் செய்கிறுன்-என்று கொள்ள வேண்டும்.) அவன் தன் புத்தியினுல் பிரவிருத்தி நிவிருத்தி காரியங்களில் ஈடுபடுவதால், அவனே அவ்விதம் சாஸ் திரக் கட்டளைக்குத் தகுதியாகிறுன் - स एव नियोज्यो भवति அதனுல் நாம் ஜீவனுடைய கர்த்ருத்வத்திற்கு ஸ்வாதந்திரியத்தை ஒப்புக்கொள்ள வேண்டியது.

இவ்விதம் சொல்லப்படுமாகில், நாம் பதில் கூறுவோம்-ஸூத். 2-3-40-परात्तु तच्छ्रुतेः-ஜீவனுடைய கர்த்ருத்வம் பரமாத்மா விணுலேயே யேற்படுகிறது-ஏனெனில் சுருதி அவ்விதம் கூறுவதால்-तत्-கர்த்ருத்வம்-ஜீவனுடையது परात् - பரமாத்மா அதீன மாகும்-ஏனெனில் வேத வாக்கியங்கள் அவ்விதம் கூறுவதாலே பரமாத்மாதான் ஹேது வாகிறுன். எப்படி? - ஶ்ருதி: - தை. ஆ-3-11-10ல் अन्तः प्रविष्टः शास्ता जनानां सर्वात्मा - ஸர்வாந் தர்யாமியான பகவான் ஜனங்களை உள் நுழைந்து நியமிக்கிறுன். பிரு. 2-5-7-22ல் यः आत्मनि तिष्ठन् आत्मनोऽन्तरो यमात्मा न वेद यस्यात्मा शरीरं य आत्मानमन्तरो यमयति स त आत्माऽन्तर्याम्यमृतः-

எவன் ஒருவன் ஜீவாத்மாவின் வெளிப்புறம் நிற்கிருனோ - உட்புறமும் நிற்கிருனோ-எவனை ஜீவன் அறிவதில்லையோ, எவனுக்கு ஜீவன் சரீரமோ எவன் ஜீவனை உள் நுழைந்து நியமிக்கிருனோ-மரணமற்ற அந்த அந்தர்யாமியே உனக்கு ஆத்மாவாகிருன்.

இதே பிரகாரம் ஸ்மிருதியும் ஓதுகிறது. கீதை 15-15ல் सर्वस्य चाहं हृदिसंनिविष्टो । मत्तः स्मृतिः ज्ञानमपोहनं च அக்னி, சந்திரன் முதலான எல்லாப் பிராணிகளுடைய ஹ்ருதயத்தில் ஸந்நிவிஷ்டனுக (அருகே) யிருந்து கொண்டு - (ஞானம் உண்டாகும் இடம் ஹ்ருதயம்)-எல்லாவற்றையும் என் சங்கல்பத்தினுல் நான் ஆத்மாவாக விருந்துகொண்டு நியமிக்கிறேன். என்னிடமிருந்தே ஞானம்-நினைவு-அபோஹநம் (மறப்பது) ஊஹம் எல்லாம் உண்டாகின்றன. மீண்டும் கீதை 18-61 ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति । भ्रामयन् सर्वभूतानि यन्त्रारूढानि मायया-அர்ஜுனு, ஸர்வேஸ்வரனுன வாசுதேவன் எல்லா ஜனங்களுடைய ஹ்ருதய பிரதேசத்திலும், பிரகிருதியாகிற யந்திரத்தில் ஏறி யிருக்கும் அவற்றை ஸத்வாதிகுணமயமான பிரகிருதி காரியமான சரீர இந்திரியங்களைக் கொண்டு அந்தந்த ஸத்வாதி குணத்திற்கு அனுகுணமாகச் செயல்களில் ஈடுபடுத்திக் கொண்டு நிற்கிருன்-(எல்லா பிராணிகளும் அவரவர் கர்மாக்களுக்கு ஏற்ப பிரகிருதியை அனுசரித்து நடக்கும்படி செய்கிருன் ஈஸ்வரன்). மாயயா-ஸங்கல்ப ஞானம் என அர்த்தம். ஆகவே ஜீவனுடைய கர்த்ருத்வம் பரமாத்மா அதீனமாகும். (சித்தாந்தம்)

மேலே சொல்லப்பட்டது சாஸ்திரங்கள் பயனற்றதாகி விடும்-பரமாத்மா தீனம் கர்த்ருத்வம் எனப்படுமாகில்-விதி நிஷேத சாஸ்திரங்கள் வீணுகிவிடும் என்று முன்பு கூறப்பட்ட பூர்வபக்ஷியின் ஆக்ஷேபத்திற்கு, சூத்ரக்காரரே பதில் பரிகாரமாகக் கூறுகிருர்.

**ஸி.ஸூ. कृतप्रयत्नापेक्षस्तु विहितप्रतिषिद्धावैयर्थ्यादिभ्यः (2-3-41)**

**கிருத ப்ரயத்நாபேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்தா வையர்த்யாதிப்ய (2-3-41)**

க்ருதப்ரயத் நாபேக்ஷ:து (எல்லாச் செய்கைகளிலும்) ஜீவனுல் செய்யப்பட்ட (முதல்) முயற்சியை எதிர்பார்த்தே

(பரமாத்மா அம்முயற்சியை அநுமதித்து அக்காரியத்தைச் செய் விக்கிறான்)-(ஏனெனில்) விஹிதப்ரதிஷித்த - அவை யர்த்யா திப்ய:-விதிநிஷேத சாஸ்திரங்கள் வீணாகாமல் இருக்க வேண்டுகை முதலான காரணங்களாகும்.

எல்லாச் செய்கைகளிலும் பரமாத்மாவே எல்லோரையும் உள்ளிருந்து நியமிப்பவனாக விருப்பினும் அவன் புருஷனாகிற ஜீவனிடமிருந்து முதல் முயற்சியை (பிரயத்னம்) அபேக்ஷிக்கிறான்; அப்போது பரமாத்மா அவன் முயற்சிக்கு அனுமதித்தானம் செய்வதால், நேரடியாக வில்லாமல் பரம்பரைக் காரணமா கிறான். பரமாத்மாவின் அனுமதியில்லாமல் - பிரவிருத்தியோ நிவிருத்தியோ ஏற்படாது என்பது இதன் பொருள். (அதாவது ஜீவன் முதல் க்ஷணத்தில் செய்யும் முயற்சியைத் பரமாத்மா அபேக்ஷித்து - தான் அனுமந்தாவாகிறான்). இதன் அர்த்தம் யாதெனில் பரமாத்மாவின் அனுமதியின் மூலம்தான் ஜிவனைக் காரியங்களைச் செய்விக்கிறான், இதற்கு இப்படி ஏன் ஒப்புக்கொள்ள வேண்டும் - முதல் முயற்சியால் ஜீவனைத் தூண்டிவிடுவதும் பரமாத்மாவே என்றால் - சாஸ்திரங்களின் விதி நிஷேத வாக்யங்கள் பயனற்றவையாகும், தானே தூண்டி பரமாத்மா புண்ய பாபச் செயல்களைச் செய்யச் சொல்லி, தானே அனுக்ரஹம் நிக்ரஹம் செய்வது பொருந்தாது. ஆதலால் முதல் முயற்சி ஜீவனால் செய்யப்படுவதற்கு - அவன்சாஸ்திர விதி நிஷேதங்களை அறிந்து தகுதியுள்ளவனாக விருக்கிறான். (இப்படி பரமாத்மா அனுமந்தாவாக விருப்பதால் - ஜீவனின் முதல் முயற்சியை சம்மதித்து - அவனுக்கு சாஸ்திர ஞானத்தினால் அடையப் பெற்ற ஸ்வாதந்தர்ய புத்தியை அளிப்பதாலே - ஜீவனேதானே தன் காரியத்தைத் தொடங்குகிறான் - பகவான் அனுமதிக்கிறான்) ஏன் இப்படி? विहितप्रतिषिद्धा वैयर्थ्यादिभ्य:- விதி நிஷேத சாஸ்திரங்கள் வீணாகாமலிருக்க வேண்டும் - என்கிற காரணங்களால். இங்கே "ஆதி" சப்தம் பகவத் அனுக்ரஹ - நிக்ரஹம் எனக்காட்டப்படுகிறது. உதாரணமாக - ஒரு தனம் (பணம்) இருவர்களுக்குச் சொந்தமானால் - அவர்களில் ஒரு வனுக்கு அதை இன்னொருவனுக்கு அளிக்க - மற்றவனின் சம்மதமின்றி - முடியாது. இருவர்களின் சம்மதமும் தேவை,

ஆயினும் - இங்கே - மற்றவனின் சம்மதம் அவனாலேயே ஏற்படுத்தப் படுகிறது - அதன் பலனும் அவனாலேயே அனுப விக்கப்படுகிறது.

இங்கு சொல்லப்படும் விஷயம் - பல அபிப்ராய பேதங் களுக்கு இடமளித்தாலும் - ராமானுஜர் தன் சொந்த கருத்தினால் ஒருவித நியமத்தைச் சொல்கிறார் - ஈஸ்வரன் முதலில் ஸ்வாதந் திரிய புத்தியை ஜீவனுக்கு அளித்து - அதில்பிரதம நிலையில் தான் அனுமந்தாவாகிறான். காரியத்தை மேலும் தொடர்ந்து செய்வ தற்கு உதாஸீனனாக விருப்பதைவிட்டு - காரியம் நல்லதா கெட்டதா என்பது பிரஸ்னையில்லாமலே - பிறகு தன் அனுக்ர ஹத்தையோ நிக்ரஹத்தையோ - பலனிலிருந்து தெரியும்படி - செய்கிறான் என்பதாகும்:)

இங்கு சுருதபிரகாசிகையில் விரிவாகச் சொல்லப்பட்டிருப்பது - கர்ணகளே பரங்களைக் கொடுத்து முதல் காரிய நிலையிலும் ஈஸ்வரனே பொதுக்காரணமாகிறான். அவன் உயிரளிக்கிறான் - இந்திரியங்களை உதவி செய்கிறான் - பிள்ளை தன் தந்தையின் சொத்தை எவ்விதம் விரயம் செய்வானோ - தனது ஸ்வதந்திரி புத்தியைக் காட்டுவானோ, அதுபோலவாகும். ஆயினும் சில கர்மாக்களில் அந்த அந்த ஜீவனின் முந்தியேற்பட்ட புண்ய பாபங்களை அனுசரித்து ஈஸ்வரனே தன்னை சம்பந்தப்படுத்திக் கொள்கிறான். வேதாந்த தேசிகரின் குரு வாத்ஸ்ய வரதரின் சிஷ்யராவர் - இவர் பரமாத்மாவின் உதாஸீனத் தன்மையை ஆதரிக்காமல் - எல்லாக் காலங்களிலும் தண்ணீர் - பூமி எப்படி பயிருக்குப் பொதுவான காரணங்களாக ஆகுமோ அதுபோல பரமாத்மாவும் பொதுக்காரணமாகும்); ஜீவர்கள் வித்துக்களைப் போன்றவர்கள் - குறிப்பிட்ட காரணங்களாகும் இவ்விதமாக அறிவுள்ளவன் புரிந்து கொள்ள வேண்டும் என்கிறார்.

மேலும் பரமாத்மாவின் சங்கல்பமே அனுக்ரஹமும் நிக்ரஹமும். பிரதமக்ஷணத்திலேயே - அனுமந்தாவாக விருப்பதால் உதா ஸீனத்வம் இல்லை பரமாத்மாவுக்கு என்பதாகும்.

பாபகர்மங்களைச் செய்யாமலிருப்பதற்கு பரமாத்மாவுக்கு நிவர்த்தன சக்தி உபயோகப் படாமலிருப்பதால் - என்பதால் அநுமந்திருத்வம் ஆகும் - இதனால் பரமாத்மாவுக்கு கிருபை யின்மை- நிர்தயத்வம் யேற்படாது. இந்த விஷயம் பரமாத்மாவுக்கு வைஷம்ய நைர்கிருண்யமில்லை என்பதாகும்-ஜீவனுடைய புண்ய பாபகர்மங்களால் அவன் செயல்படுகிறான் என்கிற விஷயம் - சாங்கிய பக்ஷத்தை எதிர்த்துச் சொன்ன முந்தின அதிகரணத்தில் சொல்லப்பட்டதாகும். (சூத்ரம்-2-1-3) அவ்விதமாயினும் கௌஷீ. உப: 3 - 9ல் एष ह्येव साधुकर्म कारयति तम्, यमेभ्यो लोकेभ्यः उन्निनीषति। एष एवासाधु कर्म कारयति तम्, यमधो निनीषति- எந்த ஜீவனை இந்த பிராகிருத லோகங்களிலிருந்து மேலேடுக்க (உத்தாரணம் செய்ய) பரமாத்மா விரும்புகிறானோ - அவனை இவனே நற்கருமங்களைச் செய்விக்கிறான். எந்த ஜீவனை பரமாத்மா கீழ் உலகங்களில் தள்ள விரும்புகிறானோ - அவனை பரமாத்மாவே பாப கர்மங்களைச் செய்ய செய்விக்கிறான் - (கௌ. 2-3-9) இதில் மேல் எடுக்கவிரும்புவதும், கீழே தள்ளுவதும்-தானே (ஸ்வயமேவ) காரணமாகிறார் பகவான், தன்னை வந்து அடை வதற்கும் - உபாயங்களிலும் நல்ல கர்மங்களைச் செய்யத்தூண்டுவ தாலும் - பரமாத்மா - அந்த ஜீவனின் கர்மவாசனை - ருசிப் பிரகாரம் ஜீவனைத் தூண்டுகிறான் என்கிற அர்த்தமாகும்; அதே மாதிரி தீயச் செய்கைகளிலும் பரமாத்மாவே காரணமாகிறான் - என்பது சில சுருதிகளின் அர்த்தமாகலாம். இதற்குப் பொருள் என்ன? அதற்கு நாம் (சித்தாந்தி) பதில் கூறுகிறோம்.

இது சர்வ ஸாதாரணமாக எல்லா ஜீவர்கள் விஷயத்திலே நடப்பது அல்ல. எவனுக்கு பரமாத்மாவிடம் அளவு கடந்த அன்பு இருக்கிறதோ எவன் பரமபுருஷனுக்கு அனுகூலமாகவே வ்யவ ஹரிக்கிறானோ-அவனை பகவானெ ஸ்வயமேவ அனுக்ரஹிக்கிறார் - அவரே தன்னை வந்து அடைவதற்கு பக்தி பிரபத்தியாகிற உபா யங்களை அதிகல்யாணங்களைத்தரும் உபாயங்களில் அவர்களிடம் ருசியைதானே உண்டு பண்ணுகிறார். இதேபடி - எல்லை மீறி அதிமாத்ரமாக பிராதிகூல்யமாக எவன் நடந்து கொள்கிறானோ - அவனுக்கு தீயச் செய்கைகளைச் செய்வதற்கு - அவர்களிடம்

அவைகளில் ருசியை உண்டு பண்ணுகிறுர். அத்தகைய தீயச் செயல்களை ஸ்வபாவமாகவே செய்கிறவர்களை பரமாத்மா நிக்ர ஹிக்கிறுர் — அது எவ்விதமெனில் அத்தகைய கெட்ட மனிதர்கள் மேன்மேலும் தீயச் செய்கைகளைச் செய்வதற்கே ருசியை உண்டு பண்ணி தன்னை வந்து யடையாதபடி - விரோத கர்மங்களைச் செய்யும்படி - ருசியை உண்டு பண்ணுகிறுர். இதற்கு பகவத் வசனங்களே ஆதாரம் கீதை 10-8. अहं सर्वस्य प्रभवो मत्तः सर्वं प्रवर्तते । इतिमत्वा भजन्ते मां बुधा भाव समन्विताः। என்று ஆரம்பித்து; (நான் தான் விசித்திரமான சேதனு சேதனங் களடங்கிய பிரபஞ்சத்தின் உற்பத்திக் காரணம். (அதாவது ஸ்ருஷ்டிக்குத் தேவையான குணங்களை உடையவனுக நானிருப்ப தால் - மத்த: ஸர்வம் பிரவர்த்ததே - என்னிடமிருந்தே எல்லாப் பிராணிகளும் உண்டாகின்றன. எனக்குப் பல கல்யாண குணங்களிருப்பதால் - ஞானிகள் ஆசையுடன் என்னைப் பூஜிக் கிறுர்கள் - கல்யாண குணநிதியென்று. तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम्। ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते என்னேடு எப்போதும் சேர்ந்திருக்க வேண்டுமென்று ஆசையுடையவர் களாய் என்னை உபாஸிப்பவர்களுக்கு - நானே பக்தியொகத்தை அவர்களுக்குக் கொடுக்கிறேன். ப்ரீதிபூர்வகம் - பஜதாம் பக்தி செய்வது; ததாம்யஹம் புத்தியோகம் தம்யேந மாமு பயாந்திதே (கீதை 10-11.) - என்னை வந்து அடையும் பொருட்டு — புத்தியை அவர்களுக்கு அளிக்கிறேன், ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते. तेषामेवानुकम्पार्थमहमज्ञानजंतमः। नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता- கீதை 10-11- பக்தி யோகத்தை அடையச் செய்ய வேண்டும் அதிகாரிகளுக்கு அவர்களை அனுக்ரஹிக்க, நான் அவர்களுடைய மனேவியா பாரத்தில் என்னைப் பற்றிய கல்யாண குணங்களைப் பிரகாசப் படுத்திக்கொண்டு - என்னைப் பற்றிய ஞானமாகிற - பிரகாசித்திக் கொண்டிருக்கிற - ஞானதீபத்திஞல்-அத்தகைய ஞானேத்பத்திக் குத் தடங்கலாக விருக்கும் மற்ற விஷயங்களில் ஆசையாகிற இருட்டை நான் நாசம் செய்கிறேன். (அனுசகம் பார்த்தம் - அனுக்ரஹிக்க - கருணை உள்ளத்தினுக - ஆத்ம பாவஸ்த:- ஆத்மசப்தம் மனேவியாபாரங்களைச் சொல்லும்.

அப்படியே கீதையில் 16-8ல் असत्यमप्र तिष्ठं ते जगदाहुरनीश्वरम् – இத்யாதி - இந்த லோகத்தை ஸத்யசப்தத்தினல் சொல்லப் படும் பரமாத்மாவே ஸ்ருஷ்டிப்பதால் - இந்த உலகிற்கு பகவான் ஆத்மாவாதலால் எல்லா வஸ்துக்களும் பகவானையே ஆதாரமாக வுடையது என்று அவர்களை சொல்லுகிறதில்லே. (அசுர ஸ்வா பாவமுள்ளவர்கள்) (அவர்கள் லோகத்தின் உற்பத்திக்குக் காமத்தையே காரணமாக - ஸ்திரிபுருஷ ஸம்யோகம் தான் என்கிருர்கள் அதனல் அவர்கள் உலக நாசத்திற்குக் காரண மாகிருர்கள்)

மீண்டும் கீதையில் 16-19ல் मामात्मपरदेहेषु प्रद्विषन्तोऽभ्यसूयकाः - அஹங்காரம் பிடித்தவர்கள் தங்களைப் பெரிதாக நினைத்துக் கொண்டு - புருஷோத்தமனுகிற என்மீது பொருமை கொள் பவர்களாக - என் ஸங்கல்பத்திற்கு விரோதமாகக் காரியங்களைச் செய்பவர்களை நான் கொல்லப்போகிறேன் - என்று கோபத்தை உடையவர்களாக - தன் பிறதேகங்களிலும் இருக்கும் எஜமானன் (அவன் எல்லாம் நியமிப்பவன்) புருஷோத்தமனை என்னைப் பற்றிய அறிவில் தோஷித்தை கூறுகிறவர்களாக விருக்கிருர்கள். என்று சொல்கிருர்கள் - கீதை 16-19- तानहं द्विषतः क्रूरान् संसारेषु नराधमान्। क्षिपाम्यजस्रमशुभान् असुरीष्वेव योनिषु- எவர்கள் என்னை த்வேஷிக்கிருர்களோ - அவர்களையும் நராதமர்களையும் பிறப்புகிழத்தனம் மரணம் முதலியவைகளையுடைய ஸம்சார பரம்பரைகளில் ஆசுரஸவபாவமுடைய ஜாதிகளிலேயே தள்ளு கிறேன். அசுரயோனி பிறப்பு அதற்குரிய காரியங்களைச் செய்தல் - அதற்குள்ள கெட்ட புத்தியை நான் கொடுக்கிறேன் - என்று சரியாகச் சொல்லப்பட்டதாகும் (பகவானேதீய காரியங் களைச் செய்யும்படி செய்கிருர் என்ருல் பகவானுக்கு வைஷம்யம்- நைர்கிருண்யம் (பக்ஷபாதம் தயையின்மை) இரண்டுதோஷங்களும் பரமாத்மாவுக்கு ஸம்பவிக்குமா? இப்படிக் கூறுவதால் இதற்குப் பொருள் என்னவென்ருல் - ஈஸ்வரனல் முதல் முயற்சியில் அளிக்கப்பட்ட ஸ்வாதந்தர்யத்தைச் சரியாகப் பயன் படுத்திக் கொண்டு எவர்கள் பரமாத்மாவுக்கு அனுகூலர்களாக விருக் கிருர்களோ அவர்களை நற்கருமங்களைச் செய்யத் தூண்டுகிருன் அதாவது அவர்களுக்கு நற்கதியை அளிக்கிருன். ஆனல் ஜீவன்

பூர்வ கர்மவாசனையின்படி - மந்த புத்தியினுல் - தனது ஸ்வா தந்திரியத்தை நன்கு பயன் செய்து கொள்ளமல் - எப்போதும் பரமாத்மாவுக்குப் பிரதிகூலர்களாக விருக்கிறுர்களோ - அவர் களைத் தீயகர்மங்களைச் செய்யத் தூண்டுகிறுன்- தீயகதியை அளிக் கிறுன்- (சுருதி ஸ்மிருதிகளில் இது ஸித்தம்) அதே சுருதி ஸ்மிருதிகள் கூறுவதும் - ஜீவனுடைய முந்திய முதல் முயற்சி களின் பலனேயாகும். ஆக இப்படி பகவான் அனுமந்தாவாக முதலில் இருப்பதும் - பிறகு பின் முயற்சிகளில் ஜீவனை உதவுவது (அல்லது கெடுப்பது) - அதே மாதிரி முதல் முயற்சியிலே சிலரைத் தூண்டுவது முந்திய கர்மங்களின் பலனுகையால் எல்லாவிதத் திற்கும் பரமாத்மாகாரயிதா (காரயித்ருத்வமாகிற-செய்விக்கை யாகிற - ) என்கிற விசேஷ காரணத்வம் இல்லாமலும் இல்லை. ஜீவனுக்கு ஸ்வாதந்திரிய புத்தியை அளித் தவனும்பரமாத்மாவே; அதனுல் ஜீவனுக்கு கர்த்ருத்வ விஷயத்தில் ஸாமான்ய காரணத்வம் இருக்கவே இருக்கிறது. இத்தால் பரமாத்மாவி னுடைய ஸர்வகாரணத்வத்துக்குப் பங்கம் ஒன்றுமில்லை. ஆகவே ஜீவனுடைய கர்த்ருத்வம் பரமார்த்மா தீனமேயாகும்) வில்லிவலம் கிருஷ்ணமாச்சாரியார் ஸ்வாமி (ஸீதாரஸ மஞ்சரி) முதல் க்ஷணத்தில் உதாஸீனன்-இரண்டாம் க்ஷணத்தில் அனுமந்தா பிறகு ஸஹகாரி என்ற நிலைகளைப் பெறுகிறுன் எம்பெருமான். தத்வஸாரத்தில் - அனுமதி தந்த ஈஸ்வரனுக்கு சுகதுக்காதிகளில் அனுபவங்களின் பங்கு கிடையாது. தயா கார்யும் ஒருவன் தவறு செய்தால்-அதை ஏன் ஈஸ்வரன் விலக்கக்கூடாது? இதற்குப் பதில் - பிரதம க்ஷணத்தில் செய்த பிரவிருத்தியின் பலமாக இரண்டாவது க்ஷணங்களில் எம்பெருமான் அனுமதிப்பதால் இவ னுக்கு ஒரு குற்றமில்லை. தண்டிக்கப்பட வேண்டியவனைத் தண்டிப்பது ஆளும் அரசனுக்கு எப்படி குணமாமோ அப்படியே ஸர்வ நியந்தாவன எம்பெருமானுக்கும் குணமே என்று கொள்ள வேண்டும். சுருத பிரகாசிகா ஆசார்யரின் குருவான நடாதூர் அம்மாள் - तत्रोपेक्ष्य ततोऽनुमत्य विदधत् तन्निग्रहानुग्रहौ । तत्तत् कर्मफलं प्रयच्छति ततः सर्वस्य पुंसो हरिः—

அதிகரண ஸாராவளியில் ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் பிரேரகத்வத்திற்கும் (தூண்டுவதற்கும்) உதாஸீன த்வத்

திற்கும் விரோதமில்லை என்பதை சூக்ஷ்ம புத்தியைக் கொண்டு தெளிய வேண்டும் என்றார். क्षेत्रज्ञानां समानां.........ऐश्वर्यं भजेत। ஈஸ்வரன் ஸ்வதந்திரனாக விருப்பதனால் கர்த்தாவென்றும் ஜீவனைச் செய்விக்கிறபடியால் காரயிதாவென்றும் ஒரு கார்யத்தில் முன்னமே பிரவர்த்தித்தவனை(ஜீவனை)மேலும் பிரவருத்திக்கும்படி செய்கிறபடியால் அனுமந்தா என்றும், பயிர்களின் முளைகளின் வளர்ச்சிக்குத் தண்ணீரைப்போல, ஸர்வ காரியங்களுக்கும் ஸாமாந்ய ஹேதுவாக விருப்பதால், உதாஸீனன் என்றும், எல்லா நிலைகளிலும் யாவற்றையும் கண்டு நிற்பதால் சாக்ஷியென்றும்-அவனவனுடைய கர்மங்களை அனுசரித்து'காரிய விசேஷங்களில் ப்ரவர்த்தகனாய் உடனிருந்து செய்வித்தலால், ஸஹகாரியெனறும் - இப்படி ஈஸ்வரன் ஸர்வகாரணமாகிறான். ஈஸ்வரன் ஜீவனுடைய பிரதம முயற்சியில் ப்ரேரகனாகவும் ஆகிறான். உதாஸீனன் என்பதால் பிரேரகத்வம் இல்லை என நினைக்கலாகாது. அதனால் ஸ்ரீபாஷ்யம் சூக்தி परमात्मा अनुमति दानेव प्रवर्तयति - இதற்கும் தத்வஸார சுலோகத்திற்கும் கருத்து ஒன்றுதான் என்பன விரிவாகக் காட்டியுள்ளார். அனந்தாழ்வானும் இப்படியே நிர்வஹித்துள்ளார்).

முதற் முயற்சியில் ஜீவனுக்கு ஸ்வாதந்திரிய புத்தியை அளித்தவன் பரமாத்மாவே; ஜீவகர்த்ருத்வ விஷயத்தில் ஸாமாந்ய காரணத்வம் இருக்கவே செய்கிறது. ஆகவே பரமாத்மாவின் ஸர்வ காரணத்வத்துக்கு குறையேற்படவில்லை; ஜீவனுடைய பரமாத்மாதீநமே (சாரீரக காரிகாவளி)

**உத்தமூர் ஸ்வாமி—சுருக்கமாக - एवमेतद्वाक्यविशेषे पुण्यत्वेन पुण्यस्य, पापत्वेन पापस्य वा विशिष्या रम्भकतया क्लृप्ते पुण्ये पापेवा सति तदधीन संकल्पोपि प्रवर्तकत्वरूपो ग्राह्यः। अनिच्छतोऽपि बलान्नियोजनरूपं नियमनं तु नेऽष्यते इति सारम्। अभ्यासाय श्रीदेशिक सूक्त्यर्थ सामरस्यमस्यत्र स्वरूपयामः—**

**एवं नियन्तृनियाम्य भावरूपसंबन्धे उक्ते शेषशेषि भावादि सर्व संबन्ध प्रयोजका कारोऽय प्रति बोध्यते—**

## அம்சாதி கரணம் (2-3-7)

ஸூ· ஞ अंशो नानाव्यप देशादन्यथा चापि दाशकित
वादित्वमधीयत एके (2-3-42)

**அம்ஸோ நாநா வ்யப தேஸாத் அந்யதா சாபி**
**தாஸகித வாதித்வம் அதீயத ஏகே (2-3-42)**

**அம்ஸ:**—ஜீவன் பிருஹ்மத்தின் அம்சமாயிருப்பவனே (சரீர ஆத்ம பாவத்தினல் அம்சமாகிறன் என்று அர்த்தம்) நாநாவ்யப தேசாத்-(சில சுருதிகளில் ஜீவன் பிருஹ்மத்தைக் காட்டிலும்) வேறுபட்டவன் என்று உபதேஸிக்கையாலும், அந்யதா ச வ்யப தேஸாத்-(சில சுருதிகளில்) வேறு விதமாகவும் (அதாவது பிருஹ்மத்தோடு ஒன்றுபட்டவனுகவும் உபதேசிக்கையாலும்) தாஸகித வாதித்வம் அபி-(பிருஹ்மம்) தாஸர் கிதவர் முதலான தாழ்ந்தவராக யிருப்பதாகவும் ஏகே-சில பிரிவினர் அதீயதே - ஓதுகின்றனர்.

(அவதாரிகை - முன் அதிகரணத்தில் ஜீவனுடைய கர்த்ருத்வம் பரமாத்மாவின் அதீனமானது எனக் கூறப்பட்டது. இப்படி நியமிக்கும் அரசனும், நியமிக்கப்படும் (அவனது) வேலைக்காரனும் போல, நியமிக்கும் பிருஹ்மமும், நியமிக்கப்படும் ஜீவனும் வேறுபட்டவர்கள் என விளங்குமாகையால் இருவரையும் ஒன்று எனக் கூறும் அபேத சுருதிகளை அமுக்யமென்றே கொள்ள வேண்டும்-என்னும் (த்வைதிகளின்) வாதம் இந்த அதிகரணத்தில் தள்ளப்படுகிறது. (அதாவது நமக்கு பேத சுருதிகளும் அபேத சுருதிகளும் முக்யார்த்தம் பெற வேண்டி-ஜீவனை பிருஹ்மத்தின் அம்சமாகக் கொள்ளவேண்டும் - ஜீவனை பிருஹ்மத்தின் அப்ரதிக்ஸித்தமான விசேஷணங்களோடு கூடிய பொருள் விசிஷ்டமாகும் என்கிறபடியால், பிருஹ்மம் விசிஷ்டப் பொருள்-அதன் விசேஷணங்கள் அதில் ஒரு பகுதியாக - ஜீவன் பிருஹ்மத்தின் அம்சம் எனப்படுகிறன். சரீரத்தைச் சொல்லும் சப்தம்சரீரி (பரமாத்மாவரை) சொல்லும் என்பதாம்.

ஸ்ரீபாஷ்யம் ஜீவனுடைய கர்த்ருத்வம் பரம புருஷனின் அதீனம் என்று சொல்லப்பட்டது. இங்கே இந்த ஜீவன் எப்படி பரமாவிடமிருந்து அத்யந்த பின்னமாக (வேறுபட்டவனாக) (நையாயிகர்கள்-த்வைத பக்ஷம் சொல்வதாக) விருக்கிறானா-அல்லது (அத்வைதிகள் சொல்வதுபோல-ஜீவன் பரமேவ பிருஹ்மம்-அந்த பிருஹ்மமே ப்ரமத்தின் வசமாக தன்னைப் பலவாகப் பார்க்கிறது-அததகைய பிருஹ்மத்தின் அம்சமாகும் - தோஷமற்றதாய்-எல்லாம் அறிந்ததான பரமபொருள் மாயையால் மயங்குகிறது என்றும்; அல்லது (பாஸ்கர பக்ஷம சொல்வதுபோல) உண்மையான உபாதியினால் பிருஹ்மமே ஜீவனாகத் தோன்றுகிறது என்பதாகிறபடியால்-இங்கே (நாம் சொல்கிறபடி) ஜீவன் பிருஹ்மத்தின் அம்சமாகிறது (அப்ரதிக் ஸித்தமான திரவிய ரூபமான விசேஷணமாக விருக்கிறது-) இவைக்ளில் எது சரியாகும்? (மூன்று பக்ஷத்தினர்களும் அம்சம் என்று சொன்னாலும் - கருத்து வேற்றுமையாகும். அத்வைதிகள் தத்வமஸி முதலான வாக்யங்களில் விசேஷங்களை எல்லாம் விட்டு லக்ஷணையாக நிஷ்கிருஷ்ட ஸ்வரூபத்தைச் சொல்வதாக விருக்கிறார்கள். த்வைதிகள் அமுக்யமாக பிருஹ்மத்துக்கு ஜீவன் வேலைக்காரன் போல பரதந்திரன்-ஆகையால் இருவரையும் ஒன்று எனகிறார்கள்). இப்படி பல முரண்பாடுகள் சுருதிகளில் இருப்பதால், இந்த சந்தேகம் எழுகிறது. பிருஹ்மத்தின் அம்சம் ஜீவனா என்று श्रुतिविप्रतिपत्तेः संशयः - (अंशत्वानन्यत्वबोधक श्रुति विप्रतिषेध परिहारार्थमिदमधिकरणम्) ஆத்மா பிருஹ்ம அம்சம் என்று போதிக்கும் சுருதிகள் பேத-அபேத சுருதிகள் - கடக சுருதிகள் என்பவை யாகும்.) अभेद श्रुति रक्षणेन भेद श्रुतित्याग एव युक्त इति परे। तत् उभय श्रुतिसमादरेणेन अंश श्रुतिसामञ्जस्य मेव स्थाप्यते।

இப்போது கேள்வி கேட்கப்படும் - சா. மீ. 2-1-15ல் तदनन्यत्वमारम्भणशब्दादिभ्यः - காரணமான பிருஹ்மத்தைக் காட்டிலும் காரியமான உலகம்) வேறுபடாமலேயுள்ளது. ஆரம்பண சப்தாதிப்ய: - வாசாரம் பணம் முதலான வேதவாக்யங்களிலிருந்து காரிய காரண ஐக்யம்) (இது விளங்குகிறது). அதேபடி சா. மீ. 2-1-22 अधिकं तु भेदनिर्देशात् - ஜீவனைக் காட்டிலும் பர

மாத்மாவை வேருக வேதங்கள் கூறுவதால், ஜீவாத்மா பரமாத்மா வேருனதாகும்-(வேத சுருதிகளின்படி வேருக அறியப்படுகிறது) - இந்த தீர்மானம் சரியில்லை என்று கூறப்படுகிறது-சுருதிகளின் விரோதத்திஞலே-பேதமும் ஒன்ருகவும் (ஜீவனுக்கும் பிருஹ்மத் துக்கும் ஸித்திக்கிறபடியால்)-ஸத்யம். அந்த ப்ருஹ்மத்தின் அம்சமே ஜீவன் ஆகும் என்பது இங்கே தீர்மானிக்கப்படுகிறது - அந்த பிருஹ்மமே நாஞத்வம்-ஏகத்வம் என்று சுருதிகள் போதிக்கிற படியால்-ஜீவனை எப்படி பிருஹ்மத்தின் அம்சமாதும்? எனக் கூறலாம்? என்கிற ஆட்சேபம் எழ-ஜீவன் பிருஹ்மத்தின் அம்சம்தான் என்று சொல்வதால் (ஜீவனுடைய பிருஹ்மத்தின் அபரதிக்ஸித்த விசேஷத்வம் இங்கு நிர்ணயிக்கப்படுகிறது) எதுவரை ஜீவன் பிருஹ்மத்தின் அம்சம் அல்லது அம்சமில்லை என்று நிர்ணயிக்கப்படாமலிருக்கிறதோ, அதுவரை ஜீவனும் பிருஹ்மமும் ஒன்றேயாகும் (अनन्यत्व) ஆகும்; அதே பிருஹ் மத்தைக் காட்டிலும் ஜீவன் வேறு என்பதும் காட்டப்பட்டு நிரூபிக்கப்படாமல் இருந்தால்-எப்படி ஜீவன் பிருஹ்மத்தின் அம்சமாகும் என்பது தெரியவராது-ஆகவே இவைகளில் எது சரியாகும்?

(வேதாந்த சூத்ரம் - 2-1-15ல் பிரும்மமும் ஜீவனும் ஒன்று என்பது - சரீர சப்தம் சரீரிபர்யந்தம் வரை சொல்லும் என்ப தாகும். சூத் 2-1-22ல் அபேதம் அதேமாதிரி சொல்லப்படு கிறது இங்கு எப்படி இந்த அபிப்ராயம் ஸித்திக்கிறது - என்பது கேள்வியாகும்? பேதமும் அபேதமும் சுருதிகளில் சொல்லப்படு வதால் - அது பிரும்மத்திற்கும் ஜீவனுக்கும் வேறு வழிகளாகச் சொல்லக்கூடும். இங்கு இந்த சூத்திரத்தில் இந்த சுருதிகளின் அர்த்தம் அமுக்யமாக (லக்ஷணையாகக்) கொள்வதால் - ஜீவன் பிரும்மத்தின் அம்சமாகும். அம்சம் என்ருல் பாகம்,, எனப் பொருள் கொள்ளப்படும் - அதாவது சரீரம் - அந்த சரீரத்திற்கு இருப்பு - ஸ்திதி அதையுடைய சரீரியைவிட வேருக இருக்க முடியாது என்று பின்பு காட்டப்படுகிறது)

முதலில் பேதவாதி பூர்வபக்ஷியாகிருன் - अत्यन्तमिन्नमिति- என்கிருன் எப்படி? ஸ்வே. உ. ज्ञाज्ञौ द्वावजा वीशनीशौ-

ஈஸ்வரனும் ஜீவனுமான இருவரும் முறையே ஸர்வக்ஞனும் - அஜ்ஞனுமாகவும் - நியமிப்பவனும் நியமிக்கப்படுபவனுமாகவும் உள்ளனர் - இத்யாதி சுருதிகள் ஜீவனைப் பரமாத்மாவைக் காட்டிலும் மிகவும் வேறானவனாகவன்றோ காட்டுகின்றன. அதேபடி - அவ்விருவரையும் ஒன்றாகவே சில சுருதிகள் காட்டு கின்றன. அபேத சுருதிகள் - अग्निना सिञ्चेत् - (நெருப்பால் நனைக்கவேண்டும்) - என்னும் வாக்யத்தைப்போல சுருதிகள் முன்னுக்கும் பின்னுக்கும் முரணாகிவிடும். (அதாவது ஆதித்யோ யூப: என்று யூபஸ்தம்பத்தை சூர்யனாகவே கூறும் சுருதி பிரத்யக்ஷ விருத்தமாகையால் - ஆதித்யனைப்போல் பிரகாச முடையது யூபஸ்தம்பம் - என்று அதற்கு அமுக்யமாகப்பொருள் கொள்வதுபோல - முற்கூறிய பல பேதசுருதிகள் அபேத சுருதிக ளுக்கு முரணாக யிருக்கையால், பிருஹ்மத்திற்கு ஜீவன் பரதந்திரன் என்று அமுக்யமாகவே பொருள் கொள்ள வேண்டும். இல்லாவிடில் அக்நிநா ஸிஞ்சேத் - நெருப்பால் நனைக்கவேண்டும் - என்னும் வாக்யம்போல சுருதி வாக்யங்கள் முன்னுக்குப்பின் முரணாகிவிடும்).

பிருஹ்மத்திற்கு ஜீவன் அம்சமாகும் என்கிறவாக்யம் அர்த்தமில்லாமற்போகும். (न साधीय:) வாஸ்தவத்திலே ஒரு வஸ்துவின் ஏகதேசவாசி (ஒருபகுதி - பாகம்) என்பதே அம்ச சப்தத்தின் பொருளாகும். ஜீவன் பிருஹ்மத்தின் ஒரு பாகமா னால் (ஏகதேசத்வமானால்) - பாகத்தின் தோஷங்கள் அதன்முழு பாகமாகிற பிருஹ்மத்திற்கு யேற்படும். இன்னொரு அபிப்ராய மானது - ஜீவன் பிரும்ம खण्डो (பிரும்மத்தின் வெட்டப்பட்ட பகுதி) ஜீவன் என்று சொல்லி அது அம்சத்தின் உற்பத்தி என்பது சரியாகாது - ஏனெனில் ஜீவனின் தோஷங்கள் பரமாத்மாவையும் சேரக்கூடும் ஆகையால் அத்யந்த பின்னத்வம் (வேறானது) ஜீவன் பரமாத்மாவிலிருந்து - என்கிற அபிப் ராயத்தை நிரூபிப்பது - அதனால் ஒரு அம்சம் என்று சொல்லு வதற்கு முடியாது.

(சங்கரர் போன்ற) அத்வைதிகளால் சொல்லப்படுகிறது - பிருஹ்மமே பிராந்தியடைந்து தன்னையே பலவாக பார்க்கிறது -

அது ஜீவத்தன்மையை அவித்யையினால் அடைகிறது. இது எப்படி பொருந்தும்? பிருஹ்மத்தை ஜீவனாக இந்த சுருதிகளில் ஓதப் படுகிறது. சா. உ. 6-10-3 तत्त्वमसि – நீ பிருஹ்மமாக விருக் கிறாய். பிரு. உ. 6-5 4 अयमात्मा ब्रह्म - இந்த ஆத்மா பிருஹ்மமேயாகும்-இவைகளில் பிருஹ்மாத்மபாவம் உபதேசிக்கப் படுகிறது. பேதசுருதிகள் பிரத்யக்ஷத்தினால் அடையப்பட்டதை அனுவாதம் செய்து - பிரும்மம் வேறு ஜீவன் வேறு என்று சொல்கின்றன. (नानात्व वादिनयस्तु - பேதவாதிகள்) அந்த பேத சுருதிகள் பிரத்யக்ஷம் போன்றவைகளைப்போல, அவித்யையை அந்தர்கதமாக (உள்ளடக்கி) சொல்லுகின்றன - அன்யதா ஸித்தமான அத்வைத பக்ஷத்தைச் சொல்லி - அனவஸ்வத: பிரமாணம் என்றும் கூறுகின்றன. (அதாவது ஜிக்ஞாஸாதி கரணத்தில் 1-1-1ல் மஹாபூர்வபக்ஷத்தில் ராமானுஜர் சொல் கிறார் - அத்வைதிகள் அபிப்ராயப்படி, பேதநிவிருத்தி சுருதியி லிருந்து அடையப்பட்ட ஞானத்தினால் யேற்படுகிறது - இரண்டு ஞானஸாதனங்களில் விரோதம் இருக்கும்போது - ஒன்று தர்க்கத்தினால் பாதிதமாகிறது - அதை வேறு ஒரு பிரமாணத்தி னாலும் அறியக்கூடும். இன்னொன்று பாதிதம் செய்வது - அதை வேறுவிதமாக ஸ்தாபிக்க முடியாது. அது விசேஷமாயும் சந்தேகமின்றி இருக்கும். எது வேறு பிரமாண உதவியினால் ஸ்தாபிக்க முடியாதோ – அது ஸ்வத ஸித்தம் அதே சமயம் அது இன்னொரு பிரமாண ஸாதனத்தினால் பூர்த்தியாகிறது). (அதாவது अन्यथा ஸித்தாத்வைதோபதேசபராபி: ஸ்ருதிபி: ப்ரத்யக்ஷாதய இவா வித்யாந்தர்கதா: க்யாப்யந்தே)

இல்லாதபோனால் பாஸ்கரபக்ஷத்தினர்கள் சொல்லக்கூடும் - ब्रह्मैवाना द्युपाध्यवच्छिन्नं जीव: - பிருஹ்மமே அநாதியான உபாதி யினால் அவிச்சின்னத்வத்தினால் ஜீவனாகிறது - (அதாவது உபாதி யினால் குறைபட்டு ஜீவத்தன்மையை அடைகிறது) ஏன்? இதனால் உபதேசிக்கப்படுகிறது - பிருஹ்மமே ஆத்மபாவத்தை அடைந்து குறைபட்டுப்போகிறது இந்த உபாதியோ பிராந்தியினால் பரிகல்பிதமில்லை என்று சொல்வது முடியாது; ஏனெனில் பந்த மோக்ஷாதிகளில் வ்யவஸ்தை ஏற்படாது - பொருந்தாது - என்கிற காரணத்தினால்.

இப்படிச் சொல்வதால் – அதற்குப்பதிலாக நாம் சொல்வது ஜீவன் பிருஹ்மத்தின் ஒரு அம்சமாகும். எப்படி? नाना व्यपदेशात् - अन्यथा च - சில சுருதிகள் பிருஹ்மத்தைக் காட்டிலும் ஜீவன் வேறு பட்டவன் என்று உபதேசிக்கையாலும்; அந்யதாச (வ்யபதே ஸாத்) - சில சுருதிகளில் பிருஹ்மத்தோடு ஒன்றுபட்டவனுகவும் உபதேசிக்கையாலும் - கூறுவதால் வேறுபட்டதாகவும்; ஏகத்வேந வ்யபதேசம் இருக்கிறது - பிரும்மத்துடன் ஜீவன் ஒன்ருக உபதேசமிருக்கிறது. இந்த மாதிரி இருவிதமான ஒன்ருகவும் - வேருகவும் வேதத்தில் உபதேசமிருக்கிறது. பேதத்தைச் சொல்லும் சுருதிகள் (பிரும்மம் வேறு ஜீவன் வேறு) இவ்விதம் கூறுகின்றன - ஸ்ருஷ்டிப்பவன் ஸ்ருஷ்டிக்கப்பட்ட வஸ்துக்கள் (स्रष्टृत्वसृज्यत्व) ; நியந்திருத்வம் நியாம்யத்வம்; ஸர்வக் ஞத்வம் - அக்ஞத்வம் - ஸ்வாதீனத்வம் பராதீனத்வம் - சுத்தத்வம் அசுத்தத்வம் கல்யாணகுணுகரத்வம் அதற்கு விபரீதமான சேர்க்கை, பதித்வம் (எஜமானன்) சேஷத்வம் (வேலைக்காரன்) - இத்யாதிகளால் பேதம் காட்டப்படுகிறது - ஜீவன் - பரமாத்மாவிஷயத்தில்). இதேமாதிரி अन्यथाच ஒன்ருகவும் - (அபேதம்–பேதமின்மை) காட்டப்படுகிறது சுருதிகளில் तत्त्वमसि ; अयमात्मा ब्रह्म - இத்யாதி உதாரணங்களில் காணப்படுகிறது. अपि दाशकितवा दित्वमधीयत एके - பிருஹ்மம் தாஸர், கிதவர் முதலான தாழ்ந்தவராக இருப்பதாகவும் -; ஏகே - சில சாகையினர் अधीयते - ஓதுகிருர்கள் - அதாவது பிருஹ்ம சூத்திரத்தில் - ब्रह्म दाशा ब्रह्म दासा ब्रह्मेमे कितवाः - பிருஹ்மம் செம்படவன், சூதாடி முதலான தாழ்வராக யிருப்பதாகவும் சில பிரிவினர் ஒதுகின்றனர் - என்று அதர் வணிகத்தில் யிருக்கிறது - எதனுல் பிருஹ்மத்திற்கு தாஸகிதவாதித்வம் ஒதப்படுகிறது (செம்படவன்-சூதாடி போன்ற தாழ்ந்தவராக விருத்தல்). இந்த சுருதியினுல் பிருஹ்மத்திற்கு ஸர்வ ஜீவ வ்யாப்தி சொல்லப்பட்டு - அதனுல் ஜீவபிருஹ்மம் அபேதம் என்று காட்டுகிறது என்கிற பொருளாகும். இவ்விதமாக உபய விதமாக (பேதம் - அபேதம்) முக்யார்த்தம் ஸித்திப்பதற்க்காக இந்த ஜீவன் பிருஹ்மத்தின் ஒரு அம்சம் தான் என்று ஒப்புக் கொள்ளப்பட வேண்டியதாகிறது (த்வைத பக்ஷமும் அமுக்ய

மாக பொருள் கொள்வதுபோல அத்வைத பக்ஷத்தின் அபேத சுருதிகளுக்கும் பிருஹ்மம் ஜீவனுக்குப் பரதந்திரன் எனது அமுக்யமாகவே பொருள் கொள்ள வேண்டும். இல்லாவிடில் "அக்நிநாஸிஞ்சேத்" - (நெருப்பால் நனைக்க வேண்டும்) என்கிற வாக்யம்போல சுருதி வாக்யங்கள் முன்னுக்குப்பின் முரணுகி விடும். அதேமாதிரி - அத்வைதிகளின் பூர்வபக்ஷத்திலும் அதேமாதிரி-பிருஹ்மமும் ஜீவனும் ஒன்று என்று காட்டுகின்றன. த்வைதபக்ஷத்தில் எடுக்கும் பேத சுருதிகள் பிரத்யக்ஷத்தினுல் தோற்றும் பேதத்தை அபேத சுருதிகளால் தள்ளுவதற்க்காக அநுவர்த்திக்கின்றவே ஒழிய - பேதத்தை விதிப்பவையல்ல).

(பேதா பேதிகளின் பூர்வபக்ஷம் (பாஸ்கரபக்ஷம்) சொல்வது த்வைத அத்வைத உபய பக்ஷங்களும் தவறு. உண்மையான உபாதியினுல் பிருஹ்மமே ஜீவனுகத் தோற்றுகிறது என அபேத சுருதிகள் கூறுகின்றன. பொய்யானமாயையினுல் பிருஹ்மம் மயங்குகிறது என வாதாடும் அத்வைதிகளின் கருத்து சரியாகாது பொய்யான மாயையால் சுகதுக்கானுபவரூபமான ஸம்ஸார பந்தம் யேற்படுகிறது என்பதும், பிறகு வாக்யார்த்த ஞானத் தால் அந்த அனுபவம் நீங்கி - அதனுல் மோக்ஷம் யேற்படுகிறது என்பதும் பொருந்தாது. அபேத சுருதிகளுக்கு முரணுயிருப்ப தால், பேதசுருதிகள் உபாதி கல்பிதமான பேதத்தைச் சொல்லுவ தாகவே அமுக்யமாகப் பொருள் கொள்ளவேண்டும் - என்ப தாகும்) ஆகவே பேத அபேத சுருதிகளும் முக்யமானவையாக வேண்டுமெனில் - ஜீவனை பிருஹ்மத்தின் அம்சமாகக் கொள்ள வேண்டும். மேற்கூறப்பட்ட அதர்வண வேதத்தைச் சார்ந்த பிருஹ்ம சூக்தம் (தாஸர் கிதவர் முதலான தாழ்த்த ஜாதியைச் சேர்ந்த) ஜீவர்களாகவும் பிருஹ்மத்தை கூறுகிறது.

பேதவ்யபதேசம் பிரத்யக்ஷஸித்தமானதும் பிரஸித்தி பெற்றதுமான வஸ்துக்களைத்தான் காட்டுகிறது எனச் சொல்லக் கூடாது - அவை ஏற்கனவே வேறு பிரமாணஸித்தமான வஸ்துவை ஊர்ஜிதப்படுத்துவதுபோல அர்த்தவாத விஷயமாகும்- அன்யதா ஸித்தத்வம் யேற்படுவதாக ஆகின்றன. ஏனெனில் ஜீவவிஷயத்திலே - பல சுருதிகள் இவ்விதம் ஓதுகின்றன.

பிருஹ்ம ஸ்ருஜ்யத்வம் (ஜீவன் பிருஹ்ம ஸ்ருஜ்யத்வம் (ஜீவன் பிருஹ்மத்தினுல் உண்டாக்கப்படுகிருன்-அவன் பரமாத்மாவினுல் ஆக்ஞையிடபபடுகிருன் (தந்நியாம்யத்வம்); தச்சரீரத்வம் (பிரும்மத்திற்கு சரீரமாகுதல் ஜீவன்); தச்சேஷத்வம் (பிரும்மத்திற்கு ஜீவன் அடிமை செய்தல்); ததாதாரத்வம் (ஜீவனைத் தாங்குவது. ஆதாரமாக விருப்பது பிருஹ்மம்) - தத்பாலயத்வம் (காப்பாற்றுதல்) அதேமாதிரி தத்ஸம்ஹார்யத்வம் (அழிக்கப் படுதல்) ததுபாஸகத்வம் (பிரும்மத்தை ஜீவன் உபாஸித்தல்) தத் பிரஸாதலப்ய (பிரஸாதத்தை ஜீவன் அடைகிருன்) அதாவது தர் மார்த்த காமமோக்ஷரு புருஷார்த்தத்தை பூர்த்தியாக அடைதல் பரமாத்மாவினுலே யேற்படுவதாக ஒதப்படுவதால் ஜீவபிருஹ்ம விஷயங்களில் பேதங்கள் இந்த லக்ஷணங்களால் யேற்படுவதாக விருக்கின்றன, तत् कृतश्च जीव ब्रह्मणो भेदः - இம்மாதிரி பிருஹ்ம ஜீவலக்ஷணங்கள் பிரத்யக்ஷாதிகோசரத்திற்கு விஷயங்களாக மாட்டா, அதனுல் அன்யதா ஸித்த: யேற்படுகிறது - மற்ற பிரமாண ஸாதனங்களால் (அதாவது சாஸ்திரத்தைத் தவிர வேறு பிரமாணங்களால்) ஸ்தாபிக்கப்படவில்லை. ஆகையால் சுருதி வசனங்களில் ஸ்ருஷ்டி பரமாகவிருக்கும் வாக்யங்கள் மித்யாபூதமான அர்த்தங்களை உபதேசமாகக் கொண்டவை என்று சொல்லமுடியாது. (அத்வைதி ஜகத்மித்யை என்கிருன்) - அதனுல் பொய்யான ஜகத்தை விஷயமாகக் கொள்ளாது. ஏனெனில் பேதங்களை அனுவாதம் செய்கிறதாக இந்த சுருதிகள் ஏற்கனவே மற்ற பிரமாண ஸாதனங்களால் அறியப்பட்ட இந்த பேதங்களை அனுவாதம் செய்வதாகவும் பொய்யான ஸ்ருஷ்டி பரவாக்யங்களைச் கூறுவதாகவும் ஒப்புக்கொள்ள முடியாது.

மேலும் பிருஹ்மத்திற்கு - எப்படிப்பட்ட பிருஹ்மம் - அகண்டைகரஸ சின்மாத்ர ஸ்வரூபமான பிருஹ்மத்திற்கு ஆத்ம விஷயத்திலே அதத்பாவானுஸந்தானம்-பிரமம் யேற்படுவதாகச் சொல்லப்படுவது சரியாகாது-பஹூபவனமாகிற ஸ்ருஷ்டிக்குமுன்பு -பகவத் சங்கல்பம் முந்தி யேற்படுவதாகவும்-அதன் பிறகே ஸ்ருஷ்டித்தல் - ஸ்ருஷ்டிக்குப் பின்பு अनेन जावेन आत्मना अनुप्रविश्य - ஜீவபாவத்தை யடைவதற்க்காக பிருஹ்மம் அனுப்ரவேசம் செய்வது, அதற்குப் பிறகு வ்யஷ்டி ஸ்ருஷ்டியாகிற நாமரூபவ்யா

கரணம் (பிரித்தல்) செய்தல் - விசித்திர நாமரூப வ்யாகரணம் பிறகு அந்த விசித்திர நாமரூபவ்யாகரணம் பிறகு அந்த விசித்திர ஸ்ருஷ்டியில் அசேதனவர்க்கங்களின் அனுபவத் தால் யேற்படும் விஷய (अनुभवनिमित) சுக துக்க பாகித்வம் (சுக துக்காதிகளை அனுபவித்தல்) (விஷயானுபவ நிமித்த சுகதுக்க பாகிதவம்) - பிருஹ்மம் ஜீவனில் அந்தர்யாமியாக விருப்பினும் அபோக்திருத்வேன - தான் அனுபவிப்பதில்லை; ஆனால் உள் நுழைந்து மேலான நியமனம் செய்யப்படுவதாலே (நியந்திருத்வத்தினால் யேற்படுவது) (அந்தர்யாமித்வம்); ஜீவ பூதனான பரமாத்மா (அதாவது பகவான்தானே ஜீவனாகிறான் - என்பதால் காரண பிருஹ்மாத்மபாவம் அனுஸந்தானம் (சரீரி பர்யந்தம் சரீர வாச்ய சப்தங்கள் சொல்வதாலே) - எங்கும் எல்லாவற்றையும் பிருஹ்மாத்ம பாவமாக காணுதல் - (காரண பிருஹ்மம் தானே ஜீவனாக ஆகுதல் என்கிற பிருஹ்மாத்ம பாவானு ஸந்தானம் - அதே பிரகாரம் ஸம்சாரம் அதிலிருந்து விடுபடுதலாகிற மோக்ஷம் இவைகளை உபதேசிக்கும் சாஸ்திரம் - இவை எல்லாம் மித்யை என்று சொல்வது பொருந்தாது, भ्रमितव्य मित्युपदिश्यते - எல்லாம் மிதியை என்கிற உபதேசம் உன்மத்தனுடைய பிரலாபமாக விருக்குமே ஒழிய - சரியாகாது (उन्मत्तप्रलपितत्वापातात्) என்றார்.

(ராமானுஜர் அபேத வாதிகளுக்குப்பதில் கொடுக்கிறார் - ஏனெனில் பேதம் மற்ற பிரமாணங்களால் - யேற்படுவதில்லை அதாவது பிரதயக்ஷஸித்தம். ஆனால் இங்கு ஜீவ பிருஹ்ம விஷயத்திலே இத்தகையபேதம் வேறு பிரமாணத்தினால் அறியப்படமாட்டாது. சாஸ்திரைகமேவ - வேதம் ஒன்றினால் தான் அறியப்படும். மேலும் வேதத்திலே ஸ்ருஷ்டி பரவாக்யங்களை வேறு பிரமாணங்களால் ஸ்தாபிக்கமுடியாது. மேலும் பார மார்த்திகதசையில் வேதமே மித்யையாகும் (பிருஹ்மம் ஒன்று தான் இருந்தது என்று அத்வைதி சொல்வதால்) ஞானத்தை உபதேசித்து தவறுகளை நீக்கவந்தவேதம் மித்யையைப் போதிக்க வந்ததாக எண்ணப்பட வேண்டும். சாஸ்திரம்) அதனால் ராமானுஜர் சொல்வது - ஜல்பம் உன்மத்தனுடைய பிரலாபம் தான் இது என்பதாகும்)

भ्रमितव्यम् - ப்ராந்தேந பாவ்யம், இதற்கு அர்த்தம் - ब्रह्म बहुभवनसंकल्पपूर्वक वियदादि सृष्टिप्रभृति, तदुपदेशशास्त्र-पर्यन्तकारित्वेन वेदेन साक्षादुपदिश्यते, इदञ्च निर्विशेष ब्रह्मणि स्वप्रकाशे कथं स्यात् । अतोऽन्ययानुपपत्त्या तेन आत्मनो अतद्भावानुसंधानं कुर्वता भ्रान्तेन सृष्टयादि बहुकर्तृत्वभ्रान्तिमता च भाव्यमिति अस्मिन्नुपदेशे शास्त्रपर्यवसानमिति । एषवादो न युक्तः । अखण्डैकरसचिन्मात्रत्वेस्वरूप तिरोधान - विपरीतानुसंधान-तद धीनकार्यादिकल्पनानवकाशेन सर्वस्योन्मत्तप्रलपितत्वा पातादिति । (உத்தமூர் ஸ்வாமி) (தர்ப்பணம்) - (இதனால் அத்வைத பக்ஷம் கண்டனமாயிற்று. இனிபாஸ்கரபக்ஷம்)

இந்த (பாஸ்கர) அபிப்ராயமும் உபாதியினால் அவிச்சின்ன பிருஹ்மம் ஜீவபாவத்தையடைகிறது என்பதும் சரியாகாது ஏனெனில் நாம ஏற்கனவே சொல்லியபடி-நியந்த்ருத்வம் நியாம்யத்வம் (ஒருவன் (பகவான்) கட்டளையிடுகிறான் - இன்னொருவன் (ஜீவன்) அதன்படி நடக்கிறான்- இத்யாதி வ்யபதேசங்கள் அனைத்தும் பாதிதமாகிவிடும்; அந்த சம்பந்தமே அழிந்து போய்விடும். தேவதத்தன் என்பதைப் போன்ற மனித விஷயங்களில் - தேவ தத்தன் ஒருவன் இருக்கிறான்- அவனுக்கு கிருஹம் (வீடு) முதலியவை உடையது என்கிற உபாதியின் பேதத்தினால்-நியந்திருத்வம் நியாம்யத்வம் ஆகிற பாவங்கள் ஏற்படாது ஆகையால் இரண்டு வகை (பேத-அபேத சுருதிகளின்) உபதேசங்களில் உபபத்தி காண்பதற்கு (சரியாகப் பொருந்தும்படி ஆக்குவதற்கு) இந்த ஜீவன் பிருஹ்மத்தின் அம்சம் (சரீர ஆத்ம பாவத்தினால் நாம் (விசிஷ்டாத்வைதி) சொல்வது பிரகாரம் தான் என்பதை ஒப்புக் கொள்ள வேண்டியதாகும். अत उभय व्यपदेशोपपत्तये जीवोऽय ब्रह्मणोंश इत्यभ्युपेयम् - இங்கு உத்தமூர் ஸ்வாமியின் விளக்கம்.

अत - पूर्वमेव सूत्रकृता अनन्यत्वं जीवस्य, जीवाद् ब्रह्मणोऽधिकत्वं जीवेऽवस्थितत्वं जीवशरीरकत्वं जीववाचिशब्द-

मुख्यार्थत्वं सर्वमुक्तम् ! स शरीरात्मभावः अपृथक्सिद्धप्रकारत्व-रूपांशत्वात्मकः इति आधेयत्वविधेयत्वादिप्रयोजकाकारवर्णन मत्र क्रियते इति शुद्धजीव ब्रह्मसंबन्धस्य सर्वमूलस्यैवं ज्ञापनम् । स ब्रह्मा.........सोऽक्षरः परमः स्वराट् इति बद्ध ब्रह्मशिवा द्यविशेषं मुक्तस्यापि शरीरात्मभावः श्रुत इहानुसंधेयः । आधेय विधेयत्वादीना विशेषतो भानाभावेऽपि संसर्गभूततदं शप्रयोजका पृथक्सिद्धप்रकारत्व मक्षतमिति निगूढम् - (உத்தமூர் ஸ்வாமி).

(விளக்கம்:—பேத அபேத ஸ்ருதிகள் முக்யார்த்தம் பெறுவதற்காக, ஜீவனை பிருஹ்மத்தின் அம்சம் என்றே கொள்ள வேண்டும். பிரிக்க முடியாத விசேஷணங்களோடு (அப்ரதிக்ஸித்த) கூடிய பொருள் விசிஷ்டமாகும் இந்த விசிஷ்டப் பொருளின் விசேஷணங்கள், அதில் ஒரு பகுதியாகையாலே, இங்கு அம்சம் எனப்படுகின்றது. சேதனப் பொருள்களும், அசேதனப் பொருள்களும், பிருஹ்மத்தை விட்டுப் பிரிக்க முடியாதபடி-ஸ்வதந்திரமாக இருக்க அசக்தம் (முடியாது)-அதனால் அவை எப்போதும் பிருஹ்மத்தோடு (விசேஷணங்களாகவிருப்பதாலே) சேர்ந்தேயிருக்கும். அதனால் அவை பிருஹ்மத்தின் அம்சமாகின்றன. சரீரம் ஆத்மாவை விட்டு தனித்து நிற்காது-அது விட்டுப் பிரிக்க முடியாத திரவிய ரூபமான விசேஷணமாயிருக்கிறது. அந்தர்யாமி பிராஹ்மணம் (யஸ்யாத்மா சரீரம்) ஜீவனை பிருஹ்மத்தின் சரீரமாகப் படிக்கிறது-பிருஹ்மத்தை விட்டுப் பிரிக்க முடியாதபடி ஜீவன் விசேஷணமாயிருந்து கொண்டு பிருஹ்மத்தின் அம்சமாகிறான். சரீரத்தைச் சொல்லும் சப்தங்கள் சரீரி (ஆத்மா) பர்யந்தம் சொல்வதால்-சரீரத்தை உடைய ஆத்மாவையும் குறிக்கும் என்பது பூர்வ மீமாம்ஸையில் ஆக்ருத்யதிகரணத்தின் நியாயத்தாலே ஸித்திக்கிறது. ஆகவே சரீரமான ஜீவனைக் குறிக்கும் சப்தங்கள் சரீரியான பரமாத்மாவையும் சொல்லுகின்றன. तत्वमसि-என்கிற வாக்யத்தில்-அத்வைதிகளைப் போல தத்-எனும் சப்தத்திலும் விசேஷங்களை யெல்லாம் விட்டு லக்ஷணையாலே நிஷ்கிருஷ்ட ஸ்வரூபத்தைச் சொல்லுவதாகக் கொள்ளவேண்டிய அவசியமும்; இல்லை; த்வைதிகளைப்போல, அமுக்யமாக பிருஹ்மத்துக்கு

ஜீவன் வேலைக்காரனைப் போல பரதந்திரனாகையாலே, இருவரை யும் ஒன்று என்கிறது. என்று கொள்ளவேண்டிய அவசியமு மில்லை. பிருஹ்மத்துக்கும் ஜீவனுக்கும் அபேதத்தைச் சொல்லும் சுருதிகள் சரீர ஆத்ம பாவமாகிற அம்ஸாம்ஸி பாவத்தையிட்டு, (நாம் சொல்வதில்) முக்யமாகவே ஆகின்றன. அதாவது ஜீவன் சரீர ரூபமான அம்சமாகவே கொள்ளுகையால், பிருஹமம் அ வ ய வ ம ற் ற து (நிரவயவம்) என்னும் சுருதியும் நமக்கு முறண்படாது. சரீரமான ஜீவனின் தோஷங்கள் ஆத்மா வாகிற பரமாத்மாவை ஸ்பர்சிக்கமாட்டாது. பேத சுருதிகள் - பிரத்யக்ஷ ஸித்தமான பேதத்தை அபேத சுருதிகளாலே தள்ளு வதற்காக அநுவர்திக்கின்றன (அப்ச்சேத்ய நியாயத்தை ஒட்டி) என்று அத்வைதிகள் கூறுவது சரியல்ல. அதாவது விசிஷ்டாத் வைத சித்தாந்தப்படி-பிருஹ்மம் உலகைப்படைத்து-காப்பாற்றி- அழிக்கிறது - வியாபித்து தரித்து நியமிக்கிறது முதலான பிரத்பக்ஷத்தால் ஸித்திக்காத பேதங்களையுமன்றோ பேதசுருதிகள் உத்கோஷிக்கின்றன. பேத சுருதிகள் ஜீவர்களுக்கும் பிருஹ்மத் திற்கும் ஸ்வரூபத்திலும் ஸ்வபாவத்திலும் உள்ள எல்லாப் பேதங்களை சொல்லுகின்றன அதனுல் அவையும் நமக்கு முக்யமா கின்றன. ஆகையால் ஸித்தாந்தத்தில் பேத சுருதிகள் - அபேத சுருதிகள் சரீர ஆத்மபாவமாகிற அம்சாம்ஸி பாவத்தைச் சொல்லும் கடக சுருதிகள் (அந்தர்யாமி பிராஹ்மணம் போன்றவை - சுபோல உபநிஷத் வாக்யங்கள்) ஆகிய எல்லா சுருதிகளும் நமக்கு முக்யமாகின்றன. அதனுல் கீதையில் सर्वैः वेदैः अहमेव वेद्यम् सर्वे என்பதற்கு பேத அபேத கடக சுருதிகளாகும் அதனுல் எல்லா சுருதிகளும் குறைவற முக்ய மாக விருப்பதால் - சொல்லப்பட்டது. ஆகையால் ஜீவாத்மா பரமாத்மாவைக்காட்டிலும் வே று ப ட் ட வ ன் எனக்கூறும் த்வைதிகளின் மதம் தள்ளப்பட்டதாயிற்று. எப்போதும் தோஷ மற்றதாய் எல்லாம் அறிந்ததான பரமாத்மா - மாயையினுல் மயங்குகிறது என்று அத்வைதிகள் கூறுவதும் சரியில்லை, அவர் கள் பக்ஷமும் தள்ளப்பட்டது உண்மையான உபாதியினுல் பிருஹ்மமே ஜீவனுகத் தோன்றுகிறது என்று சொல்லும் (பாஸ்கரபக்ஷம்) பேதாபேதவாதிகளின் பக்ஷத்திலும் - பரமாத் மாவே இன்பதுன்பங்களை உடையவனுக வேண்டி வருமாகையால்-

அதுவும் அடியோடு ஒட்டாது. ஆகையால் விசிஷ்டாத்வைத சித்தாந்தமாகிறபடி, ஜீவன் சரீரமாயிருந்து கொண்டு பிருஹ்மத்தின் அம்சமாகிறான் என்னும் பக்ஷமே தோஷமற்றதாய் எல்லாவிதத்திலும் பொருந்தமுள்ளது (ஸ்ரீகோழியாலம் ஸ்வாமி - சாரீரக காரிகாவளி).

ஸி. ஸூ. मन्त्रवर्णात् (2-3-45)

ஸி. ஸூ. மந்திரவர்ணாத் - do -

மந்திரவர்ணாத் - மந்திரவர்ணத்தினாலும் ஜீவன் பிருஹ்மத்தின் அம்சமே).

(புரு. ஸூக்) पादोऽस्य विश्वाभूतानि त्रिपादस्यामृतं दिवि — எல்லா ஜீவராசிகளும் இவனுடைய கால்பகுதி; பரமபதத்தில் முக்கால் பகுதி உள்ளது - என்று புருஷ ஸூக்தத்தில் (மந்திர வர்ணத்தில்) ஜீவனை பிருஹ்மத்தின் அம்சமாகவே படித்திருப்பதும் இந்த விஷயத்தில் பிரமாணம். பாதம் என்கிற சப்தம் கால் பகுதியைக் குறிக்குமாகையால், அம்ஸம் என்று பொருள் உடையதென்பது தெளிவு. विश्वाभूतानि இதில் எல்லாப் பிராணிகளும் என்று ஜீவர்களை பஹுத்வாத் பலபேர்களாக - பஹுவசனம் உபயோகப்படுத்தப் பட்டிருக்கிறது. ஸூத்திரத்திலும் அம்சம் என்கிற பதம் ஜீவ ஜாதியைக் குறிப்பதாக அபிப்ராயம். சாரீ. மீ 2-3-18ல் नात्मा श्रुतेः ஆத்மாவானது உண்டாவதில்லை - சுருதி அப்படி கூறுகையாலும்,தாப்யா - அந்த சுருதிகளிலிருந்தே-நித்யத்வாத்ச - ஆத்மா நித்யம் என்றும் யேற்படுகிறது. - அதேமாதிரி இங்கேயும் ஜாதியைக் குறிப்பதாக ஆத்மாவிற்கு ஏகவசனம் உபயோகம் - என்கிற அபிப்ராயம். ஸ்வே. 6-13ல் नित्यो नित्यानां चेतनश्चेतनानामेको बहूनां यो विदधाति कामान् - நித்யர்களுக்குள்ளே நித்யமாகவும் - சேதனர்களுக்குள்ளே சேதனனுகவும்-அந்த பிரபு பரமாத்மா - ஒன்ருக - பலபேர்களுடைய இஷ்டங்களைப் பூர்த்தி செய்கிருர். இந்த மாதிரி சுருதிகளிலிருந்து பேதமாக விருக்கும் ஆத்மாக்கள் (ஜீவர்கள்) பஹுத்வம் நித்யத்வம் - இரண்டும் உள்வதாகச் சொல்லப்படுகின்றனர். இந்த விதமாக நித்யமாகவும் பஹுத்வமும் (அநேக எண்ணிக்கை கொண்ட )ஜீவர்கள்

இந்த பிரமாணத்தின் ஆதாரத்தினுல் ஏற்படுவதால் - ஞான ஸ்வரூபத்தினுல் எல்லா ஜீவர்களுக்கும் ஏகத்வ (ஒன்றே ஒன்ருன) ரூபமுள்ளதாயினும் (ஞானஸ்வரூபமாயினும்) ஆகாரம் (பரஸ்பர ஜீவர்களுக்குள்ளே) பேதம் உள்ளதாகவும், அதனுல் ஆத்ம யாதாத்மிய (ஒற்றுமை) அவர்களுக்குள்ளே (அதாவது ஞான ஸ்வரூபமாக அறியப்படுகிறது, எவர்கள் ஜீவனின் உண்மை ஸ்வரூபத்தை அறிய விரும்புகிருர்களோ - அவர்களால் அறிய முடிகிறது? அதனுல் சூத்ரக்காரரே இப்போது ஜீவர்களின் பஹுத்வத்தைப்பற்றி (சூத் உ. 2-3-48)ல் சொல்லப்போகிருர் - असं ततेश्चाव्यतिकरः - அஸந்ததே! ச - ஜீவர்கள் அணுவாயிருக்கை யாலும், அவ்யதிகர: - (அவர்களது) போகம் ஒன்ருவதில்லை (ஜீவர்கள் பிரதிசரீரத்திலும் வெவ்வேருக யிருக்கிறபடியால், ஒருவரது அனுபவம் மற்றவர்களின் அனுபவத்தோடு ஒன்ருகாம லிருப்பது சரியாகும்.

(அதாவது பாதம் என்கிற பதம் அம்சம் என்பதற்கு சரி சமமாக இந்த சூத்ரத்தில் சொல்லப்படுகிறது-மந்திர வர்ண உதா ரணத்தினுல். இப்போது ஜீவன் இன்னொரு வேத பிரமாணத்தினுல் ஜீவ பிருஹ்ம பேதம் காட்டப்பட்டு அதில் பிருஹ்மத்தின் அம்சமே ஜீவன் ஆகும் என்று சொல்லி; முந்தின சூத்ரம் வேதத்தின் கருத்தைப் பொதுவாகக் கொண்டதாகவும் காட்டப்படுகிறது இங்கே சங்கரர் சா. 2-3-12 - 6-வாக்யத்தைச் சொல்லி - தைத் பகுதியிலிருந்து (புருஷ சூக்தம்) வேறு விதமாகச் சொல்லும்படி யில்லை. சங்கரர் च என்கிற வார்த்தை சூத்ர முடிவில் படிக்கிருர். பரஸ்பர ஜீவபேதம் எக்காலத்திலும்-முக்த தசையிலும் இருப்ப தாகும்-ஏனெனில் அடைபவன் அடையப்படுபவன் வித்யாஸப் படுவதாலே ஆகார (ஞானஸ்வரூபம்) ஐக்யம் உண்டு ஸ்வரூப ஐக்யமில்லை साक्षादंश एव என்றும் ஸ்மிருதியிலும் காட்டப் படுகிறது-அடுத்த சூத்ரத்தில்)

**ஸி. சூ. अपि स्मर्यते (2-3-44)**
**அபிஸ்மர்யதே (2-3-44)**

ஸமர்யதே அபி-ஜீவன் புருஷோத்தமனின் அம்சமே என ஸ்மிருதியிலும் (கீதையிலும்) சொல்லப்படுகிறது.

கீதை 15-7ல் ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः - பத்த ஜீவர்கள் வாழும் இவ்வுலகில் அநாதி காலமாக உள்ள பத்த ஜீவனும் என்னுடைய அம்ஸமாயிருப்பவனே - ஜீவன் இதனால் பரமாத்மாவின் அம்சமாகவே சொல்லப்படுகிறான்- இதனாலும் ஜீவன் ப்ருஹ்மத்தின் அம்ஸமே யாவான். [ஜீவ விசிஷ்ட ப்ருஹ்மம்-ஏக வஸ்துவாக விருக்கிறான்-அதனாலும் அம்சமாக விருக்கிறான். ஜீவ ஈஸ்வர பேதம் இருப்பதால்-முக்த தசையிலும் - ஸ்வரூப ஐக்யமில்லை. ஆகார (ஞானத்திலே) ஐக்யம் உண்டு பரஸ்பர ஜீவர்களிடம் என்பதாகும்).

சரி ஜீவன் ப்ருஹ்மத்தின் அம்சமாகக் கொள்ளப்படுமாயின்- சந்தேகம் எழலாம்-ஜீவனுக்கு யேற்படும் தோஷங்கள் ப்ருஹ்மத்திற்கும் யேற்படலாமே என்கிற சங்கைக்கு-சூத்ரக்காரரே அடுத்த சூத்ரத்தில் பதில் கூறுகிறார்.

ஸி. சூ. प्रकाशादिवात्तु नैवं परः (2-3-45)

ப்ரகாஸாதி வத்து நைவம்பர: (do)

ப்ரகாஸாதி வத்து (ஜீவன்) ஒளி முதலானவை (மணி முதலானவற்றுக்குப்) போலே (பரமாத்மாவுக்கு அம்ஸம் எனப்படுகிறான். பர:-பரமாத்மா, ந ஏவம்·(ஸ்வரூப ஸ்வபாவங்களில்) ஜீவனைப் போன்றவனல்லன்.

து சப்தம் ஆக்ஷேபத்தைத் தள்ளுகிறது. பிரகாசாதிவத்-ஒளி முதலானவை (மணி முதலானவற்றுக்குப்) போல-ஜீவன் பரமாத்மாவின் அம்சமாகிறான். எப்படி அக்னி-சூரியன் முதலானவற்றிற்கு ஒளி ரூபமான பிரகாசம் அம்சமாக இருக்கிறதோ-அது போல ஜீவன் அம்சமாக ப்ருஹ்மத்திற்கு ஆகிறது; எவ்விதம் பசுக்களுக்கு-குதிரைகளுக்கு - சுக்ல கருப்பு நிறங்கள் விசேஷணங்களாக குதிரை-பசு முதலியவற்றினோடு சேர்ந்தே காணப்படுகின்றனவோ-அப்ரதிக் ஸித்த தர்மங்களாக அவைகளின் அம்சமாக விளங்குகின்றனவோ-ஒளி முதலான விசேஷணங்கள் மணி — சூர்யன்-அக்னி முதலிய விசேஷ்யங்களின் (வஸ்துக்களின்) விட்டுப் பிரிக்க முடியாதபடி அம்சங்களாக விருக்கின்றன. கோ முதலான விசேஷ்யங்களுக்கு, ''கோத்வம்'' முதலான ஜாதிகள் விட்டுப்

பிரிக்க முடியாதபடி விசேஷணங்களாகவுள்ளன. தேகத்தோடு கூடிய தேஹியான (அதாவது ஜீவனை) விசேஷ்யத்திற்கு, அவனது தேகம் விட்டுப் பிரிக்கமுடியாத (அப்ரதிக் ஸித்தமாக) விசேஷணமாயுள்ளது. இது போல ஜீவனும் பரமாத்மாவை விட்டுப் பிரிக்க முடியாத சரீர ரூபமான விசேஷணமாக யிருப்பவனையால் - அவன் பிருஹ்மத்தின் அம்ஸமாகிறான் பல விசேஷணங்களோடு கூடிய ஒரு பொருளின் ஒரு பகுதியாக விருப்பது அம்ஸம் எனப்படுவது. எப்படி தேகங்களாகிற தேவ-மனுஷ்ய தேகங்கள்-அந்த அந்த தேஹிகளுக்கு (தேவ மனுஷ்ய ஜீவாதிகளுக்கு) அம்சங்களாகின்றன. அதைப் போல பரமாத்மாவுக்கு ஜீவன் சரீரமாதலால் - அவன் பரமாத்மாவின் அம்சமாகிறான் எனக் கொள்ள வேண்டியது. அதாவது ஏக வஸ்துவின் ஏக தேசத்வம் (ஒரு பாகம்) அதன் அம்ஸமாகும்.

विशिष्टस्यैकस्य वस्तुनो विशेषणमंश एव - நாம் உலகத்தில் காண்கிறோம்-விசேஷணம்ஸம் - விசேஷ்யாம்ஸம் என்னும் உலக வழக்கையும் காண்கிறோம்-அதனால் கோத்வாதி ஜாதி கோவ்யக்திக்கு விசேஷணரூபமான அம்சமாயிருப்பது போலவும், ஒளி முதலான குணம் மணி-சூர்யன்- அக்னிக்கு விசேஷணரூபமான அம்சமாயிருப்பது போலவும், ஜீவசரீரம் ஜீவனுக்கு விசேஷணரூபமான அம்சமாயிருப்பதுபோலவும் பரமாத்மா சரீரமான ஜீவனும் விசிஷ்டனை பரமாத்மாவுக்கு விசேஷணரூபமான பகுதியாய்-அம்ஸமாக விருக்கக் குறையில்லை.

அவ்விதமே, எவர்களுக்கு விவேகமிருக்கிறதோ-அவர்கள் போதிப்பது ஒரு வஸ்துவுக்கு எந்த தர்மம் பிரிக்க முடியாதபடி சேர்ந்திருக்கிறதோ-அதற்கு அந்த விசேஷணமாகிற தர்மம் விசேஷ்ய (பொருளின்) அம்ஸமாகும்-(வ்யபதிஸந்தி) விசேஷண விசேஷ்ய சம்பந்தமே-அம்ஸாம்ஸித்வத்தினாலும்-ஒன்றாக விசிஷ்ட வஸ்துவாக கருதப்படினும், அந்த விசேஷ விசேஷண வைலக்ஷண்யம் ஸ்வபாவ வேறுபாடு - இருக்கத்தான் இருக்கும்-அதாவது பிருஹ்மம் பிருஹ்மமே-ஜீவன் ஜீவனேயாகும்-ஸ்வரூப ஐக்யமில்லை. ஸ்வபாவங்களிலும் வேறுபாடு இருக்கும். இந்த விதமாக ஜீவாத்மா பரமாத்மாவின் சம்பந்தம் அம்ஸாம்ஸித்வம் என்று ஸித்திக்கிறபடியால்-அவைகளின் (ஸ்வரூப) ஸ்வபாவ பேதங்களும்

காட்டப்படுகின்றன-(அதாவது ஜீவனுக்கு ஞான ஸ்வரூபத்தில் மாறுதல் இல்லையாகிலும் ஸம்சார தசையில் தர்மபூத ஞானத்தினுல் ஞானம் ஸங்கோச விகாஸமடைகிறது-ஸ்வபாவ மாறுதல்கள் கர்மகாரணமாகவும் தேககாரணமாகவும் யேற்படுகின்றன. ஆனுல் பரமாத்மாவுக்கு விகாரம் ஒன்றுமில்லை. நிர்விகாரன்-ஸத்யன் என்பதாகும். மேலும் ராமானுஜர் சொல்வது-தர்மங்கள் வஸ்துவிலிருந்து விட்டுப் பிரிக்க முடியாதபடி வஸ்துவுடன் சேர்ந்தே யிருக்கும். இதற்கு உதாரணம் தேகமும் ஆத்மாவும் - விட்டுப் பிரிக்க முடியாதபடி எப்போதும் சேர்ந்தேயிருக்கும். இம் மாதிரி தர்மங்கள் வஸ்துவின் அம்சங்களாகும்-பகுதியாகும்-இந்த விதமாக, ஜீவாத்மா (பரமாத்மாவுக்குச்) சரீரமாதலால், பரமாத்மாவின் அம்சமாக-எப்போதும் விட்டுப் பிரிக்க முடியாதபடி-அம்ஸாம்ஸி பாவத்துடன் இருக்கும். இங்கு நாம் கவனிக்க வேண்டியது-சூத்ர ஆரம்பத்திலே-அம்சம் வஸ்துவின் தர்மமாதலால் அதன் ஒரு பகுதியாகும். இங்கே அந்த விஷயம் நன்கு விளங்கப்படுகிறது-அம்சம் விட்டுப் பிரிக்க முடியாதபடி வஸ்துவின் தர்மம் எனக் காட்டப்படுகிறது).

(சங்கரர் தமது பாடத்தில் 'து' என்பதை விலக்கிப் படிக்கிருர்.)

இந்த விஷயம் இங்கே சொல்வப்படுகிறது नैवं परः - மேலான பரமாத்மா அவ்விதமில்லை. எப்படி ஜீவன்-எந்த ஸ்வரூப ஸ்வபாவத்துடன் இருக்கிருனே, அதே ஸ்வரூபஸ்வபாவத்துடன் இருக்கிருன்-அதே மாதிரி பிருஹ்மமும் மாறுதலின்றி நிர்விகாரமாக விருக்கிறது.

எப்படி பிரபையாகிற ஒளி - பிரபையைத் தர்மமாகவுடைய பிரபாவாந்-ஒளியை உடையவனிலிருந்து (அன்யதாபூத: (வேருக விருக்கிறது) அதுபோல இங்கேயும் பரமாத்மா ஜீவர்களுக்குள்ள வித்யாஸங்கள் இருக்கத்தான் இருக்கின்றன-ஜீவன் பரமாத்மாவின் அம்சம் என்று சொல்லப்பட்டாலும்-ஜீவனைவிட அம்சியான பரமாத்மா தனிப்பட்டவன்-பிரபை பிரபாவாந் என்கிற உதாரணத்தைப் போல; இதுதான் அர்த்தம் வஸ்துவின் ஸ்வபாவங்கள் வேறுபடினும் இரண்டும் ஒனருகவே

கருதப்படுகின்றன) இந்த விதமாக ஜீவபரமாத்மாவுக்கு விசேஷண விசேஷ்யத்வத்தின் சம்பந்தம்—அவைகளின் ஸ்வபாவவைலக்ஷண்யம்-இவைகளை ஆஸ்ரயித்து - பேதம் விளக்கம் ஏற்படுகிறது-ஸ்வபாவ வைலக்ஷ்யங்களை ஆதாரமாகக் கொண்டது அபேதமும் காட்டப்படுகிறது-எங்கனமெனில் இவைகளுக்கு பேதம் யாதுமின்றி-(இல்லாமலே) அந்த வஸ்துக்களின் தர்மங்கள் தனியாக விருக்க யேற்படும் ஸ்திதி (இருப்பு) ஒன்றுமில்லை. அந்த தர்மங்களுக்கு சேர்ந்திருக்கும் தன்மை இல்லை-ஆயினும் விசேஷ்ய பர்யந்தம் வரை தர்மங்களுடன் கூடியே அந்த வஸ்துவுடன் காட்டப்படுவதாக விருக்கும்-அதனாலே அவை முக்யத்வேந-முக்யார்த்தமாக இருப்பதாகக் காட்டப்படுகிறது-சா. 2-6-10-3ல் तत्त्वमसि நீ பிருஹ்மமாக விருக்கிறாய் - பிரு. 2-6-4-5ல் अयमात्मा ब्रह्म இந்த ஆத்மா பிருஹ்மமாக விருக்கிறது என்கிற வாக்யங்களில் तत् சப்த, பிரும்ம சப்தத்தைப்போல त्वमयमात्मेति சப்தங்களும் (நீ - ஆத்மா) என்பதைப்போல ஒரே அர்த்தத்தில் சரீரீ பர்யந்தம் (அதாவது பரமாத்மா வாசித்வம்) ஒற்றுமை (தாதாம்ய அபேதரூபமாக) போதிக்கின்றன என்பதாகும். (சரீர பதங்கள் சரீரி பரிபந்தம் வரை சொல்கின்றன என்பதாகும். - ஏனெனில் பிருஹ்மம் ஆத்மாவாகவும் त्वमात्मा என்னும பதங்களாகிற ஜீவர்கள் சரீரங்களாக விருப்பதாலும், அதனால் ஸமானதி கரணத்தினாலும் இரண்டிற்கும் ஒற்றுமை (ஸாம்யம்) படிக்கப்படுகிறது. இநத விஷயம் விபரமாக ஜிக்ஞாஸாதிகரணத்தில் சொல்லபட்டது. ஜீவசரீரக பிருஹ்மவாசகத்திதினால் ஏகார்த்தம் காட்டப்படுகிறது - என்கிற இநத அர்த்தம் விபரமாகச் சொல்லப்பட்டதாகும். இந்த விதமாக விசிஷ்டஐக்யம் (ஸ்வரூப ஐக்யமில்லை) சொல்லி - அநத அந்த பதார்த்தங்களின் விசேஷணம ச ஐக்யமும் ஏற்படுகிறது - என்று இங்கு சொல்லப்படுகிறது. (இதனால் பரமாத்மாவின் ஸ்வரூப ஸ்வபாவங்கள் ஜீவனின் ஸ்வரூபஸ்வபாவங்களில் வேறுபட்டிருக்கவும் தடையில்லை. இப்படி ஜீவசஸ்வரர்களின் ஸ்வரூப ஸ்வபாவங்கள் மிகவும் வேறுபட்டிருப்பதால் - ஜீவன் பரமாத்மாவின் விசேஷணரூபமான பகுதியாக விருந்தபோதிலும் ஜீவனிடமுள்ள தோஷங்கள் பரமாத்மாவினுடையவையே ஆகுமோ என்கிற சந்தேகத்திற்கு இடமில்லை. ஆகையால் அக்ஞனாய் - அஸத்யஸங்கல்பனாய் பல

குற்றங்கள் நிறைந்த ஜீவனைப்போல அல்லாமல், ஸர்வக்ஞனும் ஸத்யசங்கல்பனும் குற்றமற்றவனும் விளங்குகிறான் - பரமாத்மா என்பதாகும்).

ஸி. ஸூ. स्मरन्ति (2-3-46)

ஸ்மரந்திச (do)

ஸ்மரந்தி ச ஸ்மிருதிகளும் (இப்படி அம்ஸாம்ஸி பாவத்தை ஜீவஈஸ்வரர்களுக்குக்) கூறுகின்றன.

இந்த விதமாக பிரபை - பிரபையை உடையது என்கிற ரூபத்தினால் - அதேபடி சக்தி சக்தியை உடையவன் என்கிற ரூபத்தினால் - அதே பிரகாரம் சரீர ஆத்மபாவத்தினாலும் அம்ஸாம்சி பாவம் ஜகத்திற்கும் பிருஹ்மத்திற்கும் பராசரர் போன்ற மஹாத்மாக்கள் நினைவுபடுத்துகின்றனர். பி.பு.1-22-56ல் एकदेशस्थितस्याग्नेर्ज्योत्स्ना विस्तारिणीयथा। परस्य ब्रह्मणः शक्तिस्तथेद मखिलं जगत्। ஓரிடத்திலிருக்கும் அக்னியின் ஒளி பலவிடங்களில் பரவுவதுபோல, இவ்வுலகனைத்தும் பரபிருஹ்மத்தின் சக்தியே யாகும்) - இதனால் அக்னிக்கு ஒளிபோல. பரமாத்மாவுக்கு சேதனு சேதனங்கள் அனைத்தும் விசேஷணங்கள் எனக் காட்டினார்கள். வி. பு. 1-12-37 यत्किञ्चित् सृज्यते येन सत्त्वजातेन वैद्विज। तस्य सृज्यस्य संभूतौ तत् सर्वं वैहरेस्तनुः॥ அந்தணரே, எந்த ஜீவராசியில் யாதொன்று ஸ்ருஷ்டிக்கப்படுகிறதோ, அது அனைத்தினுடைய ஸ்ருஷ்டியின் பொருட்டு அந்தக் காரணப் பொருள்கள் அனைத்தும் ஹரிக்குச் சரீரமாகின்றன—என்று பரமாத்மாவுக்கு ஜீவர்கள் அனைவரும் சரீரரூபமான அம்சமாகவே உள்ளதாகவும் காட்டினார்கள் - ஆகவே ஜீவன் பரமாத்மாவின் அம்ஸமே च காரத்தினால் சுருதிகளிலும்கூட - பிரு. உ. 5-7-22 यस्यात्मा शरीरम् எவருக்கு (ஈஸ்வரர்க்கு) ஜீவன் சரீரமோ - இத்யாதிகளால் ஆத்ம சரீர பாவத்தினால் (ஜகத்திற்கும் - பிருஹ்மத்திற்கும்) அம்ஸாம்ஸித்வம் சொல்கிறார்கள் - எனச் சொல்லப்படுகிறது.

இந்த விதமாக ஜீவன் பிருஹ்மத்தின் அம்சமாதலால் பிருஹ்மத்தினால் தூண்டப்பட்டு பிரவர்த்தி செய்வதும், எல்லா

ஜீவர்களுக்கும் அறிவைத்தவிர அறிவை உடையவர்களாக விருப்பதும்-இந்தவிதமாக எல்லா ஜீவர்களும் ஞானகாரத்திலேஸமான மாக விருக்கிறார்கள்-என்பதாயினும்-ஆனால் சில ஜீவர்கள் விஷயத்திலே-வேத அத்யயனம் அதன் அர்த்தப்படி ஒழுகுதலும் (நடப்பதும) அனுஷ்டானம் செய்வதில் அனுமதி கொடுத்தலும்-இன்னும் சில ஜீவர்களின் விஷயத்திலே அதற்கு விரோதமாக தடை செயவதும்; இன்னும் சிலபேர்கள் விஷயத்திலும் தர்சனம் (பார்த்தலு ) தொடுவதும் (ஸ்பர்சிப்பதும்) இவைகளில் அனுமதி கொடுப்பதும-அதேமாதிரி பார்த்தல் தொடுதல் இவைகளில் சில பேர்கள் விஷயத்தில் தடை செய்திருப்பதும், இது எல்லாம் சாஸ்திரத்தின நோக்கம (அபிப்ராயம்) என்பது எவ்விதம் சரியாகுப? இந்த சந்தேகத்திற்கு அடுத்த சூத்திரத்தில் பதில் கூறப்படுகிறது.

ஸி. சூ· अनुज्ञापरिहारौ देहसंबन्धात् ज्योतिरादिवत् (2-3-47)
அனுக்ஞா பரிஹாரௌ தேஹஸம்பந்தாத்
ஜ்யோதிராதிவத் ( do )

அனுக்ஞா பரிஹாரௌ - (வேதம் ஓதுதல் முதலானவற்றில்) சிலருக்கு அனுமதியும, சிலர்க்கு தடையும் விலக்கும்) தேஹ சம்பந்தாத் - சரீர சம்பந்தத்தினாலேயே, ஜ்யோதி ராதிவத்-அக்னி முதலானவை (ஆஸ்ரயத்தை யிட்டுக் கொள்ளவும் - தள்ளவும் படுவது) போல.

எல்லா ஜீவர்களும் பிருஹ்மத்திற்கு அம்சமாதலால் எல்லோரும் ஞானத்தைக் குணமாக உடையவர்களாயினும், அதனால் எல்லா ஜீவர்களும் ஏக ரூபமாக விருப்பது ஸத்யமாயினும், பிராம்மண க்ஷத்திரிய வைச்ய சூத்ராதிகளுக்கு ரூபத்திலே சுசி (சுத்தமாக விருப்பது) அசுசியாக விருப்பது தேகத்தின் சம்பந்தத்தினால் ஏற்பட்டதாகும்; அதனால் வேதம் ஓதுதல் முதலானவற்றில் அனுமதிக்கப்பட் டிருப்பதும் அவைகளில் சிலர் விலக்கப்பட்டிருப்பதும் இவ்விதமாக காட்டப்படும்-(அதாவது ஜீவர்கள் பிருஹ்மாம்ஸமாயிருக்கை முதலியவற்றால்-ஒருபடி பட்டவை யானாலும்-அவர்களுக்கு சில விஷயங்களில் விலக்கப்பட்டிருப்பதும் பொருத்தமானதே ) ज्योतिरादिवत् - அக்னியைப் போல, அக்னி ஒன்று யிருந்தாலும்-ஸ்ரோத்ரியன் வீட்டிலுள்ள அக்னி ஏற்கப் படுவது போலவும், ஸ்மசானத்திலுள்ள அக்னி விலக்கப்படுவது

போலவும்-எப்படி ஸ்ரோத்ரியனுடைய அன்னம் யேற்கப்படுவது போலவும்-பதிதனுடைய அன்னம் விலக்கப்படுவது போலவும் - இதுவும் பொருந்தும் எனக் கொள்ளத்தட்டில்லை. (இங்கு சொல்லப்படுவது ஜீவர்களுக்கு சரீரத்தினுல் ஏற்றம் தாழ்வு உண்டாகலாம். ஆனுல் ஆத்மாவில் இல்லை-எல்லோரும் ஒருபடியாக விருக்கிறுர்கள் (அவரவர்களின் கர்ம விசேஷ பிரயுக்தமான தேகங்களினுல் சுசித்வம்-அசுசித்வம் உண்டாகிறது )

ஸி சூ- असंततेश्चाव्यतिकरः (2-3-48)

அஸந்ததேஸ்சாவ்யதிகர: (do)

*அஸந்ததே: ச-(ஜீவர்கள்) அணுவாயிருக்கையாலும் - அவ்யதிகர; - (அவர்களது) போகம் ஒன்ருவதில்லை வேறுபட்டதாகும்,*

பிருஹ்ம அம்சத்தினுல் ஜீவர்கள் அநேக ருபத்தை அடைந்திருக்கிறுர்கள்-என்பது ஸத்யமாலுலும், ஜீவர்களுக்குள்ளே பரஸ்பரம் அந்யோன்ய பேதம் இருக்கிறது. அணுவாக விருப்பதாலும்-ஒவ்வொரு சரீரத்திலும் பின்ன பின்னமாக (வெவ்வேருக) விருக்கிறுர்கள் என்பது ஸகலபிரமாண ஸித்தமாகையாலும், ஜீவர்களின் ஒருவரது போக வ்யதிகரோ (அனுபவம் மற்றவர்களின் அனுபவத்தோடு ஒன்ருகமலிருப்பது பொருந்துகிறது-(அதனுல் யேற்படாது தடுமாற்றம் (Confusion) எதுவும்)-தேகத்தை ஒட்டி அனுபவம் யேற்படுகிறது-அதனுலேயே ஏற்ற தாழ்வும் உண்டாகிறது). பிருஹ்மமே அக்ஞானத்தினுல் மயங்கி ஜீவனுகிறது என்னும் அத்வைதிகளின் பக்ஷத்திலும் (பிராந்தி பிருஹ்ம ஜீவவாதே)-அதேபடி உபஹித பிருஹ்ம ஜீவவாதே (பிருஹ்மமே உண்மையான அல்லது பொய்யான உபாதியினுல் ஜீவனுகிறது என்று கூறும் யாதவ பிரகாச பாஸ்கர பக்ஷங்களிலும் ஜீவர்களுடைய அனுபவம் ஒன்ருகாமலிருப்பது ஒரு போதும் ஒட்டாது (நமக்கு சரிவராப் போல) அதனுல் ஜீவபரமாத்மா விஷயங்களில் அனுபவங்கள் ஒன்றுயிருப்பதில்லை; அதேபடி பரஸ்பரம் ஜீவர்களுக்குள்ளேயும் போகம் ஒன்ருக விருப்பதில்லை-என்று சொல்வதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. இந்த தோஷங்களை மனதில் வைத்துக் கொண்டுதான்-இம்மாதிரி கஷ்டங்கள் அனுபவம் ஒன்ருக விருக்கும் பக்ஷத்தின் விஷயத்திலே இவ்வாதபடியாவே. இந்த அபிப்ராயம் சூத்ரக்காரரால் (ஸ்வபசேஷ போக வ்யதிகராபாவ யுக்த:) சொல்லப்பட்டு-சரியாகிறது. (அதாவது ஜீவர்களின் பரஸ்பர அனுபவ பேதம் ஏற்படுவதற்குக் காரணம் சரீரம் என்பதாகும்).

(இங்கு சொல்லப்படுவது-சூத்ரம் 44-46ல் ஸ்மிருதிகளின்படி ஜீவன் பிருஹ்மத்தின் அம்சம் என்று சொல்லப்பட்டது. 44ல் ஜீவாத்மா பிருஹ்மத்தின் அம்சம் என்பதற்கு ஸ்மிருதி ஆதாரம் காட்டப்பட்டது. 46ல் சுருதிகளின்படி ஜீவன் பிருஹ்மத்தின் அபிரதிக் ஸித்த அம்சமாகக் காட்டப்படுகிறது. 48ல் ஜீவர்களின் அனுபவம் ஒன்றுகமலிருப்பது-ஒருவரது மற்றொருவரின் அனுபவத்துக்கு வேறாக விருப்பது சரிதான் என்று சொல்லப்படுகிறது; அத்வைத பக்ஷம் யாதவ பிரகாச, பாஸ்கர பக்ஷங்களில் ஜீவர்களின் அனுபவம் ஒன்றுகாமலிருப்பது ஒரு போதும் ஒட்டாது-அதனால் அவை சரியாகமாட்டா) (இந்த சூத்ரத்தில்-தநி ஸந்ததி-என்பதால் எங்கும் பரவியிருத்தல் - அஸந்ததி - அனுவாயிருகை. ச என்கிற பதம் தெளிவாகக் காட்டப்படாததற்கு இன்னொரு காரணத்தைச் சொல்கிறது. இதனால் ஜீவர்கள் அணு பரிமாணமுள்ளவர்களாதலாலே அனுபவமும் ஒன்றுகாமல் வித்யாஸப்படுகிறது. நான் சுகமாக விருக்கிறேன்- - நான் துக்கமாக விருக்கிறேன் என்று சொல்லும்படி அனுபவ விதயாஸப பிரதி ஜீவனில் இருக்கிறது. அதே பிரகாரம் பிற ஜீவர்களின் அனுபவமும எநத ஜீவனுலும் அனுபவிக்கப்படுகிறதில்லை.

மேலும் சொல்லப்படலாம்-பிராந்த பிருஹ்மஜீவ வாதத்தில்-பிருஹ்மமே அக்ஞானத்தால் மயங்கி ஜீவத் தன்மையை அடைகிறது-அவித்யாக்ருத உபாதி பேதத்தினுல் போக பேதங்கள் யேற்படுகின்றன-இந்த ஆக்ஷேபத்திற்கு, சூத்ரக்காரரே பதில் கூறுகிறார்.

ஸி. சூ आभास (सा) एव च (2-3-49)
ஆ பாஸா ஏ வ ச ( do )

ஆபா ஸா: ஏவ ச (பிருஹ்மத்திற்கு அக்ஞானத்தையும் அதன் மறைவையும் நிரூபிக்க, அத்வைதிகள் கூறும் ஹேதுக்கள் தோஷமுள்ளவை (சுருதி விருத்தமானவை.)

அகண்டைகரஸம் பிரகாச மாத்திரம் பிருஹ்ம ஸ்வரூபம்; அதன் ஸ்வரூபதிரோதானம் (மறைத்தல்) ஏற்படுவது உபாதி

யினால் (அவித்யையினால்); அந்த உபாதி பேதம் ஏற்கனவே மறைக்கப்பட்ட ஸ்வரூபத்திற்கு யேற்படுகிறது என்கிற காரணம் இருந்த காரணமாக மாட்டாது-आभास एव: (அதாவது ஸர்வக்ஞனை பரமாத்மாவுக்கு அக்ஞானத்தை நிரூபிக்கவும், அந்த பிருஹ்மம் அவித்யையினால் திரோதானம் (மறைக்கப்படுகிறது) செய்யப்படுகிறது-என்று நிரூபிக்கவும்-அத்வைதிகள் கூறும் ஹேதுக்கள் தோஷமுள்ளவையாகும் - உண்மையான ஹேதுக்களாகமாட்டா). நாம் ஏற்கனவே ஜிக்ஞாஸாதி கரணத்தில் (1-1-1) விளக்கியுள்ளோம்-பிரகாசத்தையே அப்ரதிக் ஸித்தமான தர்மமாகக் கொண்ட ஸ்வரூபத்திற்கு அந்த பிரகாச திரோதானம் (மறைக்கப்படுதல்) அதன் பிரகாச நாசம் என்று (சொல்லியுள்ளோம்). आभासा एव - च - அத்வைதிகளின் ஹேதுக்கள் சரியாகமாட்டா (தோஷமுள்ளவை) (சுருதி விருத்தம்) आभासा एव - சரியான ஹேதுக்களாகமாட்டா. அப்படியானால் அவர்களுடைய ஹேதுக்கள் தோஷமுள்ளவை. உண்மையான ஹேதுக்கள் அல்ல. च என்கிற பதத்தில் சுருதி விரோதமும் காட்டப்படுகிறது. ஸ்வே 2-1-6 पृथगात्मानं प्रेरितारं च मत्वा ஜீவனையும் அவனைத் தூண்டிவிடும் பரமாத்மாவையும் அறிந்து கொண்டு; ஸ்வே. 4-6 ज्ञाज्ञौ द्वौ - இரண்டு பேர்கள் - (ஒன்று அறிவுள்ளது - இன்னொன்று அறிவில்லாதது); ஸ்வே-2-4-6ல் तयोरन्यः पिप्पलं स्वाद्वत्ति - அந்த இரண்டு பக்ஷிகளுள் ஒன்று சுவையான பிப்பலத்தைப் புசிக்கிறது இத்யாதி இன்னொன்று சாப்பிடாமலே பிரகாசித்துக் கொண்டிருக்கிறது சுருதிகளுக்கு விரோதம்,

அவித்யையினால் உண்டாக்கப்பட்ட உபாதியினால் பிருஹ்ம ஜீவ வித்யாஸம் யேற்படுகிறதாயினும், ஸர்வ உபாதிகள் நாசமடைந்ததும் பிருஹ்ம ஜீவ ஸ்வரூப ஐக்யம் யேற்படுவதாக ஒப்புக்கொள்ளப்படுகிறது அதனால் பரமாத்மா விஷயத்தில் ஸ்வரூபம் உபாதியினால் பாதிக்கப்படுகிறது. ஆகவே போகவ்யதிகர: (அனுபவம் ஒன்றாகாமலிருப்பது-அதனால் யேற்படும் தடுமாற்றம்) அதேபடி யிருக்கிறது-அதன் அவஸ்தையே யாகும். (स्वरूपस्य एव) பிருஹ்மத்திற்கு திரோதானம் யேற்பட்டால் அதன் ஸ்வரூப நாசமேயாகும். ஆயினும் ஜீவர்களுக்குள்ளே அனுபவ பேதம் இருப்பதைத் தவிர்க்க முடியாது. அதனால்

அனுபவம் ஒன்ருகாமலிருப்பது இருக்கத்தான் இருக்கும்-அழியாது என்பதாம்.)

பாரமார்த்திகமான உபாதியின் விளைவினுல் பிருஹ்மம் ஜீவனுடைய தன்மையை அடைகிறது-என்கிற அந்த பக்ஷத்திலும் கூட-அதாவது பாஸ்கர பக்ஷத்திலும் கூட சொல்லப்படுகிறது) அநாதியாக வரும் அதிருஷ்டத்தின் காரணமாக உபாதிபேதம் யேற்படுகிறது - அதனுல் ஜீவர்களின் அனுபவங்களில் பிரிதல் யேற்படுகிறது - இந்த சங்கைக்குப் பதில் அடுத்த சூத்ரத்தில் கொடுக்கப்படுகிறது.

ஸி. சூ. अदृष्टानियमात् (2-3-50)
அத்ருஷ்டாநியமாத் ( do )

அதிருஷ்டா நியமாத்-அதிருஷ்டத்திற்கும் வ்யவஸ்தை இல்லாமையால் (போகத்திற்கும் வ்யவஸ்தை இல்லை).

யாதவ பிரகாச மதஸ்தர்களுடைய முற்கூறிய பூர்வபக்ஷமும் சரியாகாது. உபாதிகளுக்கு ஹேதுவாகக் கூறப்படும் அதிருஷ்டமும் பிருஹ்மம் ஒன்றையே ஆஸ்ரயித்திருப்பதால், (நியமஹேது அபாவாத) - அந்த அத்ருஷ்டங்களுக்கும் "இது இன்ன ஜீவனுடையது" என்கிற நியமம் இல்லாதபடியால், அதனுல் போக வ்யஸ்தை யேற்படமுடியாது. பிருஹ்மத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் ஒவ்வொரு அதிருஷ்டத்தையும் அதனுல் ஒவ்வொரு உபாதியையும் கொண்டு ஜீவர்களுக்கு போக வ்யஸ்தையைப் பொருந்தவிடலாமே எனில், அவயவமற்றதான பிருஹ்மத்தை அத்ருஷ்டங்களாலும், உபாதிகளாலும் பல பகுதிகளாகப் பிரிக்க முடியாதாகையால் (பிருஹ்மஸ்வரூபச் சேதா ஸம்பவாத்) யாதவ பிரகாச மதத்திலும் போக வ்யவஸ்தை ஏற்படாது என்று நாம் கூறியது உறுதியாயிற்று. (अदृष्टस्याप्यव्यवस्थितत्वात् भोगाव्यवस्था इति सूत्रार्थः। अस्य सूत्रस्य मिथ्योपाधिवादिपक्षविषयत्वमपीष्टं स्यात्। (உத்தமூர் ஸ்வாமி)

ஸித். சூ. अभिसंध्यादिष्वपि चैवम् 2-3-51
அபிஸந்த்யாதிஷ்வபி சைவம் ( do )

ஶ அபிஸந்த்யாதிஷ்வபி ச - (அதிருஷ்டத்திற்குக் காரணமாக வும் கூறப்படும்) ஸங்கல்பம் (அபிஸந்த்யா) முதலானவற்றிற்கும் ஏவம் முற்கூறிய தோஷமே யேற்படும்.

இதற்கு மேல், அதிருஷ்டங்களுக்குக் காரணமான ஸங்கல்ப விசேஷம் முதலானவற்றைக் கொண்டு, போக வ்யவஸ்தையைப் பொருந்தவிடலாம் என்று யாதவ பிரகாச மதஸ்தர்கள் கூறுவதும், அத்ருஷ்டத்திற்குக் காரணமான ஈஸ்வர சங்கல்பத்திலும் நியமம் இல்லாமையால், முற்கூறியபடி பொருந்தாது.

ஸி ஸூ. प्रदेशभेदादिति चेन्नान्तर्भावात् (2-3-52)
ப்ரதேஸ பேதாதிதி சேந்நாந்தர்பாவாத் (2-3-52)

பிரதேச பேதாத் - (உபாதி ஸம்பந்தத்தால் ஏற்பட்ட பிருஹ்ம பிரதேசத்தின் பேதத்தால் (போக வ்யவஸ்தை ஒட்டும்) இதிசேத்-என்றால்; ந ஒட்டாது (சரியாகாது) அந்தர்பாவாத்- (உபாதிகள் நகரும் போது, எல்லா பிருஹ்ம பிரதேசமும் அவற்றில்) அடங்கி விடுகிறபடியால், (இது பாஸ்கரபக்ஷம் கண்டனம்).

பாஸ்கரீயர்கள் அவர்கள் சொல்வது-பிருஹ்ம ஸ்வரூபம் ஏகமேவ (ஒன்றே ஒன்றுதான் -அதை வெட்டிப் பிரிக்க முடியாது (பல பகுதிகளாக ஆக்க முடியாது); மேலும் அந்த ஸ்வரூபம் பலவித உபாதிகளுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. இவ்விதம் பிரிக்க முடியாதபடி ஒன்றாயிருக்கும் பிருஹ்ம ஸ்வரூபமே, பலவிதமான தேஹ ரூபமான உபாதிகளோடு ஸம்பந்தப்படுகிறதானாலும், அந்தந்த உபாதிகள் ஸம்பந்தப்படுகிற பிருஹ்ம பிரதேசங்களைக் காட்டிலும், ஸம்பந்தப்படாத பிருஹ்ம பிரதேசங்கள் (பேதாத்) வேறுபட்டிருக்கிறபடியால், போக வ்யவஸ்தை பொருந்திவிடுகிறது, என்று சொன்னால் (இது பூர்வபக்ஷம்); சித்தாந்தம் - ந - அவ்விதமில்லை. (தவறாகும்). ஏனெனில் உபாதிகளான தேகங்கள் ஓரிடத்தில் இல்லாமல், பலவிடங்களுக்குச் சஞ்சரிப்பதால் (तत्र तत्र गमनात्), அநாதிகாலமாக அவை நகரும் போது, ஸர்வ பிரதேசங்களிலும் எல்லாவித உபாதிகளும் அந்தர் பாவாத் (உள்ளிருக்கிறபடியால்) அனுபவங்களில் தடுமாற்றம்-பிருஹ்மத்துக்கா? அல்லது ஜீவநிலையை அடைந்த ஜீவனுக்கா? தடுமாற்றம்(வ்யதிகர:) அந்த அவஸ்தையே யாகும். அதாவது ஒரு சமயம் ஸம்பந்தப்படாத பிருஹ்ம பிரதேசங்களும் மற்றொரு சமயத்தில் எல்லா

உபாதிகளிலும், கால பேதத்தையிட்டு, ஸம்பந்தப்பட்டனவாகிற படியால் அத்தகைய பிருஹ்ம பிரதேசம் பேதத்தை யிட்டும் ஜீவர்களிடையே போகவ்யவஸ்தையைப் பொருந்த வைக்க முடியாது. மேலும் பிரதேசபேதத்தினால் ஸம்பந்தம் யேற்படுவதாயினும், எல்லாமே பிருஹ்ம பிரதேசமாவதால், அந்த அந்த பிரதேச சம்பந்தி (ஒவ்வொரு ஜீவனுடைய) துக்கமும் பிருஹ்மத்திற்கே பிருஹ்மத்தினுடையதே ஆகவேண்டிவரும்: (அதாவது ஒவ்வொரு உபாதி சம்பந்தப்படும் பிருஹ்ம பிரதேசங்கள் எல்லாமே பிருஹ்மத்தினுடையவையே யாகையால், ஒவ்வொரு ஜீவனுடைய துக்கமும் பிருஹ்மத்தினுடையதே ஆகவேண்டி வரும். முன்பாகவே - நாம் आभास एव (2-3-49) என்று தொடங்கி நான்கு சூத்ரங்களாலே - नित्योपलब्ध्यनुपलब्धिप्रसङ्गोऽन्यतरनियमो वाऽन्यथा 2-3-32) उपलब्धिवदनियमः என்று - வேதத்திற்குப் புறப்பானவராய், ஸர்வ வ்யாபீ ஜீவவாதிகளான ஸாங்கியர்களின் மதத்தில் சொல்லப்பட்ட தோஷங்கள்- (அதாவது ஆத்மாவைப் பற்றிய தோற்றமும் தோற்றமின்மையும் எப்போதும் யேற்பட வேண்டிவரும்). அல்லது அத்தோற்றம்- தோற்றமின்மை எனும் இவ்விரண்டிற்குள் ஏதாவது ஒன்று எப் போதும் யேற்படவேண்டிவரும்); வேதத்திற்கு அப்பொருள் உரைக்கும் ஏகாத்மவாதிகளான அத்வைதிகளுடைய மதத்திலும், யாதவ பிரகாசருடைய மதத்திலும் ஏற்படும் என்று நிரூபிக்கப் பட்டதாயிற்று. வேதபாஹ்யானும் ஸர்வகத (எங்கும் செல்லத் தக்க) ஜீவவாதினும் தோஷ உக்த: என்பதாகும்). ஆக இந்த அம்ஸாதி கரணத்தால் - ஜீவர்கள் பிருஹ்மத்தைக் காட்டிலும் வேறுபட்டவர்கள் என்றும், பிருஹ்மத்தோடு ஸ்வரூப ஐக்ய முடையவர்கள் என்றும் கூறும் பக்ஷங்கள் நிராகரிக்கப் பட்டு, சேதனாசேதன விசிஷ்டமான பரபிருஹ்மத்தில் விசேஷண ரூபமான அம்ஸமாகவே ஜீவன் இருக்கிறான் என்று உறுதியாகத் தீர்மானிக்கப்பட்டது. यतु - आभास एव च (பிருஹ்மத்தின் அம்ஸா னத்தையும் மறைவையும் (திரோதானம்) ஆகியவற்றை நிரு பிக்க, அத்வைதிகள்கூறும் ஹேதுக்கள் தோஷமுள்ளவை - சுருதி விருத்தம் - என்பவைகளால் வேதத்தை அவலம்பித்த ஆத்மைக வாதிகளுடைய தோஷங்கள் கூறப்பட்டதாயிற்று (சங்கரர் இதை வ்யாக்யானமிடும்போது சாங்கிய பாக்ஷத்தைத் தள்ளுகிறார் -

ஸ்ரீராமானுஜர் சாங்கியபக்ஷம் இதற்கு முன்னாடியே 2-3-36 (உபலப்தி வத நியம; - (கர்மபல போகத்தில் நியமமில்லாமற் போகும்) என்பதிலே நிரஸனம் செய்யப்பட்டு - இங்கே மற்ற பக்ஷங்கள் கண்டிக்கப்பட்டன)

ஆகவே இந்த மூன்றும் பாதத்தில் ஜீவர்கள் ப்ருஹ்மாதீனமான கர்த்ருத்வத்தையும், ஞானாஸ்ரயத்தையும் உடையவர்களாய், அசேதனத்தைப்போல விகார மற்றவர்களாகையால், ஸமஷ்டியில் நிர்விகாரர்களாயிருந்த போதிலும், வ்யஷ்டியில் ஞானவிகாரத்தையிட்டும், சரீர ஸம்பந்தத்தையிட்டும், ப்ருஹ்மத்திற்கு காரியப்பொருள்களாயிருப்பவர்களாகையாலே, சேதனாசேதனங்கள் அடங்கிய எல்லா உலகிற்குமே ப்ருஹ்மம் காரணமாயிருப்பது பொருந்தும் என்று நிர்ணயிக்கப்பட்டதாயிற்று (கோழியாலம் ஸ்வாமி) (சாரீரக காரிகாவளி)

**உத்தமூர் ஸ்வாமி**—अन्यथा जीव विषये अवच्छेदवादं बादरायणः स्थापयतीत्यपि स्यात् । एवञ्च न जीवस्यमुक्तिकाले स्थितिरित्यादिदोषोद्भावन मत्राभिमतम् ।

तदेवं जीवात्मनामत्यन्त ब्रह्मभिन्नत्वस्य तत्स्वरूपैकदेशत्वस्य च निराकरणेन विशिष्टवस्तु एकदेश तया तदपृथक्सिद्ध विशेषणत्वरूपं तदंशत्वमुपपादितम् । एवंभूताः तदधीन कर्तृत्व ज्ञत्वाश्रयाः अचेतनवत् विकाररहिताः समष्टौ निर्विकाराः व्यष्टौ तत्कार्यभूता इति चेतनाचेतन सर्वकारणत्वं ब्रह्मणः सूस्थमिति पादार्थः ।

**ஸ்ரீ பாஷ்யே - த்விதீய அத்யாயே - த்ருதீயபாதம் ஸமாப்தம்**

**ஸ்ரீமதே ராமானுஜாய நம:**

**சுபமஸ்து**

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே வேதாந்த தேசிகாய நம:
ஸ்ரீமதே ஸ்ரீவண்சடகோப வேதாந்த தேசிக
யதீந்திர மஹாதேசிகாய நம:

**பிருஹ்மவித்யை - 4-ம் பாகம்**

ஸ்ரீபகவத் ராமாநுஜ விரசிதே

**ஸ்ரீ சாரீரக மீமாம்ஸே**

**2-ம் அத்யாயம் - 4-ம் பாதம்**

**ப்ராணோத்பத்த்யதிகரணம் (2-4-1)**

பூ. ஸூ. ஸூ. **तथा प्राणाः** (2-4-1)
ததா ப்ராணா: (2-4-1)

(பூ. ஸூ) ததா - ஜீவனைப்போல, ப்ராணா: பிராணன்கள் எனப்படும் இந்திரியங்களும் (நித்யமானவை)
(ஸி. ஸூ) ததா - ஆகாஸம் முதலானவற்றைப் போல ப்ராணா:- இந்திரியங்களும் உண்டாகின்றன

**ஸ்ரீபாஷ்யம்:—**

(**பாதஸங்கதி**):—பிருஹ்மத்தைவிட வ்யதிரிக்தமான (வேறான) ஆகாசம் முதலான ஸம்பூர்ண காரியங்களின் உற்பத்தி பிருஹ்மத்தினிடமிருந்து யேற்பட்டன என்று இதுவரை சொல்லப்பட்டது. அதேபடி-ஜீவனும் பிருஹ்மத்தின் காரியமாகும் என்றாலும் அவனுக்கு ஸ்வரூபமாறுதல் - ஸ்வரூப அந்யதாபாவம் இல்லை என்பதாகும்; ஆனால்ஸ்வபாவ அன்யதாபாவம் யேற்படலாம். அவனுடைய ஸ்வரூபமாகிற ஞானம், ஆனந்தாதி குணங்களும் - அணுத்வமும் மாறவே

மாருது. ஆனால் கர்ம வச்யனான அவனுக்கு தர்மபூத ஞானத்தில் ஸங்கோச விகாஸம் யேற்படும். அதனால் அவனுடைய ஸ்வபாவ அன்யதாபாவம் (மாறுதல்) ஸ்வரூப விகாரமில்லாமையாலே - நித்யமான சேதனப் பொருளாகிற அவனுக்கு யேற்படுவதால், பிருஹ்ம கார்யத்வமும் உண்டா கிறது என்று முன்பாதத்தில் நிரூபிக்கப்பட்டது. ஆனால் ஆகாஸம்போன்ற அசேதனப் பொருள்களுக்கு ஸ்வரூப விகாரமும் ஸ்வபாவ விகாரமும் - சேர்ந்து - அவை பிருஹ்ம காரியமாகின்றன - என்பதும் சொல்லப்பட்டது. இந்த விஷய ஆராய்ச்சியில் - ஜீவனுடைய ஸ்வரூபம் நன்கு வி சா ரி க் க ப் ப ட் ட து. இந்த பாதத்தில் ஜீவனுடைய உபகரணங்களான இந்திரியங்கள் பிராணன் ஆகியவற் றுக்கு உற்பத்தியாதி பிரகாரம் - அதாவது ஸ்வரூப விகார ரூபமான பிருஹ்ம காரியத்வம் விசாரிக்கப்பட்டு - நிரூபிக் கப்படுகிறது - இங்கே இந்திரியங்களின் ஸவரூப விகாரம் (உற்பத்தி - பிருஹ்ம காரியத்வம்) ஜீவனைப்போல யேற்படு கிறதா (சேதனனைப்போலவா) அலலது அசேதனமான ஆகாசத்தைபபோல ஸவரூப ஸவபாவ விகாரத்வம் ஏற்படு கிறதா எனகிற விஷயம் ஆராயப்படுகிறது. எது சரியாகும்? किं युक्तम् ?

பூர்வபக்ஷி சொல்கிறான் — ஜீவனைப்போல இந்திரியங் களுககு பிருஹ்ம காரியத்வம் யேறபடுகிறது. तथा प्राणाः "அவ்விதமே பிராணன்களும் (இந்திரியங்களும்) நித்ய மானவை" - (பூர்வபக்ஷிபபிரகாரம் சூத்ரத்தின அர்த்தம் சொல்லப்படுகிறது - உண்டாக்கப்படவில்லை - எவ்விதம் ஜீவனோ அதைப்போல இந்திரியங்களும் நித்யம் என்கிறான்.) प्राणाः இந்திரியங்கள் என்று அர்த்தம். எப்படி ஜீவன் நித்யமோ - உற்பத்தியாகவில்லையோ-அதேபடி இந்திரியங் களும் உற்பத்தியாக்கப்படவில்லை. कुतः ? எப்படி - சுருதி சொல்வதால. அதாவது எப்படி வேதவாக்யங்களிலிருந்து ஜீவன் உண்டாவதிலலை யென்று அறியப்படுகிறதோ - அவ்விதமே வேதவாக்யங்களிலிருந்து இந்திரியங்களும் உணடாவதில்லை என்று அறியப்படுகிறது.

**விளக்கம் :-** (இந்த இரண்டாம் அத்யாயத்தை முதல் இரண்டு பாதங்களில் பிரதானுதி காரணத்தை த்வாரா (உடைய) வேதபாஹ்யர்கள் நிரஸனம் செய்யப்பட்டு - பின் இரண்டுபாதங்களில் (3-4ல்) பிருஹ்ம காரிய(த்தை) த்வார (உடைய) ஸ்வஸித்தாந்த விரோத பரிஹாரத்தைச் செய்கிருர் - என்பது பாதஸங்கதி. இங்கு நான்கு விதமாக பூர்வபக்ஷங்கள் ஏற்படுகின்றன - நிராகரிக்கத்தக்கவைகள்- அவையாவன - **सर्व नित्यत्वं, सर्व अनित्यत्वं—सर्व नित्यानित्यत्वं-नित्या-नित्यविपर्यस्त**-என்பவையாகும். சாங்கியர்கள் திரவியம் அதிர வியம் ஸர்வம் நித்யம் என்கிருர்கள்; பௌத்தர்கள்-ஸர்வம் அநித்யம் - க்ஷணிகம் என்பார்கள். வைபாஷிகர்கள் எல்லாம் நித்யமாயும் அநித்யமாயும் இருப்பதாகவும் சொல் பவர்கள் - ஜைனர்கள் (ஸப்தபங்கியைச் சேர்ந்தவர்கள்) **स्यादस्तीत्यादि** - என்று சொல்பவர்கள். நாம் நித்யா நித்ய பக்ஷத்தை ஒப்புக்கொண்டாலும் அவர்கள் நித்யமான சைதன்யத்தை, நம் சித்தாந்தத்துக்கு எதிராக - அநித்யம் என்கிருர்கள். அதேபடி - சுருதி பிரமாணங்களினுல் ஸித்த மான ஈஸ்வரனுடைய திவ்யமங்கள விக்ரஹாதிகள் ஒப்புக் கொள்வதில்லே. அநித்யங்களாக ஜாதிவ்யக்திகளுடைய - **घटतद्धर्मयो**: - ஸம்பந்தத்தை - அநித்யமான ஸமவாய சம்பந்தத்தை அவர்கள் நித்யம், என்கிருர்கள்.

அதனுல் நம் சித்தாந்தத்திற்கு மாறுபட்ட ரீதியில் நித்யா நித்யங்களேச் சொல்கிருர்கள் - இந்த நால்வர்களும் சுருதி யைக்கொண்டு நம் சித்தாந்தத்தை ஆட்சேபிக்கிருர்கள். நான்கு பக்ஷங்களேயும் ஸ்வாமி தேசிகன் அதிகரண ஸாராவளியில் **सर्वं सांख्यास्तु नित्यं....पादोयुनक्ति** - என்கிற சுலோகத்தில் நிராகரிக்கிருர். ஸ்ரீபாஷ்யக்காரரும் முன் பாதத் தில் பிருஹ்மம் தவிர்த்து - ஆகாசம் முதலானவை யாவும் பிருஹ்ம காரியமாகும் - (உற்பத்தியாகின்றன) **असम्भवस्तु सतोऽनुपपत्तेः**-என்று சூத்ரத்தில் சொன்ஞர். (2-3-9)-பிருஹ்மம் தவிர்ந்த மற்ற எல்லாப்பொருள்களுக்கும் காரியப்பொருளா யிருக்கும் தன்மை அறியப்படுகிறதாகையால் - உற்பத்தி யின்மை பொருந்தாது - அதனுல் பிருஹ்மம் **ஆகாசம்**

முதலான அசேதனப் பொருள்களனைத்துக்கும் காரணப் பொருளாகயிருப்பது என்று நிர்ணயிக்கப்பட்டதாயிற்று. இதனால் ஜீவஸ்யாபி-கார்யத்வம் ஸித்தமானாலும் - ஆத்மாதி கரணத்தில் स्वरूपान्यथा भाव लक्षण - உற்பத்தி நிராகரிக்கப் பட்டது - ஜீவனுக்கு ஸ்வபாவ விகாரம் யேற்படலாம் ஞானம் ஆனந்தம் அணுத்வாதிகளில் - ஸ்வரூபவிகாரத்வம் இல்லை. तत्प्रसङ्गेन (அவைகளைச் சொல்லும் சந்தர்ப்பத்தில்) ஜீ வ ஸ் வ ரூ ப ம் ஞாதிகரணாதிகளில் விசாரிக்கப்பட்டது. இங்கே ஜீவனின் உபகரணங்களாகிற இந்திரியங்களுக்கும் முக்யபிராணனுக்கும் உற்பத்தி பிரகாரத்தை விசாரிக்கிறார். ஆக ஆத்மாதி கரணத்திற்கும் பிராணோத்பத்யதி கரணத் திற்கும் ஸாக்ஷாத் சங்கதி சொல்லப்பட்டதாகிறது.

(உத்தமூர்ஸ்வாமி அருள்வது

एवमत्राधिकाशङ्का—पञ्चीकरणादि विषयक प्रमाणानुरोधेन वियदादेः स्वरूपान्यथा भावात्मक विकार स्वीकारेऽपि इन्द्रियादेः प्रलयकालस्थित्यवगमेनानुत्पत्तौ निश्चितायाम्, तदुत्पत्तिश्रवण आप्यायकवस्तुसंश्लेषादिकमाधाय जीववदन्यथा निर्वाह्यमिति न प्रतिज्ञाहानिरिति......)

இவ்விதம் இந்திரியங்களின் உற்பத்தியை விசாரிக்கு மளவில் - ஜீவனைப் போல ஸ்வபாவத்தில் மாறுதலை - (இச் சாத்வேஷம் சுகம் துக்கம் - சரீரத்தினால் உண்டாக்கப்படும் விகாரங்கள் ஜீவாத்மாவின் ஸ்வபாவமாகும். ஜீவாத்மா சுக துக்கங்களை அனுபவிப்பதற்கு சரீரம் இருப்பிடம். சரீரத்தின் விகாரங்கள் கௌணமாகும்) மாறுதலை உடையதா-அல்லது ஆகாசம் போன்ற அசேதன வஸ்துக்களைப் போல ஸ்வரூப ஸ்வபாவ விகாரத்தை உடையதா — என்பது சம்சயம். இன்னொரு காரணம் ஸம்சயத்திற்கு - வேத வாக்யங்களி லிருந்து இந்திரியங்களும் உண்டாவதில்லை - என அறியப் படுகிறது. உதாரணமாக அஸத்வா இதமக்ர ஆஸீத் । ததாஹு....பிராணாவாவ ருஷய: சதபத பிராஹ்மணம் 6-1-1ல்

இவ்வுலகம் முதலில் அஸத்தாகவேயிருந்தது (இல்லாத தாகவே) இருந்தது. அப்போது என்னவிருந்தது என்று சிஷ்யர்கள் ஆசார்யரைக் கேட்க-அஸத்தான இது ரிஷிகளாகவே இருந்தது - என்று குரு பதில் சொன்னார். அந்த ரிஷிகள் யார்? என்று சிஷ்யர்கள் கேட்க; ஆசார்யன் பதில் உரைத்தார் "பிராணன்களே ரிஷிகள்" - இதனால் உலகம் உண்டாவதற்கு முன்னமே - இந்திரியங்கள் இருந்ததாகக் கூறும் வாக்யமே இந்திரியங்களை நித்யமாகக் காட்டுகின்றன. அதனால் சம்சயம் உண்டாகிறது) பூர்வ பக்ஷி சொல்கிறான்-ஜீவனுக்கு சொல்லப்படுவது போலவே - உற்பத்தி பிராணன்களுக்கும் சொல்லவேண்டும். ज्ञाज्ञौ द्वै अजौ - नित्योनित्यानां चेतन: चेतनानां......என்கிறதால் - ஜீவன் நித்யம் என்று சுருதி ஸித்தம். ஆகையால் ஜீவனைப் போல பிராணன் நித்யம் என்கிறான் பூர்வபக்ஷி.

இன்னொரு சம்சயம் - இந்த சூத்ரத்தில் प्राणा: என்பதற்கு இந்திரியங்கள் என்று அர்த்தம். अत एव प्राणा: (1-1-24ல்) பிராணன் என்கிற சப்தத்திற்கு முக்யப் பிராணனைச் சொல்லிற்று-அதாவது பரமாத்மாவை. இங்கே பஹுவசனம் प्राणा: - பிராண சப்தத்தால் இந்திரியங்களைச் சொல்லுவதைக் காண்கிறோம். உத்கிராந்தி சமயத்தில் प्राणमनूत्क्रामन्तं - பிராணனை (முக்ய பிராணனை) அனுஸரித்து எல்லாப் பிராணன்களும் செல்கின்றன - असद्वा என்று ஆரம்பிக்கும் சுருதியில் பிராண சப்தம் – இந்திரியங்களைக் குறிக்கும்.

பூர்வபக்ஷி - ஜீவனுக்கு உற்பத்தியைக் கூறும் வாக்யங்களைப் போல - இங்கே அமுக்யம் - இந்திரியங்களுக்கு உற்பத்தியை கூறும் வாக்யங்கள் அமுக்ய அர்த்தத்தில் கொண்டு - ஜீவனைப் போல நித்யம் எனக் கொள்ளவேண்டும் என்கிறான்).

**ஸ்ரீபாஷ்யம்:**—சுருதியில் எப்படி ஜீவனுடைய உற்பத்தியில்லாமையை (நித்யத்வத்தை)ச் சொல்லியிருக்கிறதோ - அதைப் போல இந்திரியங்களும் நித்யமானவை. (ஸ்ருதி

டிக்கு முன்பு ரிஷிகள் (பிராணன்கள் தான்ருஷிகள்) (அதாவது இந்திரியங்கள்) இருந்தனவாகக் கூறுகின்றன. சுருதி பலத்திருல் என்கிருன் பூர்வபக்ஷி. तथा प्राणाः - அவ்விதமே பிராணன்களும் நித்யம். (ஜீவனைப் போல - பூர்வ பக்ஷம்). சுருதி பலத்திஞலே, (ஜீவனும் நித்யம் - இந்திரியங்களும் நித்யம்) - வற்புறுத்தப்படுகிறது - (எங்கன மெனில்)

**असद्वाइदमग्र आसीत् । तदाहुः किं तदासीदि ऋषयो वा ते अग्रे असदासीत् । तदाहुः के ते ऋषय इति । प्राणा वाव ऋषयः**—(சதபத பிராஹ்மணம்—6-1-1ல்)

(இந்த உலகம் முதலில் அஸத்தாகவேயிருந்தது (அதாவது இல்லாததாகவேயிருந்தது). அப்போது என்ன இருந்தது என்று சிஷ்யர்கள் வினவ - குரு பதில் உரைத்தார். அஸத் தான இது ருஷிகளாகவே இருந்தது - யார் அந்த ரிஷிகள் என்று கேள்வி கேட்க-ஆசார்யர் பதில்" உரைத்தார். "பிராணன்களே (இந்திரியங்களே) ரிஷிகள்" என்று. (பிராணு:- பன்மை இந்திரியங்களைக் குறிப்பது) இதிலிருந்து ஜகத் உற்பத்திக்கு முன்பு இந்திரியங்களின் ஸத்பாவம் (இருப்பு) ஓதப் பட்டிருக்கிறது. பஹுவசனத்திஞல் பிராணு: - இந்திரியங்களைக் குறிப்பது.

இப்படி அர்த்தம் சுருதிக்குக் கொள்ளாமல் - இந்த மாதிரி சுருதிகளின் அர்த்தப்படி - பிரு. உ. 4-3-3ல் वायुश्चान्त-रिक्षं च: एतदमृतम् வாயுவும் அந்தரிக்ஷமும் ஆகிய இரண்டும் அம்ருதம் - அழிவற்றவை; பி. உ. 3-5-22 सैषाऽनस्तमिता देवता यद्वायुः - வாயு என்பது அழிவில்லாததேவதை - என்பதைப் போல; சிரகாலம் - நீண்டநாள் இருப்பதையிட்டு - வாயு அந்தரிக்ஷம் போன்றவை அழிவற்றதாகச் சொல்லப்படுவது போல-இங்கேயும் கௌணமாக இந்திரியங்களை நித்யமாகக் கூறுவதாகக் கொள்ளலாமே - எனில்-

இன்னொரு சுருதியில்-சத. பிரா. 1-1-ல் असद्वा इदमग्रआसीत् பிரளயத்தில் எல்லா உலகும் அழிந்தபோது இந்திரியங்கள்

இருந்ததாகக் கூறப்படுவதாலே, அப்படிக் கொள்ள முடியாது - இந்திரியங்கள் ஜீவனைப் போல நித்யம் என்றே கொள்ள வேண்டும். இந்திரியங்களுக்கு உற்பத்தியைக் கூறும் வாக்யங்கள், ஜீவனுக்கு உற்பத்தியைக் கூறும் வாக்யங்களைப் போலே-அமுக்யம் என்று கொள்ளவேண்டும். (ஸம்பூர்ண பிரளய சமயத்தில் இந்திரியங்கள் இருந்தனவென்று சுருதி கூறுவதால் ஜீவனுக்கு எப்படி உற்பத்தி அமுக்யமாக நிர்ணயிக்கப்பட்டதோ - அதைப்போல இந்திரியங்களுக்கும் உற்பத்தி அமுக்யமாகக் கொள்ளவேண்டும்). (ஜீவனைப் போல நித்யம் எனக் கொள்ளவேண்டும்). (பூர்வ பக்ஷி சொல்வது - ருஷி - இந்திரியங்களை: வேதாந்தி சொல்வது ருஷி என்கிற பதம் பரமாத்மாவைக் காண்பவனுக்குச் சொல்லப்படுகிறது).

இவ்விதம் சொல்லப்படுமாகில், நாம் (சித்தாந்தி) பதில் சொல்வது - பிராணன்களுக்கு உற்பத்தியில்லை (நித்யம்) - எப்படி ஆகாசத்திற்கு உற்பத்தியில்லை (நித்யம்) என்று சொல்கிறுமோ - அதைப்போல ஏன்? சா. உ. 6-2-1 सदेव सोम्येदमग्र आसीत् (ஸௌம்ய - ஸத் ஒன்று தான் முதல் முதலில் இருந்தது'; ஐத். 1 - 1 - 1 - आत्मा वा इदमेक एवाग्र आसीत् - ஆத்மா மாத்திரம், இது முதன் முதலில் ஒன்ருகவேயிருந்தது - இவைகளில் ஸ்ருஷ்டிக்கு முன்பே ஒன்ருகத் தான் - ஏகத்வம் - இருந்தது என்று சொல்லப்பட்டது. மு. உ. 2-1-3ல் एतस्माज्जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च இந்த பரமாத்மாவிடமிருந்து பிராணனும் மனமும் ஸர்வ இந்திரியங்களும் உண்டாகின்றன - இதிலிருந்து உற்பத்தி சொல்லப்பட்டதாகிறது; அதனல் அவை ஸ்ருஷ்டிக்கு முன்பு இருக்க முடியாது என்பதாகும். பூர்வபக்ஷி அபிப்ராயப்படுவது போல - ஜீவனுக்கு அமுக்யமாக அர்த்தம் கொண்டது போல - இங்கேயும் இந்திரியங்களுக்கு உற்பத்தியைக் கூறும் வாக்யங்கள் அமுக்யமாகவே கொள்ள வேண்டும் - आत्मवत् उत्पत्ति प्रतिषेधश्रुतीनां இந்திரியங்களை உண்டாவதாகக் கூறப்படுவதால் அவை நித்யம் என்று காட்டும் வேதவாக்யமில்லாமையாலும் - இந்திரியங்கள்

ஆகாஸம் முதலானவற்றைப் போலே உண்டாகின்றன என்றே கொள்ளவேண்டும். (नित्यत्वश्रुतीनां चावर्णनात्); சத. பிரா. 6-1-1ல் असद्वा इदमग्र आसीत् (முதன் முதலில் இந்த உலகம் அஸத்தாகவே (இல்லாததாகவே) இருந்தது. அந்த ரிஷிகள் பிராணன்களே என்கிற பதிலில்; இந்த வாக்யம் பிரளயத்தில் எல்லா உலகும் அழிந்தபோது இந்திரியங்கள் இருந்ததாகக் கூறுவதாலே - அப்படிக் கொள்ள முடியாது. பிராணாவாவருஷய: - இங்கு பிராண சப்தத்தால் பரமாத்மாவே சொல்லப்படுகிறான் - முதலில் எடுத்த காரணவாக்ய சுருதிகளிலே கூறப்படும் பரமாத்மாவே என்று கொள்ள வேண்டும்; அது கீழ்கண்ட சுருதியில் தெரியவரும். சா. உ. 1-11-5 सर्वाणि ह वा इमानि भूतानि प्राणमेवाभिसंविशन्ति प्राणमभ्युज्जिहते இந்த எல்லாப் பிராணிகளும் நிச்சயமாக பிராணனில் நுழைந்து அதில் லயமடைகின்றன - பிராணனிலிருந்து அவை வெளிவருகின்றன (மீண்டும் உற்பத்தியாகின்றன) இங்கேயும் பிராண சப்தம் பரமாத்மாவையே குறிக்கும்.

மேலும் प्राणावाव ऋषय: பிராணன்களே ருஷிகள் என்கிற சத. பிரா. வாக்யத்திலே ''ருஷி'' சப்தத்திற்கு அர்த்தம் - ஸர்வக்ஞனுகிற பரமாத்மாவே பிராண சப்த வாச்யனுக (பிராண சரீரபிருஹ்மம்) விருக்கிறுன்-முதலில் சொல்லப்பட்ட மற்ற காரண வாக்யங்களில் பரமாத்மாவே சொல்லப்படு கிறுன்-அதனுல் பிராணசப்தவாச்யன் பரமாத்மாவே ஆகும். ஸர்வக்ஞன் அவன் ஆனுல் இந்திரியங்களோ அசேதனம். அவைகளுக்கு ஸர்வக்ஞத்வம் ஒட்டாது. ருஷய: பஹூவசனம் இருப்பதால், அதேமாதிரி ப்ராணு: - என்று பஹூவசனமாகச் சொல்லப்படுகிறதே யென்ருல் - சுருதி எவ்விதம் சரியாகும்? என்கிற ஆட்சேபத்திற்கு - சூத்ரக்காரரே பதில் உரைக்கிருர் - ருஷய: - பிராணு: - பஹூவசனம் இந்திரியங்களுக்கு ஒட்டுமே ஒழிய - பரமாத்மாவுக்கு ஒட்டாது - என்கிற சந்தேகம் இதனுல் தவிர்க்கப்படுகிறது.

ஸி. ஸூ. गौण्यसंभवात् तत्प्राक्छ्रुतेश्च (2-4-2)
கௌண்யஸம்பவாத் தத்பிராக்ஸ்ருதேஸ்ச (2-4-2)

கௌணீ - (பஹீவசனசுருதி) அமுக்யமானது; அஸம்ப வாத்-(எல்லாம் அழிந்தபின்பு) பல பொருள்கள் இருக்க முடி யாததாகையாலும் தத்பிராக் ஸ்ருதே: ச - ஸ்ருஷ்டிக்கு முன் (பரமாத்மாவே இருந்தான் என்று) சுருதி கூறுகையாலும்.

பஹீவசன சுருதிகள் - பிராணு வாவ ருஷய: என்னும் வாக்யத்தில் பன்மை அமுக்யமானதே. ஏனெனில் எல்லாப் பொருள்களும் அழிந்த பின்பு அழிந்த உலகில் அடங்கிய இந்திரியங்களாகிற பல பொருள்கள் இருக்கமுடியாதாகை யால் - முதலில் எடுத்த காரணவாக்யங்களில் (அஸத்வா இதமக்ர ஆஸீத் ; ஏதஸ்மாஜ்ஜாயதே பிராணோ...... ஸர்வேந்திரியாணிச) பரமாத்மா ஒருவரே இருந்தார் என்றும், அவரிடமிருந்து பிராணனும்...உண்டாகின்றன என்று சொல்லப்படுவதாலே - பரமாத்மானவயே கௌணமாகப் பன்மை 'பிராணு:'என்று கூறுவதாகவே கொள்ளவேண்டும். इतश्च प्राणशब्द: परमात्मवचन:—

ஸி. ஸூ. तत्पूर्वकत्वाद्वाच: (2-4-3)
தத்பூர்வகத்வாத்வாச: (2-4-3)

வாச:-(பரமாத்மாவைத் தவிர்த்து மற்றபொருள்களின்) நாமதேயமானது-தத்பூர்வகத்வாத்-ஸ்ருஷ்டியை முன்னிட்ட தாகையால் (பிரளயத்தில் இந்திரியங்கள் இல்லை. (वत् - பஹீவசன அர்த்தம்)

வாச:- பரமாத்மாவைத்தவிர - மற்ற பொருள்களைக் குறிக்கும் (வாக்விஷய பூதமான) நாமதேயங்கள் எல்லாம் ஆகாசம் முதலானவற்றின் ஸ்ருஷ்டிக்குப் பிறகே ஏற்படு வதாலே, அந்த ஸ்ருஷ்டிக்குமுன் பிராணசப்தம் இந்திரியங் களைக்குறிக்காது. பிராணு: என்கிற சப்தம் பரமாத்மாவையே குறிக்கும். அதாவது, ஸ்ருஷ்டிக்கு முன்பு நாமரூபமுடைய ஆகாஸம் முதலான பொருள்கள் இல்லாமையாலே, அங்கு

முதலான இந்திரியங்களின் செயல்கள் எதுவும் ஸ்ருஷ்டிக்கு முன் பொருந்தாது - அதனால் இந்திரியங்கள் இல்லை என்றே கொள்ளவேண்டும். ஆகையால் பிராணன் பரமாத்மாவைக் குறிக்கும் — இந்திரியங்களைச் சொல்லாது. तद्धेदं तर्ह्य व्याकृतमासीत् तन्नामरूपाभ्यां व्याक्रियत - வாஸ்தவத்திலே, இந்த ஜகத் நாமரூபவிபாக இல்லாமற் இருந்தது. ஸ்ருஷ்டிக்குப் பின்பு - அது நாமரூபவிபாகமடைந்தது (பிரிக்கப்பட்டது) இதிலிருந்து ஸ்ருஷ்டிக்கு முன்பு வாக்குமுதலான இந்திரியங்களின் செயல்கள் பொருந்தாது - ஏனெனில் ஸ்ருஷ்டிக்கு முன்பு நாமரூபமுடைய ஆகாஸம் முதலான பொருள்கள் இல்லாமையாலே. அதனால் இந்திரியங்கள் இல்லை - என்று கொள்ளவேண்டும்.

ஆகவே இந்திரியங்கள் பரமாத்மாவினிடமிருந்து ஆகாசாதிகளைப்போல உண்டாகின்றன என்பது சரியாகிறது. तदानीं वागादीन्द्रियाभावाच्च तानि न सन्तीत्यर्थः - இதையே तथा प्राणाः என்னும் ஸூத்ரத்தை ஆவிருத்திபண்ணி - ஸித்தாந்த ஸூத்ரமாகவும் சொல்வதும் உண்டு. तथा प्राणाः इन्द्रियाणि वियदादिवत् उत्पद्यन्ते इति सूत्रार्थः ।

(மற்ற ஸித்தாந்த யுக்திகள் அர்த்த ஸித்தம், என்று ஸூத்ரக்காரரின் அபிப்ராயம், ஸூத்ரக்காரரின் அபிப்ரேதார்த்தத்தையே பாஷ்யக்காரர் ஸித்தாந்தமாகக் கூறினார். ஸ்ரீ வேதாந்த தேசிகர்-அதிகரண ஸாராவளியில்-பாசசப்தத்தின் மேலுள்ள பஹுவசனமானது (यथावा पूर्वमीमांसायां पाशाधिकरणे अदितिः पाशान् என்கிற வாக்யத்தை விசாரம் செய்து-) அவயவ பஹுத்வ பரமாக - கௌணமாக நிர்ணயிக்கப்பட்டதோ அவ்விதமே ப்ராணா: சப்த பஹுவசனத்தையும் கௌண அர்த்தமாகக் கொள்ளவேண்டும் (बहुवचनमिदं पाशनीत्येव नेयं அ. ஸாரா. 254)

பிரளய காலங்களில் இந்திரியகாரியங்கள் இருப்பதாகத் தெரிந்தால் இந்திரியங்களையும் பிரளய காலத்தில் இருப்பதாகக் கல்பிக்கிறோம். அவ்விதமில்லை. तल्लोपपद्यते - என்கிறார்,

## ஸப்தகத்யதிகரணம் (2-4-2)

### ஸூ. ஸூ. सप्तगतेर्विशेषितत्वाच्च (2-4-4)

### ஸப்தகதேர்விசேஷிதத்வாச்ச (2-4-4)

கதே: - (ஜீவனோடு கூட) ஸஞ்சாரம் (ஏழு இந்திரியங்களுக்கே சொல்லப்படுகையாலும்) விசேஷி தத்வாத்ச - (ஏழு இந்திரியங்கள் யாவை என்று) குறிப்பிட்டு எடுத்திருக்கையாலும் - ஸப்த - (இந்திரியங்கள்) ஏழேயாம்-

**சங்கதி**—எல்லா இந்திரியங்களும் பிருஹ்மத்தின் காரியமாக விருப்பவை என முன் அதிகரணத்தில் நிரூபிதம். அவை எத்தனையென்று இங்கு நிர்ணயிக்கப்படுகிறது ஏழா? அல்லது பதினொன்றா? ச்ருதிகளில் மாறுபட்டுச் சொல்லியிருப்பதாலே அந்த சந்தேகம். பூர்வபக்ஷி ஏழு என்கிறான்.

**ஸ்ரீபாஷ்யம்—**

அந்த இந்திரியங்கள் ஏழா - அல்லது பதினொன்றா? என்கிற விஷயம் சிந்திக்கப்படுகிறது. சுருதியில் மாறுபட்டுச் சொல்லியிருப்பதாலே, இந்த சந்தேகம். எது சரியாகும்? பூர்வபக்ஷி - ஏழு - எப்படி? गते: विशेषितत्वाच्च - பிறக்கும்போதும் உத்கிராந்தியிலேயும் கதி (சஞ்சாரம்) ஏழுக்கே ஜீவனோடு சொல்லப்பட்டிருக்கிறது - மேலும் இந்திரியங்களின் எண்ணிக்கை ஏழு என்றே கூறுகிறது. (ஜீவனோடு கூட ஸஞ்சாரம் ஏழுக்கே ச்ரோத்ராதி ஞானேந்திரியங்கள் ஐந்தும் - மனம் - புத்தி ஆக 7 எண்ணிக்கையையும் ஏழு என்று சுருதி கூறுகிறது - மு. உ., 2-1-8.

सप्तइमे लोका येषु चरन्ति प्राणा गुहाशया निहिता: सप्तसप्त - ஜீவன் தூங்கும் சமயம் - பகவானால் ஹ்ருதய குகையினுள் வைக்கப்பட்டிருப்பவையாய் - இந்த ஏழு லோகங்களிலும் ஸஞ்சரிப்பவையான எவ்வேழு இந்திரியங்கள்) என்கிற வாக்யம் - ஜீவன் பிறக்கும் போதும் இறக்கும் போதும் அவனோடுகூட எல்லா உலகங்களிலும் சஞ்சரிக்கும் இந்திரியங்களின் எண்ணிக்கையை ஏழு என்றே கூறுகிறது. "ஏழு", "ஏழு"

என்று இரட்டித்து திரும்பப்படித்தல் ஜீவர்களுக்குள்ளே யிருக்கும் பேதங்களைச் சொல்வதாகும். ஒவ்வொரு ஜீவனுக் கும் ஏழு இந்திரியங்கள் என்பதாம். இந்த பிராணன்களுக்கு கதி உண்டு. அவைகளின் ஸ்வரூபமாக காட்டப்படுகின்றன. இவைகள் ஜீவன் போகுமிடம் எல்லாம் அவன் கூடப் போகின்றன. கட. 2-6-10-ல் यदा पञ्चावतिष्टन्ते ज्ञानानि मनसा सह । बुद्धिश्च न विचेष्टेत तामाहुः परमां गति - ஐந்து ஞானேந்திரியங் களும் மனமும் புத்தியும் எப்போது விஷயாந்தரங்களில் பற்றற்று நிற்கின்றனவோ அதுவே மேலான நிலையான யோக நிலை என்று கூறுகின்றனர். இதில் யோகநிலையில் அடங்கி நிற்கும் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து ஞானேந்திரியங்களும், நினைக்கும் இந்திரியமான மன மும், நிச்சயம் செய்வதாகிற (நிச்சயமான உறுதி கொள்ளும் இந்திரியமான) புத்தியுமான இவையே அந்த ஏழு இந்திரி யங்கள் என விசேஷிக்கப்படுகின்றன (அதாவது குறிப் பிட்டு எடுக்கப்பட்டது). சரீர முடிவிலே யேற்படும் ஸஞ் சரணம் - தேகத்தை விட்டு மோக்ஷத்தையடைவது - அதையே பரமா கதி: என்று சொல்லப்படுகிறது. இந்தவித மாக ஜீவனுடன் கூட, ஜன்ம மரணங்களிலும், ஏழுக்கே கதி (ஸஞ்சாரம்) சொல்லப்பட்டதாகும். யோகதசையிலும் இந்திரியங்களை "ஞானங்கள்" என்று விசேஷித்துச் சொல்லி - அந்தக் கரணங்களை ஸ்ரோத்ரம் (கேட்பிதல்) ஸ்பர்சம், பார்த்தல் சாப்பிடுதல், நுகருதல், புத்தி - மனஸ் ஆக ஏழு என்று சொல்லப்படுகின்றன.

இன்னும் சில சுருதிகளிலே, பிரு. உ. 3. 2. 1ல் अष्टौ ग्रहाः ஆத்மாவைப் பீடிப்பவை எட்டு இந்திரியங்களாகும். யஜு. 5. 3 2 - सप्त वै शीर्षण्याः प्राणाः द्वाववाञ्चौ - தலையோடு சம்பந்தப்பட்டவை ஏழு பிராணன்களாகும். இரண்டு கீழ் நோக்கி வைக்கப்பட்டிருக்கின்றன - இத்யாதிகளில் மற்ற இந்திரியங்களை - வஸ்துக்களைக் கிரஹிக்கிர இந்திரி யங்களுக்கு பதினொன்றாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை வாக்கு, இரண்டு கைகள் - இரண்டு கால்கள் - பாயு - உபஸ்தம் - அஹங்கார - சித்தம் இத்யாதிகளை பதினொன்று

இந்திரியங்களாகக் காட்டுகின்றன. இவைகள் ஜீவனோடு சேர்ந்து செல்வதாக சுருதிகள் சொல்லவில்லை. ஆகையால் ''பிராண'' சப்தத்தின் வ்யபதேசம் கௌணம் - ஏனெனில் அவை ஜீவனுக்கு அல்ப உபசாரம் செய்வதால் மாத்திரமே ஔபசாரிகமாக - (கௌணமாக) அர்த்தம் சொல்லப்படு கிறது - (இங்கே எட்டு கிரஹங்கள் பி. உ. சொல்லப்படு கின்றன - ஐந்து இந்திரியங்கள் . மனஸ் - வாய் - கைகள் - ஒன்பது பிராணன்கள் வாக் இந்திரியம், மனம், பாயு உபஸ் தத்தையும் சேர்த்துக் கொள்வதாகும்).

இப்படி சொல்லப்படுமாகில் நாம் பதில் கூறுவோம்.

**விளக்கம்**:—(இங்கு சொல்லப்படுவது - ஜீவன் போகு மிடங்கள் எல்லாவற்றிலும் ஏழு இந்திரியங்கள் அவனுடன் கூட சஞ்சரிக்கின்றன. இதனால் கமனம் சொல்லியிருப்ப தால் மாத்திரம் ஏழு இந்திரியங்கள் என்று கூறவில்லை. सप्तप्राणा प्रभवन्ति - ஏழு இந்திரியங்களே உண்டாகின்றன என்று முன்னமே கூறப்பட்டது **स्वरूपतोऽपि विशेषिता:** என்ப தாலும் ஏழு, அவை பிராணன்கள் - இந்திரியங்கள் என ஔபசாரிகமாகக் கூறப்படுகின்றன - ஆகவே ஏழே. மேலும் கடவல்லியில் மோக்ஷத்தை அடையலாம் என்று கூறுமிடத் தில் - ஐந்து இந்திரியங்கள் - மனம் புத்தியை அடக்கினால் பரமாம் கதியேற்படுகிறது என்றும் சொல்லப்பட்டது. விசேஷித்துச் சொலலப்படுவதால் ஏழே. (பூர்வபக்ஷ சூத்ரம்) (சித்தாந்தம் அடுத்த சூத்ரம்).

ஸி. சூ. हस्तादयस्तु स्थिते नैवम् (2-4-5)

ஹஸ்தாதயஸ்து ஸ்திதேऽதோ நைவம் (2-4-5)

ஸ்திதே – ஜீவன் தேகத்தினுள் இருக்கும் போது ஹஸ்தாதய: து-கைமுதலான கர்மேந்திரியங்களும் (உப காரம் செய்கையால் இந்திரியங்களே); அத: - ஆகையால் - ந ஏவம் - இவ்விதம் இந்திரியங்கள் ஏழு என்று சொல்வது பொருந்தாது - அதாவது இந்திரியங்கள் பதினொன்றும்).

ஏழு இந்திரியங்கள் - என்பது அல்ல. இந்திரியங்கள் பதினொன்றுகும் - ஏனெனில் கைகளும் - மற்ற இந்திரியங் களும் - ஜீவன் சரீரத்தில் இருக்கும் போது - அவனுக்கு போகோப கரணங்களாக விருக்கின்றன. மேலும் ஒவ்வொரு இந்திரியத்துக்கும் தனித்தனியாக காரியங்கள் இருக் கிறபடியால் - காரியபேதம் அவைகளால் யேற்படுகிறது. (ஜீவன் சரீரத்தினுள் இருக்கும்போது - கைகால் வாக்கு பாயு உபஸ்தம் என்கிற பஞ்ச கர்மேந்திரியங்களும் அவ னுக்கு உதவுகின்றன.) நாம் பார்க்கிறோம் - காதுகளுக்கு சிரவணம்; கைகளுக்கு வேறுவிதமான காரியம் ஸம்பவிக் கிறது - பிடித்தல் - ஸபர்சித்தல் இத்யாதி.

ஆகவே அவை ஸத்யமாகவே விருக்கின்றன. अतो नैवम् ஆகவே இந்திரியங்கள் ஏழு என்பது இல்லை. अतः (ஆகையால்) - என்பதற்கு கைகள் இல்லை (ஸத்யமாக இல்லை) - என்று நினைக்கக் கூடாது. ஆகையால் கர்மேந் திரியங்களுக்கு கதியில்லை என்று கொண்டாலும், இந்திரி யங்கள் ஏழு என்பது பொருந்தாது. காரிய பேதத்தினுல் யேற் படுவதும், அத்ய வஸாயத்தினுல் மனோவிருத்தி அபிமானம், சித்தம் (சிந்தா வ்ருத்தி) பேதத்தினுல் யேற்படுவது - மனஸ் என்பது புத்தி அஹங்கார சித்த சப்தங்களால் காட்டப் படும் - ஆகவே பதினொரு இந்திரியங்களாகும். (அதாவது ஞானேந்திரியங்களும் ஏழல்ல; மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐந்தும், இந்திரியங்கள் அனைத்துக்கும் தலைமை பெற்றமனமும் - ஆகிற ஆறு ஆகும். நினைக்கும் நிலையில் மனம் எனப்படும் இந்திரியமே ஆகும். உறுதியாக நிச்சயிக் கும் பொழுது புத்தி என்றும், அபிமானம் கொள்ளும் நிலை யில் அஹங்காரம் என்று வழங்கப்படுகிறதாகையால், புத் தியோ அஹங்காரமோ தனி இந்திரியமல்ல, முற்கூறிய ஆறு ஞானேந்திரியங்கள் (மெய் வாய் கண் மூக்கு செவி மனம்), ஐந்து கர்மேந்திரியங்களான கை கால் வாக்கு பாயு உபஸ் தம், மனம் என்று - ஆக பதினொன்று இந்திரியங்களாகும். (அதனுல் ஏகதச இந்திரியாணி எனச் சொல்லப்படுகிறது.) அதனுல் பிரு. உ. 5.1.4ல் दशेमे पुरुषे प्राणाः आत्मैकादशः - என்று-

(இந்த பத்துப்பிராணன்களும் புருஷனிடமிருக்கின்றன. (ஐந்து ஞானேந்திரியங்களும் - ஐந்து கர்மேந்திரியங்களும் இவற்றை நியமிக்கும் பதினோராவது இந்திரியமாக மனமும்- ஆக ஜீவனுக்கு இந்திரியங்கள் பதினொன்று) என்று சுருதியில் சொல்லப்படுகிறது. இங்கே ஆத்ம சப்தத்தினுல் மனம் சொல்லப்படுகிறது.

கீதையில்(13 5)इन्द्रियाणि दशैकं च पञ्च चेन्द्रियगोचराः-சரீரத்தை அடைந்திருக்கும் (சரீரத்திலுள்ள) வஸ்துக்கள் சொல்லப்படுகின்றன. கண் காது மூக்கு த்வக்நாக்கு - இவை ஞானேந்திரியங்கள். வாய் கை கால் பாயு - உபஸ்தம் இவை கர்மேந்திரியங்கள். ஆக பத்து - மனம் என்கிற ஒரு இந்திரியம் ஆக பதினொன்று இந்திரியங்கள். இந்திரியங்களால் அறியக்கூடியவை சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் ஆகியவை. இந்த ஐந்தும் சரீரத்தில் இருப்பவை - ஆகவே பதினொன்று என்று ஸ்மிருதியிலும்; விஷ். பு. 1-2-45ல் तैजसानीन्द्रियाण्याहुर्देवा वैकारिका । एकादशं मनश्चात्र - இந்திரியங்கள் எல்லாமும் தைஜஸம். பத்து இந்திரியங்கள் வைகாரிகா என்று சொல்லப்படுகின்றன. பதினொன்ருவது மனம் ஆகும். இப்படி சுருதி ஸ்மிருதி ஸித்தம்-இந்திரிய கணக்கு (எண்ணிக்கை) - பதினொன்று என்பதாகும்.

இந்த பதினொன்றைவிட அதிக எண்ணிக்கை கொண்டதாகச் சொல்பவர்கள் - மனத்தினுடைய வ்ருத்தி பேதங்களை அபிப்ராயம் கொண்டு சொன்னதாகும். இன்னும் சிலர் பதினொன்றைவிட எண்ணிக்கை குறைவாகக் கொண்டதான வ்யபதேசம் அங்கங்கே காட்டப்பட்ட கமனுதிகளில் விளங்குகின்ற காரிய விசேஷங்களைக் குறிப்பாகச் சொல்வதாகும்.

(இந்த சூத்ரத்தில் अतः - ஆகையால் - இரண்டு தடவைகள் பிரயோகம். ஆத்மா சரீரத்தில் இருக்கும் வரை - கை கால்கள் முதலிய கர்மேந்திரிங்யகள் ஆத்மாவுடன் கூடவே இருக்கின்றன - ஏனெனில் அவை ஆத்மாவின் அனுபோகத்திற்கு உபகரணங்களாகும். அதனுல் இந்திரியங்கள் ஏழு

என்பது சரியல்ல - சொல்லக்கூடாது. மேல் சொல்லப்பட்ட விஷ்ணு புராண சுலோகத்தில் இரண்டு அபிப்ராயங்கள் இந்திரியங்களின் உற்பத்தி விஷயத்தில் சொல்லப்படு கின்றன - முதலாவது, தைஜஸ அல்லது ராஜஸ அஹங் காரத்திலிருந்து உற்பத்தியாகின்றன. இரண்டாவது - அது விஷ்ணுபுராணத்தின் ஆசிரியரால் ஒப்புக் கொள்ளப் பட்டது. வைகாரிக அல்லது ஸாத்விக அஹங்காரத்தி லிருந்து உற்பத்தியாகின்றன என்பதாம்).

(ஆகவே ஸரீரேஸ்திதே ஹஸ்தாதய: - என்று சூத்ரக் காரர் ஜீவன் சரீரத்திலிருக்கும் போது மாத்திரம் கர்மேந்திரி யங்கள் இருப்பதாகக் கூறியிருப்பது - ஜீவன் ஒரு சரீரத்தை விட்டு இன்னொரு சரீரத்திற்குச் செல்லும் போது, ஞான இந்திரியங்களே கூடச் செல்கின்றன. கர்மேந்திரியங் களோ வெனில் சரீரத்தோடே நாசமடைகின்றன - இது யாதவ பிரகாசமதம். அதை ஏற்று - அப்யுபகம்ய வாதரீதி யில் பதில் உரைத்தபடியாம். உண்மையில் கர்மேந்திரியங் களும் ஞானேந்திரியங்களைப் போல, ஸ்ருஷ்டிகாலத்தில் படைக்கப்பட்டு மஹா பிரளய காலம்வரை ஜீவனோடு கூடவே செல்கின்றன - என்பதே சித்தாந்தம். யதா பஞ்சா வதிஷ்டந்தே ஜ்ஞாநாநி - (கட. 2-6-10ல்) யோககாலத்தில் ஞானேந்திரியங்களை மாத்திரம் சொல்லியிருப்பது ஞானேந் திரியங்களின் பிராதான்யத்தாலே ஆகும்; இப்படி பிரமாண விரோதமில்லையாகையால் - இந்திரியங்கள் பதினொன்றே யாம். இந்திரியங்கள் ஏழே என்பது - கர்மேந்திரியங்களை இந்திரியங்களாக எடுக்கும் பிரமாணங்களுக்கும், இந்திரியங் களைப் பதினொன்று என்று எடுக்கும் பிரமாணங்களுக்கும் முரண்படுமாகையால் - சரியில்ல (கோழியாலம் ஸ்வாமி - சாரீரக காரிகாவளி).

(மனோவ்ருத்தியில் அத்யவஸாயம் அஹங்காரம் சித்தம் இவை மூன்றும் சேர்ந்ததாகையால் - இவைகளைச் சேர்க்கக் கூடாது - பதினன்கு இந்திரியங்கள் என்கிறபக்ஷத்தை ஒப்புக் கொள்வதற்கில்லை. யோகத்திலும் கமனத்திலும்

ஏழு இந்திரியங்கள் என்று சொன்னது - கர்மேந்திரியங்கள் ஞான இந்திரியங்களின் அதீனமாகக் காரியங்களைச் செய்வதால், ஞான இந்திரியங்களைப் பிரதானமாகச் சொல்வதால்-கர்ம இந்திரியங்களை நிஷேதிக்கவில்லை).

இங்கு ஸ்ரீபாஷ்ய ஸித்தாந்த சூத்ரத்தில் (ஹஸ்தாதயஸ்து) கர்மேந்திரியங்களுக்கும் ஜீவனோடு கமனம் உண்டு - என்பதற்கு ஸ்ரீபாஷ்யத்தில் **नसप्तवेन्द्रियाणि अपितु . दृश्यते हि श्रोत्रा-दीनामिव हस्तादीनामपि कार्यभेद आदानादिः इति** - என்றார் **प्राणगतेश्च** என்கிற சூத்ரத்தில உத்க்ராந்தி சமயத்தில் **सर्वाणि इन्द्रि-याणि अनुत्क्रामन्तीत्यर्थः** - இந்த சுருதியை பிரமாணமாக வைத்து எல்லா இந்திரியங்களுக்கும் ஜீவனோடு கமனம் சொல்லியிருக்கிறார் யாதவ பிரகாசர். கர்மேந்திரியங்கள் சரீரத்துடன் நசிக்கின்றன என்றார். ஆயினும் ஹஸ்தாதிகளுக்கும் இந்திரியத்வம் ஸித்திக்கிறது என்று யோஜனாந்தரம் பாஷயகாரரின் திருவுள்ளம். ஆகவே பதினொன்று இந்திரிகளுமே வேறு சரீரங்களிலும் போகின்றன என்பதே பாஷ்யக்காரரின் அபிப்ராயம் - (புரிசை - கிருஷ்ணமாச்சாரியார் ஸ்வாமி). நியாய ஸித்தாஞ்சனத்தில் ஸ்வாமி தேசிகன் அருளியது —

**इत्थं यादवप्रकाश......अत एकादश इन्द्रियाण्यपि शरीरान्तरेष्वपि अनुवर्तन्त इति भाष्यकाराभिप्रेतमिति प्रतीमः—**

கமனம் பதினொரு இந்திரியங்களுக்கும் வேறு சரீரங்களிலும் உண்டு அவை கூடப் போகின்றன-என்பதே பாஷ்யகாரரின் ஸித்தாந்தம்.

ப்ராணாணுத்வாதிகரணம் (2-4-3)

ஸி. சூ. **अणवश्च** (2-4-6)

அணவச்ச (2-4-6)

அணவ: ச-இந்திரியங்கள் அணுபரிமாணமுள்ளவை.

**ஸங்கதி:**—முன் அதிகரணத்தில் பிரமாணங்களைக் காட்டி - இந்திரியங்களின் எண்ணிக்கை நிர்ணயிக்கப் பட்டது. இந்த அதிகரணத்தில் இவற்றின் பரிமாணம் அணு என்று நிர்ணயிக்கப்படுகிறது.

பிரு. உ. 3. 5. 1. 3-ல் त एते सर्व एव समाः सर्वेऽनन्ताः - இந்த இந்திரியங்கள் எல்லாமே ஸமபரிமாணமுள்ளவையாகவும் - அளவற்றவையாகவும் உள்ளன - என்னும் வாக்யத்திலே, இந்த இந்திரியங்கள் அநன்தா: - விபு - என்று ஓதப்பட் டிருப்பதால் - இவை அளவற்ற விபுக்களே எனத்தேறு கிறது. (பூர்வ பக்ஷி சொல்வது - இந்திரியங்கள் இந்த பரிமாணமுடையன என எங்கும்ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட வில்லை. ஆகவே விபு என்கிறான்).

**சித்தாந்தம்:**—இந்த பூர்வ பக்ஷம் தவறு. பி. உ. 6-4-2ல் प्राणमनूत्क्रामन्तं सर्वे प्राणा अनूत्क्रामन्ति - வெளிக் கிளம்பும் ஜீவனைத் தொடர்ந்து செல்லும் முக்யப் பிராணனைத் தொடர்ந்து, எல்லாப் பிராணன்களும் (இந்திரியங்களும்) வெளிச் செல்கின்றன - என்று ஜீவன் மரணமடையும் போது (உத்க்ராந்தியில்), அவனோடு கூட எல்லாப் பிராணன் களும் (அதவாது இந்திரியங்களும்) வெளிச் செல்கின்றன - परिमितत्वे सिद्धे सति - கதி (சேர்ந்து) சொல்லப்பட்டிருக்கையால் இவை விபுவாக ஆகமுடியாது - அல்ப பரிமாணமுள்ளதாக விருக்கவேண்டும் - மேலும் இவை வெளிச் செல்லும் போது அருகிலிருப்பவர்களின் கண்ணுக்குப் புலப்படாமையினால் (अनुपलभ्यमानत्वात्) பிராணா: (இந்திரியங்கள்) அப்ரத்யக்ஷ மான அணுக்களே யாகும்.

இந்த இந்திரியங்களை அநந்தா: - அநந்தங்கள் என்று சொல்லியிருக்கும் சுருதிகளில் सर्वे अनन्ताः अथ योऽहैतान् अनन्तान् (விபு) उपास्ते - (பிரு. உ. 3-15-13) எவன் இந்திரியங்களை அநந்தங்கள என்று உபாஸிக்கிறானோ, (அதனால்) இவற்றை அனநதமாக (விபுவாக) உபாஸிக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறபடியாலே, உபாஸிக்கப்படும் அவற்றின்

காரியங்கள் கணக்கற்றவையாயிருப்பதையிட்டு, அவற்றை அநந்தங்கள் (விபு) என்று எனவிளங்கும். ஆகவே அநந்த சுருதியோடு - அணுபரிமாணமுள்ளதாகச் சொல்லும் சுருதிக்கு விரோதமில்லை, ஆகவே இந்திரியங்கள் அணு பரிமாணமுள்ளவையே. (காரியங்கள் (பஹுத்வம் பாஹுல் யம்) என்கிற விளக்கம் பிராணன்கள் அநந்தம் என்பதற்குக் காட்டப்படுகிறது. பஹுத்வம் - பலவிதப்பட்டது-கேட்பது தியானிப்பது - நமஸ்கரிப்பது - இத்யாதி உபாஸன அங்கங் களைச் சொல்வதாக எடுக்கலாம். இல்லாத போனால் இன்னொரு விதமாக பிராணன்கள் அநந்தம் - ஏனெனில் அவை கணக்கற்ற பிராணிகளில் தனித்தனியே யிருக் கின்றன. காரியங்களையும் உபாஸனத்தின் பலன்களையும் சொல்லலாம்.

(இன்னொரு காரணம் - ஞானேந்திரியங்கள் கர்மேந் திரியங்கள் இரண்டும் சேர்ந்து தான் போகின்றன - என்பதால்-ஈஸ்வரனுக்கு ஸர்வ காரணத்வம் ஸித்திக்கிறது - இல்லாத போனால் யேற்படாது. அதாவது இந்திரியம் ஸ்வரூபத்திலே அணு; காரியபாவத்திலே விபு, ஜீவனை அனுஸரித்து உத்க்ராந்தியிலே எல்லா இந்திரியங்களும் போகின்றன - விபுவாக இருந்தால் உத்கிராந்தி (போவது - வருவது) சொல்ல முடியாது.

(மேலும் இங்கே இந்திரியங்களின் அணுத்வம் ஜீவனுக்குச் சொல்லப்படுவதைப் போன்று - அத்யந்த ஸூக்ஷ்மமானதன்று - ஸூக்ஷ்மபரிமாணத்தை உடையது என்று சொல்வதில் நோக்கம்.)

ஸி. ஸூத். श्रेष्ठश्च (2-4-7)

ஸ்ரேஷ்டஸ்ச - (2-4-7)

ஸ்ரேஷ்டஸ்ச - முக்ய பிராணனும் (உற்பத்தியை உடையது ஆகும்).

இங்கே சந்தேகம் எழுப்பப்படுகிறது இவ்விதமாக - சா. உ. 5-1-பிராண ஸம்வாதத்தில் சரீரத்தினுடைய ஸ்திதி பிராணனுகிற (முக்ய பிராணன் என அர்த்தம்) ஹேதுவினுல் யேற்படுகிறது - அந்த முக்ய பிராணனே பிரபுவாகி மற்ற இந்திரியங்களின் பெருமையை அடைந்தன.

அதாவது இங்கு கூறப்படுவது - ஒரு சமயம் பிராணனுக்கும் - மற்ற புலன்களுக்கும் கலகம் உண்டாக தங்கள் வியவஹாரத்தை நீக்க - பிராணன் சரீரத்திலிருந்து வெளிக் கிளம்பப் பார்த்ததும், கட்டிலிருக்கும் கொழுத்த குதிரை கட்டுத்தறியில் உள்ள முளைகளை எல்லாம் பிடுங்கிக் கொண்டு புறப்படுமாப்போலே அது புறப்பட, வாக்கு முதலான புலன்கள் சரீரம் போல வதைக்கப்பட்டு, "நீ போக வேண்டாம்" என்று பிராணனைக் தடுத்து "எங்களுக்குள்ள பெருமைகள் யாவும் உன்னுடையவையே" - எனப்பிராண னைத் துதித்தன. அதனுல் பிராணன் பிரபுவாகி-மற்ற புலன் கள் பிராணனை உபாஸித்தன. உலகம் புசிக்கும் அன்ன மெல்லாம் பிராணனுக்கே யென்றும்-புசிப்பதற்கு முன்னும் பின்னும் அருந்தும் ஆசமநதீர்த்தம் அதற்கு உடையென் றும் சொல்லி, ஊணும் உடையும் அவை அளித்தன - எனப் பிராணனின் மேன்மை சாந்தோக்யத்தில் ஓதப்பட்டி ருக்கிறது. அதுவே சரீரத்தின் இருப்புக்குக் காரணமாகி- ஜ்யேஷ்டமாயும் ஸ்ரேஷ்டமாகவும் விருக்கிறது. (இதில் முக்ய பிராணனுக்கு உற்பத்தி உண்டு एतस्माज्जायते प्राण: - என்கிற சுருதி பரமாத்மாவினிடமிருந்து முக்யபிராணன் உண்டாவதாகச் சொல்கிறது).

ருக். வே. 5-X-129-2ல் आनीदवातं स्वधया तदेकम् - அந்த ஒன்று (ஏகம) தன் சொந்த மகிமையினுல் காற்றில்லாமலே மூச்சுவிட்டது - (இங்கு ஏகம் பரமாத்மா. अवातं - வாயு இல்லை - இங்கே பிரளய தசையில் வாயு இல்லை என்று ஏற்படுகிறது. முகய பிராணன் பிரளய தசையில் இருப்ப தாக சொல்லுவதற்கில்லை - பிரளய காலத்தில் வாயுவற்ற தாய், தன் சொந்த சக்தியோடு கூடியதான முக்ய பிராண

ணுகிற ஒன்றே மூச்சுவிட்டுக் கொண்டிருந்தது. அதைக் காட்டிலும் வேறு ஒன்று இல்லை - அநநம் - பிராணநம் எனப்படும் தன் காரியமாகிற மூச்சு விடுதலைச் செய்து கொண்டு இருந்ததாக ருக் வேதத்தில் படிக்கப்படுகையால் - மஹாபிரளய சமயத்தில் ஸ்வகார்ய பூத - பிராணனின் ஸத்பாவம் - प्राणरूपकार्य ஸத்பாவ பரமாகச் சொல்வதற்கில்லை அப்பொழுது பகவான் பிரளய தசையில் स्वधया பெரிய பிராட்டியோடு சேர்ந்து ஒருவனே இருக்கிறான். अनीच्छन्दः பிருஹ்மபரமாகக் கொள்ளவேண்டியது. एतस्माज्जायते பரமாத்மாவிடமிருந்து உண்டாயிற்று (மு. உ. 2 1-3) - இங்கு படிக்கப்படும் உற்பத்தி ஜீவனுக்குப் படிக்கப்படும் உற்பத்தியைப் போல - கௌணமானது என்று கொள்ள வேண்டும். ஆகவே முக்ய பிராணனுக்கு உற்பத்தி இல்லை. (பூர்வபக்ஷம்). ஸ்ருஷ்டிக்கு முன்பு ஏகத்வம் இருப்பதாகச் சொல்லப்படுவதற்கும் விரோதம் உண்டாகும். (இங்கு முக்ய பிராணன் விஷயத்தில் கார்யத்வத்தை (மூச்சுவிடுதல்) உற்பத்தியைச் - சொல்ல முடியுமாகிலும், ந்யாயாதிதேசம் பண்ணலாமாலும், இங்கு முக்யப் பிராணனைப் பற்றித் தனியாகச் சொன்னது, அடுத்த அதிகரணத்தில் முக்ய பிராண ஸ்வரூபத்தைத் தனியாக விசாரிப்பதற்கு ஸங்கதி வேண்டியதற்க்காகவே என்று கொள்ள வேண்டும்).

முண். உ 2 1-3ல் एतस्मा ज्जायते प्राण: - என்று ஓதுவதால் (பரமாத்மாவிடமிருந்து பிராணன் உற்பத்தியானது) - இங்கு பிருத்வியைப் போல - அதற்குச் சமமாக பிராணனுக்கும் உற்பத்தியைச் சொல்வதாலே மேலும், உற்பத்தியின் நிஷேதம் (அதாவது) (உற்பத்தியாகாமைக்கு நிஷேதம் இல்லாமையாலே; अभावच्च - ஸ்ரேஷ்டமான முக்ய பிராணனும் உற்பத்தியயிற்று என்று சொல்லப்படுகிறது; இல்லாத போது ஸ்ருஷ்டிக்கு முன்புயிருந்த ஏகத்வ சுருதிக்கும் விரோதம் யேற்படும். जायत एव श्रेष्ठश्च प्राण इत्युच्यते ।

अनीदवातम् - (ரு. வே. X 129-2) பிரளய காலத்தில் வாயு வற்றதாய் - சக்தியோடு முக்ய பிராணனுகிற ஒன்றே மூச்சு விட்டுக் கொண்டிருந்தது - அதைக் காட்டிலும் வேறு இல்லை

இதில் அங்கும் பிராணகம் எனப்படும் தன் காரியமாகிற மூச்சு விடுதலைச் செய்து கொண்டு இருந்ததாகச சொல்லப் படுகிறது. இந்த சுருதியில் ஜீவனுடன் சேர்ந்த பிராணனைப் பற்றிச் சொல்லவில்லை - ஆமுல் 'பிரளயதசையில் ஒருவன் பரமாத்மாதான் இருந்தான் (மஹாலக்ஷ்மியோடு கூட) என்று அர்த்தம் - ஏனெனில் अनीदवातम् - வாயுவற்றதாய் என்று சொல்லப்பட்டிருப்பதாலே. (ஜீவசம்பந்தி காற்று இல்லை = ஆனுல் பிராட்டியுடன் கூடிய பரமாத்மா தான் ஒருவமுக விருந்ததாகச் சொல்லப்படுகிருன்) (இங்கு பூர்வ பக்ஷி ருக்வேதத்தின் அர்த்தத்தைத் தவருக அர்த்தம் செய் கிருன். ஜீவனுக்குப் படிக்கப்படும் உற்பத்தியைப் போல கௌணமானது என்று கொண்டு - முக்ய பிராணனுக்கு உற்பத்தியில்லை - மூச்சு விடுதலாகிற காரியத்வாரா செய்து கொண்டுயிருந்ததாகச் சொல்கிருன்). अवातम् - வாயுவற்ற தாய் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. (ஆகவே இந்திரி யங்களைப் போல முக்யபிராணனும் உற்பத்தி உடையது என்றே கொள்ளவேண்டும்)

'ஏதஸ் மாத் ஜாயதே பிராண: மந: ஸர்வேந்திரியாணி ச (மு. உ. 2-1-3) என்கிற வேதவாக்யத்தில், முக்ய பிராண னுக்கு மற்ற இந்திரியங்களோடு கூட உற்பத்தி சொல்லப் பட்டிருக்கிறது. ந ஜாயதே ந ம்ரியதே (கட. 1-2-18) என்று ஜீவனுக்கு உபநிஷத்துக்களில் உற்பத்தியில்லை என்று கூறி யது போல் - இங்கேயும் முக்ய பிராணனுக்கு உற்பத்தி இல்லை என்று எந்த வாக்யத்திலும் கூறப்படவில்லை. ''ஸதேவ'', ''பிருஹ்மவா'' ''ஆத்மாவா'', ஏகோஹவை நாராயண ஆ ஸீத் - என்கிற சுருதிகளிலும் தன் சக்தியோடு கூடிய ஸ்ரீமந் நாராயணனே சொல்லப்படவேண்டுமாகை யால் - அந்த சுருதிகளிலிருந்து பிராணன் செய்யும் மூச்சு விடுதல் சொல்லப்படுவதாகத் தேருது. அவாதம் (வாயுவற்றதாய்) என்று அங்கேயே வாயு இல்லை என்று கூறுவதாலே - வாயு விசேஷமான பிராணனும் பிரளய காலத்தில் இல்லை என்று ஸித்தம். ஆகையால் முக்ய பிராணனும் உற்பத்தியுடையதே என்பதே சித்தாந்தம்.

வாயுக்ரியாதிகரணம் (2.4.4.)

ஸி. சூத். नवायुक्रिये पृथगुपदेशात् (2. 4. 8)

ந வாயுக்ரியே ப்ருதகுபதேஸாத் (2. 4. 8)

ப்ருதக் உபதேஸாத் - (அவற்றைக் காட்டிலும்) வேறு பட்டதாகச் சொல்லப்படுவதாலே, வாயுக்ரியே ந-(பிராணன்) வாயுவோ அதன் கிரியையோ ஆகமாட்டாது.

அதிகரண ஸங்கதி - முன் அதிகரணத்தில் முக்ய பிராணனுக்கு இந்திரியங்களைப் போல உற்பத்தி உண்டு என்று ஸ்தாபிதம். இங்கே அந்த முக்ய பிராணன் எனப் படுவது யாது என்பது நிச்சயிக்கப்படுகிறது.

सोऽयं श्रेष्टः प्राणः किं महाभूतद्वितीयवायुमात्रम्, तस्य वा स्पन्दरूपक्रिया; अथवा वायुरेव

இங்கே சந்தேகம்-ஸ்ரேஷ்டனுகிற முக்ய பிராணன் இரண்டா வதாகச் சொல்லப்பட்ட மஹா பூதமாகிற வாயுவா—அல்லது மஹா பூதத்திற்கு யேற்படும் சலன ரூப கிரியா வா - அல்லது வாயுவே ஒரு குறிப்பிட்ட அவஸ்தையை யடைந்த தாகச் சொல்லப்படக் கூடுமா? பூர்வ பக்ஷி சொல்கிறுன் - வாயுவேதான்-वायुरेवेति यः प्राणः स वायु - முக்ய பிராணன் எனப் படுவது வாயுவே ஆகும் - என்று சுருதியில் சொல்லப்படுகை யாலே, முக்ய பிராணன் வாயுவே யாகும். அல்லது பிராணத்வம் (பிராணனுகிற தர்மம்) பூதவாயுவிலே மாத்திரம் இருப்பதாக பிரஸித்தமாகத் தெரியப்பட வில்லையோ - மேலும் - "பிராணன்" என்கிற சப்தம் வாயு வினுடைய பிரஸித்தமான கிரியைகளாகிற உட்சுவாஸம் - வெளி சுவாஸம் விடுதல் - (நிஸ்வாஸாதி) இவைகளை வாயு கிரியைகள் எனக்காட்டுகின்றனவா. - எதாகும்? (இங்கு சொல்லப்படுவது - வாயுவே முக்ய பிராணன். வாயு மாத்ரத் தில் பிராணத்வ பிரஸித்தி இல்லை - வாயு கிரியையில் தான் பிரஸித்த பிராணஸப்தம் இருக்கிறது - ஆகவே பூர்வ பக்ஷி சொல்கிறுன், வாயுக்ரியை தான் பிராணன் எனலாம்).

இவ்விதமானால், அதற்கு (சிந்தாந்தி) - நாம் பதில் கூறுவோம். न वायु मात्रम्, न च तत्क्रिया - என்று சொல்லப் படுகிறது. பிராணன் வாயு மாத்திரமில்லை - அது அதனு டைய கிரியையாகவுமில்லை. ஏனெனில் पृथगुपदेशात् - அவற் றைக் காட்டிலும் வேறுபட்டதாகச் சொல்லப்படுவதாலே - பிராணன் வாயுவோ அல்லது அதன் க்ரியையாகவோ ஆக மாட்டாது. மு.உ. 2-1-3-ல் एतस्माज्जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च। खं वायुः - பரமாத்மாவிடமிருந்து, பிராணன், மனம் எல்லா இந்திரியங்களும் உண்டாயின. (இதில் பிராணன் வாயு என்று தனித்தனியாகச் சொல்லியிருப்பதால் - வாயுவே பிராணனாக முடியாது). அதே உபதேசத்தில், வித்யாஸப் படுத்தித னித் தனியாகச் சொல்லப்பட்டு - பிராணன் வாயு வின் கிரியையாகவும் இல்லை. மேலும் தேஜஸ் (பூதமாகிற அக்னி) முதலானவற்றிற்குத் தனியாக கிரியையைச் சொல் லாததால் வாயுவின் கிரியை என்றும் சொல்லக் கூடாது.

(இதனால் வாயுவோ அதன் கிரியையோ பிராணன் எனப்படுகிறது என்னும் இரு பக்ஷங்களும் சுருதி பிரமாணங் களுக்கு பொருந்தமாட்டா - அதனால் வாயுவோ அல்லது அதன் கிரியையோ பிராணனாகமாட்டாது). ய: பிராண: ஸவாயு: என்ற பிரமாணத்தை ஒட்டி, தேஹம் இந்திரியங் கள் முதலானவற்றைத்தரிக்கும் தகுதி பெற்றதொரு நிலையை அடைந்த வாயுவே பிராணனாகும். (அது வாயுவோ, கிரியையோ ஆகமாட்டாது என்பதற்குப் பிரமாணம் - ஏதஸ்மாத் ஜாயதே ப்ராணோ மந: ஸர்வேந்திரியாணிச) ய: ப்ராண: ஸ வாயு: - என்பதில் வாயுவே அவஸ்தாந்தர பேதத்தினால் பிராணனாக ஆகிறது ; ஆனால் அது, தேஜஸ் முதலானவற்றைப் போல, வேறு ஒரு தத்வமாகவில்லை. உட்சுவாஸம் நிஸ்சுவாசம் (வெளி விடுதல்) - இந்த கிரியை களிலும் கூட பிராணன் வாயுக்ரியைச் செய்கிறது. (ஸ்பந்தத இதி). அதனால் பிராணன் கிரியா மாத்திரமில்லை- அது ஒரு திரவ்யமாகும் - பிராண சப்த பிரஸித்த: திரவிய மேவ) (அதாவது பிராணன் வாயுவாக மாட்டாது. அக்னி முதலான மற்ற பூதங்களின் கிரியைத் தனித்துப் படிக்கா

மையினால் வாயுவினுடைய கிரியையும் இங்கு படித்திருக்க முடியாதாகையால் - அதுவும் பிராணனாகமாட்டாது. ஆகையால் முற்கூறியபடி-ஒரு நிலையை அடைந்த வாயுவே பிராணனாகும்.

(இங்கு கூறப்படுவது - ஸ்ருஷ்டி கிரமத்திலே - வாயுவிலிருந்து - ரூப தன்மாத்ரை (கலர் வர்ணத்துடன்) உண்டாக்கப்பட்டது. அதிலிருந்து தேஜஸ் (பூத அக்னி) உண்டாக்கப்பட்டது. ஆகவே அக்னி வாயு பூதத்தின் விகாரமாகும் ; ஆனால் வாயுவைவிட வேறானது. இதனால் காட்டப்படுகிறது - முக்ய பிராணன் வாயுவினுடைய அவஸ்தாபேதம். - அது பூத வாயுவின் ஸ்வரூபத்தோடுயிருக்கிறது). (கிரியையை உடைய திரவியத்தையே பிராணன் எனச் சொல்லப்படுகிறது).

மேலும் நீ கேள்வி கேட்கலாம் - இந்த பிராணன், பூத வாயுவின் விகாரமாக விருப்பதால் வெளி பூதத்தை விட வேறல்ல - (இந்த அக்னி வாயுவின் மாறுதலாக விருக்கிறது அதற்குப் பதிலாக - அது அவ்விதமில்லை - இவ்விதமாக (அடுத்த சூத்ரத்தில்) விளக்கப்படுகிறது. அதாவது வாயுவின் ஒரு நிலையே பிராணனாகில், வாயுவின் ஒரு காரிய நிலையான அக்னி எவ்விதம் வேறு ஒரு தனிப்பட்ட பூதமாகிறதோ, அதேவிதமாக, வாயுவின் மற்றொரு நிலையான இதுவும் வேறு ஒரு பூதமாக ஆக வேண்டிவருமே - என்கிற ஐயம் அடுத்த சூத்ரத்தில் தள்ளப்படுகிறது.

ஸி. சூ. चक्षुरादिवत्तु तत्सहशिष्ट्यादिभ्यः (2-4-9)

*சக்ஷுராதிவத்து தத்ஸஹஸிஷ்ட்யாதிப்ய:* (2-4-9)

*சக்ஷுராதிவத்து* - கண் முதலானவற்றைப் போல, (பிராணன்) (இது ஒரு உபகரணமேயொழிய, பூதமல்ல). தத்ஸஹ ஸிஷ்ட்யாதிப்ய.-(உபகரணங்களான) கண் முதலானவற்றோடு படிக்கப்பட்டிருக்கை முதலான காரணங்களால்,

இந்த பிராணன் பூதவிசேஷமில்லை. ஆனால் கண்களைப் போல, ஜீவனுக்கு முக்ய பிராணன் ஒரு உபகார கரண விசேஷமாகும். அதாவது அது அத்தகைய உபகார கரணத்வமாகவிருப்பது எதிலிருந்து தெரியவருகிறதென்றால் அதனுடைய சம்பந்தம் மற்ற இந்திரியங்களுடன் கூடச்சேர்ந்து உபகரணங்களாக விருக்கின்றன - என்று உபதேசமிருப்பதால் தெரியவருகிறது. அதாவது மனம் முதலியவைகளுடன் சேர்ந்தும் சாங்தோக்யத்தில் முக்ய பிராணனுக்கும் கண் முதலான இந்திரியங்களுடன் யேற்பட்ட கலகத்தை (யார் நமக்குள் பெரியவன் - ஶ்ரேஷ்ட: யார் என்று) ஒட்டி நடந்த ஸம்வாதத்திலே, ஜீவனின் உபகரணமாகவே பிராணன் அறியப்படும். சக்ஷுஸ்ஸுக்களுடன் (மற்ற இந்திரியங்களுடன்) கூட இந்த பிராணன் ஒரு இந்திரியம் (அதாவது ஜீவோபகரணமே ஒழிய - தனி பூதமல்ல) - எனத் தெரியவருகிறது - பிராண ஸம்வாதத்திலே.

மேலும் ஸஜாதியமான உபகரணங்களான கண் முதலானவற்றை பிராணன்கள் என்றும், பிராணனே முக்ய பிராணன் என்றும் அவைகளில் ஓதப்படுவதால் - பிராணன் மற்ற இந்திரியங்களுடன் சேர்ந்து உபகரணமே யொழிய அக்னி முதலானவற்றைப் போல வேறு ஒரு பூதமல்ல. மேலும் பிராணன் என்பதைக் குறிக்கும் அவயவங்களுக்குள்ளே, (கரணங்களுக்குள்ளே)-''ஆதி'' என்கிற (आदिशब्देन) பதபிரயோகம் காணப்படுகிறது. (ஆதி - முக்யமாக) - ஏனெனில் அத்தகைய குறிப்பிட்ட விசிஷ்யம் (கரணமாக ஓதப்படுகிறது) - இந்த சுருதிகளிலே - சா. உ. 1 - 2 - ல் अथ ह य एवायं मुख्य: प्राण: இப்போது - இதுவே முக்ய பிராணனுகும் योऽयम् मध्यम: प्राण: - ''இதுவே தான் முக்ய பிராணன் அது சரீரத்தின் மத்தியிலிருக்கிறது'' - என்பவைகளில் (इत्यादिषु) - உபகரணமாகச் சொல்லப்படுகிறது

विशिष्याभिधानम् अतिशयित्वेन् वचनम् । तेन करणत्वाति-शयावगम:—

ஆதி - நாஞுவாக்யா ப்ராயேண; ஸஹவஸத: (கூட வசிக்கிறது யென்ருல் - உத்க்ராந்தியிலும் என்று அர்த்தம் - ஜீவனுடன் கூடச் சேர்ந்து போகிறது - சரீர ஆத்மத அங்யத்வ ஸாயாதி - ச - ஆதி பதஞுப்யம்) (சுருதியில் பிராண சப்தத்திஞல் சேதனனுடைய பிராண வாயு - இந்திரியங்கள் - இவைகளின் வ்யவஹாரத்தில் சேதனனேயும் விடவும் இந்திரியத்தைப் போல - கூடச்சேர்ந்து யிருந்து சரீரத்தின் மத்தியிலிருப்பதாகச் சொல்கிறது - அதாவது ஹ்ருதயத்தின் நடுவிலே என்று அர்த்தம்.

ஆகவே பிராணன் பூதாந்திரமில்லே. தனித்தனியாக சுருதியில் சொல்லப்பட்டதால் வாயு பிராணன் தனிவாயு தத்வமில்லே. ஜீவனுக்கு உபகரணமாக கண்ணேப் போல விருக்கிறது – ஆகவே இந்த பிராணன் கண்களேப் போல ஒரு உபகரணமாக விருக்குமாஞல் - அவைகளேப் போல ஜீவனுக்கு உபயோகப்படும்படி ஒரு கிரியை (கர்மா) செய்யப்படவேண்டும் - அத்தகைய கிரியை காணப்படுவதில்லேயே! பிராணனுக்கும். ஆகையால் பிராணனே கண்ணேப் போல உபகரணம் என்று சொல்வது சரியாகாது. இந்த ஆட்சேபத்திற்கு அடுத்த சூத்ரத்தில் பதில் உரைக்கப்படுகிறது.

ஸ்ரீ. சூ. अकरणत्वाच्चनदोषस्तथा हि दर्शयति (2-4-10)

அகரணத்வாச்ச நதோஷஸ்ததாஹிதர்ஸயதி (2 4-10)

அகரணத்வாத் - ச - ந - தோஷ: - ஜீவனுக்கு பிராணஞல் உபகார கிரியை இல்லேயே எனும் தோஷமும் இல்லே ததாஹி தர்ஸயதி (சரீர இந்திரியங்களே தரிக்கையாகிற உபகாரத்தை) ஸ்ருதி காட்டுகிறதன்ருே ?

ஜீவனுக்கு உபகரிக்கையால் (உபகாரம் செய்வதால்) கண் (சக்ஷுஸ்) முதலான இந்திரியங்கள் உபகரணங்ளாகின்றன. அவ்விதம் முக்ய பிராணன் உபகரிக்காதலால் अकरणत्वात् - கரணே கிரியா। அகரணத்வம்-கிரியா ரஹிதம்.

கரணத்வம் அபாவம் என்று அர்த்தம்; கரணத்தினுல் கிரியா (செய்கை) அக்ரியத்வாத்—

यस्मात् अस्य प्राणस्य जीवं प्रति उपकारविशेषरूपक्रियाराहतत्वात् च योदोषो उदभाव्यते स दोषः नास्ति

கண் செய்யும் உபகார கிரியையைப் போல முக்ய பிராணன் ஜீவனுக்குச் செய்யும் ஒரு உபகார கிரியை காணப்பட வில்லேயே என்கிற தோஷம் - அந்த தோஷம் பொருந்தாது. ஏனெனில் சுருதியே முக்ய பிராணன் விஷயத்தில் உபகார கிரியை முக்யப் பிராணனுக்கு இருப்பதாகச் சொல்கிறபடி யால் - சுரோத்ரம் முதலிய இந்திரியங்களேயும் தேகம் முதலியவற்றையும் தரிக்கையைக் கூறுகிறபடியால் - சா. உ. 5-1-7ல் यस्मिन्नुत्क्रान्ते इदं शरीरं पापिष्ठतरमिव दृश्यते, सवः श्रेष्ठः பிரஜாபதி அந்த பிராணனுக்கும் இந்திரியங்களுக்கும் சொன்னவார்த்தை - "உங்கள் வியவஹாரத்தைத் தீர்க்க, உங்களுக்குள் யூர் சரீரத்தை விட்டு வெளிப்பட்டால் இந்த சரீரம் மிகவும் அழிவதாகக் காணப்படுகிறதோ - அதுவே உங்களுக்குள் - சிறந்ததாகும் என்கிற உபநிஷத்வாக்யமே சரீரதரிக்கையாகிற உபகாரகிரியைச் சொல்கிறது - முக்ய பிராணனுக்கு என்று சொல்லி, மேலும் சுருதி சொல்கிறது - வாக்கு முதலியவை சரீரத்தைவிட்டு வெளிக் கிளம்பினுலும், சரீரமும் இந்திரியங்களும் இருந்து கொண்டு - கடைசியாக பிராணன் வெளிக் கிளம்பும் போது, இந்த சரீரமும் இந்திரி யங்களும் சிதளத்தை (சிதறிப் போவதை) அடைகின்றன. ஆகவே பிராணன் தன் இருப்பாகிற பஞ்ச பிராண அவஸ்தையை - அதாவது பிராணன் அபானன் வியானன் உதானன் ஸமானன் ரூபத்தினுல் ஐந்து விதமான அவஸ்தைகளே யடைந்து ஜீவனுக்கு உபகாரம் செய்கிறது; (ஜீவன் விஷயத்தில் செய்யும் உபகார விசேஷத்தைச் சிருதி சொல்கிறது - பிராணன் தான் இருக்கும் வரை தேக இந்திரி யாதிகள் சிதிலமாகாதபடி காத்து-பிராணன் போய் விட்டால் சரீரம் பாபிஷ்டதரமாக ஆகிறது. இதனுல் ஜீவோப கரண த்வம் ஸித்தம். உயிர் இருக்கும் போது பிராணன் பஞ்ச

பிராணகிரியைகளையும் செய்கிறது. சரீர இந்திரிய தாரணாதி நா - ஜீவனுக்கு உபகாரம் செய்து, முக்யப் பிராணனும் கண் முதலானவற்றைப் போலவே ஜீவனுக்கு உபகரண மாகிறது என்று சொல்வது சரியாகும்-**चक्षुरादिवत् करणत्वम्.**

ननु - ஆயினும் ஆட்சேபிக்கப்படலாம் - பெயர் ஒவ்வொரு பிராணனுக்கும் வெவ்வேருக விருப்பதால், அதனதன் காரியங்களும் ஒன்றுபோல அல்லாமல், வேறு பட்டிருப்பதால் - நாமபேதாதி - காரியபேதாத் - பிராணன்-அபானன் வியானன் உதானன் ஸமானன் ஆகிய ஐந்தும் தத்வாந்தரங்களாகட்டும் - என்கிற ஆட்சேபத்திற்கு ஸூத்ரக் காரரே பதிலளிக்கிருர்.

ஸி. ஸூ पञ्चवृत्तिर्मनोवद्व्यपदिश्यते (2-4-11)

பஞ்சவிருத்திர்மனேவத்வ்யபதிஸ்யதே (2-4-11)

பஞ்ச விருத்தி - பிராணன் ஐந்து தொழிலை உடையது மனோவத் - (அதேமாதிரி) மனமும் பலவிதமான தொழில் களை உடையது - வ்யபதிஸ்யதே - பிராணன் அபானன் முதலிய ஐந்து பெயர்களால குறிக்கப்படுகிறது.

மேல் சொல்லியபடி பிராணன் அபானன் வ்யானன் உதானன் ஸமானன் என்று ஐந்து பெயர்கள் இருப்பதாலும் ஒவ்வொன்றுக்கு ஒரு தொழில் தனித்தனியே இருப்பதாலும் இவை ஐந்தும் தத்வமாகலாமோ? என்றுல் - ஆகாது - அதாவது பிராணன் ஒன்றே - அபானன் முதலானவை பிராணனைக் காட்டிலும் வேறு தத்வமல்ல-எவ்விதம்? காமம் ஸங்கல்பம் ஸந்தேஹம், த்வரை - த்வரையின்மை (உத்வேக மில்லாமலிருத்தல்) தைர்யம் - தைர்யமின்மை, லஜ்ஜை சிந்தை பயம் என்கிற பல தொழில்களையிட்டு காமம் முதலிய பல பெயர்கள் இருந்தபோதிலும் - இவை எல்லாம் மனம் தான் என்று சொல்லும்படி - அவை மனத்தைவிட வேறுபட்ட தத்வங்களல்ல - பிரு. உ. 3-5-3ல்

कामः संकल्पो विचिकित्सा श्रद्धाऽश्रद्धा धृतिरधृति ह्रीर्धी-र्भीरित्येतत् सर्वं मन एव

காமம் ஸங்கல்ப்பம் ஸந்தேகம் சிரத்தை அசிரத்தை, தைர்யம் அதைர்யம் லஜ்ஜை சிந்தை பயம் - இத்யாதி எல்லாம் மனமே - மனம்தான். நாமபேதம் காரிய பேதத்தால் ஒரே மனம் காமாதிவிருத்தி யடைந்தாலும் - தத்வாந்தர மில்லையோ அதைப்போல முக்யபிராணனும் நாமகிரியா பேதங்களால் பல அவஸ்தைகளை அடைந்தாலும், ஒன்றே பிராணன் ஆகும். அதைப்போல - சா. உ. 3-5-3

प्राणोऽपानोव्यानउदानः समानोऽन इत्येतत् सर्वं प्राण एव—

என்கிற வசனத்தால் (பிராணன் அபானன்வ்யானன் உதானன் ஸமானன் - என்னும் எல்லாம் பிராணனே - இதனால் பிராணனுடைய விருத்தி (செயல்) விசேஷங்களாகும் அபானன் முதலியவை. பிராணன் ஒன்றே - ஆகவே ஏதத் ஸர்வம் பிராணயேவ, மனத்தைப் போல் - ஒரு தத்வ மாகும் - விருத்திகளான அபானன் முதலானவை வேறு தத்வமல்ல. (மனோஜன்யம் - ஹேது - காமம் துவேஷம் இரக்கம் - பயம் இத்யாதி - மனத்தின் அவஸ்தா விசேஷம்).

சிரேஷ்டாணுத்வாதிகரணம் (2-4-5)

ஸி. ஸூ. अणुश्च (2-4-12)

அணுஸ்ச (2-4-12)

அணுஸ்ச-முக்ய பிராணன் அணுவாகும்.

**ஸங்கதி:**—ஒரு நிலையையடைந்த வாயுவே முக்யப் பிராணன் எனப்படுகிறது - என்று முந்தின அதிகரணத்தில் நிருபிக்கக்கப்பட்டது. இதில் அந்த முக்ய பிராணனின் பரிமாணம் அணு என்று நிருபிக்கப்படுகிறது.

இந்த முக்ய பிராணன் அணுவாகும். ஏனெனில் ஜீவனுக்குச் சொன்னது போலவே, இதற்கும் உத்க்ராந்தி

(சரீரத்திலிருந்து வெளிக்கிளம்புதல்) சுருதியில் சொல்லப் படுகிறது. பி. உ. 6-4-1ல் तमुत्क्रान्मन्तं प्राणोऽनूत्क्रामति-சரீரத்தை விட்டுக் கிளம்பும் ஜீவனைத் தொடர்ந்து முக்ய பிராணனும் வெளிக் கிளம்புகிறது) என்று ஜீவனின் மரணத்தின் போது சரீரத்தை விட்டுச் செல்லுகையில் இந்திரியங்களைப் போல, முக்யப் பிராணனும் ஜீவனைப் பின்தொடர்ந்து செல்வதாகக் கூறப்படுவதாலே, இந்திரியங்களைப்போல பிராணனும் அணு பரிமாணம் என்றே கொள்ளவேண்டும்.

மேலும் ஒரு அதிக சங்கை ஏற்படுகிறது - பிரு. உ. 3-3 21ல் सम एभिस्त्रिभिर्लोकैः; समोऽनेनसर्वेण - பிராணனுனது இந்த மூவுலகோடு ஸமமானது. அது இந்த எல்லாவற்றினேடும் ஸமமானது. (प्रश्न. 2-2-6ல் प्राणे सर्वं प्रतिष्टितम्–வாஸ்தவ மாகவே இந்த எல்லாம் பிராணனில் பிரதிஷ்டதம் - பிரா ணனே அதற்கு ஆதாரம். இவைகளினுல் பிராணனுக்கு விபுத்வம் ஓதப்படுகிறதே; மேலும் सर्वं हीदं प्राणेनावृतम् - இவை எல்லாம் பிராணனுல் சூழப்பட்டிருக்கின்றன - இவைகளால் பிராணனுக்கு மஹாபரிமாணம் ஓதப்பட்டிருக்கிறதே - எனலாம்.

இதற்குப் பரிஹாரம் நாம் சொல்வோம். பிராணன் (ஜீவனைப் போல) சரீரத்தை விட்டு வெளிக்கிளம்பும்போது - பரிச்சின்ன அளவுடன் (அணு பரிமாணமாக) விருப்பதாக நிச்சயிக்கப்படுகிறது. மேல் சொல்லப்பட்ட பிரஸ்ன-பிரு. உ. சுருதிகள் பரிமாணத்தைக் கூறுவதல்ல - உலகில் எல்லாப்பிராணிகளும் பிராணனுடைய அதீனமாக வாழ் கின்றன - என்கிறபடியால் பிராணனின் மஹத்வபூர்ண பெருமையை - வைபவத்தைக் கூறுகின்றன-இவை புகழ்ச்சி சொல்லாகும். அதனுல் உ த் க் ர ா ந் தி சுருதியிலிருந்து தேறும்; அணுபரிமாணத்திற்கு யாதொரு குறையில்லை. (எங்கும் பிராணுயத்த ஸ்திதியை ஸர்வ பிராணிகளும் உடையதாக விருப்பதால் - எங்கும் வியாபித்திருப்பதாக (விபுத்வம்) சொல்லப்பட்டாலும்) - கௌணமாக சுருதியில்

சொல்லப்பட்டதாகும். விபுவாக விருந்தால் உத்க்ராந்தியும் (வெளிக்கிளம்புதலும், திரும்பி சரீரத்தினுள் நுழைவதும் கூடாமற்போகும்) - அதனுல் அணுத்வவே சரியாகும்.

ஜ்யோராத்யதிஷ்டாநாதிகரணம் (2-4-6)

ஸி. சூ. ज्योतिराद्यधिष्ठानं तु तदामननात् प्राणवताशब्दात् (2-4-13)

ஜ்யோதிராத்யதிஷ்டாநம் து ததாமநநாத்
பிராணவதாஸப்தாத் (2-4-13)

ப்ராணவதா (ஸஹ) ஜ்யோதிராத்யதிஷ்டாநம் து - பிராணனை உடைய ஜீவனேடு கூட, (பிராணனை) அக்னி முதலான தேவதைகளும் அதிஷ்டிப்பதும் - ததாமநநாத் - பரமாத்மாவின் ஸங்கல்பத்தாலே (ஆகும்); சப்தாத் - சுருதி அவ்விதம் சொல்வதாலே.

**ஸங்கதி:**—இந்த நான்காம் பாதத்தில்-முன் அதிகரணம் வரை, பிராணனேடு கூடிய இந்திரியங்களுக்கு உற்பத்தி, பரிமாணம் முதலானவை நிருபிக்கப்பட்டன. இந்த அதிகரணத்தில், அக்னி முதலான தேவதைகளும், ஜீவனும் இந்திரியங்களும் முக்ய பிராணனையும் அதிஷ்டிக்கும் போது, பரமாத்ம நிரபேக்ஷமாகவே அதிஷ்டிக்கின்றனர் - என்கிற பக்ஷம் தள்ளப்படுகிறது. அதாவது அக்னிகளுக்கும், ஜீவனுககும் பிராணுதி விஷய அதிஷ்டானம் - எல்லாம் பரமாத்மாவின் அதீனம்.

(**விளக்கம்:**—முன்பு விலக்ஷண அதிகரணத்தில் ஜீவன் சரீரத்தை அதிஷ்டானத்தைப் பண்ணுவது - அவனுடைய புண்யபாபகர்ம விசேஷங்களாலே. இவைகளால் ஜீவனுக்கு சரீர அதிஷ்டானமும், இந்திரியாதிஷ்டமானது அக்னியாதி தேவதைகளுக்கும் சுருதி ஓதுகிறது. இதே மாதிரி சரீர பிராண விஷயமான இந்திரிய அதிஷ்டானம் தன்னுல் யேற்பட்டதா அல்லது - பரமாத்மா யத்தமா-என்கிற சந்தேகம். பூர்வபக்ஷி சொல்வது - ஜீவனுக்கு ஈஸ்வரன்

ஸ்வாதந்திரியம் அளித்துள்ளான். அதனால் தன் கரணங்களோடு அவன் ஸ்வயமே பிரயத்னம் செய்கிறான் - அது போல அக்னியாதி தேவதைகளுக்கும் ஜீவன்களுக்கும் சரீரத்யதிஷ்டாநம் ஸ்வாயத்தம் - பரமாத்மா தீனமல்ல - என்கிறான் பூர்வபக்ஷி).

முன் அதிகரணத்தில் முக்ய பிராணனின் (ஸ்ரேஷ்டனின்) (அதாவது இந்திரியங்களின்) உற்பத்தி எல்லாம் பரமாத்மாவினிடமிருந்து யேற்பட்டது எனச் சொல்லப் பட்டது; அத்துடன் அவைகளின் எண்ணிக்கை (ஐந்து) - அணுபரிமாணத்வம் எல்லாம் சொல்லப்பட்டது. அந்த பிராணன் முதலியவை எல்லாம் அபிமான தேவதைகளான அக்னி முதலியவர்களால் அதிஷ்டானம் செய்யப்பட்டிருக்கின்றன - என்பதும் சூ. 2-1-5ல் अभिमानिव्यपदेशस्तु विशेषानुगतिभ्याम् - (பூமி - முதலான இடங்களில் அபிமானி தேவதைகளேயே சொல்லுகிறது -(ஏனெனில்) பூமி முதலானவற்றை தேவதாசப்தத்தாலே விசேஷித் திருக்கையாலும் (அக்னி, வாக் முதலானவற்றை) அனுப்ரவேசிப்பதாகக் கூறுவதாலே - இது தெளிவாகிறது - என்று இதில் சொல்லியிருப்பதாலே - ஜீவனுக்கு தனது போக ஸாதனமாக சரீர இந்திரியங்களை அதிஷ்டித்திருப்பது - லோகஸித்தம் - கண்களால் பார்க்கப்படுகிறது. (அக்னிர்வாக்பூத்வா - முகம்பிராவிஸத் - வாயு ப்ராணோ பூத்வா நாஸிகே பிராவிஸத் (ஐத்ரே. 1-2-4ல்) அக்னி வாக்கை அதிஷ்டித்து முகத்தில் நுழைந்தது; வாயு முக்ய பிராணனை அதிஷ்டித்து மூக்கினுள் நுழைந்தது - என்று அக்னி வாயு அபிமானி தேவதைகளாக பிராணன்களையும்-முக்ய பிராணனையும் அதிஷ்டிப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் தனது அனுபவஸாதனமாக சரீரத்தையும் இந்திரியங்களையும் ஜீவன் அதிஷ்டிக்கிறான் என்பதும் லோக ஸித்தம்).

பிரு. உ. 4-1-18ல் एवमेवैष एतान् प्राणान् गृहीत्वा स्वे शरीरे यथाकामं परिवर्तते - (அவ்விதமே இந்த ஜீவன் இந்த இந்திரிய பிராணன்களை அதிஷ்டித்துக் கொண்டு - தன் சரீரத்தில்

இஷ்டப்படி சஞ்சரிக்கிருன் - என்பது சுருதி ஸித்தம். இப்படியாக - ஜீவனும் அக்னி வாயு முதலான அபிமாணி தேவதைகளும் - பிராணன்களை அதிஷ்டிப்பதற்குப் பரமாத்மாவின் உதவி தேவை இல்லையாகையால் - பரமாத்மா நிரபேக்ஷமாகவே (உதவியின்றி - சங்கல்பமின்றி) ஜீவன் - அக்னி வாயு தேவதைகள் ஸ்வயமாகவே பிராணன்களை அதிஷ்டிக்கிருர்கள் - नैरपेक्षयात् स्वायत्तम ; என்று பூர்வபக்ஷி சொல்கிருன் - இது தவருகும் - அதற்குப் பதில் (சித்தாந்தியினுல்) இவ்விதம் சொல்லப்படுகிறது.

**விளக்கம்:—**

இந்த பூர்வ பக்ஷம் பிரமாண விருத்தமாதலால - தவறு. தேவர்களும் ஜீவனும் இந்திரிய பிராணன்களை அதிஷ்டிப்பதும் பரமாத்மாவின் சங்கல்பத்தால் — அதீனத்தாலே. ज्योतिराद्यधिष्ठानमिति - பிராணனையுடைய ஜீவனேடு கூட பிராணனை அகனி முதலான தேவதைகளும் அதிஷ்டிப்பது तदामननात् - பரமாத்மாவின் சங்கல்பத்தாலே - என்பது இந்த சூத்ர அர்த்தம். प्राणवता - (பிராணஸஹ) - பிராணனுடன் கூடிய ஜீவனேடுகூட-ஜ்யோதி (அகனி) முதலான தேவதைகளும அதிஷ்டிபபதும பரமாத்மாவின் சங்கல்பத்திஞல என்று சுருதி ஓதுகிறது.

तदामननात् - (பரமாத்மாவின்) சங்கல்பத்தாலே) - அந்த பகவாஞல் சங்கல்பிக்கப்படுகிறது - आमननम्-आभिमुख्येन मननम् பரமாத்மா அவ்விதம் ஸங்கல்பிக்கிருன் - அதஞல் இச்சையுடன் கூடிய மனனம் (சிந்தித்தல்) - அதஞல் விளையப் பெறும் ஸங்கல்பத்திஞல் परमात्मनः सङ्कल्पादेव भवति - என்று அர்த்தம். எப்படி - शब्दात् - சுருதி ஆதாரத்தாலே - இந்திரியங்களின் அபிமானி தேவதைகளும - ஜீவாத்மாவும் தங்கள் தங்கள் காரியங்களில ஈடுபடுவது - பரமாத்மாவின் இச்சையிஞல - சங்கலபத்திஞல் யேறபடுவது - எப்படி ? எப்படி அந்தர்யாமி பிராஹ்மணங்களிலே - பிரு. உ. 5-7-5ல்

**योऽग्नातिष्टन् अग्नेन्तरो यमग्निर्नवेद यस्याग्निः शरीरं योऽग्निमन्तरो यमयति, सत आत्माऽन्तर्याम्यमृतः.........यो**

**वायौ तिष्टन्.........यो आदित्यो तिष्टन्.........यश्चक्षुषि-तिष्टन्.........य: आत्मनि तिष्टन्.........**

எவன் அக்னியின் உள்ளும் புறமாக நிற்கிருனே - எவனை அக்னி அறியவில்லையோ - எவனுக்கு அக்னி சரீரமோ, எவன் அக்னியில் உள் நுழைந்து நியமிக்கிருனே அவனே உனக்கும் ஆத்மா - அழிவற்ற அம்ருதன் - அந்தர்யாமி - என்று தொடங்கி, வாயுவிலும் அமர்ந்து கொண்டும், ஆதித்யனிலும் உள் இருந்து கொண்டும், ஆத்மாவினுள் இருந்து கொண்டு எல்லாவற்றையும் நியமிப்பவனுகவும் - சக்ஷுஸ் முதலான இந்திரியங்களிலும் உள் இருந்து நியமிப்பவனுகவும் - என்று பர்யாயந்தோறும் இந்த தேவர்களோடு ஜீவனோடு அவர்களால் அதிஷ்டிக்கப்படும் இந்திரிய பிராணன்களோடு வாசியற எல்லாவற்றையுமே பரமாத்மா அதிஷ்டித்து - தன் சங்கல்பத்தாலே-உள்ளிருந்து நியமனம் செய்வதாலே - எல்லாக் காரியங்களும் - உலகமும் செயல் படுகிறது. இதனுல் தேவர்களும் ஜீவனும் பரமாத்மாவின் சரீரமாதலால் பரமாத்மா ஆத்மாவாதலால் - பரமாத்மாவின் சங்கல்பமே எல்லாவற்றிற்கும் - தேவர்களுக்கும் ஜீவனுக்கும் இந்திரிய பிராணன்களைத் தரித்து நிற்பதற்க்கும் - பரமாத்மாவின் சங்கல்பமே காரணமாகும்.

மேலும் - எப்படி தை. அ. 8-1ல்

**भीषाऽस्माद्वात: पवते भीषोदेति सूर्य: । भीषाऽस्मादग्निश्चेन्द्रश्च मृत्युर्धावति पञ्चम:—**

பரமாத்மாவிடமுள்ள பயத்தாலே வாயு வீசுகிருன்; சூரியன் (தவருமல்) உதிக்கிருன் - அக்னி, இந்திரன் யமன் ஆகியோரும் செயல்படுகின்றனர். ஐந்தாவதான ம்ருத்யுவும் பரமாத்மாவிடமிருந்து பயப்பட்டு - தன் காரியத்தைச் செய்கிருன். (பயந்து ஓடுகிருன்) - எல்லோரும் பயந்து செயல்படுவதைச் சொல்கிறது. அவ்விதமே பிரு. உ. 5-8-9ல் **एतस्य वा अक्षरस्य प्रशासने गार्गि सूर्या चन्द्रमसौ विधृतौ तिष्ठत:** - கார்க்கி - இந்த பர

மாத்மாவின் ஆணையினாலேயே சூர்ய சந்திரர்கள் தரிக்கப் பட்டு, தங்கள் தங்கள் ஸ்தானங்களில் நிலை நிற்கின்றனர் - என்னும் சுருதி பரமாத்மாவின் சங்கல்பத்தாலே தேவர்கள் தரித்து நிற்பதாகச் சுருதி கூறுவதால்-தேவர்களும் ஜீவனும் இந்திரியப் பிராணன்களை தரித்து நிற்பது பரமாத்மாவின் சங்கல்பத்தாலேயாகும்.

ஸ்ரீ. சூ. तस्य च नित्यत्वात् (2-4-14)

தஸ்ய ச நித்யத்வாத் (2-4-14)

தஸ்ய—அனைத்தையும் பரமாத்மா நியமிக்கிறான் - என்பது நித்யத்வாத் ச - நித்யமாக இருப்பதாலும்

**ஸங்கதி:**—எல்லாப் பொருள்களையும் பரமாத்மா அதிஷ்டானம் செய்வதால், உள்ளிருந்து நியமனம் இத்யாதி செய்வதால் - வஸ்துக்களின் ஸ்திதியும் நித்யமாகும். அதாவது பரமத்மாவுக்கு என்றிருக்கும் பெருமை - இப்பெருமை அவனுக்கு ஸ்வரூப நிரூபகமாயிருப்பதாகையாலே, எப்பொருளும் அவனால் தரிக்கப்படாமலிருக்கமுடியாது. அது அவனுக்கு ஸ்வரூப நிரூபக தர்மமாகவிருக்கிறது. அதாவது சரீர ஆத்மபாவம் சொல்லப்படுகிறது; அதனால் நியத மேவ - என்றார். ஸ்வரூபத்தினால் பரமாத்மாவேயாகும். அந்த பரமாத்மாவின் ஸங்கல்பத்தாலே - அதிஷ்டித்து நிற்கும் அக்னி முதலானவற்றோடு வாசியுற எல்லாமே பரமாத்மாவினால அதிஷ்டிக்கப்படுகின்றன.

ஆகவே பரமாத்மாவின் சங்கல்பத்தாலேயே அக்னி முதலானவை பிராணன்களை அதிஷ்டித்து நிற்கின்றன - இதனால இந்த அதிஷ்டித்து நிற்பதாகிற - அதிஷ்டாத்ருத்வம் அவர் ஜனீயம் (விலக்கப்பட முடியாதது). தை. அ. 6-2.3 तत् सृष्ट्वा तदेवानुप्राविशत् । तदनुप्रविश्य सच्चत्यच्चाभवत् - பரம் பொருளானது உலகை ஸ்ருஷ்டித்து அதையே உள் நுழைந்து வியாபித்தது; அதை வியாபித்தபின், விகார மற்றதான சித்தாகவும் விகாரமுடைய அசித்தாகவும்

ஆயிற்று - என்பதால் பரமபுருஷனுடைய நியந்திருத்வம் ஸர்வ சித் அசித் வஸ்துக்களுள்ளே பகவத் அனுப்ரவேசத்தினால் யேற்படுவதான ஸ்வரூபானுபந்தி - தர்மம் சுருதியினால் பேசப்படுகிறது ஸ்மிருதியிலும் அவ்விதமே சொல்லப்பட்டது-கீதை 10-42-विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत्-இவ்வுலகமனைத்தையும் என் சக்தியின் ஒரு திவிலையாலே நான் தரித்து நிற்கிறேன்-என்று இந்த அர்த்தமே சொல்லப்பட்டது. இதனால் என்ன தெளிவாகிறதென்றால் அக்னி முதலானவை பிராணன்களைத் தரித்து நிற்பது பரமாத்மாவின் சங்கல்பத்தாலே ஆகும்.

## இந்திரியாதிகரணம் (2-4-7)

ஸூ. ஸூ. त इन्द्रियाणि तद्व्यपदेशादन्यत्र श्रेष्ठात् (2-4-15)

த இந்திரியாணி தத்வ்யபதேஸாதந்யத்ர ஸ்ரேஷ்டாத் (2-4-15)

ஸ்ரேஷ்டாத் அந்யத்ர - முக்ய பிராணனைத் தவிர மற்ற பிராணன்கள் எவையோ - தே இந்திரியாணி – அவையே இந்திரியங்கள்; தத்வ்யபதேஸாத் - அவற்றைக் குறித்தே இந்திரியங்கள் என்னும் வழக்கு (வ்யவஹாரம்) இருக்கையால்.

ஸங்கதி:—

இதில் முக்யபிராணனும், கண் முதலிய இந்திரியங்களுமாகிய எல்லாமே பிராணன் என்று அழைக்கப்படுகையாலே, ஜீவனுக்கும் இவை எல்லாம் உபகரணமாகயிருக்கையால், இவை அனைத்துமே இந்திரியங்கள் எனத்தக்கவை-என்கிற வாதம் இதில் தள்ளப்படுகிறது.

எல்லா இந்திரியங்களும் பிராணசப்தத்தினால் சொல்லப்படுகிறதா - அல்லது ஸ்ரேஷ்டப் பிராணன் (முக்ய பிராணன்) வ்யதிரிக்தங்களே இந்திரியங்கள் எனச் சொல்லப்படுகின்றனவா?-இதுதான் இங்கு சந்தேகம். (ப்ராண சப்த

வாச்யத்வாத் - கரணத்வாச்ச ஸர்வம் ஏவ இந்திரியாணுதி ப்ராப்தே - உச்யதே) - பூர்வபக்ஷி சொல்கிருன் - ச்ரேஷ்ட பிராணனும் இந்திரியம்தான்-மற்ற இந்திரியங்களைப் போல ச்ரேஷ்டபிராணனும் (முக்ய பிராணனும்) ஜீவனுக்கு உப கரிக்கிருன். அதனுல் எல்லா இந்திரியங்களும் (பிராண சப்த வாச்யமே) பிராண சப்தத்தால் அறியப்படுகின்றன). ஆகவே இந்திரியங்களுக்குள் முக்யமானதாகையால்—முக்ய பிராணன்; தேகத்திலிருந்து உத்கிராந்தியடையும் ஜீவனுக் குப் பிராணஸஹாயமானது ப்ரத்யக்ஷ ஸித்தம். ஆகவே முக்ய பிராணனும் இந்திரியங்களைச் சேர்ந்ததே.

(வேதாந்தியின் அபிப்ராயம் - இந்திரியங்கள் ஸாத்விக அஹங்காரத்திலிருந்து உண்டாயின. வாயு பூதம் தாமஸ அஹங்காரத்திலிருந்து உண்டயிற்று. முக்ய பிராணன் வாயுவினுடைய விகாரம்-அதனுல் அது வாயுத் தன்மையை உடைத்ததாகவிருக்கிறது. ஆகவே இந்திரியங்கள் முக்ய பிராணனைவிட வேருகும். ஆனுல் அவைகளைப் பிராண சப்தத்தால் அறிகிரேம், ஏனெனில் முக்ய பிராணனைப் போல, அவை ஜீவனின் உபகரணங்களாகும்).

**ஸ்ரீபாஷ்யம்:—**

அவ்விதமானுல், நாம் பதில் சொல்வோம் - ஸ்ரேஷ்டனுகிற முக்ய பிராணனைக் காட்டிலும் வேருன அந்த பிராணன்கள் இந்திரியங்களாகும் - ஏனெனில் அப்பேற்பட்ட வ்யபதேசமிருப்பதால். கீதை - 13-5ல் इन्द्रियाणि दशैकं च पञ्चेन्द्रियगोचराः — இந்திரியங்கள் பதினென்று - கண் காது மூக்கு த்வக் நாக்கு ஆகிய ஞானேந்திரியங்கள்; வாய் கை கால் பாயு உபஸ்தம் ஆகிற ஐந்து கர்மேந்திரியங்கள் - மனம் இது பதினென்ருவது இந்திரியம். இந்திரிய கோசரங்கள் - இந்திரியங்களால் அறியக்கூடியவை - ஐந்து - அவை சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் - இவை சரீரத்தில் இருப்பவை - இவைகளால் சக்ஷுஸ் முதலியவை தனியாகச் சொல்லப்பட்ட இந்திரியங்கள் - மனத்துடன் கூடியவை யாகும். இவைகள் இந்திரிய சப்தத்தினுல் அறியப்படு

கின்றன. அதாவது முக்ய பிராணனுக்குஇ ந்திரிய சப்த மில்லை-முக்ய பிராணனைத் தவிர்த்து மற்ற பஞ்ச பிராணன் கள் - எல்லாம் இந்திரியங்களாகும். முக்ய பிராணன் இந்திரியமல்ல. ஏனெனில் சக்ஷுஸ் முதலானவற்றைக் குறித்தே இந்திரிய சப்தம் பிரயோகப்பட்டிருக்கிறது.

(சரீர உத்கிராந்தியிலே - ஞானேந்திரியங்கள் ஜீவனோடு செல்கின்றன - கர்மேந்திரியங்கள் சரீரம் உண்டாகும் போது உண்டாகி - அழியும் போது அவைகளும் எரிக்கப் படுகின்றன - நசிக்கின்றன. உண்மையில் பதினொரு இந்திரியங்களும் வேறு சரீரத்திலும் போகின்றன - என்பது ஸ்ரீவேதாந்த தேசிகனின் அபிப்ராயம். இதுவும் ஸ்ரீபாஷ்ய காரருடைய அபிப்ராயமாகும். முக்ய பிராணன் இந்திரியங் களில் சேர்ந்ததில்லை).

ஸ்ரீ. சூ. भेदश्रुतेर्वैलक्षण्याच्च (2-4-16)

பேதஸ்ருதேர்வைலக்ஷண்யாச்ச (2-4-16)

பேதஸ்ருதே:—இந்திரியங்களையும் பிராணனையும் வேறு படுத்தி சுருதி ஓதுவதால் - வைலக்ஷண்யாத்ச - (இந்திரியங் களைக் காட்டிலும் முக்ய பிராணன்) வேறு வகைப்பட்டிருக் கையாலும், (முக்ய பிராணன் தவிர்ந்த மற்ற பிராணன்கள் இந்திரியங்களே).

மு. உ. 2-1-3ல் एतस्माज्जायते प्राणो मनः सर्वेन्द्रियाणि च - இந்த பரமாத்மாவிடமிருந்து பிராணனும் மனமும் எல்லா இந்திரியங்களும் உண்டாகின்றன-என்கிற முதலானவிடங் களில் இந்திரியங்களைவிட பிராணனை து வேறாகப் படிக்கப் படுகையால்-முக்ய பிராணன் தவிர்த்து மற்ற பிராணன்களே இந்திரியங்களாகும் என விளங்குகிறது - பிராண வ்யதிரிக் தானாமேவ இந்திரியத்வம் அவகம்யதே - பிராணனைத் தவிர்த்து மற்றவைகளுக்கே இந்திரியத்வம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. மனம் இந்திரியங்களைவிட வேறாகச் சொல்லப்பட்டாலும், மனமும் இந்திரிய எண்ணிக்கையோடு

சேர்க்கப்பட்டது என்று வேறு இடத்தில் சொல்லப்பட்டிருப்பதால் - (உதாரணமாக) கீதை 15-7ல் मनःषष्ठानीन्द्रियाणि என்பதைப் போல (மனத்தை ஆறுவதாகக் கொண்ட ஐந்து ஞானேந்திரியங்கள்.)

ஸ்ரேஷ்ட (முக்ய) பிராணனுக்கும் மற்ற கண் ச்ரோத்ரம் முதலிய இந்திரியங்களுக்கும் வைலக்ஷணயம் இருக்கத்தான் இருக்கிறது - சுஷீப்தியில் மற்ற இந்திரியங்கள் அடங்கிப் போய் - பிராணன் மாத்திரம் செயல்படுகிறதாகப் பார்க்கப் படுகிறது, அதுமாதிரி கண் முதலான இந்திரியங்களின் விருத்தி காணப்படுகிறதில்லை. மேலும் சக்ஷுஸ்வாக்கு முதலியவைகளின் காரியம் - மனத்துடன் கூட ஞானத்திற்கும் ஸாதனமாக அமைந்திருக்கிறது. ஆனால் பிராணன் விஷயத்தில் சரீரம் இந்திரியங்களைத்தாரணம் செய்கிறது. பிராணனுக்கு அடங்கியே மற்ற இந்திரியங்கள் செயல்படுகின்றன - பிராண் அதீன் தாரணத்வாத் - (தரிப்பதாலே) - இந்திரியங்கள் பிராண சப்தத்தினாலே சொல்லப்படுவதும் - இந்தக் காரணத்தாலேயாகும் (முக்ய பிராணன் எல்லாவற்றையும் தரிப்பதாலே). அவ்விதமே சுருதியும் ஓதுகிறது. (அதாவது மனம் மற்ற இந்திரியங்களை நியமிக்கிறது என்றுபடிக்கப்படுகிறது. அப்படி பிராணனை இந்திரியமாகப் படிக்கவில்லை-அதனால் பிராணன் இந்திரியமாகக் கொள்ளப் படுவதில்லை. சுசுஷுப்தியில் பிராணன் ஒன்றே செயல்படுகிறது. இந்திரியங்கள் வேலை செய்யாமல் ஒடுங்கிவிட்டிருக்கின்றன. இந்திரியங்களில் ஞானேந்திரியங்கள் ஞான ஸாதனமாகவும் கர்மேந்திரியங்கள் க்ரியாஸாதனமாக உள்ளன. மனமோ இவைகளை நியமிக்கிறது. முக்ய பிராணனே எல்லா நிலையிலும் சரீரம் இந்திரியங்கள் ஆகிய அனைத்தையும் தரித்து நிற்பதால், அது முக்ய பிராணனால் தரிக்கப்படுவதால், இந்திரியங்கள் பிராணன் என அழைக்கப்படுகின்றன.

(சுருதி அவ்விதம் ஓதுகிறது) பிரு. உ. 3-5-21ல் त एतस्यैव सर्वे रूपमभवन् तस्मादेत एतेनाख्यायन्त அந்த பிராணனின்

(இந்திரியங்கள்) அனைத்தும் இந்தமுக்ய பிராணனுக்கு சரீரமாகத் தரிக்கப்பட்டிருக்கிறது அதனாலே இந்திரியங்களை பிராணன் எனப்படுகின்றன. रूपमभवत् - அவைகள் (சக்ஷுஸ் வாக்கு முதலியவை) பிராணனின் ரூபமாக ஆயின. அதாவது எல்லா இந்திரியங்களும்முக்ய பிராணனுக்குச் சரீரமாக தரிக்கப்படுகின்றன அதனால் அவை பிராண அதீனத்தினால் செயல்படுகின்றன என்று அர்த்தம். ஆகையால் சுருதியிலும் இதே சொல்லப்பட்டதாலும், முக்ய பிராணன் தவிர்ந்து மற்ற பிராணன்களே இந்திரியங்கள் என்று ஆயிற்று.

ஸம்ஜ்ஞா மூர்த்திக்லுப்த்யதி கரணம் (2-4-8)

ஸ்ரீ. ஸூ. संज्ञामूर्तिक्लृप्तिस्तुत्रिवृत्कुर्वत उपदेशात् (2-4-17)

ஸம்க்ஞா மூர்த்திக்லுப்திஸ்துதிரிவிருத்குர்வத உபதேஸாத் (2-4-17)

ஸம்க்ஞாமூர்த்திக்லுப்தி:– நாமரூபவியாகரணம், திரிவிருத்குர்வத: து - திருவிருத்கரணம் செய்யும் பரம் பொருளுடையதேயாம்; உபதேஸாத்-அப்பரம் பொருளுக்கே நாமரூப வியாகரணம் உள்ளதாக ஓதப்படுகையால்.

**ஸங்கதி** மூன்றும் நான்காம் பாதங்களில் அண்ட ஸ்ருஷ்டியும் ஸம்ஷ்டி ஸ்ருஷ்டியும் ஜீவன்களுடைய கர்திருத்வமும் பரபிருஹ்மத்தினிடமிருந்து உண்டாயின என்று சொல்லப்பட்டது. (வாயு - அக்னி - ஆகாசம் - பிராணன் இந்திரியம் - இத்யாதி - (பஞ்சபூதங்கள்) (இந்திரியங்கள்) முதலானவையும் பிருஹ்மத்தின் காரியப் பொருள்களாகும் என்றும் காட்டப்பட்டது. சதுரானனுகிற பிரும்மா-ஸமஷ்டி ஸ்ருஷ்டியின் முதல் புருஷன் – அவனால் வ்யஷ்டி ஸ்ருஷ்டி செய்யப்பட்டு – அதாவது தேவர் மனுஷ்யர் முதலானவர்களையும், அண்டத்தில் பிருஹ்மத்தால் படைக்கப்பட்ட நான்முகனாலே செய்யப்படுவதேயாகும் – ஆயினும் ஜீவன்களுக்கு யேற்படும் இந்திரியாத்யதிஷ்டானமும் பரமாத்மா

தீனம் என்றும், கர்மாக்களும் பரமாத்மாயதீனம் என்றும் சொல்லப்பட்டது. இப்பொழுது வ்யஷ்டி ஸ்ருஷ்டியில் யேற்படும் நாம ரூபவ்யகரணமாகிற பிரபஞ்சஸ்ருஷ்டி ஸமஷ்டி ஜீவனுன ஹிரண்யகர்ப்பருடையதா அல்லது ஹிரண்ய கர்ப்ப சரீரகனுன பரமாத்மாவினுடையதா என்று விசாரிக்கப்படுகிறது.

(அதாவது எல்லாதேவர் மனுஷ்யர் முதலான ஜீவர்கள் பிருஹ்மத்தின் காரியப்பொருள்கள் எனசித்தாந்தம்). வ்யஷ்டி ஸ்ருஷ்டி என்பது ஜீவர்களுக்கு அவர்களின் உபகரணங்களை (இந்திரியம் பிராணன் இத்யாதி சரீர இந்திரியங்களைச் சேர்த்து ஸ்ருஷ்டிப்பதாகும்). பஞ்சபூத இந்திரியங்களின் ஸ்ருஷ்டி ஸம்ஷ்டி ஸ்ருஷ்டியாகும். ஜீவர்களுடைய கர்த்ருத்வமும் பரஸ்மாத் பரபிருஹ்மத்திஞல் யேற்படுவதாகும் என்கிற விஷயங்கள் பூர்வமேவ (சூத். 2-3&4) சொல்லப்பட்டதாகும். ஜீவர்களுக்கு யேற்படும் தங்கள் இந்திரியங்களின் அதிஷ்டானமும் பரமாத்மாவின் சங்கல்பத்தால் அவனுடைய அதீனத்தால் யேற்பட்டதாகும். ஜீவர்கள் தங்கள் தங்கள் கரணங்களுக்கு அதிபதியாக விருப்பதும் அவர்களுடைய சரீரத்தில் இருப்பதும் எல்லாம் பரமாத்மாதீனம் என்றும் சொல்லப்பட்டது. இங்கே சொல்லப்படுகிற விஷயம் - நாமரூப வ்யாகரணமாகிற பிரபஞ்ச வ்யஷ்டி ஸ்ருஷ்டி - அதாவது ஜீவர்கள், அசேதனப் பொருள்கள் இவைகளின் ஸ்ருஷ்டி-ஸமஷ்டி புருஷனுன பிரும்மாவினுலா அல்லது பரமாத்மாவினுலா-எந்த பரமாத்மாவிற்கு ஹிரணியகர்ப்பர் சரீரமோ, (எதுபோல ?) தேஜஸ் முதலானவைகளை சரீரமாகவுடைய பரபிருஹ்மத்தின் ஸ்ருஷ்டியாகிறது போல; ஸ்ருஷ்டியா ? (நேரான ஸ்ருஷ்டியா - பரம்பரையான ஸ்ருஷ்டியா என அர்த்தம்).

(அதாவது உலகில் எல்லாப் பொருள்களுக்கும் நாமரூபங்களை அளித்தலாகிற வ்யஷ்டி ஸ்ருஷ்டி ஸமஷ்டி ஜீவரூபனுன பிரும்மாவின் செயலாகும். பரமாத்மா திரிவிருத்கரணம் செய்கிறுர். அதேபோல அவரே நாமரூபவியாகரணமும் செய்கிறுர்;- अनेन जीवेन आत्मना अनुप्रविश्य - நாமரூபே வ்யா

கரவாணி என்பதால் அவரே செய்கிறார். ஜீவன் கரணாதிபதி- இந்திரியங்களின் அபிமானி தேவதை - இதுவும் பரமாத்மா வினால் செய்யப்படுவதாகும். ஆகவே நாமரூப வ்யாகரணம் செய்வது ஸ்வயமேவதானே செய்கிறாரா-அல்லது ஹிரண்ய கர்ப்பனுடையதா-(ஹிரண்யகர்ப்ப சரீரகனான பரமாத்மாவி னுடையதா என்றுவிசாரிக்கிறார்).

எது சரியாகும்? பூர்வபக்ஷி சொல்கிறான் - ஸமஷ்டி ஜீவனாகிற பிரும்மாவினால் பிரபஞ்ச ஸ்ருஷ்டி யேற்படு கிறது. நாமரூபங்களை அளித்தலாகிற வ்யஷ்டி ஸ்ருஷ்டி - அவனது செயலே; எப்படி? சா.உ. 6.2.3ல் अनेन जीवेनाऽऽत्मना-ऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि - என் அம்சமான இந்த நான்முகன் எனும் ஜீவனைக்கொண்டு, உள் நுழைந்து நான் நாமரூபங் களை அளிக்கக்கடவேன் – என்கிற பகவத் ஈக்ஷணம் உப நிஷத்தில் ஓதப்பட்டு - இந்த ஜீவனைக்கொண்டு – என்று தன்னிலும் வேறான நான்முகனை எடுத்து-அவனைக்கொண்டு நாமரூபவ்யாகரணம் செய்வதாகச் சொல்லப்படுகிறது சுருதி யில்-ஜீவகர்த்ருத்வஸ்ரவணாத் (ஸ்வாம் சபூத ஜீவேந ஐக்ஷத என்றே சொல்லவேண்டும்). (ஸமஷ்டி ஜீவனாகிற சது ரானன் ஸங்கல்பிக்ககிறான்-பரமாத்மாவில்லை என்பதாகும்). பரதேவதை இப்படி "ஸ்வேந ரூபேண"-நான் இந்த நாமரூப வ்யகரணத்தை என் ரூபத்தினாலே - ஸ்வேந ரூபேண-என்று சங்கல்பிக்கவில்லை - ஆனால் இப்படி சங்கல்பித்தது - என் அம்சமான நான்முகனாகிற ஜீவனைக்கொண்டு உள்நுழைந்து நான் நாமரூபங்களைச் செய்வேன் - என்பதால்-"ஜீவனைக் கொண்டு" (தன்னிலும் வேறுபட்ட நான்முகனைக்கொண்டு) செய்வேன் என அர்த்தமாகும். (பூர்வபக்ஷம்)

(இங்கு பூர்வபக்ஷிசொல்வது - ஒற்றனைக்கொண்டு அரசன் வேவு பார்க்கிறான். (அதுபோல); பிருஹ்மத்தின் நியமனத்தைக் கொண்டு, ஒற்றன்வேலை வேவுபார்க்கும் தொழிலைச் செய்வதாகச் சொல்லப்படுவதுபோல - சதுர்முக னான பிரும்மா பரமாத்மாவின் சங்கல்பத்தால் (பிரதிநிதி யாகச்) செய்கிறான். அதாவது ஸ்ருஷ்டி ஸமஷ்டி வ்யஷ்டி

என இருவகைப்படும். ஸமஷ்டி ஸ்ருஷ்டி திரிவிருத்கரண தால் யேற்படுவதாகும். மூல பிரகிருதியிலிருந்து சூக்ஷ்ம ஸ்திதியிலிருந்து ஸ்தூலமாக பஞ்சபூத ஸ்ருஷ்டிவரை யேற்படுவதாகும். வ்யஷ்டி ஸ்ருஷ்டி இது பின்னால் யேற் படுவது - ஜீவாத்மாக்களுக்கு சரீரம் யேற்படுதல் - சரீரம் பஞ்சபூதங்களின் ஸம்காதம் (சேர்க்கை). பிருஹ்மம் திரிவிருத்கரணத்திற்குக் கர்த்தா என்று ஒப்புக்கொள்ளப் படுகிறது. ஆனால் स्वेन ரூபேண - தானே தன்ரூபத்தால் - अनेन जीवेन - ஸ்வாம்சபூதனாகிற ஜீவனால் சங்கல்பித்து ஸ்ருஷ்டிக்கிறான் என்று சொல்லப்படுவதால் ஜீவன்தான் சங்கல்பிக்கிறான். ஆக ஜீவகர்த்ருக நாமரூப வ்யாகரணம் கௌணமாக பிருஹ்மத்தினிடம் சொல்லப்பட்டதாகிறது - அரசனின் வேவு பார்க்கிறவன் காரியத்திலே அரசனுடைய நியமனத்தால் (இங்கு பிருஹ்மத்தின் நியமனத்தால்) நான் முகனே ஸம்ஷ்டி ஸ்ருஷ்டி செய்கிறான் என்பதாகும்).

नामरूपे व्याकरवाणीत्येतत् अपिस्वांशभूतेन - ஜீவன் பிருஹ்மத் தின் அம்சமாதலால்-பிருஹ்மமே செய்யலாம்; ஆனால் இங்கே நான்முகனே தானேசெய்கிறான் என்பதாகும். अनेन जीवेनात्मना என்கிற வசனத்தினால் இந்த ஜீவனைக்கொண்டு - உள் நுழைந்து நான் நாமரூபங்களை அளிக்கக்கடவேன் என் பதாகும். சுருதிவாக்யத்திற்கும் இதற்கும் ஒற்றுமை ஏற்படலாம்-எதுபோல வென்றால்) ஒரு வேவு பார்க்கிறவன் "நான் சத்ருஸைன்யத்தில் புகுந்து பரபலத்தை ஸங்கலனம் (முயற்சி செய்து பிடிப்பேன்) செய்வேன்" चारेणानुप्रविश्य परबलं सङ्कलयानि - என்கிற விடத்தில் ஸங்கலனம் செய்பவன் ஒரு ஒற்றனாகவிருப்பினும், அரசன் நினைக்கிறான் - அதை தானே செய்வதாக - அதுபோல ஜீவகர்த்ருக நாமரூப வ்யாகரண மானது பிருஹ்மத்தினிடம் கௌணமாகவும் சதுர்முக பிரும்மாவிடம் முக்யமாகவும் சொல்லப்பட்டதாகும். இதைப் போல வ்யாகரவாணி - உத்தம புருஷனாகிற பரமாத்மாவின் சங்கல்பம்-நானே நாமரூபவ்யாகரணம் செய்வேன்-अनुप्रविश्य- உள்நுழைந்து - கர்த்தாவுக்கு நேரடியாகச் சொல்லப்படுவ தாலே - இந்த வார்த்தைகளுக்கு கர்த்ருத்வம் ஜீவனுக்கு

(பிரும்மாவுக்குச்) சொல்லப்படவேண்டுமானால் - பிருஹ்மத்திற்குக் கௌணமாகக் கொள்ளவேண்டும் - (लाक्षणिकस्स्यात्).

இதற்கு நாம் பதில் சொல்வது-நீ சொல்வது சரியில்லை. மேலே ராஜா - வேவு பார்க்கிறவன் என்கிற உதாரணத்திலே - அரசனுக்கும் அவனது நியமனத்தைச் செய்யும் ஒற்றனுக்கும் வித்யாஸமிருக்கிறது. அவர்களுடைய ஸ்வரூப பேதத்திலே - லக்ஷணமாக அர்த்தம் கொள்ளப்படலாம். ஆனால் இங்கே (சுருதியில்) ஜீவனுக்கு - பரமாத்மாவினுடைய அம்ஸபூதமான ஜீவனுக்கு - பரமாத்மாவின் ஸ்வரூபமாதலால் பரமாத்மா தானே செய்வதாகச் சுருதி கூறுகிறது. மேலும் அநுப்ரவேசமும் ஸ்வேநரூபேண என்று கூறியிருக்கிறபடியாலே (தானே ஸ்வ அம்சபூதேந ஜீவனால் - சங்கல்பிக்கப்படுகிறது. அதனால் லாக்ஷணியாக பிருஹ்ம விஷயத்தில் சொல்லப்படவேண்டியது — என்கிற பிரஸங்கமே இல்லை. ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் அம்ஸாம்ஸிபாவம் இருப்பதாலே - இவர்களை வெவ்வேறாகச் சொல்லமுடியாது. சரீர ஆத்மபாவத்தாலே ஜீவன் தான் நாமரூப வ்யாகரணம் செய்கிறான் என்றால் பரமாத்மா தான் செய்கிறான் என்றே தாத்பர்யம் கொள்ளவேண்டும். ஏன்? சுருதியில் जीवेन आत्मना; அதாவது ஜீவனுடைய ஈஸ்வர கர்த்ருக ஸ்வாத்மத்வ பராமர்ஸேந ஜீவகர்த்ருக संकल्पस्य முக்யார்த்தமாகும் (லாக்ஷணியாகமாட்டாது) அதைப்போல இங்கேயும் ஈஸ்வரகர்த்ருகத்வம் முக்யம் என்பது சரியாகும்.

ஏன் இவ்விதம் க்லிஷ்டகல்பனம் பண்ணவேண்டும்? न च सहयोगलक्षणेयं तृतीया-; ஸஹயோகே த்ருதீயா - என்கிற பாணினியின் சூத்ரத்தைக் கொண்டு, இவ்விடத்தில் जीवेन என்கிற மூன்றும் வேற்றுமை படிப்பதாலே - அதாவது புத்ரேணஸஹபிதா ஆகத: - புத்ரனுடன்கூட பிதா வந்து சேர்ந்தார். புத்ர சப்தத்திற்கு மூன்றும் வேற்றுமை படிக்கப் படுகிறது. தகப்பன் பிரதானன்; புத்ரன் அப்ரதானன். அதுபோல ஜீவனுடன் கூட பகவான் நாமரூபவ்யாகரணம் செய்கிறான் என்றால் பகவானுக்குப் பிரதான்யமும் பிரும்மா

வாகிற ஜீவனுக்கு அப்ரதான்யமும்-இருவர்களுமே நாமரூப வ்யாகரணம் செய்கிறார்கள் என்று சொல்லலாமே. அதனால் जीवेन மூன்றாம் வேற்றுமை - ஸஹயோகி திருதீயா என்கிற பாணினி சூத்ரப்படி, அப்ரதானமாக திருதீயா விபக்தி சொல்லப்படலாமே. பிருஹ்மமே பிரதான காரணம்-ஜீவன் அப்ரதானம் என்பதாகும். ஆதலால் ஜீவேந, என்கிறவிடத்தில் ஸஹயோகேத்ருதீயா என்ற சூத்ரத்தால் த்ருதீயா விபக்தி சொல்லலாம்.

இந்த பக்ஷம் சரியல்ல. उपपदविभक्ते कारकविभक्तस्य बलीयस्त्वात् - அதாவது உபபத விபக்தியைச் சொல்லும்போது, ஸஹ, साक முதலான பதங்கள் சேர்ந்தால் தான், அவைகளுடன் சேர்ந்த பதத்திற்கு திருதியா விபக்திவரும். காரக விபக்தியானது அவ்விதமன்று. கர்த்ரு அர்த்தத்திலும் கரணார்த்தத்திலும் வரும் திருதீயா விபக்தியானது-இதர நிரபேக்ஷையாக உடனே வருமாகையால், காரகவிபக்தியானது பலீயஸீ. ஆதலால் ஸஹயோகே த்ருதீயா என்கிற சூத்திரத்தால் வரும் திருதீயா விபக்தியை ஒப்புக்கொள்வதற்க்கில்லை. ननु - இங்கு கரணார்த்தத்தில் திருதீயா விபக்தி வருவதாகச் சொல்லமுடியாது. இது காரக விபக்தியேயாகிலும் साधकतमे करणं என்பதால், எது ஸாதகதமமாகிறதோ அதுதான் கரணமாகும். ஈஸ்வரன் செய்யும் நாமரூபத்தை जीवस्य साधकतमत्वा भावात्. பிருஹ்மம் நுழைகிறது (அனுப்ரவேசம் செய்கிறது) நாமரூப வ்யாகரணம் செய்தல் எல்லாம் பிருஹ்மகர்திருத்வம் प्रवेश व्याकरणयो: ब्रह्मकर्तृकयो; जीवस्यसाधकतमत्वाभावात्). ஆகவே ஜீவனுக்கு இந்த காரியங்களைச் செய்யமுடியாது-மேலும் சொல்லமுடியாது - ஜீவனுடைய கர்த்ருத்வம் முடிகிறது எப்போது வஸ்துக்களில் அனுப்ரவேசம் செய்கிறதோ-அப்போதே முடிந்துவிடுகிறது. ஆனால் நாமரூப வ்யாகரணம் பிருஹ்மத்தின் காரியமாகிறது, அதற்குத்தான் செய்யமுடியும் என்று சொல்லக்கூடும் (ஸர்வக்ஞத்வம் வேண்டும் ; உள்ளிருந்து நியமனம் செய்தல் இத்யாதி) 'க்தவா' என்கிற பிரத்யயத்தினால்-அனுப்ரவேஸ்ய என்கிற பதத்துடன் சேர்ந்துள்ளது ; ஸமான கர்த்ரு

கதவப்ரதீதே:- அனுப்ரவேஸமும் நாமரூப வ்யாகரணமும் இரண்டும் ஒரே தத்வத்தினுல் செய்யப்படுகிறது - செய்பவர் ஒருத்தர் (அதாவது பிருஹ்மம்). அதாவது பிருஹ்மம் தான் செய்கிறது - ஜீவேநஸஹ (யோகம்) - ஜீவனுடன் கூடி) कर्तृकत्वप्रतीते:) ஜீவனும் பிருஹ்மத்தின் அம்சமாயினும் ஸ்வ ரூபத்திலே தனியாக விருக்கிருன் - பரமாத்மாவின் ஸ்வ ரூபத்திலிருந்து வேறுபட்டவனுக விருக்கிருன். अनेन जीवेन என் அம்சமான இந்த (நான்முகன் எனும்) ஜீவனைக் கொண்டு உள்நுழைந்து நான் நாமரூப வ்யாகரணம் செய் வேன் - என்பதால், ஜீவனை வெளிப் பொருளாகக் காட்டப் படுகிறது.

(பாணீனியின் இலக்கணப்படி ஜீவேந என்கிற மூன்ரும் வேற்றுமைபற்றி இங்கு விஷயசர்ச்சை. மூன்ரும்விபக்தி ஒரு கர்த்தவையோ அல்லது காரகனின் கர்த்தாவையோ அல்லது ஏதாவது வேறு ஒரு வஸ்துவுடனே-மனிதனுடனே கௌண மாகச சம்பநதம் சொல்லப்படும். இங்கே வாதிக்கப்படுகிறது ஜீவன் கர்த்தாவாகமாட்டான் - அல்லது வேறு ஒருத்தனின் (அதாவது பிருஹ்மத்தின்) (காரகனின்) கர்த்தாவாகச் சொல்ல முடியாது. பிருஹமத்துடன் சம்பந்தத்தையும். கௌணமாகச் சொல்லக்கூடாது). க்வா என்கிற பிரத்யயம் அநுப்ரவிஸ்ய என்கிற பதத்துடன் சேர்ந்து கூடவரும்).

ஆகையால் ஹிரண்ய கர்ப்பரால் ஸ்ருஷ்டிக்கப்படு கிறது என்ருல் நாம ரூப வ்யாகரணம் செய்யப்படுகிறது. இந்தக் காரணத்தினுல் ஸ்மிருதிகளிலும் சதுர்முக பிரும்மா வின் ஸ்ருஷ்டி பிரகரணத்திலே, நாமரூபவ்யாகரணம் விபர மாகச் சொல்லப்பட்டு - உதாணமாக இந்த ஸ்மிருதி வாக்யத்திலும் கூறப்படுகிறது. நாமரூபவ்யாகரணம் சதுர்முக பிரும்மாவினுல் கர்த்ருத்வம் சொல்லப்படுகிறது. எப்படியெனில் விஷ். புராணத்தில் (1-5-63)

**नामरूपं च भूतानां कृत्यानां च प्रपञ्चनम् वेदशब्देभ्य एवाऽऽदौ देवादीनां चकार सः—**

அவர் வேதசப்தங்களிலிருந்து தேவர்கள் முதலானவர்களின் நாமரூபங்களேயும் அவர்களுடைய வேலேகளேயும் செய்தார்.

அவ்விதம் சொல்லப்படுமாகில்-நாம் பதில் சொல்வோம். संज्ञामूर्तिकलुप्तिः - नामरूपव्याकरणम् - இங்கு நாமரூப வ்யாகரணம் என்று அர்த்தம் து சப்தம் மேல் சொன்ன பூர்வ பக்ஷத்தை அதாவது ஹிரண்ய கர்ப்பரின் பக்ஷத்தை நிராகரித்து வேருக பரமாத்மாபரமாகச் சொல்லுகிறது. ஸம்க்ஞா மூர்த்தி க்ல்ருப்தி: - நாமரூப வியாகரணம் என அர்த்தம் - திரிவிருத் கரணம் பரமாத்மாவிஞல் செய்யப்படுவதாகும். அந்த பரமாத்மாவிஞலேயே நாமரூப வ்யாகரணமும் செய்யப்படுவதாக உபதேசமிருக்கிறது. (அதாவது இரண்டிற்கும் ஏககர்த்ருத்வம் - திரிவிருத்கரணம் செய்பவரே நாமரூபவியாகரணம் செய்கிருர்). திரிவிருத்கரணம் என்கிற செயலிஞல் தான் நாமரூபவியாகரணம் பேசப்படுகிறது. திரிவிருத்கரணம் செய்பவர் பரமாத்மாவேயாகும்.

**सेयं देवतैक्षत हन्ताहमिमास्तिस्रो देवता अनेन जीवेनाऽऽत्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि; तासां त्रिवृतं त्रिवृतमेकैकां करवाणि—इति समानकर्तृकत्वप्रतीतेः—**

நாமரூப வ்யாகரணம் திரிவிருத்கரணம் செய்பவரிடமிருந்து தான் யேற்படுகிறது - "மேலே சொல்லப்பட்ட தேவதை தனக்குள் (ஸங்கல்பித்தது) பார்த்தது - நானே இந்த மூன்று (அக்னி அப்பு ப்ருத்வி) தேவதைகளிலும் ஜீவனுக நுழைந்து என் அம்சமான இந்த (தேவதைகளில்) ஜீவனேக் கொண்டு உள் நுழைந்து நாம ரூபவ்யாகரணம் செய்வேன் - என்று நினைத்து தீ, நீர், பூமி என்னும் மூன்று பூதங்களேயும் ஒன்ருேடொன்று சேர்ப்பதாகிற திரிவிருத்கரணத்தைச் செய்வதாக ஓதப்படும் பிருஹ்மமே நாமரூபவியாகரணத்தை செய்வதாக ஓதப்படுகிறது - நாமரூபவியாகரணம் என்பதாகிற வியஷ்டி ஸ்ருஷ்டி பரமாத்மாவின் செயலாகும் - இதஞல்

ஸமான - நாமரூபவ்யாகரணம் திரிவிருத்கரணம் இரண்டுக்கும் ஒரே கர்த்தா - பரமாத்மாதான் எனப்பேசப்படுகிறார். திருவிருத்கரணம் சதுர்முக பிரும்மாவினால் செய்ய முடியாது. ஏனெனில் அவர் அண்டத்துக்குள் வசிக்கிறார். (பிரபஞ்சத்தை அண்ட (முட்டை வடிவமாக) வடிவமாகச் சொல்லப்படுகிறது).

திரிவிருத்கரணம் - தேஜஸ் அப்பு பூமி ஆகியவைகளை ஏற்கனவே மூன்று மூன்றாக பிரிந்தவை - அவைகளை ஒன்று சேர்த்து - அதிலிருந்து உண்டாகிறது அண்ட வடிவமான இந்த உலகம் - என்று சொல்வதாக அர்த்தம், திரிவிருத்கரணம் செய்யாமல் தனித்தனியாக உள்ள பஞ்சபூதங்களால் பிரும்மாண்டம் ஸ்ருஷ்டிக்கப்பட மாட்டாது. समान कर्तृत्व ஸ்ரவணாத் - ஒரே கர்த்தாவாக இரண்டுக்கும் சொல்லப்படுவதால் பரபிருஹ்மமே நாமரூப வ்யாகரணத்தையும் (திரிவிருத்கரணத்தையும்) செய்தது ஆகும். பிரும்மாண்டத்தை ஸ்ருஷ்டித்த பிறகு அதில் உண்டானவன் ஹிரண்யகர்ப்பரான (பிரும்மா). அவனால் இரண்டையும் செய்யமுடியாது - அவனுக்கு ஏககர்த்ருத்வம் ஸம்பவிக்கமாட்டாது - பரமாத்மாவுக்குத்தான் பொருந்தும்.

அவ்விதம் சொல்லப்படுமாகில், இந்த வாக்யம் எப்படி பொருந்தும் என மீண்டும் ஆட்சேபிக்கப்படுகிறது. இந்த வாக்யம் - अनेन जीवेन - நானே ஜீவனாகச் சொல்லும்படி உள் நுழைந்து நாமரூபவ்யாகரணம் செய்வேன். இங்கே आत्मना जीवेन - ஆத்மனா என்பதற்கு சரீரம் என்று அர்த்தம்-நானே என்று சொல்லும்படி இந்த ஜீவனைக்கொண்டு - அந்த அந்த தேவ மனுஷ்யர் முதலான ஜீவர்களுடன் கூடின தேகத்துடன் शरीरके-णैव जीवेनेति-என்று அர்த்தம். அதாவது ஸமாநாதி கரணத்தினால் ஜீவசரீரகனாகிற பரமாத்மாவே ஜீவசப்தத்தினால் காட்டப்படுகிறான் - मया (பகவானால்); आत्मना जीवेन - என்று ஜீவனாகிற நான்முகனைக் கொண்டு - தன்னோடு ஒரே வேற்றுமையில் படிக்கிறபடியால் ஜீவனைச் சரீரமாகக் கொண்ட பரமாத்மாவே ஜீவசப்தத்தால் படிக்கப்படுகிறான் என்று தெரியவருகிறது.

**விளக்கம்: —**

(அதாவது இங்கு சொல்லப்படுவது - பூர்வபக்ஷி நான் முகனே பரமாத்மாவின் அம்சமாக - பிருஹ்மம் தானே செய் வதாகக் கூறியிருப்பதால்-நான்முகனே நாமரூபவ்யாகரண மாகிற வ்யஷ்டி ஸ்ருஷ்டியைச் செய்கிறன் என்றன்-அதற்கு சித்தாந்தியின் பதில - திருவிருத்கரணம் செய்தவன் தான் நாமரூபவ்யாகரணம் செய்வதாக சா. உ. சொல்லப்பட்டிருக் கிறது. விஷ்ணு புராணத்திலும் 'நாநாவீர்யா: ப்ருதக்பூதாஸ் ......அண்டமுத்பாதயந்தி தே - மஹாந் தொடக்கமாக பூதங் கள அனைத்தும் தனித்தனியேயிருந்து ஒன்று சேராமல் இருந்தபடியால பிரஜைகளை ஸ்ருஷ்டிக்கப்பட முடியவிலலை.

பரமாத்மா அந்த பூதங்களை ஒன்று சேர்த்து - அண்டத்தை உண்டாக்கினர். திரிவிருத்கரணம் செய்யப் பட்ட பூதங்களிலிருந்தே அண்டம் (உலகம்) உண்டாகிறது. அந்த அண்டத்தில் - तस्मिन् जज्ञे स्वयं ब्रह्मा सर्वलोक पितामहः - (மநு 1–9ல்) எல்லா உலகிற்கும் பிதாமஹஞன பிரும்மா (பிரமன் - சதுர்முகன்) உண்டானர். இதனல் அண்டம் உண்டான பின்பு சதுர்முகனின் பிறப்பு சொல்லப்படுகிறது. அதனல் பிரமன் திரிவிருத்கரணத்தைச் செய்திருக்கமுடி யாது. பிருஹ்மமே திரிவிருத்கரணத்தையும், நாமரூபவ்யா கரணத்தையும் செய்ததாக ஆகும். அப்படியானல் अनेनजीवेन (இந்த ஜீவனைக் கொண்டு) என்கிறது எப்படி பொருந்தும் - இங்கே ஜீவன் சதுர்முகன் ஆகும் (தன்னிலும் வேறன சதுர்முகனைக் கொண்டு) - ஆத்மநா அனுப்ரவிஸ்ய ஜீவ தேகத்துடன் கூடிய சதுர்முகனில் உள் நுழைந்து - பிரும்மா சரீர பரமாத்மா - ஜீவனுகிற நான்முகனைத் தன் னேடு ஸாமாநாதிகரணத்தினுலே ஒரே வேற்றுமையாக படிப்பதால்-ஜீவனை (இங்கே பிரமனைச்) சரீரமாகக் கொண்ட பிருஹ்மமே ஜீவசப்தத்தால் படிக்கப்படுகிறது எனத்தெளி யவும்).

**சித்தாந்தம்:—**எப்படி சா. உ. 6-2-3ல் . 4ல் - तत् तेज ऐक्षत...तदपोऽसृजत...ता आपऐक्षन्त...ता अन्नमसृजन्त...அக்னியானது

ஸங்கல்பித்து ஜலத்தையும் - ஜலமானது ஸங்கல்பித்து பூமியையும் ஸ்ருஷ்டித்ததாகச் சொன்னது - அக்னி ஜலம் முதலானவற்றைச் சரீரமாகக் கொண்ட பிருஹ்மமே ஸங்கல் பித்து ஸ்ருஷ்டித்தது என்று கொண்டு, இங்கும் ஜீவ ஸமஷ்டியாயிருக்கும் புருஷனை நான்முகனைச் சரீரமாகக் கொண்ட பிருஹ்மமே நாமரூப வ்யாகரணத்தைச் செய் வதாகக் கொள்ளவேண்டும் - இதனால் तेज: प्रभृतिशरीरकं – பரமாத்மா ஆகிறான். ஆகையால் ஜீவஸம்ஷ்டிபூதஹிரண்ய கர்ப்பர் (பிரும்மா)-அவரைச் சரீரமாகவுடைய பரமாத்மாவே அவருடைய கர்மமே நாமரூப வ்யாகரணமாகும். (அதா வது திரிவிருத்கரணம் - நாமரூபவ்யாகரணம் ஆகிற இரண்டுக்கும் பரமாத்மாவே கர்த்தவாகும்).

இப்படிச் சொல்வதால் जीवेन आत्मना अनुप्रविश्यनामरूपे व्याकरवाणि ஜீவனாகிற என்றாலே என்று ஜீவனாகிற நான்முகனை யும் தன்னையும் ஸமாநாதிகரணத்தாலே ஒரே வேற்றுமை யில் படித்து - சரீர ஆத்மாபாவத்தை முன்னிட்டு - முக்யார்த்தமாகவே - பரமாத்மா ஆகிறான். உத்தம புருஷ னுடைய விஷயமாகவே முக்யார்த்தமாகவே சொல்லப்படு கிறான். (அக்லிஷ்ட முக்யார்த்தவேவ); அநேந ஜீவேந (சா. உ. 6-3-2) (இந்த ஜீவனால்) என்று நான்முகனைத் தன்னிலும் வேறுபட்டவனாக - பரமாத்மா சொல்லியிருப் பதும்; இந்த நான்முகனை சரீரமாகக் கொண்ட என்றால் (मया) என்று பொருள்படும்படி - எல்லாம் சரியாகும். பிரவேசமும் (உள் நுழைதலும்) நாமரூப வ்யாகரணமும் ஸமான கர்த்ரு கத்வம் (ஒரே கர்த்தாவினால் செய்யப்பட்டதாகும்) என் பதும் கிடைக்கப்படுகிறது. "உள் நுழைந்து நாமரூபங் களை அளிக்கக்கடவேன்" - என்று பரமாத்மா சங்கல்பித்து தானே நாமரூபவ்யாகரணம் செய்வதாகத் தன்மையில் பேசி யிருப்பதும் - இப்படிக் கொண்டால்-முக்யார்த்தமாகிவிடும். நான்முகனின் ஸ்ருஷ்டியைக் கூறும் பிரகரணத்திலே तस्मिन्नण्डेऽभवद्ब्रह्मा सर्वलोकपितामह: - என்கிற அண்டம் பிருஹ்மா பிரகரணத்திலே - நான்முகனைச் சரீரமாகக் கொண்ட பரமாத்மாவே ஸ்ருஷ்டிப்பதால் பிரகரண விரோத

மும் இல்லை ஆகவே பரமாத்மாவே நாமரூபவ்யாகரணம் செய்தார் என்பது சரியாகும்.

சதுர்முக சரீர பரமாத்மா - அவராலேயே தேவாதி (மனுஷ்யர்) முதலான விசித்திரஸ்ருஷ்டி செய்யப்பட்டது. சதுர்முகஸ்ருஷ்டி பிரகரணத்திலே நாமரூப வ்யாகரணம் செய்ததும் சொலலப்பட்டதும் சரியாகும் (பொருந்தும்)

ஆகையால் सेयं देवता - அந்த மேலான தேவதை (பார்த்தது - ஸங்கல்பித்தது); இந்த வாக்யத்திற்கு அர்த்தம் யாதெனில் - அயம் (இதுதான்) அர்த்தம் - இந்த தேஜஸ் ஜலம் அந்ந (பூமி) ரூபமாகவுள்ள மூன்று தேவதைகளில் अनेन जीवेन - இந்த ஜீவனைக கொண்டு - ஜீவனுகிற எனமூலே (நான்முகனுகிற பிரும்மாவையும் தன்னையும் ஸமநாதி கரணத்திஞல் ஒரே வேற்றுமையில் படித்து) சரீர ஆத்ம பாவத்தையிட்டு - ஜீவஸமஷ்டி (புருஷனுகிற நான்முகனைச் சரீரமாகக் கொண்டு) விசிஷ்டேந ஆத்மநா அநுப்ரவிஸ்ய - சதுர்முக சரீர பரமாத்மா உள்நுழைந்து நாமரூபவ்யா கரணம் செய்தலும் - (मया - என்றுலே) என்று பரமாத்மா சொல்லியிருப்பதும் - பரமாத்மா ஒருவனே (ஏககர்த்ருத்வம்) செய்கிறன் என்று கூறியிருப்பதும் எல்லாமே பொருந்தும் சரியாகும் - தேவாதி (மனுஷ்ய முதலான) விசித்திர ஸ்ருஷ்டியையும் - அந்த அந்த வர்க்கத்திற்கு நாமரூபங்களை அளிப்பதாகிற காரியமும் சொல்லப்பட்டதாகும். ஆகவே தேஜஸ் அப்பு - ப்ருத்வி திரிவிருத்கர்ணம் ஆவதற்கு முன்பு தனித்தனியாக விருந்தன. அதனுல் ஸ்ருஷ்டியேற்படாம லிருந்தது. அவர்களுக்கு ஸ்ருஷ்டிக்கிற தன்மையை - ஒன்று சேர்ப்பதாலே பரமாத்மாவே அளித்தான் அதற்காக திரிவிருத் கரணம் செய்தான் (ஒவ்வொரு பூதத்தையும் மூன்று கூறுக ஆக்கி - அவைகளை ஒன்று சேர்த்தான்).

(இங்கே ஸமாநாதிகரணம் - ஜீவேந - ஆத்மநா என்று சொல்லிக் காட்டப்படுகிறது. ஆத்மநா மயா என்கிற அர்த்தம்; (ஸ்வரூபேண - ஸ்வரூபத்திலே என்றும் அர்த்தம்

கொள்ளலாம் என்கிறார் - ரங்கராமானுஜர் உபநிஷத் வ்யாக்யானத்திலே) தேசிகர் அதிகரண ஸாராவளியில் சொல்கிறார் - ஸ்வரூபத்தினால் - (ஜீவேந - ஜீவனைக் கொண்டு - அநுப்ரவேசம் செய்கிறார் - ஜீவனைச் சரீரமாகக் கொண்டு அநுப்ரவேசம் செய்தார். அதாவது பிருஹ்மமே ஆத்மாவாகவும் - திருதியா விபக்தியினால் (பாணினி சூத். 2 3-23 பிரகாரம்) ஒரு காரணத்தைக் காட்டுகிறார் என்பதாகும்).

कथं तृतीयेतिचेत्...तस्यैव रुपान्तरेण करणत्व विवक्षयाऽस्तु

(உத்தமூர் ஸ்வாமி)

ஆகவே பரமாத்மாவினால் தான் நாமரூப வ்யாகரணம் செய்யப்படுவதாகும். अतः परस्यैव ब्रह्मणः कर्मेदं नामरूपव्याकरणम )

மீண்டும் ஆட்சேபம்:—

மேலும் இவ்விதமாகச் சொல்லப்படும் - நாமரூப வ்யாகரணமும் திரிவிருத்தகரணமும் ஒரே கர்த்தாவினால் செய்யப்படுகிறது என்கிற காரணத்தினால் (சொல்ல முடியாது) - பரமாத்மாவினால் தான் செய்யப்படுகிறதென்று; परमात्म - कर्तृकत्वमिति - என்று சொல்லமுடியாது. திருவிருத்கரணம் ஜீவனுடைய கர்த்ருத்வமாக ஆகாது. அண்டத்தை ஸ்ருஷ்டித்த பின்னரே சதுர்முக ஜீவனாகிற ஸ்ருஷ்டியும் திரிவிருத்கரண பிரகாரமும் உபதேசிக்கப்படுகிறது.

यथा तु खलु सोम्येमास्तिस्रो देवताः पुरुष प्राप्य त्रिवृत् त्रिवृदेकैका भवति, तन्मे विजानाहीति

(சா. உ. 6-4-7ல்)

பிரியமானவனே - என்னிடமிருந்து அறிந்து கொள்வாய் - எப்படி இந்த மூன்று தேவதைகளும் ஜீவனை யடைந்து (ஜீவனால் உபயோகப்படும்படி), திரிவிருத் கரணத்தினால் ஒன்றாக ஆகியது. (இப்போது காணப்படும் தீ [illegible] முதலியவை சுத்தமானவை அல்ல. தீயில் சுத்த [illegible]

பாதி, மற்ற பாதி மற்ற பூதங்களாம். இப்படி நிலத்திலும் தேஜஸ்ஸிலும் அப்புவிலும் சுத்த பாகம் பாதி - மற்ற பாதி பாதியில் மற்ற மூன்றும் கலந்து இருப்பவையாம். அந்தந்த பூதம் பாதி மற்றவை பாதியாகச் சேர்த்து உருவாக்கி, அவற்றிலிருந்து (சரீரம்) உடலை ஸ்ருஷ்டித்து ஜீவாத்மா வுடன் உட்புகுந்து ஒவ்வொரு வஸ்துவாகவும் பரபிருஹ்மம் நிற்கிறது. ஆகவே திரிவிருத் கரணத்தினால் (அதே மாதிரி பஞ்சீ கரணத்தினாலும்) ஒவ்வொரு வஸ்துவிலும் அசேதனம் சேதனம் ஈஸ்வரன் என்கிற மூன்றும் சேர்ந்திருப்பவை யாகும்). (திரிவிருத் கரணம் என்பதால் நெருப்பு முதலான வற்றில் மூன்று நிறங்களையும் (சிவப்பு, வெண்மை, கருமை) பார்க்கிறோம். தேஜஸ்ஸுக்கு சிவப்பு நிறம் ; ஜலத்திற்கு வெண்மை நிறம் ; பிருத்விக்கு கருப்பு நிறம் - ஆக திரிவிருத் கரணப்படி எல்லாம் சேர்ந்ததால் ஏற்பட்டது).

अन्नमशितं त्रेधा विधीयते तस्य यः स्थविष्ठो भागः तत् पुरीषं भवति । यो मध्यमः तन्मांसम्, योऽणिष्टः तन्मनः —

(சா. உ. 6-5-1ல்)

என்பதால் (சாப்பிடப்படும் அன்னம் மூன்று பாகங்களாக ஆகிறது. எது ஸ்தூலமாக விருக்கிறதோ அது மல மாகிறது; எது மத்யபாகமோ அதுசரீரத்தை (மாம்ஸத்தை) அடைகிறது. எது ரஸமாக விருக்கிறதோ (சூக்ஷ்மமாக உள்ளதோ) அது மனத்தை அடைகிறது - இவைகளால் அண்டஸ்ருஷ்டிக்குப் பிறகே திரிவிருத்கரணம் ஜீவர்கள் விஷயத்தில் பேசப்பட்டு, அதற்கு பின்பு பிரமனால் ஜீவர்கள் உண்டாக்கப்பட்டு ; இவ்விதம் ஜீவர்களின் உற்பத்தி சொல்லப்படுகிறது.

அவ்விதமே - முந்தின சுருதியிலும், यदग्नेः रोहितं रूपम्, तेजसस्तद्रूपम् यच्छुक्लम् तदपां; यत्कृष्णं तदन्नस्य - அது (எது சிகப்பு நிறமாகவிருக்கிறதோ அது தேஜஸ்ஸின் நிறமாகும்) ; எது வெள்ளையாக விருக்கிறதோ - அது ஜலத்தின் நிறமாகும் : எது கருமை யாகவிருக்கிறதோ அது ப்ருதிவியின் நிறமாகும்.

இங்கே நெருப்பு, சூரியன் சந்திரன், மின்னல்-இவை எல்லாம் பிரும்மாவினுல் சிருஷ்டிக்கப்பட்டு, என்று நன்கு காட்டப் பட்டதாகும். திரிவிருத்கரணம் என்பது நாமரூப வ்யா கரணம் ஏற்பட்டபின்பு - உத்தரகாலத்தில், ஏற்பட்டதாகச் சுருதியில் சொல்லப்பட்டது.

सेयं देवतेमास्तिस्रो देवताः अनेन जीवेनाऽऽत्मानाऽनुप्रविश्य नामरूपे व्याकरोत्; तासां त्रिवृतं त्रिवृतमेकैकामकरोत्—

(இங்கு 'ஸத்' சப்தவாச்ய ஸர்வ அந்தர்யாமியான ஸ்ரீமந் நாராயணனைச் சொல்கிறது. ஸ்ரீமந் நாராயணரு கிற தேவதா விசேஷமாகும்.)

மேல் சொல்லப்பட்ட தேவதை - மூன்று (தேஜஸ் அப்பு பிருத்வி) தேவதைகளிலும், ஆத்மாவாகவிருக்கும் தானே ஜீவனுகச் சொல்லும்படி - உள்நுழைந்து - நாமரூப வ்யா கரணம் செய்தது. அது ஒவ்வொன்றையும் மூன்று கூருகப் பண்ணிற்று. (இதனுல் ஆட்சேபம் எழுகிறது - சதுர் முகனே நாமரூப வ்யாகரணத்தையும் திரிவிருத்கரணத்தை யும்செய்கிருன் என்றே சொல்லவேண்டும்-என்று ஆக்ஷேபம் வர சூத்ரக்காரர் பதில் கூறுகிருர் அடுத்த சூத்ரத்தில்.

அனுபந்தம்:— (இங்கு பூர்வபக்ஷம் பின்வருமாறு கூறப்படுகிறது.

1) அண்ட ஸ்ருஷ்டிக்கு முன்னுலேயே திரிவிருத்கரண மாகையால், அது பரமாத்மா செய்வதாக விருக்கவேண்டும் என்பது சரியாகாது. அண்ட ஸ்ருஷ்டிக்குப் பின், சதுர்முக ஸ்ருஷ்டி பிரகரணத்திலே, "அந்நமஸிதம், த்ரேதா விதீயதே, தஸ்ய ய: ஸ்தவிஷ்டோ பாகஸ் தத்புரீஷம் பவதி, யோமத்ய மஸ் தந்மாம்ஸம் யோऽணிஷ்டஸ் தந்மந:- (சா. உ. 6-5-1 2, 3)-பிராணிகளால் சாப்பிடப்பட்ட அன்னம் மூன்று பிரிவாக ஆகிறது; ஸ்தூலமான பாகம் மலமாகிறது; (ஸ்தூலமும் மிக சூக்ஷ்மமுமில்லாத) நடுப்பாகம் மாம்ஸமா கிறது. மிக சூக்ஷ்மமான பகுதி மனத்தைப் போஷிக்கிறது

என்று தொடங்கி, திரிவிருத்கரணம் சொல்லப்படுகிறது. அதுவும் சதுர்முகன் செய்யும் காரியமாகும். அதாவது ஜீவனின் கார்யமாகும்

2) இதற்கு முந்திய தொருவாக்யத்தில், யதக்நே ரோஹிதம் ரூபம் தேஜஸ்தத் ரூபம், யச்சுக்லம் ததபாம், யத்கிருஷ்ணம் ததந்நஸ்ய (சா. உ. 6-4-7) - அக்னியின் வடிவத்தில் சிவப்பாயிருக்கும் பகுதி தேஜஸ்ஸின் வடிவ மாகும் ; வெளுப்பாயிருக்கும் பகுதி நீரினுடையது ; கருப் பாயிருக்கும் பாகம் பூமியினுடையது - என்று தொடங்கி, நான்முகனுல் படைக்கப்பட்ட அக்னி முதலான பொருள் களில் திரிவிருத் கரணம் காட்டப்பட்டுள்ளதும், அது நான் முகனுல் செய்யப்பட்டதென்பது என்பதை வலியுறுத்து கிறது.

3) நாமரூப வ்யாகரோத், தாஸாம் திரிவிருதம் திரி விருதம் ஏகை காம் அகரோத் (சா. உ. 6-3-33) என்று நாம ரூப வியாகரணத்துக்கு அடுத்தபடியே திருவிருத்கரணம் சொல்லப்படுகையால், திருவிருத்கரணத்திற்குப் பின்பே நாமரூப வ்யாகரணம் என்று சித்தாந்தத்தில் கூறியதும் பொருந்தாது. இம்மூன்று காரணங்களாலும் நாமரூபவ்யா கரணத்தைச் செய்யும் ஜீவனுன நான்முகனே திரிவிருத் கரணத்தைச் செய்கிருன் என்றும், அண்ட ஸ்ருஷ்டிக்காக, அதற்கு முன்பே பரமாத்மாவால் திரிவிருத்கரணம் செய்யப் படுகிறது என்று கூறியது தவருகும் என விளங்குகிறது. ஆக ஜீவனுன நான்முகனே நாமரூப வ்யாகரணத்தையும் செய்கிருன் என்று தேறிற்று. இந்த மாதிரி பூர்வபக்ஷம் எழ - அது அடுத்த சூத்ரத்தில் தள்ளப்படுகிறது.)

ஸ். சூ. **मांसादि भौमं यथाशब्दमितरयोश्च** (2-4-18)

மாம்ஸாதி பௌமம் யதாசப்தமிதரயோஸ்ச (2-4-18)

யதா சப்தம் - ''அந்நமஶிதம்'' என்னும் வேதவாக்யத் தின்படி, மாம்ஸாதி - மாம்ஸம், மனம் என்னும் இரண்டுமே

(மனத்தைப் போல்) பௌமம் - பூமியின் விகாரமே. இதர யோ:ச - ஆப: பீதா:, தேஜோऽஸிதம் என்னும் வேதவாக்யங் களிலும் இப்படியே மூன்றும் மூன்று பூதங்களின் விகாரங் களாகும் எனப் பரியாயமான சப்தமாக - விகாரமாக ஓதப் படுகின்றன.

**ஸங்கதி:**—(மேல் அனுபந்தத்தில் காட்டப்பட்ட பூர்வ பக்ஷம் தவறு. திரிவிருத்கரணம் நாமரூபவ்யாகரணம் செய் யப்பட்ட பின்பு உண்டாகிறது என்கிற ஆட்சேபத்திற்குப் பதிலாக - சா. உ. 6-2-3&4 சொல்லப்படுகிறது. திரிவிருத் கரணம் பற்றி இரண்டு தடவைகள் சொல்லப்படுகின்றன. முதலில் அது பரமாத்மாவின் சங்கல்பத்திற்கு விஷயமா கிறது. இங்கே சங்கல்பிக்கும் தேவதை தன் நினைவில் நாம ரூபவ்யாகரணத்தைக் கொண்டிருக்கிறது. திரிவிருத்கரணம் பிற்பாடு ஒரு உபாயமாக (ஸாதனமாக) கருதப்படுகிறது. இங்கே திரிவிருத்கரணம் நாமரூபவ்யாகரணத்திற்குப் பின்பு யேற்படுகிறது. இங்கே திரிவிருத்கரணத்தைப் பற்றியப் பேச்சு அது நாமரூப வ்யாகரணத்திற்குப் பின்பு யேற் பட்டது என்று சொல்வது சரியில்லை, இதனால் திரிவிருத் கரணம் நாமரூப வ்யாகரணத்திற்குப் பின்பு நடப்பதாகக் கூறுவது சரியாகாது. அன்னத்தின் முப்பிரிவுக்கும் திரி விருத்கரணத்திற்கும் யாதொரு சம்பந்தமில்லை). (ஆகவே அடுத்த சூத்ரம் 18 ஸித்தாந்த சூத்ரமாகும்.)

இதற்கு முன்பு சோல்லப்பட்டது. அண்ட ஸ்ருஷ்டிக் குப் பிறகு, சதுர்முகனின் ஸ்ருஷ்டியாகிற தேவாதி (மனுஷ்ய) விஷயமாகும் - அதைச் சொல்லும் சுருதி சா. உ. 6-3-3 तासां त्रिवृतं त्रिवृतमेकैकामकरोत् - பரமாத்மா ஒவ்வொன்றை யும் முக்கூறுகப் பண்ணினார்-இதனால் சதுர்முகனால் ஸ்ருஷ் டிக்கப் பட்ட தேவதைகளைக் குறிக்கிறது, அண்டஸ்ருஷ்டிக் குப் பின்பு திரிவிருத்கரணம் ஏற்படுகிறது-என்று சொல்வது சரியில்லை.

ஏனெனில் अन्नमशितं त्रेधा विधीयते - பிராணிகளால் சாப்பிடப்பட்ட அன்னம் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்

படுகிறது - என்பதால் இங்கே திரிவிருத்கரணம் சொல்லப்படவில்லை. அன்னத்தின் ஒவ்வொரு பாகமும் பரிணாமமடைவதே சொல்லப்படுகிறதே ஒழிய - திரிவிருத் கரணம் சொல்லப்படவில்லை. ஸ்தூலமான பாகம் மலம்; நடுப்பகுதி மாம்ஸம்; மிக சூக்ஷ்மமான பகுதி மனம் என்று மலமாம்ஸ மனங்கள் அந்நம் என ஒரு பூதமாகிற ப்ருதிவி யின் பரிணாமமே கூறப்படுகிறது. மாம்ஸமும் மனமும் மிக சூக்ஷ்மமாகவும் மலத்தைவிட சூக்ஷ்மமாயும் இருக்கிற படியாலும்; மேலும் இந்த இரண்டும் காரணத்துடன் ஒத்திருக்க வேண்டும்; மற்ற இரண்டு மாம்ஸமும் மனமும் - ஜலமும் தேஜஸ்ஸுமாக விருக்கவேண்டும்; ஏனெனின் சுருதி சொல்கிறது आप: पीता: குடிக்கப்பட்ட ஜலம் மூன்று பாகங்களாக பிரிக்கப்படுகின்றன – மூத்திரமும் ரத்தமும் பிராணனும் (அதாவது முக்யபிராணனும்) (இவை ஸ்வரூப மாகவே ஸ்தூலமாகவும் சூக்ஷ்மமாகவும் விருக்கிறபடியால்) அவை பூமி தத்வத்தை வந்து அடையும், தேஜஸ்தத்வத்தை யும் அடையும் (அதாவது மேல் வாக்யங்களிலும் மூத்திரம், ரத்தம் (அஸ்ருக்) பிராணன் என்கிற மூன்றும் அப்பு பூதத் தின் பரிணாமமாகவும், எலும்பு மஜ்ஜை (தசை) வாக் என்னும் இந்த மூன்றும் தேஜஸ் என்னும் பூதத்தின் பரிணாமமாகவே கூறப்படுகின்றன. இந்த வாக்யங்கள் ஒவ்வொன்றிலும் தீ நீர் பூமி என்னும் பூதங்களுக்கு திரிவிருத்கரணமே சொல்லப் படவில்லை-அப்படி சொல்லப்பட்டிருந்தால்-அப்போது முதல் வாக்யத்தில் பூமி விகாரமான மலத்தைக் காட்டிலும் சூக்ஷ்ம மான மாம்ஸம் நீரின் விகாரமாயும், அதைக் காட்டிலும் சூக்ஷ்மமான மனம் தீயின் விகாரமாகச் சொல்லப்பட்டிருக்க வேண்டும்; சொல்லப்படுகிறதாக வேண்டும்; ஏனெனில் திரி விருத்கரணம் செய்வதற்கு முன்பு பூமி சூக்ஷ்மமாயும் நீரும் தேஜஸ்ஸும் சூக்ஷ்மமாக விருத்ததாக ஒப்புக் கொள்ள வேண்டும். ஆகவே திரிவிருத்கரணம் சொல்லப் படவில்லை. (இரண்டாவது வாக்யத்தில் மூத்திரம் பூமியின் விகாரமாகவும், பிராணன் தீயின் விகாரமாகவும்; மூன்று வது வாக்யத்தில் எலும்பு பூமியின் விகாரமாகவும்; தசை நீரின் விகாரமாகவும் சொல்லவேண்டிவரும்.)

ஆ க வே மூத்திரமும் பிராணனும் பிருத்வியின் லக்ஷணத்தை அடையவேண்டிவரும்; அதே மாதிரி தேஜஸ் ஸின் லக்ஷணத்தையும் கொண்டதாக யேற்படும். இது சரி யாகாது, न चैवमिष्यते-வாஸ்தவத்திலே மாம்ஸாதி-பூமிதத்வத் தைச் சேர்ந்ததாகும். மலத்லைப் போல, மாம்ஸமும் மனமும் புரீஷவத் (மலத்தைப் போல) பூமி தத்வத்தைச் சேர்ந்ததாக-அதாவது பார்த்திவ - என்று ஒப்புக் கொள்ள வேண்டியது - சுருதியும் அவ்விதம் கூறுகிறது. अन्नमशितं त्रेधा - என்று பிரகரணத்தின் தொடக்கத்தின் முதல் வாக்யத்தில், மல மாம்ஸ மனங்கள் மூன்றுமே பூமியின் விகாரமாகச் சொல் லப்படுகின்றன. ஆகவே यथाशब्दमितरयोश्च - அந்ந மஸிதம் என்கிற வேத வாக்யத்தின் படி மாம் ஸாதி। மாம்ஸம் மனம் என்னும் இரண்டுமே (மலத்தைப் போல) பௌமம் (பூமி விகாரமாகும்) இ த ர யோ ா: ச-ஆப: பீதா:, தேஜோ அஸிதம் என்னும் வேத வாக்யங்களிலும் இப்படியே. அதாவது பர்யாயமான சப்தமாக விகாரமாகச் சொல்லப்படு கின்றன. (அதாவது ஆப: பீதா: என்று தொடங்கும். (சா. உ. 6. 5. 2) இரண்டாம் வாக்யத்தில், மூத்திரம், ரத்த பிராணன்கள் மூன்றும் நீரின் விகாரமாகச் சொல்லப்படு கின்றன; தேஜோ அஸிதம் (6-5-3) என்கிற மூன்றும் (சா· உ. 6. 5. 3) வாக்யத்தில், அஸ்தி (எலும்பு) மஜ்ஜா வாக்குக்கள் மூன்றுமே தேஜோ விகாரமாகச் சொல்லப்படு கையாலும், ஒவ்வொரு வாக்யத்திலும் மூன்று பூதங்களின் (பூமி, நீர், தேஜஸ்) விகாரங்கள் சொல்லப்படுகின்றன்-என்று கொள்வது சரியில்லை-பொருந்தாது. आप: पीतास्त्रेधा विधीयन्ते - குடிக்கப்பட்ட தண்ணீர்; சாப்பிடப்பட்ட அக்னி (தேஜஸ்) - இந்த வாக்யங்களிலும் விகாரங்கள் (மேற் சொன்னபடி) ஒப்புக் கொள்ளப்படுகின்றன. (தண்ணீரே) தேஜஸ்ஸின் பரிணும சப்தமாகக் காட்டப்படுகிறது. அவ்விதமே तेजाऽशितं त्रेधा विधीयते - குடிக்கப்பட்ட தண்ணீர் மூன்று பரிணுமங்களை அடைகிறது; சாப்பிடப்பட்ட தேஜஸ்ஸும் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக் கின்றன. இதனுல் சுருதியிலிருந்து தேஜஸ்ஸுக்கும் மூன்று வித பரிணுமங்கள் உண்டு என்று விளங்குகிறது.

ஆகையால் மலம் மாம்ஸம் மனம் ஆகிய மூன்றும் பிருத்வியின் விகாரங்கள், மூத்திரம் ரத்தம பிராணன்களை மூன்றும் நீரின் விகாரங்கள் - வேதங்களிலிருந்து தெரிய விருக்கிறது. இங்கே மஜ்ஜை அஸ்தி, வாக்குக்கள் ஆகிய மூன்றும் தேஜா விகாரமாகச் சொல்லப்படுகின்றன.

अन्नमयं हि सोम्य मन:, आपोमय: प्राण: तेजोमयी वाक्-इति - வாக்ய சேஷத்திற்கு அவிரோதம் - ஸௌம்ய, இவ்விதம் அறியப் படவேண்டும் - இந்த மலம், மாம்ஸம், மனம் ஆகியவை பூமியின் விகாரங்களாகும்; மூத்திரம், ரத்தம் பிராணன்கள் ஜலத்தின் விகாரங்கள், எலும்பு மஜ்ஜை வாக்கு தேஜஸ்ஸின் விகாரங்கள். இந்தக் காரணத்தினுல் விரோதம் பின்னுல் வரும் இம்மூன்று வாக்யங்களையும் விவரிக்கும் சுருதிக்கும் இல்லை என்பதாகும். அதாவது ஸௌம்ய - மனம் அந்நத் தைக் கொண்டது) அதாவது பூமி பூதத்தின் விகாரம்; பிராணன் (முக்ய பிராணன்) ஜலபூதத்தின் விகாரம்; வாக்கு தேஜஸ்ஸின் விகாரம் - இவைகளைக் கூறியதால் - முன் கருத்து வலியுறுத்தப்படுகிறது.

ஆகையால் तासां त्रिवृतं त्रिवृतमेकैकामकरोत् - (சா. உ. 6-3-2) தீ நீர் பூமி என்னும் மூன்று பூதங்களையும் ஒன்று சேர்த்து திரிவிருத்கரணத்தைச் செய்வதாக ஓதப்படுகிற பிருஹ்மமே நாமரூப வ்யாகரணத்தையும் பரமாத்மா தான் செய்கிறுர் - என்பதால் திருவிருத்கரண பிரகாரத்திலே अन्नमशितम् சாப்பிடப்பட்ட அன்னம் மூன்று பகுதிகளாக ஆகிறது என்கிற சுருதியில், திரிவிருத்கரணம் காட்டப்படவில்லை. அப்படி திரிவிருத்கரணம் காட்டப்பட்டிருந்தால், மனம் பிராணன் வாக்கு இம்மூன்றும் அதி சூக்ஷமமாக விருப்ப தால், அனுவாக விருப்பதால், தேஜஸ் பூதத்தின் விகாரம் - ஸ்வபாவமாக விருக்கும். ஆகையால் இந்த சுருதிக்கு விரோதம் யேற்படும் - अन्नमयं हि सोम्य मन: - ஸௌம்ய - மனம் என்பது பூமி பூதத்தின் விகாரம் (அன்னத்தின் விகாரம்) என்பதுடன் விரோதிக்கும்: (சா. உ. 6-5-4)

பூமி பூதம் முதலியவை - ஏற்கனவே திரிவிருத்கரணம் செய்யப்பட்டு - ஜீவர்களால் உபயோகப்படுத்தப்படுபவை அவை — अन्नमशितम् - சாப்பிடப்பட்ட அன்னம் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது - என்கிற சுருதியிலிருந்து தெரிய வருகிறது - அந்த மூன்று பூதங்களும் (தீ நீர் பூமி) ஒவ்வொன்றும் மூன்று பாகங்களாக விகாரம் அடைகின்றன ஏகஸ்ய அநேக - த்ரேதா பரிணமம் என்று சொல்லப்படு கின்றன. இந்த மூன்று பூதங்களும் அண்ட ஸ்ருஷ்டிக்கு முன்பே திரிவிருத்கரணம் செய்யப்பட்டிருக்கவேண்டும். ஏனெனில் அவ்விதம் திரிவிருத்கரணம் யேற்படாவிட்டால், அவைகள் காரியங்களை உற்பத்தி செய்வதற்கு சக்தி (ஸாமர்த்தியம்) இராது (காரிய ஆரம்பம் செய்யமுடியாது) காரிய ஆரம்பம் என்பதற்கு அர்த்தம் - अन्योन्य संयुक्तानामेवहि कार्यारम्भसामर्थ्यम् - காரியங்களை உண்டுபண்ணுவதற்கு சாமர்த்தியம் பூதங்களுக்கு யேற்படுகிறது-எப்போது அவை ஒன்றோடொன்று சேர்ந்தால் தான் - இம்மாதிரியான அன் யோந்ய ஸம்யுக்தாநாமேவ (சேர்க்கைதான்) திரிவிருத் கரணம் - அதனுல் ஸம்பவிக்கும்.

(அதாவது மூன்று விதவிகாரங்களான அன்னம் - நீர்- தீ - ஸ்ருஷ்டி ஆரம்பத்தில் திரிவிருத்கரணமல்ல - அதாவது அவை அப்போது தனித்தனியாகவிருந்தது. சா. உ. 6-5ல் சொல்லப்பட்டதை நோக்கவும் - மனம் பிராணன் வாக்கு ஆகிய மூன்றும் அன்னம் நீர் தேஜஸ்ஸின் விகாரங்களல்ல. என்ன சொல்லப்பட்டதென்றால் அன்னம் ஜலம் தேஜஸின் சூக்ஷ்ம விகாரங்கள் மனத்தைப் பலப்படுத்தி அதேமாதிரி பிராணன் வாக்கையும் உறுதிபடுத்துகிறது. மேலும் இந்த மூன்றின் ஒவ்வொன்றும் (அன்னம் நீர் தீ) மனம்-பிராணன் வாக்குக்களைப் பலப்டுத்துகின்றன. ஏனெனில் அன்னம் நீர் தீ ஆகியவை ஏற்கனவே திரிவிருத்கரணம் செய்யப் பட்டவை. ஆகவே எதைச் சாப்பிட்டாலோ - குடித்தாலோ இந்த மூன்றையும் சேர்த்துத்தான் (அதனதன் பிரகாரம் சேர்ந்த கலவை (ஒன்று சேர்தல்) செய்தபிறகு, ஒரு உண்ணப்படும் பதார்த்தமாகிறது என்று அர்த்தம்).

नानावीर्याः पृथग्भूतास्ततस्ते संहतिं विना । नाशक्नुवन् प्रजाः स्रष्टुमसमागम्य कृत्स्नशः । समेत्यान्योन्यसंयोगं परस्परसमाश्रयाः । महदाद्या विशेषान्ताह्यण्डमुत्पादयन्ति ते - इति—

(விஷ். புரா. 2-2-52-53ல்)

மஹாந் தொடக்கமாக (விசேஷா:) பூதங்கள் வரை அனைத்தும் தனித்தனியே யிருந்து ஒன்று சேராமையால் ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்க முடியவில்லை. ஆகையால் ஒன்ரோடொன்று சேர்ந்து பரஸ்பரம் வலிமை பெற்றவையாய் அண்டத்தை உண்டாக்குகின்றன-இதற்குத்தான் திரிவிருத்கரணம் (ஒன்று சேர்க்கப்பட்டது) எனப் பெயர் அவ்விதம் ஒன்று சேர்க்கப்பட்ட பூதங்களிலிருந்து தான் அண்டம் உண்டாகிறது. அதனுல் தான் अनेन जीवात्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरोत्; तासां त्रिवृतं त्रिवृतमेकैकामकरोत् ஜீவனுடன் உள் நுழைந்து இந்த ஜீவனைக் கொண்டு – ஜீவனே நானுகும்படி - ஆத்மா ஜீவேந ஜீவனைச் சரீரமாகக் கொண்ட பிருஹ்மமே (சரீர சரீரி பாவத்தை முன்னிட்டு). ஆயிற்று.

(**விளக்கம்:—**அது நாமரூப வ்யாகரணம் செய்தது. அது ஒவ்வொன்றையும் ஒரு பாதிபாகம் சுத்தம், மற்ருரு பாதி பாகம் மற்ற பூதங்கள் - இப்படி அந்தந்த பூதம் பாதி மற்றவை பாதியாகச் சேர்த்து வுருவாக்கி அவற்றிலிருந்து (சரீரம்) உடலை ஸ்ருஷ்டித்து ஜீவாத்மாவுடன் உள் நுழைந்து ஒவ்வொரு வஸ்துவாகவும் பரபிருஹ்மம் நிற்கிறது – ஒவ்வொன்றிலும் அசேதனம் சேதனம் ஈஸ்வரன் என்று மூன்றும் சேர்ந்திருப்பது - திரிவிருத்கரணமாகும்). (இது விசிஷ்டாத் வைத ஸாரமாகும். இவை கூடச் சேர்ந்து இல்லாத போனுல் வஸ்துத்வ்யவஹாரம் யேற்படாது.

இந்த திரிவிருத்கரணம், நாமரூப வ்யாகரண பாடக்ரமம் அர்த்த க்ரமத்திஞல் பாதிதமாகிறது-இங்கே திரிவிருத்கரணத்திற்குக் கொடுக்கப்பட்ட உதாரணங்களாகிற பூதங்களாகிற தீ, சூரியன் முதலானவை - இவை எல்லாம் அண்ட ஸ்ருஷ்டியில் உள்ளவை; சாங் உபநிஷத்தில் ஸ்வேத கேதுவுக்கு அக்னி முதலானவை அண்டாந்தர்வர்த்தி (அண்டத்தினுள்ளே அடங்கியது) - இதஞல் ஸ்வேத கேதுவுக்கு திரிவிருத்கரணமாக அண்டத்தின் வெளிவஸ்துக்களை உதாரணங்களாகக் காட்டப்படவில்லை - (திரிவிருத்கரண பிரதர்சனம்) ஆதலால் அக்னி சூரியன் முதலான காரியங்களுக்கு - அதாவது திரிவிருத்கரணத்தால் உண்டாக்கப்பட்ட காரியங்களுக்குத்தான் உதாரணங்களாகக் காட்ட முடிந்தது.

**விளக்கம்**:—திரிவிருத்கரணம் முதலிலும், பிறகே நாமரூப வ்யாகரணமும் இரண்டாவதாக ஏற்பட்டது. இங்கே அக்னி - சூரியன் - சந்திரன் - மின்னல் (சா. உ. 6-4ல்) இவைகள் விஷயமாக திரிவிருத்கரணம் சொல்லப்பட்டது. ஒவ்வொன்றிலும் சொல்லப்படுகிறது - அதனுள்ளிருக்கும் சிகப்பு நிறம் தேஜஸ்ஸாகும், சுக்ல (வெண்மை) நிறம் ஜலமாகும்; கருப்பு பூமியாகும். இதஞல் மூன்று வர்ணங்களும் சுத்தமான பூதங்களைக் குறிப்பதாகும். திருவிருத்கரணம் செய்யப்பட்ட பிறகு சுத்தமான பாகம் பாதி - மற்றபாதி மற்ற பூதங்களாகும். பூர்வபக்ஷி தவருகப் புரிந்துகொண்டு திருவிருத்கரணம் நாமரூப வ்யாகரணத்திற்குப் பின்பு என்கிருன் - அண்டத்தின் உள்ள பொருள்களின் திருஷ்டாந்தங்களைக் கொண்டு. சொல்கிருன் - இது தவறு.

(இன்னொரு விஷயம் முக்யமானது - அதாவது இங்கே மூன்று பூதங்களின் (மூர்த்தம் - தீ ஜலம் ப்ருத்வி) சேர்க்கை யாக திரிவிருத்கரணம் சொல்லப்படுகிறது. வாஸ்தவத் திலே மற்ற அமூர்த்த வாயு ஆகாசம் இவைகளும் சேர்ந்து - பஞ்சீகரணம் என்று சொல்லப்படுகிறது. ஒருபாதிபாகம் சுத்தமான பூதம் - மற்றொருபாதி மற்ற பூதங்களின் சேர்க் கையாகும். ஜீவர்களுடைய கர்மாவின் பிரகாரம் தேகம் ஏற் படுகிறது. ஆகவே ஸ்ருஷ்டியிலே, மஹத்திலிருந்து ஆரம் பித்து, திரிவிருத்கரணம் செய்யப்பட்ட வஸ்து - அதற்குப் பின்பு நாமரூப வ்யாகரணம் உண்டாகி - இவ்விதம் ஸ்ருஷ்டி யேற்படுகிறது என்று அர்த்தம்).

ஆகவே ஸத்வித்யையில் குருவான உத்தாலகர் தன் பிள்ளை ஸ்வேதகேதுவுக்கு உதாரணங்களைக் காட்டும்போது ஏற்கனவே திரிவிருத்கரணம் செய்யப்பட்டதும் அண்டத் துக்குள் இருக்கும் வஸ்துக்களைக் காட்டி விளக்கம் செய்தார். ஆகவே நாமரூப வ்யாகரணம் இரண்டாவதாகும். (இதையே கீழ் சொல்லியபடி விளக்கம் செய்வதாகும்).

पाठक्रमस्यार्थक्रमाद्बाधः...(பூர். மீ.)

अग्निहोत्रं जुहोतीति वाक्यात् पश्चादेवः ...

यवा गूपाकः प्राक्, होमः पश्चादिति

(உத்தமூர் ஸ்வாமி)

यदि अण्डसृष्टेः प्रागेव त्रिवृत्करणम् - तर्हि अण्डबहिष्ठेषु त्रिवृत्त्वं गुरुणा ज्ञापनीयमित्यत्राह अण्डान्तर्वर्तिष्विति । अण्ड-बहिःष्ठार्थस्य वचनसंभवेऽपि प्रदर्शनं हि न भवतीत्याह - तस्येति । तस्य श्वेतकेतुं प्रति —

ஆகவே அண்டத்திற்கு வெளிவஸ்துக்களை திரிவிருத் கரண உதாரணங்களாகக் காட்டுவதற்கு முடியாமையாலே, திரிவிருத் கரணத்தின் காரியங்களாகிற அக்னி சூரியன் சந்திரன் - அண்டத்தினுள் இருக்கும் வஸ்துக்களை உதார ணங்களாகக் காட்டி, பிதா ஸ்வேத கேதுவுக்கு விளக்கினர். (இதனல் திரிவிருத்கரணம் முதல் - நாமரூப வ்யாகரணம் இரண்டாவது என்பது பாதிதமாகவில்லை). (விளக்கம் முற்றிற்று).

**ஸ்ரீபாஷ்யம்:—**

மேலும் சொல்லாப்படலாம் - அவ்விதமே இருக்கட்டும். சுருதியின்படி, अन्नमसितम् (சாப்பிடப்பட்ட அன்னம்) आप: पीता: (குடிக்கப்பட்ட தண்ணீர்) तेजोऽशितम् - உண்ணப்பட்ட தேஜஸ்-இதனல் திரிவிருத்கரணம் செய்யப்பட்ட பூதங்கள்-அவை ஒவ்வொன்றுக்கும் மூன்று ரூபங்கள் (அதாவது திரிவிருத்கரணம் செய்யப்பட்ட அன்னம் முதலான ஒவ் வொன்றுக்கும் மூன்று ரூபங்கள்) அதே மாதிரி தேஜஸ் - ஒன்றுக்கும் மூன்று ரூபங்கள் எப்படி உண்டாகின்றன, இதற்கு ஒன்வொன்றையும் "இது பூமி, இது ஜலம், இது தீ" என்று ஒரு குறிப்பிட்ட ரூபத்தினல் சொல்லப்படுகிறது. இந்த ஆட்சேபத்திற்கு சூத்ரக்காரரே அடுத்த சூத்ரத்தில் பதில் அளிக்கிருர்.

**விளக்கம்:—** இதுவரை சொல்லப்பட்டது அண்ட ஸ்ருஷ்டிக்கு முன்பாக திரிவிருத்கரணம் செய்யப்பட்ட பூமி முதலானவை உணவாக ஜீவராசிகளால் உட்

காள்ளப்படும் போது, மும்மூன்று விதமாக பரிண
ிக்கும் வகையே. 1) அந்ந மஸிதம் 2) ஆப: பீதா:
) தேஜோஸிதம் 4) அந்நமயம்ஹி......தேஜோமயீவாக்
ன்கிற நான்கு மந்திரங்களாலும் சொல்லப்படுகிறது.
இதனால் பூர்வ பக்ஷிக்கு சமாதனம் இப்படி அளிக்கப்படு
கிறது. முதலில் திரிவிருத்கரணம் - பிறகே நாம ரூப வ்யா
கரணம். முற்கூறிய விஷ்ணு புராண சுலோகத்தாலே - திரி
விருத்கரணம் செய்யப்படாத பொருள்களைக் கொண்டு
ஸ்ருஷ்டி செய்து பிறகு நாம ரூப வ்யாகரணம் முடியாதாகை
பால் - பாடக்ரமத்தைக் காட்டிலும் அர்த்த கிரமம் பலீயஸ்
என்கிற நியாயத்தை ஒட்டி, இங்கு உபநிஷத் வாக்யத்தில்
ஓதப்பட்ட கிரமத்தை மாற்றி - நாமரூப வ்யாகரணத்திற்கு
முன்பாகவே திரிவிருத்கரணம் ஏற்பட்டதாகக் கொள்ள
வேண்டும். இதனால் பூர்வ பக்ஷியினால் சொல்லப்பட்ட பாட
க்ரமம் ஆக்ஷேபத்திற்கும் பதில் உரைக்கப்பட்டது.

இதனால் அண்டத்தின் உள்ளிருக்கும் பொருள்களைக் கொண்டு - யதக்நே: ரோஹிதம் ரூபம் (சா. உ. 6. 4. 7ல்) என்று தொடங்கும் வாக்யங்களில் அக்னி ஆதித்யன்-இவைகளினால் திரிவிருத்கரணத்தின் காரியங்கள் காட்டப்படுவதிலும் சுருதிக்கு விரோதமில்லை. ஏனெனில் இங்கு திரிவிருத்கரணத்தைப்பற்றிக் கேட்கும் சிஷ்யனான ஸ்வேத கேதுவுக்கு அண்டத்தினுள் இருப்பவனாகையால் அண்டத்துக்கு வெளியிலுள்ள வஸ்துக்களில் திரிவிருத் கரணத்தைக் காட்ட முடியாத படியால் - இவனுக்குப் புரியும்படி அண்டத்தினுள் இருக்கும் திரிவிருத்கரணம் செய்யப்பட்டகாரியப்

பொருள்களான அக்னி, சூரியன் - முதலானவைபிதாவினுல் உதாரணங்களாகக் காட்டப்பட்டதாகும். இதனுல் பூர்வ பக்ஷிக்கு சமாதானம் சொல்லப்பட்டது. அர்த்த கிரமம் பாட க்ரமத்தைவிட பலீயஸ். ஆகையால் நாமரூப வியாகரணம் பரமாத்மா செய்வதேயொழிய நான்முகன் செய்வதல்ல - இங்கேயும் நான்முக சரீர பரமாத்மவேயாகும்.

ஸி. ஸூ. वैशेष्यात्तु तद्वादस्तद्वादः (2-4-19)

வைசேஷ்யாத்து தத்வாதஸ்தத்வாத: (2-4-19)

வைசேஷ்யாத் து - ஒவ்வொரு பூதப் பகுதி அதிகமாக விஞ்சியிருப்பதால் - தத்வாத: - ஒவ்வொன்று ஒவ்வொரு பூதமாகக் கூறப்படுகிறது.

वैशेष्यं - விசேஷபாவத்தைக் காட்டும். திரிவிருத்கரணத்திருல் (அதாவது ஒவ்வொரு பூதத்திலும் மற்றப்பகுதிகள் கலந்திருப்பதால் ஒவ்வொன்றிலும்) மூன்று ரூபங்கள் இருப்பினும், அதை ஒவ்வொன்றிலும் ஒவ்வொன்றே இருப்பது போல, பூமி அப்புதேஜஸ் என்று ஒவ்வொரு பூதத்தைப் பெயரிட்டுக் கூறுவதற்குக் காரணம்யாதெனில் - அன்ருதி அதிக்யாத் - தத்ரதத்ர அன்ருதிவாத:- பூமிபாகம் அதில் அதிகமாகவும் மற்ற பூதங்களின் பாகங்கள் குறைவாகவுமிருப்பதாலே (பூமி என்று வழங்கப்படுவதில், பூமி பூதம் அதிகமாகவும் மற்ற இரண்டும் கலந்திருந்தாலும் - அவை குறைந்து இருப்பதால்) அது பூமி என்றே வழங்கப்படுகிறது இவ்வாறே நீர்ப்பகுதி - தேஜஸ் பகுதிக்கும் - சொல்லப்பட வேண்டியது - அதாவது நீர்பகுதி அதிகமாகையாலே நீர்

என்றும் அதுபோல தீ (தேஜஸ்) என்றும் வ்யவஹாரம் ஏற்பட்டிருக்கிறது.

தத்வாத : தத்வாத : என்று இந்த ஸூத்ரத்தில் இரண்டு தடவைகள் படித்திருப்பது - இரண்டாம் அத்யாயம் முடிகின்றதைக் காட்டுகிறது.

ஸம்க்ஞா மூர்த்திக்லுப்தி யதிகரணம் ஸம்பூர்ணம்

ஸ்ரீ பகவத் ராமானுஜ விரசிதே - ஸ்ரீபாஷ்யே-

இரண்டாம் அத்யாயம் - 4ம் பாதம் நிறைவுற்றது.

சுபமஸ்து

॥ श्रीरस्तु ॥

